# காந்தி வழிக் கதைகள்

(சிறந்த தமிழ் எழுத்தாளர்கள் புனைந்த காந்தி வழி காட்டும் ஐம்பது சிறு கதைகளின் தொகுப்பு)



தொகுப்பாசிரியர் :

**கே. ஆர். கல்யாணராமன்**

"மகரம்"

**தமிழ் நாடு காந்தி நினைவு நிதி,**

**மதுரை-13.**

## பதிப்புரை

கதையின் ஆற்றலுக்கு அளவில்லை. மனம், மொழி, மெய் இம் மூன்றுமே, பிடாரனின் குழல் கேட்ட பாம்பைப் போல, கதை ஆட்டுவித்த படியெல்லாம் ஆடுகின்றன. மனிதனை ஆக்கிப் படைப்பதற்குக் கதையினைக் கையாண்டுள்ளதை உலக வரலாற்றில் காணலாம். ஊக்கம் குறைந்து, உணர்விழந்து மண்ணோடு மண்ணாய் வாழ்ந்த பாரத மக்களைத் தமது சங்க நாதத்தால் காந்தியடிகள் தட்டி எழுப்பினார். அவரது வாழ்க்கை வழியினைக் கருவூலமாகக் கொண்டு பல கற்பனை சீலர்கள் அன்று கதைவுருக் கொடுத்து உலாவ விட்டனர்; இவற்றால் ஊட்டமும், உரமும் பெற்ற மக்கள் அருளாலும், அன்பாலும் உந்தப் பெற்று இணையற்ற வீரம் காட்டிப் புது வழியில் நாட்டிற்கு விடுதலை பெற்றுத் தந்தனர்.

சுதந்திர இந்தியாவில் நம் நாட்டின் தந்தையான காந்தியடிகளின் நூற்றாண்டு விழாக் கொண்டாடுகின்றோம். இந்தக் காலத்தில் காந்தி வழி காட்டும் சிறு கதைகள் சிலவற்றைத் தொகுத்து அண்ணலுக்குத் தமிழ் நாடு காந்தி நினைவு நிதியின் காணிக்கையாகச் சமர்ப்பிக்க நினைத்தோம். இந்த முயற்சியில் அன்பர் 'மகரம்' உதவினார். கதாசிரியர்களின் ஒத்துழைப்பும் கிடைத்தது. எங்கள் தலைவர் திருமிகு பக்தவத்ஸலம் அவர்கள் வாழ்த்துரை இந்நூலுக்கு அணி செய்கிறது. ஐவரி அச்சகத்தார் மிகவும் அழகாக இதற்கு உருக் கொடுத்துள்ளனர். அனைவருக்கும் நன்றி. தமிழ் அன்பர்களின் ஆதரவு எங்கள் முயற்சிக்கு ஏராளமாகக் கிடைத்து வருகிறது. அவர்கட்குக் கடப்பாடுடையோம்.

மதுரை,
6-3-'69.

க. அருணாசலம்
செயலாளர்,
காந்தி நினைவு நிதி.

# அணிந்துரை

தமிழ் மொழியும் தமிழ் இலக்கியமும் மக்கள் மொழியாகவும் மக்கள் இலக்கியமாகவும் மறுமலர்ச்சி பெற்றதற்கு அடிப்படைக் காரணங்கள் இரண்டு. ஒன்று, தேசியப் போராட்டத்தால் மக்களிடம் ஏற்பட்ட விழிப்பு; மற்றொன்று காந்தியம் மக்கள் இயக்கமாகப் பரவியதால் ஏற்பட்ட புத்தெழுச்சி.

தேசியப் போராட்டத்தில் தீவிரமாகப் பங்கு கொண்டவர்கள், தீவிரமான மொழிப் பற்றும் கொண்டவர்கள் என்பதையும், நாட்டுப்பற்றும் மொழிப்பற்றும் ஒருங்கிணைந்தே இந்த நூற்றாண்டின் முற்பகுதியில் வளர்ந்தன என்பதையும் இப்போது சிலர் மறந்திருக்கலாம். ஆனால் மறந்து விடக் கூடாத, மறைக்க முடியாத, வரலாற்று உண்மை அது தான்! 'தேசியம் வளர்த்த தமிழ்' என்ற தலைப்பில் ஓர் ஆராய்ச்சி நூல் தக்கவர்களால் எழுதப் பெறுமாயின், அப்போது பல உண்மைகள் வெளிவரக் காணலாம்.

உரை நடையை உயிர்த்துடிப்பும், கருத்தாழமும், எளிமையும், இனிமையும், உடையதாகச் செய்து, லட்சோபலட்சம் தமிழ் இளைஞர் உள்ளத்தில் நாட்டுப் பற்றையும் மொழிப்பற்றையும் ஒன்றாக ஊட்டி வளர்த்தவர் திரு. வி. கலியாணசுந்தர முதலியார். 'யாம் அறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல் இனிதாவதெங்கும் காணோம்' என்று முழங்கியவர் நம் தேசிய மகாகவி பாரதியார். வ. உ. சிதம்பரம்பிள்ளையின் நாட்டுப்பற்று, அவரது மொழிப்பற்றிலிருந்து பிரிக்க முடியாதது என்பது அவர்தம் நூல்களைப் படித்தோருக்கு விளங்கும். அவ்வாறே ஆயுதப்புரட்சியின் வாயிலாகவே நாட்டு விடுதலை பெற முடியும் என்று நம்பி உழைத்த வ. வே. சு. ஐயரின் தமிழ்ப் பணியும் நாடறியும். திருக்குறளையும் கம்பரையும்

அந்தக் காலத்தில் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து உலகறியச் செய்தவர் அவர். தமிழ் இலக்கியங்களை வெளி உலகுக்குக் கொடுத்ததோடு நில்லாமல், வெளி உலகில் ஏற்பட்டிருந்த உரைநடையின் சிறுகதை உருவத்தைத் தமிழ் இலக்கியத்துக்குக் கொண்டுவந்த வரும் அவரே. மறுமலர்ச்சித் தமிழுக்குச் சிறு கதைத் துறையில் வித்தூன்றியவர் வ. வே. சு. ஐயர் என் பதையும், அவரது 'மங்கையர்க்கரசியின் காதல்' என்ற சிறுகதைத் தொகுதி, ஒரு தேசிய வாதியின் தமிழ்ப் பணிக்குச் சான்று கூறக்கூடியது என்பதை யும் நாம் அறிய வேண்டும்.

காந்திஜி மக்கள் இயக்கத் தலைவராக விடுதலைப் போராட்டத்தில் குதித்த பிறகே, ஆங்கிலத்தின் பிடியிலிருந்து நம் நாட்டின் எல்லாத் தேசிய மொழி களும் விடுதலை பெறத் தொடங்கின என்று கூற வேண்டும். நாட்டின் அந்தந்தப் பகுதியில் அந்தந்த மக்கள் பேசும் மொழியிலேயே பேசவும், எழுதவும் வேண்டும் என்று அந்தக் காலத்திலேயே அறை கூவல் விடுத்தவர் காந்திஜி. ஆங்கிலத்தின் ஆதிக் கத்திலிருந்து தமிழ் விடுபட்டு மக்களிடையே வெள்ள மெனப் பாய்ந்தோடத் தொடங்கிய காலம் அது தான்.

மக்களிடையே வெள்ளமென நாட்டுப் பற்றை யும், மொழிப் பற்றையும் பரப்பிய பணி தமிழ் எழுத் தாளர்களையும், தமிழ்ப் பத்திரிகையாளர்களையுமே சாரும். இன்றையத் தமிழைப் போல் தூய தமிழாக வோ, பிறமொழிக் கலப்பற்ற தாகவோ, எளிய தமிழாக வோ முப்பது நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு அது இல்லாமல் இருந்திருக்கலாம். ஆனல் அது புதிய விடுதலை பெற்று வீறுகொண்டு வந்த மக்களின் மறு மலர்ச்சித் தமிழ் என்பதை யாராலும் மறுக்க முடியாது.

பாரதியார், திரு. வி. க., திரு. வி. கவின் சீடரான 'கல்கி' ரா. கிருஷ்ணமூர்த்தி ஆகியோரின் எழுத்துக் கள் அணை உடைத்த வெள்ளமெனப் பொங்கிய

தாலேயே, தமிழ்நாடு விடுதலைப் போரில் தன் பங்கைச் செய்யத் தயாராக முன் வந்தது என்று கூறினல் மிகையாகாது.

தேசீயம் என்பது 1920-ம் ஆண்டிலிருந்து காந்தியத்தின் வழியில் மலரத் தொடங்கியது. வெளி நாட்டு ஆதிக்கத்தை ஒழிக்க வேண்டுமானல் அதற்கான சக்தி நம் நாட்டு மக்களின் மனவளர்ச்சியிலும், அறிவு வளர்ச்சியிலும், நேர்மைத் திறனிலும், ஒற்றுமையிலும், உழைப்பிலும் தான் இருக்கிறது எனக் கண்டு கொண்டார் காந்திஜி.

எப்படி எல்லாம் அவர், மண்புழுக்களாக நெளிந்த நம்மை மனிதர்களாக்கி, நமக்கு விடுதலை தேடித் தந்தார் என்பதை நாம் அறிந்து கொள்வதற்கு இந்தச் சிறு கதைத் தொகுதியிலுள்ள கதைகள் நன்கு உதவி புரிகின்றன. அந்தக் காலத்திலேயே காந்திஜியின் கொள்கைகளை நாட்டில் பரப்பிய சிறு கதைகளும் இதில் வெளி வந்திருக்கின்றன. இந்தக் காலத்தில் அவற்றைப் பரப்பி வரும் கதைகளும் இதில் உள்ளன.

'கல்கி' மதுவிலக்கை மையக் கருத்தாக வைத்து எழுதிய கதை 'தெய்வயானை'. கள்ளுக் கடையில் திடீரெனப் பொருள் குவித்துப் பெரும் பணக்காரரான ஒருவர் கடைசியில் இப்படிச் சொல்வதை நாம் கதையில் காணுகின்ருேம் :

> "ஒரு வாரத்துக்குள் கள்ளு, சாராயக் கடைகளைத் தொலைத்துத் தலைமுழ்கினேன். அக்கடைகளில் சம்பாதித்த சொத்தை யெல்லாம் அந்த ஊர்க் கோயிலுக்கும், பஜனை மடத்திற்கும், பள்ளிக்கூடத்திற்குமாக எழுதி வைத்தேன். ...கையில் கொஞ்ச ரூபாய் எடுத்துக் கொண்டு தாயாரும் நானும் சென்னை நகருக்கு வந்து சேர்ந்தோம்."

இவ்வாறே மதுவிலக்கைப்பற்றி வி. எஸ். சுப்பையா, நாக சண்முகம், நாரண துரைக்கண்ணன், பெ. தூரன் ஸோமாஸ், முதலிய எழுத்தாளர்களும் பல்வேறு

கோணங்களிலிருந்து தங்கள் கதைகளை எழுதியிருக்கிறார்கள்.

தீண்டாமை ஒழிப்பு, ஹரிஜன முன்னேற்றம், சாதி பேதம் பாராட்டாமை, இவை காந்திஜியின் சமுதாயக் கோட்பாடுகள். தமிழகத்தின் தலைசிறந்த சிறு கதை எழுத்தாளரான புதுமைப் பித்தன் தமது 'புதிய நந்தன்' என்ற கதையில், ராமநாதன் என்ற ஓர் உயர் சாதிப் பையனையும், கருப்பன் என்ற ஓர் ஹரிஜன முதியவனையும், கிறிஸ்தவ சமயத்தில் சேர்ந்தும் சாதித் தொல்லை அகலாத அவன் மகனையும் ஒன்றாக ஒரு ரயிலில் அடிபட்டுச் சாக விடுகிறார். காந்திஜியைச் சுமந்து வரும் ரயில் அது. அதில் அடிபட்டு மூவரும் சாகிறார்கள்.

> "மூவரின் இரத்தங்கள் ஒன்றாய்க் கலந்தன,
> ஒன்றாய்த் தான் இருக்கின்றன."

என்கிறார் புதுமைப் பித்தன். நம் நெஞ்சையே கலக்கும் சத்தியத்தின் சொல்லம்புகள்!

இதே 'தீண்டாமை' பற்றித் தமது கோணத்திலிருந்து ராஜாஜியும், இன்னும் வெவ்வேறு கோணங்களிலிருந்து து. ரா., ரஸவாதி, சரோஜா ராமமூர்த்தி போன்றவர்களும் சித்திரித்துள்ளார்கள். சாதிபேதம் எழுத்தாளர்களிடையே சத்திய ஆவேசத்தை எழுப்பி இருப்பது நம் சிந்தனையைக் கிளறச் செய்கிறது.

அந்தக் காலத்துச் சிறை வாழ்க்கை, தியாக மனப்பான்மை இவற்றை நாம் உணர்ந்துகொள்ள வாய்ப்பாக இருப்பவை சி. சு. செல்லப்பா, எம்.எஸ். கல்யாணசுந்தரம் ஆகியோரின் கதைகள்.

காந்திஜி இந்து முஸ்லிம் ஒற்றுமைக்காக அரும்பாடு பட்டவர் மட்டுமல்லர்; அதே வேள்வித் தீயில் தம் இன்னுயிரையே ஈந்துவிட்ட மகான். இந்தச் சிறு கதைத் தொகுப்பில் இந்து முஸ்லிம் கலவரங்களின் பயங்கரமான பின் விளைவுகளைப் பற்றிய கதைகளும் இல்லாமல் இல்லை. கலவரங்களின் போது, தங்கள்

விருப்பத்துக்கு மாருகக் கறைப் படுத்தப்பட்ட பெண் களே இளேஞர்கள் மணந்து கொள்வது அறத்துக்கு மாறுபட்டதாகாது என்ருர் காந்தியடிகள்.

அந்தக் கருத்துக்கு விளக்கம் போல் மாயாவி, ரா. பாலகிருஷ்ணன், கோமகள் ஆகியோர் தங்கள் கதைகளே உருக்கத்தோடு உருவாக்கியிருக்கிருர்கள்.

காந்திஜியின் பெயரைக் கூறிக் கொண்டே சிலர் செய்யும் தகாத செயல்களும் எழுத்தாளர்களுக்குக் கோபமூட்டியுள்ளன. சிதம்பர ரகுநாதன், ஆர். சூடாமணி, முதலியோரின் கதைகள் இத்தகைய போலிகளே இனம் காட்டும் கதைகள்.

காந்திஜி நம்மவர்களின் ஆடம்பரம், நகைப் பித்து, போலி வாழ்க்கை இவற்றுக்கு எதிராகவும் போரிட்டவர். பெண்கள் நகை அணிவதைக் கண் டித்து, அவர்கள் அணிந்திருந்தவற்றை ஹரிஜன நிதிக் காகத் தானம் கேட்டு வாங்கியவர். பி. எஸ். ராமையாவின் 'பதச்சோறு' அந்தக் கருத்தை அடிப் படையாகக் கொண்ட அழகான கதை.

நமக்கு இப்போது மிக மிகத் தேவையானது 'நாம் இந்தியர்' என்ற ஒருமைப்பாட்டு உணர்ச்சி. நாடு விடுதலே பெற்று விட்ட பிறகு, தனித் தனி இன உணர்ச்சிகளும், சாதி-சமய உணர்ச்சிகளும் நாட்டில் தலே விரித்தாடத் தொடங்கி விட்டன. காந்திஜி ஊட்டிய ஒற்றுமை உணர்ச்சியில் நாம் பெற்ற சுதந்தி ரம், நமது பிரிவினே மனப்பான்மையால் எங்கே மீண்டும் பறிபோய் விடுமோ என்ற இயல்பான அச்சம் சில எழுத்தாளர்களுக்கு ஏற்பட்டிருக்கிறது. சீனுவும் —பாகிஸ்தானும் நம்மைத் தாக்கிய போது, அவர்கள் இந்த வேற்றுமை மனப்பான்மைக்கு எதிராக நமக்கு அறைகூவல் விடத் தயங்கவில்லே. காந்திஜியின் நூற்ருண்டு விழாவினே நாம் தேசீய ஒருமைப்பாட்டு விழாவாகவும் கொண்டாட இருக்கின்ருேம். ஒருமைப் பாடு வலுப்படவில்லேயானுல் இங்கு காந்தியமில்லே; காந்தியம் போனுல் நம் நாடு மீண்டும் பறிபோய் விடும்.

இதில் அகிலன் எழுதியுள்ள 'சகோதரர் அன்றோ?' என்ற பாரதியின் வாக்கைத் தலைப்பாகக் கொண்ட சிறுகதை இந்த எச்சரிக்கையை விடுக்கிறது.

'வடக்கு தெற்கு' என்று விளையாட்டு மைதானத்தில் மோதிக் கொண்ட பஞ்சாபி இளைஞனும்—தமிழ் இளைஞனும் சீனருக்கு எதிரான போர்க் களத்தில் தோளோடு தோள் நின்று போரிடுகிறார்கள். தமிழனின் உயிரைக் காக்கத் தன்னுயிரை விடுகிறான் பஞ்சாபி.

பஞ்சாபியின் தியாகத்தால் உயிர் பிழைத்த தமிழனின் சொற்களைக் கவனிப்போம் :—

"ஆயிரம் வேற்றுமைகளுடைய நம் தேசத்தில் அடிப்படையான ஒரு பண்பாடு வலிமையாக இழையோடுகிறது. எனக்கும் உனக்கும் இமயமலை சொந்தம். அதனால்தான் நாம் அதைக் காக்க உயிர் கொடுக்க வந்திருக்கிறோம். அதுபோலவே கன்னியாகுரியும் ராமேச்வரமும் ராஜ்பகதூருக்கு சொந்தம் . . . அவனும், நானும், நாமும் ஒருதாய் வயிற்றுப் பிள்ளைகள்...நெடுங்கால உறவு இது!"

'நாம் இந்தியர்' என்பதையும், இந்த உறவுக்குக் குறுக்கே சாதியோ, சமயமோ, இனமோ தலைகாட்டக் கூடாது என்பதையும் தி. சா. ராஜூவும் அவருடைய 'மேஜர் ரஹ்மான் பேசுகிறேன்' என்ற கதையில் ஆணித்தரமாக வலியுறுத்தியுள்ளார்.

பொதுவாக, இப்படி ஒரு கதைத் தொகுப்பைத் தமிழில் கொண்டு வந்தவர்கள் பாராட்டப்பட வேண்டியவர்கள். இது ஒரு முன்முயற்சியாக இந்தத் துறையில் இருக்குமென நம்புகிறேன். இந்தத் தொகுப்பிலிருந்து பத்துப்பன்னிரண்டு கதைகளைத் தேர்ந்தெடுத்துத் தமிழ் நாட்டுப் பள்ளிகளில் விருப்பப்பாடமாக வைக்க வேண்டும். பள்ளி இறுதி மாணவர்களுடைய மனத்தில் காந்தியமும், தேசீய

ஒருமைப்பாடும் வித்துக்களாக விழுந்து வளர இந்த முயற்சி துணை செய்யுமென்று நம்புகிறேன்.

இதில் எழுதியுள்ள எழுத்தாளர்கள் அனைவர்க்கும், இதைப் பதிப்பித்துத் தமிழ்ப் பெருமக்களுக்கு வழங்கியவர்களுக்கும் என் பாராட்டுக்கள்—வாழ்த்துக்கள்.

இவ்வரிய சிறு கதைத் தொகுப்பைத் தமிழ்மக்கள் வரவேற்றுப் படித்து இன்புறுவார்களாக !

திருமயிலை,
25—2—69.

# முகவுரை

**1967**ஆம் ஆண்டு அக்டோர்பர் மாதம் முதல் வாரம். சென்னை ராஜேஸ்வரி கல்யாண மண்டபத்தில் அண்ணல் காந்திஜியின் பிறந்த நாள் விழா இனிது கொண்டாடப்பட்டு வந்தது. விழாப் பேச்சுக்களைக் கேட்டு மகிழச் சென்றிருந்த எனக்கு, அங்கு ஒரு பாக்கியம் காத்திருந்தது. முதுபெரும் எழுத்தாளரும், 'மஞ்சரி'யின் ஆசிரியருமான திரு. தி. ஜ. ர. அவர்கள், அன்பர் ஒருவருக்கு என்னை அறிமுகப் படுத்தி வைத்தார். அவர்தான் காந்தி நினைவு நிதியின் செயலாளர் திரு. க. அருணசலம் அவர்கள். அவருடன் அளவளாவி வரும்போது, மகாத்மாவின் உயிருக்குயிரான சத்தியம், அகிம்சை, மதுவிலக்கு, தீண்டாமை விலக்கு, வகுப்பு ஒற்றுமை, மாதர் முன்னேற்றம் போன்ற பல தத்துவங்களை உள்ளடக்கியும், மையக் கருத்தாகக் கொண்டும் எழுதப்பட்ட சில தமிழ்ச் சிறு கதைகளைத் தொகுத்து ஒரு நூலாக தமிழ்நாடு காந்தி நினைவு நிதி வரவிருக்கும் காந்தி நூற்றுண்டு விழாவினை ஒட்டி வெளியிடுவது பொருத்தமாக இருக்கும் என்ற கருத்தைத் தெரிவித்தேன். இதற்கு காந்தி நினைவு நிதியின் சம்மதத்தைப் பெற்று, அத்தகைய சிறு கதைகள் ஐம்பதைத் தொகுத்துத் தரும் ஒரு பாக்கியத்தையும் அவர்கள் எனக்கு அளித்தார்கள். இந்தக் கதைகளை நன்கு தொகுத்து வரும்போது திரு. க. அருணசலம் அவர்களும், மதுரையிலுள்ள அவருடைய காரியாலயத்தினரும் செய்த உதவிகளுக்கும், அளித்த உற்சாகத்துக்கும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன்.

காந்திஜியின் தத்துவங்களை விளக்கும் சிறு கதைகள் ஒரு தொகுப்பாக வெளிவரப்போகிறது என்பதை அறிந்ததும், தாங்கள் எழுதிய கதைகளைத் தேடித் தந்தும், புதிதாகக் கதைகளை

எழுதித் தந்தும் ஒத்துழைத்த எழுத்தாள அன்பர்களுக்கு என் நன்றி உரித்தாகிறது. இந்தத் தொகுப்பில் சேர்க்கப்பட்டுள்ள ஒரு சில கதைகளை ஏற்கெனவே தங்கள் நூல்கள் மூலம் வெளியிட்டுள்ள பிரசுரகர்த்த அன்பர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

தந்தத்தைப் போலப் பளிச்சென்றும், சுத்தமாகவும், இந்நூலை அச்சிட்டுத் தந்துள்ள 'ஐவரி பிரிண்டர்ஸ்' திரு. சிவராமகிருஷ்ணன் அவர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

கிட்டத்தட்ட ஐநூறு பக்கங்களுக்கு வரும் இந்த நூலிலுள்ள ஐம்பது சிறு கதைகளையும் ஊன்றிப் படித்து, அலசி ஆராய்ந்து, திறனாய்வுப் பாணியில் சீரிய முன்னுரை ஒன்று வழங்கியிருக்கும் தமிழ் நாட்டின் முந்நாள் முதலமைச்சரும், காந்தி நினைவு நிதியின் தலைவருமான உயர்திரு. எம். பக்தவத்சலம் அவர்களுக்கு என் சார்பிலும், இந்தத் தொகுப்பில் பங்கு கொண்டுள்ள சிறு கதை ஆசிரியர்களின் சார்பிலும் மனம் நிறைந்த மகிழ்ச்சியையும், நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் வெளிவருவதற்கு ஒரு வகையில் காரணமாக இருந்த திரு. தி. ஜ. ர. இந்தத் தொகுதிக்கு ஒரு சிறுகதை எழுதித்தர இயலாமல் போனதனால் ஏற்பட்ட என்னுடைய ஏமாற்றத்தை வாசகர்களுடன் பகிர்ந்து கொள்கிறேன்.

ஒரு கணத்தில் தோன்றிய கருத்தேயானாலும், அதற்கு ஒரு நிலையான இலக்கிய வடிவம் ஏற்பட உறுதுணையாக இருந்து ஊக்கிய மகாத்மாஜியின் அன்பு நினைவுக்கும், எல்லையற்ற கருணைக் கடலான இறைவனின் அருள் கொடைக்கும் மனம்-மொழி-மெய்களால் அஞ்சலி செலுத்துகிறேன்.

**C-606, அசோக் நகர்**
**சென்னை-33**
**8—3—69**

**கே. ஆர். கல்யாணராமன்**
**"மகரம்"**

# பொருளடக்கம்

இப்படிப் பல வருஷங்கள் சென்றன. ஒரு நாள் எனக்கு ஒரு நாவல் கிடைத்தது. ஆஹா! அதைப் படித்தபோது நான் அடைந்த சந்தோஷத்தைச் சொல்லிமுடியாது. அது முதல் நாவல் பைத்தியம் என்னை நன்றாய்ப் பிடித்துக் கொண்டது. ஒரு முறை ஊரிலிருந்து சிலர் கிறிஸ்துமஸ் வேடிக்கை பார்க்கப் பட்டணத்திற்கு வந்தார்கள். நானும் அவர்களுடன் சேர்ந்து வந்தேன். அவர்களெல்லாம் ஏதேதோ சாமான்கள் வாங்கிக் கொண்டு திரும்பினார்கள். நான் என்ன செய்தேன் தெரியுமா? மூர் மார்க்கெட்டில் பழைய கிழிந்த நாவல்களில் ஒரு கட்டு வாங்கிக்கொண்டு போய்ச் சேர்ந்தேன். இரவு பகல் ஒரே மூச்சாக வாசித்து முடித்தேன். இப்பொழுது நினைத்தால் மிகவும் ஆச்சர்ய மாய் இருக்கிறது. குப்பைத் தொட்டியில் போடுவதற்கே தகுந் தவை என்று இப்போது நான் கருதும் நாவல்களை அப்போது எத்தனை ஆவலுடன் படித்தேன், தெரியுமா?

["இருக்கட்டும், நீங்கள் என்னைக் கேலி செய்வதில்லை என்று உறுதி கூறினால்தான் இனிமேல் கதை சொல்லுவேன்" என்றார் ஓமக்குட்டி முதலியார். "ஒரு நாளும் கேலி செய்யமாட்டேன், சொல்லுங்கள்" என்றேன்.]

சாதாரணமாய் நாவல்கள் என்றால் எப்படிப் பட்டவை என்று உங்களுக்குத் தெரியுமே? எல்லாம் காதல் மயம். நமது வாழ்வுக் குச் சற்றும் பொருந்தாதவை. ஆனால் நான் அப்போது பதி னெட்டு வயது வாலிபன். இவ்வளவு தூரம் பகுத்தறியும் சக்தி எனக்கில்லை. ஆகவே, மேற்படி நாவல்களைப் படித்ததன் பயனாகக் காதலைப்பற்றியும், விவாகத்தைப் பற்றியும், வருங்கால வாழ்வைப் பற்றியும் ஏதேதோ மனோராஜ்யம் செய்யத் தொடங்கினேன்.

எங்கள் கிராமத்தில் அப்பொழுது பெரிய பணக்காரர் அப்புக் குட்டி முதலியார். அவர்தான் கிராம முன்சீப்புங்கூட. அவருக்கு ஒரு பெண் இருந்தாள். அவள் பெயர் தெய்வயானை. இப் பொழுது நினைத்துப் பார்த்தால் அவள் ஒரு சர்வசாதாரணமான பெண் என்றே தோன்றுகிறது. ஆனால் அப்போது "நாவல்" கண்ணுடன் பார்த்த எனக்கு அவள் ஓர் அப்ஸர ஸ்திரீயைப்போல் காணப்பட்டாள். பூலோகத்திலும் சரி, தேவலோகத்திலும் சரி, அவளைப் போன்ற அழகி வேறொருத்தி இல்லை என்று நிச்சயமடைந் தேன். புத்தகத்தில் படித்த கதாநாயகர்களைப் போலவே நானும் அவளைக் கல்யாணம் செய்து கொள்ளாவிட்டால் உயிர் பிழைத் திருக்க முடியாது என்று உறுதி கொண்டேன்.

இது வரையில் நாவல் படிப்பு பயன்பட்டது. இதற்கு மேல் என்ன செய்வதென்பதற்கு நாவல்களின் உதவி கிடைக்கவில்லை. நானோ தன்னந்தனியனான வாலிபன்; தகப்பனற்றவன்; ஏழை.

அப்புக்குட்டி முதலியாரோ பெரும் பணக்காரர்; ஊருக்கு எஜமானர். அவரிடம் போய், "உன் பெண்ணைக் கொடு" என்று கேட்டால் கட்டி வைத்து அடிப்பார். நாவல்களில் படித்ததைப் போல் பெண்ணை நேரே பார்த்து என் காதலை வெளியிடுவதற்கு வேண்டிய தைரியம் இல்லை. அதெல்லாம் நாவல்களில் நடக்கும். வாழ்க்கையில் நடைபெறாது. ஆதலால் ஓயாமல் சிந்தித்த வண்ணம் இருந்தேன். கடைசியாக ஒரு யுக்தி தோன்றியது. அந்த ஊரில் சமீபத்தில் கள்ளுச் சாராயக் கடைகள் ஏலம் போட இருந்தார்கள். அந்தக் கடைகளை ஏலம் எடுப்பதென்று தீர்மானித்தேன். விரைவில் பணம் சம்பாதித்து அப்புக்குட்டி முதலியாருக்கு சமமாவதற்கு இது ஒன்றுதான் வழி என்று எண்ணினேன்.

தன் நகைகளை விற்றும் பத்துப் பன்னிரண்டு வருஷங்களில் கொஞ்சம் கொஞ்சமாய்ச் சேர்த்தும் என் தாயார் இருநூறு ரூபாய் வரையில் பணம் வைத்திருந்தாள். ஏலப்பணத்தைக் கட்டுவதற்கு அத் தொகையைக் கொடுக்கும்படி கேட்டேன். தாயார் முதலில் ஆட்சேபித்தாள். "அந்தப் பாவத் தொழில் நமக்கு வேண்டாமப்பா; ஏதோ உள்ளதை வைத்துக் கொண்டு திருப்தி அடைவோம்" என்றாள். நான் பிடிவாதம் பிடித்ததன் மேல் அவள், "குழந்தாய்! நம்முடைய குடும்ப சொத்தெல்லாம் எப்படி அழிந்தது தெரியுமா?" என்று கேட்டாள். "தெரியாதே! எப்படி?" என்றேன். "எல்லாம் உன் தகப்பன் குடித்தே ஒழித்துப் போட்டான். அந்தப் பாவம் என்னத்திற்கு?" என்றாள். எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. இது வரையில் அந்த விஷயம் எனக்குத் தெரியாது; ஆனால் தெய்வயானையை நினைத்துக்கொண்டேன். தாயார் சொன்ன செய்தியிலிருந்து என்னுடைய தீர்மானம் இன்னும் உறுதிப்பட்டது. "அம்மா! கள்ளுக்கடையில் போன சொத்தை கள்ளுக்கடை மூலமாகவே சம்பாதித்துத் தீருவேன். அதுதான் தெய்வத்தின் சித்தம். இல்லாவிட்டால் எனக்கேன் இந்த யோசனை தோன்ற வேண்டும்?" என்றேன்.

கள்ளுக்கடைக்குப் போட்டி அதிகம். எடுக்க முடியவில்லை. சாராயக்கடை மட்டும் எடுத்தேன். வியாபாரம் நன்றாய் நடந்தது. உத்தியோகஸ்தர்களுக்கு அதிகப் பணம் கொடுத்தேன். ஆனால் என் கையிலும் பணம் அதிவேகமாகச் சேர்ந்து கொண்டு வந்தது. அடுத்த வருஷம் கள்ளுக்கடை, சாராயக்கடை இரண்டையும் எடுத்தேன். அப்புக்குட்டி முதலியாருடைய பெண்ணுக்காக நான் செய்த காரியங்களெல்லாம் அவர் மனத்தில் பொறாமையைத்தான் உண்டாக்கின. ஏனெனில் அப்போது அவருடைய கை இறங்கி வந்தது. கடன் அதிகமாயிற்று. "கள்ளுக்கடைக்காரப் பயல்" என்று என்னைப் பற்றி அவர் அவமதிப்பாய்ப் பேசியதாகக் கேள்விப் பட்டேன். அவருடைய அகம்பாவத்தை அடக்குவது

எப்படி என்று ஓயாமல் சிந்தித்துக் கொண்டு வந்தேன். என் எண்ணம் நிறைவேறுவதற்கான ஒரு சம்பவம் விரைவிலேயே நடந்தது. கடவுள் என் பக்கம் இருக்கிறார் என்று தோன்றியது!

ஒரு சமயம் அப்புக்குட்டி முதலியார் தம் குடும்பத்துடன் ஏதோ வியாதியை சொஸ்தப்படுத்திக் கொள்ளப் பட்டணத்துக்கு வந்து ஆறு மாதம் தங்கியிருந்தார். இங்கே அவர்களுக்கு பந்துக்கள் பலர் இருக்கிறார்கள். அவர் திரும்ப ஊருக்கு வந்த அன்று அவருடைய ஆள் ஒருவன் சாராயக் கடைக்கு வந்து ஒரு புட்டி சரக்கு வாங்கிக்கொண்டு போனான். எனக்கு மிகவும் ஆச்சர்யமாயிருந்தது. பட்டணத்தில் பந்துக்கள் வீட்டில் கற்றுக் கொண்டார் போலும் என்று எண்ணினேன். மூன்று நாள் கழித்து மறுபடியும் அந்த ஆள் வந்து இன்னொரு புட்டி வாங்கிக்கொண்டு போனான்.

அப்போது எனக்குண்டான சந்தோஷத்தை அளவிட முடியாது. ''சரி, முதலியார் நமது வலையில் வீழ்ந்தார். அவர் கர்வம் ஒழிந்தது; இந்த ஊரில் நம்மைத் தவிரக் கடன்கொடுப்பார் யாருமில்லை. தெய்வயானை நம்மைத் தப்பி எங்கே போகிறாள்?'' என்று இவ்வாறெல்லாம் ஆகாசக் கோட்டை கட்டினேன்.

எல்லாம் நான் எண்ணியபடியே நடந்து வந்தது. ஒரு வருஷத்துக்குள் அப்புக்குட்டி முதலியார் ஊரறிந்த பெருங் குடிகாரரானார். கடன் விஷம்போல ஏறிவந்தது. ஏராளமான பூமி அவருக்கிருந்தாலும் வட்டி கொடுப்பது எளிதன்று. நிலத்தை விற்றுக் கடனைத் தீர்ப்பதற்கும் நிலத்தை வாங்குவார் யாருமில்லை. இந்த நிலைமையில் ஒரு கோர்ட்டு வாரண்டு அவர் மீது பிறந்தது. வாரண்டில் தப்புவதற்காக கையிலிருந்த சர்க்கார் கிஸ்திப் பணத்தைக் கொடுத்து விட்டார். இவர் குடிகாரரென்றும், கடன்காரரென்றும், மொட்டை விண்ணப்பத்தின் மூலம் அதிகாரிகளுக்குத் தெரிந்து சோதனைக்கு வந்துவிட்டார்கள். முதலியார் தம் கர்வமெல்லாம் விட்டு என்னிடம் ஓடிவந்தார். என் காலில் விழுந்து கெஞ்சினார். எண்ணூறு ரூபாய் கடன் கொடுத்து அவர் தலைக்கு வந்த விபத்திலிருந்து அவரைத் தப்புவித்தேன்.

நான் கொஞ்சம் குறிப்புக் காட்டியதுதான் தாமதம், முதலியார் தெய்வயானையை எனக்குக் கலியாணம் செய்து கொடுப்பதற்குத் தம்முடைய பூரண சம்மதத்தைத் தெரிவித்தார். விவாகத்திற்கு நாள் குறிப்பிடுவதுதான் பாக்கி. இந்தச் சமயத்தில் அப்புக்குட்டி முதலியார் ஒரு நாள் திடீரென்று மரணமடைந்தார். நல்ல திடதேகியாயிருந்த அவர் இப்படி அகால மரணமடைந்ததற்கு மிதமிஞ்சிய குடிதான் காரணமாயிருக்க வேண்டும். இந்தத் துக்கச் சம்பவத்தினால் என்னுடைய உத்தேசங்களைப்

பற்றிப் புனராலோசனை செய்ய வேண்டியதாயிற்று. இப்பொழுது நான் தெய்வயானையை விவாகம் செய்துகொண்டால் அவளுடைய குடும்பப் பொறுப்பு முழுவதையும் நானே ஏற்றுக் கொள்ள வேண்டிவரும். ஏனெனில், அவர்கள் வீட்டில் வயது வந்த ஆண் மக்கள் யாருமில்லை. அப்புக்குட்டி முதலியாருடைய இரண்டாந் தாரம், சிறு பெண். அவளும் அவளுடைய கைக்குழந்தையும் தெய்வயானையும்தான் வீட்டில் உள்ளவர்கள். இவர்களைக் காப்பாற்றும் பொறுப்பையும் குடும்பத்தின் கடனைத் தீர்த்துச் சீர்படுத்தும் பொறுப்பையும் நானே வகிக்கவேண்டியவனுவேன். இப்படியெல்லாம் மனத்தில் சந்தேகங்கள் உண்டாயின. ஆனுலும் முடிவில் தெய்வயானையை மணந்துதான் தீரவேண்டும் என்று தீர்மானித்தேன்.

இப்போதெல்லாம் கள்ளு, சாராயக்கடைகளுக்கு நானே நேரில் போவதில்லை. சம்பளஆட்கள் வைத்துவிட்டேன். அன்ருடம் சாயங்காலத்தில் மட்டும் சென்று கூடுமுதல் தொகையை வாங்கிக் கொண்டு வருவேன். ஒரு நாள் அவ்வாறு சென்ற போது, கிராம முன்சீப்பு வீட்டு வேலைக்காரன் அப்பொழுதுதான் கையில் புட்டியுடன் கடையிலிருந்து வெளியே வருவதைக் கண்டேன். என்னைப் பார்த்ததும் அவன் சாலையோரமாய்ப் பதுங்கிக்கொண்டு சென்ருன்.

''இவன் இப்போது யாருக்குச் சாராயம் வாங்கிப் போகிருன்?'' என்று எனக்கு ஆச்சர்யமாயிருந்தது. ஏதோ ஒரு குருட்டு எண்ணத்தினுல் அதைக் கண்டுபிடிக்க வேண்டுமென்று தோன்றிற்று. ஆகவே, அவனுக்குத் தெரியாமல் அவனைப் பின் தொடர்ந்து சென்றேன். அவன் ஊர்த் தெருவின் புறம்பாய்ச் சென்று அப்புக்குட்டி முதலியாரின் வாயிற்படி வழியாய் நுழைந்தான். இதை முற்றும் ஆராயவேண்டுமென்று எண்ணி, தெருவீதிக்குச் சென்று முதலியார் வீட்டுக்குள் நுழைந்தேன். நடைக்குச் சென்றதும் சிறிது தயங்கி உள்ளே எட்டிப் பார்த்தேன். அப்போது நான் கண்ட காட்சி இடி விழுந்தாற்போல் என்னைத் திகைக்கச் செய்து விட்டது.

தெய்வயானையும் அவளுடைய சிறிய தாயாரும் ஊஞ்சல் பலகையில் உட்கார்ந்திருந்தார்கள். முதலியாருடைய மனைவியின் கையில் சாராயப்புட்டி. இரண்டு தம்ளர்களில் ஊற்றி ஒன்றை, தெய்வயானையிடம் கொடுத்து மற்ருென்றைத் தான் அருந்த ஆரம்பித்தாள். பல வருஷ காலமாக என் உள்ளத்தில் வளர்ந்து வந்த காதல் அத்தனையும் அந்த ஒரு கண நேரத்தில் விஷமாகி விட்டது. சொல்லமுடியாத அருவருப்பு எனக்குண்டாயிற்று. சத்தம் செய்யாமல் வெளியே வந்து அவசரமாக வீடுவந்து சேர்ந்தேன்;

என் மனோரதத்தில் இடி விழுந்தது. என் ஆசையெல்லாம் நிராசையாயிற்று. முதலில் அப்புக்குட்டி முதலியார் வீட்டில் சாராயப்புட்டி புகுந்ததைப் பார்த்தபோது, நான் ஆசைப்பட்ட பழம் கிட்டிவிட்டது என்று சந்தோஷப் பட்டேன். வீட்டிற்குள் சென்ற அந்தச் சாராயப்புட்டி, பின்னால் செய்த வேலையைப் பார்த்தது, அந்தப் பழம் விஷமாய்ப் போவதற்குக் காரணமாயிற்று. அளவில்லாத துக்கத்துடன் அன்று படுத்தேன். பாட்டன் சொன்ன பழங்கதைகளெல்லாம் நினைவுக்கு வந்தன. நாவல்கள் எல்லாம் ஆபாசமாய்த் தோன்றின.

அதற்குப் பிறகு ஒரு வாரத்துக்குள் கள்ளு, சாராயக் கடைகளைத் தொலைத்துத் தலை முழுகினேன். அக்கடைகளில் சம்பாதித்த சொத்தையெல்லாம் அந்த ஊர்க் கோயிலுக்கும், பஜனை மடத்திற்கும், பள்ளிக்கூடத்திற்குமாக எழுதிவைத்தேன். இந்தத் தர்மங்கள் சரிவர நடப்பதற்கும் ஏற்பாடு செய்தேன். கையில் கொஞ்ச ரூபாய் எடுத்துக்கொண்டு தாயாரும் நானும் இந்தச் சென்னை நகருக்கு வந்து சேர்ந்தோம்'' என்று கூறி நண்பர் கதையை முடித்தார்.

000

மங்கள நூலகம், சென்னை-34 அனுமதியுடன் பிரசுரிக்கப்படுகிறது.

2

# புதிய நந்தன்

நந்தா சாம்பானை நந்த நாயனாராக்க, சிதம்பரத்தில் அக்கினிப்புடம் போட்ட பின்னர் வெகு காலம் சென்றது.

அந்தப் பெருமையிலேயே ஆதனூர் சந்தோஷ அல்லது துக்க-சாகரத்தில் மூழ்கி அப்படியே மெய் மறந்தது.

இங்கிலீஷ் சாம்ராஜ்யம் வந்த சங்கதி கூடத் தெரியாது. அப்படிப்பட்ட நெடுந் தூக்கம்.

இப்பொழுது, ஆதனூரிலே ரயில்வே ஸ்டேஷன் வெற்றிலை பாக்குக் கடை என்ற ஷாப்பு; காப்பி ஹோட்டல் என்ற இத்யாதி சின்னங்கள் வந்துவிட்டன. எப்படி வந்தன என்ற சமாசாரம் யாருக்கும் தெரியாது.

ஆனால், நந்தன் பறைச்சேரியில் விடை பெற்றுக் கொண்ட பிறகு, பறைச்சேரிக்கு என்னமோ, கதி மோட்சம் கிடையாது. பழையபறைச் சேரிதான், பழைய கள்ளுக்கடைதான். ஆனால் இப்பொழுது பழைய வேதியரின் வழி வழி வந்த புதிய வேதியரின், ஆள் மூலம் குத்தகை. சேரிக்குப் புறம்பாக, அல்லது தீண்டக் கூடாது என்ற கருத்துடனே, மரியாதையான தூரத்திலே, ஒரு முனிஸிபல் விளக்கு: அதை ஏற்றுவதைப் பற்றி ஒருவருக்கும் தெரியாது. சேரிப்பறையர்கள் ஆண்டையின் அடிமைகள், அத்துடன் அவர்களுக்குத் தெரியாத வெள்ளைத் துரைகளின் அடிமைகள்.

அந்தப் பழைய வேதியரின் வாழையடி வாழையாக வந்த (அவர்கள் குல முறை கிளத்தும் படலம் எந்தப் புராணத்திலும் இல்லை) வேதியர் அக்கிரகாரத்தில் பெரிய பண்ணை. 1000 வேலி

நிலம் இத்யாதி வகையரு. இது மட்டுமல்ல, ஒரு பென்ஷன் பெற்ற ஸப் ரிஜிஸ்திரார் விச்வநாத சிரௌதி: இவருக்குப் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலும், இறந்து போன ஸனுதன உண்மைகளிலும் அபார நம்பிக்கை. இதை யறிந்து நடப்பவர்கள் தான் அவருடைய பக்தர்கள்.

அவருக்கு ஒரு பையன், பெயர் ராமநாதன். எம். ஏ. படித்து விட்டு கலெக்டர் பரீக்ஷை கொடுக்க விருந்தவன். ஏதோ பைத்தியக் காரத்தனத்தினுல்—இது அவர்கள் வீட்டிலும் அக்ரகாரத்திலும் உள்ள கொள்கை—சத்தியாக் கிரகத்தில் ஈடுபட்டு விட்டான். பையனுக்கு இதிலிருந்த பிரேமையை ஒரு நல்ல சம்பந்தத்தில் ஒழித்து விடலாம் என்பது சிரௌதியின் நம்பிக்கை. பிள்ளையின் பேரிலிருந்த அபார வாத்ஸல்யத்தின் பயன்.

## 2

சேரியிலே கருப்பன் ஒரு கிழட்டு நடைப்பிணம். 60 வயது. பெரிய நயினுரின் தோட்டக்காவல். இதில் ஒரு ஸ்வாரஸ்யம். கருப்பன் சிறு பிராயத்தில் தெரியாத் தனத்தினுலோ, ஐயரவர்கள் இப்பொழுதும் சொல்லிக் கொண்டிருக்கிறபடி, 'பறக்கிறது' னுலோ, ஒரு நாள் இரவு, அக்ரஹாரத்தில் இருக்கும் தெப்பக் குளத்தில் இறங்கி ஒரு கை தண்ணீர் அள்ளிக் குடித்து விட்டான். கோயில் தெய்வத்தின் உலாவுப் பிரதிநிதியான சுப்பு சாஸ்திரிகள் கண்டு விட்டார். அக்ரஹாரத்தில் ஏக அமளி. அப்பொழுது சிறுவனுக விருந்த விச்வநாத ச்ரௌதி, தன்னை மீறிய கோபத்தில் அடித்த அடி கருப்பனைக் குருடாக்கியது, விளையும் பயிர் முளையிலே தெரியாதா?

ஆனுல் ச்ரௌதி இளகிய மனம் உடையவர். கருப்பனுடைய ஸ்திதிக்கு மிகவும் பரிதபித்து தோட்டத்தில் காவல் தொழிலைக் கொடுத்தார். கல்யாணம் செய்து வைத்தார். தோட்டத்திலே குடிசை கட்டிக் கொடுத்தார். பிறகு தங்கக் கம்பியாகி விட்டான் என்று எல்லோரிடத்திலும் சொல்லுவதில் வெகு பிரேமை.

## 3

அதெல்லாம் பழைய கதை.

கருப்பன் குருடனுகி விட்டால் குழந்தைகள் பிறக்காதா? முதலில் ஒரு ஆண் குழந்தை. அவன் பெயர் பாவாடை, ஆண்டை சின்ன சாமியும் ஏறக்குறைய இதே காலத்தில் தான் பிறந்தான். இராமநாதன் சில சமயங்களில் தோட்டக் காட்டிற்கு வரும்

பொழுது பாவாடையுடன் கேணியில் முக்குளித்து விளையாடு வதிலும் மரக் குரங்கு விளையாடுவதிலும் பரம உத்ஸாகம்.

அதெல்லாம் பழைய கதை.

இரண்டு பேரும் வித்தியாசமான இரண்டு சமூகப் படிகளின் வழியாகச் சென்றார்கள். இரண்டு விதமாகக் கண்டார்கள்.

பரமண்டலங் களிலிருக்கும் பிதாவாகிய கர்த்தரின் நீதிகளை, ஆதனூரில் பரப்பும்படி ரெவரெண்ட் ஜான் ஐயர் ஒரு தடவை ஆதனூர் சேரிக்கு வந்தார். பாவாடையின் புத்தி விசேஷத்தைக் கண்டு, அவனைத் தம் மதத்தில் சேர்க்க அனுமதித்து விட்டால், பெரிய பண்ணை மாதிரி ஆக்கி விடுவதாக ஆசை காட்டினார். கருப்பனுக்கு, தன்மகன், "இங்குருசி" (English) படிக்க வேண்டு மென்று ஆசை. நீட்டு வானேன்? பாவாடை ஜான் ஐயருடன் சென்றான்.

ரெவரெண்ட் ஜான் ஐயர் வேளாளக் கிருஸ்தவர். முதலில் போர்டிங்கில் போட்டுப் படிக்க வைத்தார். பையன் புத்தி விசேஷம், மிகுந்த பெயருடன் 10 கிளாஸ் படிக்கும் வரை பிரகாசித்தது. இன்னும் பிரகாசிக்கும். பர மண்டலங்களிலிருக் கும் கர்த்தரின் விதி வேறு விதமாக இருந்தது.

ஜான் ஐயருக்கு ஒரு பெண் உண்டு. மேரிலில்லி என்ற பெயர். நல்ல அழகு.

அவளும் அந்த மிஷன் பள்ளிக் கூடத்தில் ஆண் பிள்ளைகளுடன் படித்தாள். எல்லாவற்றிலும் முதல் மார்க் எடுக்கும் பாவாடை யிடம் (இப்பொழுது அவனுக்கு தானியேல் ஜான் என்ற பெயர்) சிறிது பிரியம் நட்பு, வரவரக் காதலாக மாறியது.

கிருஸ்தவ சமுதாயத்தில் இந்துக் கொடுமைகள் இல்லை யென்று ஜான் ஐயர் போதித்ததை நம்பி, மனப்பால்குடித்த ஜான் தானியேல், ஒரு நாள் ஐயரிடம் நேரிலேயே தன் கருத்தை வெளியிட்டான்.

ஜான் ஐயரவர்களுக்கு வந்து விட்டது பெரிய கோபம். "பறக் கழுதை, வீட்டை விட்டு வெளியே இறங்கு" என்று கழுத்தைப் பிடித்து நெட்டித் தள்ளினார்.

மனமுடைந்த தானியேலுக்குப் பாழ்வெளியாகத் தோன்றி யது உலகம். இந்த மன நிலைக்கு மதம் தானே சாந்தி என்கிறார்கள். கிருஸ்தவனாக இருந்த பொழுது வேத புத்தகத்தை நன்றாகப் படித்திருந்தான். சுவாமியாராகப் போய் விட வேண்டுமென்று கத்தோலிக் மதத்தைத் தழுவி, சுவாமியார் பரிட்சைக்குத் தேர்ந் தெடுக்கப்பட்ட நாவிஸ் பிரதராக (Novice Brother) Father

ஞானப் பிரகாசம் மேற் பார்த்த மடத்தில் இரண்டு வருஷங்கள் கழித்தான். சுற்றி நடக்கும் அபத்தங்களும், சில சுவாமியார் களின் இயற்கைக்கு விரோதமான இச்சைகளும், மனத்திற்குச் சற்றும் சாந்தி தராத இருப்புச் சட்டம் போன்ற கொள்கைகளும் அவன் மனத்தில் உலகக் கட்டுப் பாடே ஒரு பெரிய புரட்டு, என்ற நம்பிக்கைகளைக் கிளப்பி விட்டன.

அதனிடமும் விடைபெற்றுக் கொண்டு, திரு. ராமசாமிப் பெரியாரின் சுய மரியாதை இயக்கத்தில் ஈடு பட்டு விட்டான். அதிலே அவன் ஒரு பெரும் தீவிரவாதி. இப்பொழுது தோழர் நரசிங்கம் என்ற பெயருடன், தனக்குத் தோன்றிய உண்மைகளை அதில் ஒரு பைத்தியம் பிடித்ததுபோல், பிரசாரம் செய்து கொண்டு வந்தான்.

ஒரு தடவை தகப்பனுரைக் காண ஆதனூருக்கு வந்தான். பழைய எண்ணங்கள் குவிந்திருக்கலாம். அதைப் பற்றி எனக்குத் தெரியாது. அவனுக்கு இரண்டு உண்மைகள் தெரிந்தன. தனக் கும் தனது குடும்பத்தினருக்கும் இடையே எண்ணங்களில், செய்கைகளில், ஏன் எல்லாவற்றிலுமே ஒரு பெரிய பிளவு இருக் கிறது என்பது ஒன்று: இன்னும் ஒன்று, தான் சென்ற பிறகு, தனக்கு ஒரு அழகான—பறைச்சிகளுக்கும் அழகாயிருக்க உரிமை யுண்டு—தங்கை, பதினறு பிராயத்தாள் இருப்பதை யறிந்தது தான்.

ஆனல், இவர்களை மனிதரின் நிலைமைக்குக் கொண்டுவர, எந்தப் பகீரதன் உண்டாகப் போகிருனே என்ற மலைப்பு ஏற்பட்டு விட்டது. தனது பிரசங்கங்கள் படித்தவர்களிடத்தில் செல்லும்; இந்த வாயில்லாப் பூச்சிகளிடத்தில் ?

4

ராமநாதன், வீட்டில் செல்லப் பிள்ளை. இட்டது சட்டம்; பக்கத்து ஜில்லாத் தலை நகரில் மெட்ரிக்குலேஷன் வரை படித் தான். அவனுடைய படிப்பு வேறு ஒரு தினுஸ¬ கெட்டிக்காரன்; பள்ளிக்கூடத்தில் மட்டுமல்ல. சிலரைப் போல் பள்ளிக் கூடத்தில் மூழ்கி விடவில்லை. காலத்தின் சக்தி வசப்பட்டு அதன் நூதன உணர்ச்சிகளில் ஈடுபட்டு இன்பப் பட்டவன்.

சென்னைக்குச் சென்று மேல்ப் படிப்புப் படித்தான்; எம். ஏ. வரையில். அதற்குள் 1930 இயக்கம் வந்தது. தந்தை நினைத்த கலெக்டர் பதவியை விட்டு, தடியடி பட்டு ஜெயிலுக்குச் சென்ருன்.

ஜெயிலில் இருந்து வந்ததும் ஹரிஜன இயக்கத்தில் ஈடு பட் டான். தகப்பனுருக்கு வருத்தம் தான். ராமநாதனின் அசையாத

மனத்தின் முன் ச்ரௌதியின் அன்புதான் நின்றது: கொள்கைகள் பறந்தன.

ஒரு தடவை ஆதனூருக்கு வந்திருந்தான். அப்பொழுது கருப்பனின் மகளுக்கு வயது வந்து விட்டது. நல்ல இயற்கையின் பூரண கிருபை இருந்தது:

ஒரு நாள் இரவு நல்ல நிலா. தோட்டத்திற்குச் சென்ருன். இரவு கொஞ்ச நேரந்தான். அதுவும் ஆதனூரில் கேட்க வேண்டுமா?

தோட்டக் கிணற்றில் யாரோ குதிப்பது போல் சப்தம்: ஓடிப் பார்க்கிருன்; ஒரு பெண் உள்ளே! அவனுக்கு ஒன்றும் தெரிய வில்லை: உடனே அவனும் குதித்தான்.

''சாமி, கிட்ட வராதிங்க, பறச்சி, கருப்பன் மவ: சும்மாணுச் சிங் குளிக்கறேன்'' என்ற குரல்.

''சரி சரி, நீ விழுந்து விட்டாயாக்கும் என்று நினைத்தேன். ஏறி வா என்று கரை ஏறினுன்.

''இல்லே, சாமி'' என்று தயங்கினுள்: பிறகு என்ன? இயற்கை இருவரையும் வென்றது.

ராமநாதனுக்கு,... பிறகு ஒரு மகத்தான பாபம் செய்து விட் டோம் என்ற நினைப்பு. கருப்பன் மகளுக்கு, சின்னப்பண்ணையின் தயவு கிடைத்ததில் திருப்தி.

ராமநாதன் அவளைக் கலியாணம் செய்து கொள்வதாக வாக் களித்தான். 'அதெப்படி முடியும் சாமி' என்று சிரித்தாள்.

கருப்பனிடம் போய் நடந்ததைச் சொல்லிப் பெண்ணைக் கொடுக்கும்படிக் கேட்டான். அவனுக்குப் புதிய கொள்கைகள் எப்படித் தெரியும்!

''அது நயிந்தோ மகாப் பாவம். கண்ணுணே அப்படிச் செய்யக் கூடாது,''

ராமநாதனுக்கு இடி விழுந்தது போலாயிற்று.

## 5

மகாத்மா காந்தி தென்ஞட்டில் ஹரிஜன் இயக்கத்திற்காகப் பிரசாரம் செய்ய வந்தார். ஆதனூரில் ஐத்து நிமிஷம் தங்குதல். எல்லாம் ராமநாதனின் ஏற்பாடு. ச்ரௌதிகள் அவருடன் வாதம் செய்ய புராண அத்தாட்சிகளுடன் தயார். இதில் ச்ரௌதி களுக்கு இரட்டை வெற்றி என்ற நம்பிக்கை. ஒன்று, காந்தியின்

கொள்கையைத் தகர்ப்பது, இரண்டாவது காந்தியின் முன்பே தன் புத்திரனிடம் சனாதனத்தின் புனிதத்தைக் காண்பிப்பது.

தோழர் நரசிங்கம் காந்தியை எதிர்த்துக் கேள்விகள் கேட்க ஆதனூருக்கு வந்தான். தங்கையின் சமாசாரம் தெரிந்துவிட்டது. தகப்பனாரிடம் கலியாணம் செய்து வைத்துவிட வேண்டுமென்றும் அதற்குப் பறையரின் சமுதாயத்தின் கட்டுப்பாட்டால் செய்ய முடியும் என்றும் தெரிவித்தான். தகப்பனாரின் முட்டாள் தனமான நம்பிக்கையைத் தகர்க்க முடியவில்லை, 'பாப்பானின் சாயத்தைத் துலக்கி விடுகிறேன்' என்று காத்திருந்தான்.

ரயில்வே ஸ்டேஷன் பக்கத்திலிருந்த மைதானத்தில், ஒரு மேடை; கியாஸ்லைட்; இத்தியாதி, இத்தியாதி, பெருங் கூட்டம். வெற்றி கொள்ள ஆசைப்படும் சனாதனமும் அதில் கலந்திருக்கிறது.

கருப்பன் கிழவன். 'மவாத்துமா' கிழவரைப் பார்க்க ஆசை. கண் ஏது? அதென்னமோ? குருடருக்கு என்ன செய்ய முடியுமோ?

தட்டுத் தடுமாறிக் கொண்டு வந்தான். எங்கோ தன் மகன் சப்தம் போல் இருக்கிறது என்று தடுமாறிக் கொண்டு ஓடினான்.

மாலைகள் வந்து விட்டனவா என்று கவனித்து ஓடிக்கொண்டிருக்கும் ராமநாதன் சற்றுப் பின்னால் வந்தான். குறுக்குப்பாதை வழியாகத் தோழர் நரசிங்கம் எங்கிருந்தோ வந்து கொண்டிருந்தான்.

நெற்றிக் கண்ணைத் திறந்த சிவபிரான் போல் தலைப்பு வெளிச்சத்தைப் போட்டுக் கொண்டு கோஷித்துக் கொண்டு வருகிறது மதராஸ் மெயில். ஆதனூர் அதன் மரியாதைக்குக் குறைந்தது; நிற்காது. நாற்பது மைல் வேகம்.

என்ஜின் டிரைவர் விஸிலை ஊதுகிறான்; கோஷிக்கிறான். குருடன் கம்பி வழியாகவே நடக்கிறான். மனம் குழம்பி விட்டதா?

தூரத்திலிருந்து இருவர் அவனைக் கண்டு விட்டார்கள். மகனும் மருமகனும்; இயற்கைச் சட்டத்தின்படி அப்படித்தான். சமுதாயம் என்ன வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளட்டும்.

வேகமாக ஓடி வருகின்றனர்.

வெளிச்சம்; வெளிச்சம்.

மூவரும் சேரும் சமயம். இழுத்து விடலாம்.

"ஐயோ!"

ஹதம். ரத்தக் களரி.

மூவரின் இரத்தங்கள் ஒன்றுய்க் கலந்தன, ஒன்றுய்த்தான் இருக்கின்றன.



இதில் யாரை நந்தன் என்பது !

புதிய ஒளியை இருவர் கண்டனர். இருவிதமாகக் கண்டனர். இறந்த பிறகாவது சாந்தியாமா ?

சமுதாயத்திற்குப் பலிதான். அதையார் நினைக்கிருர்கள் ?

பத்திரிகையில் பெரிய நீண்ட செய்திகள்.........

பிறகு ஆதனூரில்...... ?

—o—

பொருளையும் சம்பாதிப்பான், தானும் நல்ல ஆடம்பர வாழ்க்கை வாழலாம் என்று மனக்கோட்டை கட்டியிருந்த ஜானகிக்குத் தன் கணவனின் கிராம சேவைப் பித்து கொஞ்சமும் பிடிக்கவில்லை. தன் மனத்தில் உள்ள ஆசைகளைத் தன் கணவன் புரிந்துகொண்டு அவற்றை நிறைவேற்றி வைக்கவில்லையே என்று ஏங்கினுள் ஜானகி.

* * *

கீழையூர் நல்ல கத்திரிக்காய்களுக்குப் பெயர் போனது. டாக்டர் சுந்தரத்தின் நோயாளிகள் அவனுக்குக் கூடை கூடையாகக் கத்திரிக்காய்களைக் கொண்டு வந்து கொடுப்பார்கள். இதனுல் அவனுக்குக் ''கத்திரிக்காய் டாக்டர்'' என்ற பெயர் ஏற்பட்டது !

ஒரு நாள் ஜானகி அருகில் மலைமேலுள்ள முருகர் கோவிலுக்குச் சென்ருள். அங்கே சில பெண்கள் அவளைக் கண்டதும், ''அதோ பார் ! கத்திரிக்காய் டாக்டரின் மனைவி வருகிருள்!'' என்று கூறியது ஜானகியின் காதில் விழுந்தது. அப்பொழுதே அவளுக்கு நாக்கைப் பிடுங்கிக்கொள்ளலாம் போலிருந்தது. கோபத்துடன் அவள் வீடு திரும்பினுள்.

நாளாக, ஆக, டாக்டர் சுந்தரம் வீட்டில் தங்குவதே இல்லை. அக்கம் பக்கத்தில் உள்ள கிராம மக்கள் ஒரு நிமிஷம் கூட அவரை வீட்டில் விட்டு வைப்பதில்லை.

இந்நேரத்தில் ஜானகி வியாதிக்கு உள்ளாகிப் படுத்தபடுக்கையானுள். ஆகாரம் செல்லாமல் அவள் உடல் இளைத்துக் கொண்டே வந்தது. மனைவிக்கு மனோவியாதிதான் என்று சுந்தரத்துக்குத் தெரியும். அந்த ஊரைவிட்டுப் போனுல்தான் அவள் வியாதி குணமாகும் என்பதை அவன் அறிவான். அவன் ஊரைவிட்டுப் போனுல் பலர் உடம்பு குணமாகாமல் போகும். மனைவிக்குத் தன் கடமையைச் செய்ய ஊரைவிட்டே போவதா? நோயால் வாடும் கள்ளமில்லா உள்ளம்கொண்ட ஏழை கிராம மக்களுக்காக அவ்வூரிலேயே தங்கித் தன் கடமையைச் செய்வதா?

ஒரு நாள் ஜானகி, ''நான் இங்கே இனிமேல் இருக்கமாட்டேன். நாம் பட்டணத்துக்கே போய்விடுவோம், வாருங்கள்,'' என்று சுந்தரத்திடம் கூறினுள்.

''அப்படியே ஆகட்டும்'' என்று கூறிவிட்டு சுந்தரம் மூட்டை கட்டினுன். டாக்டர் சுந்தரம் ஊரைவிட்டுப் போகும் செய்தி எங்கும் பரவிவிட்டது. நோயாளிகள் சுந்தரத்தைப் பார்க்க விரைந்து வந்தார்கள். டாக்டர் புறப்படும் நேரமும் வந்தது.

''நீங்கள் எங்களை விட்டுப் போகிறீர்களா?'' என்று கூறி கிராம மக்கள் கண்ணீர் வடித்தார்கள். டாக்டர் சுந்தரம் அவர்களிடம் விடைபெற்றுக்கொண்டபோது அவன் கண் கலங்கியது, உள்ளம் துடித்தது. இதையெல்லாம் பார்த்த ஜானகியின் உள்ளமும் உருகியது. அவள் திடீரென்று மூர்ச்சை போட்டுக் கீழே சாய்ந்தாள்.

ஜானகி கண்ணை விழித்துக் கொண்டபோது, பெரிய படுக்கையில், விசாலமான ஓர் அறையில் படுத்துக்கொண்டிருந்தாள்.

''நான் எங்கே இருக்கிறேன்?'' என்றாள் அவள்.

''பட்டணத்தில்தான்,'' என்றான் சுந்தரம்.

''அந்த நாசமாய்ப்போகிற கிராமத்தைவிட்டு நாம் வந்து விட்டோமல்லவா?'' என்றாள் ஜானகி.

''ஆமாம், அதன் முகத்தில் இனி நாம் விழிக்கவேண்டாம்,'' என்றான் சுந்தரம்.

பல வாரங்கள் கழிந்தன. ஜானகியின் உடம்பு குணமாகி வந்தது. மெதுவாக எழுந்து நடமாட ஆரம்பித்தாள்.

ஒரு நாள் சுந்தரம் வீட்டிலில்லை. வேலைக்காரியிடம், ''நான் கொஞ்ச தூரம் நடந்து போய்விட்டு வருகிறேனே!'' என்று சொல்லிவிட்டுக் கிளம்பினாள் ஜானகி. ''வேண்டாம் அம்மா! உங்களால் முடியாது. வெளியில் வரக்கூடாது என்று ஐயா சொல்லியிருக்கிறார்!'' என்று வேலைக்காரி சொன்னதை அவள் பொருட்படுத்தவில்லை.

இரண்டடி எடுத்துவைத்த ஜானகி, சற்று தூரத்தில் மலையையும், முருகர் கோவிலையும் பார்த்துவிட்டுத் திடுக்கிட்டு நின்றாள். இது எந்த ஊர்? நான் எங்கே இருக்கிறேன்?

சுற்று முற்றும் பார்த்துக் கொண்டே சிறிது தூரம் நடந்ததும், அவளுக்குப்பழகின இடமாக இருந்தது. எதிரே ஒரு வீட்டில் ஏகக்கூட்டம்! ஆம்; அவள் இருப்பது கீழையூர்தான்! அவள் பட்டிணத்தில் இருப்பதாகச் சொன்னது சுத்தப்பொய்!

கூட்டமாக இருந்த வீட்டை நோக்கி அவள் சென்றாள். அங்கே ஒரு சிறுவனின் பக்கத்தில் டாக்டர் சுந்தரம் உட்கார்ந்து அவனைப் பரிசோதித்துக் கொண்டிருந்தார்.

ஜானகி அமைதியாக அவன் அருகில் சென்று நின்றாள். அவளைக் கண்ட சுந்தரம் திடுக்கிட்டு, ''ஜானகி, நீ இங்கே ஏன் வந்தாய்?'' என்றான்.

பிறகு, சுந்தரம் அவளை வெளியே அழைத்துக் கொண்டு வந்தான்.

நான் இந்த வீட்டிலேயே இருக்கிறேன் என்று சொல்லிவிட்டு, உள்ளே சென்றுள் ஜானகி.

* * *

சிறிது நேரம் கழித்து, "நான் உன்னை ஊருக்கு அழைத்துக் கொண்டு போவதாகச் சொல்லி ஏன் ஏமாற்றினேன் என்று தானே கேட்கிறுய்? அந்தச் சமயத்தில் ரயில் பிரயாணம் செய்தி ருந்தால் நீ இறந்து போயிருப்பாய். அதைத் தடுக்கத்தான் அந்த வீட்டில் உன்னைக் கொண்டு போய்ச் சேர்த்தேன். சென்னையிலி ருப்பதாக உனக்கு மனப்பிரமையை உண்டாக்கியதால் தான் நீ பிழைத்தாய். உனக்கு என் மேல் கோபமா?" என்று கேட்டான் சுந்தரம்.

"எனக்கு உடம்புக்கு வந்ததுமே என் மனம் மாறிவிட்டது. அந்த வீட்டில் என்னைக் கொண்டு போய் நீங்கள் எனக்கு வைத்தியம் செய்தீர்களல்லவா? அப்பொழுதே நீங்கள் என்மீது கொண்ட அன்பை உணர்ந்து கொண்டேன். என் அசட்டுத் தனத்தை நினைக்க எனக்கே வெட்கமாக இருந்தது. ஒரு நோயாளி யின் துன்பத்தையும் உங்களைப்போன்ற வைத்தியரின் அருமையை யும் அப்போதுதான் தெரிந்து கொண்டேன். அட்டா! இப்படிப் பல நோயாளிகளைத் தவிக்க விட்டுவிட்டு உங்களை அழைத்துக் கொண்டு வந்துவிட்டேனே! நீங்கள் இல்லாமல் அவர்கள் என்ன பாடுபடுவார்கள்?" என்று நினைத்து வருந்தினேன். மறுபடியும் உயிர் பிழைத்து வந்தால் கீழையூருக்கு உங்களுடன் திரும்பி வந்து உங்கள் கிராமசேவையில் நானும் பங்கு கொள்வதென்று தீர்மா னித்தேன்...."

"நிஜந்தாளு? இப்படி நினைத்தவளையா நான் நாலு வீட்டுக்கு அப்பால் கொண்டு போய் வைத்துப் பட்டணத்தில் இருப்பதாகச் சொல்லி ஏமாற்றினேன்!"

"ஆரம்பத்தில் தான் என்னை நீங்கள் ஏமாற்றினீர்கள். சில நாட்களுக்கெல்லாம் நான் கீழையூரில் தான் இருக்கிறேன் என்ப தைத் தெரிந்து கொண்டேன்."

"எப்படி?".

"வேலைக்காரி கொண்டு வந்த ஜலம் கொஞ்சம் உப்புக் கரித் தது. கீழையூர் ஜலம் தான் உப்புக் கரிக்கும். பட்டணத்து ஜலம் உப்புக் கரிக்காது. மேலும் நீங்கள் அடிக்கடி என்னை விட்டுவிட்டு வந்ததிலிருந்தே, ஆஸ்பத்திரிக்குத்தான் வருகிறீர்கள் என்று தெரிந்து கொண்டேன்.

'' நீ மிகவும் பொல்லாத பெண் '' என்றான் டாக்டர் சுந்தரம்.

'' உங்களை விடப் பொல்லாத டாக்டர் யார்?'' என்றாள் ஜானகி.

*   *   *

சில நாட்கள் கழித்து, டாக்டர் சுந்தரம் ஒரு நோயாளியைப் பரிசோதனை செய்து கொண்டிருந்தான். பக்கத்தில் ஒரு பெண் சுறு சுறுப்பாக அங்கு மிங்கும் ஓடியாடி அவனுக்கு உதவி செய்து கொண்டு அவன் கவனத்தைச் சிதறடித்துக் கொண்டிருந்தாள்!

அந்தப் பெண் ஜானகிதான் என்பதைச் சொல்லவும் வேண்டுமா!

# 4

# அன்னையும் பிதாவும்

சேலம் ஜில்லா கோக்கலையைச் சேர்ந்த அர்த்தநாரி என்ற ஹரிஜன வாலிபன், ஸ்ரீயுத மல்கானியுடன் டில்லிக்குப்போனான். ஸ்ரீயுத மல்கானி அகில இந்திய ஹரிஜன சேவா சங்கத்தின் காரியதரிசி. தென்னாட்டில் சுற்றுப் பிரயாணத்திற்காக வந்தவர், சேலத்தில் இப் பையனைக் கண்டு வெகு சந்தோஷப்பட்டுத் தம் கூடவே டில்லிக்குக் கூட்டிக்கொண்டு போய்விட்டார். அங்கே அவனைப் பள்ளிக்கூடத்தில் சேர்த்து, ஆறு வருஷம் தம் வீட்டிலேயே வைத்துக்கொண்டு அவனை மிக்க அன்போடு பார்த்து வந்தார். பிறகு டில்லியிலேயே ஒரு பிரபல வியாபாரக் கம்பெனித் தலைவருக்குச் சொல்லி அந்த ஆபீசில் மாதம் அறுபது ரூபாய் சம்பளத்தில் ஓர் உத்தியோகத்தில் அவனைச் சேர்த்தார். பார்வைக்கு ஆள் நன்றாக இருந்ததோடு, வேலையில் யோக்கியமாகவும் சுறு சுறுப்பாகவும் இருந்தபடியால், வெகு சீக்கிரமாகச் சம்பளம் உயர்ந்தது. இருபத்துநாலு வயது ஆகுமுன் மாதம் நூற்றைம்பது ரூபாய் சம்பளமாயிற்று. கொஞ்ச காலத்திற்குப் பிறகு, பெங்களூரில் அதே கம்பெனியைச் சேர்ந்த பெரிய நெசவு மில்லில் ஒரு வேலை காலியாயிற்று. மாதம் இருநூறு ரூபாய் சம்பளம். அதற்கு அர்த்தநாரியை அனுப்பினார்கள்.

பெங்களூர் போய் அந்த வேலையில் அமர்ந்து, அவன் இரண்டு வருஷம் சந்தோஷமாகக் கழித்தான். அர்த்தநாரிக்கு அடுத்த மேல் உத்தியோகஸ்தரின் பெயர் கோவிந்தராவ். இவர் சீமைக்குப் போய் மான்செஸ்டரில் இரண்டு வருஷகாலமிருந்து பயிற்சி பெற்றவர். அவரும் அர்த்தநாரியும் ஏறக்குறைய சம வயது. அர்த்தநாரியின் குணமும் நடத்தையும் அவருக்கு மிகவும் பிடிக்கவே, இருவரும் நெருங்கிய நண்பர்களானார்கள். கோவிந்தராவுக்கு ஒரு தங்கை பங்கஜம்; தமையனும் தங்கையும்

வெகு பிரியமாக இருந்தார்கள். பங்கஜம் பத்து வயதாயிருந்த போதே, தாயார் தகப்பனர் இருவரும் இறந்துவிட்டார்கள். இப்போது பங்கஜத்திற்கு வயது இருபது, இன்னும் விவாகமாக வில்லை. அர்த்தநாரி வீட்டுக்குக் கோவிந்தராவ் போகும்போதும், அவர் வீட்டுக்கு அர்த்தநாரி வரும்போதும், பங்கஜமும் கூடவே இருந்து பேசிப் பழகுவாள். பழகப் பழகப் பங்கஜத்திற்கும் அர்த்தநாரிக்கும் சிநேகபாவம் முற்றுவதைக் கோவிந்தராவ் கண்டு, மகிழ்ச்சி அடைந்தார். ''ஏன் இவர்கள் இருவரும் விவாகம் செய்துகொண்டு சுகமாய் இவ்விடமே இருக்கக் கூடாது?'' என்று பல தடவை யோசிப்பார்.

## 2

ஒருநாள் கோவிந்தராவ் தங்கையைப் பார்த்து ''பங்கஜம், நீ கலியாணம் செய்துகொள்வது பற்றி யோசித்திருக்கிருயா?'' என்ருர்.

''அதற்கென்ன? செய்து கொண்டாலாச்சு'' என்ருள் பங்கஜம்.

''அப்படியாளுல், நம் அர்த்தநாரியைக் கலியாணம் செய்து கொள்ளலாமா?''

இந்தக் கேள்வி பங்கஜத்திற்கு எவ்வித அருவருப்பும் தர வில்லை. ஆனல், பதில் சொல்லாமல் வேறு ஏதோ பேச்சு எடுத்து விஷயத்தை மெள்ள நழுவ விட்டாள்.

சில வாரங்கள் கழித்து, ஒரு நாள் ஏதோ சந்தர்ப்பம் நேரிட்டதையொட்டி, கோவிந்தராவ் இந்தக் கேள்வியை மறுபடி கேட்டதற்கு, ''ஏன் கோபு, என்மேல் உனக்கு வெறுப்புத் தோன்றிவிட்டதா? நான் உனக்குப் பாரமாய்ப் போனேன் போல் இருக்கிறது'' என்று சிரித்துக்கொண்டு சொல்லிப் பிறகு அழ ஆரம்பித்தாள்.

''பைத்தியமே! பாரமாவது, வெறுப்பாவது! யாரை யாவது கலியாணம் செய்துகொள்ளப் போகிருயா, இல்லையா! உனக்கு அது இஷ்டமில்லாமற் போனல் சொல்; அதுவும் எனக்குச் சந்தோஷந்தான், நாம் என்றும் கூடவே பிரியாமல் இருக்கலாம்'' என்று சொல்லி அவள் கண்களைத் துடைத்தார். மறுபடியும், ''அம்மா செத்துப்போனுள். நான் தானே இதை யெல்லாம் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும்?'' என்ருர்.

''ஏற்பட்டால் செய்து கொள்கிறேன், அதற்கென்ன இப்போது?'' என்ருள் பங்கஜம்.

''நீங்கள் இருவரும் பிரியமாயிருக்கிறீர்களே! நாம் தான், சாதி குலம் கவனிப்பதை விட்டுவிட்டோமே. ஏன் அர்த்த நாரியை நீ விவாகம் செய்துகொள்ளக் கூடாது?'' என்ருர்.

''சாதியைப்பற்றி, என்ன இருக்கிறது? ஆனுல், அவர் மனம் எப்படியோ?'' என்ருள் பங்கஜம்.

''அவர் மனம் என்ன? உன்னைப்போல் ஒருத்தி மனைவி யாகக் கிடைக்க அவர் தவம் செய்யவேண்டும்'' என்ருர் கோவிந்தராவ். தன் தங்கைக்குச் சமானம் உலகத்தில் யாரு மில்லையென்பது கோவிந்தராவின் அபிப்பிராயம்.

பிறகு, அர்த்தநாரியிடம் விஷயம் சொன்னபோது, அவன் சந்தோஷத்திற்கு அளவேயில்லை. ஆனுல், ஒரு நிமிஷம் கழித் துத் திடீர் என்று முகம் கறுத்தது. ''இது எப்படி முடியும், கோவிந்தராவ்?'' என்ருன்.

''ஏன், என்ன தடை?'' என்று கேட்டார் கோவிந்தராவ்.

''நான் எந்தச் சாதி. நீங்கள் எந்தச் சாதி!'' என்ருன் அர்த்தநாரி.

''சாதியைப்பற்றி என்ன பேச்சு'' என்று கோவிந்தராவ் சிரித்தார். ''முதலியார் என்ன, பிராமணன் என்ன? நாம் இதையெல்லாம் தள்ளிவிட்டு ரொம்ப நாளாயிற்று. நீங்கள் இருவரும் சம்மதித்துப் பிரியப்பட்டு முடித்தால் சாதியைப் பற்றி என்ன கவலை?''

தான் கோயமுத்தூர் ஜில்லா 'சைவ' முதலியார் என்று அர்த்தநாரி அதற்குமுன் சொல்லி வந்திருந்தான். ஏதோ ஒரு சந்தர்ப்பத்தில் கௌரவத்திற்காக இந்தப் பொய் முதலில் சொல்லி, அதைப் பிறகு மாற்ற முடியாமல் உண்மையை மறைத்தே வந்தான். இப்போது தன் குலத்தை உள்ளபடி சொல்ல வெட்கப்பட்டான். டில்லியிலிருக்கும் போது அங்கே சிலருக்கு அவன் சரித்திரம் தெரியும், பெங்களூரில் யாருக்கும் அவன் பூர்வோத்தரம் தெரியாது.

''பங்கஜத்தின் மனம் எப்படி?'' என்ருன் அர்த்தநாரி.

''பங்கஜம் உம்மிடம் பிரியமாகத்தான் இருக்கிருள். நான் கேட்டதற்குப் பதில் சொன்னதில் சம்மதித்தவள் போல்தான் தோன்றுகிறது'' என்ருர்.

''நான் கேட்டுத்தெரிந்து கொள்வதுதானே முறை?'' என்ருன் அர்த்தநாரி.

''ஆம்'' என்ருர் கோவிந்தராவ்.

இவ்வாறு விஷயம் ஒத்திவைக்கப்பட்டது. பங்கஜத்தினிடம் உண்மையைச் சொல்லிவிடத் தீர்மானித்து, எவ்வாறு முடிந்தாலும் சரியென்று எண்ணினன், ஆனல் பிறகு அந்தத் தீர்மானத்தை நிறைவேற்றும் தைரியம் வரவில்லை.

''என்னத்திற்காக நான் இதைச் சொல்லவேண்டும்? சொன்னல் என்மேல் பங்கஜத்திற்கும் கோவிந்தராவுக்கும் வெறுப்பு உண்டாகும். சாதி வித்தியாசம் பார்ப்பதில்லை என்று அவர்கள் சொல்லுகிருர்கள். ஆயினும் நான் பறையன் என்பது தெரிந்தால் ஒருகாலும் சம்மதியார்கள். தவிர, பொய் சொன்னவனுவேன்'' என்றிவ்வாறு தனக்குள் ஆலோசிக்கலானுன்.

மறுநாள் மறுபடியும் யோசித்து, உண்மையைச் சொல்லிவிடலாம் என்று கோவிந்த்ராவின் வீட்டுக்குப் போனுன். ஆனல் போகும் போது, ''நாம் இருவரும் பிரியப்பட்டிருக்கும் போது, இந்தச் சாதிப் பிரச்னைக்கு என்ன இடம்? இந்த அநியாயத்தை நாம் ஏன் இடங்கொடுத்து வளர்க்கவேண்டும்? இந்தச் சாதியை யார் நிர்மாணித்தார்கள்? அது சுத்தப் பொய்யல்லவா? அவளிடம் நான் ஏன் அதை ஒரு பொருளாகக் கருதிச் சொல்ல வேண்டும்? அதைச் சொல்லிக் காரியம் முழுதும் கெட்டுவிடவா செய்வது? அவர்களும் சாதியைப் பற்றிக் கவலையில்லை என்று சொல்லிவிட்டார்கள். அதற்குமேல் நான் ஏன் அதைப் பற்றிப் பேச வேண்டும்?'' என்று மனதைச் சமாதானப்படுத்திக் கொண்டு உண்மையை மறைக்கத் தீர்மானித்தான்.

''பங்கஜம், உண்மையில் உனக்கு இஷ்டமா? நாமிருவரும் கூடி வாழலாமா?'' என்று மட்டும் கேட்டான்.

''உங்களுக்கு இஷ்டமா?'' என்ருள் பங்கஜம்.

## 3

அர்த்தநாரியின் தகப்பனர் முனியப்பனும், தமையன் ரெங்கனும், தாயார் குப்பாயியும் கோக்கலைச் சேரியிலேயே இருந்தார்கள். அர்த்தநாரி டில்லியிலிருந்த போதும், பிறகு பெங்களூருக்கு வந்த பின்னும், மாதம் தவருமல் இருபது ரூபாய் அவர்களுக்கு அனுப்பி வந்தான். அவர்களும் அதைக் கொண்டு வெகு சந்தோஷமாகக் குடும்பம் நடத்தி வந்தார்கள். பையனுக்கு என்ன சம்பளம் என்பது அவர்களுக்குத் தெரியாது. மாதா மாதம் இருபது ரூபாய் அவர்களுக்குப் பெரிய சம்பத்தாக இருந்தது. ஆனல், முனியப்பனுக்கு வெகு நாளாய்க் குடிப் பழக்கம். மாதா மாதம் தவருமல் பணம்வர, குடி இன்

னும் அதிகமாய் விட்டது; இது ரெங்கனுக்குப் பிடிக்கவில்லை. ஆயினும் அவனால் தடுக்க முடியவில்லை, தடுத்தாலும் என்ன பயன்? ரெங்கன் ஒரு பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயராக இருந்தான். அவனுக்கு இன்னும் கலியாணமாகவில்லை. ஓர் இடம் பார்த்துச் செய்துகொள் என்று தாயார் வற்புறுத்து வாள். இப்போது வேண்டாம், கொஞ்ச நாள் போகட்டும் என்று தள்ளிப் போட்டுக் கொண்டே வந்தான்.

அர்த்தநாரி பெங்களூருக்கு வந்தபின், வருஷத்திற்கு இரண்டு தடவை கோக்கலைக்கு வந்து தன் தாய், தகப்பன், அண்ணன் இவர்களைப் பார்த்துப் போவான், தகப்பனார் குடிப்பதைப் பார்த்து அர்த்தநாரியின் வெட்கத்திற்கும் வெறுப்புக்கும் அளவேயில்லை. வீட்டிலுள்ள அசுத்தமும் அவனால் தாங்க முடிய வில்லை. வந்து ஒரிரண்டு நாளிருந்து விட்டுச் சீக்கிரம் திரும்பிப் போய் விடுவான்.

''உன்கூட நாங்களும் வந்து விடுகிறோம்'' என்பான் தகப்பன்.

''முடியவே முடியாது. உன்னைக் கண்டால் என்னை வேலை யிலிருந்து நீக்கி விடுவார்கள்'' என்பான் அர்த்தநாரி.

''ஆமாம் அப்பா, நாமெல்லாம் அங்கே போகப்படாது'' என்பான் ரெங்கனும்.

செலவுக்கு அனுப்பி வந்தபடியால் இதைப்பற்றி அதிகம் விவாதம் செய்ய மாட்டார்கள். இப்படியே நடந்து வந்தது.

தான் பங்கஜத்தை விவாகம் செய்துகொண்டு மறுபடியும் வடக்கே போய்விடலாம் என்பது அர்த்தநாரியின் யோசனை.

''இவ்வளவு அன்பாக இருந்தாலும் நான் பறையன் என்று இவர்களுக்குத் தெரிந்து விட்டால் காரியம் நிச்சயமாகக் கெட்டு விடும். ஒருவேளை அப்படியில்லையென்றாலும், ஐயோ, என் தாயையும் தகப்பனையும் அவர்கள் வாழ்வையும், நடவடிக்கை யையும் இவர்கள் நேராகக் கண்டால், அப்புறம் பங்கஜம் என்னைக் கண்ணெடுத்துக்கூடப் பார்க்கமாட்டாள்'' என்று அர்த்தநாரி தனக்குள் சொல்லிச் சொல்லிப் பயந்து தன் பொய்யை உறுதிப்படுத்திக் கொண்டான். சீக்கிரமே விவா கத்தை முடித்துக்கொண்டு வடக்கே எங்கேயாவது ஓர் இடத் துக்குப் போய்விடவேண்டும் என்று தீர்மானித்தான். இது சம்பந்தமாய்த் தன் முதலாளி கம்பெனிக்குக் கடிதங்கள் எழுதி, டில்லிக்காவது, வடக்கே வேறு எங்கேயாவதுள்ள அவர்கள் மில்லுக்கு மாற்றிவிடுமாறு வற்புறுத்திக் கேட்டுக்கொண்டான்.

ஒருநாள் திடீரென்று பங்கஜம், "அர்த்தநாரி, உங்கள் அம்மாவைப் பார்க்கவேண்டும் என்று எனக்கு ஆசை. ஒரு வாரம் ஒய்வு எடுத்துக்கொண்டு எல்லோரும் கோயமுத்தூர், உதகமண்டலம் முதலிய இடங்கள் சுற்றிவரலாம் என்றுயோசனை. என்ன சொல்லுகிறீர்கள்?" என்றாள்.

"அடுத்தமாதம் முதல்வாரம் சௌகரியமாகவிருக்கும்; ஆபீசிலும் அதிக வேலையில்லை" என்றார் கோவிந்தராவும்.

அர்த்தநாரிக்கு நெஞ்சு அடித்துக்கொண்டது. அதற் கென்ன, செய்யலாம். ஆனால், எங்கள் ஊரில் இப்போது அதிக காலரா உபத்திரவம் என்று கடிதம் வந்திருக்கிறது" என்றான். எப்படியாவது தப்பித்துக்கொள்ள எண்ணி இவ்வாறு பொய் சொன்னான்.

அதைக் கேட்டதும் பங்கஜம் திடுக்கிட்டு, "ஐயோ காலராவா? உங்கள் ஜனங்களை வேறு ஊருக்குப் போகச் சொன் னீர்களா? இங்கே வரச் சொல்லுங்களேன்" என்றாள்.

"அதைத்தான் யோசித்துக் கொண்டிருக்கிறேன்" என்றான் அர்த்தநாரி.

பிறகு மூன்று நாள் கழிந்தது. அர்த்தநாரிக்கு ஒரு கடிதம் வந்தது, தமையன் ரெங்கனிடமிருந்து.

"தம்பி அர்த்தநாரிக்கு, ஆசீர்வாதம்.

இவ்வூரில் விஷபேதி மிகக் கொடூரமாயிருக்கிறது. பலபேர் இறந்து போய்விட்டார்கள். எங்களுக்கு மிகவும் பயமாயிருக் கிறது. அப்பா பழைய மாதிரிதான். என்ன சொன்னாலும் கேட்கிறதில்லை, நீ இம்மாதம் அனுப்பிய பணமெல்லாம் செல வழிந்து போயிற்று. இப்போது முப்பது ரூபாய் அனுப்பினால் வீட்டைப் பூட்டிவிட்டுச் சேலம் போயிருக்கலாம் என்று யோசனை. இந்த பேதிப்பயம் நீங்கியபின் திரும்பி வரலாம்.

இவை,

ரெங்கன்"

இதைப் படித்ததும் அர்த்தநாரிக்கு ஆச்சரியமும் திகைப்பும் உண்டாயின. "இதென்ன, நான் எண்ணிய எண்ணமோ, சொன்ன பொய்யோ, இவ்வாறு விபரீதமாக உண்மையாய் விட் டது. இது ஒரு தெய்வ பரீட்சையோ என்னவோ தெரியவில்லை" என்று அர்த்தநாரி தனக்குள் சொல்லி ஒன்றும் தோன்றாமலிருந் தான். மறுநாள் பணம் அனுப்பலாம் என்று எண்ணினான்.

அன்றிரவு அர்த்தநாரிக்குத் தூக்கம் வரவில்லை. கெட்ட எண்ணங்கள், வெட்கப்படக்கூடிய எண்ணங்கள், அவன் மூளை

யைக் கலக்கிக்கொண்டிருந்தன. தன் தகப்பனுரைப்பற்றி நினைக்கும்போதெல்லாம் அவனுக்கு வெறுப்பு உண்டாகும். அவன் இந்த விஷபேதியில் இறந்து தீர்ந்துபோனுல் விசனமில்லை என்று அடிக்கடி அவன் மனத்தில் ஓர் எண்ணம் தோன்றும். சீ! இது பாவம் என்று உடனே மறு எண்ணம் தோன்றும். இப்படி இரவெல்லாம் படுக்கையில் புரண்டு தூக்கமில்லாமல் மறுநாள் காலை எழுந்து பச்சைத் தண்ணீரில் குளித்தான். தபால்காரன் கடிதங்கள் கொண்டுவந்தான். எதிர்பார்த்தபடி ஊரிலிருந்து மற்ருெரு கடிதம் வந்திருந்தது. கை நடுங்கக் கடிதத்தைப் படித்தான்:

"அப்பாவுக்குப் பேதி கண்டிருக்கிறது. எப்படியாகுமோ, பயமாயிருக்கிறது. மாரியாயி காப்பாற்ற வேண்டும்! கையில் ஒரு காசுமில்லை.

**ரெங்கன்.**"

கடிதம் படித்து முடிந்ததும் அர்த்தநாரி முகம் கறுத்தது. வெகுநேரம் வரையில் நாற்காலியில் உட்கார்ந்தபடியே இருந்தான். அன்றும் பணம் அனுப்பவில்லை.

## 5

மறுநாளும் பணம் அனுப்பவில்லை. ஒரு கடிதமும் வரவில்லை.

"ஊரில் காலரா சமாசாரம் என்ன?" என்ருள் பங்கஜம்.

"அப்படியேதானிருக்கிறதாம்" என்ருன் அர்த்தநாரி.

"காப்பிக்குச் சர்க்கரை போதுமா?" என்ருர் கோவிந்தராவ்.

"போதும், வெகு நன்ருயிருக்கிறது" என்ருன் அர்த்தநாரி. பிறகு, தன் வீட்டுக்குத் திரும்பிப்போனதும் ஒரு கடிதம் வந்து காத்திருந்ததைப் பார்த்தான்.

"அம்மாவுக்கும் பேதி கண்டிருக்கிறது. நீ பணம் அனுப்பவில்லை. திக்கில்லாமல் சாகிருேம். உடனே வரவும்.

**ரெங்கன்.**"

அன்றும் அர்த்தநாரி பணம் அனுப்பவில்லை. இதற்குள் மனத்தைக் கல்லாகச் செய்துகொண்டு விட்டான்! "அவமானத்திற்குக் காரணமாயிருக்கும் என் இழிபிறப்பு இத்துடன் மறைந்து போகும். இது சுவாமியே எனக்குத் தரும் விடுதலைபோல் காண்கிறது. அவன் செயலுக்கு மேல் என்ன தருமம், என்ன நியாயம்? அதை நான் ஏன் தடுக்கவேண்டும்; அப்பாவும் அம்மாவும் இறந்துவிட்டால் நான் பங்கஜத்தைக் கலியாணம் செய்து

கொள்ள யாதொரு தடையுமில்லை'' என்று அர்த்தநாரி தனக்குள் சொல்லிக் கொண்டான்.

திடீரென்று, ''சீ! இப்படி எண்ணுவது மகாபாவம்'' என்று யாரோ திட்டியதுபோல் தோன்றிற்று. திரும்பிப்பார்க்க, பங்கஜம் வந்து பின்னால் நின்றாள்! விஷயம் தெரிந்துபோயிற்று என்று திடுக்கிட்டான். உடனே மறுபடி மதி தெளிந்தது; சமாளித்துக்கொண்டான். யாரும் பேசவில்லை. தன் மனத்தி லுண்டான பிரமை என்று தெரிந்துகொண்டான்.

''சத்தமில்லாமல் எப்படி வந்துவிட்டாய்?'' என்றான்.

பங்கஜம் நகைத்து, ''கதவை மூன்று தரம் தட்டித் தான் வந்தேன். ஏதோ யோசனையிலிருக்கிறீர்கள்? நான் வந்தது உங்களுக்குத் தெரியவில்லை'' என்றாள்.

''நான் ஊருக்குப் போகவேண்டும். காலரா அதிகமாயிருக் கிறதாம். அப்பா, அம்மாவிற்கு ஏற்பாடு செய்து வரவேண் டும்'' என்றான்.

''முந்தியே செய்திருக்கவேண்டும். இப்போ நீங்கள் அங்கே போனால் வெகு ஜாக்கிரதையா யிருக்கவேண்டும். அவ்விடம் தண்ணீர் குடிக்கக்கூடாது'' என்றாள்.

அன்றிரவே அர்த்தநாரி சேலம் போனான். ஆனால், சேலத் தில் ரயிலிறங்கி, கோக்கலைக்கு உடனே போகாமல் இங்குமங்கும் காலம் கழித்துவிட்டு நாலு நாட்களுக்குப் பின் போனான். இவன் போவதற்குள் தாயார் இறந்துவிட்டாள். கூடவே ரெங்கனும் பேதி கண்டு அவனும் இறந்துவிட்டான். குடிகாரத் தகப்பன் மட்டும் எப்படியோ தப்பிப் பிழைத்து மிஞ்சினான்.

''என்னைப் பெங்களூருக்கு அழைத்துப்போ. இனி இங்கே நான் என்ன செய்ய முடியும்?'' என்று தகப்பன் அர்த்தநாரியை மிகவும் கெஞ்சினான். அர்த்தநாரி கேட்கவில்லை. ''முடியாது'' என்று ஒரே பிடிவாதமாய்ச் சொல்லிவிட்டான். ''உனக்கு வேண்டிய பணம் அனுப்புகிறேன். நீ இந்த ஊரிலேயே இரு. என் கூட வரவேண்டாம். அழைத்துப்போக முடியாது'' என்று சொன்னான். தகப்பன் திக்கற்ற குழந்தை போல் அழு தான்.

''இங்கே என்னால் இருக்க முடியாது'' என்று சொல்லி விம்மி விம்மி அழுதான். எவ்வளவு அழுதாலும் அர்த்தநாரி கேட்கவில்லை. பங்கஜத்தை விட்டுவிட முடியுமா? என்று அர்த்தநாரி தனக்குள் சொல்லிக் கொண்டு, தகப்பனார் அழுத

ஹைதக் கவனிக்கவில்லை. மறுநாள் அர்த்தநாரி தகப்பனுர் கையில் ஒரு பத்து ரூபாய் நோட்டைக் கொடுத்து விட்டுச் சேலம் போய்விட்டான்.

## 6

“என்ன செய்து விட்டேன்! பெற்ற தாயையும் அண்ணனையும் கொன்று விட்டேன். ஏன் இப்படிச் செய்தேன்? என்னைப்போல் ஒரு பாவி உலகத்தில் உண்டா? தகப்பனை இப்படி நான் தள்ளிவிடலாமா? பங்கஜத்திற்கு என்ன சொல்வேன்?’’

இவ்வாறு பல எண்ணங்களில் மூழ்கி ரயிலில் தூக்கமில்லாமல் அர்த்தநாரி பெங்களூர் போய்ச் சேர்ந்தான். மயக்கம் தட்டின மாதிரி ரயிலடியிலிருந்து வீட்டுக்குக் கால்நடையாகவே போனுன். படுக்கை சாமான்களை ஒரு வண்டியில் வைத்து வீட்டுக்குக் கொண்டுபோகச் சொல்லி, தான் நடந்து சென்ருன்.

வீட்டுக்குப் போய்க் கதவைத் தாள் போட்டுக் கொண்டு படுத்தான். கோவிந்தராவுக்காவது பங்கஜத்திற்காவது தான் திரும்பி வந்த சமாசாரம் சொல்லியனுப்பவில்லை; ஆபீசுக்கும் போகவில்லை.

ராத்திரி மூட்டைகட்டி, ஒருவருக்கும் சொல்லாமல் மறுபடியும் ரயிலுக்குப் போய்ச் சேலத்திற்கு டிக்கட்டு வாங்கினுன்.

சேலம் போனதும், கோக்கலையில் ஓர் ஆதித்திராவிடன் கிணற்றில் விழுந்து செத்துவிட்டதாகச் சிலர் பேசிக்கொண்டிருந்த சங்கதி அவன் காதில் பட்டது. கோக்கலை சேர்ந்ததும், இவ்வாறு செத்துப்போனது தன் தகப்பன் தான் என்று தெரிந்தது. போலீஸ் ஸ்டேஷனில் பிரேதத்தை வைத்து எழுதிக் கொண்டிருப்பதாக யாரோ சொன்னுர்கள். ஆனுல், அவ்விடம் போகாமல், சேலம் திரும்பிப்போய், மறுபடியும் ரயில் ஏறினுன்.

‘‘பங்கஜம், நீ என்னைப்பற்றி இனி மறந்துவிட வேண்டும்’’ என்ருன் அர்த்தநாரி.

‘‘மறந்து விடலாம் பின்னே, இப்போது ஊரில் என்ன சமாசாரம் சொல்லுங்கள்’’ என்ருள் பங்கஜம்.

‘‘எல்லாரும் இறந்து விட்டார்கள்; நான் செய்ய வேண்டியதைச் செய்யாததால் இறந்துவிட்டார்கள், பங்கஜம்! எனக்கு வாழ்வு பிடிக்கவில்லை. உத்தியோகத்தை விட்டுவிட்டு ஊருக்குப் போகிறேன். நீ என்னை மறந்து விடவேண்டும்!’’ என்ருன்.

அவன் முகத்தை இரண்டு மூன்று தரம் பங்கஜம் பார்த்தாள். பார்த்துவிட்டுப் பயந்து போனுள். உடனே தன் அண்ணனுக்குச் சங்கதி தெரியப்படுத்தச் சென்றுள்.

அர்த்தநாரிக்குச் சுரம் கண்டது. முதலில் டாக்டர் 'டைபாய்ட்' என்றுர். பத்து நாள் கழித்து 'மூளை ஜுரம்' என்றுர். பல நாள் படுத்த படுக்கையாக இருந்தான். கோவிந்தராவும் பங்கஜமும் இடைவிடாமல் படுக்கையண்டை இருந்து பார்த்துக்கொண்டு வந்து, நான்காவது வாரம் சுரம் இறங்கிற்று.

''இனிப் பயமில்லை'' என்றுர் டாக்டர்.

பிறகு சில நாள் கழித்துச் சுரம் முற்றிலும் தணிந்து எழுந்து உட்கார்ந்தான்.

''நான் பறையன், பாதகன், உண்மையில் தீண்டத் தகாதவன், பொய்யன். எனக்கு விவாகம் வேண்டாம். என்னை நீங்கள் மறந்துவிட வேண்டும்'' என்றுன் அர்த்தநாரி.

பங்கஜம் நகைத்தாள். ''நீர் எந்தச் சாதியாயிருந்தால் என்ன?'' என்று சமாதானப்படுத்தினுள்.

அர்த்தநாரி ஒப்புக்கொள்ளவில்லை. ''சாதியைப்பற்றி நீ தயங்கமாட்டாய். அது எனக்குத் தெரியும். ஆனுல், நான் கொலைபாதகன். என் தகப்பனையும் தாயாரையும் கொன்றவன்'' என்று கதை முழுவதும் சொன்னுன்.

உடம்பு நன்றுய்க் குணமானதும், அர்த்தநாரி, தன் வேலைக்கு ராஜினுமா எழுதிக் கொடுத்துவிட்டுக் கோக்கலைக்குப் போய்விட்டான்.

இப்போது கோக்கலைச் சேரியில், மாரியம்மன் கோயிலில், பள்ளிக்கூடம் வைத்திருக்கும் 'சாமியார்' அர்த்தநாரிதான்.

—:o:—

சி. சு. செல்லப்பா

5

# பிரார்த்தனே

எல்லோரும் பிரார்த்தனேக்கு வரிசையாக நின்றுகொண்டார்கள்.

அவன் மட்டும் தன் இடத்தைவிட்டு எழுந்திருக்கவில்லே. ' பிரார்த்தனேக்கு ' என்று அழைப்பு சப்தம் ஒரு தரத்துக்கு நாலு தரம் அவன் காதுகளில் விழாமலில்லே. தினமும் முதல் சத்தம் கேட்டவுடனேயே தூக்கத்திலும் சுருட்டி மடக்கி எழுந்து அவன்தான் முதலில் போய் நிற்பவன். ஆனுல், இன்று கன்னங்களே இரு கைகளிலும் பதித்து தலேயைத் தாங்கிக்கொண்டு தரையையே பார்த்துக்கொண்டிருந்தான்.

' ஜெயசிங், ஜெயசிங் ! '

அவனுக்கு அந்த இடத்தில் ஒரு கடமை உண்டு. அவன் நிற்கவேண்டிய இடத்தில் காணுமல் போகவே வரிசையிலிருந்து ஒரு குரல் பலத்து கூப்பிட்டது.

' ஷ்ஷ்...ஷ் ! அவனே கூப்பிடாதே, ' என்று அவர்களுக்குள் கட்டுப்பாட்டிற்காக தாங்களே தேர்ந்தெடுத்திருந்த தலேவன் குறுக்கிட்டுச் சொன்னுன்.

' பிரார்த்தனேயை ஆரம்பிக்க—'

' வேறு யாராவது ஆரம்பியுங்கள். '

' ஏன் அவனுக்கென்ன ? '

' அவன் தாய் இறந்துவிட்டாள், நேற்று மாலே தந்தி வந்தது. '

' ஆமாம், ஆமாம். அவன் மனதை கிளறவேண்டாம், என்று பல குரல்கள் சேர்ந்தன.

'ஹூம்! யாராவது சீக்கிரம் ஆரம்பியுங்கள்' தலைவன் அவசரப்படுத்தினுன்.

ஒரு குரலும் பதில் கொடுக்கவில்லை.

'என்ன, ஜெயசிங்கை விட்டால் பாட ஆளே கிடையாதா... குரலைப் பற்றி கவலையில்லை...ஹூம் யாராவது?...கருப்பையா, ராமநாதன், நவநீதன்...ஃபைலுக்கு நாழி ஆகிறது.' என்று ஒருவரும் பாட முன்வராததைக் கண்டு தலைவன் உரத்துச்சொன்ஞன்.

இவ்வளவுக்கும் பிறகுதான் இரட்டையாக வகிர்ந்து நின்று கொண்டிருந்த அந்த அணிவகுப்பின் ஒரு கோடியிலிருந்து ஒரு கட்டையான குரல் பிரார்த்தனையை ஆரம்பித்தது.

'பொழுது புலர்ந்தது யாம் செய்த தவத்தால்......' எல்லோரும் கோஷ்டியாக அதை எதிரொலித்தார்கள். பிரார்த்தனை ஞாபகத்திலே ஜெயசிங்கைப் பற்றிய நினைவு அழிந்துவிட்டது.

ஆனுல், தன்னைப் பற்றிய சம்பாஷணை ஜெயசிங்கின் காதுகளில் விழுந்தது. அப்போதும் அவன் அசையவில்லை. தரையையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான்.

ஜெயசிங்கின் தாய் இறந்துவிட்டாள்.

அவள் உடல் வெந்து சாம்பலான இடத்திற்கும், அவர்கள் பிரார்த்தனை செய்துகொண்டிருந்த இடத்திற்கும் நடுவே ஒரு மூன்று நாள் பிரயாணம் குறுக்கிட்டு நின்றது. கிழத் தாய்க்கு ஜெயசிங் ஒரே பிள்ளை. அவன் கையால் கொள்ளி வைக்கும் ஒரு பாக்கியத்தை அந்த வைரம் பாய்ந்த தேகம் கொடுத்து வைக்கவில்லை. கண்கள் நிலைகுத்திப் போகுமுன் தாயின் கடைசிப் பார்வையை—அவள் அவனிடம் விடைபெற்றுக் கொள்வதை அவன் பார்க்க முடியவில்லை; அவள் கடைசி மூச்சு ஒடுங்குவதை, தான் பெற்ற குழந்தையின் மடியில் தலையை வைத்துக்கொண்டு நிம்மதியாக அந்த ஆத்மா வெளியேறுவதை உணர அந்த பாப ஆத்மாவுக்குக் கிடைக்கவில்லை.

பிராப்தம்—என்று சொல்வார்களே அதுதான் எவ்வளவு பெரிய உண்மை.

இல்லாது போனுல் எழுபத்தைந்து வருஷங்களாக ஓடிக் கொண்டிருந்த சுவாசம் இன்னும் சில தினங்களுக்கு நீண்டிருக்காதா?

**நா**ளை கழித்து மறுநாள் ஜெயசிங் விடுதலையாக இருந்தான். ஜெயசிங் உள்பட அந்த பிரார்த்தனையில் கலந்து கொண்டிருந்தவர்கள் எல்லோரும் அந்தச் சிறை முகாமில் நாட்களை

கழித்துக்கொண்டிருந்தார்கள். அவர்கள் பாதுகாப்புச் சட்டக் கைதிகள். தேசத்தின் பாதுகாப்புக்கு இடைஞ்சல் செய்தவர்கள், செய்துவிடக் கூடியவர்கள் என்பதற்காக அவர்கள் பாதுகாப்பில் வைக்கப்பட்டிருந்தார்கள்.

அந்தச் சிறை நிரந்தரமாக ஏற்பட்ட, உயர்ந்த சுவர்கள் எழுப்பிய ஜில்லா ஜெயில் அல்ல. ஒரு விசேஷ சிறைமுகாம். வெளியே இருந்து வரும் வேகத்தை துண்டு துண்டாக சமாளிக்க முடியாமல் மாகாணம் முழுவதும் உள்ள எல்லோரையும் சேர்த்து திரட்டி வைத்திருந்தது. ஜன சஞ்சாரமே இல்லாத ஒரு பொட்டலில் சிறு சிறு மலைக் குன்றுகளின் சார்பின் அடிவாரத்திலே விசும்பி நிற்கும் பெரிய கட்டிடங்களைச் சூழ்ந்து வேலி போட்டிருந்தது.

இந்தக் கட்டிடங்கள் இன்று நேற்று கட்டப்பட்டனவாக தோன்றவில்லை. பழமை வாசனை கலந்து வீசியது, அவைகளின் தோற்றம். கேவலம் கைதிகளை அடைப்பதற்காக யாரும் அந்தக் காலத்தில் இவ்வளவு சிரத்தை எடுத்து நிர்மாணித்திருக்க மாட்டார்கள்.

கைதியாக முதன் முதலில் கிருகப்பிரவேசம் செய்தவர்கள் இப்பொழுது பிரார்த்தனை செய்துகொண்டிருப்பவர்கள் அல்ல. அந்தப் பெருமை அவர்களுக்குக் கிடையாது.

பத்து வருஷங்களுக்கு முன்னால் தங்கள் உரிமைக்குப் போராடினவர்கள் என்ற குற்றத்திற்காக இவர்களவர்களே அதில் நாட்களைக் கழித்துவிட்டுப் போயிருக்கிறார்கள்.

அதற்கு முன்னால் அந்த இடத்தில் மாப்பிள்ளைக் கைதிகள் பல வருஷங்களைக் கடத்திவிட்டிருந்ததாகச் சொல்லிக்கொண்டார்கள்.

இன்னும் பல வருஷங்களுக்கு முன்பு, மஹா யுத்தத்தின் போது துருக்கியக் கைதிகள் அங்கு வைக்கப்பட்டிருந்தார்கள்.

இதற்குமேல் அதன் சரித்திரப் பூர்வீகம் தெரியவில்லை.

கைதிகள் பரம்பரை—இந்தப் பெருமையை அந்த பிரமாண்டமான கட்டிடங்கள் கொண்டாடலாம். அதன் பழம் பெருமை எதாக இருந்தாலும் சரி, அதன் தற்போதைய சூழ்நிலை ஒரு கிராமாந்திர பவுண்டின் ஞாபகத்தைத் தான் கொண்டுவரும்.

'பொழுது புலர்ந்தது யாம் செய்த
தவத்தால் புன்மையிருட்கணம்
போயின யாவும்...'

பிரார்த்தனையின் வரிகள் ஜெயசிங்கின் காதுகளில் தாக்கின.

இந்த பிரார்த்தனையை தினமும் ஜெயசிங்தான் ஆரம்பித்து வைப்பான். ஜெயசிங்கின் சாரீரம் ரொம்பவும் இனிமையாக இருக்கும். விடியற்காலை சமயம். இயற்கையின் அமைதி இன்னும் கலையவில்லை. உடல் வருத்தம் மிகுந்த ஒரு வாழ்க்கை நடுவே திடத்தைவேண்டி ஆண்டவனைக் கோரும் ஆத்மசிந்தனை; அதை வெளியிட்டு இருதய பூர்வமாக வெளிக் கிளம்பிவரும் வலு மிகுந்த வார்த்தைகளின் ஓசை; 'காதுகளில் தேன் பாய்வது போல்' இனிமையைக் கொட்டும் இழைந்த சாரீரம். இத்தனையும் சேர்ந்து அந்த பிரார்த்தனையை உணர்ச்சி வசமாக்கிக் கொண்டிருக்கும்.

இன்று அவன் கலந்து கொள்ளவில்லை. பிடி சாம்பலாகி விட்ட தாயின் உருவத்தையே மனக் கண்முன் நிறுத்திக் கொண்டிருந்தான். இரவு முழுதும் அழுது அழுது, அவன் உடம்பு சோர்ந்துவிட்டது. இரு இமைகளும் ஒன்றுசேரும் அளவுக்கு கண்கள் வீங்கிவிட்டன. இருதயம் ஒரே கல்லாகக் கனத்தது. தனக்கும், அவளுக்கும் கடைசியாக நடந்த சம்பாஷணை நினைவுக்கு வந்து கொண்டிருந்தது.

'அடேயப்பா, நீ போய் சுயராஜ்யம் கொண்டு வருவது கிடக்கட்டும். சொல்வதைக் கேளு' என்றாள் தாய்.

அதற்கு அவன் சிரித்துக்கொண்டே பதில் சொன்னான்: 'கவலைப்படாதே அம்மா, ஆறுமாதத்துக்குள் சவுக்யமாகத் திரும்பிவிடுவேன். கடவுளை பிரார்த்தனை செய்துகொண்டிரு'.

அதற்கு பதில் ஒரு வறட்டுச் சிரிப்புடன் அந்தக் கிழவி சொன்னாள், 'ஆமடா, இந்த க்ஷணமே என்னை அவன் கொண்டு போய் விடவேண்டும் என்றுதான் பதில் நான் பிரார்த்தனை செய்யவேண்டும்; உன் நெஞ்சம் கல்லாகி விட்டதேடா.'

'ஸ்! அம்மா உளறாதே இப்படி எல்லாம். நான் திரும்பி வரும்போது நீ கல்லுப்போல் இருப்பாய் பார்.'

'கல்லாக இருக்கிறேனோ, மண்ணாகி விடுகிறேனோ பார்ப்போம்' என்று பெருமூச்சு விட்டாள்.

தான் சொன்னபடியே அவள் இன்று மண்ணாகித்தான் விட்டாள். இந்த க்ஷணமே என்னைக் கொண்டுபோய் விடும்படி பிரார்த்தனை செய்யவேண்டும், என்று சொன்ன வாக்கு பலித்து விட்டது. அவள் பிரார்த்தனையை ஆண்டவன் ஏற்றுக்கொண்டு விட்டான்.

இங்கு அவர்கள் பிரார்த்தனை செய்து கொண்டிருந்தார்கள். ஆண்டவன் அவர்கள் பிரார்த்தனைக்கு இரங்காமல் போவானு?

பிரார்த்தனை அடிகள் ஜெயசிங்கின் காதுகளில் விழுந்தன. ஜெயசிங் அதை உற்றுக் கேட்டான்.

தனிமையில் கிடந்து துக்கத்தோடு போராடிக் கொண்டிருக்கும் அவனைத் தவிர மற்றவர்கள் எல்லோரும் அந்த சமயத்துக்காவது எல்லாவற்றையும் மறந்துவிட்டு பிரார்த்தனையில் ஈடுபட்டிருந்தார்கள். புண்பட்ட இருதயத்துக்குத் தனிமையில் ஆறுதல் கிடைக்கும் என்று அவன் எதிலும் கலந்து கொள்ளாமல் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தான். ஆனல், தனிமை அவன் துக்கத்தை தூண்டித்தான் விட்டது.

ஜெயசிங் கண்களை மூடிக்கொண்டான். மவுனமாக, தனித்து பிரார்த்தனையில் தன்னை ஈடுபடுத்திக்கொள்ள விரும்பினுன் போலிருந்தது. ஆனுல்—அந்த மவுனப் பிரார்த்தனைக்கு, அவன் மனத்தை அதில் லயிக்கச் செய்ய சக்தி இல்லை. மனதுக்கு பிரார்த்தனையை கிரகித்துக்கொள்ளும் பக்குவம் அப்போது இல்லை. திரும்பத் திரும்ப தாய் தான் அவன் மனக் கண்ணில் சுழன்று கொண்டிருந்தாள்.

முதலில் அவள் தடியை ஊன்றிக்கொண்டு, தட்டுத் தடுமாறிக்கொண்டு அவனுக்கு முன் நடந்து வந்தாள். வந்தவள் சட்டென நின்று தலையை உயர்த்தி அவன் முகத்தை பார்த்தாள். அவளைப் பார்க்க பரிதாபமாக இருந்தது. 'அடே, நீ போக வேண்டாமடா; கிழவி வார்த்தையைக் கேளுடா' என்று கெஞ்சின பார்வை.

அதையடுத்து—அவன் நெற்றியில் விபூதியும் குங்குமமும் இட்டு, 'சவுக்யமாகப் போயிட்டு வாடாப்பா' என்று விடை கொடுத்தனுப்பிய அந்த அமைதியான முகம். ஆனுல், வெளிக்கு அமைதியாகத் தோன்றின அந்த முகம், உள்ளுக்குள் அடிக்கும் புயலை எப்படி மறைத்துக் காட்டியது என்பதும் அவனுக்கு ஞாபகத்துக்கு வந்தது.

கடைசியில் அவள் வந்து நின்ருள். அவள் கண்கள் முன் போல் அசையவே இல்லை. விழிகளில் ஒளியில்லை. அவள் முகம் ஒருவித உணர்ச்சியும் இன்றி, மரத்துக் கிடந்தது...

தாயின் பிரேதத்தை அவன் பார்க்கவில்லையானுலும் இந்தக் கற்பனைத் தோற்றம் அவனை நடுக்கி எடுத்தது. அதற்குமேல் அவனுல் தாங்க முடியவில்லை. கண்களை வெடுக்கென அகல விழித்துச் சுற்றுமுற்றும் பரபரப்புடன் விழித்தான்.

பிரார்த்தனை அவன் காதுகளில் தெளிவாக விழுந்தது.

ஒரு சின்ன யோசனை; விருட்டென்று எழுந்தான். தான் வழக்கமாக நிற்கும் இடத்தை நோக்கி நடந்தான். பிரார்த்தனையில் வாய்விட்டு ஈடுபட்டால் இருதய கனம் சிறிது குறையலாம் என்று நினைத்தான் போலும்.

பிரார்த்தனையின் இரண்டாம் அடியைப் பாடிக்கொண்டிருந்தார்கள்.

அதேசமயம் தலைவனுக்கு அடுத்தாற்போல் வந்து நின்ற ஜெயசிங், 'நான் பாடுகிறேன்' என்றான் தீனமான குரலில்.

தலைவன் வியப்புடன் அவன் பக்கம் திரும்பி முகத்தை ஒரு தரம் ஆராய்ந்தான். மிருதுவான குரலில், 'பாடுகிறாயா, நீ, சரி. பாடு, பாடு' என்றான்.

கைகளைக் கூப்பிக்கொண்டு மூடிய கண்களுடன் தலைவன் விட்ட இடத்திலிருந்து பிரார்த்தனையைத் தொடரப் போனான்.

'முதலிலிருந்தே ஆரம்பித்துவிடு' என்றான் தலைவன். பிரார்த்தனை அன்று சிதறுண்டு போனதால் ஏற்பட்ட அருசியைப் போக்கி ஒருமனதுடன் ஈடுபட விரும்பும் கோஷ்டியும் அதை ஆதரித்தது.

பிரார்த்தனை புதிதாக ஆரம்பமானது.

பொழுது புலர்ந்தது.....

என்று ஆரம்பித்தான் ஜெயசிங். அவன் குரல் ரொம்பவும் பலவீனமாகப் புறப்பட்டது. அந்த பலவீனத்தை வெளிக் காட்டிக்கொள்ள விரும்பாதவன்போல், துக்கத்தை மென்று விழுங்கி, நெருங்கிப் போயிருந்த தொண்டையை இரண்டொரு தரம் கனைத்துக் கொடுத்து இளக்கி, வலுவேற்றிக்கொண்டான். மனத்தைப் பிரார்த்தனையில் ஈடுபடுத்த, அவன் குரல் கொஞ்சம் கொஞ்சமாக விரிந்து கொடுத்துக்கொண்டே வந்தது.

எழுபசும் பொற்சுடர்...

என்ற இரண்டாவது அடியை அவன் திருப்பித் திருப்பிப் பாடும்போது குரல் தன் சுயமான இனிமையைப் பெற்று விட்டது. அதோடு தன்னை மறந்த உணர்ச்சி வேகமும் அதில் இணைந்தது.

அந்த உணர்ச்சி வேகத்தைக் கவனித்து விட்ட தலைவன் அதைச் சற்று அடக்கித் திருப்பிவிட எண்ணி, 'ஜெயசிங் கொஞ்சம் அடக்கிப் பாடு' என்று காதுகளில் லேசாகச் சொன்னான்.

ஆனுல், வெதும்பின நெஞ்சிலிருந்து விசும்பி எழும் அந்த பிரார்த்தனையில் ஒன்றுபட்டிருந்த ஜெயசிங்கின் காதுகளில் அவை பட்டதாகத் தெரியவில்லை.

தொழுதுனே வாழ்த்தி......

என்ற மூன்ருவது அடியைத் திருப்பிப் பாடிவிட்டு நான் காவது அடியை பாட ஆரம்பித்தான்.

விழி துயில்கின்றனே
இன்னுமென்... தா...யே...

அவன் உயர்த்திப் பாடிக்கொண்டிருந்தான்.

திடீரென அந்தக் குரலில் ஒரு நடுக்கம் ஏற்பட்டது.

அந்த நடுக்கத்தோடேயே அவன் தொடர்ந்தான் :

வியப்பிது...காண்...பள்ளி
எழுந்...தரு...ளா...யே...

அவன் குரல் நடுக்கம் உச்ச நிலையை அடைந்துவிட்டது.

எப்படியோ தட்டுத் தடுமாறி அந்த வரிகளை முடித்து விட்டான் அதை முடித்துவிடும் வரையில் தான் சமாளித்துக் கொள்ள முடியும் என்று அவன் நினைக்கவே இல்லை. அவன் உடம்ப குலுக்கி எடுத்தது.

'ஜெயசிங்! என்னது?' தலைவன், திடுக்கிட்டுப் போய கேட்டான்.

இந்த அடியை திரும்ப உச்சரித்துக் கொண்டிருந்த கோஷ்ட இதைக் கவனிக்கவில்லை. அவர்கள் பாடித் திரும்பவும் ஜெயசி பாடுவதை எதிர்பார்த்து நிறுத்திஞர்கள்.

பிரார்த்தனை வரி கிளம்பவில்லை.

விம்மி அழும் குரல்தான் அந்த நிசப்தத்திலிருந்து தெ வாகக் கேட்டது. ஜெயசிங் முகத்தைக் கைகளில் புதைத்து தேம்பிக்கொண்டிருந்தான். அவன் தலை, அருகில் நின்றிருந் தலைவன் மார்போடு அணைத்திருந்தது.

தலைவன் ஜெயசிங்கின் தோள்பட்டையை மிருதுவாக விர களால் தட்டிக்கொடுத்துக் கொண்டே, 'ஜெயசிங்' என் கூப்பிட்டான். பதிலில்லை.

ஜெயசிங் தலைவன் தோளில் முகத்தை அழுத்திக்கொண் கதறினன்.

'ஜெயசிங்!' தலைவன் குரலிலும் நடுக்கம் ஏற்பட்டது. ஆனால், அதை அமிழ்த்தி, ஜெயசிங்கின் கவனத்தைத் திருப்பும் படியான அதட்டின குரலில், அவனுடைய இரண்டு தோள்களை யும் குலுக்கிக்கொண்டே கத்தினன். 'ஜெயசிங், சின்னக் குழந்தை மாதிரி...இதோப் பார்.'

ஜெயசிங் தன் முகத்தைத் திருப்பி, தலையை உயர்த்திக் கொண்டான்.

அவன் முகம் கண்ணீரால் தொப்பலாகி இருந்தது.

'ஜெயசிங், என்னைப்பார்,' என்று அவன் முகத்தைத் தனக்கு நேராகத் திருப்பினன் தலைவன்.

துக்கம் வெடித்து நிற்கும் முகத்தோற்றத்துடன் அவனை ஜெயசிங் பார்த்தான். தலைவன் முகமும், அவன் பார்வையும் ஜெயசிங்குக்கு எதையோ உணர்த்த விரும்புவது போலிருந்தது.

'ஜெயசிங், சாந்தப்படுத்திக்கொள்.'

'நானும் தான் பார்க்கிறேன்; முடியவில்லையே.'

அவன் தலை கீழே கவிழ்ந்தது.

'முடியவில்லையா? என்ன சொல்கிறய் ஜெயசிங்!' தலை வன் படபடப்பான குரலில் கேட்டான்: 'உனக்கா முடிய வில்லை? பேஷ், எனக்கு வெட்கமாக இருக்கிறது. உனக்கு முடியவில்லை என்பது.'

தலைவன் விடுவிடெனப் பேசினதைக் கேட்டு ஒரு கேள்விப் பார்வையுடன் தலைவன் பக்கம் திரும்பினன்.

தலைவன் சேர்த்துச் சொன்னன், ''ஜெயசிங், உன்னை ஞாப கப்படுத்திக்கொள். நீ ஒரு...நானு அதை உனக்கு ஞாபகப் படுத்த வேண்டும்? உன் பிரதிக்ஞை—அதை மறந்து விட்டாயா நீ?''

அந்த வார்த்தைகள் அவனை வேகமாக ஆகர்ஷித்தன, கீதோப தேசம்போல. அவைகளின் அர்த்தத்தை அறிந்து கொண்டவன் போல முகக்குறி காட்டினன்.

அவன் அழுகையை அடக்க முயன்ருன். தலைவன் அதைச் சுட்டிக் காட்டிவிட்ட பிறகு அவன் அழுவது நன்ருக இருக்காது, குழந்தைத்தனமாகும். விக்கலுக்கும், விம்மலுக்கும் நடுவே, தலைவனுக்கு ஏதோ பதில் சொல்ல வாயெடுத்தான். ஆனல் அவனல் ஒன்றும் பேச முடியவில்லை.

அவனல், செய்ய முடிந்ததெல்லாம் தலைவன் முகத்தையே வெறித்து உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தது தான்.

விக்கலும், விம்மலும் உள்ளடங்கிப் பெருமூச்சாக வெ வந்தது.

'ஜெயசிங்' என்று மிருதுவான குரலில் தலைவன் அவனை அழைத்துச் சொன்னான்: நீ கதறினாலும் திரும்பக் கிடைக்காத— திரும்பி வர முடியாத—ஒரு முடிவிடத்தைப் போய் அடைந்து விட்டாள் அவள். அவளிடம் நீ அன்பு செலுத்தினாய்; பாச வைத்திருந்தாய்; அந்தக் கிழவியை, கைத்தாங்கலாக அவளை அழைத்துச் சென்றெல்லாம் உன் கடமையைச் செய்தாய்; அந்த திருப்தி உனக்கு இருக்கிறது. தாய் என்ற, வாழ்க்கையி ஒரே தரம் கிடைத்திருக்கும் பொக்கிஷத்தை இழந்துவிட்டால்— இழந்து விட்டதுதான். ஆனால்—'

தலைவன் பேச்சைச் சட்டென நிறுத்திவிட்டு, தன்னைச் சுற் ஒருதரம் கண்களைச் சுழற்றிவிட்டுத் திரும்பினான்.

ஜெயசிங் தீர்க்கமாகத் தலைவனையே பார்த்துக் கொண்டிரு தான். தலைவன் முடிவு வார்த்தைகளை அவன் கேட்க ஆத்திர பட்டமாதிரி இருந்தது.

தலைவன் குரல் உயர்ந்தது, எல்லோருடைய காதிலு கேட்கும்படியாக பலத்து ஆரம்பித்தான்:

'ஆனால், ஜெயசிங், நீ உன் தாயை இழந்து விடவில்லை அதோ பார். அங்கே இருக்கிறாள், உன் தாய்; உன் தா மட்டுமல்ல; நம் எல்லோருடைய தாயும்—அவளைப் பார்க் வில்லையா?

அந்தத் தாய்க்கு, தன்னைவிடச் சிறந்ததான ஒரு சக்திக் உன் தொண்டை, கடமையைச் செய்யத்தான் தன் இரு பிடத்தைக் காலி செய்துவிட்டுப் போயிருக்கிறாள் அவள்—அந்த கிழவி, உன்னுடையவள்...புரிகிறதா? அவள் தன்னைத் தியாக செய்து கொண்டுவிட்டாள்; பதிலுக்கு உன்னிடமிருந்து அதை எதிர்பார்க்கிறாள்...சரி பிரார்த்தனையைப் பாடு...பாடு...'

வந்தேமாதரம்!

தலைவன் கண்களை மூடிக்கொண்டு தன் குரலை நீட் உயர்த்திக் கோஷித்தான்.

ஜெயசிங் பிரார்த்தனையை விட்ட இடத்திலிருந் தொடர்ந்து பாட ஆரம்பித்தான்.

000

த. நா. குமாரஸ்வாமி

6

# நர நாராயணன்

ஓவென்ற சுத்தவெளியில், இருளோ ஒளியோ தோன்ருத ஒரு பெரும் பாழில் உறங்கிய, பெயர் - உருவம் - தன்மை எதுவும் இராத பரம்பொருள் விழிப்புற்றுத் திடுமென நினைத்துக்கொண்டது. அதன் உள்ளத்தில் ஆனந்தம் பொங்கியது—'ஆனந்தாத் ஏவ கலு இமானி பூதானி ஜாயந்தே'. விளையாட்டாக அந்தச்சூன்ய வெளியில் பல கோடி அண்டங்களைப் பண்ணி பறக்கவிட்டது. அந்த 'பலூன்கள்' சில வெடித்தன; சில அவிந்தன; சில நின்று சுழன்றன. அண்டத்திலிருந்து உண்டைகள் தாமாகவே சிதறிக் குட்டிலோகங்களாக மாறுவதைக்கண்டு பரம் பொருளான அந்த பயங்கரச் சிசுவுக்குப் பெருவியப்பாக இருந்தது. இன்னும் எந்த விதமெல்லாம் ஆகிறதோவென்று வேடிக்கை பார்த்தது.

''இவ்வளவு படைத்தோமே? எங்கோ ஒரு குறை இருக்கிறது?'' என்ற நினைவு வந்தது அதற்கு. அந்த வேதனையினுல் அதன் இதயத்தில் ஓரிடம் வீங்கியது. அது பழுத்த கனிபோல் விண்டு அதன் கையிலேயே விழுந்தது. அதைப் பார்த்துக் கண்ணீர் விட்டது, கடவுள்-சிசு. வெம்மையான மூச்செறிந்தது. இளகிய அந்த இதய உருண்டையில் அவருடைய கைரேகைகள் பதிந்தன. அணுச்செறிந்த நிலனும் அந்நிலத்தின் ஓங்கிய ஆகாயமும், அவ்வாகாயத்தைத் தடவி வரும் காற்றும், அக்காற்றின் இடையே தலைப்பட்ட தீயும், அத்தீயோடு மாறுபட்ட நீருமாக ஐந்துவகை பூத இயற்கைகள் அதில் தோன்றின.

'பூநிலாய வைந்துமாய்ப் புனற்கணின்ற நான்குமாய்
தீநிலாய மூன்றுமாய்ச் சிறந்த காலிரண்டுமாய்
மீநிலாய தொன்றுமாகி வேறு வேறு தன்மையாய்'.

அதுதான் நாம் இப்பொழுது வாழும் உலகு.

கடவுளுக்குப் பரம திருப்தியாகிவிட்டது. இது மற்ற கோளங்களைப்போல் செந்நிறமாகவோ, வெண்ணிறமாகவோ இராமல் பச்சைப் பசேல் என்று கண்ணைப் பறித்தது—

'பப்ரும், க்ருஷ்ணும் ரோஹிணீம்'

விச்வரூபாம் த்ருவாம் பூமிம்'

சூரிய சந்திர நக்ஷத்திரங்களின் ஒளிபட்டு வானவில் நிறங்களை யும் அவ்வப்போது காட்டியது. கடவுள்-குழந்தை அந்தரத்தில் அவ்வதிசய ரசகுண்டைச் சுழற்றிவிட்டது. ''சரிதான், இதைச் சிருஷ்டி செய்துவிட்டேனே, இதைப் பாதுகாக்க யாராவது வேண்டுமே?'' என்று பரம்பொருள் யோசித்தது.

'அகடனகடன படீயஸியான (நடக்க முடியாததை நடக்க வைக்கும்) கடவுள் நினைத்தால் ஆகாதது ஒன்று உண்டோ? அவருடைய மானஸபுத்ரி வெளியே வந்தாள். அவள்தான் இயற்கை (ப்ரக்ருதி) தன் அருமைச் செல்விக்கு அந்த மணி உருண்டையைக் காட்டினர். அது நிரம்ப ஜோராக சுழன்று கொண்டிருந்தது, வானவீதியில். ''எனக்குத் தா அப்பா! என்று உதடு பிதுங்க அழுதாள் இயற்கை.

''அழாதே; அதை உனக்குத்தான் தரப்போகிறேன்'' என்ற தும் கடவுளார், தம் மகளை இப்புவியில் பிரதிஷ்டை செய்து விட்டார்.

இந்த உலகில் வந்து சேர்ந்ததும் தந்தையைக் காணுமல் 'தர்திமாதா' கோவென்று கதறினுள்—

''அப்பா, இங்கே எனக்கு விளையாட ஒன்றுமே இல்லையே' பொம்மை ஏதாவது பண்ணி அனுப்பு''

தம் மானஸக்குழந்தையின் அழுகை அவர் இதயத்தைத் தொட்டது. அருள் சுரக்கும் கருணையில் மரம் செடிகளை உருவாக் கினர். அவற்றைத் தின்று வாழ விகடாகாரமான விலங்குகளை உண்டாக்கினர். ஊர்வன, பறப்பன, ஓடுவன, மிதிப்பன யாவும் காலக்கிரமத்தில் செய்து செய்து அனுப்பினர்.

மாநில மடந்தைக்கு எதை வைத்துக்கொண்டு விளையாடுவது என்று தெரியவில்லை. பிடிக்காத பொம்மையை உடைத் தெறிவாள்.

பிதாவின் குரல் கேட்டது—''பொம்மை போதுமா?''

அப்பா வேடிக்கையான பொம்மையெல்லாம் அனுப்ப வைத்தாய்... ஆனல்... என்று இழுத்தாள் இயற்கை.

"இன்னும் என்ன?" என்றார் கடவுள்.

"ஏதோ ஒன்று வேண்டும்போல் இருக்கு. ஆனால் என்ன வென்று சொல்லத்தெரியவில்லையே!" என்றாள் கடவுளின் மகள்.

அவர் செய்து அனுப்பிய சாமான்கள் ஒவ்வொன்றும் ழகாகத்தான் இருந்தன. மரங்கள் எல்லாம் விசித்திர கப் த்தன. பைந்நிறக் காய்களுடன் குலுங்கின. செங்கனிகளைச் ந்தின. விதவிதமாகப் புள்ளினங்கள் இறகு விரித்து ஆடின; ங்குரல் எடுத்துப் பாடின. சிங்கத்தின் பிடரி, புலியின் உடற் ற்று, மானின் விழி, யானையின் தும்பிக்கை, புல்லின் சுமை, லின் நீலம், பனியின் வெண்மை, மேகத்தின் கருமை, அதனி டயே விளையாடும் மின்னலின் ஒண்மை...... எவ்வளவு இருந்தும் ன்ன? கடவுளின் பெண்ணுக்கு மனசில் ஒரு பெருங் குறை ருந்து வந்தது.

"அம்மா, உன் வருத்தம் எனக்கு இப்போது புரிகிறது. தேபோல் ஒரு சமயம் நானும் வேதனைப்பட்டேன். அதிலிருந்து றந்ததுதான் இம்மண்ணுலகு. என்னபண்ணுவது? கஷ்டப் ட்டுக் கண்ணீர் விட்டால்தான் எதுவும் கைகூடும்—

'ஸ தபோ அதப்யத ஸ தபஸ்தப்த்வா
ஸர்வம் அஸ்ருஜத் யதிதம் கிஞ்ச'

இந்த மண்ணையும் உன் கண்ணீரையும் பிசைந்து உனக்கு ந்தமாதிரி இஷ்டமோ அந்தமாதிரி பொம்மை பண்ணிக்கொள் பா...!" என்றார் கடவுள்.

வழி ஏற்பட்டது; பொம்மைகளைச் செய்தாள் தர்திமாதா. ல்லாம் மனிதப் பொம்மைகளே, எத்தனையோமாதிரி; த்தனையோ நிறம். சில குள்ளம், சில உயரம்; பூனைக்கண்கள் காண்டவையும் இருந்தன. நீண்ட முகங்களும் அகன்ற முகங் ளும் தென்பட்டன. எல்லோரையும் தன் தந்தையின் சாயலா வே செய்திருந்தாள். தோற்றத்தில் வேறுபாடுகள் இருந்தாலும் டிப்படையில் யாவும் ஒரே அச்சில் அமைந்தவை. அப்பாவைக் வி அழைத்தாள் பூமிதேவி—"ஓடி வா! இதோ நீ சொன்ன டியே பொம்மைகளைச் செய்துவிட்டேன்...... அப்பா, இவை சைய மாட்டேன் என்கின்றன ஏன்?" என்றாள்.

தம் அருமை மகள் இயற்றிய கைவேலையைப் பார்த்துக் டவுள் தம்மையும் மறந்து அந்த மனிதப் பதுமைகளுக்கு யிரோடு கூட தம் அறிவின் ஒரு நுண்பொறியையும் தந்தார். ன்று தொட்டு மனித பொம்மைகள் இடம்விட்டு இடம் பெயர ாயின. யோசனைபண்ணத் தொடங்கின. நாக்கைக்கொண்டு சித்திர மொழிகளைப் பேசலாயின.

'ஜநம் பிப்ரதி பஹுதா விவாசஸம்
நாநா தர்மாணம் ப்ருதிவீ யதௌகஸம்'.

குட்டிக் கடவுளான இந்த மனிதர், கடல் காடு மலையெங்கும் பரவி புது மழையில் கலித்த பயிரினம் கதிருடன் ஆடுவது போலவும், இளவேனிலில் இலை செழித்துப் பூக்கும் மாஞ்செழ கலைப் போலவும் எங்கும் கிளைத்துப் பெருகினர்.

கடவுளின் மகள், இம்மாநிலத்தின் தெய்வம், "அப்பா என் இஷ்டம் பூர்த்தியாகிவிட்டது" என்றாள். இவளை மக்கள் பல உருவில் வழிப்பட்டனர். மாட கூடம் மலிந்த நகரங்களை எழுப் இவளுக்கு அணிகலமாகச் சாத்தினர். இனிய பொழிலும் நெடு வயலும் போர்த்த கிராமங்களை உருவாக்கி இவளுக்கு மாலையாய்ப் போட்டனர். பாட்டும் கூத்துமாக மாந்தர் களிப்பெய்தினர்.

"அம்மா, உனக்கு நாங்கள் செய்யும் அலங்காரங்கள் எப்ப இருக்கின்றன?" என்று ஒருமுகமாகக் கேட்டனர் மக்கள்.

"பலே பேஷ். நீங்கள் எல்லாம் என் தந்தையைப் போல திறமை மிக்கவர்" என்றாள் அன்னை.

"நீதான் எங்கள் தெய்வம். அது யாரம்மா உன் தந்தை? என்றனர் வியந்து.

இயற்கைதேவி, தாரகைகள் திரண்ட வானைக் காட்டி, "எ தந்தை புனைந்த கோலத்தை அதோ பார்த்துப் பிரமியுங்கள் வானில் சுழலும் அத்தனை லோகங்களும் அவர் இயற்றியவை என்றாள்.

"அவர் எங்கே இருக்கிறார்? கண்ணுக்குத் தெரியவில்லையே என்றனர் மக்கள்.

மிகவும் சங்கடமான கேள்விதான்! மனிதனுக்குத்தான் இ மாதிரி கேட்கத் தெரியும்! இயற்கையன்னையின் முகம் வாடிய

"என் தந்தை இருக்கும் இடம் மனோவாக்குக் காயத்திற் எட்டாத ஓர் அதிசய நாடு. தூங்கும்போது என்னை அந்த இடத் லிருந்து கொண்டுவந்து இங்கே விட்டார். அதோ புகைபோ தோன்றும் நக்ஷத்திரக்குவைக்கும் அப்பால்—

'மேலோடு கீழாய் விரிந்தோன் காண்,
அந்தமும் ஆதியும் அகன்றோன்காண்,
பந்தமும் வீடும் படைப்போன் காண்,
நிற்பதும் செல்வதும் ஆனோன் காண்'

என்றாள்.

மண் உலகத்தவர் தம்மைக் காண விழைவதைப் பார்த்துக் —வுளார் சிரித்தார். ''என்னைக் காண ஆசைப்படுகிறீர்களா?'' ன்ருர்.

உலகத்தவர் உள்ளத்தில் இக்குரல் கேட்டது. பெரும் ளர்ச்சி மூண்டது. 'கஸ்மை தேவாய ஹவிஷா விதேம' பாருக்கு இவ்வுணவு உரித்து) என்று வேதம் முழங்கியது.

''நான் இருக்கும் இடத்திற்கு வர உங்களுக்கு வழி தெரிய ல்லையா?'' என்ருர் கடவுள்.

''ஆமாம், ஆமாம்'' என்று மனித இனம் இருளில் தடுமாறி து. தெய்வீகக் குரல் வரும் திசை தெரியவில்லை.

''இதோ காட்டுகிறேன். ஆனுல் ஒரு நிபந்தனையின் பேரில் ான்'' என்ருர்.

''என்னவோ?'' என்று ஏங்கியது மனித உள்ளம்.

''முதலில் உங்களையே நீங்கள் அடக்கியாளுங்கள். வென்று ாருங்கள். என் நாட்டுக்கு வர வழி திறக்கும்'' என்ருர்.

''அந்த அமோக சக்தி எங்களிடம் ஏது?'' என்றது மனித ர்க்கம்.

''உங்களிடமே மறைந்து இருக்கிறது, வெளிப்படுத்துங்கள்'' ன்றது கடவுள் வாணி.

மனித இனம் கடவுளின் திருவாசகத்தை வேறு விதமாக பரீதமாகப் புரிந்துகொண்டது. மக்களிடையே யுகங்கள் தாறும் பெரும் பூசல் மூண்டது. குருதி வெள்ளம் உலகை ாசு படுத்தியது. ஜாதிப்போர், சமயச்சண்டை, உரிமைப் பாட்டி, கடைசியில் நிறச்சண்டை ஒவ்வொன்ருக எழுந்து னித சமுதாயத்தை அலைத்து உருக்குலைத்தன. சகடக்கால் பால் நீதியும் அநீதியும் மாறிச் மாறிச் சுழன்று வந்தன. ஊர்கள் ணக்காடாயின. எலும்பு மேடுகள் மீது அழகிய நகரங்கள் தான்றின. மக்கள் குலம் அழிவதும் தோன்றுவதுமாய், அரசர் ள் அட்டகாசம் புரிவதும் மஹாபுருஷர்கள் அமைதி தருவதுமாய் ிரைந்தது காலம்.

யாருக்கும் எட்டாத இடத்தில் பரமன் வெறும் ஸாக்ஷிபூத ாக இதையெல்லாம் கவனித்து வருகிருன்.

திடுமென ஒரு இடிக்குரல் உலகைக் குலுக்கிப் போடுகிறது ல்லான் ஒருவன் வெற்றிக் கோலத்துடன் கடவுளை எள்ளி இதோ உன்னைவிட நான் எவ்வளவு பெரியவன், எவ்வளவு லசாலி! என்னைப்பார்த்து நடுங்கு'' என்று இரைகிருன்.

கடவுள் தனக்குள் சிரித்துக்கொண்டார்—'' அட அல்பாயுசே !''

'' என் எதிரே பிரத்யக்ஷமாகுவாய்... ஒருகை பார்ப்போம்'' என்றான் வல்லான்.

அண்டமெல்லாம் குலுங்கும்படி ஒரு நகைப்பு கேட்டது. '' நான் எங்கும்தான் வியாபித்து இருக்கிறேன். உன் ஊனக் கண்களுக்குத் தெரியாது. உன் அகத்திலும் புறத்திலும் பரவி இருக்கிறேன். உன் அகந்தையிலும் நான் குடிகொண்டு இருக்கிறேன்.

'அஹமஸ்மி.' என்னைக்காணவேண்டுமானால் மனிதன் தன்னைத் தானே வெல்லவேண்டும். இதுவே அதன் மர்மம்'' என்றார்.

'ஹா ஹா, ஐயோ ஐயோ' என்று உலகமே அரற்றியது. வல்லான் வாளையுருவி பெரும் எலும்புக் குவைக்கு மேல் நிற்பதைக் கடவுள் கண்டார். அவன் கீழே உலகமே நொறுக்குண்டு துளித் துளியாக நசுங்கியது. மனிதர் அவனையே கடவுளென வணங்கினர்.

'' ஓய் கடவுளே ! இப்போது பாரும். யார் பலசாலி நீயா, நானா ?'' என்றான் வல்லான்.

'' சரிதான், மனிதர் உண்மையில் இதை ஒப்புக் கொள்கிறார்களா ? அவர்களை நீயே கேள்'' என்றார் கடவுள்.

வல்லான் சீறியெழுந்தான். '' உங்களில் யார் என்னை வழிபடாதவன் ?'' என்று கர்ஜனை புரிந்தான்.

'' எவரும் இல்லை, எவரும் இல்லை'' என்றது மனிதன் நாக்கு. ஆனால் அவன் உள்ளம் மட்டும் இதை மறுத்தது.

கும்பலில் ஒரு குரல் தெளிவாக, '' நான் உனக்குத் தோற்கவில்லை'' என்றது.

'' யாருடைய குரல் அது ?'' என்று வல்லான் துள்ளிக் குதித்தான்.

'' எங்கள் உள்ளத்தின் குரல். கடவுள்தான் அங்கிருந்து பேசுகிறார்'' என்றது அதே குரல்.

'' ஆ ! தெரிகிறது எல்லாம். அந்தக் கடவுளின் சூழ்ச்சிதான். அந்தக் கடவுளையும் ஒரு கை பார்த்து விடுகிறேன். அடிமைகளே ! அவனிடம் முறையிட்டுக் கொண்டீர்களா ? இதோ புழுவை நசுக்குவது போல் உங்களைக் கூழாக்கி விடுகிறேன்'' என்றான் வல்லான்.

'' இல்லை'' என்றான் வல்லான்காலில் குழைபடும் ஓர் வீரன்.

'' என்ன இல்லை ?''

''இது கடவுளின் சூழ்ச்சியன்று. இதோ பயமின்றிக் கூறு றன். என் உள்ளத்தில் எழுந்த உறுதி இது. நான் உனக்குத் ாற்கவில்லை' என்றான் அவ்வீரன்.

''ஜாக்கிரதை''—அணுகுண்டுபோல் வல்லானுடைய குரல் டித்தெழுந்தது.

''நாங்கள் அடிமையல்ல, அடிமையல்ல'' என்ற ஓசை காற் ஒலியில் கேட்டது.

சுற்றுமுற்றும் நோக்கி வல்லான், ''யார் அது?'' என்று ய்ந்தான்.

கடவுள் ஏழைப் பங்காளனாக நின்று, ''மனித உள்ளத்தின் றைகூவல் இது; வேறில்லை'' என்றார்.

''சரி, இவர்கள் உயிரை வதைப்பதோடு உணர்வையும் க்கி ஆளப் போகிறேன் பார்!'' என்று சவால் கொடுத்தான் ல்லான்.

அப்போது கடவுள் இடி இடியென்று நகைத்தார். இருண்ட ானிடையே நக்ஷத்திரங்கள் உதிர்ந்தன. பாரின் முதுகு நெளிந் து. கடல் ஸிம்ஹாநந்த தாளம் கொட்டியது. வல்லவனுடைய காடிய அடக்குமுறை தாண்டவமாடியது. மனிதர் உள்ளத்தில் ருத்துவிட்ட கொள்கைகளை இனவெறி பிடித்தவன் நசுக்க யன்றான். சுதந்திர தேவதை குகைக்குள் பதுங்கிக் கொண்டாள். ருந்தும், நாற்றிசையும் ''அச்சமில்லை, அச்சமொன்று மில் யே!'' என்ற சப்தமே பேரிகைபோல் முழங்கியது. இது வெஞ் றையில் வாழும் சாத்வீகர்களின் இதயகீதம்! வரவர அந்த காஷம் வலுத்தது. வல்லான் நெஞ்சினுள்ளும் திகிலை மூட்டி து; அவன் உடலை நடுக்குறச் செய்தது.

''இதோ என் கடைசி தண்டனை உங்களுக்கு'' என்று கச்சை யக் கட்டிக்கொண்டு எழுந்தான்.

''அச்சமில்லை, அச்சமில்லை'' என்றான் அந்த சாத்வீகவீரன் றைக்குள்ளிருந்து.

வான், வையம், விரிகடல் எங்கும் இந்தத் தைரிய நாதம் எதி ராலித்தது. எந்நாட்டினரும் இந்த மந்திரத்திற்குச் செவி ாய்த்தனர். அடிமை மக்கள், அடக்கப்பட்டோர், அகதியாக ழுவோர் உள்ளத்தில் நம்பிக்கைச் சுடரைக் கொளுத்தியது. ருள் விலகி உதயமாவதைக் காட்டும் பறவையின் குரல் போல் அஞ்சேல்!' என்ற வாக்கு எவர் உள்ளத்திலும் பதிந்தது.

மக்கள் திரளாக எழுந்தனர். இன்முகமாக,

"இருளினின்று ஒளியை அடைவோம்;
பொய்யிலிருந்து மெய்யினைக் கண்போம்;
மரணத்திலிருந்து அமரநிலை எய்துவோம்"

என்று பாடிக் கொண்டே தியாகத் தீயில் குதித்தனர்.

சிறைக் கூடங்கள் முறிந்தன. இரும்புத் திரைகள் விலகின. ஏகாதிபத்யத் தளைகள் விண்டன. வெற்றியை நோக்கி வீரர்கள் விரைந்தனர்.

வல்லான் எழுப்பிய அகந்தைக் கோட்டை தகர்ந்தது. யுக புருஷன் முன்னணியில் சென்றான். அவன் வேய்ங்குழல் அஹிம்சை ராகத்தை ஊதியது. படமெடுத்த அதிகார வர்க்கம் பணிந்து விட்டது. இன்றும் இருக்கிறதே கடைசிக் காட்சி......பெரிய சோதனை, வகுப்புவாதம் வீறிட்டெழுந்தது. நாடுகள் கூரிடப் பட்டன. அன்பு நெறியில் செல்ல எல்லோரையும் அழைத்தான் சாத்வீகவீரன். வகுப்புவாதம் அவனைச் சுட்டது.

"இப்பொழுதாவது சொல்—நீ தோற்று விட்டாயா?"

"இல்லை."

மறுபடியும் சுட்டது!

"இல்லை."

மூன்றாவது முறையும் சுட்டது!

"இல்லை"—அப்பொழுதும்.

உலகத்தவர் ஒன்று கூடினர்; இந்த அதிசயத்தைப் பார்த்து வியந்தனர்; விழி நீர் பெருக்கினர்.

"உனக்கினி யம பயமேது?"

என்று ஒருவன் பாடினான்.

"யார் நீ?" என்றான் முடி தாழ்ந்த வல்லான்.

"பாட்டுக்கோர் புலவன்!"

"அப்படி யென்றால்?"

"அதுவா, நான் புதுமையைச் சொல்லும் குடுகுடுப்பை ஆண்டி."

"எதற்காக இந்தப் பாட்டு?"

"உடல் அழிந்தாலும் உயிர் அழியாது. இப்பெரு வெற்றியால் மனிதர் உள்ளத்தில் குடிகொண்டிருந்த பீதி, அவநம்பிக்கை அசூயை யாவும் விலகின."

வல்லான் கையிலிருந்து கொடிய அஸ்திரம் மண்ணில் விழுந்தது. அவனுக்கு என்புவரை நடுங்கியது.

ஓர் அபூர்வமான சுடர் தரையில் கிடக்கும் சாத்வீகப் போர் வீரன் மீது வட்டமிட்டது. மெல்லிய குரல் கேட்டது—'**ஹே ராம்** !—நீ எங்கே—எங்கே !!

''**தத் த்வம் அஸி**—உள்ளத்தில் என் குரலைக் கேட்டவன் நீ ஒருவனே. அன்பு நெறியில் சென்ற உனக்கு நான் சிக்கினேன். உன் மூலமாக என்னை அடையும் வழியை மாந்தருக்குக் காட்டினேன்'' என்றது கண் காணாத குரல்.

உயிர் துடிக்கும் அந்தச் சாத்வீகவீரன், ''அடுத்து ஒரு வேண்டுகோள், என் இதய ரத்தத்தை உன் விரலால் தொட்டு இந்த மாநிலத்தாயின் பாழும் நெற்றியில் அழியாததோர் திலகம் இடு...... இவ்வளவுதான்'' என்றதும், சுடர்வட்டம் மறைந்தது.

இந்த அஹிம்சையின் சின்னம் லோக ஜனனியின் அம்சமான இந்தியத்தாயின் திருநுதலில் என்றென்றும் ஜொலிக்கும்!



# 7

# சிறை ஸத் ஸங்கம்

1931-32-ல் வேலூர் சிறைச்சாலையிலிருந்த ஏ-வகுப்பு அரசியல் கைதிகள் அவ்வனுபவத்தை மறக்க முடியாது. அங்கே சுமார் 40 பேர் இருந்தார்கள். ஒருவிதத்தில் பார்த்தால் 40 பேரும் ஒரு அச்சில் வார்க்கப்பட்டவர்கள். தெலுங்கு, தமிழ், மலையாளம், மராட்டி, கன்னடம், சௌராஷ்டிரம், துளுவம், கொங்கணி, பிராம்மணர், பிராமணரல்லாதார், ஹிந்து, ஹிந்து அல்லாதார், வக்கீல், வியாபாரி, டாக்டர் என்ற பேதம் இல்லாமல் ஏகமனதுடன் காந்தீய முறையில் இந்தியாவுக்குப் பூரண சுயராஜ்யம் கோருபவர்கள் அவர்களனைவரும். ஆனுல் தினசரி வாழ்க்கையில் அவர்கள் ஒரு நெல்லிக்காய் மூட்டை-ஒவ்வொருவரும் ஒரு தனி 'பிரகிருதி'. சற்று மிகைப்படுத்திக் கூறினுல், ஸ்நான-பான-சாப்பாடு பேச்சு வார்த்தை விஷயங்களில் இருவர் மனம் ஒத்திராது. இருவர் தேவை ஒன்றுபட்டிராது; பொறுமையின்மை, அசூயை நிலவியிருக்கும் எனலாம்.

அநேகமாய் எல்லாரும் தம்தம் வழியில் நன்ருய்ப் படித்தவர்கள், தீவிரமான தனி அபிப்பிராயங்கள் கொண்டவர்கள். விநோதமான ஆராய்ச்சிகளில் பற்றுள்ளவர்கள் ..முன் காலத்தில் லங்கைத் தீவின் ஒரு அம்சமாக ஆஸ்டிரேலியாக் கண்டம் இருந்தது என்று 'தக்க சான்றுகளுடன்' பருத்த புஸ்தகங்கள் எழுதுபவர் ஒருவர்; பிரிட்டிஷாரின் அசிரத்தை மனப்பான்மை இல்லாவிட்டால் கங்கையாற்றின் தண்ணீரைக் கொண்டு வைகையாற்றை ஜீவநதியாக்கலாம் என்று 'நிரூபிப்பவர்' ஒருவர்; இவ்வாறு பலர். 'ஆதி பாஷை'களைப் பற்றி விவாதம் கிளம்பிவிட்டால் ஜெயில் மேலதிகாரிதான் வந்து அமைதி நிறுவ வேண்டும்.

ஒன்றிரண்டு தலைவர்கள் இவ்வளவு அதிகப்படி சக்தியையும் பயனுள்ளதாக்குவதற்காகப் பலவிதப் படிப்பு வட்டங்கள் உண்டாக்கினார்கள். கீதை, உபநிஷத், குறள், பைபில், குரான், ஸ்ரீராமகிருஷ்ண விவேகானந்த உபதேசங்கள் வகையரு; ஹிந்தியும் அயல் பிராந்திய பாஷைகளும்; ஷேக்ஸ்பியர், ஷெல்லி, கீட்ஸ்; தெய்வ பஜனை, தேசிய பஜனை, உபந்நியாசம், காலக்ஷேபம்; குறிப்பிட்ட விஷயங்களைப் பற்றிய விமர்சனங்கள், விளக்கங்கள், கொள்கைகளைப் பற்றிய ஆராய்ச்சி நூல்கள், சுயசரித்திரம் முதலியன எழுதுதல்;—இது போன்ற காரியங்களில் பிற்பகல் நேரம் கழிந்தது. நூற்பு வேலை எல்லாருக்கும் ஏற்பட்டது; பெரும்பாலோர் திட்டப்படி அரைமணி நேரம் நூற்பார்கள்; சிலர் மணிக்கணக்கில் நூற்றுக்கொண்டே இருப்பார்கள்.

சிலர் மாஜிஸ்டிரேட்டின் தண்டனை வாசகத்தின்படி தமக்கு 'கடுமையான வேலை' கொடுக்க வேண்டுமென்று பிடிவாதம் செய்வார்கள்! சிறை அதிகாரியோ அதை மறுத்து, "உங்களுக்கு வேலை கொடுப்பதற்கு உபகரணங்கள் வேண்டும்: அவற்றை அமைத்து கச்சாப் பொருள் சப்ளை செய்து மேல் பார்வை நடத்த எனக்கு வசதிகள் இல்லை; ஆகையால் 'ஹாய்யாக' சும்மா இருங்கள்" என்பார். சத்தியாக்கிரகி, "ஓய், நீர் விதியை மீறினாலும் நான் மீறமாட்டேன்; எங்கே வேலை?" என்பார்.

அதிகாரி, "கொலை களவு செய்த கைதிகளைச் சமாளிப்பது சுலபமாக இருக்கிறதே!" என்று அலுத்துக்கொண்டு, பல இலாக்காக்களுடன் கலந்தாலோசித்து கஜானாப் பைகள் பின்னும் வேலையைக் கொடுப்பார். (அதற்கு ஒரு முளையும் கெட்டி நூலுந்தான் தேவை; ஆனால் செய்து முடித்த பைகளுக்குத்தான் அதிகத் தேவையில்லை; ரூபாய் நாணயம் அதிகமிருந்தால் தானே கஜானாப் பைகள் வேண்டும்!) பட்டுப் போன்ற கைகளுள்ள வக்கீலோ, டாக்டரோ, வியாபாரியோ கொப்புளங்கள் நிறைந்த விரல்களுடன் சோறுகூடப் பிசைய முடியாத நிலையில் தம் கொள்கைகளைக் கொண்டு செலுத்திய ஆத்ம திருப்தியில் மூழ்குவார்.

ஒரு தலைவர் தாம் தனியாய் இருக்கும் நேரமெல்லாம் நூற்றுக்கணக்கில், ஆயிரக் கணக்கில் காயத்திரி ஜபம் ஜபித்து 'உலக க்ஷேம பாங்கி'யில் டிபாசிட் செய்வார். அவரிடம் இன்னொரு வினோதப் பழக்கம் உண்டு. சிறைச்சாலைத் தோட்டத்தின் பூச்செடிகளை நன்கு பராமரித்து, சாயங்காலம் மல்லிகை முல்லை வகையரு மொட்டுகளைச் சேர்த்து, ராத்திரி விரிக்கப்படும் படுக்கைகளில் தலையணை மீது இரண்டிரண்டு

வைத்து விடுவார். கைதிகள், ''என்னையா உமது கைங்கரியம்! இயற்கையாகவே குடும்ப நினைவு வாட்டுகிறது; குண்டு மல்லிகை போட்டு அத் தீயை வளர்க்கிறீர்களே!'' என்று ஆட்சேபிப்பார்கள். அவர் பிரம்மச்சாரிக் கட்டையல்ல, குடும்பப் பாசத்தால் வாட்டப்பட்டவர்.

சிறை வாழ்க்கையே விரசமானது. அதிலும் சிறைச்சாலை ரெயில் நிலையத்திற்கு அருகாமையில் இருந்துவிட்டால் சொல்ல வேண்டியதில்லை. நடுநிசியில் தூக்கம் கலைந்திருக்கும் சமயத்தில் ரெயில் எஞ்சின் ஊதினுல், சுதந்திரம், யதேச்சையான பிரயாணம், சொந்த வீடு வாசல் போன்றநினைவுகள் மனத்தைக் கசக்கிப் பிழியும். ஏக்கம் வதைக்கும். அந்நிலையில், தலையணையில் மல்லிகைப்பூ வாசனையும் சேர்ந்து கொண்டால்!

ஒரு தியாகி மேற்கூறிய ஒரு வகையிலும் சேராமல் ஒன்றும் இச்சிக்காமல் ஒன்றும் குறை கூறுமல், தான் உண்டு, தன் புத்தகங்கள் உண்டு என்று காலம் தள்ளுவார். தபால் மூலமும் அவரைப் பார்க்க வருவோர் மூலமும் கட்டுக் கட்டாகப் புத்தம் புதிய புத்தகங்கள் அவர் அறையில் குவியும். அவை பெரும்பாலும் வறட்டு விஷயங்களைப் பற்றியவை:—''உண்மையின் தத்துவம்'' ''சிந்தனையின் விகாசம்'', ''புள்ளி விவரங்கள்—என்ன, ஏன், எங்கே?'', ''எதிர்காலம்—உண்மையா, கற்பனையா?'' என்பவை போன்ற தலைப்புக்கள் கொண்டவை. அவருடைய நூல்கள் இரவல் பிரயாணம் சென்று தங்கிவிடும் என்ற பயமே இல்லை.

மற்ருெரு தலைவர் திடீரென்று அரசாங்கப் பொறுப்பு கைக்கெட்டிவிட்டால் அப்பொழுது ஆற அமர ஆலோசிப்பதற்கு அவகாசம் இருக்குமோ இருக்காதோ என்ற கவலையில், காங்கிரஸ் ஆட்சிக்குகந்த தீர்மானங்களும் திட்டங்களும் எழுதிக் கட்டுக்கட்டாகத் தயாரித்துக் கொண்டிருந்தார். எதிர்பார்க்கக்கூடிய ஆட்சேபங்களும் அவர் அளிக்க இருக்கும் சமாதானங்களும்கூட ஆதியிலேயே அவர் அமைதியுடன் ஆலோசித்துக் குறித்து வைத்து விடுவார் என்று சொல்லுவதுண்டு. உண்மையில் அவை எதிர்பார்த்தபடியே பயனும் பட்டன.

டாக்டர் கேசவராவ் அதி சீக்கிரத்தில் எல்லாருக்கும் வேண்டியவரானுர். அவர்கள் அவரைச் சமையல் அறை அதிகாரியாகத் தேர்ந்தெடுத்தார்கள். சென்னை ஹாஸ்டல் அனுபவத்தை வைத்துக்கொண்டு அவர் ஒவ்வொரு கோஷ்டியாரின் நாப்பழக்கத்திற்கும் தக்கபடி சமையலும் பரிமாறும் திட்டமும் அமைத்தார். ஜெயில் ஆபீஸரின் ஒத்துழைப்புடன் உணவுப் பொருள் குத்தகைக்காரரை வழிக்குக் கொண்டு வந்து அன்ரு

டம் ஏற்பட்ட தலா எட்டணு அலவன்ஸைக் கூடியவரை நல்ல பண்டமாக வாங்க அவர் ஏற்பாடு செய்தார். கைதிகளுக்கும் அப்பளாம், வடாம், ஊறுகாய், பக்ஷணங்கள் முதலியன பெற்றுக் கொள்ளும் வசதி இருந்ததினுலும் அநேகமாய் எல்லாரும் தமக்கு வரும் பார்சல்களைப் பிறரோடு பங்கிட்டுக் கொள்ளும் வழக்கம் இருந்ததாலும் சாப்பாட்டுப் பிரச்னை திருப்திகரமாகவே தீர்ந்தது.

அநேகமாய் வாரத்திற்கொரு விருந்து நடக்கும். புதிதாய் ஒரு நபர் சேரும்போது வரவேற்பு உபசாரம்; 'காலமானவர்கள்' வெளியேறும்போது பிரிவு உபசாரம்; பிறந்த நாள் கொண்டாட்டம்; ஊரிலிருந்து மக்கட் பேறு போன்ற நற்செய்தி கிடைத்தாலும் விருந்து. இவ்வாறு ஜெயில் சமையல் அறைக்கு வாதாம், சேமியா, முந்திரிப்பருப்பு, குங்குமப்பூ முதலியவற்றின் வாசனை பருகும் (முன்பின் ஏற்படாத) சுக அனுபவம் அடிக்கடி கிடைக்கும்.

கடிதங்கள் பெறுதல் உற்றூர் உறவினர் சந்திப்பு, இவை சிறைவாசத்தில் வறண்ட மனங்களையும் மகிழ்விக்கும் நிகழ்ச்சிகள். கேசவராவுக்குக் கடிதங்கள் சுமாராய் ஒழுங்காய் வந்து கொண்டிருந்தன. ஒரு கடிதத்திலிருந்து, பண்டிகைகளின்போது வீட்டில் வழக்கமாய் ஏற்பட்ட எல்லாத் தின்பண்டங்களும் செய்யப்படுவதில்லை, பெயரளவுக்குச் செய்கிருர்கள், என்று அவர் ஊகித்து, தான் எழுதிய பதிலில் சென்ற நான்கு வாரங்களில் சிறையில் நடந்த விருந்துகளின் விவரம், தயாரிக்கப்பட்ட விதவிதமான மிட்டாய்களின் ஜாபிதா எல்லாம் வர்ணித்தார். வீட்டாரனைவரும் சாங்கோபாங்கமான அந்தக் கடிதத்தைப் படித்து, 'ஐயோ பாவம், கஷ்டப்படுகிருர்கள்!' என்று நாம் நினைக்கிறோம். பயல்கள் அங்கே கும்மாளமடிக்கிருர்கள் என்று சொல்லிச் சிரித்தனர். அதன் பிறகு அவர்களுக்கும் வாழ்க்கை சற்று சகிக்கக்கூடியதாக இருந்தது.

இவ்வாறு நாட்கள் கழிந்தன. ஒவ்வொருவரும் தம்தம் விடுதலைத் தேதியை—நன்னடத்தைக்கான 'போனஸ்' போக—கணக்கிட்டுக் கொண்டிருந்தனர். அநேகர் சட்ட மறுப்பு நடத்தி மறுபடி மறுபடி சிறை திரும்பத் தீர்மானித்தவர்கள். இருந்த போதிலும் விடுதலை என்பது பிரியமாகத்தானிருந்தது.

இதற்கிடையே எதிர்பாராத, வெளியிடமுடியாத சில காரியங்களின் தொடர்பாக, கடிதப் போக்குவரத்து, பேட்டி சந்திப்பு என்னும் வசதிகளை இக் கைதிகள் தியாகம் செய்து விட்டனர். அப்பெரிய நஷ்டத்தின் காரணமாக வாழ்க்கை இருள் மூடியிருந்தது. சாப்பாட்டிற்குப் பிறகு கடிதங்களுக்காக

ஜெயில் காரியாலயத்திற்குச் செல்லும் இனிய உற்சவம் நின்று போயிற்று. ஆகவே விடுதலை தினம் மிகமிக விரும்பத்தக்க நாளாயிற்று.

இத்தியாகத்தையொட்டி நெஞ்சை உலுக்கும் சம்பவம் ஒன்று நடந்தது. ஜெயில் அதிகாரி சாதாரணமாகக் கைதி களின் கடிதங்கள் எல்லாவற்றையும் பரிசீலனை செய்ய வேண் டும். சாதாரண நாட்களில் அது சிரமமான காரியமல்ல; கடிதங்கள் அபூர்வமாகத்தான் வரும். ஆனல் படித்த, பல தொடர்புகள் கொண்ட அரசியல் கைதிகள் மந்தை மந்தை யாக வந்து குவியும்போது அது சாத்தியமில்லாத காரியமா யிற்று. அதற்காகவே இரண்டு மூன்று அந்தரங்கக் குமாஸ்தாக் கள் வேண்டும். ஆகவே, அதிகாரி எது குடும்பக் கடிதம், எது அரசியல் சம்பந்தமானது என்று 'முகர்ந்து பார்த்து', தனி யாகப் பிரித்து, முக்கியமானது மாத்திரம் படித்துத் தணிக்கை செய்வார். மனைவிமார் எழுதும் கடிதங்களுக்கு அவர் 'கண்ணே! மூக்கே!' என்ற அர்த்தத்தில், ஆங்கிலத்தில், 'ஐஸ் நோஸ் லெட்டர்ஸ்' என்று பெயரிட்டிருந்தார்!

ஆனல் ஒருநாள் வக்கீல் ஒருவருக்கு வந்த குடும்பக் கடிதம் ஆங்கிலத்தில் டைப் அடிக்கப்பட்டிருந்தது. அதிகாரியின் கண் அதன்மேல் சற்று தங்கிற்று; பிறகு விஷயத்தை முழுவதும் படித்தார். வக்கீல் தொழில் பார்க்கும் அத்தலைவருக்கு அவ ருடைய குமாஸ்தா எழுதியதாவது: "...சென்ற இரண்டு மூன்று கடிதங்களுக்கு அவ்விடத்திலிருந்து பதில் வராததால் தங்கள் மனைவி மிகவும் திகில் அடைகிருர்கள். தங்கள் தேக நிலை எப்படி இருக்கிறது? முறைப்படி வைத்தியம் நடக்கிறதா? அம்மா அவர்களுக்கு இங்கே இருப்புக் கொள்ளவில்லை. நாளை ரெயிலில் புறப்பட்டு நான் அவரை அங்கு அழைத்து வருகி றேன். கைக் குழந்தையையும் கொண்டு வருகிறோம். தாங்கள் அவருக்குத் தக்க ஆறுதலளிக்கவேண்டும்..."

அதிகாரி கைதியை அழைத்துக் கடிதத்தைக் கையில் கொடுத்தார். கைதி அதைப் பெற்றுக்கொள்ள மறுத்தார். அதிகாரி தனக்குத் தெரிந்த தர்க்கமெல்லாம் பிரயோகித்தார். பயனில்லை. பிறகு அவர் கடிதத்திலுள்ள செய்தியைத் தெரி வித்தார். கைக் குழந்தை வக்கீலின் சிறைவாசத்தின் மத்தியில் ஆறுமாதங்களுக்கு முன் பிறந்தது. கைதி துக்கமும் உணர்ச்சி யும் உருவெடுத்து, நீங்கள் அதைப் படித்துக் காட்டியிருக்கக் கூடாது. என்னைப் பொய் நடத்தைக்காரனுக ஆக்கிவிட்டீர் கள். என் மனைவியை நான் வரவேற்றுப் பேசுவது சாத்திய மில்லை" என்று மிக்க சிரமத்தின் பேரில் கூறினுர்.

அதிகாரி, "அப்படியானல் வரவேண்டாம் என்று அவருக்குத் தந்தியடித்து விடுங்கள்" என்ருர்.

"அந்த உரிமைதான் எனக்கு இப்பொழுது இல்லையே" என்று தெளிவுப்படுத்தினர் வக்கீல்.

"என்ன கல் நெஞ்சு! முன்னுக்கும் போகாமல் பின்னுக்கும் போகாமல்...அப்படியானல் என் சொந்த ஹோதாவில் நான் தந்தியடிக்கிறேன்," என்ருர் அதிகாரி.

"அதை எனக்குத் தெரிவிப்பதும் என்னைப் பொறுத்தவரை தர்மசங்கடமான விஷயம்தான். சரி—என்று ஒப்புக்கொள்வதாக இருந்தால் நானே அடித்துவிடலாமே!" என்று தர்க்கித்தார் கைதி.

பொறுமையிழந்த அதிகாரி, "சரி நீர் போம்—நீரும் உம் சத்தியமும் நியாயமும் வக்கீல் பேச்சும்! எதற்கும் ஒரு எல்லை வேண்டும்" என்று அவரைக் கண்டித்து அனுப்பிவிட்டு வக்கீலின் குமாஸ்தாவுக்கு 'தற்சமயம் புறப்பட வேண்டாம்' என்று தந்தியடித்தார். எக்காரணத்தாலோ அவர்கள் மறுநாள் வந்து சேர்ந்து விட்டார்கள். நடந்த விஷயங்களை அறிந்து அந்தம்மாள் கைகால் தளர்ந்து அப்படியே உட்கார்ந்துவிட்டார்.

அதிகாரி தமக்கு யோசனையளிப்பதற்காகத் தம் மனைவியை வரவழைத்தார். அவர் நன்ருய்ப் படித்தவர், நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவர். எல்லா விவரமும் அறிந்து கொண்டபின் அவர் வக்கீலின் அறைக்குச் சென்று, "ஐயா, எந்த அபிப்பிராயத்திற்கும் மறுபுறம் உண்டு. எந்த விரதத்திற்கும் விலக்குண்டு. அதுவுமில்லாமல் நீர் பீஷ்மப் பிரதிக்ஞை என்று நினைப்பதை உலகம் அசுரப் பிடிவாதம், மமதையின் அழுத்தம் என்று கருதலாம். உம் சகாக்கள் எல்லோரும், உம் மாகாணத் தலைவர் உள்பட, நீர் உம் மனைவியைக் கண்டு பேசி ஆறுதல் கூறவேண்டும் என்று ஒப்புக்கொள்கிருர்கள். பஹுஜன வாக்குக்கு மதிப்புத் தரவேண்டும். ஸ்திரீ, அதிலும் தேகநிலை சரியாய் இல்லாதவள், என்ருல் யாரும் மனம் இரங்குவார்கள், தபஸ்விகளும் இரங்குவார்கள், பேயும் இரங்கும். இது உம் சொந்த விஷயமாக இல்லாததால் இதே யோசனைதான் நீங்களும் கூறுவீர்கள். ஐயா, தயவு செய்து வாரும்" என்று அழைத்தார்.

வக்கீல் தலை நிமிராமல் கண்ணீர் வடித்துக்கொண்டிருந்தார். அவர் உடல் குளிர் காய்ச்சல் வந்தாற்போல் நடுங்கிக் கொண்டிருந்தது. பிறகு சூபரிண்டன்டெண்டு ஒரு வார்டரை

அனுப்பி அவரை ஆபீசுக்கு வரும்படி உத்தியோக முறையில் கட்டளேயிட்டார். அங்கு சென்றபின் வக்கீல் தலே நிமிராமல் கீதையில் ஸ்திதப் பிரக்ஞனே வர்ணிக்கும் சுலோகங்களே உச்சரித்துக் கொண்டே இருந்தார். அதிகாரி, ''அக்கிரமம், பிடிவாதம், அளவு கடந்த அகம்பாவம்'' என்று ஆங்கிலத்தில் அலுத்துக்கொண்டு, "பேட்டி முடிவடைந்தது; கலேயலாம்'' என்று கூறிவிட்டார்.

இந்தச் சோதனேயின் அதிர்ச்சியால் வக்கீலுக்கு இரண்டு மூன்று நாட்கள் ரத்த அழுத்தமும் மற்ற உபத்திரவங்களும் இருந்தன. கேசவராவும் ஜெயில் டாக்டரும் கவனித்து வந்தார்கள். சந்தர்ப்பம் வாய்த்ததும் ராவ், ''ஏன் சார், ஆதியிலிருந்தே நீங்கள் இந்த சலுகைத் தியாகத்தை எதிர்த்தீர்களே! இந்த வம்புக்குக் காரணமாயிருந்த நிகழ்ச்சிகளில் முதல் தப்பு நம்முள் ஒருவருடையது. அதைப் பகிரங்கமாய் ஒப்புக்கொண்டு சர்க்காரிடம் மன்னிப்புக் கோரவேண்டும் என்கிறீர்களே. ஆகையால் உங்கள் மனச்சாட்சிக்கு விரோதமில்லாமல் உங்கள் மனேவியிடம் பேசியிருக்கலாமே'' என்ற சந்தேகத்தைக் கிளப்பினுர்.

அதற்கு வக்கீல், ''தர்மத்தின் மார்க்கம் மிகவும் சூக்ஷ்மமானது, மிஸ்டர் ராவ். வாள் முனே போன்றது என்பார்கள். நாம் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். இந்தத் துக்ககரமான நிலேமைக்கு நம்முள் ஒருவர்தான் காரணம், அதை நாம் அறிவோம். ஆனுல் அதை மறைத்து வைத்து, பிற்கால நடத்தைக் கான ஒரு முடிவுக்கு வந்தபின், கசப்போ இனிப்போ, அந்த முடிவுப்படி தான் நாம் நடக்கவேண்டும். சௌகரியப்பட்ட போது கூட்டத்தாரின் தீர்மானம், அது அசௌகரியமானுல் என் சொந்த தீர்மானம் என்று மாறி மாறி நடக்கக் கூடாது. மொத்தத்தில் இது தர்மசங்கடமான நிலேகளில், சுகமான பாதையைக் காட்டிலும் கடினமான பாதையே சரியான மார்க்கமாகும் என்று நாம் வைத்துக் கொள்ளலாம். உங்களுக்குத் தெரியாததல்ல, கேட்டதினுல் சொல்கிறேன்,'' என்று பலஹீனத்துடன் விடையளித்தார்.

—o—

8

# அஞ்சலி

ஸுலைமாவின் தளிர் உடல் ஆடிக்காற்றில் அலைந்தாடும் பசுந்தளிரைப் போல் படபடத்தது. ''யா அல்லா! நீங்கள் அங்கெல்லாம் போகவே கூடாது'' என்று அலறினாள் அவள்.

அமீருக்கு மனைவியின் பதற்றம் ஆச்சரியத்தை அளித்தது. அவன் அவளை அருகில் இழுத்து அணைத்துக்கொண்டு, 'பர்தா'வுக்கு மேலாக அவளுடைய தலையை அன்புடன் வருடியவாறு, ''ஏன் ஸுலே, ஏன் இந்தப் பதற்றம்?'' என்று கேட்டான்.

''ஏனா? இந்த நெஞ்சைக் கேட்டுப் பாருங்கள்.'' ஸுலைமா தாமரைத் தண்டு போன்ற தனது நீண்ட சுட்டுவிரலை அவன் நெஞ்சில் பதித்தாள்.

அமீர் சிரித்தான். இப்பொழுது அவனுக்கு மனைவியின் பதற்றத்தின் காரணம் விளங்கிவிட்டது. ஆம், அவளைப் போன்ற நிலையிலுள்ள எந்தப் பெண்ணும், கணவனை அந்த இடத்துக்கு அனுப்ப அஞ்சத்தானே செய்வாள்? ஆகையால் அவன் தன் நெஞ்சில் பதித்திருந்த விரலோடு ஸுலைமாவின் கண்ணாடி வளையல் குலுங்கிய அழகிய கரத்தை ஆசையோடு பற்றிக் கொண்டு, ''பைத்தியமே! இந்தக் கையை என்றைக்குப் பற்றினேனோ, அன்று தொட்டு நீதான் என் உடல், பொருள், ஆவியெல்லாம் என்பது உனக்குத் தெரியாதா? ஏதோ அல்லாவின் திருவருளால் இனி என்னாலுமே போக முடியாது என்றிருந்த அந்த இடத்துக்குப் போகும் வாய்ப்பு ஒன்று வலியக் கிட்டியிருக்கிறது. 'போய் வாருங்கள்' என்று மகிழ்ச்சியுடன் விடை தந்து அனுப்ப வேண்டிய நீ, ஏதேதோ கற்பனைகள் செய்து கொண்டு வீணில் மனசைக் கலக்கிக் கொள்ளுகிறாயே!'' என்று அவளைத் தேற்ற முயன்றான்.

ஸுலேமாவின் மனத்தில் எழுந்த பீதி கணவனின் ஆறுதல் மொழிகளால் மாறிவிடவில்லை. அவள் சொன்னுள்: ''என் உள்ளம் கலங்கத்தான் கலங்குகிறது, அமீர். நீங்கள் இந்த உலகத்தில் வேறு எந்தப் பகுதிக்குப் போவதாக இருந்தாலும் சந்தோஷமாக விடை தந்து அனுப்பி விடுவேன். ஆனல் இங்கு மட்டும்......'' அவளால் மேலே பேசமுடியவில்லை. நெஞ்சத்தின் கலக்கம் கல்லாக உருண்டு தொண்டையை அடைத்தது. அந்த அடைப்பு அவளுடைய கவர்ச்சிமிக்க மைதீட்டிய கருவிழிகளில் கண்ணீரை ஊற்றெடுத்து ஓடச் செய்தது.

அமீர் மீண்டும் அவளை அருகில் இழுத்து அவளுடைய வாடிய முகத்தைத் தன் அகன்ற மார்பின்மீது சாய்த்துக் கொண்டான். ''அடடா! இது என்ன ஸுலே? ஏன் இப்படிக் கண்ணீர் விடுகிருய்? உன் கண்ணீரைப் போக்கக் கைப்பிடித்த நான், உன்னைக் கண்ணீர் சோர விட்டுவிட்டு எங்கும் போகமாட்டேன். நீ போக வேண்டாம் என்ருல் போகவில்லை கண்ணே; அதற்காக அழாதே, ஏதோ ஒரு சபலம்; ஆபீசிலிருந்து அனுப்புவதாகச் சொல்லுகிருர்களே; நமது நன்றிக் கடனும் நீண்ட காலமாக நிறைவேற்றப்படாமல் இருக்கிறதே; போய் வந்துவிடாலாமென்று நினைத்தேன்...''

ஸுலேமா கேவிக்கொண்டே அவனை இடைமறித்தாள்: ''ஆமாம்; எல்லோரும் இப்படித்தான் ஏதேதோ காரணத்தைச் சொல்லிக்கொண்டு, 'இதோ வந்து விடுகிறேன்' என்று போகிருர்கள். ஆனல் போனவர்கள் திரும்பிவருவதே இல்லை; பிறந்த மண் அவர்களைப் பிடித்து வைத்துக்கொண்டு விடுகிறது.''

''ஆனல் என்னைப் பிடித்து வைத்துக்கொண்டிருக்கும் காந்தமாகிய நீ இங்கே இருக்கையில் என் உடல்தான் அங்கே போய் வருமேயன்றி உயிர் இங்கேதான் இருக்கும் ஸுலே.''

ஸுலேமாவிடமிருந்து நெடுமூச்சு ஒன்று பிரிந்தது. ''இப்படிச் சொல்லிவிட்டுத்தான் ஆறு மாதத்துக் கைகுழந்தையைக்கூட விட்டுவிட்டுப் போனுள் தாரா. அவள் திரும்பிவந்தாளா? திரும்பி வர முடிந்ததா அவளால்?''

''அவள் பெண். தவிர பெற்ருேரும் அங்கே இருந்தனர். ஆனல் என் விஷயம் அப்படியில்லையே. எனக்கு அங்கே யார் இருக்கிருர்கள்?''

ஸுலேமாவுக்கு இன்னும் கணவனின் பேச்சில் நம்பிக்கை பிறக்கவில்லை. அவள் சொன்னுள்: ''எப்படியிருந்தாலும் உங்களை நான் அனுப்ப உடன்படவே மாட்டேன் அமீர். ஆபீஸில் வாக்களித்துவிட்டதற்காகப் போய்த்தான் ஆகவேண்டுமென்ருல், என்னையும் உங்களுடன் அழைத்துச் செல்லுங்கள்.''

மனைவி தன் பிரயாணத்தின் நோக்கத்தை இன்னும் புரிந்து கொள்ளவில்லை என்பதை அமீர் இப்பொழுதுதான் உணர்ந்து கொண்டான். சே! இந்தப் பெண்கள்தான் எவ்வளவு சீக்கிரம் நன்றி மறந்தவர்கள் ஆகிவிடுகிறார்கள்! அன்று அந்தத் தாராவும் இப்படித்தான் நன்றி மறந்தவள் ஆனாள். இன்று இவளும்....

அவன் ஒருகணம் மனைவியின் நெஞ்சைத் துளைத்து விடும்படியாக ஒரு பார்வையைச் செலுத்திவிட்டுச் சொன்னான்: ''நான் இந்தப் பிரயாணத்தை மேற்கொண்டிருப்பதன் நோக்கத்தை நீ புரிந்துகொண்டிருப்பாய் என்று நினைத்தேன் ஸுலே. ஆனால் நீ அதை இன்னும் உணர்ந்து கொள்ளவில்லை. என் அன்புள்ள ஸுலே! நான் இப்பொழுது அங்கே போவது ஆபீஸ் கட்டளையை நிறைவேற்றவோ, அல்லது பிறந்த மண்ணைக் காணவேண்டியோ அல்ல; நம்மை ஆளாக்கி வாழ்வளித்த மாந்தர்குல மாணிக்கத்திற்கு அஞ்சலி செலுத்தத்தான் போகிறேன்.''

அஞ்சலி! கட்டுக்கடங்காமல் படமெடுத்துக் கொட்டவந்த பாம்பு, பிடாரன் கையில் வேர்ப்பையை எடுத்ததுமே கொட்ட மடங்கித் தலை சாய்த்து விடுவதுபோல், தலைகுனிந்தாள் ஸுலைமா: ''யா அல்லா! எனக்கு அது தோன்றவே இல்லையே? போய் வாருங்கள் அமீர்; தாராளமாய்ப் போய் வாருங்கள். லாகூருக்குப் போய் அந்தப் புண்ணியாத்மாவின் 'தர்கா'வின் முன் மண்டியிட்டு அஞ்சலி செலுத்துவதோடு, இந்த அபலையின் அஞ்சலியையும் அவருக்குச் செலுத்துங்கள்; பிறகு அங்கிருந்து அதிக தூரம் இல்லை ஷேக்குப்புரா; அங்கே போய், அந்த நன்றி கெட்ட தாராவைச் சந்தித்து அவள் முகத்தில் காரி உமிழ்ந்து விட்டும் வாருங்கள்'' என்றாள் அவள் இறுதியாக.

தாண்டமுடியாத கோட்டையாய், தகர்க்க முடியாத கற்சுவராய், கணவனின் பிரயாணத்துக்குத் தடைபோட்ட ஸுலைமாவை ஒரு கணத்துக்குள் தாழிடப்படாத கதவாகமாற்றி, தாராளமாகத் திறந்து வழிவிடச் செய்துவிட்டது அந்த அஞ்சலி என்ற மந்திரச்சொல். அதன் மகத்துவம் தான் என்ன? அதனுள்ளே அடங்கியிருந்த மர்மந்தான் என்ன? எந்த மனிதருக்கு அஞ்சலி செலுத்தும் பொருட்டுச் சொந்தக் கணவன் தன்னைப் புறக்கணித்துப் பிறந்த இடத்தில் தங்கிவிட்டாலும் பரவாயில்லை; அவரை அனுப்பித்தான் ஆகவேண்டும் என்று அவள் துணிவு கொண்டாள். இந்த விவரங்களையெல்லாம் தெரிந்து கொள்ளுமுன், ஏன் அவள் இதோ இருக்கும் லாகூருக்குக் கணவனை அனுப்ப இத்தனை பெரிய தடை போட்டாள் என்பதை நாம் அறிந்து கொள்ள வேண்டும்.

அதற்கு முதல்காரணம் இதுதான்; ''ஸுலேமாவின் கணவன் அமீர்கான் லாகூரில் பிறந்தவன். இந்தியா பிளவடைவதற்கு முன் அமிர்தசரஸ்ஸில் இருந்த அவன், பின்னர் தான் பிறந்து வளர்ந்த ஊராகிய லாகூர், பாகிஸ்தானுக்குப் போய்விட்டபடியாலும், அப்பொழுது ஏற்பட்ட கலவரங்களில் தன் பெற்றோர் கொல்லப்பட்டுவிட்டனர் என்று அறிந்தமையாலும் இந்தியாவிலேயே தங்கிவிட்டான். இதுகூடப் பெரிதல்ல; ஆனால் அமீரைப் போல் பாகிஸ்தானில் பிறந்து, நிர்ப்பந்தம் காரணமாக இந்தியப் பிரஜையான பலர், பின்னர் எப்பொழுதாவது பிறந்த பூமிக்குச் சென்றால், அந்த மண்ணின் மணம் அவர்களைக்கவர்ந்து அங்கேயே தங்கிவிடச் செய்ததைக் கண்கூடாகக் கண்டிருந்ததால்தான், ஸுலேமா தன் கணவரும் அப்படிச் செய்துவிடுவாரோ என்று அச்சமுற்றாள்.

அடுத்த காரணம், அப்படி அவர் பிறந்த பூமியில் தங்கிவிட்டால், தன்னை இங்கே ஆதரிக்கயாருமில்லை என்பதும், தனக்குத் தான்பிறந்த சமூகத்தில்கூட இனி இடம் கிடையாது என்பதுமாகும். ஆம்; அவளுடைய கதையே ஒரு சோகக் கதை; ஒரு விந்தைக் கதை.

இன்று அவள் உயிர் வாழ்கிறாள்; காதல்மிக்க கணவனுடன் கருத்தொருமித்து இல்லறம் நடத்துகிறாளென்றால், இந்த வாழ்வையும், இந்த இல்லறத்தையும் அவளுக்குக் கிடைக்கச் செய்தவன்தான், அவளும் அமீரும் இன்று அஞ்சலிசெலுத்த விரும்பிய கேஸர் ஸிங்.

கேஸர் ஸிங்கின் கதையைக்கூற வரும்போது அதைக் காதல் காவியம் என்பதா அல்லது கவினுறும் தியாகச்சித்திரம் என்பதா என்ற ஐயம் ஏற்படுகிறது. ஏனெனில் இந்த இரண்டுமே அவனுடைய வாழ்வில் முக்கிய இடம் பெற்றிருந்தன. ஆயினும் இன்றைய உலகம், கேஸர் ஸிங்கின் தியாகத்தைக் காதலோடு முடிச்சிட்டு அவனுடைய வரலாற்றிற்குக் காதல் மகுடமே சூட்டியிருப்பதால் நாமும் அந்தக் கண் கொண்டே அவன் கதையைப் பார்ப்போம்.

இந்த உலகிலே உண்மைக் காதலுக்காக உயிர்நீத்த உத்தமர்கள் எத்தனையோ பேர். நம் நாட்டில் ஓர் அம்பிகாபதி; மேலை நாட்டில் ஒரு ரோமியோ; அராபிய நாட்டில் ஒரு மஜ்னு. இன்னும் இப்படி எந்த நாட்டுச் சரித்திர ஏட்டைப் புரட்டினாலும் இவர்களைப் போன்ற எத்தனையோ 'காதல் தியாகி'களைக் காணலாம். அவ்வாறே இன்றைய பாரதநாட்டின் சரித்திரம் ஒன்று வருங்காலத்தில் வரையப்படும்போது, அதில் காதல் பகுதிக்கு

மகுடமிடும் ஓவியமாகத் தீட்டப்பட்டிருப்பான் கேஸர் ஸிங் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

கேஸர் ஸிங் என்ற பெயரே அவன் சீக்கியன் என்பதை விளக்கப் போதும்; ஆனால், அவன் ஓர் உண்மையான சீக்கியன் என்பதை விளக்க? அதற்கு அவன் கதையைத் தன் ரத்தத்தினாலே தான் எழுத நேர்ந்தது.

கேஸர் ஸிங் சீக்கிய மதக் கோட்டையான பொற்கோவில் நகரம் அமிர்தசரஸ்ஸில் பிறந்தவன். செல்வச் சிறப்புள்ள குடும்பத்தின் ஒரே வாரிசு. அவனுடைய தந்தை பல்பீர் ஸிங் ஒரு தீவிர மதவாதி. சீக்கிய மத நூலான ‘கிரந்த ஸாஹிப்’ பைக் கரைத்துக் குடித்தவர்; ஆயினும் அதன் சாரத்தை வாழ்வில் கொள்ளாதவர். பாரத நாட்டின் வீரத்துக்கு எடுத்துக்காட்டாக விளங்கும் சீக்கியமதம், மதத்தைக் காக்கத் தோன்றிய மதந்தான். இருந்தாலும் அது போதித்த அன்பையும். பரோபகாரத்தையும் உணராத சிலரும் அம்மதத்தில் இருந்தனர். இடுப்பிலே ‘கிரீ’ பானும், கரத்திலே இரும்பு வளையமும். உடலிலே பிறந்தது முதல் ஒரு தடவைகூட உதிர்க்கப்படாத ரோமமும் கொண்ட சீக்கியர்கள் மதப்பற்று மிக்கவர்கள் என்பது பிரசித்தம். ஆனால், அந்த மதப்பற்று பல்பீர் ஸிங்கைப் போன்ற சிலரிடம் மதவெறியாக மாறியிருந்ததென்றால், அதற்கு அந்த மதம் காரணமல்ல; அவர்களுடைய மனந்தான் காரணம்; ‘உன் மதத்தையும், மானத்தையும் காக்க உயிரையும் கொடு’ என்று ‘கிரந்த ஸாஹிப்’ பில் குறிப்பிட்டிருக்கும் போதனையின் உண்மைப் பொருளை அவர்கள் உணராததே காரணம். ஆம்; ‘மதத்துக்கும் மானத்துக்கும் அழிவு ஏற்படும்போல் இருந்தால் உயிரைக் கொடுத்தாவது அந்த இரண்டையும் காப்பாற்று’ என்று அது கூறியதை அவர்கள் வேறு விதமாக அர்த்தம் செய்து கொண்டார்கள். ஆதிகாலத்தில் முகமதியர்களின் கொடுமைக்கும், அட்டூழியத்துக்கும் ஆளாகியிருந்த காரணத்தால், தங்கள் மதத்தை அழிக்கத் தோன்றியிருப்பவர்களே முகமதியர்கள் என்று அவர்கள் மீது அடங்காத் துவேஷம் கொண்டார்கள் இந்தத் தீவிர மதாபிமானிகள். இதன் காரணமாக எங்கெங்கு எப்படி எப்படியெல்லாம் முடியுமோ அப்படி அப்படியெல்லாம் முகமதியர்களுக்குத் தீங்கு விளைவிப்பதை மதத்தின் பெயரால் தங்கள் கடமையாகக் கொண்டார்கள். இதனால் விளைந்ததுதான் பெரும்பாலான சீக்கிய-முகமதியச் சண்டைகள், ரகளைகள், கலகங்கள் எல்லாம். இத்தகைய மனப்பாங்கு உடையவர்தான் பல்பீர் ஸிங். சைவ உணவுக்காரர்களுக்கு எப்படி மாமிச உணவின் வாடையே அருவருப்பைத் தருமோ, அப்படித்தான் பல்பீர் ஸிங்குக்கும், முகமதியர்களின் வாசனையே உதவாது.

ஆனுல் இதற்கு நேர் எதிராக இருந்தான் அவருடைய மகன் கேஸர் ஸிங். அவனுக்குத் தன் தந்தையைப் போன்ற சிலர், காரணமின்றி முஸ்லீம்களை வெறுப்பதும், அவர்களுக்குத் தீங் கிழைப்பதும் கட்டோடு பிடிக்கவில்லை. ஆனுல், மகன் தந்தை யைத் திருத்த முடியுமா? ஆகையால், தந்தை எப்படி யிருந்தா லும் தன்னைப் பொறுத்தவரை எம்மதமும் சம்மதமாக வாழ்வது ; தன் மதத்தவரால் பகைமை பாராட்டப்படும் முஸ்லிம்களுக்கு இயன்றவரை உதவுவது 'என்று அவன் உறுதி பூண்டான். சிறு பிராயத்திலிருந்தே ஊறி வந்த இந்த மனப்பாங்கு கேஸர் ஸிங் வளர வளர அவனிடம் வளர்ந்து வந்தது, இந்த மாறுபட்ட மனப்போக்கு காரணமாகப் பிற்காலத்தில் தந்தைக்கும், மகனுக் கும் இடையே பெரும் பிளவு ஏற்பட்டிருந்தாலும், ஏற்பட்டிருக் கக்கூடும். ஆனுல் அதைத் தெய்வச் செயல் என்றுதான் சொல்ல வேண்டும் ; கேஸர் ஸிங் பத்தாவது படித்து முடித்ததும் பல்பீர் ஸிங் காலமாகிவிட்டார். தந்தை இறந்ததுமே தான் ஓர் உண்மை சீக்கியன் என்பதை அவன் வெளிப்படையாகச் செயல் மூலம் காட்ட ஆரம்பித்துவிட்டான்.

கேஸர் ஸிங் தினந்தோறும் காலையிலும் மாலையிலும் பொற் கோயிலுக்குப் பிரார்த்தனைக்காகச் செல்வதுண்டு ஒரு நாள் மாலையில் அவன் அவ்வாறு பிரார்த்தனைக்குச் சென்றபோது கோயிலின் முன் பெருங்கூட்டமாக மக்கள் கூடி நின்றதைக் கண் டான். அருகில் சென்று விசாரித்தபோது யாரோ ஒரு முஸ்லிம் இளைஞன் கோயிலுக்குள்ளே புகுந்துவிட்டானென்றும், அவனை வெளியேற்றி அடித்துக் கொண்டிருக்கிருர்கள்என்றும் அறிந்தான். மறு நிமிஷம் அவன் கூட்டத்தை விலக்கிக் கொண்டு உள்ளே பாய்ந்தான். அங்கே சுமார் இருபது வயது மதிக்கத்தக்க முஸ்லிம் இளைஞன் ஒருவனைப் பல சீக்கியர்கள் தாக்கிக் கொண்டிருந்தனர். அவனுடைய ஆடைகள் அலங்கோலமாகக் கிழிக்கப்பட்டிருந்தன. உடலில் பல இடங்களிலிருந்து உதிரம் கொட்டிக்கொண்டிருந்தது. இந்தக் காட்சி கேஸர் ஸிங்கின் கண்களில் கண்ணீர் பெருக் கெடுக்கச் செய்தது. அந்த இளைஞனை அடித்துக் கொண்டிருந் தவர்களை அவன் வெறியோடு அப்பால் பிடித்துத் தள்ளினுன். பிறகு முகத்திலே அனல் பரக்க " நீங்கள் மனிதர்களா? காட்டு மிராண்டிகளா? எதற்காக இப்படி ஓர் அந்நியனை அடிக்கிறீர்கள்? அப்படி அவன் என்ன தவறு செய்துவிட்டான்? நம் கோயிலில் அவன் நுழைந்து விட்டதால் என்ன கெட்டுப் போய்விட்டது? அங்கிருக்கும் தெய்வம் ஓடிப் போய்விட்டதா? பொற்கோயில் பித்தளைக் கோயிலாக மாறிவிட்டதா? இதுதான் நமது புனித சீக்கிய மதம் போதிக்கும் நீதியா?" என்று பலவாறு கண்டித்துப் பேசிவிட்டு, அந்த இளைஞனை எழுப்பித் தன் வீட்டுக்கு அழைத்துச் சென்ருன். அவனுடைய காயங்களுக்கு மருந்திட்டு அவனுக்கு

வேறு உடையும், உண்ண உணவும் அளித்து, அவன் யார், எந்த் ஊர் என்ற விவரங்களை விசாரித்தான்.

இன்று ஸுலைமாவின் கணவனாக விளங்கும் அமீர்கான்தான் அந்த இளைஞன். சொந்த ஊரில் பத்தாவது வரையில் படித்த பிறகு அவன் டில்லிக்குச் சென்று ஏதாவது வேலை தேடிக்கொள்ள லாமென்று புறப்பட்டான். அவனுக்கு நெடுங்காலமாகவே அமிர்தசரஸ்ஸிலுள்ள உலகப் புகழ்பெற்ற பொற்கோயிலைக் காண வேண்டுமென்று ஆசை. ஆகையால் லாகூரை விட்டுக் கிளம்பிய அவன் முதலில் அமிர்தசரஸ்ஸுக்குச் சென்றுவிட்டுப் பிறகு டில்லிக்குப் போகலாமென்று இங்கே வந்தான். அந்தக் கோயிலின் பிரும்மாண்டமான அமைப்பிலும், அதன் பொன்னாலான கோபுரத்தின் பேரொளியிலும் மனதைப் பறிகொடுத்து விட்ட அவன், தான் ஒரு முஸ்லிம் என்பதையே மறந்து மளமளவென்று உள்ளே வந்துவிட்டான். முஸ்லிம்களைக் காணவே சகிக்காதவர் களுக்கு அவர்களில் ஒருவன் தங்கள் கோயிலுக்குள்ளே வந்து விட்டால் ஆத்திரம் ஏற்படக் கேட்கவா வேண்டும்? அன்று கேஸர் ஸிங் மாத்திரம் தக்க சமயத்தில் வந்து காப்பாற்றியிராவிட்டால், அமீர் அல்லாவின் திருவடி நிழலை அடைந்திருப்பான்.

அமீரின் காயங்கள் ஆறும் வரை அவனைத் தன்னுடன் வைத்திருந்து, பின்னர் அவனை டில்லிக்கு அனுப்பிவிடலாமென்று தான் கேஸர் ஸிங் நினைத்திருந்தான். ஆனால் அந்தத் தீர்மானத் தை உடனே மாற்றிக்கொள்ளும்படி செய்து விட்டார்கள் அமிர்த சரஸ்ஸிலிருந்த சில தீவிர மதாபிமானிகள். அன்றிரவு அவர் களில் சிலர் கேஸர் ஸிங்கின் வீட்டுக்கு வந்தார்கள். அவனைத் தனியே கூட்டிச் சென்று தங்கள் மதத்தின் விரோதியான ஒருவனை அவன் காப்பாற்றிப் புகலளித்திருப்பது மதத்தையே அவமதிப்ப தாகும் என்று குறை கூறினார்கள். அவனை உடனடியாக வீட்டை விட்டு விரட்டிவிட வேண்டுமென்று நயத்திலும் பயத்திலும் கேட்டுக் கொண்டார்கள்.

"விரட்டாவிட்டால்?" என்று நிமிர்ந்து நின்று கேட்டான் கேஸர் ஸிங்.

"உன்னை மதவிரோதியாகக் கருதுவோம்" என்றார் வந்திருந் தவர்களில் ஒருவர்.

"சீக்கிய மதம் இம்மாதிரி ஒரு பிழையும் அறியாத பிற மதத்தவர் ஒருவனைத் தண்டிக்கும்படி போதிப்பதாக இருந்தால், நான் அந்த மதத்தின் விரோதியாக இருப்பதையே விரும்பு கிறேன்" என்று கூறி அவர்களை விரட்டியடித்துவிட்டான் அவன்.

இதன் பலன் மறுநாள் வெளியாயிற்று. கேஸர் ஸிங்குக்கு அவ்வூரில் ஒரு கடை உண்டு. 'குரு நானக் எம்போரியம்' என்ற

அந்தக் கடை அவனுடைய பாட்டனார் காலத்திலிருந்து சுமார் அறுபது ஆண்டுகளாக நடந்து வந்தது. நூற்றைம்பது சிப்பந்திகள் வேலை செய்து வந்த பெரிய கடை அது. அன்று காலையில் வழக்கம்போல் பத்து மணி சுமாருக்குக் கடைக்குச் சென்றான் கேஸர் ஸிங். ஆனால் சிப்பந்திகள் இன்னும் கடையைத் திறக்காமல் வெளியே கூட்டமாக உட்கார்ந்திருந்ததைக் கண்டு அவன் திகைப்படைந்தான். அவர்களிடம் சென்று, ''என்ன நேர்ந்துவிட்டது ? ஏன் எல்லோரும் வெளியே உட்கார்ந்திருக்கிறீர்கள் ?'' என்று அவன் பரபரப்போடு கேட்டான். அவர்கள் கூறிய காரணம் அவனைத் திடுக்கிட வைத்ததோடு மட்டுமல்ல ; கடுங் கோபத்துக்கும் உள்ளாக்கிற்று. மத எதிரி ஒருவனுக்கு ஊர்ப் பிரமுகர்கள் விருப்பத்துக்கு மாறாக அவன் புகலளித்திருக்கிறானும்; அவனை வெளியே அடித்துத் துரத்தும் வரையில் அவர்கள் இந்தக் கடைக்குள்ளே சென்று வேலை செய்ய மாட்டார்களாம்.

கேஸர் ஸிங் அவர்களுக்குப் பதிலேதும் கூறவில்லை. கடைச் சாவிகளை வாங்கிக் கடையைத் திறந்தான். உள்ளே சென்று பணப்பெட்டியை எடுத்து வந்து சிப்பந்திகள் அனைவருக்கும் சேர வேண்டிய சம்பளப் பாக்கியை எண்ணிக் கொடுத்தான். ''மத விரோதி ஒருவனுக்கு இடமளித்துள்ள நானும் ஒரு மத விரோதிதான் ; ஆகையால், நீங்கள் இனி என்னிடம் வேலை செய்யக் கூடாது ; போய் வாருங்கள்'' என்று கூறிவிட்டுக் கடையை இழுத்துப் பூட்டிக் கொண்டு வீட்டுக்குச் சென்றான். அவன் உடனே டில்லியில் வியாபாரத் தொடர்புடைய ஒருவருக்கு டெலிபோன் செய்து அங்கிருந்து தன் கடைக்குத் தேவையான சிப்பந்திகளை முஸ்லீம்களாகவே தேர்ந்தெடுத்து, குடும்பத்துடன் அனுப்ப ஏற்பாடு செய்தான். தங்கள் இனத்தவர் ஏதேனும் கலகம் செய்வார்களோ என அஞ்சிய அவன் முன்னெச்சரிக்கையாக போலீஸ் பந்தோபஸ்த்துக்கு ஏற்பாடு செய்துவிட்டான். ஆம்; இந்த முன்னெச்சரிக்கையை எடுத்திராவிட்டால், அவனுடைய இந்தத் துணிகரச் செயல் அமிர்தசரஸ்ஸில் ஒரு பெரிய வகுப்புவாதக் கலகத்தையே ஏற்படுத்தியிருக்கும். ஆனால் இப்பொழுது சட்டத்தின் முன் வாலாட்ட முடியாமல் மத வெறியர்கள் அடங்கிப் போய்விட்டார்கள். சில நாட்களில் எல்லாம் சரியாகப் போய்விட்டது. கேஸர் ஸிங் இப்பொழுது தன்னால் காப்பாற்றப்பட்ட அமீர்கானுக்கு வியாபாரத்தில் பயிற்சியளித்து எம்போரியத்தின் மானேஜராகவும், தன் அந்தரங்கச் செயலாளனாகவும் ஆக்கிக் கொண்டான்.

## 3

இது நடந்த மறு ஆண்டில் இந்தியா சுதந்திரம் அடைந்தது. அந்தச் சுதந்திரம் நாட்டை இரு கூறுகளாக வெட்டிவிட்டதால்,

வெட்டுண்ட இடத்திலிருந்து கொட்டும் ரத்தம் போல் இந்தியாவிலும், பாகிஸ்தானிலும் ரத்தக் களறியான அமளிகள் தோன்றின. அப்பொழுது இரு தரப்பிலும் நடந்த அட்டூழியங்களையும், அராஜகச் செயல்களையும் யார்தான் அறிய மாட்டார்கள்? அமிர்தசரஸ்ஸிலும் அதன் எதிரொலி ஏற்படாமல் போகவில்லை. ஆனால் இதை எதிர்பார்த்த கேஸர் ஸிங், இந்திய-பாகிஸ்தான் எல்லையில் கலகம் தொடங்கியதுமே தன் கடையை மூடிவிட்டு, அமீர்கானையும், இதர சிப்பந்திகளையும் டில்லிக்கு அனுப்பிவிட்டான். கிட்டத்தட்ட ஆறு மாத காலத்துக்கு அவன் அவர்களுக்கு வேலையின்றியே சம்பளம் கொடுத்துக் காப்பாற்றி வந்தான். அமளியெல்லாம் அடங்கி, அமிர்தசரஸ் அமைதியடைந்த பிறகே அவர்களை அங்கே திருப்பி அழைத்துக் கொண்டான்.

அமிர்தசரஸ்ஸுக்கு அவர்கள் வந்த அன்று மாலையில், கேஸர் ஸிங் அமீரைத் தன் காரில் ஏற்றிக்கொண்டு, நகரத்தின் ஒதுக்கமான பகுதி ஒன்றின் முன்பு அவனுடைய கடையின் கிடங்காக உபயோகிக்கப்பட்டு வந்த கட்டிடத்துக்கு அழைத்துச் சென்றான். அங்கே ஏழெட்டு இளம் பெண்கள் பாதுகாப்பில் வைக்கப்பட்டிருந்ததைக் கண்டு அமீர் திடுக்கிட்டான். அவன் திடுக்கிட்டதற்குக் காரணம் இருந்தது. பிரிவினைக் கலவரங்களின் போது நடந்த அட்டூழியங்களில் ஒன்று, ஹிந்துக்கள் முஸ்லீம் பெண்களையும், முஸ்லீம்கள் ஹிந்துப் பெண்களையும் கடத்திச் சென்று, அவர்களை ஆடு-மாடுகளை ஏலம் போடுவதுபோல் காமுகர்களுக்கு விற்பனை செய்து வந்ததாகும். இப்பொழுது இங்கே அம்மாதிரிச் சில பெண்கள் இரகசியமாக வைக்கப்பட்டிருந்ததைக் கண்டதும், தன் எஜமானரும் அந்தக் கொடூரமான பணியில் இறங்கிவிட்டாரோ என்ற சந்தேகம் அமீரின் மனசில் எழுந்து அவனை வாட்டி எடுத்தது.

ஆனால் அந்தச் சந்தேகத்தைக் கேஸர் ஸிங் வளரவிடவில்லை. "என்ன அமீர், திகைத்துப் போய் நின்று விட்டாய்?" என்று சிரித்துக் கொண்டே வினவிய அவன் தொடர்ந்து விஷயத்தை விளக்கினான். இந்தப் பெண்கள் அனைவரும், கேஸர் ஸிங்கினால் தலா மூவாயிரம், நாலாயிரம் ரூபாய்க்கு ஏலத்தில் எடுக்கப்பட்டவர்கள்தாம். ஆனால், மற்றவர்களைப்போல் தனது காமப் பசிக்கு உணவாக்கிக்கொள்ள அவன் இவர்களை ஏலத்தில் எடுக்கவில்லை. பெற்றோர்-சுற்றத்தாரைப் பிரிந்து, கற்பை இழந்து நிற்கும் இந்த அபலைகள், கண்ட காமுகர்களால் விலைக்கு வாங்கப்பட்டு மேலும் சீரழிக்கப்படுவதைத் தடுக்கத் தானே அவர்களை விலை கொடுத்து வாங்கிக் காப்பாற்றி வந்தான். கொந்தளிப்பு முழுவதும் அடங்கியதும் அவர்கள் எந்த ஊரைச் சேர்ந்தவர்கள் என்பதை விசாரித்து, உரியவர்களிடம் ஒப்படைத்துவிடவேண்

டும் என்பதே, கேஸர் ஸிங்கின் நோக்கம். மதவெறியர்கள் தன் இந்த நோக்கத்தையும் நிறைவேற விடாமல் செய்து விடுவார்களோ என்று அஞ்சியே அவன் இவர்களை இரகசியமான இடத்தில் வைத்து உணவும் உடையும் கொடுத்து இவ்வளவு நாட்களாகப் பாதுகாத்து வந்தான்.

கேஸர் ஸிங் இந்த விவரங்களையெல்லாம் அமீருக்கு விளக்கிவிட்டு, "அமீர்! இப்பொழுது அமளியெல்லாம் ஒருவாறு அடங்கிவிட்டது. பாவம், இந்தப் பெண்கள் எந்த இடத்தைச் சார்ந்தவர்களோ? இவர்களைப் பார்த்தால் பெரும்பாலும் முஸ்லிம் பெண்களாகவே இருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. ஆதலால், முஸ்லிமான உன்னிடமே இவர்களை ஒப்படைக்கிறேன். நீ இவர்கள் ஒவ்வொருவரையும் தனித் தனியே கூப்பிட்டுப் பேசி, இவர்களுடைய பெற்றோர்-உற்றோர் விலாசம் அறிந்து அவர்களிடம் கொண்டு சேர்க்க வேண்டும். இதற்காக எவ்வளவு பணம் தேவையானாலும் என்னிடமிருந்து பெற்றுக்கொள்ளலாம். இந்த வேலை முடியும்வரை இதுதான் உன் ஆபீஸ்; இதுதான் உன் வீடு" என்று கூறிவிட்டு வந்தான்.

கேஸர் ஸிங்கின் உயர்வான மனிதத் தன்மையை நினைத்து நினைத்து வியந்தான் அமீர். எஜமானரின் கட்டளைப்படி அவன் அன்றுதொட்டு அந்தக் கிடங்கையே தன் இருப்பிடமாக்கிக் கொண்டான். மெல்ல மெல்ல ஒவ்வொரு பெண்ணுகைச் சந்தித்துப்பேசி, அவர்கள் மனத்திலிருந்த கிலியைப் போக்கி, அவர்களுடைய ஊரும் சுற்றமும் அறிந்து அங்கே கூட்டிச்சென்று உரியவர்களிடம் ஒப்படைத்தான். கடைசியில் இரண்டே இரண்டு பெண்கள்தான் பாக்கி. அவர்களில் ஒருத்தி ரோஷனாரா என்ற முஸ்லிம் பெண். மற்றொருத்தி குமுத் என்ற ஹிந்துப் பெண். இவர்கள் இருவரும் தங்கள் சொந்தக்காரர்கள் யார் என்பதையோ, ஊர் எது என்பதையோ அறிவிக்க மறுத்துவிட்டனர். "நாங்கள் கறைப்பட்டு விட்டோம். எங்கள் கறையைக் குடும்பத்தின் மீதும் தீட்டமாட்டோம். தயவு செய்து, எங்களை வெளியே விட்டுவிடுங்கள். எங்கேயாவது குளம், குட்டை பார்த்து விழுந்து எங்கள் மாசு படிந்த உடலை அழித்துக் கொள்ளுகிறோம்" என்று அவர்கள் கூறினர். அமீர் எவ்வளவு கெஞ்சியும், அவர்கள் தங்கள் முடிவை மாற்றிக்கொள்ள இணங்காததால், அவன் கேஸர் ஸிங்கிடம் விஷயத்தைச் சொல்லி, "நீங்களே வந்து அவர்களுடைய மனசை மாற்ற முடியுமா பாருங்கள்" என்று கேட்டுக் கொண்டான்.

கேஸர் ஸிங் வந்தான். ஆனால், அவனிடமும் அப்பெண்கள் எந்த விவரத்தையும் அறிவிக்க மறுத்துவிட்டனர். "நாங்கள்

சாகத்தான் வேண்டும்; சாகத்தான் வேண்டும்; என்ற பல்லவியையே திருப்பித் திருப்பிப் பாடினர்.

"இதோ பாருங்கள், அம்மா; நீங்கள் மனமறிந்து பிழை செய்திருந்தால் சாவை நாடுவது சரிதான். ஆனல் சமூகமே தலைகுப்புறப் புரண்ட நிலையில் நீங்கள் மாசுபடுத்தப்பட்டிருக்கிறீர்கள். ஆகையால் இது உங்கள் பிழையாகாது. இருந்தாலும் உங்களுக்கு மீண்டும் குடும்பத்தாருடன் கலக்கப் பிரியமில்லாவிட்டால், உங்களை மகிழ்வோடு மனைவியாக ஏற்றுக் குடும்பம் நடத்தக் கூடியவர்களைத் தேடி நான் மணம் செய்து கொடுக்கிறேன். இதற்காவது நீங்கள் இணங்கத்தான் வேண்டும்" என்று கேஸர் ஸிங் அவர்களிடம் அன்போடு வேண்டிக்கொண்டான்.

கேஸர் ஸிங்கின் வேண்டுகோளில் தொனித்த ஆத்மார்த்தமும் அன்பும், அந்தப் பெண்களின் உள்ளத்தைத் தொட்டிருக்க வேண்டும். ரோஷனரா என்ற பெண் கேட்டாள்: "உலகறிய மானபங்கப்படுத்தப்பட்ட எங்களை, அடிமைகளாக நடுத் தெருவில் விலை கூறப்பட்ட எங்களை, யார்தான் மனமுவந்து மணம் செய்து கொள்வார்கள், ஐயா? அப்படி யாரேனும் மணம் செய்து கொண்டாலும், பிற்காலத்தில் அவர்கள் எங்களின் மாசைச் சுட்டிக் காட்டிக் கொடுமைப்படுத்த மாட்டார்கள் என்பது என்ன நிச்சயம்?"

"அதற்கு நான் உறுதியளிக்கிறேன், அம்மா. என்மீது உங்களுக்கு நம்பிக்கை இல்லையா? நீங்கள் நன்ருக வாழ வேண்டும் என்ற ஒரே குறிக்கோளுடன் விலைக்கு வாங்கி, உற்ருரிடம் ஒப்படைக்கத் தயாராயிருக்கும் நான், பிற்காலத்தில் உதறிவிடக் கூடியவர்களிடம் உங்களை ஒப்படைப்பேனு?"

இதற்கு குமுத் பதிலளித்தாள்: "உங்களை நாங்கள் நம்புகிறோம், ஐயா, இதோ இருக்கிருரே, இவரையும் நம்புகிறோம். நாங்கள் இங்கே கிட்டத்தட்ட மூன்று மாத காலம் இருந்தோம். உங்கள் நண்பரிடம் ஒப்படைக்கப்பட்டும் ஒரு மாதம் வாழ்ந்து விட்டோம். நீங்கள் விரும்பியிருந்தால் இச்சமயத்தில் எங்களை என்ன வேண்டுமானுலும் செய்திருக்க முடியும். ஆனல், நீங்கள் எங்களைச் சொந்தச் சகோதரிகளாக நடத்தி வந்திருக்கிறீர்கள். ஆகையால், உங்களை நாங்கள் பரிபூர்ணமாக நம்புகிறோம். ஆனல், இந்த உலகில் இனி எங்களுக்கு வேறு எந்த ஆண்மகனிடமும் நம்பிக்கைக் கிடையாது."

கேஸர் ஸிங் சிறிது நேரம் அந்தப் பெண்களின் முகத்தைப் பார்த்துக்கொண்டே சிந்தனை செய்தான். பிறகு ஏதோ ஒரு

தீர்மானத்துக்கு வந்து விட்டவன்போல், ''எங்கள் மீதாவது உங்களுக்குத் தளரா நம்பிக்கை இருக்கிறதா?'' என்று கேட்டான்.

''ஆம் நீங்கள் செயல் மூலம் அதற்கு ருசுத் தந்திருக்கிறீர்கள்'' என்றுள் ரோஷனுரா.

''அப்படியானுல் நாங்களே உங்களை மணந்து கொள்ளுகிருேம்; சம்மதமா?''

அப்பெண்கள் திடுக்கிட்டனர். இதை அவர்கள் கனவில்கூட கருதியிருக்கவில்லை. ''ஐயா! உங்களைப் போன்ற உத்தமர்களுக்கு உயர்குலத்துப் பெண்களில் எத்தனையோ பேர் மனைவியாக வரக் காத்திருப்பார்கள். எதற்காக எச்சில் பாண்டங்களான எங்களை நீங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும்?'' என்று குமுத் கேட்டாள்.

"எதற்காக என்றுல், உங்களுக்கு வாழ்வளிப்பதற்காகத்தான்; நான் மேற்கொண்ட கடமையை நிறைவேற்றத்தான்'' என்று பளிச்சென்று பதிலளித்த கேஸர் ஸிங் தொடர்ந்து சொன்னுன்: ''இது ஏதடா இவன் நல்லவன் மாதிரிப் பேசினுன்; இப்பொழுது விலைக்கு வாங்கிய பெண்களிடம் மற்றவர்கள் நடந்து கொள்ளுவதுபோலவே நடந்துகொள்ளத் தலைப்பட்டுவிட்டானே என்று நினைக்காதீர்கள். என்னுடைய நோக்கம், செய்யாத பிழைக்காக நீங்கள் உயிர்விடக் கூடாது என்பதுதான். எங்கேயாவது நீங்கள் மறு வாழ்வு பெற்று க்ஷேமமாக வாழ வேண்டும் என்பதுதான். ஆகையால், உங்களுக்கு எங்களையும் மணந்து கொள்ளத் தயக்கமாக இருந்தால், அவசியம் உங்களுடைய உற்றுர்-உறவினர் விலாசத்தையாவது கூறத்தான் வேண்டும். அவர்களிடம் உங்களைச் சேர்த்துவிட்டு நாங்கள் எங்கள் கடமையை முடித்துக் கொள்ளுகிருேம்.''

விஷயத்தை வளர்த்துவானேன். அந்தப் பெண்கள் இறுதியில் அவர்களை மணக்க உடன்பட்டனர். சீக்கியனுன கேஸர் ஸிங், முஸ்லிம் பெண்ணையும், முஸ்லிமான அமீர் ஹிந்துப் பெண்ணையும் ஏற்று, அவர்களைத் தங்கள் தங்கள் மதத்துக்கு மாற்றி, உரிய மதச்சடங்குகளுடன் மணம் செய்து கொண்டனர். ரோஷனுரா தாராவானுள். குமுத் ஸுலைமாவானுள்.

கடத்தி வரப்பட்ட பெண்களிடம் எப்படி நடந்து கொள்ளுவது மனிதத் தன்மை என்பதை உலகுக்கு எடுத்துக் காட்டினுன் கேஸர் ஸிங். தான் காட்டியது மாத்திரமல்ல; தன்னை அண்டி தன் வழி நடந்து வந்த அமீரையும் காட்டச் செய்தான். அவர்கள் இருவரும் மனைவியைப் பூவெனப் போற்றி, இல்லற வாழ்க்

கையை இன்பப் புனலாக்கி அதிலே நீந்தித் திளைத்தனர். மண மான மறு வருஷமே தாரா கணவனுக்குத் தங்கப் பதுமையென ஒரு பெண் குழந்தையை அளித்தாள். மொத்தத்தில் புரட்சிகர மான முறையில் ஒன்றுபட்ட இத்தம்பதிகளின் வாழ்விலே இன்பம் நாளுக்கு நாள் பெருகிற்றேயன்றிக் குறையவில்லை.

ஆனால், விதி அரக்கனுக்குத்தான் மனிதரின் வாழ்க்கையில் விபரீத விளையாட்டு விளையாடாவிட்டால் பொழுது போகாதே. தாரா கமலை ஈன்றெடுத்த ஆறுவது மாதத்தில் அவர்களுடைய இன்ப வாழ்வில் சைத்தான் புகுந்தான்.

பிரிவினை அமளியெல்லாம் ஒருவாறு ஓய்ந்த பிறகு, இந்தியா வும், பாகிஸ்தானும் அகதிகள் பரிவர்த்தனை, கடத்தப்பட்ட பெண்களை மீட்டல் போன்ற நற்காரியங்களைச் செய்ய ஓர் உடன் பாட்டுக்கு வந்தன. இப்பணிகளில் இரு அரசாங்கங்களின் போலீசும் தீவிரமாக ஈடுபட்டன.

திடீரென்று ஒருநாள் கேஸர் ஸிங்கின் வீட்டுக்குச் சில போலீசார் வந்தனர். அவனுடைய மனைவியாக வாழும் தாரா, ரோஷனாரா என்ற முஸ்லிம் பெண் என்றும், அவளுடைய பெற்றோர் லாகூருக்கு அருகில் உள்ள ஷேக்குப்புரா என்றகிராமத் தில் உயிரோடு இருக்கிறார்கள் என்றும், அவர்களிடம் தாராவை ஒப்படைக்க அழைத்துச் செல்லப் போவதாகவும் அறிவித்தனர்.

கேஸர் ஸிங்கும், தாராவும் இதைக் கேட்டு அதிர்ச்சியடைந் தனர். தாங்கள் முறைப்படி மணம் செய்துகொண்டு கணவன்-மனைவியாக வாழ்ந்து வருவதையும், ஒரு குழந்தைக்குப் பெற்றோராகியிருப்பதையும் அவர்கள் அறிவித்தனர். தாரா ஒருபடி மேலேசென்று தான் பெற்றோரிடம் திரும்பிச் செல்ல விரும்பவில்லை என்றுகூடக் கூறினாள். "எங்கள் நிம்மதியான இல்லற வாழ்வைத் தகர்க்காதீர்கள்" என்று அவள் கதறினாள்.

ஆனால் போலீஸ் அதிகாரிகளுக்கு அவளைக் கேஸர் ஸிங்கிடமே விட்டுச் செல்ல அதிகாரம் இல்லையே! அவர்கள் அதை அவ னுக்கு எடுத்துச் சொல்லி, "உங்களுடைய கேஸ் சற்று விசித் திரமானதுதான். இருந்தாலும், நாங்கள் முறைப்படி தாராவை அவள் பெற்றோரிடம் சேர்த்துத்தான் ஆக வேண்டும். ஒப்ப டைத்துவிட்ட பிறகு வேண்டுமானால் அவள் தன் பெற்றோரின் அனுமதி பெற்று உங்களிடம் திரும்பி வந்து சேர்ந்து கொள்ளட் டும்" என்று கூறினர்.

தாராவைப் பெற்றோரிடம் போக விட்டால் அவர்கள் அவ ளைத் திருப்பி அனுப்புவார்களோ மாட்டார்களோ, என்று கலங்கி னான் கேஸர் ஸிங். ஆனால், போலீஸார் தன்னை எப்படியும்

கொண்டு சென்றே தீருவார்கள் என்ற நிலை ஏற்பட்டுவிட்டதால், தாரா கணவனுக்கு ஆறுதல் கூறினுள். '' கவலைப்படாதீர்கள்: என் உயிராகிய நீங்கள் இங்கே இருக்கையில், என் உடலை அவர்கள் அங்கே கட்டி வைத்துவிட முடியாது. இவர்கள் என்னைப் பெற்றோர்களிடம் ஒப்படைத்ததும், அவர்கள் சம்மதம் அளித்தாலும் அளிக்காவிட்டாலும், நான் இங்கே புறப்பட்டு வந்துவிடுவேன் '' எனப் பலவாறு எடுத்துச் சொல்லிவிட்டுப் போலீஸாருடன் புறப்பட்டுச் சென்ருள். ஆறு மாதத்துக் குழந்தையான கமலைக்கூட அவள் தன்னுடன் எடுத்துச் செல்லவில்லை. '' கமல் உங்களிடமே இருக்கட்டும்: அவளைப் பிரிந்திருக்கும் ஒவ்வொரு கணமும், எனக்கு நரக வேதனையாகவே இருக்குமாதலால், நான் விரைவில் இங்கே திரும்பி வர, அவள் உங்களிடம் இருப்பது ஒரு தூண்டுகோலாக இருக்கும் '' என்று கூறி, குழந்தையை விட்டுவிட்டே சென்ருள். ஆனுல்—

அன்று போனவள்தான் தாரா; அதன் பிறகு அவள் திரும்பி வரவும் இல்லை; அவளிடமிருந்து எவ்விதத் தகவலும் கேஸர் ஸிங்கிற்குக் கிடைக்கவில்லை. அவன் அவளுக்குக் கடிதத்தின் மேல் கடிதம் எழுதினுன்: தந்திகள் அனுப்பினுன். எல்லாம் கிணற்றில் எறிந்த கற்களாகவே போயின. நாட்கள் வாரங்களாகி, வாரங்கள் மாதங்களும் ஆகிவிட்டன. ஆனுல் தாரா எங்கே? அவள் ஏன் திரும்பி வரவில்லை? ஏன் கணவனின் கடிதங்கள் ஒன்றுக்குக்கூடப் பதில் எழுதவில்லை?

நல்ல வேளையாகக் குழந்தையைப் பற்றிய கவலை கேஸர் ஸிங்குக்கு இருக்கவில்லை. தங்களுக்குக் குழந்தை பிறக்கவில்லையே என்று ஏங்கிக் கொண்டிருந்த அமீரும், ஸுலைமாவும் கமலைக் கண்ணென வளர்த்து வந்தனர். ஸுலைமாவிடம் தாயன்பைப் பெற்று வந்ததால், கமலும் தாய்க்காக ஏங்கவில்லை: ஆனுல் கேஸர் ஸிங் மனைவிக்காக ஏங்கினுன். ஏங்கி ஏங்கி உருகினுன். அவன் கடமைக்காகவே, தற்கொலை செய்து கொள்வதினின்றும் தடுப்பதற்காகவே, தாராவை மணந்து கொண்டான். எனினும் மணந்து கொண்ட பிறகு அவனுக்கு அவளிடம் ஒருவிதத் தெய்விகக் காதலே ஏற்பட்டுவிட்டது. அந்தக் காதல் இப்பொழுது அவனைத் தகித்தது. தாராவை அவளுடைய பெற்றோர் தாம் தடுத்து நிறுத்திக் கொண்டிருக்க வேண்டுமென்று அவன் திடமாக நம்பினுன். அவளை இங்கே திரும்பி வரச் செய்ய வேறு ஏதேனும் வழியுண்டா என்பதை அறியப் பலரைக் கலந்து ஆலோசித்தான்: ஆனுல் அந்த ஆலோசனைகளோ அதற்குரிய சாத்தியக் கூறுகள் எதையும் காட்டாததோடு, அவனுடைய மனம் உடையும்படியான செய்தி ஒன்றையும் அளித்தன. இம்மாதிரி அகதிகள் பரிவர்த்தனை மூலமும், கடத்தப்பட்ட பெண்களின் மீட்சி மூலமும்

பாகிஸ்தானுக்கும், இந்தியாவுக்கும் திரும்பியவர்களை இரு அரசாங்கங்களும் தங்கள் நாட்டை விட்டு வெளியேற அனுமதிப்பதில்லை என்ற விவரம்தெரிந்த பிறகு கேஸர் ஸிங் ஒரேடியாக இடிந்துபோய்விட்டான்.

எப்படியிருந்தாலும் தாராவின்றி இனித் தன்னால் வாழ முடியாது என்று தோன்றிவிட்டது அவனுக்கு. ஆகையால், குழந்தையுடன் பாகிஸ்தானுக்குப் புறப்பட்டுச் சென்று அங்கேயே நிரந்தரமாகத் தங்கிவிடுவது என்று தீர்மானித்தான். ஆனால் அப்படிச் சென்றாலும் சீக்கியனான தன்னுடன் தங்கள் மகள் சேர்ந்து வாழத் தாராவின் பெற்றோர் மறுத்துவிடுவார்களோ என்று அவன் இங்கேயே முஸ்லீம் மதத்தைத் தழுவி அப்துல் ஜாபர் என்ற பெயர் பூண்டான். தன் கடையையும், இதர சொத்துக்களையும் விற்றுப் பணமாக்கிக் கொண்டான். உயிர் நண்பனாகவும், உற்ற துணைவனாகவும் விளங்கிய அமீரிடம் விடை பெற்றுக் கொண்டு, உரிய அனுமதிச்சீட்டுகளுடனும், ஒன்றரை வயதுக் குழந்தை கமலுடனும் ஒருநாள் லாகூருக்குப் பயணமானான்.

அமிர்தசரஸ்ஸில் அமீரும், ஸுலேமாவும், கேஸர் ஸிங்கின் தெய்விகக் காதல் வெற்றி பெற வேண்டுமென்றும், அவனும் தாராவும் மீண்டும் ஒன்றுகூடி ஆனந்தமாக வாழ வேண்டுமென்றும் அல்லாவை இடைவிடாது தொழுது வந்தனர். ஆனால் கேஸர் ஸிங்கின் தெய்விகக் காதல் வெற்றி பெற்றதா? அவனும் தாராவும் மீண்டும் ஒன்று கூடினரா?

கேஸர் ஸிங் லாகூர் சென்று ஒரு வாரம் ஆன பின் ஒருநாள் காலையில் பத்திரிகை படித்துக் கொண்டிருந்தான் அமீர். அதில் வெளியாகியிருந்த ஒரு செய்தியைப் படித்ததும், அவன், "ஐயோ!" என்று அலறிவிட்டான். அந்தச் செய்தி இதுதான்:

லாகூரில் சீக்கியனின் தற்கொலை:

உண்மையான காதலை நிரூபிக்க உயிரையே கொடுத்தான்:

லாகூர், மார்ச்சு, 8—ஆயிரக்கணக்கான லாகூர் வாசிகள் 'ஜனஸா'வில் கலந்து கொள்ள, இன்று மாலை இங்குள்ள மியானி ஸாஹிப் தர்காவில் அப்துல் ஜாபர் என்ற கேஸர் ஸிங்கின் சடலம் அடக்கம் செய்யப்பட்டது.

முப்பது வயதுகூட நிரம்பாத கேஸர் ஸிங் இன்று அதிகாலையில் தன் ஒன்றரை வயதுப் பெண் குழந்தையுடன் ஓடும் ரெயிலில் பாய்ந்துவிட்டான். காதலி தன்னையும், குழந்தையையும் நிராகரித்ததே தங்களது தற்கொலைக்குக் காரணம் என்று அவனிடம் அகப்பட்ட கடிதம் அறிவித்தது.

கேஸர் ஸிங் அமிர்தசரஸ்ஸைச் சேர்ந்தவன்; பிரிவினை அமளியில் கடத்தி வரப்பட்ட ரோஷனாரா என்ற பெண்ணுக்கு வாழ்வளிப்பதற்காக, அவளைச் சீக்கிய மதத்தைத் தழுவச் செய்து தாரா என்று பெயர் மாற்றி முறைப்படி மணம் செய்து கொண்டான். அவர்களுக்குக் கமல் என்று ஒரு பெண் குழந்தையும் பிறந்தது.

இச்சமயத்தில் ரோஷனாரா கடத்தி வரப்பட்ட பெண் என்பதை அறிந்து இந்தியப் போலீஸார் அவளைக் கேஸர் ஸிங்கிடமிருந்து பிரித்து லாகூருக்கு அருகில் உள்ள ஷேக்குப்புராவில் வசித்து வந்த பெற்றோரிடம் அனுப்பிவிட்டனர்.

மனைவியைப் பிரிந்த கேஸர் ஸிங் வாழ்வையே இழந்து விட்டவன்போல் ஆனான். அவள் திரும்பி வருவதற்கு எவ்வித சாத்தியக் கூறுகளும் இல்லாமையால், தானும் இஸ்லாமிய மதத்தைத் தழுவி அப்துல் ஜாபர் எனப் பெயர் பூண்டு, சொத்து சொம்புகளை விற்று எடுத்துக்கொண்டு, குழந்தையுடன் மனைவியை நாடி வந்தான்.

ஆனால் ரோஷனாராவின் பெற்றோர் அவனைத் தங்கள் வீட்டுக்குள்ளேயே ஏற்ற மறுத்துவிட்டனர். எப்படியோ அப்துல் ஜாபர் மனைவியைச் சந்தித்துத் தன்னுடன் வந்து விடுமாறு அழைத்தானாம்; ஆனால் அவள் மறுத்துவிட்டாளாம்; குழந்தையையாவது ஏற்றுக்கொள்ளும்படி மன்றாடினானும்; அதையும் பெற்றுக்கொள்ள அவள் இணங்கவில்லையாம்.

மனமுடைந்த அப்துல் ஜாபர் லாகூருக்குத் திரும்பி வந்து, இன்று அதிகாலையில் லாகூர் ஸ்டேஷனுக்கு ஒரு மைல் தூரத்திற்கப்பால் ஓடும் ரெயிலில் பாய்ந்து விட்டான். அவனும் குழந்தையும் ஸ்தலத்திலேயே மரணமடைந்தனர். அப்துல் ஜாபரின் சட்டைப்பையில் ஒரு கடிதம் இருந்தது. அதில் அவன் மேலே கூறப்பட்ட விவரங்களையெல்லாம் எழுதியிருந்தான். அதோடு, தனது உண்மையான காதல் இவ்விதம் தோல்வியடைந்ததால், தானும், குழந்தையும் தற்கொலை செய்து கொள்ளுவதாகவும் குறிப்பிட்டிருந்தான். ரோஷனாரா தன்னை வெறுத்து ஒதுக்கிவிட்டாலும், தான் அவள்மீது கொண்டிருந்த காதல் பவித்திரமானது என்றும், அதற்கு அடையாளமாக, இந்தியாவிலிருந்து தன் சொத்து-சொம்புகளை விற்றுக் கொண்டு வந்த பணம் அனைத்தையும் ரோஷனாராவுக்கு அனுப்பிவிட்டதாகவும் அவன் அக்கடிதத்தில் குறிப்பிட்டிருந்தான்.

ஜஹாங்கீரும் நூர்ஜஹானும் காதல் வளர்த்த பூமியில் இன்று ஒரு காதலன் காதலுக்காக உயிர் நீத்தான். பாகிஸ்தான் முழுவதுமே அப்துல் ஜாபரைத் தெய்விகக் காதலன் என்று கொண்

டாடுகிறது. மியானி ஸாஹிப் தர்காவிலுள்ள அவனுடைய கல்லறை இனி லாகூர்வாசிகளுக்கும், லாகூருக்கு வருகிறவர்களுக்கும், பயபக்தியுடன் அஞ்சலி செலுத்தும் ஒரு புனித ஸ்தலமாக விளங்கும் என்பதில் கொஞ்சமும் ஐயமில்லை.

ஆம்; அப்பத்திரிகையின் ஊகம் சிறிதும் பொய்க்கவில்லை; தன் எஜமானரின் தூய காதலை அந்த நன்றிகெட்ட தாரா உணரவில்லையெனினும், லாகூர் நகரிலுள்ள ஒவ்வொருவரும், குறிப்பாகக் கல்லூரிகளில் படிக்கும் இளம் மாணவ-மாணவிகள் நன்கு உணர்ந்து, அவருடைய தர்காவை உண்மைக்காதலின் சின்னமாக மதித்து நாள்தோறும் அஞ்சலி செலுத்திக் கொண்டிருக்கிறார்கள் என்பதை லாகூருக்குப் போய் வந்தவர்கள் கூறக் கேட்டான் அமீர். அப்படிப்பட்ட உத்தமரின் கல்லறைக்குத் தானும் விஜயம் செய்து அஞ்சலி செலுத்த வேண்டுமென்ற ஆவல் கடந்த ஒரு வருஷமாக அமீரின் உள்ளத்தில் பொங்கிக் கொண்டிருந்தது; அதிர்ஷ்டவசமாக இப்பொழுது அவனுக்கு அதற்கு வாய்ப்புக் கிடைத்தது. அமீர் இப்பொழுது ஒரு பிரபல தோல் வியாபாரக் கம்பெனியில் பிரதம விற்பனையாளனாக வேலை பார்த்து வந்தான். ஒரு வியாபார பேரத்தை முடிப்பதற்காகவே அக்கம்பெனி இப்பொழுது அவனை லாகூருக்கு அனுப்பிற்று.

அமீர் ஒரு நாள் இரவு லாகூரை வந்தடைந்தான். அந்த ஊரிலேயே பிறந்து வளர்ந்து இருபத்தைந்து ஆண்டுகளைக் கழித்தவனாதலால், இரவென்றும் பாராமல், வந்த உடனே மியானி ஸாஹிப் தர்காவை நோக்கிப் புறப்பட்டு விட்டான்.

அப்பொழுது இரவு பதினோரு மணிக்கு மேலிருக்கும். நகரத்தின் பரபரப்பெல்லாம் அநேகமாக அடங்கிவிட்டது. தர்காவிலும் அமைதி நிலவிற்று. ஆம்; இந்நேரத்தில் அங்கே யார் வரப் போகிறார்கள்?

கேஸர் சிங்கின் கல்லறையைக் கண்டு பிடிப்பதற்காக அமீர் ஒவ்வொரு கல்லறையாக அருகில் சென்று பார்த்துக் கொண்டே வந்தான். அதோ அந்தக் கல்லறையின் முன் யாரோ ஒருவர் மண்டியிட்டு உட்கார்ந்திருப்பதுபோல் தோன்றுகிறதே. அந்த ஆளைக் கேட்டால் ஒருகால் விவரம் சொல்லக்கூடுமென்று அவன் அங்கே போனான். கல்லறையை நெருங்கியபோது அங்கே அமர்ந்திருந்தது ஒரு பெண் என்பது அவனுக்குத் தெரிந்தது. கல்லறை விலையுயர்ந்த சலவைக் கற்களால் கட்டப்பட்டிருந்தது. அதில் ஏராளமாக மலர்கள் தூவப்பட்டிருந்தன. மாலையில் அஞ்சலி செலுத்த வந்தவர்கள் கொளுத்திவிட்டுப் போயிருந்த ஊதுவத்திகளின் நறுமணம் இன்னும் அங்கே கமழ்ந்து கொண்டிருந்தது.

இவற்றிலிருந்து அதுவே கேஸர் ஸிங்கின் கல்லறையாக இருக்க வேண்டுமென்று அவன் நினைத்தான். ஆஹா; இப்படி நள்ளிரவில் கூட ஒருபெண்மணி வந்து அஞ்சலி செலுத்த வேண்டுமென்றால், கேஸர் ஸிங் எவ்வளவுதூரம் லாகூர்வாசிகளின் உள்ளத்தைக் கவர்ந்திருக்க வேண்டும்? இப்படி உலகமே வியந்தேற்றும் அந்த அண்ணலை நன்றிகெட்ட தாரா ஒருகணத்தில் உதறித் தள்ளிவிட்டாளே; சீ; பெண்ணா அவள்? பேய்! கொடிய பேய்!

ஆள் அரவம் கேட்டு அஞ்சலி செலுத்திக் கொண்டிருந்த அந்தப் பெண் ஓர் அதிர்ச்சியுடன் திரும்பினாள். அருகிலிருந்த மின்சார விளக்கின் ஒளி அவள் முகத்தில் விழுந்ததும், அங்கே கண்ணீர் பளபளப்பதை மட்டுமா கண்டான் அமீர்? இல்லை; அதையும்விட ஒரு பேராச்சரியம் அவனை ஸ்தம்பிக்க வைத்தது.

அப்பெண்–ஆம், அவள் தாராவேதான்;

அவளும் அமீரை அடையாளம் தெரிந்துகொண்டாள். மறு நிமிஷம், ''அமீர்; அமீர்; இந்தப் பாவியை அவர் மன்னிப்பாரா அமீர்;'' என்று அவள் கதறினாள்.

அவன் வெறுப்பு வெளிப்படச் சிரித்தான். ''செய்வதையும் செய்துவிட்டு மன்னிப்புக்கு இறைஞ்சும் உங்கள் போக்கு விசித்திரமாகத்தான் இருக்கிறது தாரா!'' என்று வெடித்தான்.

''என்னைத்தாரா என்று அழையாதே அமீர். தாரா செத்துவிட்டாள். உலகம் புகழும் உன்னத மனிதராக விளங்கிய கேஸர் ஸிங்கின் மனைவி தாரா என்றோ இறந்துவிட்டாள். இந்தப் பாவி ரோஷனாரோ, வேறொருவரின் மனைவி;''

''என்ன மனைவியா? வேறொருவரின் மனைவியா?''

''ஆம் அமீர்; நான் வஞ்சிக்கப்பட்டேன். பெற்றோர்களால் சிறை செய்யப்பட்டு இங்கு வந்த ஒரு வாரத்துக்குள் ளாகவே மறுபடியும் முஸ்லிமாக்கப்பட்டு, வேறொருவருக்குக் கட்டாயமாக மணம் செய்து வைக்கப்பட்டேன். என் உடல் ஏற்கனவே ஒரு தடவை மாசுபடுத்தப்பட்டது. அவர் என்னை மணந்து என் மாசைப் போக்கினார். அந்த மகாத்மாவுக்கு மீண்டும் ஒருதடவை மாசுபடுத்தப்பட்ட உடலையா சமர்ப்பிப்பது? தவிர என் பெற்றோரும், தற்சமயம் இவ்வூரில் பெரிய வியாபாரி யாக விளங்கி வரும் என் இப்போதைக் கணவரும், உன் எஜமானரையும், என் கண்மணி கமலையும் கொன்றுவிட வேண்டும்; இல்லாவிட்டால் நான் அவர்களோடு ஓடிப்போய் விடுவேன் என்று பேசிக்கொண்டதையும் நான் கேட்டேன்.

ஆகையால்தான் என் உயிருக்கு உயிரான அவர்களைக் காப்பாற்ற அவ்விருவரையும் வெறுத்துவிட்டவள்போல் நடித்துத் திருப்பி அனுப்பினேன். இனி அவர்கள் இந்தியா திரும்பிவிடுவார்கள்; க்ஷேமமாக இருப்பார்கள் என்று நம்பினேன். ஆனால் அமீர்......'' அவளால் மேலே பேச முடியவில்லை; தேம்பித் தேம்பி அழுதாள்.

அமீருக்கும் நெஞ்சில் அழுகை முட்டிற்று. அவன் கேஸர் ஸிங்குக்கு அஞ்சலி செலுத்தத்தான் இங்கு வந்தான். ஆனால் இப்பொழுது யாருக்கு முதலில் அஞ்சலி செலுத்துவது என்பது அவனுக்குச் சந்தேகமாகிவிட்டது!

—o—

து. ரா

# குணம்

9

நீலியாரி முருகனின் உயரம் ஐந்து அடி இரண்டு அங்குலம். தலையில் குடுமி; நெற்றியில் பட்டை பட்டையாக விபூதி. நாலு முழம் வேஷ்டியை வரிந்து கட்டி, மேலே ஒரு காக்கி நிறச் சட்டையை எப்போதும் அணிந்திருப்பான். கையில் எப்போதும் அவனைவிட ஒரு பிடி உயரமான கறுப்பு மூங்கில் கம்பு. சேரியில் அவனே ஒரு பிள்ளையார் கோயில் கட்டி இருந்தான். அதற்கு தர்மகர்த்தா, பூசாரி, பண்டாரம் எல்லாம் அவனேதான். கோயில் நிர்வாகத்துக்காக, ஊரில் சொந்த வீட்டுக்காரர்களிடம் மாசாமாசம் எட்டணுவோ நாலணுவோ அவரவர் கொடுத்ததை வசூல் பண்ணுவான். இரண்டாம் தேதி அன்று எல்லோர் வீட்டு வாசலிலும் அவனைப் பார்க்கலாம். ஒரு சின்ன நோட்டுப் புஸ்த கமும் பென்சிலும் கையில் இருக்கும். வாசலில் வந்து நின்று ''சாமி!'' என்று குரல் கொடுப்பான். ஊருக்கே ஐயரான கோபால சாஸ்திரியானுலும் சரி, கிராம முன்சீப் ராதாகிருஷ்ணப் பிள்ளையானுலும் சரி, போஸ்ட்மாஸ்டர் கன்னையா நாயுடுவா ஞலும் சரி, பொற்கொல்லரான சொக்கலிங்க பத்தரானுலும் சரி, எல்லோரும் அவனுக்கு சாமிதான். வீட்டுக்காரர் வெளியே வந்தால் ஒரு பெரிய கும்பிடு. நோட்டுப் புஸ்தகத்தையும் பென் சிலையும் வாசல்படியில் வைத்துவிட்டுச் சற்று ஒதுங்கினாற்போல் நிற்பான். நோட்டுப் புஸ்தகத்தில் பெயரை எழுதிவிட்டுக் காசையும் அத்துடன் வைத்தார்களானுல் இன்னொரு பெரிய கும்பிடு போட்டுவிட்டு எடுத்துக்கொள்வான்.

ஊரில் எல்லோரும் அவனுக்குச் சாமியானுல், சேரியில் எல் லோருக்கும் அவன்தான் சாமியார். கோவில் கட்டி, தினம் தவருமல் பிள்ளையாருக்கு அவன் பூஜை செய்து வந்ததாலும்,

நெற்றியில் பட்டைபட்டையாக விபூதி இல்லாமல் அவன் என்றும் இருந்ததில்லையாதலாலும் அந்தப்பெயர் அவனுக்குவந்துவிட்டது. சண்டை சச்சரவு ஏற்பட்டால், முன்சீப்பிடம் போவதற்குமுன் அவனிடம்தான் போவார்கள் மத்தியஸ்தத்திற்கு. நல்லது கெட்டது நடந்தாலும் அவனைக் கலந்துகொள்ளாமல் ஒன்றும் செய்யமாட்டார்கள்.

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத்து நாலிலோ ஐந்திலோ காந்திஜி சென்னைக்கு வந்திருந்தபோது கோபால சாஸ்திரி தவருமல் பிரார்த்தனைக் கூட்டத்துக்குப் போய்வந்தார். அதிலிருந்து, தலையாரி முருகன் பிள்ளையார் கோவிலுக்குப் பணம் வசூல் பண்ண வந்தால், நோட்டுப் புஸ்தகத்தையும் பென்சிலையும் அவன் வாசல்படியில் வைக்குமுன் அவன் கையிலிருந்தே அவற்றை வாங்கிக்கொண்டு அவன் கையிலேயே திருப்பியும் தரத் தொடங்கினர். முருகன் என்ன புரிந்துகொண்டானே என்னவோ தெரியாது; அவர் காரியத்தினுல் உச்சி குளிர்ந்துபோனவனுகவும் காட்டிக்கொள்ளவில்லை. அதை விகல்பமாகவும் எடுத்துக் கொள்ளவில்லை. எப்பொழுதும்போல் சாதாரணமாகவே கும்பிடு போட்டுக் காசைப் பெற்றுக்கொண்டு போனுன்.

''ஸ்வாமி!''

சாஸ்திரி வீட்டுக்குப் பக்கத்து வீடு போஸ்ட்மாஸ்டர் கன்னையா நாயுடுவுடையது. நடுவில் இருந்த குறுக்குச் சுவர் ஓரமாக நின்றுகொண்டிருந்தார் நாயுடு. மடித்துக் கட்டின வேஷ்டியுடன், மேலே துண்டு ஒன்றும் இல்லாமல் தொப்பையைச் சாய்த்துக்கொண்டு நின்ற அவர், சுருட்டு நெருப்பைக் குறுக்குச் சுவர் மேல் தட்டி அணைத்து, அதைக் காதில் செருகிக்கொண்டு ஒரு கனைப்பும் கனைத்துக் கொண்டார்.

''என்ன நாயுடுகாரு?''

''அந்தத் தலையாரி முருகம்பய ஒங்க கையிலிருந்தே நோட்டுப் புஸ்தகத்தையும் பென்சிலையும் வாங்கிட்டுப் போருனே! என்ன அக்கரமமுங்க! ஜோட்டாலே அடிக்க வாணும்?''

சாஸ்திரி லேசாகச் சிரித்தார். ''அவன் மேலே தப்பில்லே; நானே தான் அவன் கையிலியே குடுத்தேன். என்ன இருந்தாலும் அவனும் நம்மைப்போல மனுஷன் தானே நாயுடு ஸார்.'' என்ருர்.

வெறுப்புடன் முகத்தைச் சுளித்தார் நாயுடு. "என்ன போங்க எனக்கொண்ணும் புடிக்கல்லே. இந்தப் பாப்பாரு எடம் குடுத்துத் தான் இந்தப் பறப்பசங்க துளுத்துப்புட்டானுங்க! நான் நல்லாச்

சொல்லுவேன். இல்லேன்னு, நாங்க இவங்களை வைக்கிற எடத்துலே வச்சிருப்போம். நீங்க குடுக்கற எடம், இப்போ அவங்க எங்களையும் தலைக்கு மேலே ஏறருங்க! ஒங்களைக் கேட்டா, நீர் காந்தி கட்சி பேசுவீர். நீங்கள்ளாம் காந்தி கட்சி தானே?'' என்றார் விறுவிறுப்பான குரலில்.

'' ஏன், உங்களுக்கு காந்தியைப் புடிக்கலியா?''

'' புடிக்கல்லேன்னு சொல்லலல்லே. அவர் சொல்றது சிலதை எல்லாம் நானும் ஒப்புக்கறேன். ஏழைங்க குடிச்சுக் கெட்டுப் போறாங்கன்னு சொன்னாரு; அது நியாயம். வெள்ளைக்காரன் நம்ப நாட்டுலேருந்து பணத்தை எல்லாம் சுரண்டிக்கினு போறான்னு சொன்னாரு, சுதேசி சாமான்களையே வாங்குங்கன்னு சொன்னாரு; அதெல்லாம் நியாயம். ஆனா, இந்தச் சேரிப் பசங்களை நாம்ப நடு ஊட்டுலே கொண்டாந்து வச்சிக்கணும்னு சொல்றாரே, அதுமட்டும் சரியில்லே...''

'' ஏன் அப்படிச் சொல்றீங்க?''

'' என்ன, ஸார், இப்படிக் கேக்கறீர்? குலத்தளவே ஆகும் குணம்னு தெரியாமலா பெரியவங்க சொன்னாங்க; அவங்களை ஒதுக்கி வச்சாங்க? வெள்ளைக்காரன் தேசத்தையே எடுத்துக்குமே. ஆள்ற பரம்பரைன்னு ஒண்ணு தனியா இருக்கு இல்லே? கண்டவனையா ராஜான்னு சிம்மாசனத்துலே ஏத்தி உக்காரவைக்கிறானுக?''

'' அது சரி, ஆனா, ராஜாவா இருக்கறதையும் ஒரு தேசத்தை ஆள்றதையும் உட்டுடுங்க. எல்லோரும் ராஜாவாப் பொறக்கல்லே; ஆனா, எல்லோரும் மனுஷாளாப் பொறந்திருக்கோம் இல்லையா?''

'' அப்புடின்னா, குதிரை கழுதை எல்லாம் ஒண்ணாயிடுமா?''

'' ஆகாது. ஆனா எல்லாக் குதிரையும் குதிரைதான், எல்லாக் கழுதையும் கழுதைதானே? அதுலே ஒண்ணுக்கொண்ணு வித்தியாசம் இல்லையே? அப்புடித்தானே மனுஷாளாப் பொறந்த எல்லாரும்? இன்னொரு விஷயம் சொல்றேன் பாருங்கோ, இந்த வெள்ளைக்காராளையே எடுத்துக்குவோம்; அவாளோடே சரிநிகர் சமானமா நாம்பளும் இருக்கணும், நம்ப தேசத்தை நாமே ஆண்டுக்கணும்னு தானே நாம்ப கிளர்ச்சி எல்லாம் பண்ணிண்டிருக்கோம்; இல்லையா?''

'' ஆமாம்''

'' அப்போ மனுஷனுக்கு மனுஷன் வித்தியாசம் இல்லேங்கறது தானே நம்ப வாதம்? இன்னொரு விஷயம் சொல்றேன், நீங்க

கோவிச்சுக்கப்படாது. முப்பது வருஷத்துக்கு முன்னுலே உங்கப் பாவும் எங்கப்பாவும் இருந்த காலத்திலே, எங்கப்பா பக்கத்திலே உங்கப்பா உக்காரமாட்டார். இப்போ நானும் நீங்களும் சரி சமானமா இருக்கிறது சர்வசாதாரணமாய்ப் போயிடுத்து. ஆனு, இன்றும் தாழ்த்தப்பட்டவாளா இருக்கிறவாளுக்கு அந்த உரிமை களைக் கொடுக்க மட்டும் நம்மிலே ரொம்பப் பேருக்கு மனசு வர மாட்டேங்கறது. நமக்கு மேலே இருக்கிறவாளோடே சம உரிமை கொண்டாடப் பார்க்கிரோம்; நமக்குக் கீழே இருக்கிற வாளுக்கு அந்த உரிமையைக் குடுக்க மனசு வல்லே. அப்படித்தானே ?''

நாயுடு கசப்பை விழுங்கியவர் போல் முகத்தைச் சுளித்து, காதின் மேலிருந்து சுருட்டை எடுத்துப் பற்ற வைத்தார். சாஸ் திரி மேலும் சொன்னுர்.

''என் மனசும் உங்க மனசு மாதிரிதான் இருந்தது. தினம் பிரார்த்தனைக் கூட்டத்துக்குப் போனேன்; காந்திஜி சொன்னதை எல்லாம் கேட்டேன்; யோசிச்சு யோசிச்சுப் பார்த்தேன்; அவர் சொல்றதுதான் சரின்னு புரிஞ்சிது. மனுஷன் ஒழுக்கத்திலுலே தான் உயரணும்; அதனுலேயே தாழணும். பொறவியினுலே இல்லே.''

நாயுடு த்சு...த்சு...என்று நாக்கினுல் சப்தித்து விட்டுப் புகை விட்டுக் கொண்டே உள்ளே போய் விட்டார்.

மாயவரம், தஞ்சாவூர், கும்பகோணம் என்று மாற்றலாகி ஊர் ஊராகப் போய் விட்டுப் பன்னிரண்டு வருஷத்துக்குப் பின் உத்தியோகத்தில் ஓய்வு பெற்று மறுபடி நாயுடு ஊருக்குத் திரும்பி வந்தபோது சாஸ்திரிக்கும் ரொம்ப வயசாய் விட்டது, படுகிழம்; உச்சிக் குடுமியில் எண்ணி நாலு மயிர்; பொக்கை வாய். ஆனுல் உடம்பு திடமாக இருக்கிறது, நடமாடிக் கொண்டிருக்கிறுர்: பிள்ளை குட்டி இல்லாததால் பள்ளிக்கூடம் ஒன்று ஆரம்பித்து நடத்தி வருகிறுர்.

''அசப்பிலே பாத்தா காந்தி மாதிரி இருக்கீமே! காந்தி பக்தர் இல்லே; அதான் காந்தி மாதிரி ஆயிட்டீம்! ஒரு புள்ளெயெ வச் சிக்கிட்டுப் படிக்க வச்சுப் பெரிய மனுஷனுக்கறதே ரொம்பக் கஷ்டமாருக்கு: நூறுபேர் போல புள்ளேகளைக் கட்டி மேய்கிறீமே, எப்படி முடியுது இந்த வயசுலே?'' என்று அவரைப் பார்க்கும் போதெல்லாம் ஆச்சரியப்படும் நாயுடு ஒரு தினம் கேட்டார். பையனுக்கு வேலைக்கு ஆர்டர் வந்திருக்கு, என்ன என்னவோ சர்டி பிகேட்டுகள் எல்லாம் கேக்கருன். எல்லாத்தியும் டைப் அடிச்சு வச்சிருக்கான்; அதெல்லாம் உண்மை நகல்னு ஒரு ஆபீசர் கை

யெழுத்துப் போட்டுத் தரணுமாம். உமக்கு யாரையாவது தெரியுமா ; நீர் தான் எல்லாருக்கும் வேண்டியவராச்சே ?''

'' அதுக்கென்ன வாங்களேன், நம்ப டிப்டி கலெக்டர் விநாயகத்துக் கிட்ட அழச்சிண்டு போரேன். ஒடனே கையெழுத்துப் போட்டுக் குடுத்துடுவன் '' என்று நாயுடுவையும் அழைத்துக் கொண்டு டிப்டி கலெக்டரின் பங்களாவுக்குப் போனார் சாஸ்திரி. இருவரையும் கைகூப்பி வணங்கி வரவேற்று, ஹாலில் அமரச் செய்து, டைப் அடித்த சர்டிபிகேட்டுகளில் கையெழுத்துப் போட்டுக் கொடுத்த டிப்டி கலெக்டரின் பவ்யத்தைக் கண்டு ஆச்சரியம் அடைந்த நாயுடு, ஹாலில் விநாயகம் உட்கார்ந்திருந்த இடத்துக்கு மேல், சுவரில் மாட்டி இருந்த பெரிய புகைப் படத்தைக் கண் கொட்டாமல் பார்த்தபடி வெளியே வந்தார்.

'' நம்ப விநாயகம் யார்னு தெரியறதா ?'' என்று கேட்டார் சாஸ்திரி இருவரும் வீட்டை நோக்கி நடக்கையில்.

'' உம்...தெரியலே. ஒரு வேளை, நம்ப தலையாரி முருகன் இருந்தானே, அவனுக்கு ஏதாவது...?''

'' நம்ம தலையாரி முருகனோடெ மகனே தான் ! முருகனோடெ படம், பெரிசா என்லார்ஜ்மெண்டு, ஹால்லே மாட்டி இருந்துதே பூமாலையோடே ; பாத்தீரா ?''

'' பார்த்தேன் ; முருகன் மாதிரி இருக்கேன்னு நெனச்சேன்...''

'' முருகனே தான் ! பிள்ளையார் கோயிலுக்குப் பணம் வசூல் பண்றப்பொ ஒவ்வொரு சமயம், ' என் புள்ளெ படிக்கிறான் ; சர்க்கார்லே ஸ்காலர்ஷிப் தராங்க ; புஸ்தகம் வாங்கப் பணம் இல்லே ; ஏதாவது இந்த மாசம் கூடப் போட்டுத் தந்தா அவனுக்கும் உபயோகமாக இருக்கும்'னு கேட்டு வாங்கிண்டு போவன் இல்லே ? அந்தப் பையன் தான் விநாயகம். பி. ஏ. பாஸ் பண்ணினதும் கவர்மெண்டுலே ஆபீசராகவே வேலைக்கு எடுத்துண்டுருக்கா. பாவம், முருகன் தான் இருந்து அனுபவிக்கக் குடுத்து வைக்கல்லே. பையன் பி. ஏ. படிச்சிண்டிருக்கச்சே போயிட்டான். அப்பாவைப் போலவே தான் புள்ளெ. பெரிய உத்தியோகஸ்தன்னு ஒரு வீண் ஆடம்பரம், அதிகாரம் ஒன்றும் கிடையாது; குழந்தை சுபாவம்; பெரியவா கிட்டெ ஒரு அடக்கம், மரியாதை......''

சாஸ்திரி மேலே சொன்னதொன்றும் நாயுடுவின் காதில் விழவில்லை. பதினைந்து வருஷத்துக்கு முன் நடந்த சம்பவத்தின் நினைவிலே லயித்துப் போயிருந்தது அவர் எண்ணமெல்லாம். சாஸ்திரி சொன்னது போல் தலையாரி முருகன் வந்து அவரையும்

பணம் கேட்டிருக்கிறுன், பிள்ளேயின் படிப்புக்கு ஏதாவது ஒத்தாசை செய்யும்படி. ' அடே முருகா! இதோ பாரு, உம் புள்ளெ படிச்சு என்ன செய்யப் போறுன்? கலெக்டர் வேலேயா பண்ணப் போறுன்? பேசாமெ வயல்லெ கொண்டுபோய் வேலேக்கி உடுவியா?...'' என்று சொல்லி அனுப்பிவிட்டார். கையிலே இருந்த காகிதங்களே—முருகன் மகன் கையெழுத்துப் போட்டுக் கொடுத்த காகிதங்களே—இந்தக் கைக்கும் அந்தக் கைக்குமாக மாற்றியபடி சிந்தனையில் ஆழ்ந்து நடந்தார் இப்போது.

நான்கைந்து மாசத்துக்குப் பிறகு மறுபடி அவரைப் பார்த்த சாஸ்திரி, ''என்ன நாயுடுகாரு, இப்புடி எளச்சுப் போயிட்டீர்; என்ன உடம்பு?'' என்று கேட்டார்.

''உடம்புக்கு ஒண்ணும் இல்லே; எல்லாம் மனசுக்குத்தான். உம்ம பாடு தேவலே, புள்ளே குட்டி ஒண்ணும் இல்லாததே! என்னேப்போல ஒண்ணே வச்சிண்டிருக்கவும் வேண்டாம், இப்படி ஆகவும் வேண்டாம்'' என்று நாயுடு சொல்லவும், அடடா, நாம்ப ஒண்ணும் கேள்விப்படலீயே என்று திடுக்கிட்டுப்போன சாஸ்திரி, ''ஏன், உங்க மகனுக்கு என்ன ஆச்சு?'' என்று பதற்றத்துடன் கேட்டார்.

''அப்படி நீங்க நினேக்கிற மாதிரி ஒண்ணும் ஆகல்லே. உத்தியோகம் ஆச்சு பாருங்க அவனுக்கு?...''

''ஆமாம்''

''அப்படி ஒண்ணும் பெரிய உத்தியோகமும் இல்லியே; குமாஸ்தா உத்தியோகம் தானே? அது ஆனதுமே, தொரைக்கி நம்ப வீட்டுலே இருக்க சௌகரியப்படலியாம்; தனியாப் போயிட்டான் எங்க ரெண்டுபேரையும் விட்டுட்டு. நம்ப வீட்டுலே பொறந்து வளந்தவனுக்கு, இப்பொ நம்ப வீடு திடீர்னு சௌகரியம் இல்லாமெ போயிடுத்தாம்....''

''த்சொ . . த்சொ . .''

''இவனுக்கு அவன் எவ்வளவு தேவலே, பார்த்தீரா?''

''எவன்?''

''நம்ப தலேயாரி முருகனேட மகன்; டிப்டி கலெக்டர் விஞயகம். இன்னெருவன் இன்னெருவஞ இருந்தா, இவ்வளவு பெரிய பதவி கடச்சப்புறம் தான் தலேயாரி முருகன் மகன்கறதை சொல்லிக்கவே வெக்கப்படுவானே என்னவோ. அவன் தகப்பனே மறக்காமெ, அவன் படத்தைப் பெரிசா ஹால்லே மாட்டி வச்சு, புஷ்ப மாலேயாலே அலங்கரிச்சு வச்சிருந்தான் பார்த்தீரா?......''

சாஸ்திரி பேசாமல் இருந்தார். பழைய நினைவுகள் எல்லாம் அவருக்கும் வந்தன. நாயுடுவே மேலே பேசட்டுமே; கேட்போமே, என்று உள்ளுக்குள் சிரித்துக்கொண்டார்.

'' இன்னிக்கித்தான் பகவான் என் கண்ணை நல்லாத் தறந்து விட்டான். என் கண்ணை மூடி இருந்த அறியாமையைத் தொடச்சி விட்டான். குலத்தளவே ஆகுமாம் குணம்னு பெரியவங்க சொன்னதுக்கு உண்மையான அர்த்தம் என்னன்னு இப்பத்தான் புரிஞ்சுது. குலம்கறது பெறவியினுலே ஏற்படற நெலமை இருக்கே, அது இல்லே. ஒழுக்கத்தினுலே ஏற்படுதே, அந்த நெலமைதான்னு புரியுது. அந்தக் காலத்துலே பெரியவங்க அந்த அர்த்தத்துலே அதைச் சொல்லல்லேன்னுக்கூட அந்த அர்த்தத்துலே தான் நாம்ப அதை எடுத்துக்கணும். இல்லையா? நீர் என்ன சொல்றீர்? ''

'' ரொம்ப கரெக்டு நீர் சொல்றது! '' என்று ஆமோதித்தார் சாஸ்திரி.

★

ரா. கி. ரங்கராஜன்

# 10

# சாந்தி பிறந்த நாள்

நகப் பாலிஷை மெல்லிய ஸில்க் கைக்குட்டையினுல் மேலோடு துடைத்துப் பள பளவென்று மெருகேற்றிக்கொண்டாள் சாந்தி. பத்து மடங்குக்குக் கர்வம் அவள் தலைக்கேறியது. இந்த விரல் நுனிகளைப் பிடித்துக்கொண்டு விட்டாராஞல், பிரியும் நேரம் வருகிற வரையில், சங்கர் விடுவதே கிடையாது.

''உங்களுக்கு என் மீது காதலா, என் விரல்கள் மீதா?'' என்று சாந்தியே கேட்பதுண்டு.

''விரல்களின் மீதுதான்,'' என்று தயங்காமல் சொல்வான் சங்கர். பிஸினஸ் நண்பர்களில் யார் ஐரோப்பியச் சுற்றுப் பயணம் போனுலும் சரி, பாஷன் தலைநகரங்களில், எது சிறப்பான நகப் பூச்செனக் கருதப்படுகிறதோ அதைத் தவருமல் வாங்கி வரும்படி சொல்லி யனுப்புவான். அப்படி, உலகத்தின் பல மூலைகளிலிருந்து வந்திருந்த தட்டையும் வட்டமும், குட்டையும் நெட்டையும், வளைவும் நெளிவும், பச்சையும் சிவப்புமான பற்பல பூச்சுக் குப்பிகளை வைப்பதற்கென்றே தனி ஸ்டீல் செட் வாங்கும்படி நேர்ந்தது சாந்திக்கு.

சாந்திக்கு அப்பா கிடையாது, பெரியப்பாதான் அவ்வளவு பெரிய எஸ்டேட்டை நிர்வகித்து வந்தார். அவர் விளையாட்டாகச் சாந்தியைக் கேட்டார்.

''இவ்வளவு பழகுகிருனே சங்கர், ஏன் உன்னைக் கல்யாணம் செய்துகொள்ளுவதைமட்டும் தள்ளிப் போட்டுக் கொண்டேயிருக்கிருன் தெரியுமோ?'' என்று.

"மேட்டூரில் இன்னொரு புதுத் தொழிற்சாலைக்கு ஏற்பாடு பண்ணிக் கொண்டிருக்கிறார். அது முடியட்டும் என்று பார்க்கிறார்," என்பாள் சாந்தி.

"அதெல்லாம் இல்லை. கல்யாணமாகிவிட்டால், உன் நகப் பாலிஷுக்காகத் தன் ஆஸ்தியில் பாதி கரைந்து விடுமோ என்று அவனுக்குப் பயம்," என்பார் பெரியப்பா.

சாந்தி, மகிழம்பூ கொட்டின மாதிரி சிரித்து மழுப்புவாளே தவிர, அத்தனை அலங்காரப் பிரியையாக இருப்பது குறித்து வெட்கப்படமாட்டாள். தோழியர் வட்டாரத்தில்—அதுவும் காந்தி நகர் 'யங் லேடீஸ் ரிக்ரியேஷன் கிளப்' எல்லைக்குள்—நாகரிகம் பற்றித் தன் காலடியில் அமர்ந்து பாடம் கேட்கும் தகுதிகூட யாருக்குமில்லை என்பதில் அவளுக்கு அலாதிப் பெருமைதான்.

ஐந்து விரல்களையும் கண்ணெதிரே தூக்கி நிறுத்திக்கொண்டு அழகு பார்த்தாள் சாந்தி. சொர்ண விக்கிரகம் போன்ற தலைச்சன் பிள்ளையைத் தூக்கிப் பார்த்து ஆனந்தப்படும் தாயின் பெருமிதம் அவள் நெஞ்சில் விம்மிதம் தந்தது......டிரெஸ்ஸிங் டேபிளின் கீழிருந்த காஷ்மீர ஸ்லிப்பர்களை வலது கால் பெரு விரலினால் நாசுக்காக வெளியே இழுத்து, மாட்டிக்கொண்டாள்.

வேலைக்காரி அவற்றைச் சரியாகத் துடைத்து வைக்கவில்லை என்ற கோபம் சிறிது முகத்தில் வெளிப்பட, படிப் படியாக எண்ணிக் கீழே இறங்கியபோது, கோபத்துக்குக் காரணமான மீனும்பாள், தன் செருகுக் கொண்டையைச் சொறிந்த வண்ணம், "நாளைக்கு...நானும் என் புருசனும் வெளியூருக்குப் போறோம் அம்மா," என்று ஆரம்பித்தாள்.

"ஏன்? மெட்ருஸ் ஸிடியிலே இல்லாத புதுமை வெளியூரிலே என்னடியம்மா வந்திருக்கிறது?" என்று சாந்தி வெடித்தாள்.

"அவரு...என் புருசன்...கிராமத்திலே ஏதோ சங்கம் ஆரம்பிச்சு நடத்திட்டிருந்தவருங்க, அம்மா. நாளைக்கு அங்கே என்னவோ விழாவாம்."

"சரிதான்! பெரிய சோஷல் ஒர்க்கர் நீங்களெல்லாம்! விழாவுமாச்சு, கிழாவுமாச்சு! வீட்டிலேயே கிட!" என்று கட்டளை போட்டுவிட்டு வெளியே வந்தாள்,

என்ன இது? பிளிமத்தைக் காணோமே! சங்கர் இன்னும் வரவில்லையா?

மணிக்கட்டைத் திருப்பி, தங்கச் செயினில் கோத்த, மோதிர அளவு கடியாரத்தை நோக்கினுள் சாந்தி. மணி ஆறே கால்.

வார்த்தை தவறிவிட்டார்! ஹூம்! கேட்டால், அகமதாபாத்திலிருந்து ஒரு ஆசாமி வந்து அமுக்கிவிட்டான் என்று அளக்கப் போகிருர்!

வெறுப்புடன் சாந்தி உள்ளே திரும்பி வந்த சமயம், தோட்டத்தில் நீந்திக் கொண்டு வந்த கார், ஜம்மென்ற குலுக்கலுடன் அவளெதிரில் நின்றது.

''ஸாரி சாந்தி! ஏறிக்கொள்,'' என்ற படி காரின் கதவைத் திறந்துவிட்டான் சங்கர்.

உதட்டை ஒரு சுழிப்புச் சுழித்துத் தனது சினத்தை வெளிப்படுத்திய பின்னர் சாந்தி ஏறியமர்ந்து கொண்டு, சற்று அதிகப்படி ஓசையுடனேயே கதவைப் படக்கென்று சாத்திக் கொண்டாள்.

சங்கரின் சுறுசுறுப்பான முகத்தில் அலேச்சலின் களேப்புத் தெரிந்ததை அவள் கவனித்தாள். சிறிது கோபம் தணிந்தவளாக, ''எங்கெல்லாமோ சுற்றிவிட்டு வருகிறீர்கள்!'' என்று குற்றம் சாட்டுகிற சாக்கில் விஷயத்தைத் தெரிந்து கொள்ள முயன்ருள்.

'' ஆமாம்...நாளேக்குச் சர்வோதயா தினமில்லேயா?''

'' அதாவது...ஓ! காந்திஜி இறந்த தினத்தைச் சொல்கிறீர்களா?''

'' ஆமாம். எங்கள் அசோசியேஷனில் பிரார்த்தனே, பொதுக்கூட்டம், அது இது என்று ஏற்பாடு பண்ணியிருக்கிருர்கள். முக்கியமான சில பொறுப்புக்கள் எனக்கு...''

'' அடி சக்கை!'' ஆச்சரியத்துடன் முழுதாக அவன் பக்கம் திரும்பினுள் சாந்தி. ''எத்தனே நாளாக இந்தக் கூத்தெல்லாம்!''

காரின் வேகத்தோடு தன் குரலேயும் நிதானப்படுத்திக் கொண்டான் சங்கர். '' இருக்க வேண்டியதுதானே சாந்தி, இதுவும் கொஞ்சம் கொஞ்சம்? வருஷம் முன்னூற்றறுபத்தைந்து நாளும் பணம், சம்பாத்தியம், பிஸினெஸ். ஆட்டைத் தூக்கி மாட்டில் போடுவது, ஆளேக் கவிழ்ப்பது—இதிலேயேதான் போகிறது, அதை முழுக்க முழுக்க விடுவதற்கில்லே. பிழைப்பு வாழ்க்கையை அப்படி அமைத்துக்கொண்டாகிவிட்டது. ஆனுல் நடுவே இரண்டொருநாள் இப்படித்தான் வாழ்க்கையைத் திருப்

பிக் கொள்வோமே? அப்போது கிடைக்கிற மன அமைதியில் மற்ற நாட்களை ஓட்டலாம்!''

''ஓகோ! வேதாந்தம் பலமாயிருக்கிறதே!'' என்று சாந்தி சிரித்தாள்.

''வேதாந்தமாவது, தத்துவமாவது! இதோ பார்,'' என்று தன் பக்கத்திலிருந்த சிறிய பார்சலைக் காட்டினான் சங்கர். ''கதர் டிரஸ் எதுவுமே கிடையாது என்று நினைவு வந்தது. ரெடிமேடில் வாங்கி வந்தேன். உன் உடம்புக்கு ஏற்றதாக எவ்வளவு அருமையான புடவை...''

''போதுமே கண்ணராவி!'' என்று சாந்தி முகத்தைச் சுளிக்கவே சங்கர் மேலே தன் பேச்சைத் தொடரவில்லை.

அவன் பேச்சை மாற்றினான். ''உனக்காக ஒரு ஸ்பெஷல் டூடெக்ஸ் ஒரு சினேகிதர் மூலம் வரவழைத்திருக்கிறேன் பார், பாரிஸிலிருந்து! அசந்து போய்விடுவாய்! என்ன கலர்! அத்தோடு என்ன இனிமையான மணமும் சேர்த்திருக்கிறான் தெரியுமா?''

ஆவலின் பெயர் சாந்தியாயிற்று. ''நிஜமாகவா?...எங்கே, எடுங்கள்!''

மெரினாவின் கார் பாதையில் வாகனத்தைத் திருப்பும் வரை மௌனமாயிருந்த சங்கர், ''ஒரு அவுன்ஸ்கூட இருக்காது. அத்தனை சின்னஞ்சிறு புட்டி! விலை எவ்வளவு இருக்கும் சொல், பார்க்கலாம்!''

''பாரிஸிலிருந்து வாங்கி வந்ததா?'' அரை விழியை மூடி யோசனை செய்தாள் சாந்தி. ''என்ன...எக்ஸ்சேஞ்ஜ் விகிதப்படி பார்த்தால், அதிகபட்சம் நூறு ரூபாயாவது இருக்கும்!''

''இருநூற்று எழுபத்தைந்து!'' என்று எழுத்து எழுத்தாகப் பிரித்து உச்சரித்த சங்கர், கார்களுக்கு நடுவில் வண்டியை நிறுத்திவிட்டு, தன் காதலியைக் கர்வத்துடன் நோக்கினான்.

''எடுங்களேன் சீக்கிரம்!'' என்று சாந்தி துடித்தாள்.

''ஆபீஸில் மறந்து வைத்துவிட்டேன். அதுதான் வருத்தமாயிருக்கிறது,'' என்றான் சங்கர். ''பரவாயில்லை நாளை சாயங்காலம் கொண்டு வருகிறேன்?''

''மறந்து விடாதீர்கள். கூட்டம் பேச்சு என்று என்னென்னவோ வேறே வைத்துக்கொண்டிருக்கிறீர்களே?'' என்றாள் சாந்தி கவலையுடன்.

" பூகம்பமேயானாலும் என் சாந்தியை மறந்துவிடுவேனா?" என்றவன், சந்தண சோப்புக்கட்டி போன்ற சாந்தியின் மோவாயைத் தொட்டு நிமிர்த்தினான். " ஒரு பந்தயம் வைத்து, பிறகு அதைக் கொடுக்கலாமா என்று இப்போது தோன்றுகிறது !" என்றான்.

" பந்தயமா? என்ன பந்தயம் !"

சாந்தி திகைத்தாள்.

" டேய் பையா ! ஐஸ் கிரீம் !" என்று காருக்குள்ளிருந்தவாறே கையைத் தட்டி அழைத்தான் சங்கர். பிறகு சாந்தியிடம் திரும்பி, சொல்லப் பயமாயிருக்கிறது...ஒன்றுமில்லை...நாளை சாயந்தரத்துக்குள் மூன்று சிட்டம் நூல், ராட்டையில் நூற்றுக் காட்டு பார்க்கலாம் !" என்றான்.

" ஓகோன்னானும் !" என்று கழுத்தை வெட்டினாள் சாந்தி அலட்சியமாக. " உங்களுக்கு நடுநடுவே வருகிறதே ஒரு பைத்தியம், அதிலே என்னையும் மாட்ட இப்படி ஒரு சூழ்ச்சியா ?"

" சாந்தி...பந்தயம் சும்மாதான். உனக்கும்தான் ஒரு பயிற்சி வரட்டுமே !"

" வேண்டாம், வேண்டாம் ! அதைவிடப் புத்திசாலித்தனமான வேறு ஆயிரம் பயிற்சி இருக்கிறது. அதையெல்லாம் கற்றுக் கொண்ட பிறகு உங்களிடம் வருகிறேன்." என்று சாந்தி கடுகடுப்பாகப் பதில் சொல்கையில், ஐஸ்கிரீம் வண்டி வந்துவிடவே, " சாக்லேட் கிரீம்தானே, சாந்தி ? இரண்டு எடப்பா," என்றான் சங்கர்.

காரின் இந்தண்டைப் பக்கத்தில் ஒரு பிச்சைக்காரப் பெண் வந்து நின்று, " அம்மா...மகாலக்ஷ்மி...தாயே..." என்று பல்லவி பாடினாள்.

வெறுப்புடன் தன் வெல்வெட் கைப் பையைத் திறந்தாள் சாந்தி. " சே ! வரவர மெரினாகூடச் சுத்த நியூசென்ஸாகி விட்டது. ஹிண்டு லட்டர்ஸ் டு தி எடிட்டருக்கு ஒரு கார்டு எழுதிப் போடப்போகிறேன் !" ஒரு பத்துப் பைசா நாணயத்தைத் தூக்கி எறிவதற்காகத் திரும்பிய சாந்தி, சரேலெனப் பின்னடைந்தாள்.

ஒரு விநாடி பிரமித்து, பேச்சற்று, அசைவற்றிருந்தாள். பின்னர், வீசி எறியவிருந்த நாணயத்தைப் பயபக்தியுடன் மெல்ல அந்த ஏழைப் பெண்ணிடம் கொடுத்தாள்.

'' பாதி ஐஸ்கிரீம் கரைந்து விட்டது. பிடி,'' என்று நீட்டிய சங்கர், அவள் முகத்தோற்றத்தில் காணப்பட்ட மாறுதலினுல் அதிர்ச்சி அடைந்தவனுக, '' என்ன சாந்தி? நான் என்ன அப்படித் தப்பாகப் பேசிவிட்டேன்? சும்மா ஒரு விளையாட்டுப் பந்தயம்தானே?'' என்று சமாதானம் செய்ய முயன்முன்.

'' அதெல்லாம் ஒன்றுமில்லை...வேறே...'' என்று கூறிய சாந்தி, ஐஸ்கிரீமை வாங்கிக்கொண்டு சுவைக்கலானுள்!

ஆனுல், நீளப் பரந்து கிடக்கும் நீலக் கடலைச் சுவைக்கவில்லை: மனத்தின் மணவாளனின் அண்மையிலுள்ள தனிமையின் இன்பத்தைச் சுவைக்கவில்லை; குழந்தையின் ஸ்பரிசம் போல உடலைப் புளகம் கொள்ளச் செய்யும் காற்றைச் சுவைக்கவில்லை; அவள் கண்கள் எங்கோ யோசனையில் சொக்கியிருந்தன.

அவளுடைய அமைதியைக் குலைத்துவிட்ட குற்றம் சங்கரின் உள்ளத்தில் குறுகுறுத்தது.

'' சிலுசிலுவென்று காற்று வீசுகிறதே? போகலாமா?'' என்முன் ஏமாற்றத்துடன்.

'' ஆமாம், என்று பதிலளித்த சாந்தி, தலைகுனிந்து தன் கைகளையும் விரல்களின் செக்கச் சேவேலென்ற நகப் பூச்சையும் பார்த்தவாறேயிருந்தாள்.

கார் மவுண்ட்ரோடு வழியே நீந்திக் கொண்டிருந்தபோது, திடீரென, '' சர்க்கா எங்கே கிடைக்கும்? அங்கே நிறுத்துங்கள் கொஞ்சம்,'' என்முள்.

'' சாந்தி, என் மீதுள்ள கோபத்துக்காக எதுவும் செய்ய வேண்டாம்,'' என்று சங்கர் மன்முடினுன்.

'' நீங்கள் ஒன்று! எனக்கே ஆசையா யிருக்கிறது,'' என்று சிரித்தவாறு சாந்தி சொன்னபோதிலும் அவன் சற்றுத் தயங்கியவாறேதான் கடையின் வாசலில் நிறுத்தினுன் காரை.

விற்பனைப் பகுதியிலிருந்த பெண், சாந்தி புதிதாக நூற்கக் கற்பவள் என்று அறிந்ததும், சுலபமாக வேலை செய்யும் பல வித சர்க்காக்களை எடுத்துக் காட்டி, விளக்கினுள். ஆனுல், சாந்தி, பழைய மாடல் ராட்டினமொன்றையே தேர்ந்தெடுத்தாள். பஞ்சு வாங்கிக்கொண்டு, பட்டை போடுவது போன்ற சில்லறை வேலைகளைச் சுருக்கமாகத் தெரிந்துகொண்டதும், 'போகலாம்,'' என்முள் சங்கரிடம்.

''என்ன இதெல்லாம்?'' என்று பங்களாவில் அவள் படியேறியபோது பெரியப்பா கேட்டார், ராட்டையையும் மற்றக் கருவிகளேயும் பார்த்து.

''ரொம்ப வருத்திக் கொள்ளாதே, சாந்தி; உனக்காகவே இஷ்டமானல், முடிந்தவரையில் மட்டும் செய், போதும். பந்தயம் கிந்தயமெல்லாம் கடற்கரையிலேயே காற்றில் விட்டுவிட்டேன்,'' என்ருன் சங்கர்.

இருவருக்கும் புன்னகையின் மூலமே பதிலளித்துவிட்டு உள்ளே சென்று விட்டாள் சாந்தி.

மறுநாள் மாலே சங்கர் வழக்கம் போல் பங்களாவுக்குள் நுழைந்த போது, ஓடிவந்து வரவேற்புக் கொடுக்கும் சாந்தியைக் காணவில்லே.

குறுக்கும் நெடுக்குமாக உலாவிக் கொண்டிருந்த பெரியப்பா, அவனேக் கொஞ்சம் கோபமாகவே பார்த்தார், ஏதோ கண்டிக்கிற பாவனேயில். விழாவில் கலந்துகொண்டு, அதற்கேற்ற ஜிப்பா வேட்டி கோலத்தில் வந்ததைக் கண்டதால் வேறே அவருக்குக் கோபம் வந்தது போலும்.

''நேற்று நீங்கள் சாந்திக்கு என்ன உபதேசம் செய்தீர்களோ போங்கள்! நல்ல கூத்தடிக்கிருள் இன்று முழுதும்!'' என்ருர்.

சங்கர் பதறியவனுக, ''ஏன்? ஏன்? என்ன பண்ணினுன்?'' என்று கேட்டான்.

''அதை நீங்களே போய்ப் பாருங்கள். அறைக்குள் கதவைத் தாளிட்டுக் கொண்டு ராட்டையும் கையுமாய் உட்கார்ந்து கொண்டவள்தான். எழுந்திருக்கவேயில்லே! தண்ணீர், ஆகாரம் கூடக் கிடையாது!''

''அடடா!'' என்று கூவிய சங்கர், தாவியேறி மாடியை அடைந்து, ''சாந்தி கதவைத் திற! திற!'' என்று படபடவெனத் தட்டினுன்.

''இதோ ஆயிற்று! கொஞ்சம் பொறுங்கள்!'' என்று சாந்தி பதில் கொடுத்தாள்.

ஐந்து நிமிடம் பொறுத்துக் கதவைத் தட்ட அவன் மீண்டும் கையை உயர்த்திய சமயம், கதவு திறந்து கொண்டது.

சாந்தி, ஒவ்வோர் அங்கமும் தளர்ந்து தொய்ய, களேப்பும் தள்ளாமையுமாக வெளிப்பட்டாள். ஆனுல், வதனத்தில் அபூர்வமான, தெய்வீகமான களேதென்பட்டது.

''இதோ மூன்று சிட்டம்!'' என்று உற்சாகம் கொப்புளிக்கும் குரலில் நீட்டினுள். ''கொஞ்சம் கரடு முரடாக இருக்கும்! ஒரே இரவில் கற்றுக்கொண்டு முடித்தேனே, அதுதான்......''

''சாந்தி! கங்கிராஜுலேஷன்ஸ்! மகா பெரிய சாதனை! ஆனுல் இப்படி உடம்பைக் கெடுத்துக் கொள்ளலாமா? இருந்தாலும், கையைக் குலுக்கிப் பாராட்டுகிறேன்!'' என்று அவள் கையை அழுத்திக் குலுக்கினுன் சங்கர்.

''ஆ! உஸ்!'' என்று வீரிட்டாள் சாந்தி, ''தொட்டாலே வலிக்கிறது இரண்டு உள்ளங்கையும்!''

''சாந்தி! ஐயோ!'' என்று கன்றிச் சிவந்து ரத்தம் கட்டி விட்ட அந்த விரல்களைப் பார்த்து, பொருமிவிட்டான் சங்கர். ''இந்தா, உன் சாதனைக்குப்பரிசு!'' ஜிப்பா பையிலிருந்து, அந்த விலையுயர்ந்த நகப்பூச்சுக் குப்பியை எடுத்தான்.

இளநகை விளையாடியது சாந்தியின் இதழில்.

''ரொம்ப நன்றி...... ஆனுல்... மன்னிக்க வேண்டும்... இனிமேல், சங்கர், இதெல்லாம் எனக்குத் தேவைப்படாது. ஏற்கனவே இருப்பதைக்கூட என் சிநேகிதிகள் யாருக்கேனும் கொடுத்து விடலாமென்றிருக்கிறேன்!''

சங்கர் திணறினுன்: ''என்ன சாந்தி? இதற்காகப் பந்தயம் கட்டி, இருபத்துநாலு மணி நேரம் போராடி......''

"இதற்காகவா? அப்படியா நினைக்கிறீர்கள்?" சாந்தியின் பிறை நெற்றியில் சிந்தனை வளையங்கள் நெளிந்தன. ''இல்லை சங்கர்! விதவிதமான நகப்பூச்சுக்காக ஆண்டவன் விரல்களைக் கொடுக்கவில்லை என்ற உண்மை திடீரென நேற்று எனக்குத் தெரிய வந்தது. உழைக்கவும், பிறருக்கு உதவவும் விரலைப் பயன்படுத்தலாம் இல்லையா? எத்தனை பேருக்கு இனிமேல் நான் நூற்கச் சொல்லித் தரலாம்? சொல்லித் தந்து, ஒரு பிழைக்கும் வழியை எத்தனை அபலைப் பெண்களுக்குக் காட்டலாம்? இல்லையா சங்கர்?''

''உண்மைதான் சாந்தி. அவ்வளவும் உண்மை. ஆனுல் திடீரென நீ எப்படி மாறினுயென்றுதான் ஆச்சரியமாயிருக்கிறது!'' என்முன் சங்கர் உணர்ச்சியால் கரகரத்த குரலில்.

''நீங்கள் ஐஸ்கிரீம் வாங்கியபோது, நான் பிச்சை போட்டேனே ஒரு பெண்ணுக்கு? அவளுக்கு...... அவளுக்கு...''

''அவளுக்கு?''

''கை இருந்தது. விரல் இல்லை! ஐந்து விரலும் அற்று விழுந்துவிட்டன? அவள் நகப்பூச்சுக்கு அழவில்லை! விரலினுல்

பிழைக்கக்கூடிய வாழ்க்கையை இழந்துவிட்டதற்கு அழுதாள்! தெய்வம் என் கண்ணைத் திறந்தது அந்த வினடியில்தான்!''

''சாந்தி! என் சாந்தி!'' என்று அவளை எல்லையற்ற ஆர்வத்துடன் அணைத்துக் கொண்டான் சங்கர். ''இன்று காந்தி இறந்த தினம் என்கிறார்கள். என்னைப் பொறுத்தவரையில் இது வேறு தினம். என் சாந்தி—என் உண்மையான சாந்தி பிறந்த தினம் இன்று!''



11

# அண்ணல் காட்டிய வழி

வைத்தியர் சொல்லி விட்டுப் போய்விட்டார்: அவர் தொழில் அது. அவர் எழுதித் தந்திருக்கும் ஊசி மருந்தை இன்னும் இரண்டு மணி நேரத்திற்குள் கொடுக்காவிட்டால் என் மகன் சங்கரன் பிழைப்பதே அரிதாம். பணத்திற்கு எங்கே போவது? வண்ணானுக்குப் போடாத சட்டையும் தைத்த வேஷ்டியுமாக நான் கடன் கேட்கப் போனால் யார்தான் தர முன் வருவார்கள்? யாரைத்தான் போய்க் கேட்பது? மழை வேறு தூறிக் கொண்டே இருக்கிறது. ஆயிற்று, மழை வலுத்தால் வீட்டில் ஆங்காங்கு ஒழுக ஆரம்பித்துவிடும். பாத்திரங்களைப் பார்த் ஒவ்வொரு இடத்திலும் வைக்க வேண்டும்.

எல்லாம் எனக்குச் சகஜமாகி விட்டது. இங்கு அமர்ந் நான் யோசிக்கும்போது என் பலகீனம் நன்றாகப் புரிகிறது. இன்று கடன் வாங்கி மருந்து வாங்கி என் மகனைக் காப்பாற்றி விடலாம். ஆனால் நாளைக்கு? என் வயிற்றில் பிறந்த தோஷத்திற்காக இன்று இல்லாவிட்டால் நாளை அவன் இறக்கவேண்டியது தானே? அவனுக்கு வந்திருக்கும் வியாதி கொடிது. அரசன் வீட்டு உணவு தந்தால் தான் அவன் உடல் தேறும். இன்று வியாதியால் மடிவான், அல்லது நாளை பட்டினியால் போவான்.

நான் குழந்தையைத் திரும்பிப் பார்க்கவில்லை.

'' இந்தாருங்கள்—இடித்த புளி மாதிரி உட்கார்ந்திருந்தால் எப்படி? ஏதாவது வழி செய்யக் கூடாதா?'' என்று கண்ணீர் மல்க, தொண்டை அடைக்க என் மனைவி புலம்புகிறாள்.

“கரைத்த புளி மாதிரி ஓடுவதற்கு என் கையில் பணம் இல்லையே? இடித்த புளி மாதிரி சமைந்து கிடக்கிறேன். என்னை என்ன செய்யச் சொல்கிறாய்?” என்று நான் சீறி விழுந்தேன்.

அவள் தன் புடவை முந்தாணியை வாயில் அடைத்துக் கொண்டு விம்மியபடியே பின்புறம் போனாள்.

நான் கல்லாகச் சமைந்து கிடந்தேன், கூடத்தில் நினைவின் றிப் போராடும் என் ஒரே குழந்தையைப் பார்த்தேன். மீண்டும் திரும்பிக் கொண்டேன்.

வீட்டுக்காரன் வந்து விட்டுப் போனான். கூரையிலுள்ள பொத்தல்களைப் பழுது பார்க்க மாட்டானும். நான் காலி செய் தால் அவனுக்கு நிறைய வாடகை வருமாம். வீட்டை விட்டு வெளியேறும்படிக் கூறி விட்டான்.

என் மனைவி கோபித்துக் கொண்டு எங்கே போனாளோ? அவள் உடலிலும் தாலியைத் தவிர நகை இல்லை. எல்லாம் உரித் தாகி விட்டது. நடுக்கடல் வரை இறங்கி விட்ட ஒருவன் அலை அடிக்குமே என்று பயப்படத்தான் முடியுமா? பயந்துதான் எங்கு போக முடியும்? அப்படி ஒரு நிலையில் என் மனம் மரத்து நின்று விட்டது.

கஷ்டம் வந்தால் மனம் குழம்பும் என்கிறார்கள்; எனக்கு அப்படித் தோன்றவில்லை. துயரம் வரும் காலையில் தான் புத்தி மிகத் தெளிவாக, நிலையாக இருக்கிறது. எனக்கு வருத்தமோ ..படப்போ தோன்றவில்லை. நான் உயிரோடு இருந்து என்ன ..த்தைக் கண்டுவிட்டேன். என் மகன் இறந்து போனால்தான் ..ன்ன? அவன் பிழைத்தெழுந்ததும் அவனுக்கு என்ன பெரு ..வாழ்வு நான் அளித்துவிடப் போகிறேன்?

நான் ஒரு ஏழையின் மகனாகப் பிறந்தேன். என் தந்தையை விட என்னை ஏழையாக ஆக்கிவிட்டது பொருள்களின் அகவிலை. என் தந்தை ஒரு சிறிய பிள்ளையார் கோவில் பூஜை செய்து வந் தார். தவிரவும், குளத்தங்கரை அரச மரத்தடியில் அமர்ந்திருப் பார். அங்கு ஸ்நானம் செய்ய வருபவர்கள், அரசமரம் சுற்றுப வர்கள், பிள்ளையாருக்கு அர்ச்சனை செய்ய விரும்புபவர்கள் இப் படி யாராவது தட்சிணை தருவார்களா என்று ஏங்கிக் கிடப்பார். ஏழ்மையிலேயே பழகிப் போராடி அவர் மனமே ஒரு தினுசாகி விட்டது. இரண்டணு காசுக்காக அவர் சில பொய்களைச் சொல்லி விடுவார்.

சில சமயம் அவர் கடினமாகப் பேசுவார். “இந்த ஊரில் இன்னும் நிறைய பேர்களுக்குக் குழந்தைப் பேறு இல்லாமல்

இருக்கவேண்டும் என்று தினமும் பிள்ளையாரை வேண்டுகிறேன்'' என்பார்.

என் அம்மா சிரிப்பாள். ''அத்தனை பேரும் உங்கள் அரச மரத்தைச் சுற்றினால் அல்லவா உங்கள் வேண்டுகோள் நிறைவேறும்? இப்பொழுதெல்லாம் அவரவர்களும் பட்டணக்கரையில் சென்று வைத்தியமல்லவா செய்து கொள்கிறார்கள்?'' என்பாள். இருவரும் சிரிப்பார்கள்.

எனக்கு புத்தி தெரிய ஆரம்பித்ததும் எனக்கு அவர்கள் பேச்சு ரசிக்கவில்லை. அதற்குமுன் என் தாயின் பின்னாடியே எங்கு தின்பண்டம் கிடைக்கும், எங்கு ஒரு பைசா கிடைக்கும் என்று ஏங்கி ஓடிக்கொண்டிருப்பேன். நாளடைவில் அதில் எல்லாம்கூட என் மனம் லயிக்க மறுத்தது.

நாங்கள் குடியிருந்த சத்திரத்திற்கு ஒரு நாள் ஓர் இளைஞர் வந்தார். நல்ல தேஜஸான முகம், தீர்மையான நாசி, தெளிவான பெரிய கண்கள்—தபஸ்விபோல இருந்தார் அவர். தூய கதர் ஆடை உடுத்து, கையில் ஒரு புத்தகத்துடனும், ஒரு சிறு பையுடனும் அவர் நுழைந்ததும் எனக்கு என்னவோ ஒருவித சிரிப்பு ஏற்பட்டது. கருகருவென்ற தலைமயிரைப் பின்னாடி வாரி விட்டிருந்தார் அவர். அதே கருகருவென்ற தாடி அவருக்குக் கம்பீரத்தை அளித்தது.

நான் அப்பொழுது திண்ணைமீது படுத்துப் புரண்டுகொண்டே திருக்குறள் மனப்பாடம் செய்துகொண்டிருந்தேன். என்னைப் பிடித்து எழுப்பினார் அந்த இளைஞர். அழுக்குப் பிடித்த என் பக்கத்தில் அவர் அமர்ந்துகொண்டார். மெதுவாகப் பேச்சுக் கொடுத்து என்னைப்பற்றி விசாரித்தார். திருக்குறளின் மேன்மையை விளக்கி, அதைப் படிக்கும்போது பக்தி சிரத்தையோடு படிக்கவேண்டும் என்று சொல்லிக் கொடுத்தார். அன்று மாலை பொதுக்கூட்டத்தில் திருக்குறள் போட்டி நடக்கப் போவதாகவும், அதில் ஐந்து ரூபாய் பரிசு வைத்திருப்பதாகவும் அதற்காகப் படிப்பதாகவும் கூறினேன்.

அவர் என்னவோ போலச் சிரித்தார். பிறகு என்னைத் தன்னுடனேயே இருத்திப் பேச்சுக் கொடுத்தார். அன்றையப் பொதுக் கூட்டத்தை நடத்தவே அவர் வந்திருந்தார் என்பது பிறகு விளங்கியது.

அன்று பரிசு பெற்றேன் நான். அதைக்கொண்டு என் தாயிடம் தரும்போது அவரும் என்னுடன் வந்தார். என்னைத் தன்னுடனேயே அழைத்துச் செல்ல என் தந்தையை அநுமதி கேட்டார். ஐந்து குழந்தைகளில் ஒருவன் குறைவதை அவர்கள்

பொருட்படுத்தவில்லை. அல்லது, அவனாவது எங்காவது வயிறார உண்ணட்டும் என்று விட்டுவிட்டார்களோ என்னவோ.

நான் அவருடன் வார்தாவுக்குப் போனேன். அங்கேயே படித்தேன், பயிற்சி பெற்றேன். பெரியவனாகி என் ஊர் திரும்பினேன்.

ஆசிரியப் பயிற்சி பெற்று எங்கள் ஊரிலேயே பணி புரியலானேன். என் பெற்றோர்களுக்குப் பணி செய்ய வேண்டும் என்ற பேரவா என் மனத்துள் இருந்தது.

நாளடைவில் அவர்கள் இறந்துவிட்டார்கள். என் இரு தங்கைகளுக்கும் மணம் செய்து அவர்களைப் புக்ககம் அனுப்பி விட்டேன். என் உடன் பிறந்த சகோதரர்கள் வேலை தேடி எங்கோ நகரத்திற்குச் சென்று விட்டார்கள்.

நான் மட்டும் எனக்கு குருவாக விளங்கிய அந்தக் கதராடை இளைஞரின் வாக்குப்படி இன்றுவரை எளிய வாழ்க்கையும் நேர்மையுமாகக் கண்ணியமாக வாழ்கிறேன். ஆயின் ஏழ்மை கொடிய வியாதி. அதை விரட்டி அடிக்க எனக்கு வழி தெரியவில்லை.

மணம் புரிந்துகொண்டேன். மக்கள் பிறந்தன. இறந்தன. இன்று இந்த ஒருவன்தான் மிஞ்சியிருக்கிறான். அவனும் சற்றுப் பொறுத்து என்னவாக ஆவானோ ?

நான் கூடத்திற்குச் சென்று மகனின் அருகில் அமர்ந்தேன். எட்டு வயதுச் சிறுவன். எலும்பும் தோலுமாகக் கிடந்தான். தொண்டையில் வந்து அடைந்துவிட்டது. கண்களைத் திறந்து என்னைப் பார்த்தான். பெரிய கண்கள். தெளிந்த தடாகங்கள் போன்ற கண்கள் என்னைச் சீர் தூக்கிப் பார்த்தனவோ ?

என் உடல் பலம், மனவலுவு யாவற்றையும் திரட்டி ஓர் அமைதியான சிரிப்புச் சிரித்தேன்.

கீதையைப் பிரித்தேன். அவனுக்குக் காது கேட்கும்படிப் படிக்க ஆரம்பித்தேன். அவனுக்கு மனப்பாடமானபடியால் கேட்டுக்கொண்டே யிருந்தான். அவன் மூச்சு முட்டத் தவிப்பது எனக்கும் தெரிந்தது அவனுக்கும் தெரிந்தது. தெரியாதது போல இருவரும் பகவத்கீதையில் ஈடுபட்டோம். என் மனம் தளராமலிருக்க வேண்டும் என்று ஆண்டவனைத் துதித்த வண்ணமிருந்தேன்.

என் மனைவி எங்கு சென்றாளோ ?

குழந்தை தூங்கி விட்டானே? இல்லை...? அவன் கண்கள் மூடியிருப்பதைப் பார்த்தேன். அதற்குள் என் மனைவி டாக்டருடன் உள்ளே நுழைந்தாள்! என் வியப்பை அடக்கிக் கொண்டு ஒதுங்கி நின்றேன். என்னை வெட்டிவிடும் பார்வை ஒன்றை வீசி விட்டு அவள் வைத்தியருக்கு ஒத்தாசை செய்தாள். அவர் ஊசி மருந்தை ஏற்றிவிட்டுப் போய்விட்டார்.

''எப்படி வாங்கினாய் மருந்து? டாக்டரை எப்படிச் சந்தித்தாய்?'' என்று நான் கேட்ட கேள்விக்கு மனைவி பதில் சொல்லவில்லை. அதற்கு மாறாக அவள் என்னையே மடக்கினாள்.

''ஊரெல்லாம் ஒரே பேச்சாக இருக்கிறதே? உங்கள் காதுக்கு ஒன்றுமே எட்டவில்லையா?'' என்று என்னைத் தாக்கினாள் அவள்.

'''என்ன?'' என்று கேட்ட எனக்கு, விஷயம் தெரியாமல் இல்லை.

''என்ன'வா? வீட்டிலேயே களி மண் கட்டியாட்டமா விழுந்து கிடந்தால் எப்படி? லாட்டரி விழுந்து விட்டதாமே, போய்ப் பார்த்தீர்களா?''

''பார்த்தேன்.''

''என்ன, என்ன! போய்ப் பார்த்தீர்களா? நமக்கு வரவில்லையாக்கும். யாருக்கு வந்ததாம்? எவனாவது பணக்காரனுக்குத்தான் விழுந்திருக்கும். நம் தசை நமக்குத் தெரியாதா?'' அவள் பலவாறும் புலம்ப ஆரம்பித்தாள்,

''உஷ்! சத்தம் போடாதே!'' என்று அடக்கி அவளை அப்பால் அழைத்துப் போனேன்.

''என்ன எண் பரிசு பெற்றது தெரியுமா?'' என்று நான் கேட்டான், மெதுவாக.

"இதோ எழுதிவந்தேனே! 5342. இன்னமும் இதற்கு உரியவர் வரவில்லையாம். அதனால் பெயரைப் போடவில்லை, யாருக்கு அடித்ததோ?"

''இதோ பார். சத்தம் போடாதே. நம் ஸ்ரீநிவாசனுக்குத் தான் கிடைத்திருக்கிறது. இதோ பார்த்தாயா?'' என்று கூறி அவளுக்கு என்னிடமுள்ள லாட்டரி டிக்கட்டைக் காட்டினேன்.

அவள் வாயடைத்துப் போனாள். ''அட, பாவி, அவன் தான் பணத்திலே புரளுகிறானே! இன்னமும் கிடைத்தால் என்ன செய்யப் போகிறான்? வாரி இறைப்பான்.''

'' அது அவன் பாடு.

என் மனைவி ஒரே கணம் நிதானித்தாள். உடனே என்னிடம் வந்து யோசனை கூறினாள். அவள் முகம் தன் புத்தியின் மேன்மையில் பூரித்துப் போயிருந்தது. '' ஸ்ரீனிவாசனுக்கு இந்த எண் என்று உங்களுக்கு எப்படித் தெரியும்? ''

'' நான் தானே வாங்கினேன்? ''

'' உங்கள் எண் தான் இது '' என்றாள் அவள், தீர்மானமாக.

'' இல்லை, அவனுக்காக எடுத்த எண் தான் இது '' என்று நானும் தீர்மானமாகக் கூறினேன்,

'' யார் அறிவார்கள்? அவன் பெயர் கூட டிக்கட்டில் இல்லை. உங்கள் மனசில் தானே இந்தப் பாகுபாடெல்லாம்? ஸ்ரீநிவாசனுக்குத் தெரியாது. இந்தப் பணத்தைப் பெறுவது நமக்குப் பாவமாகாது. குழந்தை பிழைப்பான். ஸ்ரீநிவாசன் பணம் நாசமாகிறதே? இந்த ஒன்றாவது நல்லமுறையில் பயன்படட்டுமே? பேசாமல் உங்களுடையது என்றே சொல்லுங்கள். அவ்வாறே நினைத்துக் கொள்ளுங்கள் '' என்று அவள் புத்தி புகட்டினாள்.

'' நான் அவனுக்குத் தந்தி அடித்துவிட்டேன் '' என்றேன் நான், வெற்றி முறுவலுடன்.

அவள் தலையில் பளீர், பளீர் என்று அடித்துக் கொண்டாள். '' இப்படியும் ஓர் அசட்டுத்தனமா? அவனுக்கு இந்த ஆயிரம் ரூபாய் வரவா, செலவா? அவன் கண்டானா? பேசாமல் உங்களுடையது என்று சொல்லவேண்டியதுதானே? வெண்ணெயைத் திரட்டிக் கையில் கொடுத்தால் அதைச் சாக்கடையில் எறிவார்களா?'' என்று அவள் புலம்பினாள்.

'' இதோ பார். இதெல்லாம் யோசிக்க நமக்கு நேரமில்லை. குழந்தை உயிருக்கே மன்றாடுகிறாள். நாம் அங்கு சென்றிருந்து ஆண்டவன் பெயரையாவது உச்சரிப்போம்'' என்றேன்.

அவள் காளி உருவம் எடுத்துவிட்டாள். கண்கள் பிதுங்க, பல்லை நெற நெறவென்று கடித்தாள். அடங்கிப் பழகி விட்டதனால் தான் என்னை அடிக்கவில்லை, இன்றேல் அவளுக்கு அப்பொழுது வந்த ஆத்திரத்தில் என்னைக் கொன்றுவிட்டிருப்பாள்.

'' என் வயிறு எரிகிறதே? என் மகனைக் கொன்ற பாவியல்லவா நீங்கள்! தந்தி கொடுக்க உங்களிடம் பணமேது? அது என் மகனுக்கல்லவா பயன்பட்டிருக்கவேண்டிய பொருள்?'' என்று அவள் அழுது தீர்த்தாள்.

அவளது பெற்ற மனத்தின் வேதனையை நான் உணராமல் இல்லை. ஆயினும் என் மனம் நேர்மையினின்று தளர இடம் தரவில்லை.

என் மகன் அருகில் நான் அமர்ந்தேன். கிழித்த நார் போல் கிடந்தான் அவன்.

வேண்டாம் என்று தடுத்தாலும் என் மனம் அவன் நிலையை ஆராயாமல் விடவில்லை. இனி எத்தனை நேரம் இந்தக் குழந்தை இங்கு கிடப்பான்? பிறகு? பிறகு என்று நினைத்துப் பார்க்கக் கூட எனக்குத் தைரியம் இருக்கவில்லை.

மனைவியின் விசும்பல் அடங்கியது. அவளும் என்னருகில், குழந்தையின் காலடியில் வந்து விழுந்து கிடந்தாள். அழுது அழுது அவள் சக்தியிழந்துவிட்டாள் போலும்.

என்னைத் தொட்டு எழுப்பினுள் அவள். அவள் கண்கள் கெஞ்சின. ''இப்பொழுது தான் என்ன? அந்த எண் உங்களுடையது என்று கூறிவிடுங்களேன்!'' என்றிரைஞ்சியது அந்தப் பார்வை.

நான் தெய்வமல்ல. நான் மகான் அல்ல, எல்லாம் வென்ற தபஸ்வியுமல்ல. அந்தக் குரு அளித்த பயிற்சி என்னுள் ஊறி விட்டது. உடலிலும் குடிகொண்டு விட்டது. அவ்வளவுதான். என் வீட்டின் அவல நிலையும், என் ஒரே குழந்தையின் மரண அவஸ்தையும், என் மனைவியின் இதயத் துடிப்பும் என்னை மிருகத்தினும் கீழான நிலைக்கு இழுத்துச் செல்ல முயலவில்லையா? என்னுள் ஏற்பட்ட போராட்டம் எனக்கல்லவா தெரியும்!

விடிய விடியக் குழந்தையின் அருகில் அமர்ந்திருந்தேன். விடிந்ததும் டாக்டரைத் தேடிச் சென்றேன். அவர் கிளம்பச் சற்று நேரமாகும் என்றபடியால் அருகிலுள்ள பள்ளிக்கூடத்திற்குச் சென்றேன். அந்த டாக்டரின் முயற்சியால் அங்கு ஓர் இலவச வைத்தியசாலை நடந்து வந்தது. அதன் கட்டட நிதிக்காக லாட்டரி வைத்திருந்தனர்.

போன தடவை என் நண்பன் ஸ்ரீநிவாசன் வந்திருந்தபோது வீடு வீடாக டிக்கட்டு விற்க வந்திருந்தனர். அவன் அலட்சியமாக இரண்டு ரூபாய்களை என்னிடம் தந்து இரண்டு டிக்கட்டு வாங்கச் சொன்னுள். எண்ணைக் குறித்துக்கொள்ளக்கூட மறுத்து விட்டான்.

''நேர்மையாகப் போடமாட்டார்களடா. நமக்கெல்லாம் வராது. உள்ளுக்குள் ஆள் வைத்திருப்பார்கள். அவர்களுக்கே

போகும். பரவாயில்லை. இரண்டு ரூபாய் தர்மம்'' என்றான் அவன்.

அவனிடமிருந்து ஒரு ரூபாய் மட்டுமே பெற்றுக்கொண்டேன். ''சீனு, நேர்மை என்பது உலகத்திலிருந்தே அழிந்துவிடவில்லை'' என்றேன்.

"போடா, முட்டாள்! இந்த உலகமே கள்ளச் சந்தை. அதனால் தான் செழிப்பாக இருக்கிறது. அதன் நடுவில் நேர்மை இருக்குமானால் அது உன் போலத்தான் இருக்கும். நீ இருக்கிறாய், பார். உடுக்க உடுப்புக் கிடையாது, குடிக்கக் கஞ்சி கிடையாது. வாயிலே கொள்கை, மனசிலே பிடிவாதம், நல்ல காலம், நாட்டிலே நேர்மை குறைவாக இருக்கிறது'' என்று கூறி அவன் கடகட வென்று சிரித்தான்.

அவன் ரூபாயை அவன் மீதே எறிந்துவிட என் மனம் துடித்தது. ஆயினும் அடக்கிக்கொண்டேன்.' ''உன் இருட்டு மனசை வெளிச்சமாக்கவாவது உனக்கே பரிசு வரவேண்டும்'' என்றேன்.

அன்று கூறியது இன்று பலித்தது. டாக்டர் அந்தக் குலுக்கலைத்தான் நடத்திக்கொண்டிருந்தார், அப்போது. நான் அது முடியும் வரை இருந்து விட்டு விஷயத்தைச் சொல்லி அவரை என் வீட்டிற்கு அழைத்தேன். அவர் ஓடோடி வந்தார். அதிருஷ்ட எண்ணைக் குறித்துக் கொண்டு வந்த நான், அவர் போன பிறகு தான் பார்த்தேன். ஸ்ரீநிவாசனின் எண்ணிற்குத்தான் பரிசு வந்திருந்தது, என் குறிப்புப் புத்தகத்தில் எழுதி வைத்திருந்தது என்னை எள்ளி நகையாடியது.

அதைக் கண்டதும் என் மனம் தவிக்கவில்லையா? என் புத்தி பேதலிக்கவில்லையா? நான் ரிஷியா, முனியா? சதையும் ரத்தமும் கொண்ட சாதாரண மனிதன் தானே?

குறிப்புப் புத்தகத்தின் ஏட்டைக் கிழிக்க என் கை ஓடியது. மகனின் உடல் நிலையைப் பற்றிய துயரத்தின் வேலை அது. பெற்ற மனத்தின் பித்து என்னைப் பலவாறும் தூண்டியது. ஸ்ரீநிவாசன் இதனால் ஒன்றும் கஷ்டப்படப் போவதில்லை. ஆயின், என் வாழ்க்கையே மேன்படும். என் மகன் பிழைப்பான். என் வீடு நிலைக்கும். நான் தலைநிமிரலாம்.

ஆனால் என் கை பதறியது. 'புழுதியில் புரளாதே!' என்று என் குருநாதர் எச்சரிப்பதுபோல ஒரு பிரமை தட்டியது. என் குறிப்புப் புத்தகத்தில் அந்தக் குருத்துத் தாடியும், ஊடுருவும் கண்களும், தெளிந்த பார்வையும் தெரியக் கண்டேன். உடனே கண்களை இரு கைகளாலும் பொத்தி மன்னிப்புக் கோரினேன்.

என் சட்டையில் இருந்த சில்லறையைக் கொட்டி எண்ணினேன். தபாலாபீசுக்குப் போய்த் தந்தியைக் கொடுத்து விட்டு வந்த பிறகே என் பரபரப்பு அடங்கியது. என் தவற்றிற்கு ஈடு செய்ய ராமநாமத்தை ஜபித்துக்கொண்டு முற்றத்துக் குறட்டில் அமர்ந்தேன்.

என் மனைவி என்ன அறிவாள், பாவம்! என்னை நிந்தித்தாள். தானே வெளியே சென்றுள் அந்த மழைத் தூற்றலில். வைத்தியரை அழைத்து வந்தாள்.

'' டாக்டர் எப்படி வந்தார் ? மருந்துக்குக் காசு ஏது ?'' என்று மீண்டும் நான் கேட்டேன்.

தன் கழுத்துத் தாலிச் சரட்டைக் காட்டினுள் அவள். அதிலிருந்த தங்கத் திருமாங்கல்யத்திற்குப் பதிலாக ஒரு மஞ்சளைக் கட்டியிருந்தாள்.

'' விற்றுவிட்டாயா ? ''

'' விற்கப் போனேன். ஆனுல் அந்தக் கடைக்காரன் வாங்க மறுத்துவிட்டான். என் கண்ணீரைப் பார்த்துக் கடனுகத் தந்தான். '' அவளால் பேசமுடியவில்லை.

அந்த அன்னையின் அன்பு என்னை மெய்சிலிர்க்க வைத்தது. என் கண்களின் கடையில் கசிவு இருப்பதை உணர்ந்தேன்.

அவளே எழுந்தாள். இடுப்பில் இருந்த திருமாங்கல்யத்தை எடுத்து மீண்டும் கயிற்றில் கோத்துக் கட்டிக்கொண்டாள்.

'' கடனை எப்படித் திருப்புவாய் '' என்று நான் இரக்கமற்றுக் கேட்டேன்.

'' வீட்டிலுள்ள பாத்திரங்களை விற்பேன் '' என்றுள் அவள், உறுதியாக.

கூடத்து மூலையில் மழையை ஏந்திக்கொண்டு நின்ற அண்டாவைப் பார்த்தேன். மழை நன்ருக வலுத்துவிட்டது.

அப்பொழுது சிலர் வீட்டிற்குள் வந்தனர். '' வாத்தியார், சார்! '' என்று அழைத்தனர்.

'' என்ன ? '' என்று கேட்டுக்கொண்டே போனேன்.

'' உங்கள் டிக்கட்டு எண் என்ன, சார் ? முதற் பரிசு வந்தவர் யார் என்று தெரியவில்லையே ? நீங்களும் வாங்கினீர்கள். பேசாமல் இருந்துவிடப் போகிறீர்களே என்று வந்தோம். உங்கள் பையனுக்கு வேறு உடம்பு சரியில்லையாமே ? '' கமிட்டியைச் சேர்ந்தவர்கள் வளவளவென்று பேசினுர்கள்.

''பரிசு கிடைத்தால் வீட்டில் கிடப்பேனு?'' என்று சிரித்துக்கொண்டே கேட்டேன்.

''நீங்கள் கிடப்பீர்கள், சார்'' என்று சொல்லி ஒருவர் சிரித்தார்.

நான் எழுந்து என் குறிப்புப் புத்தகத்தைக் கொண்டு காட்டினேன்.

''என்ன ஆச்சரியம்! ஒரே கையினுல் வாங்கிய டிக்கட்டு கள். அடுத்தடுத்த எண். அவருக்குக் கிடைப்பானேன், உங்க ளுக்கு இல்லாமல் போவானேன், சார்? கடவுளுக்குக் கண் இல்லே, சார், உண்மையாக!''

''எனக்குத் தேவை இல்லே போலும்; இருந்திருந்தால் ஆண்டவன் தந்திருப்பார்,'' என்று பதிலளித்தேன் நான், மேதாவி போல.

என் மனம் தளருவதற்கு முன் என்னேக் கட்டிப் போட்டுவிட வேண்டும் என்றல்லவா நான் என் நண்பனுக்குத் தந்தி அடித் தேன்? எனக்கே உறுதி இருந்திருந்தால் காலேயிலேயே எண்ணேக் காட்டி, டிக்கட்டைக் காட்டிப் பரிசுப் பணத்தை வாங்கி வந்து அவனுக்கு அனுப்பியிருக்க மாட்டேனு? பணத்தை என் கையில் வைத்திருப்பேன் என்ற நம்பிக்கை இல்லாமல்தானே ஸ்ரீநிவாச னுக்கே தந்தி கொடுத்தேன். அவன் வந்து விடுவான் என்ற பயம் என் கையைக் கட்டிப்போடும் என்றல்லவா நானுகப் பூட்டுப் போட்டுக் கொண்டேன்!

என்னே அவர்கள் புகழ்ந்தார்கள்! நேர்மை என்ற போர்வை யாவது இருந்ததே என்று நினேத்தேன். சமயத்தில் தளரப் பார்த்ததே உறுதி! நேர்மை என்பது வெளிப்பூச்சுத்தானே, அல்லது வெறும் பழக்கமாகி விட்டதோ? நான் ஆத்ம சிந்தனே யில் லயித்திருக்க அதிக அவகாசம் கிடைக்கவில்லே.

ஸ்ரீநிவாசனின் கார் சங்கு அலற என் வீட்டின் முன் நின்றது. அவன் ஆர்ப்பாட்டமாக இறங்கி வருவான் என்று எதிர்நோக்கி நான் வாசலே அடைந்தேன். அதற்குள் கமிட்டி யார் அவனேச் சூழ்ந்து கொண்டு, ஒரே மூச்சில் அனேவரும் பேசி அவனேத் திணற வைத்துக் கொண்டிருந்தனர்.

அவன் ஒருவாறு விடுபட்டு உள்ளே வந்தான். ஒரே பார்வை யில் எங்கள் குடும்ப நிலேமை அனேத்தும் அவனுக்கு விளங்கி விட்டது போலும். அவன் என் மனேவியைப் பார்த்துச் சினந்து பேசினுன்.

"ஒரு முட்டாளைக் கட்டிக் கொண்டதனாலேயே உங்கள் மூளையும் மழுங்கி விட வேண்டுமா? இந்த நிலைக்கு வரும்வரை என்ன செய்துகொண்டிருந்தீர்கள்? எனக்கு ஒரு வரி எழுதக் கூடாதா?" என்று அவன் கடிந்து பேசினான்.

அவள் பதிலே சொல்லவில்லை. இதுவரை அடங்கியிருந்த அவள் துக்கம் பீறிட்டு வந்தது. அடிவயிற்றைப் பிடித்துக் கொண்டு அவள் கதறினாள்.

நான் என் மகனின் தலைமாட்டில் கற்சிலையாக அமர்ந்தேன். அந்தச் சிறு உடலில் லேசாக மூச்சு இழையோடியது. நான் எதிலும் ஒன்றாமல் அங்கேயே கிடந்தேன்.

ஸ்ரீனிவாசன் எங்கோ போனான். யாரோ வந்தார்கள், யாரோ போனார்கள். டாக்டர் வந்தார்.

மாலை நேரம் வந்தது கூடத் தெரியவில்லை எனக்கு.

ஸ்ரீநிவாசன் என்னைத் தட்டி எழுப்பினான். "எழுந்திரடா!" என்றான்.

தெருவில் ஆஸ்பத்திரி வண்டி நின்றது. அதில் குழந்தையையும் என் மனைவியையும் ஏற்றினார்கள்.

என்னை ஸ்ரீநிவாசனின் வண்டியில் யாரோ தள்ளினார்கள். மயக்கமுற்ற நிலையில் நான் அவர்களைத் தொடர்ந்தேன். நேரம் ஆக ஆக என் மகனின் உயிரைப் பற்றி நம்பிக்கையே அற்று விட்டது. அவன் அருகில் இருந்தபோது இரண்டுமுறை என் உடல் லேசாக வலித்ததைக் கண்டேன். யாரிடம் சொல்வது? எதற்காகச் சொல்வது என்று மவுனமாகக் கீதைபாராயணம் செய்து கொண்டு அமர்ந்துவிட்டேன். என்னைச் சுற்றி நடந்தது ஒன்றுமே புரியவில்லை.

இதெல்லாம் நடந்து ஒரு வாரமாகிவிட்டது. என் பிள்ளை பிழைத்து விட்டான். என் மனைவி அவனோடு வைத்தியசாலையில் இருக்கிறாள். நான் என் நண்பன் வீட்டுத் தோட்டத்தில் அமர்ந்திருந்தேன்.

ஸ்ரீநிவாசன் வந்தான். என்னைத் தழுவிக்கொண்டான். வியப்பு மேலீட்டால் நான் அவனையே பார்த்தேன்.

"எவ்வளவு பெரிய முட்டாளடா, நீ? வேறு யாராவது உன் நிலையில் இருந்திருந்தால் இப்படிக் கைக்குக் கிடைத்த பணத்தை இழப்பானா?"

நான் ஒன்றுமே பதில் சொல்லவில்லை.

''அன்று என் உள்ளத்திலே பெரிய அதிர்ச்சியடா. எந்த மனிதனும் ஓரளவுதான் நேர்மையாக இருக்க முடியும், நெருக்கடியில் பிறழாதவனே கிடையாது என்று அடித்துப் பேசிய என்னை நீ மாற்றிவிட்டாயடா. ஊரார் உன்னை எப்படி மெச்சினுர்கள் தெரியுமா? என்னிடமுள்ள செல்வம் உன்னிடம் இருந்தால் உலகமே உய்யும். என்னுடையது ஒரு குடும்பத்துக்கேனும் உதவட்டும் என்று தீர்மானித்துவிட்டேன். இனி நீ என்னுடன் தான் இருக்கவேண்டும். உன் மகன் இனி என் மகன். என்ன?'' உணர்ச்சியோடு பேசினுன் ஸ்ரீநிவாசன்.

''நான் வெறும் மனிதன்தானடா. எனக்கும் சபலம் உண்டு'' என்றேன் நான், கரகரத்த குரலில்.

ஆனுல் சபலத்தை வென்று நிலையாக நின்ற என் நேர்மை என் இதயத்தில் பெரியதொரு அமைதியையும் ஒளியையும் நிரப்பியது. அதன் மத்தியில் என் குருநாதரின் முகம் ஜோதியினுள் அருட்ஜோதியாக என்னைக் கண்டு முறுவலித்தது.

★

ரா. பாலகிருஷ்ணன்

# 12

# மனிதருள் ஒரு தேவன்

பத்திரிகைச் செய்திகளைப் படித்து விட்டுப் பரபரப்புடன் பதினைந்து நாள் ரஜாவில் பஞ்சாபுக்குப் புறப்பட்டுச் சென்ற சுபேதார் மல்ஹோத்ரா, கிளம்பிச் சென்ற பன்னிரண்டாவது நாளே முகாமுக்குத் திரும்ப நேர்ந்த விபரீதத்தை விதி என்று ஏற்றுக்கொண்டு ஆறுதல் பெறுவது எளிதன்று.

விடுதிக்குக்கூடச் செல்லாமல் ஹோல்டாலும் கையுமாக நேரே அலுவலகக் கூடாரத்திற்குள் நுழைந்த சுபேதாருக்கு இராணுவ சம்பிரதாயப்படி மரியாதை செலுத்தக்கூடத் தோன்றவில்லை எனக்கு. அப்படியிருந்தது அவரது தோற்றம்! வேதனை தோய்ந்த முகம்; ஒளியிழந்த கண்கள். அந்த உதடுகளில் வழக்கமாக நெளியும் புன்னகையைக் கூடக் காணோமே, இன்று! நெற்றியில் அரும்பிய வியர்வை முத்துக்களைத் துடைத்தவாறு நாற்காலியில் அமர்ந்துக் கால்களை நீட்டிச் சாய்ந்து கொண்டார் மல்ஹோத்ரா.

"சர்தார்ஜி! என்ன நடந்தது...? என்னவோ போலிருக்கிறீர்களே..." என்றேன் தயக்கத்துடன்.

எங்கோ சூன்யத்தில் லயித்த பார்வையை என் பக்கம் திருப்பி "உம்... என்ன கேட்டீர்கள், பாலு...? என்ன நடந்தது என்றா? உம்... எல்லாம் முடிந்து விட்டது, பாலு! எல்லாமே தான்! இனி நடக்க வேண்டியது ஒன்றும் பாக்கியில்லை!" மல்ஹோத்ராவின் கண்கள் கலங்கியதை அப்போதுதான் முதல் தடவையாகப் பார்த்தேன். பிறர் துன்பத்தையெல்லாம் துடைக்கும் அமைதி துலங்கும் மல்ஹோத்ராவின் முகத்தில் ஏன் இந்தச் சோகம்!

அதை மறைக்க விரும்புகிறவர் போல் மேசையின் மீது முகத்தைக் கவிழ்த்துக் கொண்டார்.

பஞ்சத்து ஆண்டியாகப் பட்டாளத்தில் சேர்ந்தவரல்லர், மல்ஹோத்ரா. அவரது தந்தை, பாட்டனுர் எல்லாருமே ராணுவ பரம்பரையினர். பரம்பரை வாசனைதான் படித்துப் பட்டம்பெற்ற மல்ஹோத்ராவையும் ராணுவ சேவைக்குக் கவர்ந்து இழுத்தது போலும். படிப்பினுல் பெற்ற அறிவு அவரது ஒவ்வொரு சொல்லிலும் சுடர்விடும். கீதை முழுவதும் அவருக்கு மனப்பாடம். எவ்வளவு நெருக்கடியான சந்தர்ப்பத்திலும் அவர் நிதானமிழக்காமலிருப்பது எனக்கு வியப்பூட்டும். சுருள் சுருளாக வளர்ந்திருந்த தாடியைக் காதருகிலிருந்து சேர்த்துச் சீவி, முறுக்கி முகவாய்க்கட்டைக்கும் கீழே அவர் முடிபோடும் முயற்சியில், அறுந்து அறுந்து விழும் தக்ளியில் நூல் நூற்பவனின் விடாமுயற்சியையும் பொறுமையையும் காணலாம். அத்தகைய உறுதியும் சாந்தமும் நிறைந்தவரா இன்று இவ்வாறு நிலைகுலைந்து காணப்படுகிறுர்...?

மேசையின் மீது முழங்கையை ஊன்றி நிமிர்ந்து உட்கார்ந்து, "நடந்ததைச் சுருக்கமாகக் கூறுகிறேன், பாலு! சாப்பிடப் போயிருக்கும் ஜவான்கள் திரும்பி வருவதற்குள் முடித்துவிட வேண்டும். என் துயரத்தை எல்லோர்மீதும் ஏன் திணிக்க வேண்டும்? இங்கிருந்து கிளம்பும்போது பதினைந்து நாட்கள் ரஜா எப்படிப் போதும், என்ற குறையோடுதான் ரயிலேறினேன். ஆசை மனைவியுடனும் அன்புக் குழந்தைகளுடனும் இன்னும் பத்து நாட்கள் தங்கியிருக்க மாட்டோமா என்ற ஆதுரம் எந்தத் தகப்பனுக்குத்தான் இராது? ஆனுல்... நாம் நினைப்பதெல்லாம் நடந்தேறுவதில்லையே! அதிருக்கட்டும், முதலில் என் கிராமத்தின் அமைப்பைப் பற்றி நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டியது முக்கியம்.

சட்லெஜ் நதியிலிருந்து பிரியும் ஒரு சிற்ருறு, கிழக்கு மேற்குப் பஞ்சாப் மாகாணங்களுக்கு அந்தப் பகுதியின் எல்லையாக அமைந்துள்ளது. பதினுன்கு வருடங்களுக்கு முன்பு என் கிராமத்தின் அருகில் ஒரு காங்கிரீட் பாலம் கட்டினுர்கள். பாலம் ஏற்படுவதற்கு முன்பெல்லாம் படகில்தான் ஆற்றைக் கடக்கவேண்டியிருந்தது. ஆற்றுக்குக் கிழக்கேயுள்ள மோரார் கிராமத்தில் தான் பள்ளிக்கூடம் இருந்தது. ஆறு மிகவும் குறுகலானது. ஆனுல் ஆழம் அதிகம். தவிர, அந்தப் பிரதேசம் சமநிலமானதன்று. வடக்கே பூமி உயர்ந்தும் தெற்கே பள்ளமாகவும் இருப்பதால், கோடையில் வெள்ளம் குறைவாக இருக்கும்போதுகூட வேகம் கடுமையாக இருக்கும். நான் பள்ளியில் படித்த நாட்களில் காலை, மாலை இருவேளைகளும் ஆற்றைக் கடந்து செல்ல

வேண்டியிருந்தது. சுழியிட்டுச் செல்லும் பிரவாகத்தின் குறுக்கே மிதந்து செல்லும் படகில் நண்பர்கள் புடைசூழப் போய்வரும் அந்த ஆனந்தம்... அந்த நினைவின் பசுமையிலே இன்று நான் அனுபவிக்கும் துன்பத்தை மறந்துவிட முயல்கிறேன், முடிய வில்லையே... பாலு!''

''துயரம் நெஞ்சை வாட்டும்போது அதனை வாய்வழியாகத் தான் வெளியேற்ற வேண்டும் என்று நீங்களே சொல்லுவது வழக்கமாயிற்றே? சொல்லுங்கள்!'' என்றேன்.

மல்ஹோத்ரா தொடர்ந்தார்: ''இருபது முப்பது வீடுகள், சில குடிசைகள். சொற்ப ஜனத்தொகை — குஞ்சு, குளுவான் கள் உட்பட இருநூறுக்குள் தானிருக்கும். இதுதான் என் கிரா மம். அஸ்தமன நேரத்துக்கு நான் மோரார் போய்ச் சேர்ந் தேன். வழிநெடுகிலும் ஆள் அரவமேயில்லை. எனக்கு அந்தச் சூழ்நிலை திகைப்பூட்டியது. தற்செயலாக எண்ணெய்ப் புட்டி யுடன் வந்த ஒரு சிறுவனை விளித்து, ''ஏன் தம்பி! மோராரில் மனிதர்களே இல்லையா? பக்கத்து கிராமத்தில் ஏதாவது திருவிழாவா...?'' என்று விசாரித்தேன்.

சிறுவன் கேலியாகச் சிரித்தான். ''ஆமாம், திருவிழாத் தான்... நீங்கள் எங்கே போகவேண்டும்?'' என்று கேட்டான்.

நான் ஆற்றின் மறுகரையைச் சுட்டி, ''மில்காபூர்'' என் றேன்.

அவன் வியப்புடன் விழிகளை உருட்டி, ''மில்காபூருக்கா? என்ன இருக்கிறது அங்கே?'' என்றான்.

என்ன இருக்கிறதா? அசட்டுப் பயல்! ''அதுதான் பையா, என் சொந்த ஊர்! என் குடும்பம், வீடு, குழந்தைகள்... எல்லாந் தான் இருக்கிறது!'' என்றேன் உற்சாகத்துடன். பிறந்த மண்ணாயிற்றே!

எனக்குப் பதில் ஏதும் கூறாமல் எதிர்த்திசையில் நடந்தான் சிறுவன். நான் மறுபடியும் அவனை அழைத்தேன். அவன் திரும்பிப் பார்க்கவில்லை. அதன் கருத்து, பிறகுதான் விளங் கியது எனக்கு.

வீதியைத் தாண்டி, கோதுமை வயல்களினூடே செல்லும் ஒற்றையடிப்பாதை வழியே நடந்தேன். வானளாவ வளர்ந்து நின்ற சிடார் மரங்களுக்குப் பின்னால் ஒளிந்து பதுங்கிய கதிரவ னின் செவ்வொளியால் அந்த வட்டாரமே தீப்பற்றி எரிவது போலிருந்தது. ஆற்றுப் பாலத்தை அடைந்ததுமே என் கிராமம் இருந்த திசைநோக்கிப் பார்வை பறந்தது.

எதிர்க் கரையிலிருந்த அன்னையை நோக்கித் தாவும் குழந்தை போல என் உள்ளம் உவகையால் துள்ள, சிந்தனை சிறகடித்துப் பறக்க, பார்வை பாஜில்கா கிராமத்தில் பட்ட மறு விநாடி... என் உடலின் இரத்தமெல்லாம் உறைந்து விட்டது! கையிலிருந்த ஹோல்டாலும் பழக்கூடையும் நழுவி விழுகின்றன. கால்கள் துவளுகின்றன. என் உடலின் கனத்தையே கால்களால் தாங்க முடியவில்லைபோலும்! என்ன இதெல்லாம்?

அருகிலிருந்த விளக்குக் கம்பத்தைப் பற்றியவாறு பாலத்தின் கைப்பிடிச்சுவரில் சாய்கிறேன். இதைக் காணவா நான் இவ்வளவு தூரம் வந்தேன்...?

''அப்படி என்ன காட்சியைக் கண்டீர்கள்?'' என்றேன் பரப் பரப்புடன்.

''என் கிராமம் முழுவதும் தீக்கிரையாகிவிட்டிருந்தது! எரிந்து கருகிக்கிடந்த கூரைகள்; சரிந்து விழுந்து நொறுங்கிக் கிடந்த ஓடுகள்; சேரிஇருந்த இடத்தில் சாம்பல் குவியல்கள்! தபால் சாவடி இருந்த இடத்தில் தரையில் உருண்டு கிடந்த சிவப்புப் பெட்டி! இடிபாடுகளைச் சுற்றிச் சுற்றி அலைந்து கொண்டிருந்த ஒரு கழுதை — இதுதான் நான் கண்ட காட்சி!

நாசியின் இரு துவாரங்களைப்போல், ஒன்றுக்கொன்று ஆதரவாக, எத்தனையோ தலைமுறைகளாக ஆற்றுக்குக் கிழக்கிலும் மேற்கிலுமாக அமைந்திருந்த இருகிராமங்களில் ஒன்று, இன்று மயானமாக விளங்குகிறது, பாலு! மனிதனை மிருகமாக்கும் வெறித்தீக்குப் பலியாகி அழிந்துவிட்டது! மதத்தின் பெயரால் நிகழ்ந்த அழிவு! என் மனைவி, குழந்தைகள்... யாரிடம் விசாரிப்பது?

இன்னும் பத்து நாட்கள் முன்னதாக நான் புறப்பட்டுப் போயிருந்தால்...? ஆடு மேய்த்துவிட்டுத் திரும்பும் சிறுவர்களையும் உல்லாசமாக ஆற்றங்கரையில் மீன்பிடிப்பவர்களையும் அந்த நேரத்தில் பாலத்தருகில் சகஜமாகக் காணலாம். ஹோல்டாலையும் பழக்கூடையையும் நான் சுமந்து செல்ல விட்டிருப்பார்களா? 'நான் முந்தி, நீ முந்தி' என்று என்னைச் சூழ்ந்துகொண்டு, கூலி கூடப் பேசாமல் என் கைச்சுமையைப் பிடுங்கியிருப்பார்களே? முஸ்லிம், ஹிந்து, சீக்கியர் என்ற வேறுபாடெல்லாம் அவர்களுக்குத் தெரியாது. நம் ஊரான்; பட்டாளத்துக்காரன்; கூலியைக் குறைக்கமாட்டான் என்ற ஒரு நம்பிக்கைதான் அவர்களுக்கு! பிரிவினை, அரசியல் இதெல்லாம் அவர்களுக்குத் தேவையேயில்லை! புரியவும் புரியாது!

மோராரில் எண்ணெய்ப் புட்டியுடன் எதிரில்வந்த சிறுவன் பதில் பேசாமல் போனதன் காரணம் இதுதான் போலும்! என் கிராமத்துக்கு நேர்ந்த நாசம் மோராருக்கும் நேர்ந்துவிடப் போகிறதோ என்ற பீதி காரணமாகத்தான் அங்கு மனித நடமாட்டமே இல்லையோ என்னவோ!

கீழே கிடந்த பழக்கூடை என்னை அனுதாபத்தோடு பார்த்தது. 'உன் குழந்தைகளுக்குக் கொடுக்கலாம் என்று எவ்வளவு ஆசையோடு சுமந்து வந்தாய், பாவம்!' என்று எனக்காக இரங்கியதோ?

கூடையை எடுத்துக் கொண்டு கரையிலிருந்து இறங்கினேன்; அருகிலிருந்த நாணற் புதரில் ஏதோ சலசலத்தது. நிஜார்ப் பையிலிருந்த பிச்சுவாவை வெளியே எடுத்தேன்.

மறுகணம், ''பாபுஜீ...'' என்று அலறிய வண்ணம் புதரிலிருந்து வெளிப்பட்ட யுவதி என் காலடியில் விழுந்தாள். என் திகைப்பு நீங்கப் பலநிமிடங்களாயின.

''ஸாரா...''

''பாபுஜி... நீங்களா...?''

அவள் நிலையைக் கண்ணுற்ற எனக்குப் பேச்சே எழவில்லை. தலையோடு கால் என்னை ஒரு தடவை பார்த்துவிட்டுக் கூடையிலிருந்து ஒரு பழத்தை எடுத்துக் கடித்தாள்.

''நல்ல பசி, பாபுஜி! நேற்று முழுவதும் சாப்பிடவேயில்லை!'' என்றாள் ஸாரா.

''வேண்டிய மட்டும் சாப்பிடு! யாருக்குக் கொடுப்பதென்று தெரியாமல், ஆற்றில் எறியப்போனேன். நல்ல வேளையாக, சாப்பிடுவதற்கு நீ ஒருத்தியாவது பாக்கி இருக்கிறாயே!'' உட்கார இடம் தேடினேன் கரையின் சரிவில்.

''உட்கார வேண்டாம், பாபுஜி! சீக்கிரம் புறப்படுங்கள். இங்கே இருப்பது ஆபத்து...''

''நீ....?''

''நானும் உங்களுடன் வருகிறேன். இனி எனக்கு வேறு யார் இருக்கிறார்கள்...'' விம்மல் அவளது பேச்சைத் தடைசெய்தது.

பழக்கூடையைத் தூக்கிக் கொண்டு மோராரை நோக்கிப் புறப்பட்டாள், ஸாரா. ஹோல்டாலுடன் நானும் அவளைப் பின் தொடர்ந்தேன்.

''ஸாரா! என்ன நடந்தது? ஓரளவுக்கு என்னுல் ஊகிக்க முடிகிறது. என் குடும்பம் என்னவாயிற்று? விவரமாகச் சொல்லேன்...''

''உஷ்... இரைந்து பேசாதீர்கள். நீங்கள் சொன்னதுபோல் நான் ஒருத்தித்தான் உயிரோடு தப்பியிருக்கிறேன். பேசிக் கொண்டிருந்தால் யமன் என்னையும் துரத்திக்கொண்டு வந்து விடுவான். வேகமாக வாருங்கள், பாபுஜி!'' கூடையிலிருந்து இன்னெரு பழத்தை எடுத்துக் கடித்தவாறு வேகமாக நடந்தாள் ஸாரா. அதைக் கேட்டதும் என் கால்கள் தொய்ந்தன.

எதிர் வீட்டு ஹுகும் சிங்கின் ஒரே மகள் ஸாரா, அவளைப் போன்ற அழகி அந்த வட்டாரத்திலேயே இல்லை எனலாம். சென்ற தடவை நான் ரஜாவில் கிராமத்துக்குச் சென்றிருந்த போது, 'பட்டாளத்திலே இந்த வாயாடிக்கேற்ற பையன் யாராவது இருந்தால் சொல்லேன், கட்டிப்போடலாம்!' என்று ஹுகும் சிங் என்னிடம் விளையாட்டாகக் கேட்டது இன்னும் மறக்கவில்லை எனக்கு. அவர் உருவம் கண்முன் நிற்கிறது. ஆனுல்... அவர்தான் இன்று இல்லை, பாலு! யார்தான் இருக்கிருர்கள்? என் மனைவி இருக்கிருளா? குழந்தைகள்...'' —மல்ஹோத்ராவின் குரல் கம்மியது;

அவர் அனுபவித்த வேதனைக்கு வார்த்தைகளால் ஆறுதலளிக்க இயலுமா?

தொண்டையைக் கனைத்துக் கொண்டு பேசத் தொடங்கினுர், மல்ஹோத்ரா: ''மோராரைக் கடந்து பாஜில்கா போகும் சாலையை அணுகியதும் ஜனசந்தடி தென்பட்டது. தெரு விளக்குகள் பிரகாசமாக ஒளிர்ந்தன. என்னுல் மேலும் பொறுமையோடிருக்க முடியவில்லை. ''ஸாரா! சொல்! என் மனைவி, குழந்தைகளின் கதி என்னவாயிற்று? உன் தந்தை தப்பிப் பிழைக்கவில்லையா? நாணற் புதரில் எவ்வளவு நாட்களாக ஒளிந்து கொண்டிருக்கிருய்?'' என்று கேள்விகளை அடுக்கினேன்.

ஆபத்தான சூழ்நிலையிலிருந்து வெளியேறி வெகுதூரம் வந்து சேர்ந்த பிறகுதான் ஸாரா பேசினுள்: ''பாபுஜி! மெய்யாகவே உயிரோடு தப்பியவள் நான் ஒருத்திதான். ஆண்கள் ஓரிருவர் எங்கேயாவது ஓடி ஒளிந்து கொண்டிருப்பார்களோ என்னவோ— நிச்சயமாகச் சொல்வதற்கில்லை. நேற்றைக்கு முன் தினம் இரவு பத்துமணி இருக்கும். திடீரென்று சேரிப்பக்கமிருந்து கூக்குரல் கேட்டது. அப்பா கதவைத் திறந்து வெளியே எட்டிப் பார்த்தார். உடனே அவர், 'ஐயோ! சேரி பற்றிஎரிகிறதே!' என்று கத்தினுர். கூச்சலும் அவலக் குரல்களும் அதிகரித்தன. குழந்தைகளும் பெரியவர்களும் அலறிப் புடைத்துக்கொண்டு தெருவோடு

ஓடினர். 'கொலை! கொள்ளை! வெறியர்கள் சூறையாடுகிறார்கள்! ஓடுங்கள்! தப்பி யோடுங்கள்!' என்று பல குரல்கள் கேட்டன. சில நிமிடங்களுள் கிராமமே காலியாகிவிட்டது. நாங்கள் தலை தெறிக்க ஓடி ஆற்றங்கரையை அடைந்தபோது, பின்னாலிருந்து தீப்பந்தங்களுடனும் தடிக்கம்புகளுடனும் குண்டர்கள் பலர் துரத்தி வருவதையும் நம் தெரு முழுவதும் பற்றி எரிவதையும் ஆற்று மேட்டிலிருந்து பார்க்க முடிந்தது. ஓடவும் தென்பு இல்லை, யாருக்கும். எதிர்க் கரையை அடைந்தால் தப்பிவிடலாம் என்று ஒரு நம்பிக்கை. எதிர்க்கரையில் சாவு காத்திருக்கிறது என்பது யாருக்குத் தெரியும்? எப்படித் தெரியும்?

பயங்கரம், பாபுஜி! இருளில் மரத்தடியில் பதுங்கியிருந்த நூற்றுக்கு மேற்பட்ட ராட்சதர்கள் பளபளக்கும் கத்திகளுடன் எங்களை நோக்கி ஓடிவந்தனர். குழந்தைகளும் பெண்மணிகளும் அலறிக் கூக்குரலிட்டது...நினைக்கவே குலை நடுங்குகிறது, பாபுஜி! உங்கள் மனைவி என்னைப் பின்தொடர்ந்து, குழந்தையைத் தோளில் சாத்தியவாறு ஓடிவந்தார். 'அம்மா! அம்மா!' என்று அலறியவாறு பின்னால் ஓடிவந்த உங்கள் மகன் சரண்... ஐயோ! அதை எப்படிச் சொல்வேன், பாபுஜி! ஒரு முரடன் அவனைப் பிடித்துப் பாலத்தின் மதகில் மோதி ஆற்றில் வீசி எறிந்ததை என் கண்ணால் பார்த்தேன்! உங்கள் மனைவியும் பார்த்தாள்! எங்களால் என்ன செய்ய முடியும், பாபுஜி! இவர்களிடம் அகப்பட்டு மானமிழந்து சாவதைவிட, ஆற்றில் விழுந்து உயிர் துறப்பதே மேல் என்றுதான் தோன்றியது. எஞ்சியிருந்த தைரியத்தையெல்லாம் திரட்டிக்கொண்டு ஆற்றில் குதித்துவிட்டேன். உயிரை விடுவது நாம் எண்ணுவதுபோல் அவ்வளவு லேசான காரியமன்று என்ற உண்மை அந்த நிமிடம்தான் எனக்கு விளங்கியது. உங்கள் மனைவியும் என் தாயாரும் மதகடியில் ஒரு கணம் தயங்கி நின்றுவிட்டு, பின்னர் ஒருவாறு துணிந்து ஆற்றில் இறங்கிவிட்டார்கள். சில நிமிடங்கள் தண்ணீரில் திணறித் தத்தளித்து மூழ்கி மூழ்கி எழுந்த அவர்களை வெள்ளம் அடித்துக் கொண்டு போய்விட்டது! இளமைப் பருவத்தில் நீந்தக் கற்றுக் கொண்டதன் பயனாக, நீரில் மூழ்கி அமிழ்ந்து, கால்களை நீரில் உதைக்காமல் தவளைபோல் கைகளால் அளைந்து கரையை ஒட்டியே வெள்ளத்தோடு மிதந்து வந்தேன். வெகுதூரம் வந்துவிட்டேன். பாலத்தின்மீது வெறியாட்டம் ஓய்ந்துவிட்டது. இரத்தம் தோய்ந்த கத்திகளையும் கோடரிகளையும் ஆற்றில் வீசி ஓட்டமெடுத்தனர், அந்தப் பாவிகள்!

கைசளைக்கும் வரை நீந்திச் சென்று ஆபத்து இல்லாத இடமாகப் பார்த்துக் கரையேறலாம் என்று தீர்மானித்தேன். உடற் சோர்வும், படுகொலைகளைக் கண்டதால் ஏற்பட்ட மனச்சோர்வும்

என்னை நினைவிழக்கச் செய்தன. கரையேறியவுடன் மயங்கி விழுந்த என்னை யாரோ கட்டித் தூக்குவது போலிருந்தது, ஒரு முரட்டுக்கரம் என் தோள்பட்டையைப் பற்றியிருந்தது. போன்ற உணர்வு. அந்த அரைமயக்க நிலையில் எதையும் சரியாக உணர முடியவில்லை என்னுல்.

மறுநாள், விடிவெள்ளி முளைக்கையில் கண்விழித்தேன். உடம்பு மூட்டுக்கு மூட்டு வலியெடுத்தது. ஆற்றிலிறங்கிக் குளித்த பிறகுதான் ஓரளவுக்கு தென்பு வந்தது. ஆளரவமற்ற அந்த இடத்தைவிட்டு வெளிக் கிளம்பவே துணிச்சல் இல்லை எனக்கு. பொறுக்க முடியாத பசி வேறு. யாராவது தெரிந்த மனிதர்கள், நம்பிக்கைவைக்கத் தக்கவர்கள் கண்ணில் படமாட்டார்களா என்று ஏக்கத்துடன் காத்திருந்த போதுதான்... தெய்வம் போல நீங்கள் வந்து சேர்ந்தீர்கள்!'' என்று ஸாரா கூறி முடித்தாள். என் உணர்ச்சிகள் எப்படிக் கொந்தளித்திருக்கும் என்று நீங்கள் ஊகிக்க முடியாதா, பாலு!

சற்றைக்கெல்லாம் பஸ் வந்தது. எவ்வளவோ கேள்விகள் சந்தேகங்களை ஸாராவிடம் கேட்க நினைத்தேன். அவளுடைய அப்போதைய நிலையில் எதையும் கேட்பது உசிதமில்லை என்று போசாமலிருந்து விட்டேன். டெல்லி மெயிலைப் பிடித்து, கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரசில் ஏறிச் சென்னைவந்து, இதோ இங்கு வந்து சேர்ந்திருக்கிறேன்'' என்றூர் மல்ஹோத்ரா.

எனக்கு எதுவுமே பேசத் தோன்றவில்லை. சொல்லுக்கு அடங்கக் கூடியதா அவரது சோகமும் வேதனையும்? ''அந்தப் பெண்... அவளையும் அழைத்துக் கொண்டுதான் வந்திருக்கிறீர்களா?'' என்றேன்.

''ஆமாம், பாலு! அவளுக்கு வேறு உறவினர்கள் யாருமில்லையே! எங்கே போவாள், ஸாரா? இனி என்னைத் தவிர அவளுக்கு யார் கதி?'' சென்னையில் ஒரு ஹோட்டலில் வாடகைக்கு ஓர் அறை எடுத்து, அங்கே விட்டுவிட்டு வந்திருக்கிறேன். இனிமேல்தான் யோசிக்க வேண்டும், வேறு என்ன ஏற்பாடு செய்யலாம் என்று'' என்று மல்ஹோத்ரா கூறியதும், எங்கள் யூனிட் கமாண்டிங் ஆபீசர் மல்ஹோத்ராவை அழைப்பதாக ஆர்டர்லி ஒருவன் வந்து அழைத்தான்.

பத்து நிமிடங்களுக்குப் பின் திரும்பி வந்த மல்ஹோத்ரா, ''பாலு! உங்களிடமிருந்து ஒரு முக்கியமான உதவியை எதிர்பார்க்கிறேன். வருகிறவாரம் நம் யூனிட் இங்கிருந்து புறப்படுகிறது. நாம் ஜால்னு போகிறோம். சென்னையில் ஒரு வீடு பார்த்து ஸாராவைக் குடிவைக்கலாம் என்று நினைத்த எனக்கு இச் செய்தி பெரிய அதிர்ச்சிதான். இப்போதைக்குச் சில

மாதங்கள் ஸாராவை உங்கள் வீட்டில் விட்டு வைக்கலாமென நினைக்கிறேன். வேறு வழியே தோன்றவில்லை, பாலு! உங்கள் பெற்றோர், மனைவி முதலியவர்கள் சம்மதிப்பார்களா? செலவைப் பற்றிய கவலை உங்களுக்கு வேண்டாம். அதனை நான்தான் ஏற்றுக்கொள்வேன்!'' என்றார். நான் அவர் கோரிக்கையை ஏற்காமலிருப்பேனா?

அநாதரவான ஒரு பெண்ணை ஆபத்திலிருந்து மீட்டு வந்து அடைக்கலமும் தேடித் தந்து, அவளுக்குத் தம் சொந்தச் செலவிலேயே திருமணமும் செய்விக்க முடிவு செய்த மல்ஹோத்ராவின் மனிதப் பண்பினை என்னென்று கூறுவது? அதோடு நின்றதா அவரது தியாக உணர்ச்சி......?

நாங்கள் ஜால்னுவுக்கு வந்த மூன்றாவது மாதம், மல்ஹோத்ரா சுபேதார் மேஜராகப் பதவி உயர்வு பெற்றுப் புனுவுக்கு மாற்றலாகிச் சென்றார். அந்தப் புனிதருடன் பல ஆண்டுகள் நெருங்கிப் பழகியிருந்த எனக்கு அவரை விட்டுப் பிரிவது சிரமமாய்த்தான் இருந்தது. ஸாராவின் நற்குணங்களையும் அடக்கத்தையும் சிலாகித்து அவ்வப்போது எனக்கும் மல்ஹோத்ராவுக்கும் என் தந்தை எழுதி வந்தார். விரைவில் ஸாராவின் திருமணத்துக்கு ஏற்பாடு செய்வதாகச் சொல்லி விடை பெற்றார், மல்ஹோத்ரா.

அவர் பூனுவுக்குச் சென்ற மறுவாரம் என் மனைவியிடமிருந்து வந்த கடிதம்...... கடிதமா அது? அத்தச் செய்தியை மல்ஹோத்ராவுக்கு எப்படித் தெரியப்படுத்துவது? அடி, பாதகி? ஸாரா, ஸாரா என்று உன்னிடம் உயிரையே வைத்திருந்தாரே மல்ஹோத்ரா; பெற்ற குழந்தைகளையும் கட்டின மனைவியையும் ஒரே நாளில் இழந்த துயரத்தையும் மறந்து, உன் நல்வாழ்வினால் அமைதிபெற விழைந்த அவருக்கா இப்படி ஒரு பேரிடி! இதை எப்படித் தாங்குவாரோ அவர்? அவருக்குத் தகவல் தெரிவிக்கும் பொறுப்பினை என் மீது சுமத்திவிட்டார் என் தந்தை.

ஸாரா மூன்றுமாத கர்ப்பிணி! அடிக்கடி வாந்தி எடுப்பதும் சோர்ந்து படுப்பதுமாக இருந்த அவளை டாக்டரிடம் வரும்படி என் மனைவி அழைத்திருக்கிறாள். அவளும் விகல்பமின்றி, டாக்டரிடம் போக இணங்கியிருக்கிறாள். டாக்டர் அம்மாள் பரிசோதித்துவிட்டு, என் மனைவியிடம் ஸாராவின் நிலைமையை எடுத்துரைத்திருக்கிறாள். உண்மை தெரிந்ததும் ஸாரா தற்கொலை முயற்சியில் ஈடுபட்டிருக்கிறாள். ரயிலில் விழுந்து உயிர் விடத் துணிந்த அவளை எப்படியோ தடுத்துக் காப்பாற்றி விட்டார்கள். இனிமேல் அவளைக் காப்பாற்றுவது சிரமம் என்று கண்டுகொண்ட என் பெற்றோர்கள் என் மூலம் மல்ஹோத்ரா

வுக்கு உண்மையைத் தெரிவிக்க முடிவு செய்தனர். ஸாராவின் வாழ்வில் ஏதோ அசம்பாவிதம் நடந்திருக்கிறது என்பதை அவர்களால் ஊகிக்க முடிகிறது; ஆனால் இன்னதென்று விளங்க வில்லை!

எனக்கும் ஒரே குழப்பம்தான். ஸாரா தவறு செய்திருந் தால், டாக்டரிடம் போகச் சிறிதும் தயக்கமின்றி உடனே இணங்கி இருப்பாளா? அவள் நிரபராதியாக இருக்கக்கூடும் என்பதற்கு இந்த ஒரு பலவீனமான ஆதாரம்தானே துணை நிற்கிறது? எப்படியிருந்தால் என்ன? இது மல்ஹோத்ராவின் பிரச்னை! அவர் அனுபவிக்கவேண்டிய தலைவலி. புனிதமான மல்ஹோத்ராவின் தியாக உள்ளத்துக்கு இப்படி ஒரு வேதனையா? நடந்ததைச் சுருக்கமாக எழுதிவிட்டேன், மல் ஹோத்ராவுக்கு.

பதினைந்து நாட்களுக்குப் பிறகு மல்ஹோத்ராவிடமிருந்து பதில் வந்தது எனக்கு. ஸாராவை அவர் பூனாவுக்கு அழைத் துச் சென்றுவிட்டாராம். அதுமட்டுமா? "ஸாரா குற்ற மற்றவள், பாலு! முறைப்படி நான் அவளைத் திருமணம் செய்துகொண்டு விட்டேன். உங்களை நேரில் சந்திக்க அவள் மிகவும் கூசுகிறாள்! அதனால்தான் தங்களை அழைக்கவில்லை. நாம் நேரில் சந்திக்கும்போது உங்களுக்கு எல்லாம் விளக்க மாகக் கூறுவேன்!" என்று அவர் எழுதியிருந்ததை என்னால் நம்பவே முடியவில்லை.

ஸாரா மூன்றுமாத கர்ப்பிணி என்று தெரிந்துகொண்ட பின்னும் அவளை மணக்க முன் வந்த மல்ஹோத்ராவைப்பற்றி நினைக்க நினைக்க எனக்கு வியப்பை அடக்க முடியவில்லை. என் மதிப்பில் அவர் மேலும் உயர்ந்துவிட்டார். அதன் பிறகு சில மாதங்கள் வரை அவரிடமிருந்து அவ்வப்போது கடிதங்கள் வரும். நாளடைவில் அதுவும் நின்றுவிட்டது. மல்ஹோத்ரா எங்கே இருக்கிறார் என்பதே எனக்குத் தெரியவில்லை. கேட்டுத் தெரிந்துகொள்ள முடியாத செய்தி அது. ராணுவத்தினரின் முகாம் அவ்வப்போது மாறும். அதெல்லாம் ராணுவ ரகசியங் களாயிற்றே!

இரண்டு ஆண்டுகள் ஓடிவிட்டன. தற்செயலாக அன்று விக்டோரியா டெர்மினஸ் ஸ்டேஷனில் மல்ஹோத்ராவும் நானும் சந்தித்தபோது, "பாலு"! என்று ஓடிவந்து என்னைக் கட்டிக்கொண்டார் அவர்.

"சர்தார்ஜி! ஸாரா சௌக்கியமா?"—என்னை யறியாம லேயே நான் முதலில் கேட்ட கேள்வி அது.

''பாலு! அன்று நான் கடிதத்தில் எழுதாத, எழுத முடியாத ரகசியத்தை இப்போது சொல்ல விரும்புகிறேன். ஸாரா தவறு ஏதும் செய்யவில்லை. தவறு இழைக்கப்பட்டாள். அவள் நிலைமையை உணர்ந்தும் அவளை உன் வீட்டிலிருந்து அழைத்துச் சென்று நான் மணந்து கொண்டபோது, என்னையே கூட நீங்கள் சந்தேகித்திருக்கலாம்...

''ராம்! ராம்! ஸர்தார்ஜி! என்ன இது? என்னைப்பார்த்தா இப்படிக் கேட்கிறீர்கள்...?'' என்று குறுக்கிட்டுக் கத்தினேன்.

''பாலு! இப்படி ஒரு சந்தேகம் இயல்பாக ஏற்படக் கூடியது என்பதற்காகக் கூறினேன். அன்று என் கிராமத்தில் நிகழ்ந்த கலவரங்கள் பற்றிக் கூறும்போது ஸாரா ஆற்றில் குதித்துக் கரையேறினுள் என்று கூறியது நினைவிருக்கிறதா?''

''ஆமாம்; அந்தத் துயர நினைவு இப்போது எதற்கு?''

''கேளுங்கள், புரியும். கரையேறியதும் ஒரு முரட்டுக் கரம் தன் தோள்களைப் பற்றியது போன்ற உணர்வு தனக்கு ஏற்பட்டதாக ஸாரா கூறினுளே — அப்போது நிகழ்ந்த இழிச் செயல்தான் இதற்கெல்லாம் காரணம். அவள் உங்கள் வீட்டி லிருக்கையில் தற்கொலை செய்துகொள்ள முயன்றதன் காரண மும் இதுதான். நினைவிழந்து கிடந்த நிலையிலே... ஸாராவை நிலைகுலையச் செய்துவிட்டான் அந்தப் பாதகன்! அவளுக்கு ஒரு களங்கத்தை ஏற்படுத்திவிட்டான்! உங்கள் டாக்டர் கூறிய போது தான் அவளுக்கு முழு உண்மையும் விளங்கியிருக்கிறது. 'அப்படித்தான் நடந்திருக்க வேண்டும்' என்ற ஒரு ஊகந்தான் கடைசிவரை அவளுக்கு......''

''அப்படியென்ருல்... ஸாரா இப்போது...?''

''பிரசவித்து இறந்துவிட்டாள். குழந்தை வயிற்றிலேயே மரித்து விட்டது.'' அவமானச் சின்னமாக இந்த உலகில் வளையவர விரும்பவில்லை, அது! நான் மட்டும் ஏன் உயிரோடிருக் கிறேன்...?'' என்று ஒரு பகல் முழுவதும் புலம்பிவிட்டு ஸாரா இறுதி விடை பெற்ருள்...'' மல்ஹோத்ரா ஒரு பெருமூச்சு விட்டார்.

''பாவம்!''

''எனக்காகவா அனுதாபப்படுகிறீர்கள்?''

''ஸாராவுக்காகவுந்தான்.''

''அந்த நிலையில் அவளை எந்த வாலிபன் மணக்க முன் வருவான், பாலு? ஒரு தந்தையின் அல்லது அண்ணனின் ஸ்தானத்திலிருந்து, அவளுக்குத் தக்க கணவனைத் தேடிக் கல்யாணம் செய்து வைக்கத்தான் விரும்பினேன். உங்கள் கடிதம் வந்த பிறகு என் கடமை எனக்குப் புரிந்துவிட்டது. அதாவது, நானே அவளை மணப்பது தான் அவளுக்கு வாழ்வளிக்கும் ஒரே வழி என்று புரிந்துகொண்டேன். நான் அவளை மனைவியாக ஏற்றுக்கொண்டது முதல், அவள் என்னிடம் சரியாக முகம் கொடுத்துப் பேசியதே இல்லை, பாலு! என் மனம் அவளுக்கு விளங்காமலில்லை. ஆனால், அவளது இதயத்தில் குடிகொண்டிருந்த வேதனையும் வெட்கமும்... அவள் உயிரோடுதான் அவையும் வெளிப்பட்டன... உம், வாருங்கள்! பாலு! தேநீர் பருகலாம்!'' என்று என் தோள்மீது வலக்கரத்தைப் போட்டு உந்தித் தள்ளினார், மல்ஹோத்ரா.

மல்ஹோத்ரா ஒரு மகாத்மா என்று நான் முதலிலேயே கூறியிருந்தால், அதை யார் ஒப்புக் கொண்டிருப்பார்கள்? உலகில் இரு மகாத்மாக்களுக்கு இடமுண்டா, என்று தான் கேட்கத் தோன்றும். மல்ஹோத்ரா மனமுவந்து செய்தது போன்ற மகா தியாகத்தைச் செய்யும்படி காந்தியடிகள் மக்களுக்கு எடுத்துரைத்தபோது, 'சொல்வது எளிது! செயல் கடினம்!' என்று முணுமுணுத்தவர்கள் பலர். மகாத்மாஜியின் சொல்லைச் செயலாக்கி வாழ்ந்து காண்பித்த உத்தமர் மல்ஹோத்ராவின் புனித நினைவு எழும்போதெல்லாம் அவரை ஒரு மகாத்மாவாகத்தான் நான் மதிக்கிறேன். மனிதருள் ஒரு தேவன், அவர்!

★

கே. எஸ். ஜம்புநாதன்

13

# நெருப்பு

நஞ்சுண்டராவ் அவசரம் அவசரமாக என்னிடம் ஓடிவந்தார். அவருடைய முகத்திலிருந்த பரபரப்பைக் கண்டதும் என்னவோ ஏதோ என்று நான் பயந்துபோய் விட்டேன். ''என்ன ராயரே, விசேஷம்?'' என்று கேட்டேன்.

''ரொம்ப அவசரம், அஞ்சு ரூபாய் கைமாத்து வேணும்'' என்றார் ராவ்.

என்னிடம் பணம் இருந்தது. இரண்டொரு நாட்களுக்குக் கைமாத்தாகக் கொடுத்துப் புரட்டக்கூடிய பணம் அது. வாரா வாரம் படியரிசி வாங்கப் பணம் ஒதுக்கிவைக்க வேண்டியிருக்கிறதே! இல்லை என்று சொல்லவும் மனம் இல்லை; கொடுக்கக் கூடிய வசதியும் இல்லை. அடுத்த மாசம் சம்பளம் வாங்கித்தான் நஞ்சுண்டராவ் கொடுப்பார்.

''என்னய்யா, அத்தனை அவசரம்? ரேஷன் வாங்கக்கூட இன்றுதானே திங்கட்கிழமை? என்று மழுப்பினேன்.

''ரேஷனா, சனிக்கிழமைக்குச் சனிக்கிழமை தானே, ஐயா நமக்கு ரேஷன் பிரச்னை. இன்று ஊரிலிருந்து சில சிநேகிதர்கள் வந்திருக்கிறார்கள். அவர்களை அழைத்துக்கொண்டு சினிமாவுக்குப் போகவேண்டும்'' என்று அசட்டுச் சிரிப்புச் சிரித்தார்.

''சினிமாவுக்கா? என்னிடம் பணம் இல்லை ஐயா, கடன் வாங்கியாவது நண்பர்களைக் குஷிப்படுத்த வேண்டும் என்று என்ன நிர்ப்பந்தம்?'' என்றேன் வெடுக்கென்று.

"பார்த்தேளா! தங்களிடம் நிஜத்தை சொல்லி இருக்கப் படாது. ரேஷன் வாங்கவேண்டும் என்று கேட்டால் கொடுத் திருப்பீர். ஆபீசில் கூட, தலைவலி என்று லீவு கேட்டால் கொடுத்து விடுகிறுன். நண்பர்கள் வந்திருக்கிறுர்கள், லீவு வேண்டும் என்று கேட்டேன்!' வருஷாந்திரக் கணக்குப் பாக்கி யிருக்கிறது, இப்போது லீவு கிடையாது என்று மானேஜர் முறைத்துவிட்டான். நண்பர்களுக்கு நாம் எவ்வளவு கடமைப் பட்டிருக்கிறேம் என்பதை அவன் கண்டானு? நம்மால் பொய் பேசவும் முடியவில்லை" என்று அலுத்துக்கொண்டார் அவர்.

"லீவு கிடைத்துவிட்டதோ இல்லையோ?" என்று கேட்டேன்.

"கிடைத்தது. நிஜத்தைச் சொன்னதுக்காக கிடைத்த பலன், மூணுநாள் சம்பளமில்லாத லீவு. தலைவலி ஜுரம் என்று சொல்லி டபாய்த்திருக்கலாம்."

"ஏன் ஐயா, நண்பர்களை உபசரிப்பது பிரயோசனமான காரியம்தானே? அவர்களுடைய ஊருக்கு நீர் போனுல் எப்படி உபசாரம் செய்கிறுர்கள்?" என்று இடைமறித்தேன் நான்.

"பிரயோசனம்தான்; ஆனுல் பொய்யைச் சொல்லி..."

"பொய் சொல்ல வேண்டும் என்பதில்லை, ஐயா, சத்தியம் பேச வேண்டியது தான். அப்பட்டமாகப் பேசக்கூடாது. சத்தி யம் என்பது நெருப்பு, தொட்டால் சுடும், நெருப்பு. அதற்காக நாம் ஒதுக்கி விடுகிறேமா? நெருப்பின் சக்தியை நாம் உபயோ கிக்க வில்லையா?"

"உம்முடைய வேதாந்தம் இருக்கட்டும், இங்கிதம் தெரிந்த மனுஷர் நீர் என்று உம்மிடம் வந்தேன். நீரோ கதை பேச ஆரம்பித்து விட்டீர்" என்றுர் ராயர்.

நஞ்சுண்டராவ் நல்ல மனிதர். வெகுளி, சத்தியவாதி. ஆனுல் பிறர் அவருக்குச் சூட்டுவது அசட்டுப் பட்டம்தான். "ராயரே, காலத்துக்குத் தக்கவாறு நடந்துக்கணும். உமக்குப் பணம் கொடுக்க ஆசைதான், ஆனுல்..."

"உம்முடைய சால்சாப்பு எனக்கு வேண்டாம். பணம் இருந்தால் எடும் வெளியே" என்று அழுத்தமாகக் கேட்டார் அவர்.

"இதனுல்தான் நீர் எங்கே போனுலும் கெட்ட பெயர் வாங்குகிறீர். இது என்ன ஊதாரித்தனம், ஐயா? கடன் வாங்கி யாவது சினிமா பார்த்துச் சந்தோஷப்பட வேண்டும் என்று என்ன நியாயம்!"

என்னுடைய குரலில் கடுகடுப்பு இருந்ததோ என்னவோ, நான் கோபமில்லாமல் தான் பேசினேன். ஆனல் ராயருடைய முகம் சுண்டிப் போயிற்று.

''அவசியமில்லாவிட்டால் வருவேனு உங்களிடம்? உம்மிடம் பொய்யைச் சொல்லியிருந்தால்...''

''கொடுத்திருப்பேன். சத்தியம் பேசுவதுதான் தர்மம். ஆனல் நாம் பழகும் இடமும் சத்தியம் நிரம்பியிருக்க வேண்டும். ஐஸ் குளிர்ந்த வஸ்து. உஷ்ணம் இருக்குமிடத்தில் அது உருகிக் கரைந்து விடுகிறது. குளிர்ச்சியிருக்குமிடத்தில், அதைத் தொட்டாலே கையைப் பொசுக்கி விடும்.''

''ஐயோ மறுபடியும் கதை தானு, பணம்...'' என்று எழுந்தார் ராயர்.

* * *

அவருடைய கெஞ்சும் முகம் என்னை நெகிழச் செய்துவிட்டது. அவருடைய அவசரத்தையும் நான் புரிந்து கொண்டேன். ஆனல் ஏதாவது கதையைச் சொல்லிப் போக்குக்காட்டி விடவேண்டும் என்று நிச்சயித்துக் கொண்டேன். முடிந்தால் என் பேச்சின் வேகத்தில், அவர் உத்தேசித்துள்ள அனுவசியச் செலவு நேர்ந்து விடாமல் தடுத்துவிட வேண்டும் என்று கூட நினைத்தேன்.

''உமக்கு நம்முடைய காந்தி சேட்டைத் தெரியுமோ இல்லையோ?'' என்று கேட்டேன்.

''ஆமாம், சத்தியாக்கிரக காலத்தில் லேவாதேவிக் கடையை மூடிவிட்டு ஜெயிலுக்குப் போனரே'' என்ருர் ராயர்.

''அவரை ஊரில் ரொம்பப் பேருக்குத் தெரியும். அவர் காந்தி பக்தர், பொய் பேசமாட்டார். இரண்டு நாளைக்கு முன்னல் நடந்த சம்பவம்...''

''என்ன நடந்தது?'' என்று ஆவலுடன் கேட்டார் அவர்.

''காந்தி ஸேட்டும் நானுமாக அன்று காப்பி சாப்பிடப் போனேம். எண்பது பைசாவோ – என்னமோ பில் கொடுத்தான், சப்ளை செய்த பையன். வெளியே வரும்போது ஐந்து ரூபாய் நோட்டையும் பில்லையும் கொடுத்தார் சேட்ஜி. கடைக்காரர் என்ன நினைத்துக் கொண்டாரோ என்னவோ, ஒரு ஐந்து ரூபாய் நோட்டு, இரண்டு இரண்டு ரூபாய் நோட்டுகள், சில்லறை இவ்வளவும் எடுத்துக் கொடுத்தார். சேட்ஜி திகைத்துப் போனர். தாம் கொடுத்தது பத்து ரூபாயா அல்லது ஐந்து ரூபாய்

நோட்டா... என்ற சந்தேகம் எழுந்துவிட்டது, அவருக்கு. பையில் கிடந்த பணத்தைக் துழாவிப் பார்த்தார். நிதானப்பட வில்லை. நான் ஒருவேளை கவனித்தேனோ என்று என்னையும் பார்த் தார். ஐந்து ரூபாய் நோட்டைக் கொடுத்தாற் போலத்தான் எனக்கும் தோன்றிற்று. நிச்சயமாகச் சொல்ல முடியவில்லை.

என்னுடைய சாட்சியினால் எவருக்கு நஷ்டம் ஏற்படும் என்று சொல்ல முடியாத நிலையில் நான் சேட்ஜியின் சந்தேகத்தை நிவர்த்திசெய்ய முடியாமல் தெருவில் இறங்கினேன். இதற்குள் அவர் ஒரு தீர்மானத்துக்கு வந்துவிட்டார். ''என்ன ஸார், ஐந்து ரூபாய்தான் கொடுத்தேன், இவ்வளவு சில்லறை தருகிறீர் களே?'' என்று கேட்டார் கடைக்காரரைப் பார்த்து. ''பார்த் தீர்களா, என்னவோ ஞாபகம்'' என்று அவர் அசட்டுச் சிரிப்புடன் ஐந்து ரூபாய் நோட்டை எடுத்து பெட்டிக்குள் போட்டுக் கொண் டார்.

சேட்ஜி பாக்கிச் சில்லறையை எடுத்துக்கொண்டு தெருவில் இறங்கினார். ''ஆனாலும் இவ்வளவு மறதி கூடாது. நான் எடுத் துக் கொண்டிருந்தால் அவருக்கு ஐந்துரூபாய் நஷ்டமாயிருக் கும்'' என்றார் என்னிடம். தம்முடைய நேர்மையிலே அவருக்கு அத்தனை பெருமை.

''ஒரு வேளை நீங்கள் மறந்து கொடுத்திருக்கலாம் அல்லவா? என்ற சந்தேகத்தைக் கிளப்பினேன் நான்.

புருவத்தைச் சுருக்கி நிமிர்த்தினார் சேட்ஜி. ''இருக்கலாம்; ஆனால் எப்போதும் சந்தேகத்தின் பலனை எதிராளிக்குத்தான் கொடுக்க வேண்டும். அதுதான் அஹிம்ஸா தர்மம்...கோர்ட் டிலே கூட...''

நான் கடகடவென்று சிரித்துவிட்டேன். ''வெற்றிலை போட்டுக் கொள்ளலாமா?'' என்று பக்கத்திலிருந்த கடை வாச லுக்கு சென்றார் சேட்ஜி. கடைக்காரனிடம் கால்ரூபாயை நீட்டி வெற்றிலை பாக்குக் கேட்டார். நானும் கடையை நெருங்கி நின்றேன். கடைக்காரன் இரண்டு பேருக்கும் பாக்குக் கொடுத் தான். இதன் நடுவே வெற்றிலைத் தட்டில் பத்துப் பைசாவைப் போட்டுவிட்டு ஒருவன் சிகரெட் வேண்டும் என்றான். கடைக் காரன் அவனுக்கு சிகரெட் எடுத்துக் கொடுத்தான். அப்புறம் யார் யாரோ வியாபாரம் செய்தார்கள். வாயிலிருந்த பாக்கும் கரைந்து விட்டது. ''என்ன அப்பா, வெற்றிலை கொடேன்?'' என்று கேட்டேன் நான்.

கடைக்காரன் இரண்டு பேருக்கும் வெற்றிலை கொடுத் தான். தட்டில் கிடந்த பத்துப் பைசாவை எடுத்துப் பெட்டி யில் போட்டு விட்டு மற்றவர்களைக் கவனிக்க முற்பட்டான்.

வெற்றிலையைப் போட்டுக் கொண்டே, சேட்ஜி "பாக்கி எங்கே?" என்று கையை நீட்டினர்.

கடைக்காரன் அவரை வெறித்துப் பார்த்தான். "ஐந்து பைசா வெற்றிலே, ஐந்து பைசா பாக்கு, சரியாப் போச்சே?" என்ருன் நிதானமாக.

"சரியாப் போச்சா? உன் கணக்குப்படி பத்துப் பைசா போனுலும், மிச்சம் பதினைந்து பைசா எங்கே?" என்ருர் சேட்ஜி.

"பத்துப் பைசாதானே ஐயா கொடுத்தீர்" என்ருன் கடைக்காரன். "இந்தத் தட்டிலேதானே இத்தனை நாழி கிடந்தது?" என்ருன் மறுபடியும்.

"இல்லை. நான் கால் ரூபாய் உன்னுடைய கையில் கொடுத்தேன். பெட்டியில் போட்டுக் கொண்டாய், பாரு. இந்த பத்துப் பைசா, சிகரெட் வாங்கியவர் கொடுத்தது."

"பெட்டியிலே உம்முடைய கால் ரூபாய்தானு கிடக்கும்? வேறு கால் ரூபாயே இருக்காதோ? நன்ருய் ஞாபகப் படுத்திக்கிங்க, ஸார். பத்துப் பைசா கொடுத்துட்டு இப்படி..."

"இந்தாப்பா, உன்னிடம் பொய் பேசி லாபம் சம்பாதிக்க வேண்டாம். நான் கால் ரூபாய் தான் கொடுத்தேன். மிச்சம் பதினைந்து பைசா கொடு."

"என்ன ஸார், மிரட்டிக் கேட்டா ஏமாந்துடுவேனு? பத்துப் பைசாதான் கொடுத்தீங்க, உங்களுக்கு வெத்திலே பாக்குக் கொடுத்தப்புரம் தான் அந்தக் காசைக்கூட தட்டி லிருந்து எடுத்துப் பெட்டியிலே போட்டேன்."

"என்ன அப்பா, கால் ரூபாய் கொடுத்தார். நீ வாங்கி பெட்டியில் போட்டுக் கொண்டாயே! ஒரேயடியாகப் பேசிரூல்" என்று ஆத்திரம் தொனிக்கக் கேட்டேன் நான்.

"கொடுத்திருக்கலாம் ஸார், கொடுக்கிற காசைக் கவனிக்காமல் வாங்கிப் பெட்டியிலே போட்டுக் கொண்டிருந்தால் நான் வியாபாரம் செய்ய முடியுமா?" என்ருன் அமைதியாக. "நீங்கள் சொல்லுங்கள் சாட்சி. ஆனுலும் வாங்கிய காசு எனக்கு ஞாபகம் இருக்கிறது" என்ருன் அவன்.

பத்துப் பதினைந்து நிமிஷம் தகராறு நடந்ததுதான் மிச்சம். அவன் பாக்கியைக் கொடுக்கவில்லை. பத்துப் பைசாக் கொடுத்ததாகவே சாதித்தான். சேட்ஜிக்குக் கோபம் வந்து விட்டது. "இந்தாப்பா, நீ பாக்கி கொடுக்க வேண்டாம்; எதிராளியை மட்டும் முட்டாள் என்று எண்ணிவிடாதே. நான்

கொடுத்தது கால் ரூபாய் தான். பாக்கி தராவிட்டாலும், ஞாபகப் படுத்தியாவது பார்'' என்றார் படபடப்புடன்.

''ஞாபகப் படுத்திக் கொண்டு தான் ஸார் சொல்லுகிறேன்; நகருங்கள்; அனுவசியமாகக் கும்பல் சேருகிறது.''

''அப்போ நான் பதினைந்து பைசா நஷ்டப்பட வேண்டு மாக்கும்?''

''கொடுத்தால்தானே ஸார், நஷ்டப்பட? என்றான் அலட்சியமாக.

எனக்குக் கோபம் வந்துவிட்டது. ''சேட்ஜி, வாருங்கள் போகலாம். பதினைந்து பைசா தானே? வாருங்கள்'' என் றேன்.

''கடைசியாகக் கேட்கிறேன், அப்பா. நன்கு ஞாபகப்படுத்திப் பார். நான் கால் ரூபாய் கொடுத்தேன்; பாக்குக் கொடுத்தாய், நடுவில் யாரோ சிகரெட் கேட்டார்கள்'' மிகவும் நிதான மாகவே சேட்ஜி பேசினார்.

''ஸார், இந்தக் கதை யெல்லாம் வேண்டாம், நீங்க பத்துப் பைசாத்தான் கொடுத்திங்க.''

''சேட்ஜி, வாங்க'' என்றேன் நான். கடைக்காரனுடன் வாதம் செய்து கொண்டிருப்பது எனக்குப் பிடிக்கவில்லை. கடையை விட்டுக் கீழே இறங்கினோம்.

''ஒருத்தரு காந்தி; மத்தவரு அவருக்கு சீடப்பிள்ளை'' என்று ஒரு குரல் கேட்டது. குரல் வந்த திசையை நோக்கி நான் வெறுப்புடன் திரும்பினேன்.

''கதர் வேறே போட்டுக்கிட்டாங்க. பத்துப் பைசா வியாபா ரத்திலே அசந்தாப் போயிடும் போல இருக்கு'' என்று கடைக் காரன் முணுமுணுத்தான். அவனுடைய கன்னத்தில் ஓர் அறை விட்டு விடலாமா என்ற ஆத்திரம் எனக்கு. சேட்ஜி என் கையைப் பிடித்து நிறுத்தினார், நான் இருக்கும் ஆவேச நிலை யைக் கவனித்து.

''கடைக்காரன் கவனிக்காமலே இருக்கலாம். நாம் தான் ஸார், சாமான் வாங்கிக் கொண்டு காசைக் கொடுக்கவேண் டும். எத்தனையோ ஞாபகம் அவர்களுக்கு'' என்றார் ஒருவர்.

சேட்ஜி பதில் பேசவில்லை. அதற்குள் அந்த நண்பர் ''சேட்ஜி பழைய காங்கிரஸ்காரர்: பொய் பேசமாட்டார்; நீ

அவரோட போய் தகராறு பண்ணுதே '' என்ருர் கடைக்கார னிடம்.

'' ஆமாம் ஸார், காங்கிரஸ்காரர் வள்ளல்தான் தெரியுதே. அவருடைய பேச்சை நம்பினல் எனக்கு கால் ரூபாய் பச்சாத் தான் '' என்ருன் கடைக்காரன்.

சேட்ஜி திரும்பிக்கூடப் பார்க்காமல் தெருவில் நடந்தார். அவருடைய காதிலும் அந்த சம்பாஷணை விழுந்தது என்பதைப் பின்னல் என்னேடு பேசும்போது அவரே சொன்னுர். என்னு டைய நெஞ்சு குமுறிற்று. அவர் பொய் பேசமாட்டார். அவர் கொடுத்த காசுக்கு நான் சாட்சி இருக்கிறேன். ஆனலும் இரண்டு பேரும் பொய்யர்களாகிவிட்டோமே என்று எண்ணிய போது நெஞ்சில் எரிச்சல் தான் உண்டாயிற்று.

* * *

அதுவரையில் கதை கேட்டு வந்த நஞ்சுண்ட ராவ் ''பார்த் தீர்களா ? நீங்களே இப்படி அனுபவப்பட்டுவிட்டீர்களே ? நான் அப்பாவி ஸார், '' என்ருர் குழைவாக.

''இல்லை ; உண்மை பேசுவதும் அவசியம்தான். அது நெருப்பு என்றேனே ! சேட்ஜி உண்மை பேசுகிருர், அதற்குக் கடைக்காரன் மரியாதை வைக்கவில்லை. ஆனல் மனச் சாட்சி...''

''மனச்சாட்சியெல்லாம் பார்த்துக் கொண்டு இருக்க முடியுமா ஸார்? ஒன்று, போதும் போதும் என்கிறபடி பணம் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் பரம ஏழையாக இருக்க வேண்டும். இரண்டுங் கெட்டானுக என்னைப்போல வாழ்கிற வனுக்கு மனச்சாட்சி துன்பம் தான் ஸார் '' என்ருர் நஞ்சுண்ட ராவ்.

''சத்தியம் பேசவேண்டும், ஆனல் இடமறிந்து பேசவேண் டும் என்று சொல்லவந்தேன். கடைக்காரனேடு அவ்வளவு நேரம் தர்க்கம் செய்யாமல் சேட்ஜி நகர்ந்திருக்கலாம். கால் ரூபாய் ஒன்றும் பெரிய காசில்லை. சத்திய ஸ்தாபனம் செய்ய அவர் வாதாடினர். ஆனல் பண நஷ்டமும் சிறுமையும்தான் கிடைத்தது. அதனல் தான் சொல்கிறேன்......''

''உங்கள் பேச்சிலே நியாயம் இருக்கத்தான் இருக்கு. என் சம்பந்தப்பட்ட மட்டிலே நான் என்ன ஸார் பண்ணு வது ? இல்லாவிட்டால் மூணு நாளைக்குச் சம்பளமில்லாமல் லீவு எடுத்திருப்பேனு ?'' என்ருர் நஞ்சுண்ட ராவ்.

பாவம் அவர் அப்பாவி மனுஷர், அசந்தர்ப்பமாகக் கூட பொய் பேச மாட்டார். அவருடைய முகத்தைப் பார்க்கப் பரிதாபமாகத்தான் இருந்தது. ஆனாலும் நான் என்ன சொல்வது?

'' மணி இரண்டடித்து விட்டதே. இன்று எடுத்துக்கொண்ட லீவு வீணாகிவிடும் போல தான் இருக்கிறது. வராத நண்பர்கள் வந்து விட்டார்கள். என் சோதனைக் காலம் '' என்று அலுத்துக் கொண்டார் ராயர்.

பேசாமல் உள்ளே எழுந்து சென்றேன். போகும் போதே ஓரக்கண்ணால் நஞ்சுண்ட ராவைக் கவனித்தேன். நான் எழுந்து போவதைக் கண்டு அவர் ஏமாந்து விடுவார் என்ற நினைப்பு எனக்கு. அவரோ பிரகாசமான முகத்துடன் எழுந்து நின்றார். உள்ளே சென்று ஐந்து ரூபாய் நோட்டை எடுத்து வந்து அவரிடம் கொடுத்தேன்.

'' தாங்க்ஸ் '' என்று கையை நீட்டிப் பணத்தை வாங்கிக் கொண்டார் அந்த அப்பாவி.

நானும் ஓர் அப்பாவி தான் என்று சமாதானம் செய்து கொண்டேன்.

0—0

சிதம்பர ரகுநாதன்

# 14

# இழி தொழில்

கூடுகு பொரிந்து அடங்குவதுபோல் கைதட்டல் கலகலத்து ஓய்ந்தது.

நகர காங்கிரஸ் கமிட்டிக் காரியதரிசியும், ஜில்லாக் காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினரும், நகரசபைத் தலைவரும், பிரபல மொத்த ஜவுளி வியாபாரியும், முன்னாள் நீதிக் கட்சிப் பிரமுகரும், இந் நாள் சிவனடியார் திருச்சபையின் போஷகருமான திருவாளர் தில்லைத்தாண்டவராய பிள்ளையவர்கள் பெருமிதத்தோடு எழுந் திருந்து தொண்டையை லேசாகக் கனைத்துச் செருமிக்கொண்டு திருவாய் மலரத் தொடங்கினார்.

"தேச பக்தத் தியாகிகளே, ஊழியர்களே! இன்றைய அவசரக் கூட்டத்தின் காரணம் தங்களுக்குத் தெரிந்ததே. நமது நகரத்தின் தோட்டித் தொழிலாளர்களின் வேலை நிறுத்தத்தால் ஏற்பட்டுள்ள நெருக்கடியான நிலைமையைப் பற்றி ஆலோசிக்கவே நாம் கூடியிருக்கிறோம். நமக்குள்ள செல்வாக்கையும் பலத்தையும் கண்டு பொறாமை கொண்டுள்ள எதிர்க் கட்சிக்காரர்கள் தாம் இந்த வேலை நிறுத்தத்தைத் தூண்டிவிட்டு நமக்கும் பொது மக்களுக்கும் பெருங்கஷ்டத்தை உண்டுபண்ணியிருக்கிறார்கள். தொழிலாளரின் கோரிக்கைகள் நியாயமானவையாயிருந்தால் அரிஜன சேவையில் தலை சிறந்த நாம் அவற்றை உடனே ஏற்று ஆவன செய்யப் பின் வாங்கமாட்டோம். ஆனால் அந்தக் கோரிக்கைகள் அனைத்தும் அநியாயமானவை. எனவேதான் துர்ப்போதனையால் கெட்டுச் சீரழியும் தோட்டித் தொழிலாளருக்கும் அவர்களைத் தூண்டிவிட்டு வேடிக்கை பார்க்கும் எதிர்க் கட்சியாளருக்கும் நாம் சரியான பாடம் கற்பித்தாக வேண்டியிருக்கிறது. நமது அரும் பெருந் தலைவரான மகான் மகாத்மா

காந்திஜி அவர்கள் தாம் ஒரு பதவியை ஏற்க நேர்ந்தால் ஒரு நகர சபைக் கவுன்சிலர் பதவியையே ஏற்பேன் என்று கூறியுள்ளார். ஏன் தெரியுமா? நகரத்தைச் சுத்தமாக வைத்துக்கொள்வதே கவுன்சில ரின் முக்கிய வேலை என்பதே அதன் பொருள். அதுமட்டுமல்ல. அவர் தமது நிர்மாணத் திட்டத்திலும் நகர சுத்தியை ஒரு பிரதான கருமமாகச் சுட்டிக் காட்டியிருக்கிறார். நாம்தான் துரதிருஷ்ட வசமாக அவரது பொன் மொழிகளையெல்லாம் மறந்துவிட்டோம். காந்தியடிகளின் போதனையை நாம் நடைமுறையில் கடைப் பிடிக்க, இந்தத் தோட்டித் தொழிலாளரின் வேலைநிறுத்தம் நல்ல சந்தர்ப்பத்தைத் தேடித் தந்திருக்கிறது. இதை நாம் நழுவவிடக்கூடாது. தோட்டித் தொழிலை இழிவானதென்றோ, கேவலமானதென்றோ நாம் கருதக்கூடாது. எந்தத் தொழி லுமே உலகில் இழிவானதல்ல. இதை நாம் நன்குணர்ந்து, பொதுமக்களின் கஷ்டத்தையும், காந்தியடிகளின் உபதேசத்தை யும் கருத்தில் கொண்டு, நாமே இந்த நகரத்தைச் சுத்தி செய்ய வேண்டும். நாளைக் காலையிலேயே இந்தப் புனிதமான பணியை, பொதுஜன நன்மைக்கான போராட்டத்தை, நாம் தொடங்கி யாக வேண்டும். போராட்டத்தில் நாம் எல்லோரும் பங்கெடுக்க வேண்டும். நீங்கள் அனைவரும் உங்கள் பெயர்களைப் பதிவு செய்துகொள்ள வேண்டும்......"

சொல்லின் செல்வரான தில்லைத் தாண்டவராயரின் தர்க்க நியாயம் நிறைந்த அறைகூவலைக் கேட்டு வந்திருந்தவர்களில் பலரும் தவிர்க்க முடியாத சேவா வைராக்கிய உணர்ச்சி வசப்பட் டுத் தத்தளித்தார்கள். பல ஊழியர்கள் அந்த இடத்திலேயே தமது பெயரைப் பதிவு செய்துகொள்ள முன் வந்தனர். வேறு சிலர் பின்னர் வந்து பதிவு செய்து கொள்வதாகக் கூறித் தப்பித்துக்கொண்டார்கள். செயலுள்ள வியாபாரிகளான உள்ளூர்க் காங்கிரஸ் பிரமுகர்கள் தாம் போராட்டத்தில் நேரடியாகப் பங்குகொள்ள இயலாவிட்டாலும், போராட்டத் துக்குத் தமது ஆத்மீக ஆதரவும் ஒத்துழைப்பும் பரிபூரண மாக உண்டு என்ற ஒளிவு மறைவற்ற உண்மையைத் தெரி வித்து மகிழ்ந்துகொண்டார்கள். அத்துடன் போராட்ட வீரர் களுக்குப் புதிய வாளிகளும், விளக்குமாறுகளும், அகப்பை களும், இலவசமாக 'சப்ளை' செய்யும் தளவாட தான கைங்கரி யப் பொறுப்பையும் மனமுவந்து ஏற்றுக் கொண்டார்கள்.

நகரசபைத் தலைவருக்குப் பரம திருப்தி. காந்தியடிகளின் மீது ஆணையிட்டு, எல்லோரும் கடமையை நிறைவேற்ற முன் வர வேண்டும் என்று இறுதியாகக் கேட்டுக் கொண்டார்.

கூட்டம் கலைந்தது.

காரியாலயத்தை விட்டு வெளியே வந்த ஊழியர்கள் பலர் அந்தப் புனிதப் போராட்டத்தைப் பற்றிய தமது கருத்துக் களைப் பரிமாறிக் கொண்டார்கள்.

"சேர்மன் ஐயாவின் தேச பக்தியைப் பார்த்தீங்களா? அவரைப்பத்தி என்னென்னமோ சொன்னீங்களே!"

"எல்லாம் அவர் மானத்தைக் காப்பாத்திக்கிறதுக்குத் தானே!"

"அட சரித்தாம்'யா! தேனெழுகப் பேசினமட்டும் போதுமா? எலெக்சன் டயத்திலே அவர் பண்ணின அட்டகாச மும் தில்லுமில்லும் நமக்குத் தெரியாதா? இதுவும் அந்த மாதிரி ஒண்ணுதான்.

"இதிலென்னய்யா தில்லுமில்லு?"

"பின்னே? தோட்டித் தொழிலாளியின் வயித்தெரிச்சலைக் கொட்டிக்கிறதிலே நமக்கு வேறே பங்கா?"

"அதுக்காக, அந்தப் பயலுஹ ஊரை நாறவிடலா மாக்கும்!"

"நகர சபைக்குள்ளே இருக்கிற நாத்தத்தை விடவா?"

"அது சரிதான்'வே. அவனுக ஊரை நாறவிட்ட பிறகு தானே உமக்கும் நமக்கும் அவனைப்பத்தியே நினைப்பு வருது? இல்லேன்னு வருமா? ஹரிஜன சேவை, சேவை என்கிறோமே, ஒரு வாரத்துக்கு மின்னே வரையிலும் அவங்க நிலைமை என்னங் கிறதைப்பத்தி, நாம யாராவது கவலைப்பட்டதுண்டா? தெரிஞ்சிக்கிட்டதுண்டா?"

"வேய், இப்போ ஊர் நன்மையும், காங்கிரஸின் கௌரவ மும் தான் பெரிசு. நாளைக்கு நாம் இதிலே கலந்துக் கிடத்தான் வேணும்!"

"அதென்னமோ, ஐயா. நான் புள்ளை குட்டிக்காரன். அந்தப் பலலுஹ வாயெரிஞ்சி வயிறெரிஞ்சி வாரித் தூத்தின, அந்தப் பாவம் நம்மை லேசிலே விடாது. நான் இந்த விவகா ரத்திலே தலைகுடுக்கப் போறதில்லை."

"நீர் வரலேன்ன, வேலை நின்னுடப் போறதாக்கும்!"

"இல்லை—நீங்க செய்ற வேலையைத்தான் ஊர் மெச்சப் போவுது!"

......அந்த ஊழியர்களிடையே நிலவிய அபிப்பிராய பேதங் கள் முடிவேயில்லாத வாதப் பிரதிவாதங்களாக மாறி, கூச்ச லாகப் பரிணமித்து, பதில் காணமுடியாது தவித்தன.

## 2

இன்றோடு ஏழு நாட்கள் ஆகின்றன.

நகரசுத்தித் தொழிலாளரின் வேலை நிறுத்தம் இன்றும் முடிவு காணும் நிலையிலில்லை. நகரசபை நிர்வாகிகளும் தொழிலாளரின் கோரிக்கைக்கு இணங்கவில்லை. தொழிலாளர்களும் வணங்கிவிடவில்லை; எனவே வேலை நிறுத்தம் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருந்தது.

ஏழு நாட்கள்!

நகரத்தின் நிலைமையோ சொல்லும் தரமன்று. வீடுகளில் சுத்தம் செய்ய ஆள் கிடையாது. ஊர்ச்சாக்கடைகள் அனைத்தும் கட்டுக்கிடையாகித் தேங்கிப் பெருகிப் பெருகி அணை கடந்து தெருக்களிலே போக்கிடம் தேடத்தொடங்கின. தெருக்கள் அனைத்தும் குப்பையும் கூளமும் மண்டிக் கிடந்தன. எங்கும் துர்நாற்றம் பரவி நின்றது. ஜனங்கள் மூச்சுவிடத் திணறினார்கள்; சாப்பிடத் திணறினார்கள்; நடக்கத் திணறினார்கள்.

நகரம் நரகமாயிற்று.

"இந்தத் தோட்டிப்பய சென்மங்களுக்கு வந்த திமிரைப் பார்த்திங்களா?" என்று கறுவினார்கள் சிலர்.

"அவன் மட்டும் மனுசனில்லையா? அவனுக்கும் வாயும் வயிறும் இல்லாமலா போச்சி!" என்று அனுதாபப்பட்டார்கள் வேறு சிலர்.

"இந்தப் பாச்சாவெல்லாம் நம்ம சேர்மன் பிள்ளைவாளிடம் பலிக்காது!" என்று ஜம்பம் பேசினார்கள் சிலர்.

"எந்தப் பூச்சாண்டியும் தொழிலாளியிடம் பலிக்காது!" என்று எதிரொலி கிளப்பினார்கள் வேறு சிலர்.

வேலை நிறுத்தத்தைப்பற்றி ஜனங்கள் பல்வேறு விதமாகப் பேசிக்கொண்டபோதிலும், அந்த வேலை நிறுத்தம் சகல மக்களின் கவனத்தையும் கவர்ந்திருந்தது என்பதில் மட்டும் எந்தவித அபிப்பிராய பேதத்துக்கும் இடமில்லை.

திருவாளர் தில்லைத் தாண்டவராயன் சொல்கிறபடி அந்த வேலை நிறுத்தம் தூண்டுதலால் ஏற்பட்டதுதான். ஆனால் தூண்டிவிட்டது எதிர்க் கட்சிக்காரர்களோ, பொறுமைக்காரர்களோ, அல்ல. தூண்டிவிட்டது, அந்தத் தொழிலாளிகளின் துயரம், பசி, பட்டினி, மிருக வாழ்க்கை, வறுமைக் கொடுமை முதலியவைதாம்......

நகரசுத்தித் தொழிலாளரின் வாழ்க்கை நிலை அவ்வளவு படுமோசமான நிலைமையிலிருந்தது. அவர்களுக்கு நல்ல குடி

யிருப்புக் கிடையாது. ஊர் எல்லையிலுள்ள நத்தம் புறம் போக்கு நிலத்தில் கோழிக்கூடுகளைப் போலவுள்ள குடிசைகள் தாம் அவர்களின் வாசஸதலங்கள். அங்குள்ள பன்றிகளோடும் நாய்களோடும் அவர்களும் அந்தக் கூடுகளில் வாழ்ந்தார்கள். அந்தக் குடியிருப்புக்குத் தண்ணீர் வசதி கிடையாது; விளக்கு வசதி கிடையாது. குடியிருப்புக்குப் பின்புறம் ஓடும் வயற் காட்டுச் சிற்றோடைதான் அவர்களின் அமுத கங்கை; நிலவின் கருணையுள்ள நாட்கள் தான் அந்தக் குடியிருப்பு ஒளிபெறும் நாட்கள். அந்தக் கோழிக் கூடுகளில்தான் அவர்கள் பிறந்தார் கள்; வளர்ந்தார்கள்; காதலித்தார்கள்; கலியாணம் செய்தார் கள்; பிரசவித்தார்கள்; பிள்ளை பெற்றார்கள்; பேரன் பேத்தி எடுத்தார்கள்; செத்துப்பிணமானார்கள். அந்தத் தொழிலாளி களுக்குக் கிடைத்துவந்த சம்பளமோ மாசம் பதினைந்து ரூபாய். பஞ்சப்படி உண்டு. அந்தப் 'படி'யோ பஞ்சப்படி என்ற பெயருக்கே இலக்கணமாய் அமைந்திருந்தது. இந்தக் 'குபேர' சம்பளத்தில் தான் அவர்கள் உயிர் சுமந்து திரிந்தார்கள். வருகிற சம்பளம் வயிற்றுக்குக் காணாமல் தவணைவட்டிக் காரனிடம் கடன் வாங்கினார்கள். வாங்கிய கடனைக் கொடுக்க முடியாமல் வட்டிக்காரனிடம் அவஸ்தைப் பட்டார்கள்; அடிபட்டார்கள். சட்டிபானைகளைப் பறி கொடுத்தார்கள், மானம் மரியாதையைப் பறிகொடுத்தார்கள்........

அந்தத் தொழிலாளர்களின் வாழ்க்கை வசதிக்கு நகரசபை எந்தவித முயற்சியும் செய்யவில்லை. லோக்கல் போர்டு சிப்பந்தி கள் என்ற பெத்தப் பெயரே தவிர, அவர்களுக்கு வேலை நிரந்தர உத்தரவாதமோ, பாதுகாப்பு நிதி வசதியோ, சம்பள உயர்வோ எதுவும் கிடையாது. எனவே இந்த நிலையில் நகரசபை உத்தி யோகஸ்தர்களுக்கு அவ்வப்போது எழும் விருப்பு வெறுப்புக் களுக்காளாகி, சிலருக்குச் சீட்டுக் கிழிவதும் உண்டு. நகர சபையினர் அவர்களுக்கு வஸ்திரதானம் செய்து புண்ணியம் சம்பாதிப்பது என்னவோ மறுக்க முடியாத உண்மைதான். எனினும் அந்த வஸ்திரங்களோ ஆளுக்கு ஒரு ஜோடி; அதுவும் மாமாங்கத்துக்கு மாமாங்கம்.

சுருங்கச் சொன்னால் நகரத்தை நரகமாக்காமல் சுத்தம் செய்து அழகுபடுத்தும் அந்தத் தொழிலாளர்கள் மட்டும் நரகக் குழியிலேதான் வாழ்ந்து வந்தார்கள்.

இந்த நிலைமைகளைச் சமாளிக்க முடியாதபோது தான், அந்தத் தொழிலாளர்கள் தங்கள் ஒற்றுமையின் பலத்தை, தமது உழைப்பின் சக்தியை உணர்ந்தார்கள்; ஒன்றுபட்டு நின்று உரிமைக்காகப் போராடினார்கள். பஞ்சப்படி, சம்பள உயர்வு, புதிய உடை, வேலை நிரந்தரம், குடியிருப்பு வசதி, நீக்கப்பட்ட

தொழிலாளரை மீண்டும் வேலைக்கு எடுத்தல் முதலிய கோரிக் கைகளுக்காக, நகரசபை நிர்வாகிகளோடும் லேபர் அதிகாரி களோடும் வாய்சலிக்குமட்டும் பேச்சுவார்த்தை நடத்திப் பார்த் தார்கள். அவற்ருல் எந்தவித பயனும் விளையவில்லை. எனவே தான் அவர்கள் தங்களுக்குத் தெரிந்த, தங்களிடமுள்ள ஒரே ஆயுதத்தை, இறுதி ஆயுதத்தைப் பிரயோகிக்கத் துணிந்தார்கள்.

வேலை நிறுத்தம்!

கடந்த ஒருவார காலமாக, ஆண் பெண் உட்பட எல்லாத் தொழிலாளரும் வேலை நிறுத்தம் செய்தார்கள். ஒரு குஞ்சு குளுவான்கூட, வேலைக்குச் செல்லவில்லை. வேலை நிறுத்தம் தொடங்கிய பிறகுதான் நகரசபை நிர்வாகிகளுக்கும் அதன் பலம் பலன் எல்லாம் தெரிந்தன. நியதி தவருது சுற்றிச் சுற்றி வரும் பிரபஞ்ச கோளமே திடீரென்று ஸ்தம்பித்துச் சிந்திச் சிதறிப் போவதுபோல், நகரத்தின் நிலை நியதி குலைந்து தத்தளித்தது. எனினும் நிர்வாகிகள் தொழிலாளரின் கோரிக்கைக்கு இணங்க முன்வரவில்லை; உள்ளூர் அரசியல் பிரமுகர்கள் பலரும் வேலை நிறுத்தத்தை உடைக்கச் செய்த சதிவேலைகள் எதுவும் பலிக்க வில்லை. சுதந்திரத்தின் பாதுகாவலர்களான அந்தப் பிரமுகர் கள் போலீஸின் மறைமுகமான ஒத்துழைப்பைச் சம்பாதித்துக் கொண்டு தமது அடியாட்களையும் குண்டர்களையும் ஏவிவிட்டு, நகரசுத்தித் தொழிலாளரைக் கண்ட கண்ட இடத்தில் தாக்கி ஞர்கள்; குடியிருப்புக்குள் நுழைந்து சட்டிபெட்டிகளை உடைத் தெறிந்தார்கள்; பெண்களையும் பிள்ளைகளையும் சீரழித்தார்கள். போலீசாரும் 'அமைதியை நிலைநாட்டும்' கடமை யுணர்ச்சி யோடு தொழிலாளர்மீது கண்டும் காணுமலும் தடியடித் தாக்குதல் நடத்தினர்; 'அமைதிக்குப் பங்கம் விளைவித்த' தொழிலாளரை லாக்கப்பில் தள்ளினுர்கள்.

அடக்குமுறை—சூழ்ச்சி—அரசியல் சாகசம் எதுவும் அந்தத் தொழிலாளரை அடக்கிவிடவில்லை. அவர்கள் எதற்கும் அஞ்ச வில்லை; அடிபணியவில்லை. உலைக்களத்திலே தள்ளிய காலத்தி லும் அவர்கள் உறுதி குலையவில்லை. அதற்குப் பதிலாக அவர் கள் உருக்காகிக் கொண்டிருந்தார்கள். அதுமட்டுமல்ல. அந்தத் தொழிலாளரின் உரிமைப் போராட்டம் பிற பகுதித் தொழிலாளர்களின் கவனத்தையும் கவர்ந்தது. நகரசுத்தித் தொழிலாளருக்கு ஆதரவாக பிறதொழிலாளர்கள் கூட்டங்கள் நடத்தினர்; ஊர்வலம் நடத்தினர்: கோஷமிட்டனர்; தீர்மா னங்கள் நிறைவேற்றினர்; ஆதரவு திரட்டினர்......

இந்தச் சந்தர்ப்பத்தில்தான் அந்த வேலை நிறுத்தப் போராட் டத்தைச் சீர்குலைத்துச் சின்னபின்னமாக்கக் கனவு காணும் 'புனித போராட்ட'த் திட்டம் நகரக் காங்கிரஸ் கமிட்டி

காரியாலயத்தில் திருவாளர் தில்லைத் தாண்டவராயன் தலைமையில் உருவாகியது......

## 3

பறையருக்கும் இங்குதீயர்
புலையருக்கும் விடுதலை!
பறவரோடு குறவருக்கும்
மறவருக்கும் விடுதலை!

என்று பாடிக்கொண்டே அருணோதயப் பொழுதில் நகரை வலம் வரத் தொடங்கியது அந்த ஊர்வலம்.

கதர்க் குல்லாய், கதர் ஜிப்பா, கதர் பைஜாமா முதலிய தூய வெள்ளை ஆடையலங்காராதிகளோடு, புத்தம் புதிய வாளிகளையும் அகப்பைகளையும், விளக்கு மாறுகளையும் ஏந்திய திருக்கரங்களோடு, சில காங்கிரஸ் ஊழியர்கள் அணிவகுத்துச் சென்றார்கள். வீறு நடைபோட்டுச் செல்லும் அந்த ஊழியர்களுக்கு முன்னால் வெற்றி நடை போட்டுச் சென்றுகொண்டிருந்தார் சேர்மன் பிள்ளையவர்கள். அந்தக் கர்மயோக சாதகர்களின் அணி வகுப்புக்கு இருமருங்கிலும் போலீஸ் ஜவான்கள் சிலர் பாதுகாப்பாக நடந்து வந்தனர். அந்த ஊர்வலத்துக்குப் பின்னால், சுமார் ஐம்பது கஜ தூரத்துக்கு அப்பால், எழுந்திருந்தாகிச் செல்லும் உற்சவ மூர்த்தத்துக்குப் பின்னால் தேவாரம் பாடிவரும் திருக் கோஷ்டியைப் போல், ஆயுதம் தாங்கிய போலீஸாரைத் தாங்கிய லாரி ஒன்று மெல்ல மெல்ல வந்து கொண்டிருந்தது.

ஊர்வலம் முதல் பெருவீதியைக் கடந்து மூலை திரும்பியது...

எதிரே நகரசுத்தித் தொழிலாளர்களின் ஊர்வலம் கட்டவிழ்த்துவிட்ட அசுர சக்தியைப்போல் உருண்டு திரண்டு அலை மோதிக்கொண்டு வந்துகொண்டிருந்தது.

''மகாத்மா காந்திக்கு—ஜே!'' என்று கோஷித்தது தில்லைத் தாண்டவராயரின் ஊர்வலம்.

''உழைப்பவன் சோற்றைப் பறிக்காதே!'' என்று எதிரொலி தந்தது நகர சுத்தித் தொழிலாளரின் ஊர்வலம்.

சிறிது நேரத்தில் இரு ஊர்வலங்களும் எதிரும் புதிருமாக, இரு பெரும்படைகள்போல் நெருங்கின; ஒன்றையொன்று வழி மறித்தன; இரண்டும் முன்னேற முடியாமல் ஸ்தம்பித்து நின்றன.

''வழி விடுகிறீர்களா, இல்லையா?'' என்று கர்ஜனை செய்தார் தேசபக்த ராஜசிம்ம தில்லைத் தாண்டவராயர்.

''முடியாது ! என் சவத்தின்மீது நடந்துபோங்கள் !'' என்று முன்னே வந்து முழக்கினுன் ஒரு வயோதிகத் தொழிலாளி.

அந்தக் கிழட்டு உடம்பு படபடத்தது ; நரம்புகள் புடைத்துத் துடித்தன.

சேர்மன் பிள்ளையவர்கள் போலீஸ் உதவியை அழைப்பதா வேண்டாமா என்று யோசித்தார் ; அவருக்குப் பின்னுல் திரண்டு நின்ற ஊழியர்கள் எதிரே ஏறிட்டுப் பார்த்தார்கள்.

எதிரே......

தாடி மண்டி வளர்ந்த முகங்கள்—பசியும்—களைப்பும் பதிந்து, களையும் ஒளியும் இழந்து பஞ்சடைந்து தோன்றும் கண்கள்—ஒட்டி உலர்ந்து உட்குழிந்த வயிறுகள்—குழலாடித் தளர்ந்துபோன வயோதிகர்கள்—வாலிப வயதிலேயே வயோதிகத்தை அனுப விக்கும் குமரர்கள்—மானத்தை மறைக்கக்கூடப் போதுமான கந்தலற்றுத் தவிக்கின்ற பெண்கள்—பிஞ்சிலே வெம்பிய பழம் போன்று வற்றி மெலிந்து தோன்றும் சிறுவர் சிறுமிகள் ........

அவர்கள் அத்தனை பேரும் ஆண் பெண் என்ற வித்தியாச மின்றி, சிறியவர் பெரியவர் என்ற பாகுபாடின்றி, ஒரே விதமான உறுதியோடும் உத்வேக உணர்ச்சியோடும் நின்று கொண்டிருந் தனர்.

முன் வரிசையில் நின்ற காங்கிரஸ் ஊழியன் ஒருவன் அந்தக் கிழவனை நோக்கிக் கேட்டான்:

''எங்களை ஏன் வழி மறிக்கிருய்? உங்கள் வேலை நிறுத்தத்தால் ஊரே நாற்றமெடுத்துப் போச்சே ! ஏன் இந்த அடாத காரியம் செய்கிறீர்கள் ?''

அந்தக் கிழவனிடமிருந்து கணீரென்று பதில் வந்தது:

''அடாத காரியமா ? எதய்யா அடாத காரியம் ? அந்தக் காந்தி மகாத்துமா சொல்லிக்கொடுத்த சத்தியாகிரகத்தைத் தானே நாங்களும் செய்கிறேம் !''

''நாங்கள் செய்த சத்யாகிரகம் அன்னியனின் அநீதியை, ஆட்சியை எதிர்த்து; நீங்கள் செய்வது சத்தியாகிரகமல்ல; சண்டித்தனம் !''

''ஏனையா ? நீங்க செய்தா சத்யாக்கிரகம், நாங்க செய்தா சண்டித்தனம் ! அப்படித்தானுய்யா ? நாங்களும் எங்களுக்குச் செய்த அநியாயத்தை எதுத்துத்தான் போராடுதோம், தெரிஞ்சிதா ?''

''உன்னிடம் வாதாட வரவில்லை. சரி வழியை விடு!''

''இருங்க, சாமி! காந்தி மகான் உங்களை இப்படித்தான் சேவை செய்யச் சொன்னாரோ?'' என்று எரிச்சலோடும் கும்பிக் கொதிப்போடும் கேட்டான்.

''ஆமா, நகரத்தைச் சுத்தி செய்வது அவர் இட்ட கட்டளை!''

அந்தக் கிழவனுக்கு மீசை துடித்தது; உதடுகள் நடுங்கின! தொள தொளத்த தசை நார்களெல்லாம் முறுக்கேறித் திமிறுவது போல் இருந்தன. புடைத்துத் தெரியும் ரத்த நாளங்களும், நரம்புக் கொடிகளும் நெளிந்து புரண்டன......

''இதோ பாருங்கையா! எங்க கூட்டத்தை! உழைக்கிற உழைப்புக்குக் கிடைக்கிற காசு ஒரு வாய் சோத்துக்குப் பத்தலெ. எலும்பும் தோலுமா நிக்கிற எங்க குழந்தை குட்டிகளைப் பாருங்க; கட்டையிலே போற வயசிலேகூட வயித்தாத்திரம் தாங்க முடியாமெ, உழைச்சி உழைச்சித் தேஞ்ச இந்த உடம்பைப் பாருங்க. எங்க இத்தனை பேர் வயித்திலேயும் மண்ணடிச்சிட்டுத் தான் காந்தி மகான் ஊரைச் சுத்தம் பண்ணச் சொன்னாரா? எங்களுக்கு எதிரா, கருங்காலி வேலை பார்க்கிறதுக்குத்தான் காந்தி சொல்லிக் கொடுத்தாரா? நெஞ்சிலே கையை வைத்து நிசத்தை சொல்லுங்கய்யா''!

கிழவனின் குரல் உணர்ச்சிப் பெருக்கால் உச்சஸ்தாயிக்கு ஏறிக் குழ குழத்துத் தடுமாறியது.

''இவனோட என்னப்பா பேச்சு?'' என்று வெட்டி முறித்துப் பேசிவிட்டு, அருகே நின்ற போலீஸ் ஜவான்களைக் கண் காட்டிய வாறு, 'ஊம்' என்று பத்திரம் காட்டி உறுமினார் திருவாளர் தில்லைத் தாண்டவராயர்.

மறுகணமே போலீஸ்காரர்கள் தொழிலாளர் அணிவகுப்பின் மீது தங்கள் கை வரிசையைக் காட்டத் தொடங்கினர். திடீரென்று அந்தக் கூட்டத்திலிருந்து கூச்சலும், வசவுகளும், கூக்குரலும் கேட்கத் தொடங்கின. அந்த அணிவகுப்பின் முன் வரிசையில் நின்ற அந்தக் கிழவன் மூக்கிலிருந்து வழியும் ரத்தத் தோடு ''ஐயோ!'' என்று கூவிக்கொண்டு, பாதையிலே குறுக்கே பேச்சு மூச்சற்று விழுந்தான். பெண்களும் குழந்தைகளும் அடிகளைத் தாங்கமாட்டாமல் அலறிக்கொண்டு ஓடினார்கள்; மண்டையிலிருந்து தெறித்துப் பாயும் ரத்தத்தோடு பல தொழி லாளர்கள் அடிகளைத் தாங்கிக்கொண்டு கீழே விழுந்தார்கள்; அந்தத் தொழிலாளர்கள் ஏந்தி வந்த தொழிற்சங்கப் பதாகை முறிந்து கீழே விழுந்தது. காயம்பட்டுக் கிடந்த அந்தக் கிழவ

னின் கடைவாயிலிருந்து ஒழுகிய செங்குருதி அந்தப் பதாகையை நனைத்து நனைத்து அதை மேலும் சிவப்பாக்கிக் கொண்டிருந்தது.

சில நிமிஷ நேரத்துக்குள் போலீஸார் அங்கு ‘ அமைதியை நிலை நாட்டினார்கள் !’ தாக்குதலை நடத்தி முடித்த போலீஸார் சேர்மன் பிள்ளைவாளைப் பார்த்துப் புன்னகை செய்தார்கள் ; சேர்மன் பிள்ளைவாளும் வெற்றிக் களிப்புத் துள்ளாடும் திருமுக விலாசத்தோடு குறுநகை பூத்தார்.

அவர்களுக்கு முன்னால் அந்தப் போர்க்கள அலங்கோலம் செக்கச் சிவந்து தோன்றியது.

சேர்மன் பிள்ளைவாள் திருவாளர் தில்லைத் தாண்டவராயர் கம்பீரமான குரலில் தம் சகாக்களை நோக்கி ஆணையிட்டார்.

‘‘ ம் ; செல்லுங்கள் முன்னே !’’

திடீரென்று எழுந்த அந்த ஆணைச் சொல் அங்கு நிலவிய அந்தச் சுடுகாட்டு அமைதியைப் பிளந்து கொண்டு எதிரொலித்தது. அந்த எதிரொலியில் தாக்குண்ட முன்னணியில் நின்ற அந்த ஊழியன் தனது வலது காலைத் தன்னையுமறியாமல் விறுட்டென்று எட்டு எடுத்து முன் வைத்தான். ஆனால் அந்தக் காலைப் பதித்ததுமே ஏற்பட்ட உணர்ச்சி, அவன் உடம்பில் மின்சாரத் தாக்குதலின் அக்கினி வேகத்தைப் போல் அந்தக் காலை உதறியெறிந்தது. அவனது காலில் நழுக்கென்று மிதிபட்டு வழுக்கியது அந்தக் கிழவனின் உயிரற்ற சடலம் !

அதைக் கண்டதுமே அவன் கண்களும் மனமும் சுளுக்கிச் சுண்டுவது போலிருந்தன. ‘என் சவத்தின் மீது நடந்து போங்கள் !’ என்ற அந்தக் கிழவனின் வார்த்தைகள் கணீரென்று ஒலிப்பது போலிருந்தன.

அவன் கால்கள் இடம் பெயர மறுத்தன.

‘‘என்ன தயக்கம் ? போங்கள் முன்னே !’’ என்று திருவாளரின் ஆணை முழக்கம் மீண்டும் ஒலித்தது.

‘‘ முடியாது !’’ என்று அந்த ஊழியனிடமிருந்து கணீரென்று எதிரொலி கிளம்பியது.

‘‘முடியாதா ? ஏன் முடியாது ?’’ என்று உறுமினார் சேர்மன்.

‘‘ இந்த இழிந்த தொழிலை என்னால் செய்ய முடியாது !’’

‘‘ எது இழிந்த தொழில் ? எந்தத் தொழிலும் இழிவான தில்லை என்று காந்தியடிகள் சொல்லவில்லையா ? அதற்குள்ளாகவா மறந்துவிட்டீர்கள்?’’

"நாங்கள் மறக்கவில்லை. ஆனால் கருங்காலித் தொழில் செய்வது ஒன்றுதான் உலகத்தில் மிகவும் கேவலமான இழிவான தொழில் என்பதையும் மகாத்மா சொல்லிக் கொடுத்திருக்கிறார்."

மறுகணமே அந்த ஊழியன் தன் கையிலிருந்த வாளியையும் அகப்பையையும் கையைவிட்டு இறக்கிக் கீழே வைத்தான்.

"நீங்கள் போகப் போகிறீர்களா, இல்லையா?" என்று இடிக் குரலில் கர்ஜித்தார், தில்லைத் தாண்டவராயர்.

அவர்கள் அனைவரும் உடனே போகத்தான் செய்தார்கள்.

ஆனால், முன்னணியில் நின்ற அந்தக் காங்கிரஸ் ஊழியனைப் பின்பற்றி, தம் கைகளிலிருந்த வாளி, அகப்பை, விளக்குமாறு முதலியவற்றைக் கீழே வைத்து விட்டுத்தான் போனார்கள்!

△

வி. எஸ். சுப்பையா

15

# மதுவிலக்கு

தாமிரபரணி தன் தடக்கைகளை எட்டிய மட்டும் தொட்டுச் செழிப்பித்த தீரத்தில் உள்ளது மாவடி கிராமம். ஏறக்குறைய நூறு தலைக்கட்டுகள் கொண்டது. அந்த வட்டாரத்திலுள்ள கிராமங்களில் எல்லாம் மாவடி கிராமத்தார் தான் வறுமை இன்னதென்றே அறியாமல் வாழ்ந்தனர்.

ஆற்றுப்பாய்ச்சலில் அறுவடை நடக்கும் போது, ஏரிப் பாய்ச்சலில் நடுகை மும்முரமாக இருக்கும். நதி தீர நஞ்சைகளில் புழுதி உழவு நடந்துகொண்டிருந்தால் ஏரி கழனிகளில் களைபறியில் பெண்கள் ஈடுபட்டிருப்பார்கள். ஆக, ஆண்டு முழுவதிலுமே மாவடிவாசிகளுக்கு உழைப்பு இருந்துகொண்டே இருக்கும்.

களைபறி முடிந்து சூல்கொண்ட நெற்பயிர் இப்போதோ சற்று நேரத்திலோ கதிர்களை ஈன்று விடுவேன் என்று விம்மிக் கொண்டிருக்கும் சமயத்தில் கண்ணுக்கு எட்டியதூரம் கழனிக் காட்டைப் பார்த்தாலோ அப்பப்பா அந்தக் காட்சியே ஒரு தனி.

இந்தக் காட்சியை எல்லாம் நன்ருய் அனுபவிக்க மாவடி கிராமத்திலுள்ள ஜில்லா போர்டு பள்ளிக் கூடத்துக்கு ஆசிரியராக வந்து சேர்ந்தான் இளைஞன் நாகய்யா.

பழைய ஆசிரியர் வயதானவர், தலை வழுக்கை விழுந்து நடக்கும்போதே கொஞ்சம் தள்ளாடுவார். கையில் ஒரு கம்பும் முட்டை வடிவ மூக்குக் கண்ணுடியும் அவருடைய முத்திரைகள். பத்து ஆண்டுகளாக அந்த ஊரிலேயே பணி செய்தவர்.

ஆனல் ஊரார் சிலர் அவருடைய மாற்றலைத் தடுத்து மறு உத்தரவு வாங்க முயன்றார்கள். அவருக்கும் அந்த ஊரை விட்டுப் போக மனம் இல்லை. அதனல் நெருங்கிப் பழகிய அந்தரங்க நண்பர்களைக்கொண்டு உத்திரவை ரத்து செய்து இன்னும் ஒரு வருஷமோ இரண்டு வருஷமோ அங்கேயே பணி செய்து ஓய்வு பெற விரும்பினர்.

நாகய்யாவுக்கு ஆசிரியர் பயிற்சி முடிந்து இது முதல் நியமனம். இளைஞன், கல்யாணமாகாதவன்.

இந்தக் காரணத்தையும் சுட்டிக்காட்டி அவன் அங்கே வேண்டாம் என்று மனுவில் குறிப்பிட்டு பெரும்பான்மையோர் கையெழுத்தும் கைநாட்டும் வாங்கப்பட்டன.

பழைய ஆசிரியர் புது ஆசிரியருக்கு வேலையை ஒப்புக் கொடுக்க மறுத்துவிட்டார். ஊரார் ஜில்லா போர்டு தலைவ ருக்கு அனுப்பிய மனுவுக்கு உத்தரவு வரும் வரை வேலையை அவனிடம் ஒப்படைக்க முடியாதென்று கண்டிப்பாகச் சொல்லி விட்டார். உத்தரவும் வந்தபாடில்லை.

நாகய்யாவுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. வேறு எந்த ஊருக்காவது மறுநியமனம் வந்தாலாவது போதும். வேண்டாத ஊரில் வலுக்கட்டாயமாக இருந்து பணி செய்வ தில் மனக்கஷ்டமே தவிர வேறு என்ன லாபம்?

இந்த நிலையில் ஊரார், கள்ளுக்கடை கண்ணுசாமியை அணுகி அவன் ஜில்லா போர்டு தலைவரை நேரில் கண்டு உத்தரவை ரத்து செய்து வாங்கிவரும்படிக் கேட்டுக் கொண்ட தற்கு இணங்க, கண்ணுசாமியும் அதிகாலையில் போகும் ரயிலில் போய்விட்டான். இரண்டு மூன்று நாட்கள் ஆனலும் அங்கேயே தங்கி உத்திரவை கையோடு வாங்கி வருவதாகச் சொல்லிவிட்டு அவன் போனதாக கமுக்கமாய்ப் பேசிக்கொண்டார்கள்.

நாகய்யா அன்று மாலை ரயிலில் அந்த ஊரைவிட்டுப் புறப்பட்டுப் போகத் தீர்மானித்துவிட்டான். முதல் நியமனம் இப்படி ஆகிவிட்டதே என்ற கவலை அவன் முகத்தில் நன்றாகத் தெரிந்தது.

வந்த இந்த ஒரு வாரத்துக்குள்ளேயே மாவடி கிராமத்து இளைஞர்கள் அவனைச் சூழ்ந்து கொண்டார்கள்.

எழுத்து வாசனை இதுவரை பெருதவர்கள் அவனிடம் இரவில் கற்றுக்கொள்ள விரும்பினர்கள்.

நாகய்யாவின் மனதில் என்ன என்னவோ திட்டம் உருவாகி யிருந்தது படிப்பைப்பற்றி. எல்லோரும் படிக்கவேண்டும். எல்லோருக்கும் எழுதப் படிக்கத் தெரிய வேண்டும். பெண்களும் படிக்க வேண்டும். ஒரு பெண் தன் கணவனுக்குக் கடிதம் எழுதும் அளவுக்காவது எழுதத்தெரிந்திருக்க வேண்டும். அதற்காக அவள் இன்னொருவர் துணையை நாடக்கூடாது என்றெல்லாம் திட்டம் வைத்திருந்த அவனுக்கு மாவடி கிராமத்தில் தொடக்க காலத் திலேயே ஏற்பட்ட எதிர்ப்பு பெரு வெறுப்பையும் சோர்வையும் விளைவித்தது.

கடைசியாக அதைவிட்டுப் போய் ஜில்லாபோர்டில் மறு நியமனம் பெறவேண்டியதுதான் என்று முடிவுகட்டி தன் கொஞ்ச நஞ்ச சாமான்களோடு ரயில் நிலையத்தை அடைந்தான். அவன் போகும்போது ஆண்களும் பெண்களும் அவரவர் வீட்டி லிருந்து எட்டிப்பார்த்தார்கள். பழைய ஆசிரியருக்கு வெற்றி. அந்த வெற்றிக்குப் பாடுபட்டவர்கள் பெருமிதம் அடைந்தார் கள். அதில் ஆச்சரியம் எதுவும் இல்லை.

ஆனால் ரயிலடியில் அவன் போகும் வண்டி வருவதற்குள் இளைஞர்கள் கூட்டமாகச் சென்று அவன் போகக்கூடாது என்று தடுத்தார்கள்.

''மேலாவிலிருந்து உத்தரவு என்னதான் வருகிறது என்று பார்ப்போமே! அதுவரை எங்களுக்காகத் தங்குங்கள். அப்புறம் நடக்கிறபடி நடக்கட்டும்'' என்று வாதாடினார்கள்.

அவர்கள் அன்பைப் புறக்கணிக்க விரும்பவில்லை நாகய்யா.

''கள்ளுக்கடை கண்ணுசாமி செல்வாக்கு உள்ளவன் என் கிறார்களே! உத்திரவை ரத்து செய்து வாங்காமலா வருவான்?'' என்று ஐயம் தெரிவித்தான் நாகய்யா.

''அப்படி உத்தரவு வாங்கிவந்து விட்டால் நாங்களே உங் களை வழியனுப்பி வைக்கிறோம்'' என்று சொல்லி ரயில் நிலையத் திலிருந்து திரும்பக் கூட்டிக்கொண்டு வந்துவிட்டார்கள்.

எதிர்பார்த்ததற்குமாறாக, கண்ணுசாமியின் பாச்சா ஜில்லா போர்டு தலைவரிடம் பலிக்கவில்லை. போனமச்சான் திரும்பி வந்த கதையாகத் தலையைத் தொங்கப்போட்டுக்கொண்டு வெறுங்கையோடு மாவடி வந்தான்.

நாகய்யா ஆசிரியர் பதவியை ஒப்புக்கொண்டதோடு மாற்றலாகிச் செல்லும் பழைய ஆசிரியருக்குத் தக்கபடி ஒரு பிரிவு உபசாரம் வேறு நடத்திக் காண்பித்தான். பழைய

ஆசிரியரின் ஆதரவாளர்கள் வெளிப்படையாக இந்த உபசாரத்தை ஆதரித்ததாகக் காட்டிக்கொண்டாலும் உள்ளுக்குள் அவர்களுக்கு ஒரே வேக்காடு.

கண்ணுசாமி உள்ளுக்குள் கருவினன். ''இரு, இரு. உன்னை என்ன செய்கிறேன் பார்'' என்று வன்மம் வைத்தான். நாகய்யா மீது என்ன பழியைச் சுமத்தி ஊரைவிட்டு விரட்டலாம் என்று இராப் பகலாய் யோசனை செய்ய ஆரம்பித்தான்.

## 2

யார் இந்த கண்ணுசாமி? கண்ணுசாமி குடும்பமே பரம்பரையாக கள்ளுக்கடை குத்தகை எடுக்கிறவர்கள். கண்ணுசாமி அக்கரை சீமையிலிருந்து அண்மையில்தான் ஊருக்கு வந்தவன். மலேயாவிலோ சிங்கப்பூரிலோ ஒரு சாராயக்கடையை நடத்துகிறதாம் அவன் குடும்பம். குடும்பத்தில் ஒருவர் மாறி மாறி அங்கேபோய் அதை மேற்பார்வை பார்ப்பார்கள். ஊரில் நிலபுலன்கள், பனந்தோப்பு, தென்னந்தோப்பு சேர்க்கை நாளுக்கு நாள் அதிகமாகிக்கொண்டே வந்தது.

கண்ணுசாமிக்கு நாற்பது வயதிருக்கும். சமீபத்தில் அவனில் ஏற்பட்ட மாற்றம் இரண்டு தங்கப் பல் கட்டிக்கொண்டு வந்திருப்பதுதான். அவன் சிரிக்கும்போது மற்றவர்களும் சிரிப்பார்கள்—ஏகத்தாளமாக அந்தப் பல்லைப் பார்த்து. கண்ணுசாமி வருவதற்குமுன் அவன் வரவுக்குக் கட்டியம் கூறுவது கள் வாசனை அல்ல; அவன் சிங்கபூரிலிருந்து கொண்டுவந்திருக்கும் ஒருவித வாசனை. அது சீமைச்சாராய வாசனைதான் என்று சிலர் மறைவாக தங்களுக்குள் எள்ளி நகையாடுவது வழக்கம்.

மதுவிலக்கு, மாவடியிலும் அதைச்சுற்றியுள்ள கிராமங்களிலும் வெகுகாலமாக தலைகாட்டவில்லை. சில இளைஞர்கள் மட்டும் அவ்வப்போது நகர்ப்புறங்களில் கேட்ட கொள்கைகளைப் பின்பற்றி மதுவிலக்கு பிரசாரம் செய்யத் தொடங்குவார்கள். ஆனால் கள்ளுக்கடை கண்ணுசாமி இரவோடு இரவாய் எல்லா பெரியதனக்காரர்களையும் அழைத்து அழகாக ஒரு கள் பார்ட்டி நடத்திக் காண்பித்துவிட்டானானால் — அவ்வளவுதான் — படம் ஒடுங்கிய பாம்புபோல அந்தப் பிரச்னை படுத்துவிடும்.

ஆயினும் கள்ளை ஒழித்தே ஆகவேண்டும் என்ற உணர்ச்சி அந்த வட்டாரத்தில் மறைந்து போய்விடவில்லை. அதுவும் சங்கிலியோடு வளர்ந்து வந்தது என்றுகூடச் சொல்லலாம்.

சங்கிலி இதற்காகத்தானோ என்னவோ புழுதியில் நட்ட சம்பா நடுகையைப்போலச் செழிப்பாக வளர்ந்துவிட்டாள்.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்னல் சிற்ருடையைக்கூட நன்ருகச் சுற்றிக்கொள்ளத் தெரியாத சங்கிலி, இப்போது நம்பமுடியாத படி பச்சை மஞ்சளை முறித்ததைப்போல கண்ணைப்பறிக்கும் பொலிவோடு விளங்கினுள்.

பல தடவைகளில் வாய்க்கால் கரைகளிலும் வயல் வரப்புகளிலும் சங்கிலியை அவன், எதிரேவரக் கண்டிருக்கிருன். அவன் தான் புதிதாக வந்த ஆசிரியர் என்று அறிந்தபொழுது, சங்கிலியும் கண்களை அகல விழித்து, தன் நெஞ்சகத்துப் புகவும் வழி விட்டாள்.

இதற்குமுன்னில்லாத புத்தம்புது உணர்ச்சிகள் சங்கிலியிடம் தோன்றி வலுக்க ஆரம்பித்தன. நாகய்யாவின் அழகிய முகம், கூரிய விழிகள், தூய ஆடம்பரமற்ற தன்மை, இனிய மொழிகள் எல்லாம் அவளுடைய இதயத்தில் சதா உலவி அவனைப் பற்றி இடையருமல் நினைக்கத் தூண்டின.

அறுவடை சமயத்திலும், அறுவடை முடிந்தவுடனுந்தான் கள்குடி அபரிமிதமாக இருக்கும். களங்களிலும் களத்துமேடுகளிலும் கள், மிடாக்களிலும் குடங்களிலும் குடுவைகளிலும் வந்து இறங்கிய வண்ணமாக இருக்கும். ஆண்களும் பெண்களும், ஓலைப்பட்டைகளிலும், கலயங்களிலும், கள்ளை ஊற்றி ஊற்றிக் குடித்து மயங்குவார்கள்.

காசை வாங்கிக்கொண்டு கள் விற்பதைவிட, நெல்லுக்குக் கள்ளைப் பண்டமாற்று செய்வதில்தான் அதிக லாபம் என்பது கண்ணுசாமி கண்டு வைத்திருந்த சிதம்பர ரகசியம். அதனுல்தான் வயல்களிலும் களத்துமேடுகளிலும் கள்ளை ஆருகப் பாய விட்டு வயல் நெல் வீடுவந்து சேர்வதற்குள்ளேயே அவன் நெல்லை அபகரித்துச் செல்லும் கொடுமையை மாவடி இளைஞர்கள் கண்டிக்கத் தலைப்பட்டார்கள்.

முதல்நாள் இரவில் பள்ளிக்கூடத்தில் ஆசிரியர் தலைமையில் ரகசியக்கூட்டம் நடத்திக் கள்ளை அடியோடு ஒழிக்க ஆலோசனை செய்தார்கள். அதில் முக்கியமான யோசனை கள்குடியின் தீமையைப்பற்றி முதலில் மக்கள் உணர்ந்து மனம் திருந்த வேண்டும்.

ஆகையால் ஊரில் பெரியவர்களை நேருக்கு நேர் சந்தித்து அதைப்பற்றி விளக்கவேண்டும். அடுத்து, கள் விற்பனை, கடையோடு மட்டும் நிற்காமல் வயல்களிலும் களங்களிலும் விற்கப்படுவது உடனே நிறுத்தப்படவேண்டும்.

ஆலோசனைப்படி மறுநாள் இளைஞர்கள் வயல்களிலும் களங்களிலும் சுற்றித்திரிந்து, விற்பனை நிலவரத்தை அறிந்து வந்து மூன்ரும் நாள் இரவில் ஊர்க் கூட்டம் போட்டு அதைத்

தடுத்துவிடத் திட்டமிட்டனர். நாகய்யா தற்செயலாகப் போவது போல பல களங்களைப்போய்ப் பார்த்தான்.

சங்கிலி வீட்டார் களத்தைத் தங்கள் வயலிலேயே வைத்திருந்தார்கள்.

நெல்லும் நெற்கதிர் கட்டுகளும், வைக்கோலும், வைக்கோல் போருமாகக் காட்சியளிக்கும் களத்தில், ஆடவரும் பெண்டிரும் இயல்பாக மகிழ்ச்சியோடு விளங்குவார்கள்: பாடுபட்ட பலன் கிடைக்கும் சமயம் அல்லவா? அறுவடை முடியும் வரை இரவும் பகலும் களங்களிலேயே தங்கி விடுவதும் உண்டு. வெயிலுக்கும்—பனிக்கும் மறைவாக சிறு சிறு குடில்களை அமைத்துக்கொண்டு, அங்கேயே உண்டு உறங்கி உழைப்பதில் ஒரு தனி மகிழ்ச்சிதான்.

நாகய்யா களத்தை அடைந்தபோது ஆசிரியருக்கு உரிய மரியாதையோடு அவனை வரவேற்றார்கள். சங்கிலியின் தமையன் அங்கே கிடந்த வைக்கோல் கட்டு மீது நாகய்யாவை அமரும்படி வேண்டினான்.

பக்கத்துக் கிராமத்துக்கு ஒரு வேலையாகத் தான் போவதாகவும், வரும் வழியில் தற்செயலாக அங்கு வந்ததாகவும் கூறிக்கொண்டு, அங்கு கள் நடமாடுகிறதா என்று நோட்டம் விட்டான்.

கள் வாசனை களத்து வாசனையோடு எங்கும் பரவியிருந்தது. அதிகாலையிலேயே கள் அங்கு வ்ந்துவிட்டதற்கு அறிகுறியாக கள் பானைகள், முட்டிக்கலயங்கள், சொண்டான்கள் அங்கே தென்பட்டன.

சங்கிலியின் தமயன் முத்தன் அவனிடம் மிக மரியாதையாக உரையாடினாலும், கள்குடி மயக்கத்தால் உரை குளறினான். சங்கிலி அங்கே வைக்கோற் போருக்கு அருகே நின்றுகொண்டிருந்தாள். இரண்டு மூன்று தடவைகள் அவர்கள் கண்கள் சந்தித்தன. நாகய்யா முத்தனிடம் விடை பெற்றுக்கொண்டு அங்கிருந்து அகன்று வந்து விட்டான். அதற்குப் பின்னர் வேறு எந்தக் களத்துக்கும் போகவில்லை—போகத் தெம்பு இல்லை. சங்கிலியும் கள்குடி மயக்கத்தில் நின்றிருந்ததைக் கண்ட பாவம்தான். அவள் கண்கள் செவ்வலரி போலச் சிவந்திருந்தன. இயற்கையாக மலர விழிக்கும் மான் போன்ற மருண்ட விழிகள் எங்கே! கட்குடியால் சிவந்து தன்னைப் பார்க்கக்கூசிய இந்த விழிகள் எங்கே!

இவ்வாறு நொந்து போயிருந்த அவன் உள்ளத்தில் இன்னொரு அடி வீழ்ந்தது உடனடியாக. அவளைப்போலவே களத்து

மேடுகளில் சுற்றி வேவு பார்த்துவிட்டு வந்த இரு உற்சாகமான இளைஞர்கள் இந்தச் சங்கதியையும் கொண்டு வந்தார்கள். அதாவது, சங்கிலி வீட்டுக்குக் கள்ளுக்கடை கண்ணுசாமி குடுவை குடுவையாகக் கள் அனுப்புவதைப் பற்றி மாவடியிலும் அதைச் சுற்றியுள்ள கிராமங்களிலும் பலவித வதந்திகள் அறு வறுக்கத்தக்க விதமாக உலாவுவதைத்தான் அவர்கள் நாகய்யா விடம் சொன்னார்கள்.

அந்தச் சங்கதி அவன் காதில் விழுந்தபோது தூண்டில் புழுவைப்போல் துடித்தான். 'சே! இப்படி ஒருநாளும் இருக்காது. ஒருவேளை உள் நோக்கத்தோடு கண்ணுசாமி இலவசமாகக்கள் அனுப்புவதில் வேணுமானால் ஒரு வேளை உண்மை இருக்கலாம். ஆனால் அதற்காகச் சங்கிலி மீது இந்த அவதூறு சுமத்துவது அபாண்டம். அடுக்காது. இரவு பகலாக ஒரு புழு இருந்து குடைவது போல நாகய்யா துடித்துக் கொண்டிருந்தான்.

ஒரு வாரம் கழிந்தது. தற்செயலாக சங்கிலியின் தமையன் முத்தனை வாய்க்கால் ஓரத்தில் சந்தித்தான். முத்தன் மிகவும் நல்லவன். நாகய்யாவிடம் தனி மதிப்பும் கொண்டவன். அவனிடம் நாகய்யா முதலில் பொதுவாகக் கிராமத்தைப் பற்றிப் பேசிவிட்டு பின்பு சாமர்த்தியமாக அந்த வதந்தியைப் பற்றி விசாரித்தான்,

பெண்கள் குடிப்பது வழக்கம் என்றும் அம்மாதிரியே சங்கிலி யும் குடிப்பது வழக்கம் என்றும் அதைத் தவிர மற்றபடி பேசுவது எல்லாம் வம்பு என்றும் சொன்னான்.

நாகய்யாவுக்கு மகிழ்ச்சியும், துக்கமும் கலந்த ஓர் உணர்ச்சி. அந்த வதந்தியில் உண்மை ஏதும் இல்லை என்பதில் மட்டற்ற மகிழ்ச்சி. சங்கிலியும் குடிக்கிறாள் என்பதில் ஒரே வருத்தம்.

''போகட்டும், சங்கிலி சின்னவள் தானே? அவளாவது குடிக்காமல் இருக்கலாகாதா?'' என்று உருக்கமாக வேண்டிக் கொண்டான்.

மறுநாள் அதிகாலையில் நாகய்யாவின் வீட்டுக் கதவைத் தட்டினான் முத்தன். நாகய்யா வெளியே வந்தான். முத்தன் சொன்னான்: வாத்தியாரையா நீங்க சொன்னதை சங்கிலியிடம் சொன்னேன். அவ்வளவு தான். தங்கச்சி என்ன சொன்னாள் தெரியுமா? கள்ளைக் கையால் இனிமேல் தொடுவது கூட இல்லை என்று என் தலையில் அடித்துச் சத்தியம் செய்து விட்டாள். உங்கள் மனம் நோகும்படி நடந்து கொண்டோமே என்று சங்கிலி

ரொம்பச் சங்கடப்பட்டாள்.'' அதைக் கேட்ட நாகய்யா அது நனவு தானு என்று தன் காதுகளை நம்பமுடியாமல் திகைத்தான்.

நாகய்யா இவ்வளவு காலமும் தனிமையைத் துணையாகக் கொண்டு வாழ்ந்து வந்தான் அல்லவா! இப்போது சங்கிலியைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமென்ற எண்ணம் வேரூன்றி விட்டது. இனி முத்தனிடம் தன் விருப்பத்தைத் தெரிவிக்க வேண்டியது தான்.

ஒரு நாள் முத்தன் வயலில் வேலை செய்து கொண்டிருந்த போது அவனை அணுகித் தன் விருப்பத்தை மெதுவாக அவனிடம் வெளிட்டான்.

முத்தன் அங்கலாய்த்தான். ''தம்பி, இதை நீ முன்னமே சொல்லியிருக்கக்கூடாதா! சங்கிலிக்கு உனக்கு வாழ்க்கைப்படக் கொடுத்து வைத்திருந்தால் அது புண்ணியம் செஞ்சதாச்சே! இந்தக் கள்ளுக்கடை கண்ணுசாமியினுல் ஏற்பட்ட புரளியினுலே அவளுக்குக் கருங்காட்டுக் கிராமத்தில் ஒருத்தனுக்கு கொடுக்க நிச்சயமாயிட்டதே!''

நாகய்யாவுக்கு அவன் மனசைப் போலவே, அவன் கண்ணுக்குத் தோன்றிய பொருள்கள் யாவும் சுழன்றன.

## 3

சங்கிலி மாவடியைவிட்டு கருங்காட்டுக் கிராமத்துக்குப் போன ஒரு வாரத்துக்குள், மாவடியும் அதைச் சுற்றியுள்ள கிராமங்களும் ஒரு நல்ல ஆசிரியரை இழந்து விட்டன. எப்படியோ நாகய்யா அந்த ஊரை விட்டுத் தன்னை மாற்றிக் கொண்டான்.

நாகய்யா மாவடியை விட்டு நான்கு ஆண்டுகள் ஓடி மறைந்து விட்ட பின்னர், புளியங்குளம் என்ற ஊரிலுள்ள ஒரு பெரிய பள்ளிக்கூடத்துக்கு உதவி ஆசிரியராக அவன், நியமிக்கப் பட்டு மாற்றல் உத்தரவு வந்து சேர்ந்தது.

புளியங்குளத்தில் நாகய்யாவுக்கு வசதியான வீடு எதுவும் கிடைக்கவில்லை. ஆகையால் புளியங்குளத்துக்கு அருகில் உள்ள கருங்காடு என்ற கிராமத்தில் வீடு கிடைக்கும் என்று தலைமை ஆசிரியர் சொன்னுர்.

'கருங்காடு' என்ற பேரைக் கேட்ட மாத்திரத்திலேயே திடுக்கிட்டது நாகய்யாவின் மனம். அலை அலையாக எண்ணங் கள் வந்து மோதின. பேசாது கற்சிலை போல நின்ருன்.

இதற்குள் தலைமை ஆசிரியர் கருங்காட்டிலிருந்து அங்கு வேலை செய்ய வந்திருந்த ஒருவனிடம் நாகய்யாவை அறிமுகப் படுத்தி வைத்து, அவனுக்கு வசதியாகவுள்ள ஒரு சின்ன வீடு பார்த்துக்கொடுத்து உதவி செய்யும்படிச் சொன்னார்.

உற்சாகமாக அதை ஒப்புக்கொண்டான் அவன். தன்னிடமே ஒரு வீடு இருப்பதாகவும் அந்த ஆசிரியருக்குப் பிடித்திருந் தால் அதிலேயே தங்கலாம் என்றும் சொன்னான். எனவே, அவனுடைய சாமான்கள் கொண்ட மாட்டு வண்டி மீண்டும் பூட்டப்பட்டது.

அப்போது பொழுது மறையும் வேளை. தடத்தின் வழியாக வண்டி முன்செல்ல இருவரும் பின்னால் நடந்து சென்றனர்.

அந்த மனிதனிடம் அப்பொழுதே சங்கிலியைப்பற்றி விசா ரிக்க வேண்டுமென்ற எண்ணம் அவனை உந்தித்தள்ளியது. ஆனால் அது அழகாக இருக்காது என்று படவே அதைப்பற்றி எதுவும் பேசாது அந்த எண்ணத்தை அடக்கிக்கொண்டான்.

சாலை ஓரத்தில் உள்ள ஒரு வீட்டின் முன்னால் வண்டி நிறுத்தப்பட்டது. அவன் சாவி கொண்டு வந்து வீட்டு முன் வாசலைத் திறந்து அரிக்கேன் லாந்தல் ஒன்றை ஏற்றி வைத்துச் சாமான்களையும் வீட்டினுள் கொண்டு வந்து சேர்த்தான். அங்கு கிடந்த ஒரு கயிற்றுக்கட்டிலில் அவனுடைய படுக்கையை விரித்துப்போட்டான். அதில் உட்கார்ந்துகொண்டிருந்தான் நாகய்யா.

''இந்தா, இவனைப் பிடி, எவ்வளவு சேட்டை பண்ணுது வர வர'' என்று குழந்தையை அவனிடம் கொடுத்து விட்டு, ''இவர்தான் புது வாத்தியார் அய்யாவா?'' என்று அன்புடன் தன் வரவேற்பைத் தெரிவித்தாள் அவன் மனைவி, தானும் ஏதாவது பேசவேண்டும் என்பதற்காக.

''குழந்தைக்கு வயது என்ன?'' என்று கேட்டான் நாகய்யா.

''மூணு வயசு முடிஞ்சு போச்சு'' என்றாள் அவள்.

''பேரு?''

''பேரு, நாகய்யா.''

நாகய்யா திடுக்கிட்டது அந்த தம்பதிக்குத் தெரியாது, ''நாகய்யாவா......?'' பலமான சிந்தனை ஓட்டம் அவன் இத யத்தில் ஓட ஆரம்பித்தது.

வந்த களைப்பினால் படுத்துக்கொண்டான் நாகய்யா. சுவர்க் கோழிகள் விடாமல் 'இய்ங்ங்'' என்று கத்திச் செவியைப் பிய்த்துக்கொண்டிருந்தன.

சற்றுநேரம் கழிந்ததும் கதவு திறக்கும் சப்தம் கேட்டது. நாகய்யா எழுந்தான். அவன் கண்களை நம்பமுடியவில்லை: சங்கிலி! ஆமாம், சங்கிலியேதான்!!

மீண்டும் கதவைச் சாத்திவிட்டு அவன் அருகில் வந்தாள் சங்கிலி. அவள் கண்களில் கண்ணீர் வெள்ளம் புரண்டோடியது; நாகய்யா என்ன பேசுவது என்று தெரியாமல் திணறிக்கொண்டிருந்தான்.

"உங்களுக்காக நான் எவ்வளவு நாள் காத்துக்கொண்டிருக்கிறேன்? என்னை நீங்கள் மறந்துவிட்டீர்களா? என்னால் ஒரு நிமிஷம் கூட உங்களை மறக்க முடியவில்லையே. என் மனம் உங்களையேதான் சுற்றிக்கொண்டிருக்கிறது, மலரைச்சுற்றி சதா வட்டமிடும் வண்டைப்போல......" என்று கூறியவண்ணம் அவனை நெருங்கிக் கட்டிலின் மீது அமர்ந்தாள்.

சங்கிலி இவ்வளவு அழகாகப் பேச எங்கு கற்றுக்கொண்டாள்? சாதாரண கிராமப் பெண். மாவடி கிராமத்தை விட்டுக்கூட நகர்ப்புறங்களுக்கு அவள் அதிகம் போனது இல்லை. தன்னிடம் இவ்வளவு தூரம் அவள் அன்புகொண்டிருந்தது தனக்குத் தெரியாமல் போயிற்றே. அவளுக்காக யாராவது காத்துக்கொண்டிருந்தார் என்றால் அது தான் அல்லவா? அவளை அல்லவா தான் மறந்துவிட முடியவில்லை. அவளை அல்லவா தன் மனம் சதா சுற்றிக்கொண்டிருக்கிறது...

இவ்வாறு நினைத்த நாகய்யா வெள்ளம் எனப்பாயும் அவள் கண்ணீரைத் துடைக்க எண்ணிக் கட்டிலில் படுத்துக் கிடந்த அவன் எழுந்து அவளை நெருங்கி அமர்ந்தபொழுது கதவு மீண்டும் கிரீச்சிட்டுக்கொண்டு திறந்தது!

நாகய்யா திடுக்கிட்டுக் கண்விழித்தான். சங்கிலி? சங்கிலி எங்கே? என்ன பயங்கர இன்பக்கனவு!

அவன் உணவோடு உள்ளே வந்து அவனைச் சாப்பிட வேண்டினான். அவன் மனைவி பாத்திரத்தில் தண்ணீர் கொண்டுவந்து வைத்துவிட்டுப் போய்விட்டாள்.

அந்த மனிதனிடம் நாகய்யா, "ஆமாம்... மாவடி கிராமத்திலிருந்து ஒரு பெண் இந்த ஊருக்கு வாழ்க்கைப்பட்டு வந்திருக்கிறாளே! சங்கிலி என்று பேர். அவள் வீடு எங்கே? அவள் சவுக்கியமா? நான் நாலு வருஷங்களுக்கு முன்னால் மாவடி பள்ளிக்கூடத்தில் ஆசிரியராக இருந்தேன். அவர்கள் குடும்பத்தை எனக்கு நன்றாகத் தெரியும்" என்றான்.

அவன் முகம் திடீரென்று மாறுதல் அடைந்தது. விம்மலும் பொருமலும் அவன் தொண்டையை நெரித்தது. ''இந்தப் பாவிக்குத்தான் தங்கம்போல அந்தப் பெண்ணைக் கொடுத்தார்கள். ஒரு வருஷத்துக்குள் இந்தப் பிள்ளையைப் பெத்துவிட்டுப் பாயும் படுக்கையும் ஆனாள். அவள் மனசில் என்ன கவலையோ தெரியாது. நீங்க உக்காந்திருக்கும் கட்டிலில்தான் ஆறு மாதம் கிடந்தாள். பண்ணாத வைத்தியம் இல்லை. எண்ணாத தெய்வம் இல்லை; கடைசியில் என்னை விட்டுவிட்டுப் போய்விட்டாள்..''

நாகய்யாவின் மனமும் தலையும் பம்பரம்போல் சுற்றியது. மேலும் சங்கிலியின் கணவன் சொன்னது அவன் காதில் விழவில்லை.

:—:

பி. எஸ். ராமையா

# 16

# பதச்சோறு

கொதிக்கும் உலேப்பானேயிலிருந்து ஒரு சோற்றையெடுத்துப் பதம் பார்க்கிறவர்கள், அந்தப் பருக்கையைத் தேடிப் பொறுக்கியெடுப்பதில்லே. விரலில் அகப்படுவதை அழுத்தி நசுக்கி மொத்தச் சோற்றுக்கும் பத நிலேமையைப் பரிசோதிக்கிமுர்கள். புதிதாகச் சமைக்கப்படும் ஒரு சமூகத்திலும் இதே நிலேமைதான். அந்தச் சமூகத்தின் பக்குவத்தைப் பரிசோதிக்கும் கால சக்தியின் விரல்கள், அதற்காகத் தேடிப் பார்த்து ஒரு தனி நபரைப் பொறுக்கியெடுப்பதில்லே. விரல்களினிடுக்கிலே சிக்கியவனே அல்லது சிக்கியவளேக்கொண்டு சமூகத்தின் பத நிலேமையை அறிந்து கொள்ளுகிறது. ''நான் காலத்தின் விரல்களில் சிக்கிய சோறுதான் போலிருக்கிறது'' என்ற அளவுக்குக் குமுதம் தன் நிலேயைப் புரிந்துகொண்டிருந்தாள்.

அவளது தாய் மங்கையர்க்கரசி திடீர் திடீரென்று உணர்ச்சி வேகத்துடன், அந்தச் சிக்கலேப்பற்றிப் பேசத் தொடங்கும் போதெல்லாம் குமுதம் அதே மனே நிலேயிலிருந்து தான் பதில் சொல்லி வாதாடுவாள்.

''அம்மா! அந்த மகாபுருஷரை ஏன் குறை சொல்லுகிமுய்? உலகம் முழுவதையும் உய்விக்க வந்த காந்தி என் ஒருத்தியை மாத்திரம் வெற்று வாழ்க்கைக்கு ஆளாக்கி விட்டுவிட்டார் என்று சொல்லுவது பொருந்துமா?'' என்று தாயின் முணுமுணுப்புகளுக்குப் பதில் சொல்லுவாள்.

''உங்கள் காந்தியை நான் என்ன குறை சொல்லிவிட்டேன்? உன் விதி அப்படியிருந்தால் அதற்கு யாரைக் குறை சொல்லித்தான் என்ன பயன்?'' என்பாள் மங்கையர்க்கரசி.

''பார்த்தாயா! மறுபடி ஆரம்பித்து விட்டாயே. இது விதி யல்ல அம்மா. அதைக்கூட மாற்றிவிடும் காலவேகம் என்கிற ஒரு மகாசக்தி. ஆருயிரம் மைல்களுக் கப்பாலிருக்கிற ஒரு அன் னிய ஜாதியாரின் அடிமைகள் என்று விதிக்கப்பட்டிருந்த, நாற் பதுகோடி மக்கள் தலையெழுத்தை ஒரே நொடியில் அழித்து, அவ்வளவு பேர்களும் 'சுதந்திரர்கள்' என்று எழுதிய சக்தி அது'' என்று பிரசங்கம் செய்வாள் குமுதம்.

மங்கையர்க்கரசி, ''நான் எப்படிச் சொன்னுலும் அதை மடக்கி அப்படியில்லை இப்படியென்கிருய். நான் உன்னைப்போலக் கல்வியெல்லாம் படித்தவளில்லை. எங்கள் பெரியவர்கள் சொல்லிக் கொடுத்ததெல்லாம் தான் சரியென்று நம்புகிறவள். இவ்வளவு சட்டம் பேசுகிறவள் நீதான் எனக்குப் புரியும் பாஷையில் சொல் லேன். உன் புருஷன் எதற்காக இப்படி எல்லாம் வம்பு செய்ய வேண்டும்? நீ எதற்காக இப்படி வீம்பு பிடிக்க வேண்டும்?'' என்று கேட்பாள்.

குமுதம், ''நூறுதடவை சொல்லியாகிவிட்டது. உனக்கு அது பிடிக்க வில்லை. அதனுல் புரியவில்லை யென்கிருய். இன்னெரு தடவையும் சொல்லுகிறேன். அவர் உன் மருமகன். இந்த தேசத்திலே வெள்ளைக்காரன் படைத்துவிட்டுவிட்டுப்போன ஜாதி. நான் காந்தி மகாத்மா சமைக்கத் தொடங்கிய புதிய பாரத ஜாதி. இரண்டும் முதல் கலப்பிலே ஒட்டமுடியாமல் தத்தளிக்கின்றன. அவ்வளவுதான்'' என்பாள்.

''உங்கள் மகன் பாபு? அவன் என்ன ஜாதி?'' என்று குரலிலே கோபம் தொனிக்கக் கேட்பாள் மங்கையர்க்கரசி.

குமுதத்திற்கு அந்த தொனி நன்ருகத் தெரியும். ஆயினும் பொறுமையை இழக்காமல் நிதானமாக ''அவன்தான் புதிய பாரத சமூகத்தின் முதல் தலைமுறை யென்று நம்பிக்கொண்டிருக் கிறேன்'' என்பாள்.

மங்கையர்க்கரசி மகளைப் பரிதாபத்துடன் பார்த்து, ''நீ இந் நேரம் சொன்னதில் எனக்கு ஒரு வார்த்தை கூடப் புரியவில்லை. புருஷனும், பெண்சாதியும்தான் மனது ஒத்துக்கொள்ளவில்லை. நீ கோர்ட்டுக்குப் போய், உங்களப்பா சொல்லுகிறபடி ஒரு வார்த்தை சொல்லிவிட்டு வந்தால் என்ன? உங்கள் காந்தி விரதமே வீணுகிப் போய்விடுமோ?'' என்பாள்.

குமுதம் கண்களில் கண்ணீர் துளிர்த்துவிடும். அதைக் கண்ட மங்கையர்க்கரசியின் நெஞ்சம் பதைத்துப்போகும். ஏற் கெனவே நொந்துபோயிருந்த மகள் உள்ளத்தைக் கிளறிவிட்டு விட்டோமே என்று பச்சாத்தாபம் எழும். மகள் அருகில்

போய் ''உன் கதியை நினைத்தால் வயிறு கொதிக்கிறது. அந்த வேகத்திலே ஏதாவது சொல்லிவிடுகிறேன். நீ செய்வதெல்லாம் சரியாகத்தானிருக்குமென்று மனத்துக்குத் தெரிகிறது. இருந்தாலும் அஞ்ஞானம் அதை உடனே மறைத்து விடுகிறது'' என்று குமுதத்தின் கூந்தலைக் கோதுவதுபோல விரலையோட்டுவாள்.

குமுதம் சிரித்துக்கொண்டே ''என் அஞ்ஞானி அம்மாவைத் தான் எனக்குப் பிடித்திருக்கிறது'' என்று தாயின்மேல் செல்லமாகச் சாய்வாள்.

குமுதம் சொல்வது போலத் தாய் மகளுக்கிடையில் இந்த மாதிரித் தர்க்க வாதம் இதுவரை நூறுதடவைகூட நடந்திருக்கும். மங்கையர்க்கரசி அப்போதைக்குப் பேச்சை நிறுத்துவாள்; ஆனால் மறுபடியும் சமயம் வந்தவுடன் பழைய தோரணையிலேயே தொடங்கி விடுவாள்.

* * *

அன்று இருவரும் அந்த மாதிரியான ஒரு வாதப் பிரதிவாதத்திற்கு ஏற்ற மனோநிலையில் இல்லை. உள்ளூர இருந்த பதைப்பை வெளியில் காட்டாமலிருக்க இருவரும் ரொம்ப ரொம்ப சிரமப்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

மங்கையர்க்கரசி கூடத்தின் ஒருபுறத்திலிருந்த ஸோபாவில் உட்கார்ந்திருந்தாள். குமுதம் மறுகோடியிலிருந்த மேஜையடி நாற்காலியில் உட்கார்ந்து ஒரு புஸ்தகத்தைப் பிரித்துப் பிடித்துக்கொண்டு படிக்க முயன்றாள். கண்கள் புஸ்தகத்திலே ஊன்றிய மாதிரி யிருந்தன. ஆனால் அந்தப் பக்கங்களிலிருந்த ஒரு எழுத்துக்கூட அவள் மனத்தில் பதியவில்லை. அவளது வலது கைவிரல்கள் புஸ்தகத்தின் தாள்களைக் கோதிக்கொண்டிருந்தன. அடிக்கடி முகத்தை புஸ்தகத்திலிருந்து நிமிர்த்தி எதிரில் சுவரின் மேலிருந்த கடிகாரத்தைப் பார்த்துக்கொண்டே யிருந்தாள். அப்படிப் பார்த்துத் திரும்பும்போது அவளது விழிகள் மேஜை மேலிருந்த டெலிபோனின் புறம் ஓடிவிட்டுத் திரும்பின.

மணி பன்னிரண்டரை என்று காட்டின கடிகாரத்தின் முட்கள். குமுதம் உள்ளக் கொந்தளிப்பை அடக்க முடியாத எல்லையை எட்டி விட்டாள். எழுந்து தாயிடம் போய் ''மணி பன்னிரண்டரை யாகிறது. இன்னுமா தீர்ப்புச் சொல்லாமலிருப்பார்கள்?'' என்றாள். அவள் குரல் நடுங்கியது.

''ஜட்ஜு சொன்னவுடன் உங்களப்பா போனில் சொல்லுகிறேன் என்று சொல்லியிருக்கிறாரே. கவலைப்படாமல் இப்படி

உட்காரு, தெய்வம் நம்மைக் கைவிட்டு விடாது'' என்ருள் மங்கையர்க்கரசி பரிவுடன்.

குமுதம் அவளருகில் உட்கார்ந்தாள். துக்கம் அவளேயும் மீறிப் பொங்கியது. கண்கள் நீர் சொரியத் தொடங்கி விட்டன. மங்கையர்க்கரசி துடித்துப் போனுள். இருந்தாலும் சமாளித்துக் கொண்டு, வேடிக்கையாக, உங்களப்பா சொல்லுவதுபோல அவ்வளவு தர்க்க நியாயம் பேசும் நீயும் ஒரு அஞ்ஞானிதான்: 'என்ன முடிவு வந்தாலும் நாம் சரியான வழியில் போக வேண்டியது. அவ்வளவுதான் நம்முடைய பொறுப்பு' என்று எங்களுக்கு மட்டும்தான் உபதேசமா? அது உனக்குமில்லையா? என்ருள்.

குமுதம் கண்ணீரைத் துடைக்கவும் முயலாமல் ''பாபுவை நினைத்தால் அடிவயிற்றில் என்னவோ செய்கிறதம்மா. குப்பென்று நெருப்புப் பிடிப்பது போல இருக்கிறது'' என்று தாயின்மேல் சாய்ந்தாள்.

மங்கையர்க்கரசி பதில் சொல்லாமல் அவளே அணைத்துக் கொண்டு அவள் தலையை வருடினுள்.

* * *

பதினைந்து வருஷங்களுக்குமுன் மகாத்மா காந்தியைத் தரிசிக்க குமுதத்தை அழைத்துக் கொண்டு போனபோது தம் மகளின் வாழ்க்கையில் இவ்வளவு பெரியதொரு புயல் அடிக்குமென்று சிவசங்கர முதலியார் நினைக்கவேயில்லை.

1934ம் வருஷத்தில் காந்தி ஹரிஜன நிதி வசூலுக்காகத் தமிழ்நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்தார். அவர் விஜயம் செய்த ஊர்களிலெல்லாம், மக்கள் வெள்ளம்புரண்டு வருவது போலத் திரண்டு சென்று அவரைத் தரிசித்தார்கள்.

அந்த வேகம் அப்போது பதினுன்கு வயதுச் சிறுமியாக இருந்த குமுதத்தையும் வளைத்து இழுத்தது. தந்தையிடம், காந்தியைப் பக்கத்திலிருந்து பார்க்கும்படிக் கூட்டிக் கொண்டு போகச் சொல்லிக் கெஞ்சிக் கொஞ்சினுள்.

சிவசங்கர முதலியார் அவளிடம் ஐந்து ரூபாய் நோட்டைக் கொடுத்து ''இதை மகாத்மாவிடம் கொடுத்து உன் புத்தகம் ஒன்றில் கையெழுத்து வாங்கிக் கொள். அப்போது அவரை உன்னுல் முடிந்தவரைக்கும் பார்த்து விடு'' என்று சிரித்துக் கொண்டே சொல்லி அழைத்துச் சென்றுர்.

குமுதம் கையெழுத்து வாங்குவதற்கு ஒரு புஸ்தகம் தேடினுள். பாரதி உரையெழுதிய கீதைதான் கிடைத்தது. அதை எடுத்துக்கொண்டு புறப்பட்டாள்.

கூட்டத்தில் முண்டியடித்துக் கொண்டு தந்தையும் மகளும் முன் வரிசைக்குப் போய்ச் சேர்ந்தார்கள். காந்தி ஹிந்தியில் பேசியதை ஒருவர் தமிழில் மொழி பெயர்த்துச் சொன்னுர். குமுதம் பாதி புரிந்தும் புரியாமலும் அதைக் கேட்டாள். நிதி வசூல் ஆரம்பமாயிற்று. யார் யாரோ என்ன வெல்லாமோ காணிக்கை செலுத்தினுர்கள்.

குமுதம் எழுந்து அவரருகில் போய் நோட்டைக் கொடுத்துப் புஸ்தகத்தைக் காட்டி, அதில் கையெழுத்துப் போடச் சொல்லிக் கேட்டாள்.

காந்தி அவளைக் கருணை வழியும் கண்களால் ஏற இறங்கப் பார்த்து ''என் கையெழுத்துக்கு விலை ஐந்து ரூபாய் தானென்று உனக்கு யார் சொன்னது'' என்று கேட்டார் இங்கிலீஷில்.

இரண்டாவது பாரத்தில் படித்துக் கொண்டிருந்த குமுதத்திற்கு அது புரிந்தது. குளறிய இங்கிலீஷில் ''எங்களப்பாதான் சொன்னுர்'' என்ருள்.

''அதற்குமேல் கொடுக்க முடியாத ஏழைகளுக்குத்தான் அந்த விலை. உன்னைப்பார்த்தால் பணக்காரியாகத் தோன்றுகிறது. இதோ கையில் வளைகள், காதில் தோடு, கழுத்தில் சங்கிலி எல்லாம் அணிந்திருக்கிருயே. இடைக்குத் துணிகூட இல்லாத ஏழை ஹரிஜனங்களுக்கு அதை யெல்லாம் நீ கொடுத்துவிடக் கூடாதா?'' என்ருர் காந்தி.

குழந்தை முன்பின் யோசிக்காமல், தயங்காமல் நகைகளைக் கழற்றினுள்.

காந்தி பொக்கைவாயை நிறையத்திறந்து சிரித்துக் ''கொஞ்சம் பொறு; இதையெல்லாம் கழற்றி என்னிடம் கொடுத்துவிட்டு நீ வீட்டுக்குப் போய் வேறு நகைகள் போட்டுக் கொள்ளக் கூடாது. அதற்குச் சம்மதித்தால்தான் இவற்றை என்னிடம் கொடுக்கலாம்'' என்ருர்.

குமுதம் ''சம்மதம்'' என்று ஒரே வார்த்தையில் பதில் சொன்னுள்.

''உன்னுடைய பெற்ருேர்கள் நீ நகை போட்டுக்கொள்ள வேண்டுமென்ருல்?'' என்ருர் காந்தி.

''உங்களுக்கு வாக்குக் கொடுத்திருப்பதைச் சொன்னால், சரி போட்டுக் கொள்ள வேண்டாமென்று சொல்லி விடுவார்கள்''.

''நாளை உனக்குக் கலியாணமாகும் போது உனக்குக் கணவனாக வருகிறவர் சொன்னால்?''

''கலியாணத்திற்கு முன்பே எனக்கு நகையணியா விரதம் என்பதை அவரிடம் சொல்லிவிடச் சொல்லுவேன். என் விரதத்தோடு என்னை ஏற்றுக் கொள்ளச் சம்மதிக்கிறவரைத்தான் மணந்துகொள்வேன்'' என்று திடமாகப் பதிலளித்தாள் குமுதம்.

காந்தி, ஒருகணம் அவள் முகத்தைக் கூர்ந்து பார்த்தார். இரண்டு ஜதைக் கண்களும் சந்தித்தன. குழந்தையின் உள்ளத்திலிருந்த உறுதியை, அவளது விழிகளில் கண்டு காந்தி அவள் கொடுத்த புஸ்தகத்தைப் பிரித்தார். அது கீதை யென்று கண்டவுடன் இன்னொரு முறை அவள் முகத்தைக் கவனித்தார். அவர் முகத்தில் ஒரு அபூர்வமான புன்னகை பூத்தது.

புஸ்தகத்தின் முகப்புப் பக்கத்தில் ''மேற்கொண்ட விரதத்தை நடத்தி முடிக்க நீ எந்தத் தியாகத்திற்கும் சித்தமாக இருக்க வேண்டும். அதற்கு வேண்டிய மனோபலத்தை இந்த கீதை ஒன்றுதான் உனக்குக் கொடுக்கவல்லது'' என்று எழுதி அதன் கீழே ''எம். கே. காந்தி'' என்று கையெழுத்திட்டு அவளிடம் கொடுத்தார்.

தன் மகளுடன் அந்த மகாபுருஷன் அவ்வளவு நேரம் பேசிக் கொண்டிருந்த பெருமையில், சிவசங்கர முதலியாருக்குத் தலைகால் புரியவில்லை. அவர்கள் என்ன பேசினார்கள் என்பதைக் கூட அவர் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. குமுதம் நகைகளைக் கழற்றிக் கொடுத்ததைப் பார்த்தார். காந்தியின் பொக்கைவாய்ச் சிரிப்பைப் பார்த்தார். அவ்வளவு தான்.

குமுதம் திரும்பி வந்தவுடன் அவள் கையிலிருந்த புஸ்தகத்தை வாங்கி, காந்தியின் கையெழுத்திருந்த பக்கத்தைக் கண்ணில் ஒற்றிக் கொண்டு மூடி வைத்தார்.

மூன்று வருஷங்களுக்குப் பிறகுதான் அந்தச் சம்பவத்தின் பொருளும் பலாபலன்களும் அவருக்குப் புரியத் தொடங்கின. குமுதத்தின் பதினேழாவது வயதில் அவளுடைய மணத்தைப் பற்றி யோசிக்கத் தொடங்கினார்.

இதோ இதழவிழ்ந்து மலரப் போகிறது என்று காட்டும் குமுதமொக்கைப் போலவே யிருந்தாள் குமுதம். சாதாரண ஒற்றை வர்ணச் சேலை யுடுத்து, கொஞ்சம் அழுத்தமான நிறத்தில் ரவிக்கை யணிவாள். கூந்தலைச் சீவிச் சடை பின்னி அதில்

மலர் சூடி அவள் நிற்பதைப் பார்த்தால், யாரோ வனதேவதை வழி தவறி நாகரிகத்திற்குள் வந்துவிட்டது போலத் தோன்றும்.

அவளுடைய இயற்கை எழிலுக்கு ஏற்றபடி நகைநட்டுகள் போட்டு அலங்கரித்துப் பார்ப்பதற்கில்லையே யென்று ஏங்கினுள் மங்கையர்க்கரசி. சிவசங்கர முதலியாருக்கும் உள்ளூர அந்த மனக்குறை யுண்டு.

ஆலயத்திற்குச் சென்று ஆண்டவன் முன்னிலையின் பரிசுத்த வாழ்க்கை விரதம்பூண்டு வெளியேறுகிறவர்களே சில நிமிஷங்களில் தங்கள் விரதத்தை மறந்து விடுகிருர்கள். மனிதக் காந்தியின் முன் மேற்கொண்ட விரதம் மட்டும் நிலைத்து நிற்குமென்று என்ன நிச்சயம்?

குமுதம்-காந்தி சந்திப்பைப் பற்றிச் சிவசங்கர முதலியார் அப்படித்தான் நினைத்திருந்தார். குழந்தை ஏதோ விளையாட்டுப் போக்கில் அவரிடம் சொல்லி விட்டாள். காலத்துடன் மனம் மாறத்தாஞக அலங்கார ஆசை பிறந்துவிடும் என்று நம்பினர். ஆனல் காலத்துடன் அவள் மன உறுதி பலமடைந்ததைத்தான் கண்டார்.

காந்தியைச் சந்திக்குமுன் தனது பிராயத்திற்கேற்ற மனப் பாங்கிலிருந்தவள், மிக மிக விரைவில் உள்ளூர வளர்ந்து ஒரு பக்குவ நிலையை எய்தி விட்டதைக் கண்டார். படபடக்காமலும், சிந்தனையிலே தடுமாற்றமில்லாலும் அவள் தமக்கே எட்டாத எல்லையிலிருந்து பேசியதைக் கேட்க அவருக்கும் பெருமையாகத் தானிருந்தது.

ஆனல் அவளுடைய விரதம், தந்தை யென்ற முறையில் தான் நிறைவேற்ற வேண்டிய பொறுப்புக்குத் தடையாக வருவதை எண்ணும்போது அவருடைய பொறுமை தடுமாறியது.

முதல் முதலாக அவர் தமது உறவினரிலேயே ஒரு மருமகனைத் தேடிப் பேச்சுத் தொடங்கியவுடனேயே தமது நிலைமையிலிருந்த சிரமத்தை உணர்ந்தார். சகஜமாகப் பிள்ளை வீட்டார், பெண்ணுக்கு நகைகள் போடுவதைப் பற்றிக் கேட்டார்கள். முதலியார் காந்தி சம்பவத்தை விளக்கிச் சொல்லி "குழந்தைக்கு நான் செய்யக்கூடியதை யெல்லாம் நிலமாக சீதனம் எழுதிவைக்கப் போகிறேன்" என்ருர்.

பிள்ளை வீட்டாருக்குச் சப்புத் தட்டி விட்டது. அதில் ஒரு அம்மாள் 'தாலியும் சிறகும்கூட நகைதானே. அதையாவது கட்டிக்குவாளா இல்லையா?" என்று ஏளனமாகக் கேட்டாள்.

முதலியார் மனம் புண்ணுகிவிட்டது. ஆயினும், அந்த அனுபவம் அப்போதுதான் ஆரம்பித்திருக்கிறதென்பதை யுணர்ந்து பதில் சொல்லாமல் எழுந்து வந்துவிட்டார்.

அதன் பின்னர் மூன்று இடங்களில் மாப்பிள்ளை தேடினர். ஒரு இடத்தில் அவருக்கே திருப்தியில்லை.

இன்னொரு இடத்தில் ''பெண் நகை போட்டுக்கொள்ள முடியாதென்ருல், அந்தத் தொகையை எங்களிடம் ரொக்கமாகக் கொடுத்துவிட வேண்டும்'' என்று நிபந்தனை போட்டார்கள்.

''அதாவது நகை யணியாத பெண்ணைக் கட்டிக்கொள்ள உங்கள் மகனுக்கு நான் கைக்கூலி கொடுக்க வேண்டுமென்கிறீர்கள்; இல்லையா?'' என்று படபடத்துப் பேசி விட்டு வெளியேறினர்.

மூன்ருவது இடத்தில் பேச்சுவார்த்தை யெல்லாம் முடிந்து கடைசியாகக் குமுதத்தின் விரதவிஷயம் வெளி வந்தவுடன் ''காந்தி கட்சிக்கும் எங்களுக்கும் ரொம்ப தூரம்'' என்று அவருக்கு விடை கொடுத்து அனுப்பி விட்டார்கள்.

இதிலேயே இரண்டு வருஷங்கள் கழிந்து விட்டன. மகளுக்குக் கலியாணமே ஆகப்போவதில்லை என்று கருதத் தொடங்கிவிட்டாள் மங்கையர்க்கரசி.

குமுதம் தான் மேலே படித்து ஏதாவது உத்தியோகம் தேடிக் கொள்ளுவதாகச் சொல்லிப் பெற்ருேரைச் சமாதானம் செய்ய முயன்ருள். ஆனல் அவர்களுக்கு அதில் திருப்தியில்லை. ''கலியாணம் ஆகும் வரை வேண்டுமானல் படி. அப்புறம் உன்னை மணந்துகொண்டவன் இஷ்டம்தான். உன்னை யாருக்காவது கட்டிக்கொடுக்காமல் எங்கள் பொறுப்புத் தீராது'' என்று தீர்மானமாகச் சொல்லிவிட்டார் முதலியார்.

அந்த சமயத்தில்தான் சென்னையிலிருந்து ஷண்முகசுந்தரத்தின் பெற்ருேர்கள், யாத்ராமார்க்கத்தில் அவர்கள் வீட்டுக்கு வந்து சேர்ந்தார்கள். விருந்தாளிகளாக வந்தவர்கள் சம்பந்திகளாக மாறினர்கள்.

பெற்ருேர் அழைப்பின் மேல் நேரில் வந்து குமுதத்தைப் பார்த்த ஷண்முகசுந்தரம் ஒரே நொடியில் அவளை மணக்க இசைந்தான். அவள் காந்திக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாற்றுவதற்குத் தான் தடையாக இருப்பதில்லை என்றும் உறுதியளித்தான்.

குமுதத்தின் மணவாழ்க்கையில் முதல் ஆறு வருஷங்கள் மிக மிக இன்பமாகக் கழிந்தன. மணமான மூன்றும் வருஷம் அவள் ஒரு ஆண் குழந்தைக்குத் தாயாளுள். குழந்தைக்கு மோகன் என்று பெயர் வைத்தார்கள். எல்லோரும் அவனை பாபு என்று செல்லப்பெயரால் அழைத்தார்கள்.

குமுதத்தின் பதிபக்தி உள்ளூரக் கனிந்த பிரேமையிலிருந்து வளர்ந்தது. அதன் இனிமை முழுவதையும் உணர்ந்த ஷண்முக சுந்தரம் அவளை மனைவியாக அடைந்ததில் தனக்கு நிகரேயில்லை யென்று பெருமிதம் கொண்டிருந்தான்.

அவன் தந்தைக்குச் சென்னையில் பெரிய வியாபாரம். மணத்திற்குப் பிறகு அவன் அதில் அதிக கவனம் செலுத்தி, இரண்டே வருஷங்களில் அதன் பொறுப்பு முழுவதையும் தானே ஏற்றுக்கொள்ளும் நிலைமையை அடைந்தான். அவன் தந்தை எல்லாவற்றையும் அவனிடம் ஒப்படைத்துவிட்டார்.

பணத்திற்குச் சொந்தமாக ஒரு இயல்பும் கிடையாது. அது போய்ச்சேரும் ஆளைப்பொறுத்து அதற்குத் தன்மை பிறக்கிறது என்பது ஒரு கட்சி. பணம் இயல்பாகவே மனித மனத்தை நேர் வழியிலிருந்து திருப்பிக் கீழ்நோக்கி இழுத்துச் செல்லும் சக்தி படைத்திருக்கிறது என்பது இன்னொரு கட்சி.

ஷண்முகசுந்தரம் விஷயத்தில் இரண்டாவது கட்சிதான் சரி யென்று ரூபித்துவிட்டது அவனையடைந்த பணம். யுத்த கெடு பிடியில் அவனுடைய வியாபாரம் அமோகமாகப் பெருகியது. அதிலும் கணக்குக்குக் கொண்டுவராமல், கள்ளச் சந்தை லாப மாக ஏராளமாகச் சம்பாதிக்க வழிகள் தோன்றின. ஷண்முக சுந்தரம் அந்த வழிகளில் இறங்கினுன்.

ஆரம்பத்தில் குமுதத்திற்கு அது தெரியாது. கொஞ்சம் கொஞ்சமாக உண்மையை யறிந்தபோது அவள் மனம் மிகுந்த வேதனையடைந்தது. கணவனிடம் ஜாடைமாடையாகப் பேசினுள் பலனில்லை.

''இதெல்லாம் என் வியாபார விஷயம். நீ தலையிடக் கூடாது'' என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டான்.

அவன் அதோடு நின்றிருந்தால் நிலைமை இவ்வளவு சீர்கெட் டிருக்காது. தான் கள்ள மார்க்கெட்டில் சம்பாதித்த பணத் தைப் பயன்படுத்திக் கொள்ளப் புதிதாக ஒரு வழி கண்டு பிடித் தான். குமுதம் நகைகள் அணிய வேண்டுமென்று சொன்னுன். அவள் மறுத்தபோது '' நீ அதையெல்லாம் போட்டுக்கொள்ளா விட்டால் என்ன? உனக்காகவென்று நகைகள் வாங்கித்தான்

தீரவேண்டும். பின்னல் சமயோசிதம் போல நான் அதைப் பணமாக மாற்றிக் கணக்குக்குக் கொண்டுவர வழிசெய்து கொள்ளுவேன் '' என்ருன்.

குமுதம் அதற்கும் இணங்கவில்லை. அங்கிருந்துதான் அவர்கள் வாழ்க்கையில் கரகரப்புத் தட்டத் தொடங்கியது. குழந்தை மோகன் பாபுதான் கரகரப்பு, கலகமாக முற்ருமல் காப்பாற்றி வந்தான்.

ஆனுல் இரு வெவ்வேறு திசைகளில் திரும்பிப் புறப்பட்டு விட்ட உள்ளங்கள் எத்தனை நாளைக்குத்தான் அம்மாதிரிச் செயற்கைப்பூச்சில் ஒட்டிக்கொண்டிருக்க முடியும்!

'' தான் கணவன்; என் உத்தரவுக்குக் கட்டுப்பட்டு, நான் சொல்லுகிறபடி நடக்க, செய்யக் கடமைப்பட்டவள் அவள். என் வார்த்தையை அவள் மறுப்பதா ?'' என்ற அகங்காரம் தோன்றி அதிவேகமாக வளர்ந்தது, ஷண்முகசுந்தரம் மனத்தில். தினசரி வாழ்க்கையில், சிறு சிறு காரியங்களில்கூட அவன் காட்டிய அந்த மனேபாவத்தைக் கண்டு குமுதம் கலங்கினுள். என்ன நேர்ந்தாலும் காந்திக்குக் கொடுத்த வாக்கைக் கைவிடுவதில்லையென்ற உறுதி மாத்திரம் அதிக பல மடைந்தது.

அதே நிலைமையில் இருவரும் ஒதுங்கி ஒதுங்கி ஒரு வருஷம் தள்ளிவிட்டார்கள். அந்த அசட்டுக் கசப்பு நிலையை நீடிக்க விடாமல் காப்பாற்ற இந்திய சர்க்காரின் வருமான வரி விசாரணைக் கமிட்டி நியமன அறிவிப்பு வெளி வந்தது. யுத்த காலத்தில் கொள்ளை லாபம் அடித்துவிட்டு அதற்குரிய வருமான வரியைச் செலுத்தாமல் ஏமாற்றியவர்களைக் கண்டு பிடிப்பதுதான் கமிட்டியின் பொறுப்பு.

அந்த அறிக்கையைப் படித்த ஷண்முகசுந்தரம் பயந்துவிட்டான். குமுதத்திடம் நகைகள் வாங்கும் விஷயத்தை அதிகமாக வற்புறுத்தத் தொடங்கினுன்:

'' நான் கழுதை மாதிரி நகை சுமக்கச் சம்மதித்தாலும், அதிகமானுல் ஐம்பதினுயிரம் அல்லது ஒரு லட்சத்திற்கு நகைகள் வாங்கலாம். உங்கள் இருட்டடி லாபம் அதற்குமேல் நாலைந்து மடங்கு இருக்குமே. அதற்கென்ன செய்வீர்கள் ?'' என்று கேட்டுவிட்டாள் குமுதம்.

ஷண்முகசுந்தரம், '' அது என் கவலை. நான் சொல்வதை மாத்திரம் நீ செய்தால் போதும் '' என்ருன்.

குமுதம், அன்றுவரை நேருக்கு நேர் பதில் சொல்லி வாதாடியவளல்ல. அன்று என்னவோ அவளுக்குப் பேசித்தான் தீர

வேண்டும் போலிருந்தது. ''அன்னிய ஆதிக்கம் ஒழிந்து நாட்டை நாமே ஆளும் உரிமை வேண்டுமென்று போராடினோம். இன்னும் சில மாதங்களில் நம்முடைய சொந்த சர்க்கார் ஏற்பட இருக்கிறது. அது நடக்கப் பணம் கொடுக்க நாம் தயாராக இல்லை. உங்களைப் போன்றவர்கள் வெள்ளைக்காரனை இருந்துவிட்டுப் போகட்டும் என்று நேரடியாகச் சொல்லிவிடலாமே இப்படிச் செய்வதற்கு'' என்றாள்.

ஷண்முகசுந்தரத்தின் அகங்காரம் அவன் மனிதத்தன்மைக்கே திரையிட்டுவிட்டது. அவனை ஆட்டிவைத்த பணம் சீறிக்கொண்டு எழுந்து அவனைத் தூண்டியது. ''சீ நாயே வாயை மூடு'' என்று அவள் கன்னத்தில் அடித்துவிட்டான்.

அன்றுவரை அவன் குமுதத்தை ''அடி'' என்று கூடச் சொன்னதில்லை. அதனால் அவனுடைய அந்த நடத்தை அவனையே குலுக்கிவிட்டது. தான் செய்தது தவறுதான், மிருகத்தனம் தான் என்று உணர்ந்தான். அதுவே அவனுடைய ஆத்திரத்தையும் எரிச்சலையும் அதிகரிக்கக் காரணமாயிற்று. தன்னை அப்படி மிருகத்தனத்திற்குத் தாழ்த்தியது அவளுடைய தூய்மையும், உறுதியும் தான் என்று கருதினான். அதனால் அவளைக் கண்டாலே அவன் நெஞ்சில் வெறி பிறந்தது.

திடீரென்று ஒருநாள் அவளையும் குழந்தை பாபுவையும் ரயிலேற்றி, அவளுடைய பிறந்த வீட்டுக்கு அனுப்பினான். அவள் அங்கே போய் இறங்கும்போது அவள் விலாசமிட்ட கடிதமொன்று காத்திருந்தது அவளுக்காக.

''உன் வீட்டுக்காரர் கையெழுத்து, நீ அங்கிருக்கும்போதே இங்கே எதற்காக இப்படிக் கடிதம் போட்டிருக்கிறார் என்பது விளங்காமல் திகைத்துக்கொண்டிருக்கிறேன்'' என்று அதை அவளிடம் கொடுத்தார் சிவசங்கர முதலியார்.

குமுதத்திற்கு அதில் என்ன எழுதியிருக்குமென்பது ஒருவாறு தெரிந்துவிட்டது. பிரித்துப் பார்த்தாள்.

''நீ என் மனைவி. என் உத்தரவின்படி நடக்கக் கடமைப்பட்டவள் என்பதை நிச்சயமாக உணர்ந்து அதற்குச் சித்தமாக இருப்பதாகக் கடிதம் எழுதிவிட்டு இங்கே திரும்பிவந்தால் போதும்'' என்று எழுதியிருந்தான் ஷண்முகசுந்தரம்.

குமுதம் தன் பெற்றோரிடம் நடந்ததையெல்லாம் விவரமாகச் சொன்னாள். ''மணத்தின் போது நீ நகை போட்டுக்கொள்ள மாட்டாய் என்பது தெரிந்துதானே அதற்கு இசைந்தான்? இன்று இப்படி வாக்கு மீறுவதுதான் அழகா? அதைக் காரணம் காட்டி

உன்னை வாழாவெட்டியாக்க முயலுவது சரிதானு என்று கேட்டு எழுதுகிறேன். இல்லாவிட்டால் நானே நேரில் போய் கேட்கிறேன்'' என்று குதித்தார் முதலியார்.

குமுதம் அவரைச் சமாதானம் செய்து ''இப்போது நீங்கள் என்ன செய்தாலும் அவருடைய பிடிவாதம் தான் வலுக்கும் அப்பா. கொஞ்சம் பொறுமையாக இருந்தால் தானுக மனம் இளகிவிடுவார். அவர் சுபாவம் எனக்கு நன்ருகத் தெரியும்'' என்ருள்.

ஆனுல் அவள் ஷண்முகசுந்தரத்தின் சுபாவத்தைச் சரியாகத் தெரிந்துகொள்ளவேயில்லையென்பதைத்தான் காலம் காட்டியது. ஒரு வருஷம் வரை அவனிடமிருந்து கடிதமே வரவில்லை. குமுதம் எழுதிய கடிதங்களுக்கும் பதிலில்லை.

அவள் பிறந்த வீட்டுக்கு வந்து சரியாக ஒரு வருஷம் ஆன அன்று காலையில் அவள் தந்தை சிவசங்கர முதலியாருக்குச் சென்னை ஹைகோர்ட்டில் இருந்து ஒரு சம்மன் வந்தது.

சென்னை ஷண்முகசுந்தர முதலியார் தன் மகனைத் தன்னிடம் ஒப்படைக்க உத்தரவிடவேண்டுமென்று கோர்ட்டில் மனுச் செய்துகொண்டிருப்பதாகவும், தற்சமயம் குழந்தையை வைத்திருக்கும் குமுதம் பையனுடன் கோர்ட்டில் ஆஜராகித் தன் கட்சியைத் தெரிவிக்கவேண்டுமென்றும் அதில் உத்தரவிடப் பட்டிருந்தது.

அதைப்படித்த சிவசங்கர முதலியார் மனம் கொதித்து விட்டது. "அயோக்கியப் பயல், வேண்டுமென்று வம்பு செய்வதற்காகவே இப்படிச் செய்திருக்கிருன். அவனை விடுவதில்லை, ஒருகை பார்த்து விடுகிறேன்'' என்று இரைச்சல் போட்டார்.

குமுதம் ''எதற்காக அப்பா இப்படிப் பேசுகிறீர்கள்? அவர் மகனை அவர் கேட்டால் நாம் ஒப்படைத்து விடவேண்டியவர்கள் தானே'' என்ருள்.

''நீ பேசாமலிரு. வாயா வார்த்தையாகக் கேட்டால் போதாதோ? திடீரென்று கோர்ட்டுக்குப் போவானேன்? என்னை யாரென்று நினைத்திருக்கிருன்? நான் போய் நல்ல வக்கீல் ஒருவரைக் கலந்து பேசுகிறேன். இவனைச் சும்மாவிடப் போவதில்லை: குழந்தைக்கும் உனக்கும் சொத்தில் பங்கு கொடுக்க வேண்டுமென்று எதிர் வழக்குப் போடுகிறேன்'' என்று சீறினுர்.

ஆனுல் அவர் சொன்னபடி எதிர்வழக்குப் போடவில்லை. குமுதம் அதற்கு இணங்கவே முடியாதென்று சொல்லிவிட்டாள். குழந்தையை ஒப்படைக்கும் விஷயத்தில் மாத்திரம் அவள் தந்தை

யின் போக்கை ஆதரிக்கவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. அவளுடைய தாய்மை உணர்ச்சி தீவிர வேகத்துடன் எழுந்து குழந்தையைத் தன்னிடம் இருத்திக்கொள்ளத் தூண்டியது,

குமுதமே நேரில் கோர்ட்டுக்குப் போய்த் தன் கட்சியைச் சொல்லவேண்டுமென்று விரும்பினுர் முதலியார். என்ன காரணத் தினுல் இந்த விபரீத வழக்கு வந்திருக்கிறதென்பதை விளக்கிச் சொன்னுல், சுலபமாக ஜயித்துக்கொண்டு வந்து விடலாமென்று வக்கீலும் யோசனே சொன்னுர். குமுதம் அதற்கு இசையவில்லே. தன் பெயரால் ஒரு வாக்குமூலம் பதிவு செய்வதற்கும், அதில் தான் குழந்தையை எவ்விதக் குறைவுமின்றி வளர்க்கமுடியும், அது தன் தாயுடன் வளர்வதால் எவ்விதக் கோளாறும் நேர்ந்து விடாது என்று சொல்வதற்கும் மாத்திரம் அனுமதியளித்தாள்.

இந்த வழக்கைப்பற்றிய விஷயங்களேக் குழந்தையிடம் யாரும் பேசக்கூடாது. அவனெதிரில் பெரியவர்கள் அதைப் பற்றிக் குறிப்பிடவும் கூடாது என்று கண்டிப்பான நிபந்தனேயும் விதித்தாள். பெரியவர்கள் குரோதத்தில் காட்டும் ஆபாச மனப்பான்மை குழந்தைக்கும் படிந்துவிடக் கூடாது, என்று தன் தாய்க்கு விளக்கிச் சொன்னுள்.

வழக்கு இழுத்துக்கொண்டே போயிற்று. ஷண்முக சுந்தரம் வேண்டுமென்றே வளரவிட்டான். குமுதத்தின் உள்ளத்தை வதைத்து அவளேப் பணியவைத்துவிட வேண்டுமென்ற பேய் வெறி அவனே ஆட்டிவைத்துக் கொண்டிருந்தது. அதனுலேயே வழக்கை இழுக்கடித்தான்.

சிவசங்கர முதலியார் சென்னேயிலேயே ஒரு தனி வீடாகப் பிடித்துக் குடும்பத்துடன் வசிக்க வந்துவிட்டார்.

ஃ ஃ ஃ

அன்றுதான் தீர்ப்பு. சிவசங்கர முதலியார் பாபுவுடன் கோர்ட்டுக்குப் போயிருந்தார். வக்கீல் எவ்வளவோ எடுத்துச் சொல்லியும், பெற்ருேர்கள் எவ்வளவோ வற்புறுத்தி மன்ருடி யும், குமுதம் தன் கட்சி சம்பந்தமாகப் பல தகவல்களேக் கோர்ட்டில் வெளியிட அனுமதியளிக்கவேயில்லே.

அதனுலேயே அன்று தீர்ப்பு அவர்களுக்கு எதிராகத்தான் இருக்கப்போகிறது என்று மற்ற எல்லோரும் நம்பினுர்கள். ஆனுல் குமுதம் மட்டும் தன் கட்சியிலிருந்த சத்தியமும் தாய் உரிமையும்தான் ஜயிக்கும் என்று நம்பிக்கொண்டிருந்தாள்.

அந்த நம்பிக்கையையும் மீறி அவள் உள்ளம் பதைத்தது. மற்றவர்கள் எல்லோரும் கருதுவதுதான் சரியாக இருந்து

விடுமோ என்ற சந்தேகம் அடிக்கடி எழுந்து அவளை வதைத்தது. தான் பதியையும் இழந்து, பாபுவையும் இழந்துவிட நேர்ந்தால் அப்புறம் வாழ்க்கை சர்வ சூன்யமாகிவிடுமே என்ற எண்ணம் எழுந்து எழுந்து அவளைத் துடிக்க வைத்தது.

தாயின்மேல் சாய்ந்து அவள் மனத்திற்குள்ளாகவே தியானம் செய்தாள்.

கடிகாரம் ஒரு மணியடித்தது. குமுதம் திடுக்கிட்டு நிமிர்ந்து உட்கார்ந்தாள். டெலிபோன் மணியும் கிணுகிணுவென்று ஒலித்தது. அவசரமாக எழுந்துபோய் 'வாங்கி' யுறுப்பைக் கையிலெடுத்தாள். அவள் கை நடுங்கியது. உறுப்பைக் காதருகில் கொண்டுபோகத் தயங்கினாள். மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு உறுப்பில், "சிவ சங்கர முதலியார் வீடு. யார் வேண்டும்?" என்றாள்,

"நீதான் வேண்டும்" என்று பதில் வந்தது மறுபக்கத்திலிருந்து.

நீங்களா?" என்றாள் குமுதம்.

எழுந்து அவளிடம் வரப்புறப்பட்ட மங்கையர்க்கரசி அவள் குரலைக் கேட்டவுடன் தயங்கி நின்றாள்.

மறுபக்கத்திலிருந்து ஷண்முகசுந்தரம் பேசினான். "குமுதம், உனக்குக் கடைசியாக ஒரு சந்தர்ப்பம் அளிக்கிறேன். நீங்கள் சொல்லுகிறபடி நடக்கிறேன் என்று ஒரு வார்த்தை சொல்லி விடு. எல்லாம் சரியாகிவிடும்" என்றான்.

குமுதம் பணிவுடன் "இதுவரை உங்கள் சொல்லை மீற வேண்டுமென்று நான் நினைத்தது கூட இல்லை" என்றாள்.

"அதனால் தான் நகைகள் வாங்கக்கூடச் சம்மதிக்க மாட்டேனென்கிறாயோ" என்று ஏளனமாய்க் கேட்டான் ஷண்முகசுந்தரம்,

"அதற்கு நான் இசைந்தால் என் வாக்கைமாத்திரமல்ல, உங்கள் வாக்கையும் காப்பாற்றாத பாவம் சேரும். உங்களுக்கு நான் என்ன சொல்வதற்கிருக்கிறது" என்றாள்.

ஷண்முகசுந்தரம் "ஓகோ! என்னை அரிச்சந்திரனாக்கிவிட வேண்டுமென்றுதான் கோர்ட்டில்கூட எதிர்வழக்காடுகிறாயா? சரிதான். தீர்ப்புச் சொல்லியாகிவிட்டது. பாபு என்னுடன் வந்துவிடுவான். இனிமேல் அவனைத் தூரத்திலிருந்து கூடப் பார்க்க முடியாது நீ. அந்த ஆசை ஏதாவது இருந்தால் இப்போதே அதை விட்டுவிடு" என்றான்.

குமுதம் பிரமையடித்தவள் போலக் கேட்டுக்கொண்டு நின்ருள். முடிவில் ''சரி'' என்று ஒரு வார்த்தையில் பதில் சொல்லிவிட்டு உறுப்பைத் திருப்பி வைத்தாள்.

அதுவரை அவள் கட்டுப்பாட்டுக்கடங்கியிருந்த துக்கம் பீறிட்டுக்கொண்டு எழுந்தது. 'அம்மா!' என்று கதறிக்கொண்டு தாயிடம் ஓடினுள். அவள் மடியில் முகத்தைப் புதைத்துக் கொண்டு கோவென்று குரலிட்டு அழுதாள்.

மங்கையர்க்கரசிக்கு ஒன்றும் புரியவில்லே. குமுதம் தன் கணவனுடன் பேசினுள் என்று யூகித்துக் கொண்டாள். ஆனுல் முடிவில் அவள் அப்படிக் கதறிக்கொண்டு வருவானேன்? குமுதத்திடம் பேச்சுக் கொடுக்கவும் அவள் விரும்பவில்லே. வாய்விட்டுக் கதறினுல் நெஞ்சையமுத்தும் துக்கத்தின் வேகம் குறையுமென்று பேசாமல் இருந்தாள்.

நாலேந்து நிமிஷங்கள்வரை அழுதுகொண்டிருந்த குமுதம் மெள்ள எழுந்து ''அம்மா! பாபுவை அவரிடம் ஒப்புவிக்கும்படித் தீர்ப்பாகிவிட்டதாம். அவரே சொன்னுர்'' என்ருள்.

மங்கையர்க்கரசி மகளே இழுத்துக் கட்டியணேத்துக் கொண்டாள்.

வாசலில் மோட்டார் வந்து நின்ற சத்தம் கேட்டது. குமுதம் தாயின் அணேப்பிலிருந்து விடுவித்துக்கொண்டு எழுந்தாள். ''அம்மா! நானுக வெளியே வரும்வரை என்னே யாரும் கூப்பிடவேண்டாம்'' என்று சொல்லிவிட்டு அவசரமாக வீட்டினுள்புறம் சென்ருள்.

அவள் கூடத்தின் மறுபுற வாசலருகில் போனபோது பின்னுலிருந்து ''அம்மா!'' என்று அழைத்த பாபுவின் குரல் வந்தது. துள்ளித் திரும்பினுள். எதிர்ப்புர வாசலிலிருந்து பாபு அவளே நோக்கிப் பாய்ந்தான்.

குமுதமும் கட்டவிழ்த்துக்கொண்டு வரும் பசுவைப்போல ஒடிவந்தாள். அவனே நெருங்கியவுடன் அவள் முழங்கால்கள் சடக்கென்று முறிந்ததுபோல மடிந்தன. தன் நெஞ்சத்திலே பொங்கிய ஆசை—பாசத்தையெல்லாம் கொட்டி அவனே இழுத்து அணேத்துக்கொண்டாள்.

பாபுவின் தோளின் மேல் சாய்ந்து குமுதம் கண்களே மூடிக் கொண்டாள். குழந்தை தாயின் தலேயை வருடிக்கொண்டே ''அம்மா! நான் அப்பா கூடத்தான் இருக்கணும்னு ஜட்ஜு தீர்ப்புச் சொன்னுரு எல்லோரும் சரின்னுட்டாங்க, தாத்தா கூடத்தான். ''நான், ஜட்ஜு தொரைகளே!. என்று கூப்பிட்டேன்.''

'கோர்ட்டுச் சேவகன் 'ஷ்! சைலன்ஸ்னு' அதட்டினுன். ஜட்ஜு ரொம்ப நல்லவரு அம்மா. ''என்ன வேணும் தம்பி'' ன்னு கேட்டாரு.

''எங்கம்மா காந்திக் கட்சி. எங்கப்பா அதுக்கு எதிர்க்கட்சி. அதுதான் அவங்களுக்குள்ளே சண்டை. நானும் காந்தி கட்சி யிலேதான் இருக்கப் போகிறேன்னேன்.''

''எல்லாரும் திருதிருன்னு முழிச்சாங்க. அப்பா வக்கீல் எழுந்து நின்னு இங்கிலீஷிலே என்னவோ படபடான்னுரு. ஜட்ஜு அவர் சொன்னதைக் கேக்கவேயில்லே. என்னை நடுவிலே ஒரு பெட்டிமாதிரி இருக்குதே அங்கே வந்து நிக்கச் சொன்னுரு. நான் பயப்படாமே போயி நின்னேன்.''

''தம்பி! உனக்கு எது நல்லது இல்லேன்னு தெரிஞ்சுக்கிற வயசு வரல்லே இன்னம். நீ குழந்தை, ஆகையினுலே சட்டப்படி உனக்கு எது நன்மையோ அப்படித் தீர்ப்புச் செய்திருக்கோம்'' னுரு.

''நான், எங்கப்பா என்னைக் காட்டிலும் கொழந்தையா இருக்காருங்களேன்னேன். அது தப்பா அம்மா? பின்னே அங்கே யிருந்தவங்கள்ளாம் எதுக்காக அப்படிச் சிரிக்கணும் ?

''ஜட்ஜு உனக்கு யாருகிட்ட இருக்கப் பிரியம்னு கேட்டாரு. அம்மா கூடத் தான்னேன். தீர்ப்பை மாத்திப் போட்டாரு அம்மா'' என்ருன்.

குமுதம் வியப்பில் விரிந்த தனது பெரிய கண்களால் அவன் முகத்தைத் தாகத்துடன் பருகிக் கொண்டே அதையெல்லாம் கேட்டாள்.

அவன் முகத்தை இரு கைகளாலும் பற்றி இழுத்து முகம் முழுவதும் முத்த மழை பெய்து தள்ளிவிட்டாள்.

கூடத்தின் வெளிவாசலருகில் நீர் துளித்த கண்களுடன் நின்று பார்த்துக்கொண்டிருந்த சிவசங்கர முதலியார், ''குமுதம்! இந்த தேசத்திலிருந்து வெள்ளைக்காரன் வெளியேறியதுடன், காந்தி மேற்கொண்டு வந்தவேலை முடிந்துவிட்டதென்று எல்லா ரும் நினைக்கிருர்கள். அது தவறு. காந்தி சக்தியின் வேலை இப்போதுதான் ஆரம்பமாகியிருக்கிறது என்பாயே. அது அப்படி யே சரியென்பது இன்றுதான் எனக்கு விளங்குகிறது. வாசலில் ஷண்முகசுந்தரம் வந்து காத்திருக்கிருன். நீ உத்தரவு கொடுத் தால் உள்ளே வருவான்'' என்ருர்.

குமுதம் பாபுவைக் கொஞ்சம் விசையுடனேயே ஒதுக்கித் தள்ளிவிட்டு எழுந்து வாசல்புறம் ஓடினுள்.

# 17

# சகோதரர் அன்றோ?

தொலைவில் தெரிந்த வெள்ளிப் பனிமலையின் பளிங்குச் சிகரங்கள் பகைவர்களைப் பயமுறுத்தும் ஈட்டி முனைகளைப் போலக் காலை வெயிலில் பளபளத்தன. சிகரங்களின் வாயிலாக ஊடுருவிப் பாய்ந்த இளங்கதிர் இன்னும் அந்த மலைக் காட்டில் நுழைய வில்லை; அடிவாரத்தின் மடியில் அடர்த்தியான குளிர்; மங்க லான இருள்.

நெடியதொரு மலைப் பாம்பு போல், ஒரு குறுகலான ஒற்றை யடிப் பாதை வளைந்து மேலே சென்றது. பாதையின் இரு புறங் களிலும் நெடிதுயர்ந்த மரங்கள். அடிக்கடி சின்னஞ்சிறு மலை யருவிகள் குறுக்கிட்டன. பனிப்பாளங்கள் நொறுங்கி நீரில் மிதந்ததால், அருவியில் வைத்த காலை மரத்துப்போன மரக் கட்டையாகத்தான் வெளியில் எடுக்க முடியும். மரக்கிளைகளி லும் இலைகளிலும் படிந்த வெண்பனி மட்டும் சொட்டுச் சொட் டாக உருகி உதிரத் தொடங்கியது.

பனியும், பயங்கரமும், இடர்ப்பாடும் நிறைந்த அந்த மேட்டுப் பாதையில் இருபது போர்வீரர்கள் ஒருவர்பின் ஒருவ ராக நடந்து சென்றனர். அவர்களது ஒழுங்கான காலடி ஓசை யைத் தவிர, மற்ற எந்த ஒலியும் அங்கு எழவில்லை. ஓசையில் ஏதாவது நேரும்போது மட்டிலும், முன்னால் சென்ற தலைவன் குமார், தாளம் தவறிப் போடுபவனைப் பார்க்கும் பாடகனைப் போல் திரும்பிப் பார்ப்பான்—பிறகு ஓசை தவறுவதில்லை.

"லெப்ட்...ரைட்... சரக்... சரக்... சரக்... சரக்...!"

இது அவர்களுக்கு இரண்டாவது நாள் நடை. கம்பளிக் குல்லாய்களையும் அங்கிகளையும் தாண்டி வந்து எலும்புக் குருத்

தைச் சுண்டி இழுத்தது அந்த குளிர். முதல் நாள் இரவை எப்படியோ ஒரு கூடாரத்துக்குள் நெருப்பு மூட்டிக் கழித்து, தங்கள் எலும்புகளை ஓரளவு உலர்த்திக்கொண்டு மீண்டும் தங்கள் பயணத்தைத் தொடங்கியிருந்தார்கள்.

வேவு பார்ப்பதற்காக முன்னால் சென்றுகொண்டிருந்த ரோந்துப் படை இது. இதை அடுத்து இதேபோல் ராஜ்பகதூர் என்ற பாஞ்சாலத்து இளைஞனின் தலைமையில் மற்றொரு சிறு படையும் வந்துகொண்டிருந்தது. அதற்கும் பின்னால் வந்த படைதான், நூறு பேர்களடங்கிய 'பயனீர்' படை. காடுகளை வெட்டிச் செப்பனிட்டுப் பாதைகளை ஒழுங்காய்ச் சமைத்துக் கொண்டிருந்தார்கள் அவர்கள். அதை அடுத்தாற் போல்தான் அவர்களது தாற்காலிக ராணுவ முகாம் இருந்தது. அங்கிருந்தவர்களையும் சேர்த்துக் கணக்கிட்டால், மொத்தம் முந்நூறு பேர் தேறுவார்கள்.

போக்குவரத்துச் சாலைகளில்லாத மலைக் காட்டுப் பிரதேசம் அது. வீரர்கள், தளவாடங்கள், சப்ளைகள் முதலிய எல்லாவற்றையும் அங்கு 'ஹெலிகாப்டர்' விமானம் மூலம் கொண்டு வந்து இறக்கித்தான், அந்த ராணுவ முகாமையே ஏற்படுத்தியிருந்தார்கள் — சீனர்களின் நயவஞ்சகத்தனமான படையெடுப்புக்கு ஆளாகியிருந்த வடகிழக்கு எல்லைப் பிரதேசம் அது.

சூரியன் வானத்தின் உச்சியை நோக்கி நகர்ந்துகொண்டிருந்தான். குமாரின் தலைமையில் வந்த வீரர்களும் மலை உச்சியை நெருங்கினார்கள். சூரியனின் ஒளி அங்கு நிலவொளி போலத்தான் குளிர்ந்திருந்தது. வெளிச்சமுண்டு; வெம்மையில்லை.

மலை முகட்டைத் தாண்டிச் செல்வதற்கு அவர்களுக்கு உத்தரவு இல்லை. ஆகவே, இயற்கையாக அரண் போல் அமைந்த ஒரு பாறைத் தொடரின் மறைவில் தன் வீரர்களை உண்டு களைப்பாறச் செய்தான் குமார். ரொட்டித் துண்டு நன்றாக இறுகிப் போயிருந்தது. அதை மென்று, விழுங்கிவிட்டு குளிரை விரட்டுவதற்கு ஒரு சிகரெட்டைப் பற்றவைத்தான். தாங்கள் வந்து சேர்ந்தது பற்றியும், மலை முகட்டை அடுத்த பள்ளத்தாக்கில் பகைவரின் நடமாட்டம் எதுவும் தெரியவில்லை என்பது பற்றியும் பின்னால் வரும் ராஜ்பகதூருக்குச் செய்தி அறிவித்தான். தலைமை நிலையத்தை 'சிக்னல்' கூப்பிட்டபோது அங்கிருந்து பதில் இல்லை. அங்குள்ள இயந்திரம் பழுதாகிவிட்டது போலும்!

குமார் ஒரு பாறையின் பின்பு நின்றுகொண்டு, தொலை நோக்கிக் கண்ணாடியால் பள்ளத்தாக்கு முழுவதையும் நன்றாக ஊடுருவிப் பார்த்தான். நடுத்தரமான உயரம்; வைரம் பாய்ந்த ஒல்லியான உடற்கட்டு; முறுக்கு மீசை; கறுப்பு நிறம்.

''சீனர்களுக்குச் சாதகமான நில அமைப்பு அவர்களுடைய எல்லையில் இருக்கிறது. பாதை அமைத்துக்கொண்டு வாகனங்களில் வந்து குவிந்து விடலாம்—அதை நமக்குப் பாதகமாகப் பயன் படுத்திவிட்டார்கள், துரோகிகள்!'' என்றான் குமார், அருகில் நின்ற மராத்திய வீரனிடம்.

''அவர்களுடைய கொரில்லாப் பயிற்சி இந்த மலைக் காடுகள் வரையில்தான் எடுபடும். சமவெளிக்கு வந்தால் நாம் புதைகுழி வெட்டி விடலாம்'' என்றான் மராத்தியன்.

தொலை நோக்கியால் பார்த்தபடி பேசிக்கொண்டே வந்த குமார் சட்டென்று பேச்சை நிறுத்தி, ஒரு திசையில் சுட்டிக் காட்டினான். தொலைநோக்கியை மற்றவனிடம் கொடுத்துப் பார்க்கச் சொன்னான்.

''ஆமாம்; பெரிய கூட்டம்!'' என்றான் மராத்தியன். ''இலை தழைகளை அள்ளிப்போட்டு மறைத்துக்கொண்டு வருகிறார்கள்; வாகனங்கள் ஏதுமில்லை. கோவேறு கழுதைகளில் சப்ளை வருகிறது.''

இரும்புச் சிலையின் முகமாக மாறியது குமாருக்கு. சட்டென்று அதை வாங்கிப் பார்த்துவிட்டு, மீண்டும் தலைமை நிலையத்தோடு கம்பியில்லாத் தந்தியில் தொடர்புகொள்ள முயன்றான்; முடியவில்லை. ''சுமார் ஆயிரம் பேர் இருப்பார்கள்; இரண்டு மைல் தொலைவில் வந்துகொண்டிருக்கிறார்கள்!'' என்றான்.

இருப்பதோ இருபதுபேர்; வருவதோ ஆயிரம்...!

குமார் சிறிது நேரம் யோசித்தான். பிறகு மள மளவென்று தனக்குப் பின்னால் வந்த ராஜ்பகதூருக்குச் செய்தி அனுப்பினான்.

ராஜ்பகதூர்!... ஆயிரம் சீனர்கள்!... வாகனங்களில்லை; இரண்டு மைல் தொலைவில் வருகிறார்கள்...உச்சிக்கு வருவதற்கு இன்னும் ஒரு மணி நேரமாவது ஆகும்....தலைமை நிலையத்திற்குத் தொடர்புமில்லை... நாமே முடிவு செய்ய வேண்டியதுதான்... என்ன சொல்லுகிறாய்?''

ஒரு மைல் தொலைவிலிருந்து செய்தியைக் கேட்ட ராஜ்பகதூரின் நெடிய உருவம் ஒரு கணம் திடுக்கிட்டு விட்டது.

''நீ என்ன சொல்கிறாய்?...முகாமில் உள்ள எல்லோரையும் சேர்த்தாலே நாம் மூன்றில் ஒரு பங்குதான் தேறுவோம்!'' என்றான் ராஜ்பகதூர்.

"இருந்தால் என்ன?...நாங்கள் இங்கே வாய்ப்பாக மறைந்து முடிந்தவரை தீர்த்துக் கட்டுகிறோம். நூறு பேர்களையாவது சரிக்கட்டி விட்டு நாங்களும் செத்துத் தொலைகிறோம். சுமார் ஒரு மணி நேரம் எங்களால் அவர்களை 'எங்கேஜ்' செய்ய முடியும். அதற்குள் நீ பின்வாங்கிப் 'பயனீர்' படையோடு சேர்ந்துகொள். கட்டிய பாலத்துக்குச் சரியான நேரத்தில் வேட்டு வைத்தால் அதில் பலர் ஒழிந்து போவார்கள். நீங்கள் எல்லோரும் காட்டுக்குள் மறைந்துகொண்டு பகைவர்களைச் சிதற அடிக்கலாம். என்ன சொல்லுகிறாய்?—'பயனீர்' படைக்குச் செய்தி அனுப்பிவிட்டுத் திரும்பிப் போ!"

"நீ சொல்லியது அவ்வளவும் சரி. நான் அப்படியே செய்தி அனுப்புகிறேன்—ஆனால் ஒரு விஷயத்தில் நீ முட்டாள்! இருபது பேர்களை வைத்துக்கொண்டு நீ எவ்வளவு நேரம் எத்தனை பேர்களைச் சமாளிக்க முடியும்?"

"எங்களது எண்ணிக்கை முதலில் அவர்களுக்குத் தெரியப் போவதில்லை..."

"ஏ முட்டாள்! நீ உன் வாயை மூடு! நான் வரத்தான் போகிறேன்."

"நீ முட்டாள் மட்டுமல்ல; சண்டைக்காரனும்கூட, நம்முடைய பழைய சண்டையைப் புதுப்பிக்க இதுவா நேரம்? ... ராஜ்பகதூர்!"

"நான் அங்கே வந்துகொண்டிருக்கிறேன்!... நம்முடைய உத்தியோகம் ஒன்றாக இருந்தாலும், நீ என்னைவிட சீனியர்; உத்தரவு கொடு!... உத்தரவு கொடு!"

"சரி, வந்து தொலை!" என்று கூறிவிட்டுத் தனக்குள் சிரித்துக்கொண்டான் குமார். சண்டைக்காரனாக இருந்தாலும், ராணுவக் கட்டுப்பாட்டை மீறாமல் தன்னிடம் உத்தரவு கேட்டதில் அவனுக்கு மகிழ்ச்சி.

தூரத்திலிருந்தே இருவரும் ஒருவரைப்பற்றி ஒருவர், "பொல்லாத மதராஸி" என்றும், "முரட்டுப் பஞ்சாபி!" என்றும் பெருமையோடு கூறி நகைத்துக் கொண்டார்கள்.

மலை உச்சியிலிருந்த குமாருடன் இப்போது ராஜ்பகதூரும் வந்து சேர்ந்துகொண்டான். இருபது பேர்களாக இருந்தவர்கள், நாற்பது பேர்களானார்கள். எதிர்ப்பக்கத்திலிருந்து பொங்கி எழும் கடல்அலைபோல் சீனப்படை முன்னேறிக் கொண்டிருந்தது. மரணம்என்கிற முடிவுக்குத் தீர்மானமாக வந்துவிட்டு அதைக் கம்பீரமாக ஏற்றுக்கொள்ளத் துணிந்த இந்த நாற்பது

பேர்களும், ஆளுக்குப் பத்துப் பகைவர்கள் வீதமாவது தீர்த்து விட்டுத்தான் மடியவேண்டுமென்று உறுதி பூண்டனர்.

நெருங்கிக்கொண்டிருந்தனர் பகைவர்கள்.

''ராஜ்பகதூர், நான் சொல்வதைக் கவனமாகக் கேட்டுக் கொள்'' என்று அவனிடம் திட்டங்களை விளக்கினான் குமார். ''நாம் செய்யவேண்டிய காரியங்கள் மூன்று : ஒன்று, நமது எண்ணிக்கை தெரிந்துவிடாதபடி திடீர்த்தாக்குதல் நடத்தி அவர்களைக் கலக்கிவிடவேண்டும்; பெரும்படை இங்கே இருப்பதாக அவர்களை நினைக்கச்செய்து உறுதியைக் குலைக்கவேண்டும். இரண்டு, தாக்குதலின் மூர்க்கத்தனம் அவர்களுக்கு அதிகச் சேதத்தையும், தாமதத்தையும் தரவேண்டும். மூன்று, நான் முன்னின்று போரை நடத்துகிறேன். நீ செய்திகளை வேகமாக அனுப்பிக்கொண்டே இரு.— இன்றைய போரில் நம்மை மீறிப் போனாலும், அடுத்த இடத்தில் இவர்கள் தோற்றுத் திரும்ப வேண்டும்!''

துப்பாக்கி முனைக்கெதிரே குமார் நின்றுகொண்டு, செய்திப் பொறுப்பைத் தன்னிடம் விட்டு விட்டானே என்று ராஜ்பகதூருக்குச் சிறிது வருத்தம். என்றாலும், செய்திப் பொறுப்பும் மிக முக்கியமானது என்பதால் அவன் முணுமுணுக்கவில்லை. குமாரை விட உயரத்திலும் பருமனிலும் எவ்வளவோ பெரியவன் ராஜ்பகதூர்; வயதில்மட்டும் இளையவன்.

நுங்கும் நுரையுமாகப் பொங்கிப் பொருமிக்கொண்டு வந்தது செஞ்சீனரது மஞ்சள்நிறப் படை.

பாரதவீரர்கள் கண்ணிமைக்காமல், மூச்சுக்காற்றைக் கட்டுப் படுத்திக்கொண்டு, துப்பாக்கி விசைகளின்மீது விரல்களை வைத்த வண்ணம் ஒவ்வொரு விநாடியும் தங்கள் தலைவனின் ஆணைக்குக் காத்திருந்தார்கள்.— ஆயிற்று, மிக மிக நெருக்கத்தில் வந்து விட்டார்கள் பகைவர்கள்.

'டுமீல்' என்று ஒரே ஒரு குண்டு சீனர்களின் பக்கத்திலிருந்து வெடித்து ஒரு இந்தியவீரனின் தலையை ஒட்டிப் பறந்தது.

வீரர்கள் அனைவரும் ஆவேசத்துடன் குமாரைத் திரும்பிப் பார்த்தார்கள். 'தலைவன் ஏன் இன்னும் தாமதம் செய்கிறான்?'

''முட்டாள்!......முட்டாள்......நீ எந்த உலகத்திலிருக்கிறாய்?'' என்று குமாரின் காதருகில் வந்து கத்தினான் ராஜ்பகதூர். முதலில் குமாரைச் சுட்டுத் தள்ளிவிட்டு, மறுவேலை பார்க்க வேண்டும்போலிருந்தது அவனுக்கு.

"ஆத்திரப்படாதே ராஜ்! சந்தேகத்தின் பேரில் அவர்கள் சுட்டுப்பார்க்கிருர்கள். இன்னும் அருகில் அவர்கள் நெருங்கி விட்டால், நம்முடைய ஒவ்வொரு குண்டுக்கும் ஒருவன் பலி யாவானில்லையா ?''—குமாரின் சமயோசித புத்தி அவனை வியக்க வைத்தது.

நன்ருக நெருங்கிவிட்டது கூட்டம். குமார் சைகைசெய்து விட்டு, தன்னுடைய துப்பாக்கி விசையையும் தட்டிவிட்டான். இயந்திரச் சுழல் துப்பாக்கிகள் அந்த மலைக்கூட்டமும் கானகமும் அதிர முழக்கம் செய்தன.

பனிமலை கிடுகிடுத்தது; கானகம் கதறியது; வெள்ளிப்பனி செவ்விரத்த வெள்ளமாய் உருகிப் புரண்டோடியது; மரணஓலங் கள் மனித இதயங்களை உலுக்கி எடுத்தன.

எதிர்பாராத இந்தத் தாக்குதலில் நிலைகுலைந்து பதறிய பகை வர்கள் தங்களில் முற்பகுதி வீரர்களைக் கால்மணிப் பொழுதுக் குள் இழந்தனர். என்ருலும், அவர்கள் தங்கள் இழப்பைப் பற்றிப் பொருட்படுத்தியவர்களாகவே தெரியவில்லை. மூர்க்கத் தனத்தோடு மேலும் மேலும் படைகள் முன்னணிக்குவரத் தொடங்கின. பாரத வீரர்களிலும் பத்துப்பேர்களுக்கு மேல், தங்கள் கடமையை நிறைவேற்றிய பெருமையோடு வீரசுவர்க்கம் புகுந்தனர்.

பாரத வீரர்களின் எண்ணிக்கையும் தெரிந்துவிட்டது அவர் களுக்கு—மலைபோன்ற மனிதப் பேரலை ஒன்று ஆர்ப்பரித்துப் பொங்கி வந்தது.

"கடைசிவீரன் உள்ளவரையில், அல்லது கடைசிக் குண்டு உள்ளவரையில் சுட்டுத்தள்ளுங்கள்!'' என்று கத்தினுன் குமார்.

அதுவரையில் செய்திகளைப் பரபரப்போடு அனுப்பிக் கொண்டிருந்த ராஜ்பகதூர், செய்திப் பெட்டியும் துப்பாக்கியுமா கக் குமாரின் அருகில்வந்து தானும் சுடத்தொடங்கினுன்.

ஒருகுண்டு குமாரின் தோளில்பாய்ந்து அவனைக் கீழேதள்ளி யது. மற்ருெருகுண்டு ராஜ்பகதூரின் செய்திப் பெட்டியைச் சுக்குநூருகச் சிதற அடித்தது.

ராஜ்பகதூர் பாரதப்பகுதியின் படுகளத்தைத் திரும்பிப் பார்த்தான். குமாரைத்தவிர அனைவருமே விண்ணுலகெய்தி விட் டனர். குமார் மட்டிலும் குற்றுயிராய்க் கிடந்தான்.

ராஜ்பகதூருக்கு வேருென்றும் தோன்றவில்லை. பகைவர் களின் கண்களுக்குப்படாமல், அவர்கள் நெருங்குவதற்குள், பர

பரவென்று குமாரை இழுத்துக்கொண்டு ஒருபாறையின் மறைவுக்கு ஓடிவந்தான். அங்கும் அவன் நிற்கவில்லை. குமாரைத் தாங்கிப் பிடித்துக்கொண்டு, வெறிபிடித்தவன்போல் மேலும் ஓடினன்.

கால்வழுக்கியது, மளமளவென்று இருவரும் ஒருவரையொருவர் பற்றிக் கொண்டபடியே மலைச்சரிவில் புரண்டார்கள். ராஜ்பகதூருக்கு நினைவு வந்தபோது, மலைப்புல் நிறைந்த ஒரு புதருக்குள் இருவரும் ஒன்ருய்க்கிடப்பது தெரிந்தது. குமாரின் மூக்கருகில் கையைவைத்துப் பார்த்தான்: வெப்பமான மூச்சுக்காற்று வந்துகொண்டிருந்தது.

மாலை மயங்கும்நேரம். தொலைநோக்கிக் கண்ணுடி உடையாமல் இருந்ததால் மலைப்பாதையை உற்றுப் பார்த்தான்: நண்பகலில் படைகளுடன்சென்ற சீனர்கள், பின்னணியிலிருந்த பாரதப் படையினரிடம் எஞ்சியிருந்தவர்களில் பாதிப்பேரைப் பறிகொடுத்துவிட்டு, சோர்வும் களைப்புமாக மலையேறிக்கொண்டிருந்தார்கள். பெருமையோடு குமாரின் முகத்தைப் பார்த்துக்கொண்டு, "குமார், நம்முடைய இன்றையத் திட்டம் வெற்றி பெற்றுவிட்டது!" என்று மகிழ்ச்சி பொங்கக் கூறினன் ராஜ்பகதூர்.

குமாரின் விழிகள் திறந்துகொண்டன. அவன் புன்னகை பூத்தான். "நல்ல செய்தியைக் கேட்டுவிட்டேன்; இனி நிம்மதியாக என்னைச் சுட்டுத்தள்ளிச் சாகவிட்டு, நீ பத்திரமாகத் திரும்பிப் போ!" என்று மெலிந்தகுரலில் கூறினன் குமார்.

"என்ன! உன்னைச் சுடவேண்டுமா?"

"முட்டாள்!—இது போர்க்களம்! எனக்கு உதவிசெய்ய விரும்பினல் சுட்டுத்தள்ளு!...முடியாவிட்டால் நீ மட்டுமாவது இங்கிருந்து போய்த்தொலை!"

"நீதான் முட்டாள்; உன் மூளைதான் குழம்பியிருக்கிறது! நீ கட்டாயம் பிழைத்துக் கொள்வாய்."

"சண்டை போடாதே! உன் முரட்டுத் தனத்துக்கு நான் ஆளில்லை; இது நேரமுமில்லை."

குமாரைத் தூக்கிக் கொண்டு போவது என்ற பிடிவாதம் ராஜ்பகதூருக்கு. இது தேவையில்லாத வீண் முயற்சி என்பது குமாரின் எண்ணம். வாய்ச் சண்டை முற்றியதால், அந்த வேகம் தாங்காது மீண்டும் மயக்க மடைந்தான் குமார்.

சில ஆண்டுகளுக்கு முன்பு, அவர்கள் இருவரும் ஒருவரோ டொருவர் சண்டையிட்டு மோதிக்கொண்டு தரையில் புரண்ட காட்சியை அப்போது நினைத்துக்கொண்டான் ராஜ்பகதூர்.

பஞ்சாப் மாநிலக் கல்லூரி ஒன்றுக்கும் சென்னைக் கல்லூரி ஒன்றுக்கும் சென்னை விளையாட்டு மைதானத்தில் 'ஹாக்கி' போட்டி நடந்தது. இருவரும் இரு வேறு கட்சிகளின் தலைவர் கள். மாணவர்களும் பொது மக்களும் கூடி ஆட்டக்காரர்களை ஆரவாரங்களோடு உற்சாகப் படுத்திக்கொண்டிருந்தனர். வட இந்திய மாணவர்களின் தலைவனான ராஜ்பகதூர் பீமசேனனைப் போன்ற உருவத்தோடு, மின்னல் வேகத்தில் அங்கு மிங்கும் ஓடி 'கோல்' போடப் பார்த்தான். குமார் அதிகமாகப் பர பரப்படையவில்லை. நளினமாக மட்டையால் பந்தைத் தள்ளி விட்டு வெற்றி கொள்ளப் பார்த்தான். இடைவேளை வரையில் இரு புறமும் 'கோல்' விழவில்லை.

கடைசிக் கால் மணி நேரத்தில் சென்னை மாணவர்கள் லாவக மாக ஒரு 'கோல்' போட்டு விட்டார்கள். கை தட்டலால் மைதானமே அதிர்ந்தது. ரசிகர்கள் பலர் வெறி பிடித்துக் கூத்தாடினார்கள். இவற்றுக்கிடையில் சில அரை வேட்டுக்கார உணர்ச்சிப் பித்தர்கள் ''ஒழிந்தது வடக்கு'' என்று கூக்குர லிட்டனர்.

திடீரென்று விளையாட்டில் சூடு பிடித்துக் கொண்டது. ராஜ்பகதூர் பம்பரமாக மைதானம் முழுவதும் சுழன்று, பந்து ருட்டிக் கொண்டு ஓடினான். குறுக்கிட்டவர்களிடமிருந்து சாகசத் தோடு பந்தைக் காப்பாற்றினான். பிறகு, கடைசி நிமிஷத்தில் தன் பலமனைத்தும் சேர்த்துச் சென்னைக் கல்லூரிக்கு ஒரு 'கோல்' போட்டான். நீண்ட குழலும் ஊதினார் நடுவர். வெற்றி தோல்வி யின்றி முடிந்தது ஆட்டம்.

அத்துடன் நிற்கவில்லை விஷயம். ராஜ்பகதூர் 'கோல்' போட்ட சமயம், இடது பக்கத்திலிருந்து குறுக்கே வந்து விழுந்த ஒரு தமிழக இளைஞன் பலமான அடிபட்டுத் தலை குப்புறப் போய் விழுந்தான்.

குமாருக்கு கோல் விழுந்து விட்ட ஆத்திரம் வேறு. அத் துடன் ராஜ்பகதூர் வேண்டுமென்றே தங்கள் கட்சிக்காரனை அடித்து விட்டான் என்ற எண்ணம் வேறு. ஓடிச் சென்று தன்னை மறந்த வெறியில் ராஜின் கன்னத்தில் ஓங்கி அறைந்து விட்டான். இதைச் சிறிதும் எதிர்பார்க்காத ராஜ், ஹாக்கி மட்டையால் அவன் கழுத்தை வளைத்து இழுத்தான். இருவரும் வெறியோடு கட்டிப் புரண்டு உருண்டார்கள்; துடிப்பு மிக்க இளம் ரத்தமல்லவா?

"தந்திரக்கார மதராஸிகள்!... ஜெயிக்க முடியவில்லையே என்ற ஆத்திரம்!" என்று ராஜ்பகதூரின் ஆள் ஒருவன் உளறி வைத்தான்.

"கோல் போட்டு ஜெயிக்க வக்கில்லை; காலொடிக்க வந்து விட்டான்.—வடக்கத்தி முரட்டுத் தனம் இங்கே சாயாது!" என்றான் மறத் தமிழன் ஒருவன்.

வாய்ச் சண்டை முற்றி, சூடான பத்திரிகைகளின் பர பரப்பான செய்தியாக வளர்ந்து மேடை முழக்கங்கள் வரையில் முற்றி விட்டது விவகாரம்.

விளையாட்டு, கசப்பு நிறைந்த வினையாக முடிந்து விட்டது. இருவருக்குமே சில்லறைக் காயங்கள்.

நெருக்கடி நிலையின்போது திடீரென்று இருவரும் ராணுவ முகாமில் சந்தித்தபோதுதான் இருவரும் ராணுவத்தில் சேர்ந்திருப்பதைப் புரிந்துகொண்டார்கள். பழைய மனக் கசப்பின் தழும்பு ஒரு மூலையில் இருவருக்கும் இருந்து கொண்டுதான் இருந்தது. என்றோ நடந்த விஷயங்கள் இவை.

இருள் பரவத் தொடங்கியவுடன் துப்பாக்கியைத் தூக்கித் தோளில் மாட்டிக்கொண்டு, குமாரைப் பற்றித் தூக்குவதற்கு முயன்றான் ராஜ்பகதூர்.

"வேண்டாம், என்னை விட்டு விட்டுப் போ!... வீணாய் நீ அவதிப்பட வேண்டாம். வழியில் எந்தச் சீனனாவது எதிர்ப்பட்டால், எனக்காக நீயும் சாக வேண்டி வரும்... போ, ராஜ்பகதூர்!"—மன்றாடினான் குமார்; கெஞ்சினான்.

"குமார், உன்மீது எனக்குப் பாசமில்லை; பற்றுதலும் கிடையாது. இந்தத் தேசத்துக்கு ஒரு வீரனின் உயிர் இந்த நேரத்தில் மிகமிகத் தேவையானது. என் கடமையில் நீ குறுக்கிட வேண்டாம்."

பிடிவாதமாகக் குமாரைத் தூக்கித் தோள்மீது சாய்த்துக் கொண்டு, இரவின் மங்கலான நிலவில் தனது பயணத்தைத் தொடங்கினான் ராஜ்பகதூர். நிலவின் வெளிச்சத்தையும் மறைப்பதற்குப் பனி மழை வந்து சேர்ந்தது. கண்களுக்குப் பாதை புலப்படவில்லை. பனிக் கூடாரத்துக்குள் அகப்பட்டது போன்ற பிரமை.

ஆனால் எந்தத் தடைகளும் ராஜ்பகதூரின் உறுதியைக் குலைக்கவில்லை. உள்ளத்திலே வைராக்கியம், எண்ணத்திலே நற்செய

லின் பூரிப்பு, தன் தாய்த் திருநாட்டின் சகோதரனைக் காப்பது தேச பக்தி என்ற லட்சியம் இவ்வளவும் அவனுடைய நடைக்கு வேகம் தந்தன.

விண்ணிலிருந்து பனி மழை; அவன் உள்ளத்திலிருந்து அதை விரட்டும் நெருப்பு. வெளியில் இருட்டு; உள்ளுக்குள் பேரொளி. உடலில் பசி, களைப்பு, சோர்வு; நெஞ்சில் நிறைவு, தெம்பு, உற்சாகம்! அவனை அந்தக் கோலத்தில் யாரும் கண்டால் வெறி பிடித்த பேய் என்றோ பிசாசு என்றோதான் சொல்வார்கள்.

அவன் தோளில் கிடந்த குமார் இரவெல்லாம் ஏதேதோ பிதற்றினான். குமாரின் உடல் நெருப்பாய்த் தகிப்பது அவனுக்குக் கடுமையான ஜுரம் என்பதை ராஜ்பகதூருக்கு உணர்த்தியது. ஒரு வகையில் அவன் கவலைப்பட்டாலும், இறந்து போகாமல் உயிரோடிருக்கிறானே என்று ஆறுதல் கொண்டான்.

இரவு முழுதும் அவன் நடந்த நடை, அந்தப் பயங்கரமான காடுகளுக்குத் தெரியும்; தூரத்துப் பனிமலைகளுக்குத் தெரியும்; இரக்கமில்லாமல் கொட்டிய கடும்பனிக்குத் தெரியும். ஆனால் குமாருக்குத் தெரியாது.

பொழுதும் விடிந்தது. அருவிக் கரையும் வந்தது. அதன் பாலத்தைப் பாரதவீரர்கள் தகர்த்திருந்தார்கள். முதல் நாள் அங்குக் கடுமையான போர் நடந்திருப்பதற்கான சின்னங்கள் சுற்றுப்புறமெங்கும் சிதறிக் கிடந்தன.

'அருவியைத் தாண்டிச்செல்வது எப்படி?' என்ற கேள்வி எழுந்தவுடன், திடீரென்று ராஜ்பகதூரிடமிருந்த வலிமை மறைந்து விட்டது. தட்டுத் தடுமாறித் தன் தோள்சுமையைக் கீழே இறக்கிவைத்தான். தோள்களிரண்டும் வீக்கம் கண்டு இசிவெடுத்தன. பனியால் பாளம் பாளமாக வெடித்திருந்தது உதடு. கண்கள் சிவந்து பார்வை மங்கி, எரிச்சல் கண்டது—ஒவ்வொரு மயிர்க்காலிலும் ஒரே வலி, வேதனை, குடைச்சல்.

"கடவுளே, குமாரைக் கொண்டுசேர்க்கும் வரையிலாவது என்னைக் காப்பாற்று. பாரத தேசத்தின் மண்ணில் பிறந்தவன் அவன்!" என்று, தன்னை மறந்து வாய்விட்டு அலறினான் ராஜ் பகதூர்.

குமாரின் செவிகளில் நண்பனின் ஓலம் விழுந்து விட்டதா? கண்களைத் திறந்தான் குமார்; புன்முறுவல் பூக்கமுயன்றான்.

"பைத்தியக்காரா!...எப்படியாவது தனியாகப்போய், குறுகலான இடத்தில் அருவியைத் தாண்டிவிடு!...நான் சொல்வதைக்

கேட்கமாட்டாயா ராஜ்?''—குமாரின் குரல் ஏக்கத்தோடு ஒலித்தது.

பெற்ற தாய் ஒருத்தி தன் புதல்வனை உற்றுப் பார்ப்பது போல் குமாரைக் கனிவுடன் உற்றுப் பார்த்தான் ராஜ்பகதூர்.

''குமார், எனக்கு இன்னும் கல்யாணமாகவில்லை. சகோதரர்களும் இருக்கிறார்கள். ஆனால் உனக்கொரு மனைவி இருக்கிறாள். இந்த மாதத்தில்தான் நீ தகப்பனாகப் போகிறாய் என்றும் கேள்விப்பட்டேன். நான் இறந்தால், இந்த தேசம் ஒரு வீரனை மட்டும் இழக்கும். ஆனால் நீ?...நீ ஒரு கணவன், ஒரு தந்தை, ஒரு வீரன்!...உனக்குக் கணக்குப் போடத் தெரியுமே? தேசத்துக்கு நம் இருவரில் இப்போது யார் முக்கியம் என்று கணக்குப் போட்டுப் பார்!''—ராஜ்பகதூர் தெளிவாக, உறுதியோடு, உருக்கமாகப் பேசினான்.

''என் குடும்பத்தைப் பற்றி...?''

''உன் நண்பன் ஆறுமுகத்திடம் கேட்டுத் தெரிந்து கொண்டேன்.''

குமாருக்கு வாயடைத்துப் போய் விட்டது. நிறை மாதக்காரியான அவன் மனைவி, அவனது நகரம், காவேரிக்கரை எல்லாம் நினைவுக்கு வந்தன. அத்துடன், சென்னையில் நடைபெற்ற மாணவர் ஹாக்கிப் பந்தயம், இருவரும் சண்டையிட்டு மண்டைகளை உடைத்துக்கொண்டது, வடக்கு—தெற்கு வீண் விவாரம், எல்லாமே மனத் திரையில் சுழன்றன.

குமாரின் கண்கள் குளங்களாக மாறின. மெல்ல மெல்லத் தன் கரங்களை உயர்த்தி ராஜ்பகதூரின் கழுத்தை வளைத்துக் கொண்டான். அழுகை பீறிட்டுக் கொண்டு வந்தது. ''தம்பி, தம்பி!...எனக்கு உடன் பிறந்தான் யாருமில்லை...நீதான் அவன்...தம்பீ!''—பேச்சுத் திணறி மீண்டும் மயங்கி விழுந்தான் குமார்.

மீண்டும் அருவிக் கரையோரமாகவே இந்தப் புனிதயாத்திரை தொடங்கியது. கனவும் நினைவுமற்ற ஏதோ ஒரு நிலையில், ராஜ்பகதூரின் தோளில் குமார் தொங்கிக் கொண்டிருந்தான். அப்போது சரசரவென்று யாரோ காட்டுக்குள் ஓடும் சத்தம் கேட்டது. ராஜ்பகதூர் குமாரைத் தூக்கிக் கொண்டே ஓடினான்.

சுய நினைவு வந்தது குமாருக்கு, உடல் முழுதும் கட்டுக்கள் போட்டிருந்தார்கள். முகாமின் ராணுவ ஆஸ்பத்திரி அது. குமாருக்குப் பக்கத்துக் கட்டில்களில் காயம் பட்ட வீரர்கள்

சிலர் கிடந்தார்கள். அருகில் குமாரின் நண்பன் ஆறுமுகம் நின்று கொண்டிருந்தான்.

"ராஜ்!...ராஜ் எங்கே?" என்று கேட்டான் குமார்.

"நமது காவல் வீரர்கள் அருவிக் கரையைத் தாண்டி வந்த போது, அங்கே உன்மீது விழுந்து கிடந்தான் ராஜ்பகதூர்; உடலில் உயிர் இல்லை. அவனுக்குப் பத்தடி தூரத்தில் ஒரு சீனனின் சடலமும் கிடந்தது. இருவரும் ஒரே சமயத்தில் ஒருவரையொருவர் சுட்டுக் கொண்டிருக்க வேண்டும். காட்டில் ஒளிந்து கொண்டிருந்த சீனர்கள் சிலரையும் நம் வீரர்கள் சுட்டிருக்கிறார்கள்."

குமார் எங்கோ தொலை தூரத்தில், கூடாரத்துக் கப்பால் தெரிந்த கானகத்தை ஊடுருவிப் பார்த்தான். ஒன்றுமே பேச வில்லை அவன். கண்ணீர் அவன் இரத்தத்துடன் இரண்டறக் கலந்துவிட்டது.

"வீட்டிலிருந்து நல்ல செய்தி வந்திருக்கிறது" என்று கூறி ஒரு கடிதத்தைக் குமாரிடம் நீட்டினான் ஆறுமுகம். அவன் மனைவிக்கு ஆண்குழந்தை பிறந்திருப்பதாகவும், அது குமாரையே உரித்துக்கொண்டு வந்திருப்பதாகவும் செய்தி.

நீண்ட பெருமூச்சு விட்டு, "ஆறுமுகம், நான் சொல்வது போல் ஒரு பதில் எழுது" என்றான் குமார். "என் மகனுக்கு ராஜ்பகதூர் என்று பெயர் வைக்கச் சொல்...அணுவளவு ஆறுதல், அவன் பெயரை அடிக்கடி கூப்பிடுவதாலாவது எனக்கு ஏற்படும்."

"தமிழ்ப்பெயர் இல்லையே இது?" என்று குறுக்கிட்டான் ஆறுமுகம்.

வேதனையோடு சிரித்தான் குமார். "ராமன், கிருஷ்ணன், கைலாசம் என்றெல்லாம் தமிழ்நாட்டில் காலங்காலமாகப் பெயர் வைத்துக் கொண்டிருக்கிறார்களே, ஏன் தெரியுமா? ஆயிரம் வேற்றுமைகளுடைய நம் தேசத்தில் அடிப்படையான ஒரு பண்பாடு வலிமையாக இழையோடுகிறது. எனக்கும் உனக்கும் இமயமலை சொந்தம். அதனால் நாம் அதைக் காக்க உயிர் கொடுக்க வந்திருக்கிறோம். அது போலவே கன்யாகுமரியும் ராமேச்வரமும் ராஜ்பகதூருக்குச் சொந்தம்—ராஜ்பகதூர் என் ரத்தத்தின் ரத்தம்; உயிரின் உயிர். அவனும், நானும், நாமும் ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகள்... நெடுங்கால உறவு இது.— நீ எழுது!"

ஆறுமுகத்தின் கண்களிலும் நீர் பொங்கியது. அவன் மள மளவென்று கடிதம் எழுதினுன். அப்போது குமாரின் வாயிலி ருந்து பாரதியின் பாடல் உருக்கத்துடன் வெளிப்பட்டுக் கொண் டிருந்தது.

'' சண்டை செய்தாலும் சகோதரரன்றோ ?
சகோதரரன்றோ ?
சீனத்தராய் விடுவாரோ ?...
சீனத்தராய் விடுவாரோ !......''

***

18

# அமுத நீர்

ஆறுமுகப் படையாச்சி வீட்டுக்குள் நுழைந்தபோது, மனைவி வள்ளியம்மை வழக்கம் போல்தான் வரவேற்பு அளித்தாள்.

"சொன்ன, கேட்டாத்தானே, அத்தனை பணத்தை, உருப் படாத மண்ணுன்னு தெரிஞ்சு, அதுலே போட்டுட்டு இப்படி மாடா ஒளைக்கணுமா ?"

ஆறுமுகப் படையாச்சி வயலைச் சுற்றிவிட்டு அப்போதுதான் திரும்பியிருந்தார். மனைவியின் சொற்களைக் கேட்டுச் சிரித்தபடி, வலதுதோளில் இருந்த துண்டை உதறி, இடப்பக்கம் போட்டுக் கொண்டார். "எனக்குப் புரிகிறது உன் ஆதங்கம். நான் இன்னும் சாப்பிடலை. புருசன் பட்டினின்னு பெண்சாதி துடிக் கிறவள்னு எனக்குத் தெரியாதா ? ஆனு, ஆம்பிளைங்க எடுத்த வேலையைத் தீவிரமா செய்யணுங்கறதை நீங்க மறந்துடக் கூடாது" எனக் கூறியபடி கிணற்றடிக்குச் சென்றுவிட்டார்.

கிணற்றில் ஊறும் புதுநீரை மொண்டு மொண்டு இழுத்துக் குளிப்பதில் அவருக்குப் பேரானந்தம். குளித்துவிட்டு, அவரையே தாயாக நினைத்து அன்பு வரவேற்பு அளிக்கும் ஆவினங்களுக்காக வைக்கோல் புரியை எடுத்துக்கொண்டு கொட்டிலுக்குச் சென்றார். அவற்றிற்குத் தன் கையினால் ஊட்டிய பிறகே, அவர் உணவு உண்பார்.

"சாப்பிடலாமா ?"

குரல் கேட்டதும் வள்ளி திடுக்கிட்டுத் திரும்பினாள். "என்னங்க இது, நெத்தியிலே துண்ணூறு கூட நல்லாப் படியும்

படி வெக்கலே. தேவாரமும், திருப்புகழும் படிக்கற நெனப்புக் கூட மறந்துடுச்சாங்காட்டியும்? அதுக்காவதான் இந்த உருப் படாத நெலத்தைக்கட்டி அழுவறீங்களேன்னு அடிச்சுக்கறேன். பசி வந்தா பத்தும் பறந்துடும்.''

''நான் சொன்னு உனக்குப் புரியாது வள்ளி. நீ என் பசி யைக் காட்டறே. நான் உன் பசியைக் காட்டறேன். தேவார மும் திருப்புகழும் முடிச்சுட்டு நான் வரும் நேரத்துலே நீ பசியிலே துவண்டு படுத்திருப்பே, என் மனசு நோவும்.''

''இந்த எண்ணம் வயல்லே சுத்தறப்போ இருக்கணும்.'' மடக்கிவிட்ட பெருமையும், கணவரின் அன்பு முழுமையும் அடைந்துவிட்ட பெருமையும் கலக்க வள்ளி கூறினுள்.

''நீ சொல்றதை ஒத்துக்கறேன். உண்மையாச் சொல் றேன். பட்டினத்துலே இருக்கறப்போ பிடிச்சு இளுக்கும் சக்தி இந்த மண்ணுக்கு இருக்கும்னு நான் நெனச்சதே கிடையாது. வயல்லே நுளைஞ்சதும் தாய் நெனப்புத்தான் நெஞ்சுலே முச்சூடும் இருக்கு! உன்னைப் பத்திக்கூட நெனப்பு வர்ரதில்லே. எனக்கு என்னவோ இந்த நிலம் மண்பூமியாத் தோணறதில்லே. என்னைப் பெத்தெடுத்த தாயாக ஒருபக்கம் தெரியுது. பொறவு ஒரு சமயத்திலே நாம் வணங்கற தெய்வமாத் தோணுது. அதுக்காவ தான் என் சினேகிதரு ஒருத்தரு 'தாயும், தெய்வமும் ஒண்ணு; கண்ணுலே தெரிவது மண்ணு'ன்னு சொல்லுவார் போலிருக்கு. மனுசனுக்கு உணவு தர்ரதுலே மூணுபேரும் ஒத்தாப்பலே இருக் காங்களே!''

''சும்மா மண்ணு மண்ணுன்னு, அடிச்சுக்கிட்டே இருங்க; இந்த உப்புமண்ணுக்கும் களர் மண்ணுக்கும் இம்மாம் மதிப்பு வெக்கறவங்க, வெளைச்சல் நிலம் வாங்கிப் போட்டிருந்தா, என்ன பேசுவீங்களோ!''

கடைசியிலே கணவரைத் தேவாரமும், திருப்புகழும் படிக்கச் சொல்லிவிட்டுத்தான் வள்ளியம்மை கணவருக்கு அன்னம் படைத்தாள்.

சாப்பாடு முடிந்தபிறகு வெற்றிலைப் பெட்டியைக் கணவரின் அருகில் வைத்தாள், வள்ளியம்மை. ''காலையிலே முத்துக்குமரு வந்தாரு.''

''குமருவா வந்தாரு? அந்த நேரத்துலே நான் வூட்டுலே இருக்கமாட்டேன்னு அவருக்குத் தெரிஞ்சிருக்கணுமே!''—வாயில் வெற்றிலையைப்போட்டு மென்றபடி ஆறுமுகம் கூறினுர்.

''அதெப்பத்தி எனக்குத் தெரியாது. வந்தாரு, நீங்க இல்லேன்னதும் திண்ணெலே குந்திக்கிட்டாரு...ரொம்பக் களைப்

பாக் காணப்பட்டாரு. அதனுலே ஒரு கிளாஸ் பால் கொண்டு வந்து திண்ணெலே வெச்சேன்.''

''நல்ல வேலெசெய்தே!'' எனக்கூறிய படையாச்சி, மனேவியை நோக்கினர். அவள் முகமே பால்வடியும் கனிவுக்குப் பொருள். இத்தனேகாலம் பட்டினக்கரையில் கணவரோடு வாழ்ந்தும், கிராமத்துப் பண்டைய நாகரிகத்தின் சின்னமாகத் தான் விளங்கினுள். காதில் சிவப்பு ஓலேயும், மேலுக்குத் திருகும் கழற்றவே மாட்டாள். மஞ்சள் பூச்சின் ஒளியோடு நெற்றியில் பெரிய குங்குமப்பொட்டு. தலேக்கொண்டை பக்கவாட்டிலிருந்து மாறியதே கிடையாது. மூக்கில் வெள்ளே மூக்குத்தி. கழுத்தில் இரண்டு வடச் சங்கிலியோடு தடித்த மஞ்சள்கயிறு பிசுக்கு ஏருமல் இருக்கும். கழுத்தைப் பிடித்தாற்போல் வெட்டி, முழங்கை அளவுக்கு நீட்டிய கையுடன் ரவிக்கை. உடலில் ஜாதி வழக்கப்படி சுற்றிய கைத்தறிப்புடவை. அது எட்டு கஜம். கைகளில் இறுக்கிப்பிடித்த காப்பு. இது நாள்வரை வேறு நகையோ, பட்டுப் புடவையோ அவள் கேட்டிருக்கவில்லே. முகத்தில் எப்போதும் புன்முறுவல் என்று சொல்லமுடியாது, ஆனுல், எக்காரணம் கொண்டும் கோபிக்கமுடியாத கனிவுநிறைந்த ஆழம். கணவரோடு சண்டையிடுவாள். அவர் வேளா வேளேக்குச் சாப்பிடாவிட்டால்...அவர் சாப்பாட்டைத் தாமதமாக்கிவிடும் வயல்மீது அவளுக்குக் கோபம்வரும். கனிவும் குழைவும் பரிவுமாக அந்த மங்கை முகத்தை எப்போதும் பார்த்துக்கொண்டிருப்பார் படையாச்சி. ஐம்பது வயசுக்கான தொள தொளத்த சதையோடு உள்ளமும் நாளுக்கு நாள் நிரம்பி வழியும் அந்த உருவத்தில் அவளுக்குப் பற்று.

உட்கார்ந்திருந்த வள்ளியம்மை சுவரோடு சாய்ந்து படுத்துவிட்டாள்.

''வள்ளியம்மை, நானே போய்க் குமருவைப் பார்த்துட்டு வரேன். நீ கதவைத் தாளிட்டுப் படு'' எனக்கூறிய படையாச்சி வெளியே கிளம்பி விட்டார்.

வீட்டைத் தேடி முத்துக்குமரு வந்த காரணம் அவருக்குத் தெரியும். தம் மனக் கொதிப்பைக் கொட்டத்தான் வந்திருப்பார். முத்துக்குமரு ஒருவருக்கே மதுரைச் சீமையிலே—அந்த வட்டாரத்திலே அத்தனே நிலமும்...சொந்தமாக இருந்தது...உவர் நிலமும் களர் நிலமுமாக அத்தனேயும் பரம்பரைச் சொத்துத் தான். அவருக்கு இந்த நிலத்தைக் கவனிக்க வேண்டிய அவசியம் இருக்கவில்லே. தந்தை தான் இருந்தவரை வியாபாரம் என்று செய்துவிட்டு நான்கு வருடங்களுக்கு முன்புதான் கண்ணே மூடினர். தந்தை இறந்த பிறகும் வயிற்றுப் பிழைப்புக்காக

நிலத்தை எதிர்பார்க்க வேண்டிய அவசியம் இருக்கவில்லை. மூத்த மகன் சென்னையில் எஞ்சினீயராக இருந்தான். இளையவன் தாத்தாவின் வியாபாரத்தைப் பம்பாயில் நாட்டினுன். எடுத்த எடுப்பில் கொள்ளை லாபம். அங்கேயே தங்கிவிட்டான். இரு பிள்ளைகளும் தந்தைக்குப் பணம் அனுப்பி வந்தனர். தங்களுடன் வந்திருக்கும்படி பெற்ருேருக்கு அவர்கள் என்றுமே அழைப்பு விடுத்ததில்லை. பெற்ருேரைப் பார்க்க எப்போதேனும் அவர்களே வருவார்கள்.

கவனிப்பாரற்ற நிலத்துக்கு ஆறுமுகத்திடமிருந்து பேரம் வந்ததும் முத்துக்குமரு அதிசயித்து நின்று விட்டார். உவர் மண்ணையும், களர்மண்ணையும், பயிரிடுவதற்கு ஒருவர் வாங்கு வதென்ருல்...பேரம் அதிகம் பேசவில்லை. சொன்ன விலைக்கு விற்றுவிட்டு ''நல்ல ஏமாளி!'' என மனைவியிடம் கூறிச் சிரித்துக் கொண்டார். ஆனுல் பணம் அவர் கையில் தங்கவில்லை. புத்திரர் கள் ஏதோ சாக்குச் சொல்லி பங்கு போட்டுவிட்டனர்.

முத்துக்குமரு நினைத்தபடி ஆறுமுகம் ஏமாளியாக இருக்க வில்லை. ஆறுமுகத்தைப் பற்றிக் குமருவுக்கு அதிகம் தெரியாது.

பெற்ருேரற்ற அநாதையான ஆறுமுகத்தை எட்டாவது வரை படிக்க வைத்தவர் அவருடைய மாமன். பட்டினக் கரை யில் துணிச்சல் ஒன்றையே மூலதனமாக வைத்துப் பல சிறு கடை களில் எடுபிடி ஆளாக அமர்ந்து பிறகு பெரிய பட்டறைகளில் பெரிய ஆளாக நின்று, கடைசியில் சொந்தத்தில் ஆறுமுகம் தொழில் ஆரம்பித்தபோது அவருக்குத் துணை ஊக்கமும் உற்சாகமும்தாம். வெற்றியைக் கைப் பிடித்த நேரத்தில் மாமனின் ஒரே மகள் வள்ளியம்மை வாழ்க்கைத் துணைவி யானுள். இன்று வரை குடும்பத்தில் அவ்விருவருமே குழந்தை கள். தொழிலில் முன்னுக்கு வந்துவிட்டவருக்கு முதலில் உற்சாகம் இருந்த போதிலும், வயதும் தொழிலும் பிணைந்து ஏறியபோது லைசன்ஸ், கோட்டா, ஏற்றுமதி இறக்குமதி, வரிச் சள்ளைகளோடு வேலை நிறுத்தம் தொழிற் சங்கம் எல்லாமாக அவரை அயர வைத்துவிட்டன. எடுத்த தொழிலில் பழக்கம் ஏற்பட்டுவிட்டதில் தனித்தவோர் அலுப்பு; முயற்சிக்கு இடமில்லை.

அப்போதுதான் அவருக்குத் திடீரென அந்த எண்ணம் தோன்றியது. நாட்டின் உணவும் பற்ருக்குறையைத் தீர்க்க, தரிசாகக் கிடக்கும் நிலங்களை வளர்பூமியாக்கும் பணியில் ஈடு படத் தலைவர்கள் விடுக்கும் வேண்டுகோள் அவர் மனத்தில் பதிந்தது. உடனே, அவர் தன் கம்பெனியை விற்று, வந்த பணத்தில் பாதிப் பணத்தை மனைவியின் பெயருக்குப் பாங்கில்

கட்டிவிட்டு, மீதமிருந்த பணத்தில் உவர் நிலத்தையே வாங்கினர். பலர் அவர் செயலைப் பரிகசித்த போது 'மண்ணைப் பொன்னுக்கற ரஸாயன வித்தையைச் செய்து பார்த்தாப் போச்சு, கிடைச்சா எனக்கு லாபம். கிடைக்கலைன்னு நான் ஒருத்தனையும் வஞ்சிக் காம நஷ்டத்தை எனக்கே வெச்சுப்பேன் என்றூர்.'

முதலில், சிறிதளவு நிலத்தில் பரிசோதனை நடந்தது. நவீன முறையில் நிலத்தை உழுது பண்படுத்தி, விவசாய அதிகாரி களைக் கலந்து நவீன முறையிலேயே உரமிட்டார். பட்டினக் கரையை விட்டுக் கிராமத்தோடு குடியேறி நிலத்தை அருகிலி ருந்து பயிரிட்டார்.

இதுவும் மாயமோ, மந்திரமோ! நோஞ்சான் குழந்தைக்குச் சத்துள்ள ஊட்டம் கொடுத்து வலிமையாக்கி விட்டது போலல்ல வோ இருந்தது! ஆறுமுகப் படையாச்சி, பெற்ற தாயை அறிந் திருக்கவில்லை. விலை கொடுத்து வாங்கிய உவர் மண்ணையும் களர் மண்ணையும் தாயாகப் பாவித்தார்; உருக்குலைந்து படுத்து விட்டிருந்த தாயை மெல்ல அரவணைத்து, ஆறுதலும் அன்புமாக ஊட்டச் சத்து அளித்து வலிமைக்கு உதவும் மகனுக விளங்கினர்.

பூமித் தாயின் கண்களில் அன்பு நீர் சுரந்தது. ஊட்டம் கண்டவள் வஞ்சித்துவிடுவாளா! செழிப்பும் வளமையுமாகக் கதிர்கள் ஆடி ஆடி மகிழ்ச்சியோடு களிக்கும் பருவத்துக்கான அறிகுறி கண்டது. இந்த அற்புதக் காட்சியைக் கண்டு ஆனந்தம் எய்த நிதமும் பெரும் பொழுதை வயலிலேயே கழித்தார் ஆறுமுகம். கணவரின் வெற்றியில் வள்ளிக்கும் ஆனந்தம் இல்லாமலா இருக்கும்? ஆனல், கணவருடைய உழைப்பல்லவோ அவளை நெஞ்சுருக வைக்கிறது!

முத்துக்குமருவுக்கு நெஞ்சே வெடித்துவிடும் போல் இருந் தது. இந்த மலட்டு மண்ணை விற்று, தான் லாபம் கண்டு விட்டதாக இறுமாந்திருக்கும்போது, 'இதோ பாரடா, நான் தாய்மையின் மகிழ்ச்சியில் பொங்குகிறேன்!' என்றல்லவோ ஆறுமுகத்தின் கை அணைப்பில் பூமித்தாய் அவரைப் பார்த்துச் சிரிக்கிருள்! சிறு பரிசோதனை செய்த நிலத்திலிருந்தே ஆறு முகம் சென்ற வருடமே களஞ்சியம் வழிய நிரப்பிவிட்டபோது, முத்துக்குமருவுக்கும் அன்பளிப்பாகக் கொஞ்சம் கொடுக்கத் தான் செய்தார். அதன் பிறகு மனைவி மீனுட்சியின் நச்சரிப் பில் இந்நாள் வரை உழப்படாத தன் மிகுதி நிலத்தில் முத்துக்கு மரு ஏர் கட்டி உழுதார், விதை விதைத்தார். ஆனல், ஆறு முகப் படையாச்சியிடம் கனிவுள்ளம் கண்ட பூதேவி தன்னிடம் ஏன் காட்டவில்லை? உழப்பட்ட நிலம் வளமே காணுமல் அல்லவோ நிற்கிறது! இந்தப் பூமித்தாய்க்கு இத்தனை வஞ்ச னையும் உண்டோ!

ஆறுமுகப் படையாச்சி குமரு வீட்டின் திண்ணையில் அமர்ந்த படியே, "அண்ணுச்சி!" என்று குரல் கொடுத்தார்.

குமரு வெளியே வந்தார். அவருடன் அவர் வேலையாள் கந்தனும் வந்தான். குமரு திண்ணையில் அமர்ந்ததும் கந்தன் திண்ணைக்கு அருகில் ஓரமாக நின்றுகொண்டான். ஆறுமுகம் கந்தனை ஏற இறங்க நோக்கினுர். நல்ல வலிவுள்ள உடல். அடர்ந்த மீசையே அவனுடைய துணிச்சலுக்குச் சான்று. உருண்டு திரண்டு மார்பு. சதைப்பற்றுள்ள கைகள். இடுப்பில் மூலக்கச்சமும் தோளில் ஒரு துண்டும் தலையில் முண்டாசும் தாம் ஆடைகள். வயது முப்பதிலிருந்து நாற்பதுக்குள் இருக்கலாம். மணமாகாத காரணம் அவனுக்கே தெரியாது. ஒரே ஒரு சகோதரன் பழநி. அவன் சேனையில் சேர்ந்து கொண்டான். சீனர்கள் படையெடுப்பை எதிர்க்கும் பணியில் அவன் தன் உயிரை இழந்துவிட்டான். வீட்டில் அவனை நம்பி வாழும் தாய் அங்கம்மா. கந்தன் வெகு காலமாக முத்துகுமருவிடம் வேலை செய்பவன், மிகுந்த எசமான விஸ்வாசமுள்ளவன்.

"வீட்டுக்கு வந்திங்களாம்..."—ஆறுமுகம் ஆரம்பித்தார்.

"ஆமாம்... உங்க பேச்சைக் கேட்டு நெலத்திலே கை வெச்சேனே, அந்த வவுத்தெரிச்சலே உங்களையே நேரில் அழைச்சிட்டுப் போய்க் காட்டலாம்னு வந்தேன்!"—மடியிலிருந்த துண்டைத் தோளில் போட்டபடி குமரு ஆறுமுகத்தை நேராகப் பார்க்காமலே சினத்துடன் கூறினுர்.

ஆறுமுகம் கோபம் கொள்ளவில்லை. மெள்ளப் புன்னகை புரிந்தார். "அண்ணுச்சி, உங்க கோபம் எனக்குப் புரியுது. ஆனு இந்த நெலத்தை நீங்க தொழில் முறையிலே நோக்கணும். முன்னுக்குப் போட்டாத்தானே, பின்னுக்குப் பணம் பொரட்டலாம்."

அவர் கூறியது முத்துக்குமருவுக்கு நன்ருகப் புரிந்தது. நவீன முறையில் ஆறுமுகம் நிலத்தில் புகுந்திருக்கிருர். ஆயிரக் கணக்கில் செலவு செய்திருக்கிருர். ஆனுல், குமருவோ செலவு செய்ய முன்வரவில்லை. நவீன முறையைக் கையாளவும் இல்லை.

"கந்தா, தம்பி சொல்றதைக் கேட்டுக்கிட்டையா?"— குமரு கந்தனிடம் முறையிட்டார்.

"புரியுது எசமான், இந்தக் காலத்து மனுசங்களே பரம்பரை வழக்கங்களைத் தூக்கி எறிஞ்சிட்டுத் தானேபேசருங்க!"

ஆறுமுகமோ விடை பெற்றபடிக் கூறினுர். "அண்ணுச்சி, நான் சொல்றேன்னு தப்பா நினைக்கப்படாது. உடம்புக்கு நல்ல

டானிக் கொடுக்கறுப்பல நெலத்துக்கு ரஸாயன உரம் இடணும். காலத்துக்கு ஏத்தாப்பல, விஞ்ஞான முறையிலே மாறணும். கிராமத்துலே இருந்தவன் நகரத்துக்கு ஓடறுன். வெறகு வாங்கியா சமைக்கிறுன்? பொகைப் போக்கி இல்லாத அஞ்சு மாடி வீட்டுக்கு ஏத்தாப்பல காஸ் அடுப்பும் ஸ்டவ்வும் வெச்சுக்கறுன். உரம் வாங்கப் பணம் போடணும். ஒண்ணு போட்ட மூணு எடுக்கலாம். பணமில்லேன்ஞ இந்த நிலத்தையே அடமானம் வெக்கலாம். நான் மறைச்சுப் பேசலே. கைப்பணம் போதாம வயல் வேலைக்குக் கடனுலேதான் ஆரம்பிச்சேன். போன விளைச்சல்லே கொஞ்சம் அடைச்சேன். இந்த போகத்துலே முச்சூடும் அடைஞ்சுடும். இந்தாப்பா கந்தா, நீ உழைப்புக்கு உறுதியானவன். நெலத்துலே உரம் போடறுப்ல உழைப்பையும் போடணும்...''

ஆறுமுகம் விடைப்பெற்றுச் சென்றதுமே முத்துக்குமரு கந்தனைக் கோபத்துடன் நோக்கினுர்.

''ஏலே, கேட்டுக்கிட்டுதானே இருந்தே இந்நேரமும்?''

எசமானின் உறுமலில் கந்தன் கொஞ்சம் நடுங்கிவிட்டான்.

''ஐயா சொல்றது புரியலே!''

''உனக்கெப்படிடா புரியும்? எத்தனை எக்காளமும் பெருமையுமா பேசிகிட்டுப் போஞன் அவன். நேத்தி இந்தக் கிராமத்துக்கு வந்த பிள்ளை பேசறுன், நான் கேட்டு நிக்கும்படி பார்த்துக்கிட்டு நிக்கறயேடா... என் வீட்டு உப்பைத் திங்கறவன் நீ, எனக்கு வெக்கற மரியாதை நல்லாயிருக்குடா.''

''புரியுது எசமான்! அவரு பெரிய படிப்பா பேசறுரே. நான் எப்படி எதிர்த்து வாதாட முடியும்? அவரோட நிலமும் அவர் படிப்புக்குச் சாட்சியா நிக்குதே...''

சாட்சியா நிக்கும்டா, நிக்கும்! படிப்பா அவனுக்கு உதவுது? கை வெச்ச வேளைடா, பொன்னு பொழியறது. அந்தத் திமிருதான் நமக்கு உபதேசம் செய்ய வெக்குது. இவனைப் பார்த்து நான் நிலத்துலே கை வெச்சு நூத்துக்கணக்குலே மண்ணுக்கிப்பிட்டேன். என்னைப் பரிகாசம் செய்யல்ல இப்படி வந்துட்டுப் போறுன்! கடன் வாங்கணுமாமே கடன்! இவன் நெனப்பு எனக்குத் தெரியாதாக்கும்! கடன் வாங்கி நான் ஏலத்துலே நின்னுட்டா, அப்பாலே, அந்த நிலத்தையும் 'அபேஸ்' பண்ணிக்கணங்கறது எண்ணம்.''

கடைசி வார்த்தை கந்தனை நிமிரச் செய்தது. ''நெசமா அந்த எண்ணம் இருக்குமாங்க?''

"இல்லாம என்னடா? கை வைக்கற இடமெல்லாம் பொன்னுப்போற ராசிக்காரங்க எதைத்தான் செய்யமாட்டாங்க! உன்னையும் உழைக்காத சோம்பேறின்னு குத்திக் காட்டிட்டுப் போருன். நீயும் வெக்கமில்லாம கேட்டுகிட்டுத்தானே இருக்கே!"—முத்துக்குமரு அழுத்தமாகக் கூறியது கந்தனின் நெஞ்சைத் தட்டி எழுப்புவதுபோல் உணர்ந்தான்.

உழைக்காத சோம்பேறின்னு ஆறுமுகம் கூறினுர்?... அப் படித்தான் சொல்லியிருப்பாரோ... அப்படித்தான் இருக்கவேண் டும். இல்லாவிட்டால் அவன் உழைப்பைப்பற்றி அவர் எதற் காகப் பேசவேண்டும்? விளைச்சல் நிறையக் கண்டு விட்ட பெருமைதானே அப்படிக் குத்தலா பேசச் சொல்லியிருக்கும்...

கந்தன் யோசனையிலிருந்தபோதே குமரு மீண்டும் அவனைக் குத்திக் கிளப்பினுர்: "அவனுேட கொட்டத்தை அடக்கறத்துக் காகவாவது உன் உழைப்பையும் வலிமையையும் காட்டலா மேடா சோமாரிப் பயலே!"

குமரு கூறியது அவனுக்குப் புரியவில்லை. "கொட்டத்தை நம்ப எப்படிங்க அடக்க முடியும். கதிர் கட்டற கட்டமா யிடுச்சே!"

"போடா அசடு! இதுதான் சரியான சமயம்னு உனக்குப் புரிஞ்சிக்கத் தெரியலே. செங்கோடனையும் சேர்த்துக்கிட்டியாஞ ஒரே இரவுக்கு யானை புகுந்த கதையா நாசமாக்கிடலாமே. பகலுக்கெல்லாம் வயல்லே உக்காந்திருக்கிற படையாச்சி இரவு நேரத்துக்கு நடக்கறதை எப்படி அறிஞ்சுக்குவான். நீ கையாலே வெச்சுட்டா உன் பெயர் எடுபடாம பாத்துக்கலாமே!"

கந்தன் முதலில் தயங்கினுன். குமரு அவனைத் தூண்டி விடுவதில் சளைக்கவில்லை. "போடா, பயந்தாங்கொள்ளிப் பயலே! ஒவ்வொருத்தனும் மனுசனையே வெட்டிச் சாய்ச் சுட்டு வந்துடருங்க. நீ சும்மா வயல் வேலைக்குப் பயப்படறியே; நீயேவா செய்யப் போறே, நீ வெக்கற ஆளு செய்யப்போருன்..."

கந்தன் இணங்கிவிட்டான். செங்கோடனையும் பார்த்து ஏற்பாடு செய்துவிட்டான், கூலியும் பேசிவிட்டான். செங்கோ டனும் தன்னுடைய சகாக்களுக்குச் சொல்லி அனுப்பிவிட்டான்: அமாவாசை இரவுக்குப் படையாச்சியின் வயலில் அவர்கள் இறங்கி விடுவார்கள்.

முத்துக்குமரு ஆனந்தம் கொண்டார். "இத பார் கந்தா, இந்த வேலை நடக்கறப்போ நீ வயலுக்குப் போய் நிக்காதே. பொழுதுசாயுற வேளைக்கு ஆறுமுகம் வீட்டுக்குப்போய் நல்லவன்

மாதிரி பேச்சும் கொடுத்துட்டு வந்துடு. ஊர்க்காரங்களை நம்பி வயலுக்கு அவன் காவல் வெக்காதது நல்லதாப் போச்சு!''

குறிப்பிட்ட நாள். இருட்டின் கருமை படர்ந்தது.

ஆறுமுகப் படையாச்சி தன் வீட்டுத்திண்ணையில் அமர்ந்திருந்தார். வள்ளியம்மை திண்ணையை ஒட்டிக் கீழே அமர்ந்திருந்தாள்.

''வாப்பா கந்தா!''—இன்முகத்தோடு மகிழ்ச்சியுடன் வரவேற்றார் ஆறுமுகம்.

இந்த மகிழ்ச்சி காலையில் அழுகையாக மாறப்போகிறதே என, கந்தன் மனத்துக்குள் நினைத்துக்கொண்டான்.

''எங்கே இப்படி வந்தே!''—வள்ளியம்மை கேட்டாள்.

''சும்மாதானுங்க. எங்க ஐயா வூட்டுலே இம்மாநேரம் உங்களைப் பத்திதானுங்க பேசிக்கிட்டிருந்தோம்.''

''எங்களைப்பத்தியா என்ன விசயம்?''

''என்ன விசயம் இருக்கும்? நெலத்துலே போட்டபணம் விளைச்சல் காட்டுது. நமக்குக் காட்டலையேன்னு சொல்லிக்கிட்டிருப்பாரு...உம், நான் எத்தனை சொன்னாலும் அவருக்கு ஏற மாட்டேங்குது. நான் என்ன செய்யட்டும்..'' ஆறுமுகம் விசனத்துடன் கூறினார்.

''அக்காங் போங்க, உங்களைப்போல ஓடா தேய்ஞ்சு உழைக்கணுமாக்கும்... இருக்கிற பணத்துலே பாதிபோட்டுட்டு, போதாம கடனுக்கு உழறீங்க.. இந்த மண்ணு எம்மாம்பணம் சாப்பிட்டிருக்கும்!''

''புரியுது வள்ளி நீ சொல்றது...நான் அவரை முதல்லே முயற்சி பண்ணச்சொல்லலையே. நான் பண்ணிக் காட்டியாச்சு. அதனாலே நல்லமுறையிலே செய்து பாருங்கன்னு தானே சொன்னேன். நம்ம நிலத்துலே எப்படி விளைச்சல் காட்டியிருக்கு பாத்தியா?''

கந்தன் தனக்குள் சிரித்துக்கொண்டான். 'நாளைக் காலை இவரு எப்படிப் பேசுவார்னு பாக்கணும்.'

வள்ளியம்மை பதில் கூறாமலிருக்கவே ஆறுமுகமே மீண்டும் பேசினார்: ''மண்ணை வெச்சே பணமாக்கலாமே! என்னப்பா கந்தா, நான் சொல்றது உனக்குக்கூடப் புரியலையா?''

''நல்லாப் புரியுதுங்க. ஆனா, அவரு புள்ளை குட்டிக்காரருங்க. சொத்து சேர்த்தா சும்மா இருப்பாங்க, போய்டுச்சுனா

கூப்பாடு போடுவாங்களே!'' ஏதோ பதில் கூறவேண்டும் என்பதற்காகக் கூறினான் கந்தன்.

வள்ளியம்மையை இவ் வார்த்தை உறுத்தியிருக்கவேண்டும். ''கேட்டீங்களா அவன் சொல்றதை, பிள்ளையில்லாச் சொத்துன்னு காட்டறாங்க... அன்னிக்கு ஒருநாள் மீனாட்சியம்மா கூடப் 'பிள்ளைகுட்டியா பாழாப் போவுது; ஏதுக்கு இப்படி உழைக்கணும்'னு உங்களைப் பத்தி ஊர்க்காரங்க பேசிக்கறதா சொன்னாங்க.'' அவள் கண்களில் நீர் துளித்தது.

மனைவியின் கண்ணீரே ஆறுமுகத்தை விசையாகக் கிளப்பி விட்டிருக்க வேண்டும்! ''என்ன கந்தா, இப்படியா பேசிக்கிறாங்க. ஊரிலே ஒருத்தன் ஒரு நல்ல காரியம் செய்யணும்னா அதைத் தனக்காகத் தான் செய்துக்கணுமாடா? ஏண்டா, நானும்தான் கேக்கறேன், தனக்காக, தன் பெண்ஜாதி குழந்தைங்களுக்காகத்தான் செய்துக்கணுமா? தான் பெத்த மகனும் தன்னோட பெண்ஜாதியும் மட்டும்தான் குடும்பமா? இந்த ஊரையே, இந்த நாட்டையே, இந்த உலகத்தையே நம்முடையதா பாவிச்சுகிட்டுச் செய்ய நம்மாலே முடியாதாடா. உன்னோட அண்ணாச்சி பழநி இருந்தானே, அவன் சண்டையிலே உசிரை விட்டான். ஏதுக்காக விட்டான்? இந்தப் பொன்னான நாட்டைத் தன்னுடையதுன்னு, தன் குடும்பம்னு நெனச்சு தானேடா போனான்? அப்படிப்பட்டவங்களுக்கு நம்மாலே என்ன ஒத்தாசை செய்ய முடியும்னு நெனச்சுப் பார்க்கணும். இந்த நெலத்துலே விளையற ஒவ்வொரு மணி நெல்லும் எனக்குச் சொந்தமில்லேடா. இந்த நாட்டுலே இருக்கற ஒவ்வொருத்தனுக்கும் சொந்தம்...இந்த நெல் அரிசியா வந்து சோறு சமைச்சு ஒவ்வொருத்தரோட இலேலே விழறப்போ நாட்டுக் குழந்தைகளும், பெரியவங்களும் வயிறு நிறைஞ்சு ஆனந்தமாத் திங்கறதை நான் பார்க்கணும், சந்தோசப் படணும், அது தாண்டா என் கொள்முதல்...''

வள்ளி திடுக்கிட்டுக் கணவரை நோக்கினாள். இவர் இது வரை இவ்வளவு ஆவேசத்துடன் பேசினவரில்லை. நாம் கிளப்பி விட்டோமே என வருந்தினாள். ''இந்தாங்க, எதுக்கு நாம் இப்படிப் பொளியணும்? ஏதோ நான் கேட்டதை வாங்கி அந்தக் காது வழியா விட்டுட்டுப் போகாம...''—கணவரைத் தேற்ற முயன்றாள்.

''இந்தா வள்ளி. உன்னை மலடுன்னு சொல்லட்டும், என்னைக் குழந்தைக்கு வழியில்லாதவன்னு சொல்லட்டும், ஒப்புக்கறேன். ஆண்டவன் படைப்புக்கு நான் சண்டை போட்டுக்கலை. ஆனா, இந்த விளைச்சலை என் ஒருத்தனுக்குச்

காட்டறுங்களே, அதுதான் எனக்குப் பிடிக்கலே. திரும்பவும் அடிச்சுச் சொல்றேன். இத்தனையும் நாட்டு மக்களுக்கு, தாய் நாட்டின் என்னைப் போன்ற குழந்தைகளுக்கு வவுத்து உணவு. நான் நெல்லுக்குப் பணம் வாங்கப் போறவன்தான். ஆனு அத்தனையும் போட்டு மலட்டு மண்ணைத் திருத்தத்தான் போறேன். நாட்டைக் காக்கப் போர் முனைக்குப் போன சிப்பாய்ங்க திரும்பிப் பார்த்து 'ஐயா நாங்க நாட்டுக்கு உசிரைக் கொடுக்கிறோம். நீங்க என்ன செய்யப் போறீங்க'ன்னு கேட்டுட்டா நம்ப பதில் சொல்ல வேணுமா? 'நீங்க நாட்டைக் காக்க வலிமை பெற இந்தாங்க சோறு'ன்னு நம்ப தர வேணுமா? மேனாட்டுக்காரங்க ஆயுதங்களைத் தயாரிக்க விஞ்ஞானத்தை உபயோகிச்சா, நாம அமைதியை விரும்பி உணவு உற்பத்திக்கு விஞ்ஞானத்தை உபயோகிக்கலாமே! ஜப்பானிலே இந்த விவசாயத் தொழில்லே எப்படி முன்னேறிட்டாங்க!... கந்தா, என் மனசுலே பட்டதைச் சொல்றேன் கேட்டுக்க, இந்த மணி நெல்லும் வயல்லே விளையற தானியம் முச்சூடும் தாய்ப் பாலுக்குச் சமம். மக்களுக்கு ஊட்டத்தைக் கொடுக்கும் அமுத சத்து. பொறத்தியான் கீழே சாப்பாட்டுக்குக் கப்பரை ஏந்த வேண்டாம்...நம்ப பூமித்தாய், இந்தப் பூதேவி, மாபெரும் அம்மை, பிராட்டி நமக்கு அமுத நீர் பெருக்கத் தயாரா இருக்கறப்போ, அவளுக்கு ஊட்டம் கொடுக்க நாம் உழைக்க ஏனப்பா தயங்கணும்... கந்தா...க...ந்தா... அது அமுத நீர்... அ...முத நீர்...''

ஆவேசமாக ஆரம்பித்தவர் கடைசியில் குரல் அடைக்க நெஞ்சுருகி விம்மும் நிலைக்கு வந்துவிட்டார். அந்தப் பெரிய ஆண் மகனுக்கே கண்களில் நீர் துளித்தது. பேசமுடியாமல் மெள்ளத் தூணோடு சாய்ந்துவிட்டார். வள்ளியம்மை பதறிப் போய் அவர் அருகில் வந்தாள்.

ஆறுமுகப் படையாச்சி உள்ளே சென்று படுத்த பிறகு தான் கந்தன் அவ்விடத்தை விட்டு நகர்ந்தான்.

நடையில் தள்ளாட்டம். உடலில் சோர்வு. கண்களில் ஒளியே மங்கிவிட்டது போன்ற தோற்றம். உற்சாகமும் துடிப்பும் விடை பெற்று விட்டதான தள்ளாமை. கந்தன் ஒவ்வோர் அடியாக எடுத்து வைத்து மெல்ல மெல்லத் தன் வீட்டுப்பக்கம் சென்றான். நடு நடுவில் தயங்கித் தயங்கி நின்று விட்டான்.

'...நாங்க நாட்டுக்கு உயிரைக் கொடுக்கிறோம். நீங்க என்ன செய்தீங்க...'

வார்த்தைகள் ஆறுமுகப்படையாச்சி கூறியதாகவே இல்லை. அதோ பழநி...அவனுடன் விளையாடிய அண்ணன், தனக்குத்

தின்பண்டங்கள் கிடைத்தபோது பல்லால் கடித்துத் தம்பிக்குப் பங்கிட்டுக் கொடுத்த உடன் பிறந்தவன், தாய் அடித்தால் உடனே ஓடிவந்து அணைத்துத் தேற்றிய தமையன், 'அம்மா, தம்பிக்கு வவுறு நிறையச் சோறு போட்டு நல்லா பாத்துக்க' எனக் கூறி விடைபெற்று, 'எலே தம்பி, சுகமா இருக்கியா'ன்னு கடிதம் போட்டு வந்த சகோதரன்...அந்தப் பழநியா இப்படிக் கேட்டுக் கொண்டு நிற்கிறுன். தமையன் நாட்டையும் நாட்டு மக்களையும் காக்க உயிரைக் கொடுத்தவன் ... தம்பியோ ... மக்களின் உயிர்ப் பண்டத்தை நாசமாக்க வித்திட்டவன்...

''ஐயோ அம்மா!''—கந்தன் கூவினுன். தள்ளாடித் தள்ளாடி அவன் வீட்டை அடைந்தபோது நடு இரவுக்கு ஆகி விட்டது. வீட்டிலோ...

''ஐயோ அம்மா, ஏன் இப்படி ஒப்பாரி வெச்சு அழுது கிட்டிருக்கே!''

அங்கம்மா பெரியதாகக் கதறினுள். ''வந்தியாடா மவனே, அடுத்த கிராமத்திலே இருக்கிற உங்க சித்தாத்தா மகாலட்சுமி போய்டுச்சேடா. அவ புருசனுக்கு என்னடா பதில் சொல்லப் போறே?''

கந்தனுக்கு இடி விழுந்தது போலாயிற்று. லட்சுமியின் கணவன் வேலப்பனும் பழநியும் ராணுவத்திலே ஒன்றுகச் சேர்ந்தவர்கள். லட்சுமியின் பாக்கியம் என்று தான் சொல்ல வேண்டும், வேலப்பன் உயிரோடு இருந்தான். சென்ற வருடம் லீவில் வந்திருந்தான். குழந்தை பிறந்துள்ள செய்தி அறிந்து கந்தனுக்குத்தான் அவன் கடிதம் எழுதினுன்: ''கந்தா, லட்சுமி உனக்குச் சொந்தத் தங்கச்சி போல. அவளையும் குழந்தையையும் நீதான் நல்லா பார்த்துக்கணும்...'' கந்தன் அடிக்கடி சென்று லட்சுமியைப் பார்த்துவிட்டுக் குழந்தையை யும் கொஞ்சிவிட்டு வருவான். உடம்புக்கு ஒன்றில்லாமல் சுகமாக இருந்தவளுக்கு, திடீரென எப்படி முடிவு ஏற்பட்டது?

''என்னம்மா இது, திடும்னு இப்படிச் சேதி சொல்றே? நாலு நாள் முன்னுடி நான் போய்ப் பார்த்தப்போ நல்லாத்தானே இருந்தாள்?''

''சுகமாத்தாண்டா இருந்தாள். நம்பளைப் பாக்கலாம்னு சாயங்காலம் கிளம்பினுளாம். ரோட்டிலே வர்ர போது அந்தப் பாளாப் போன பஸ் சக்கரம் கயண்டு தறி கெட்டு ஓடி இவமேலே ஏறிச்சாம். அங்கேயே உசிரு போயிடுச்சாம். இம்மாம் நேரம் நீ எங்கே போனியோ. நீ வந்த பொறவு போகலாம்னு குந்தி கிட்டிருக்கேன்...''—அங்கம்மா கிளம்பி விட்டாள்.

"அம்மோவ், குழந்தை என்ன ஆச்சு?"—கந்தன் கேட்டான் படபடப்புடன்.

"அதையேண்டா கேக்கறே? இவவிழுந்த வேகத்திலே குழந்தை கையிலேந்து நழுவி தூர விழுந்திடுச்சாம். விழுந்த இடம் புல்லுத் தரை. அதனுலே குழந்தை பிழைச்சுடுச்சு... ஆனு, அந்தக் கண்ணராவியை ஏண்டா கேட்டுக்கறே, தாய்ப் பால் இல்லாம அது கத்தி விறைச்சுப்போவுதாம். அது என்னமா வயிறுநிறைஞ்சு பிழைக்கப் போவுதோ! அப்பன்காரன் எங்கேயோ மூலேலே கிடக்கருன். நான் போறேண்டா நீவா ..."—அங்கம்மா அந்த நடு இரவிலும் தனியாகவே புறப்பட்டு ஓடிவிட்டாள்.

கந்தனுக்குத் தாயின் வார்த்தைகளைத் தொடர்ந்து வேறு சொற்களும் அல்லவோ கேட்கிறது. "இந்த விளைச்சல் தாய்ப் பாலுக்கு சமானம்டா...மக்களுக்கு ஊட்டத்தையும் கொடுக்கும் அமுத சத்து...கந்தா...கந்தா...இது அமுத நீர்..." தாய்ப் பாலுடன் வளரும் குழந்தை பெரியவனுகும் போது பூமித் தாய் அளிக்கும் இந்த அமுத நீரில் அல்லவோ வளர்ச்சி காண்கிறுன்... அங்கம்மா கவலையுடன் கூறினுளே: 'குழந்தை என்னமா வயிறு நிறைஞ்சு பிழைக்கப் போவுதோ!' ஏன் வயிறு நிரம்ப வழி இல்லை? இந்தப் பூமிப்பிராட்டி எங்கே போய்விட்டாள்? அவளுடைய கை அமுதத்துக்கு வஞ்சனையும் உண்டோ... வஞ்சனை இல்லை. ஆனுல், இதோ படையாச்சியின் வளர்ப்பில் பூமி மாதா தயாராக்கும் அந்த அமுதநீர் இன்று மனிதனின் வெறிச் செயலில்...

கந்தனுல் அதற்கு மேல் யோசித்தபடி நிற்க முடியவில்லை; லட்சுமியோ குழந்தையோ அவன் நினைவில் அந்த விநாடிக்கு இல்லை. எங்கிருந்து கால்களுக்கு அவ்வளவு பலம் வந்திருக்கும் ...வெள்ள நீர் பின் தொடரும் காட்சியாக, 'மக்களுக்கு ஊட்டத்தைக் கொடுக்கும் அமுதம்' என்ற வார்த்தைகள் அவனைத் துரத்த, வேகமாக முன்னேறினுன்.

படையாச்சியின் வயலில் அப்போதுதான் செங்கோடனும் அவன் ஆட்களும் அரிவாளைத் தீட்டிக்கொண்டிருந்தனர்.

"எலே, யார்ரா அது, கை வெச்சீங்கன்னு தீத்துபுடுவேன்."—கந்தன் கூவிக்கொண்டே ஓடி வந்தான்.

ஆட்கள் திரும்பி நோக்கினர். அந்த அமாவாசை இருட்டிலும் செங்கோடன், கந்தனை அடையாளம் கண்டு கொண்டான். "என்ன கந்தா, உஷாரா இருக்கணம்னு சத்தம் போட்டுகிட்டு வரையாக்கும். இந்தச் செங்கோடன் கிட்டே ஒருத்தன் வாலாட்ட முடியுமா?"

கந்தன், கையிலிருந்த பெரிய கழியைக் கீழே தட்டினான்: ''சும்மா இரு செங்கோடா, உண்மையாதான் பேசறேன். படையாச்சியோட இந்த நிலத்திலே ஒருத்தரும் கை வைக்கப் படாது. வெச்சா நான் பொல்லாதவனாயிடுவேன்! நிலத்துலே கை வெக்காதே''

கந்தன் பேச்சு விளையாட்டில்லை என்பது செங்கோடன் புரிந்துகொண்டான். ஆனால், இத்தனை ஏற்பாட்டுக்குப் பிறகு கூலி வாங்காமல் போய் விடுவானா! ஆனால், கந்தனே ''...ம் வெட்டிச் சாய்ச்சு வவுத்துலே மண் போடற வேலைக்குக் கூலி கேக்கறியே, உனக்கு வெட்கமாயில்லே?'' எனக் கேட்டு விட்டான்.

செங்கோடன் புலிபோல் கந்தன் மீதே பாய்ந்துவிட்டான். கந்தனும் சளைக்கவில்லை. சத்தம்கேட்டு ஊர் மக்கள் வருவதற்குள் செங்கோடன் தன் கை அரிவாளினாலேயே கந்தனைக் காயப்படுத்தி ஓடிவிட்டான். செய்தி அறிந்து ஓடிவந்த ஆறுமுகப் படையாச்சி மூர்ச்சையடைந்து கிடந்த கந்தனை, தன் தோளிலேயே தூக்கிக்கொண்டு ஆஸ்பத்திரிக்கு எப்படித்தான் நடந்து சென்றாரோ!

ஊராரின் ஏச்சுப் பேச்சுக்கு ஆளாகாமலிருக்க முத்துக்குமரு இரண்டு நாட்கள் கழித்துக் கந்தனை ஆஸ்பத்திரியில் சந்திக்கச் சென்றார். முத்துக்குமருவைக் கண்டதும் கந்தனே பேச ஆரம்பித்துவிட்டான். ''எசமானுக்கு நான் துரோகம் செய்துட்டதா நெனப்பீங்க. நீங்க இட்ட உப்புலேதான் இந்தத் தேகம் வளர்ந்தது. ஒத்துக்கறேன். ஆனால் உடம்பு வேறு, மனசு வேறுன்னு தோணுது. உங்களை நான் ஏமாத்திட்ட துரோகத்துக்கு இந்த உடம்புக்குத் தண்டனை கொடுங்க, ஒத்துக்கறேன். ஆனா, அத்தனை வவுத்து சோத்தையும் காப்பாத்தாம என்னாலே இருக்க முடியலே. எங்க லட்சுமியோட குழந்தே வவுத்துக்கு அழுவறது, என்னை வெறியனாக்கிடுச்சு. தாய்ப் பாலுக்குப் பிறகு அமிர்தமா வலுவு தரும் இந்தத் தானியத்தைக் காப்பாத்திட்டதுமே எனக்குச் சந்தோசம் தாங்க...''

குமரு பேசவில்லை. நகர்ந்து விட்டார்.

அறுவடை முடிந்துவிட்டது. அமோகமான விளைச்சல், கந்தனும் ஆஸ்பத்திரியிலிருந்து திரும்பிவிட்டான். அவன் மேற்பார்வையில் வயலில் வேலை செய்த அத்தனை பேருக்கும் ஆறுமுகப் படையாச்சி விருந்துக்கு ஏற்பாடு செய்துவிட்டார். புரிந்தும் புரியாதவராகப் படையாச்சி பகைமைக் களையை எறிந்துவிட்டு நட்புரிமையுடனேயே குமருவுடன் பழகியபோது குமரு

நெகிழ்ந்துவிட்டார். படையாச்சியின் வீட்டு விருந்தில் அவரும் அல்லவோ கலந்துகொள்கிறார். அவர் மட்டுமல்ல, மனைவி இறந்துவிட்ட செய்தி அறிந்து ஓடிவந்த வேலப்பனும் இருக்கிறான். அவன் எவ்வளவு கூப்பிட்டும், கந்தன் தோளை விட்டுக் கீழே இறங்க தன் மகனைக் கோபிக்கவில்லை.

''பார்த்தீங்களா, சோறு போடறவன் கிட்டேதான் இதுக்குப் பிடிப்பு. எங்கிட்டே வரமாட்டேங்குது!''—வேலப்பன் மகனின் கன்னத்தைச் செல்லமாகக் கிள்ளியபடி கூறியபோது கந்தன், ''நானு சோறு போடறேன்? ஐயாவை நெனச்சுக்கோ, அவர் நிலத்துக் கேழ்வரகு கஞ்சியும் அரிசிச் சோறும் உன் மகன் வவுத்துலே!'' என்றான்.

''அப்படித் தப்பா பேசிடாதேப்பா!'' எனக் கூறிய படையாச்சி ஒரு பிடி மண்ணைக் கையில் எடுத்துக் காட்டினார். ''இதோ பாத்தியா, இந்தப் பூமித் தாயின் கருணையிலும் கனிவிலும்தான் நாம நிக்கிறோம்: இந்தத் தாயைக் காப்பாத்த வேலப்பனைப் போல வலிவுள்ளவங்க எல்லையிலே நிக்கறாங்க. நாம பயமில்லாம தாய்க்கு வலிவூட்டி, அவ கருணையிலே அவங்களையும் வலுவாக்கி, நம்பளும் பசியாத்தறோம். 'ஜெய் கிஸான், ஜெய் ஜாவன்'னு தெரியாமலா சொன்னாரு...''

இந்தப் பேச்சைக் கேட்டதுமே வேலப்பன் தலை வணங்கி நிற்க, கந்தன் நன்றிப் பெருக்குடன் தாய்நாட்டு மண்ணை நோக்குகிறான்.

—XX—

# 19

## யாருக்கு விரோதி?

ஆண்டுதோறும் கோடை விடுமுறைக்கு முன்னுல் 'பரீட்சை என்னும் பாதக'த்தை நடத்தி முடித்துவிடும் அதிகாரிகளின் புத்திசாலித்தனத்தை எண்ணி வியந்து கொண்டே, நக்கீரன் தன்னுடைய சொந்தக் கிராமமான தாழம்பேடுக்குப் புறப்பட்டான். ஏறக்குறைய இரண்டு மாத காலம் அங்கே எந்த வித மான சலனமுமின்றி அமைதியுடன் காலத்தைக் கழித்துவிட்டு வரலாம் என்று நினைத்தபோது அவனுக்கு எவ்வளவோ ஆறுதலாயிருந்தது. முன்னுலாவது அந்தக் கிராமத்தில் சிலர் கள்ளையும் சாராயத்தையும் குடித்துவிட்டு வந்து அங்கங்கே சண்டையிட்டுக் கொண்டிருப்பார்கள். இப்போது அதுவும் இருக்காது; 'காந்தி ராசா' புண்ணியத்தால்தான் மதுவிலக்குச் சட்டம் அமுலுக்கு வந்து விட்டதே!

இவ்வாறு எண்ணி மகிழ்ந்தவண்ணம் அவன் தன்னுடைய கிராமத்தை அடைந்தபோது இருள் சூழும் நேரம்; கிராமக் குடிசைகளெல்லாம் அநேகமாகப் புகைய ஆரம்பித்து விட்டன; குடிசைகள் புகைய ஆரம்பித்துவிட்டன என்ருல், அவற்றிலுள்ள அடுப்புகள் எரிய ஆரம்பித்து விட்டன என்று அர்த்தம்—அடுப்புகள் எரிந்தால்தானே அந்தக் குடிசைகளில் அடைபட்டுக் கிடக்கும் அப்பாவி ஜீவன்களின் அடி வயிருவது கொஞ்சம் நிரம்பும்?

புகைந்து கொண்டிருந்த குடிசைகளுக்கு இடையே புகையாமலிருந்த சில குடிசைகளும் இருக்கத்தான் இருந்தன. அவற்றைக் கண்டதும் நக்கீரனுக்கு என்னவோ போல் இருந்தது. 'கள்ளரக்கன் ஒழிந்த பிறகுமா இந்தத் தரித்திரம்?' என்று எண்ணி அவன் ஒரு கணம் ஏங்கினுன். மறுகணம், 'மதுவிலக்

கால் மட்டும் மக்களின் வறுமையைப் போக்கிவிட முடியா தல்லவா ?' என்று எண்ணியவனுய் மேலே நடந்தான்.

வழியில் ஒரு தேநீர்க் கடை குறுக்கிட்டது. அந்தத் தேநீர்க் கடையைக் கண்டதும் அதற்கு முன்னுல் அங்கே இருந்த கள்ளுக்கடை அவன் மனக்கண் முன்னுல் காட்சியளித்தது. ஆடலும் பாடலும் அடிதடிச் சண்டையுமாயிருக்கும் அந்த இடத்திலே, இப்போது அமைதி குடி கொண்டிருப்பதைக் கண் டதும் அவனுடைய அகமும் முகமும் ஒருங்கே மலர்ந்தன. தன்னை மறந்த நிலையில் அவன் தேநீர்க் கடைக்கு முன்னுல் சிறிது நேரம் அப்படியே நின்று விட்டான்.

கள்ளுக்கடை இருந்த நாட்களில் அங்கே கூடும் மனிதர்களை நக்கீரன் எத்தனையோ முறை கவனித்திருக்கிருன். அப்பொழு தெல்லாம் அவர்கள் அனைவரும் மனிதர்களாகவே தோன்றுவ தில்லை அவனுக்கு—அதே இடத்தில் தேநீர்க் கடை இருக்கும் இந்த நாளிலோ, அங்கே கூடியிருந்தவர்களெல்லாம் அவனுக்கு மனிதர்களாகவே தோன்றினுர்கள். இந்த அதிசயத்துக்கு மத்தி யில் இன்னும் ஓர் அதிசயத்தையும் அவன் காண நேர்ந்தது. அதாவது, தேநீரையும் அந்த 'மாஜி குடியர்கள்' கள்ளைப் போலவே பாவித்துக் கண்ணை மூடியவண்ணம் குடித்துக்கொண் டிருந்தனர்!—அந்தக் காட்சி பார்ப்பதற்கு வேடிக்கையாயிருந்த தோடு மட்டுமல்ல, வேதனையாகவும் இருந்தது.

அவர்களில் ஒருவன் இன்னெருவனை நோக்கி, ''என்ன, இசக்கிமுத்து அண்ணே! நம்ம பேச்சிமுத்துவைக் காணவே காணுேமே?'' என்று விசாரித்தான். ''அவனுக்கென்னப்பா, மவராசன்!'' என்றுன் இசக்கிமுத்து.

''நல்லாச் சொன்னே, போ! மவராசனுவது மண்ணுங்கட்டி யாவது! காலையிலேயிருந்து சாயந்திரம் வரை ரெண்டு ரூவாக் காசுக்கு அவன் குப்புக் கொல்லன் பட்டறையிலே என்னேடு சேர்ந்து இல்லே சம்மட்டி அடிச்சிக்கிட்டு இருந்தான்?''

இந்தத் தகவலைக் கேட்டதும், ''நிசமாவா, நல்லமுத்து?'' என்று வியப்புடன் கேட்டான் இசக்கிமுத்து.

''ஆமாங்கிறேன்!'' என்றுன் நல்லமுத்து.

''அப்படின்னு நான் நெனேச்சது சரிதான்; அவன் 'துத்தா' போட்டுகிட்டு வரத்தான் போயிருப்பான்!'' என்றுன் இசக்கி முத்து.

இந்தத் 'துத்தா' என்ற வார்த்தையைக் கேட்டதும் நக்கீரன் திடுக்கிட்டான். அந்தப் பக்கத்துக் குடியர்கள் 'துத்தா'

என்று சொன்னல் 'மது' என்று அர்த்தம். மதுவிலக்கைப் பற்றி என்னவெல்லாமோ எண்ணிக் கொண்டு வந்த அவனுக்கு இந்த வார்த்தையைக் கேட்டதும் எப்படி இருக்கும்?—முகத்தில் அசடு வழிய இசக்கிமுத்தையும் நல்லமுத்தையும் இமை கொட்டாமல் பார்த்தவண்ணம், மேலே என்ன பேசுகிருர்கள் என்று கவனித் தான்.

''என்ன சொன்னே, துத்தாவா? அது எங்கேப்பா இப்போ கெடைக்குது?'' என்று கேட்டான் நல்லமுத்து.

''உனக்குத் தெரியாதா?—அதானே பார்த்தேன்; தெரிஞ் சிருந்தாத்தான் நீயும் அவனேடு போயிருப்பியே?'' என்ருன் இசக்கிமுத்து.

''அவனைப் போல என்னையும் மானங்கெட்ட பயலுன்னு நெனேச்சுகிட்டே? நியாயமாப் பார்க்கப்போனு அந்தக் காந்தி ராசா பேச்சைக் கேட்டு நாமே கள் குடிப்பதை நிறுத்தியிருக் கணும். அதுதான் இல்லேன்னு, காலையும் கையையும் பிடிச்சுக் கிட்டுக் குழந்தைக்கு மருந்து ஊத்தருங்களே, அந்த மாதிரி நம்ம ராசாங்கம் கள்ளுக்கடையை எடுத்த அப்புறமாவது கள் குடிப்பதை நிறுத்தியிருக்கணும். ரெண்டுமில்லாம திருட்டுத் தனமா குடிக்கிறதுன்னு அது அக்குறும்பு இல்லே?''

''அக்குறும்புதான்: ஆனு அதைக் கேட்க யாரு இருக் காங்க?''

''ஏன் இல்லே? போலீசு ஜவானுங்க இல்லையா? அவங்க கிட்ட மாட்டிக்கிட்டா இல்லே சங்கதி தெரியும்?''

''ஊம், விட்டுத் தள்ளு! அவங்க இல்லே இப்போ அந்த அக்குறும்புக்காரனுங்ககிட்ட மாட்டிகிட்டு முழிக்கிருனுங்க!''

''என்ன!''

''ஆமா அண்ணேங்கிறேன்! நேத்து மேலத் தெருவிலே ரெண்டு பயலுங்க குடிச்சுப்பிட்டு வந்து சண்டை போட்டுகிட்டு இருந்தானுங்க. அந்தப் பக்கமாய் போன ரெண்டு ஜவானுங்க அவனுங்களைப் பிடிச்சிக்கிட்டுப் போக ஓட்டமா ஓடி வந்தாங்க! —அவ்வளவுதான், அண்ணே! அந்தத் தெருவாமிரெல்லாம் ஒண் ணுக் கூடிக்கிட்டு அவங்களை 'அடி, அடி'ன்னு அடிச்சுப் போட்டுட்டாங்க!''

''அப்பாலே?''

''இன்ச்சுபெட்டரு, அவங்க, இவங்க எல்லாம் வந்து, அந்தத் தெருவிலே இருந்த முரட்டுப் பயல்களையெல்லாம் பிடிச்சுகிட்டுப் போருங்க!''

''என்ன புத்தி கெட்ட பயலுங்க பார், அண்ணே! இவனுங்க பெண்டாட்டி பிள்ளே பிழைக்கத்தானே கள்ளு குடிக்க வேணும்னு சொல்ருங்க? அதைக் கேட்டு ஒழுங்கா இல்லாம திருட்டுத்தனமா சாராயம் காய்ச்சறதும், கள்ளு குடிக்கிறதும் என்ன வேலேங்கிறேன்? இப்படிப்பட்டவனுங்களே நாமே பிடிச்சுப் போலீசு ஜவானுங்ககிட்டே ஒப்படைச்சாக்கூடக் குற்றமில்லே தான்!—நீ என்ன சொல்றே, அண்ணே?''

''நல்ல ஆளப்பா, நீ! நம்ம பெண்டாட்டிமாருங்க கழுத்திலே தாலி இருக்கக்கூடாதுங்கிறது உன் எண்ணமா?''

''அட, நீ கூட இப்படிப் பயந்து சாவுறியே! ஆறிலுஞ் சாவு, நூறிலுஞ் சாவு!—அப்படியா நம்ம தலேயை அவனுங்க 'நறுக்'குன்னு கிள்ளி எறிஞ்சிடுவானுங்க?''

''ஒண்ணுந் தெரியாம நீ பாட்டுக்குச் சும்மாப் பேசாதே, யாரு காதிலாச்சும் விழுந்து வைக்கப் போவுது!''

''எல்லாம் தெரிஞ்சித்தான் பேசறேன்! எனக்கு இன்னும் என்ன தெரியணுங்கிறே நீ?''

''நிசமாச் சொல்றேன், அண்ணே! இந்தக் கிராமத்திலே திருட்டுச் சாராயம் காய்ச்சறதுக்கு யார் பணம் கொடுக்கிருங்க எங்கிற விசயம் உனக்குத் தெரிஞ்சா நீ இப்படியெல்லாம் பேசவே மாட்டே!—ஆமாம்!'' என்று முன்னும் பின்னும் பீதியுடன் பார்த்துக் கொண்டே சொன்னுன் இசக்கிமுத்து.

''அடடே! அந்த ஆளே உனக்கு மட்டுந்தான் தெரியும்னு நீ நெனேச்சுக்கிட்டிருக்கியா? போ அண்ணே, போ! அந்தக் குடி கெடுக்கும் மனுசனே எனக்கும்தான் தெரியும்!'' என்ருன் நல்லமுத்து அலட்சியமாக.

அதற்கு மேல் அவனுடைய வாயைக் கிண்டிவிட விரும்பாத இசக்கிமுத்து, ''ஐயையோ! நம்ம தலேக்கு ஆபத்து இல்லே வந்துடும் போல இருக்குது? அந்த மனுசன் பேரை நீ வெளியே கிளியே சொல்லிப்பிடாதேப்பா!'' என்று கிசுகிசுத்துக் கொண்டே அவனுடைய வாயை இறுகப் பொத்தினுன்.

நக்கீரன் உள்ளம் உடைந்தவனுய்த் தன்னுடைய வீட்டை நோக்கி மெல்ல நடந்தான். அப்போது அவனேயும் அறியாமல் அவனுடைய உள்ளத்திலிருந்து ஏனே ஒரு கேள்வி எழுந்து, எங்கெல்லாமோ சுற்றியலேந்து, பதிலேத் தேடித்தேடித் திரிந்தது. அந்தக் கேள்வி வேறெதுமில்லே; இதுதான்:

''சட்டத்தை மீறிச் சாராயம் காய்ச்சும் அந்தக் 'குடி கெடுக்கும் மனுசன்' யாராயிருக்கும்?''

இசக்கிமுத்துவும் நல்லமுத்துவும் தேநீர் குடித்து முடிந்ததும் பழைய கள் குடித்த ஞாபகத்தில் மீசையை ஒதுக்கி விட்டுக் கொண்டே தங்களுடைய குடிசைகளை நோக்கி நடந்தனர்.

அந்த சமயத்தில் ''மருக்கொழுந்து!'' என்னும் 'வையம் பெறும் வழங்கோசை' எங்கிருந்தோ வந்து, அவர்களுடைய காதில் 'கணீ'ரென்று விழுந்தது. அந்த ஓசையைத் தொடர்ந்து மருக்கொழுந்தின் வாசமும் வந்தது. அடுத்த விநாடி அவர்களுக்கு எதிரே மருக்கொழுந்து கூடைக்காரி ஒருத்தி, 'இட்ட அடி நோக' ஆனால் 'எடுத்த அடி கொப்புளிக்'காமல் 'வட்டில் சுமந்து மருங்கசைய' வந்துகொண்டிருந்தாள். அவளை வழி மறித்து நிறுத்தி, ''என்ன புள்ளே! இந்த மருக்கொழுந்து வாசம் உன்மேலேயிருந்து வீசுதா? இல்லே, மருக்கொழுந்திலேயிருந்துதான் வீசுதா?'' என்று கேட்டான் இசக்கிமுத்து.

''எப்படி வேணுமானாலும் வச்சுக்கேன்!'' என்று இடையிலிருந்த கூடையை எடுத்து அவனுக்கு எதிரே நீட்டினாள் அவள்.

உடனே இசக்கிமுத்து பத்துபைசாவுக்கு மருக்கொழுந்து வாங்கித் தன்னுடைய மடியில் வைத்துக்கொண்டு, நல்லமுத்தைப் பார்த்துக் கண் சிமிட்டினான்.

''என்ன அண்ணே, உனக்கும் சோக்குப் பொறந்துடிச்சிப் போல இருக்குது!'' என்றான் நல்லமுத்து.

''நல்லாயிருக்குது அண்ணே, நீ சொல்றது! நான் மட்டும் என்ன; உனக்கு மனுசனாகத் தோணலையா?''

''என்னியிலேருந்து நீ மனுசனானே, கள்ளுக்கடையை எடுத்த நாளிலேயிருந்துதானே?''

''நீ மட்டும் அதுக்கு முன்னாலேயே மனுசனாயிருந்தியா? போ அண்ணே, போ! வெளியே சொன்னா வெக்கக் கேடு; அழுதாத் துக்கக்கேடு. நம்ம அழகை நாமே எடுத்துச் சொல்லிக் கணுமாக்கும்?''

''சரி அண்ணே, நானும் மருக்கொழுந்து வாங்கிக்கிறேன். எனக்கும் சோக்குப் பொறக்கட்டும்!'' என்று சொல்லிக் கொண்டே நல்லமுத்தும் பத்து பைசாவுக்கு மருக்கொழுந்து வாங்கித் தன் மடியில் வைத்துக்கொண்டான்.

இருவரும் மேலே நடந்தனர்.

சிறிது தூரம் சென்றதும் எங்கிருந்தோ சாராய நெடி 'குப்'பென்று வந்து அவர்களுடைய மூக்கைத் துளைத்தது.

திடுக்கிட்டுத் திருதிருவென்று விழித்துக்கொண்டே இருவரும் சுற்றுமுற்றும் பார்த்தனர்—என்ன கண்ணருவிக் காட்சி இது! கண்ணுக்கெட்டிய தூரத்தில் பேச்சிமுத்து பேச்சுமூச்சற்றுக் கீழே விழுந்து கிடந்தான்!

இசக்கிமுத்து அவனை நெருங்கி இப்படியும் அப்படியுமாக இரண்டு உருட்டு உருட்டிப் பார்த்தான்; ஆசாமி அசைந்து கொடுப்பதாயில்லை. நல்லமுத்து ஒரு பெரும் பிரயத்தனம் செய்து அவனைத் தூக்கி உட்கார வைத்தான். அவ்வளவுதான் 'கபகப' வென்று வாயிலெடுத்து விட்டான் அவன்!

இதனால் அவனுடைய மயக்கம் கொஞ்சம் தெளிந்தது. கண்களை அகல விரித்துத் தனக்கு எதிரே இருந்தவர்களைப் பார்த்தான்; இருவர் நால்வராகத் தோன்றினர்!

அடுத்த கணம், "ஐயையோ, மாட்டிக்கிட்டேன்! நான் இந்தப் போலீசுக்காரப் பயலுங்ககிட்ட மாட்டிக்கிட்டேன்!" என்று அலறிக்கொண்டே அவன் எழுந்து ஓட முயன்றான்; முடியவில்லை!

"என்ன தம்பி, இந்த லோகத்திலேதான் இருக்கியா? இல்லே, வேறே எந்த லோகத்திலாச்சும் இருக்கியா?" என்று அவனுடைய தலையைப் பிடித்து ஓர் உலுக்கு உலுக்கிக் கேட்டான் நல்லமுத்து.

அவனுடைய கேள்விக்குப் பேச்சிமுத்து பதில் சொல்லவில்லை. அதற்குப் பதிலாக, "கபர்தார்! கபர்தார்!" என்று அவன் சம்பந்தமில்லாமல் உளறினான்.

'கபர்தார்!' என்ற வார்த்தையைக் கேட்டதும் இசக்கிமுத்தும் நல்லமுத்தும் ஒருவரையொருவர் ஜாடையாகப் பார்த்துச் சிரித்துக் கொண்டனர்.

"என்ன அண்ணே, விசயம் புரிஞ்சுதா?" என்று கேட்டான் இசக்கிமுத்து.

"ரொம்ப நல்லாப் புரிஞ்சுது!" என்று தலையைப் பலமாக ஆட்டினான் நல்லமுத்து.

அதற்குள் ஓரளவு சுய உணர்வு பெற்ற பேச்சிமுத்து தட்டுத்தடுமாறி எழுந்து நின்று இசக்கிமுத்தையும் நல்லமுத்தையும் மாறி மாறிப் பார்த்தான்.

"என்ன, தம்பி! நல்லாயிருக்குதா, ஞாயம்?" என்று அவனுடைய தோளைப்பிடித்துக் குலுக்கியவண்ணம் கேட்டான் நல்லமுத்து.

பேச்சிமுத்து தலையைச் சொறிந்துகொண்டே, "குரலைப் பார்த்தா நல்லமுத்து அண்ணனாட்டம் இருக்குது; ஆனா பார்க்கிற பார்வைப் பார்த்தா போலீசு ஜவானாட்டம் இருக்குதே?" என்று முணுமுணுத்தான்.

"பயப்படாதே, நல்லமுத்து அண்ணன்தான்!" என்றான் நல்லமுத்து.

"நல்லமுத்து அண்ணனா? நல்ல சமயத்திலே வந்து சேர்ந்தேப்பா! இதோ, உன் பக்கத்திலே நிற்கிறாரே, இவரு யாரு?"

"இசக்கிமுத்து அண்ணன்!"

"அப்படியா சங்கதி? நீங்க போலீசு ஜவானுங்களாக்கும்னு நெனைச்சி நான் பயந்தே போயிட்டேன்!" என்றான் பேச்சி முத்து.

"அப்படிப் பயந்துகிட்டு இந்த ஜோலிக்கு ஏன் போகணும் தம்பி?"

"என்னமோ போனேன்! மனசு கேக்குதா?"

"ஆமாம், ஆறுமாசம் உள்ளே தள்ளி வச்சாத்தானே மனசு கேக்கும்!"

"அப்படின்னா நீ என்னைப் போலீசு ஜவானுங்ககிட்ட காட்டிக் கொடுத்துடப் போறியா?"

"பின்னே, அப்போத்தானே உனக்குப் புத்தி வரும்?"

"அண்ணே, அண்ணே! உன் காலிலே விழுந்து கேட்டுக்கிறேன், அண்ணே! நீ என்னை வேணும்னா காட்டிக்கொடு; அந்தக் 'கபர்தார் ஐயா'வை மட்டும் காட்டிக் கொடுத்திடாதே!"

"கொடுத்தா என்ன தம்பி?"

"ஐயையோ, என் தலை போயிடும்! அவரு கொடுக்கும்போதே சொல்லித்தானே கொடுக்கிறாரு— 'அடே, உன்காசு எனக்குப் பெரிசில்லே! என்னமோ கஷ்டப்பட்டுக் களைச்சுப்போறியேன்னு கள்ளத்தனமா இந்தச் சாராயத்தைக் காய்ச்சிக் கொடுக்கிறேன். குடிச்சிட்டுப்போய்ப் பேசாம குடிசையிலே படுத்துக்கிடணும். வழியிலே தப்புத் தண்டாவுக்குப்போய்ப் போலீஸ்காரப் பயலுங்க கிட்ட மாட்டிக்கிட்டியோ, என் பேரை வெளியிலே சொல்லக் கூடாது. அடியோ, உதையோ, குத்தோ, ஜெயிலோ எதுவாயிருந்தாலும் நீதான் அனுபவிச்சித் தீரணும். அதிலே என்னையும் மாட்டிவிட்டியோ, உன் தலை என் புழக்கடையிலே கிடந்து

உருளும்—ஆமாம், கபர்தார்!' என்று ஒருதடவை ரெண்டு தடவையில்லே, ஓராயிரந்தடவை சொல்லித்தானே கொடுக்கிருரு ?''

''புழக்கடையிலே தலைகிடந்து உருளும்னு அவரு என்ன இந்த ஊருக்கு ராசாவா ?'' என்று கேட்டான் நல்லமுத்து.

''சங்கதி தெரியாதுபோலே இருக்குது ! போனவாரம் அவரு வீட்டுப் புழக்கடையிலே புதுசா ஒரு கிணறு தோண்டிஞங்களாம். தோண்டத் தோண்ட ஒரே மனுசனுங்க மண்டையும் எலும்புமா வந்ததாம்! அத்தனைபேரை அவரு அக்கம் பக்கம் தெரியாமே வேலைதீர்த்துப்பிட்டு இருக்காரு, தெரியுமா சங்கதி ?'' என்ருன் பேச்சிமுத்து.

இதைக் கேட்டதும் நல்லமுத்துக்குச் சிரிப்பு பொத்துக் கொண்டு வந்துவிட்டது; அவன் விழுந்து விழுந்து சிரிக்க ஆரம்பித்துவிட்டான்.

இசக்கிமுத்துவுக்கு அவன் சிரித்தது பிடிக்கவில்லை. ''உனக்கு எல்லாம் வேடிக்கையாகத்தான் இருக்கும்!'' என்ருன் அவன்.

''நீ கூடவா அண்ணே, அதைநம்பறே? விசயம் என்னுன்னு, அவரு வீடுஇருந்த இடத்திலே முன்னே இடுகாடு இருந்ததாம். அதுதான் அந்த இடத்திலே எங்கே தோண்டிஞலும் மனுசனுங்க மண்டையும் எலும்புமா கெடைக்குதாம்!'' என்ருன் நல்லமுத்து.

''இருந்தாலும் இருக்கும்; நீ வா, போவோம்!'' என்று சொல்லிக்கொண்டே அவர்கள் இருவரும் நடையைக்கட்ட, பேச்சிமுத்து அவர்களுக்குப் பின்னுல் 'பின்னல் நடை' நடந்து சென்ருன்.

* * *

மறுநாள் மாலை வழக்கம்போல் அங்கொன்றும் இங்கொன்றுமாக அந்தக் கிராமத்துக் குடிசைகள் அப்பொழுதுதான் புகைய ஆரம்பித்திருந்தன. அந்தக் குடிசைகளுக்கு முன்னுல், அதுவரை பசியை மறப்பதற்காகப் புழுதியில் புரண்டுகொண்டிருந்த குழந்தைகள், கூரைக்குமேலே 'குபு, குபு' வென்று வந்த புகையைக் கண்டதும் துள்ளி எழுந்து 'குதி, குதி' யென்று குதித்தன— ஆம், அன்றிரவு நிச்சயம் சோறு கிடைக்கும் என்ற நம்பிக்கை அந்தக் குழந்தைகளை அப்படி ஆட்டி வைத்தது;

'மாஜி குடியர்' களில் சிலர் தேநீர்க்கடையை நோக்கிச் சென்று கொண்டிருந்தனர்; அவர்களுடைய விழி 'ராஜவிழி' யா

யிருந்தது. இன்னும் சிலர் 'திருட்டுச் சாராயம்' குடிப்பதற்காகத் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே சென்றனர்: அவர்களுடைய விழி 'திருட்டுவிழி'யாயிருந்தது.

தலையை வாரிமுடிந்து கொள்ளக்கூட நேரமில்லாத-நேரமிருந்தாலும் விருப்பமில்லாத கிராமத்துப் பெண்களில் பலர், நீர்க்குடத்துடன் கிணற்றடியில்நின்று, தங்களுடைய தரித்திரத்தை ஓரளவு மிகையாகவே உருவகப்படுத்தி உலகத்துக்குக் காட்டிக் கொண்டிருந்தனர்.

மாலை நேரத்துப் 'புத்துணர்ச்சி அளிக்கும் பானங்க'ளுக்குப் பிறகு திண்ணைக் கச்சேரிகளிலும் மரத்தடிக் கச்சேரிகளிலும் கூடியிருந்த 'பரசிரம ஜீவிக'ளின் கூச்சலோ பெருங் கூச்சலாயிருந்தது. அவர்களுடைய கூச்சல் பொழுதுவிடிந்ததும் குளக்கரையில் மல்லாந்து படுத்துவிடும் மழைக்காலத்து மண்டூகங்களின் ஓசை நயத்தோடு கூடிய இரைச்சலை ஒத்திருந்தது.

மூன்று மாதங்களுக்கு ஒருமுறை, ஆறுமாதங்களுக்கு ஒரு முறை காசைக் கண்ணால் பார்க்கும் அந்தக் கிராமத்துச் 'சுயசிரம, ஜீவிக'ளோ, 'களைப்பாற்றும் கஞ்சித்தண்ணீ'ருக்காக அடுப்படியில் காத்துக்கொண்டிருந்தனர்.

உலர்ந்த வெற்றிலைச் சருகைப்போட்டுக் குதப்புவதிலேயே இந்த உலகத்தையும்—ஏன், சோற்றையும்கூட மறந்துவிடும் கிராமத்துக் கிழவர்களும், கிழவிகளுமோ தங்களுடைய பேரப் பிள்ளைகளை அழைத்துக் கொஞ்சம் வெற்றிலைப் பாக்கு நறுக்கித் தருமாறு வேண்டிக்கொண்டிருந்தனர்.

மாடும் மனிதனும் ஒன்றாக ஒய்வுபெறும் அந்த வேளையிலே, தன்னுடைய ஆற்றங்கரைப் பங்களாவின் அழகிய வராந்தாவிலே இப்படியும் அப்படியுமாக 'ராஜ நடை' போட்டுக்கொண்டிருந்தான் நக்கீரன்.

கிராமத்தின் ஒரு கோடியில் தனியாகஇருந்த அந்தப் பங்களாவின் முன்னால் அவனுடைய கவனத்தைக் கவருவதற்கு எத்தனையோ காட்சிகள் இருந்தன. எனினும் முதல்நாள் எழுந்த கேள்வி அவனுடைய உள்ளத்தில் ஏனோ இன்னும் இடம் பெற்றிருந்தது.

'சட்டத்தை மீறிச் சாராயம் காய்ச்சும் அந்தக் 'குடி கெடுக்கும் மனுஷன்' யாராயிருக்கும்?'

அவனுடைய சிந்தனை மேலும் மேலும் விரிந்து கொண்டே சென்றது. அவ்வாறு விரிந்த சிந்தனைக்கு ஒரு முற்றுப்புள்ளி

வைக்கத்தானே என்னவோ, 'மாஜி குடியன்' ஒருவன் அங்கே வந்து சேர்ந்தான்.

அவனைக் கண்டதும், "யார் அப்பா, நீ?" என்று கேட்டான் நக்கீரன்.

"பேச்சி முத்துங்க!" என்றான் வந்தவன்.

'பேச்சிமுத்து' என்ற பெயரைக் கேட்டதும் முதல் நாள் தேநீர்க் கடையில் நடந்த உரையாடல் நக்கீரனின் நினைவுக்கு வந்தது. அவன் ஒரு கணம் திடுக்கிட்டான். மறு கணம் இன்னொரு சந்தேகம் எழவே, "அது சரி; உனக்கு இசக்கி முத்தைத் தெரியுமா?" என்று கேட்டான்.

"தெரியுமுங்க?"

"நல்லமுத்து?"

தூக்கிவாரிப் போட்டது பேச்சிமுத்துக்கு, "தெரியுமுங்க........" என்று சொல்ல ஆரம்பித்தவன், "தெரியாதுங்க!" என்று குழறினான்.

அந்தப் பயல்கள் ஒரு வேளை 'கபர்தார் ஐயா'வைப் பற்றி இந்தப் பிள்ளையாண்டானிடம் சொல்லி விட்டார்களோ, என்னவோ என்ற சந்தேகம் வந்து விட்டது அவனுக்கு.

அந்த அப்பாவியின் நிலையை ஒருவாறு உணர்ந்த நக்கீரன் பேச்சை மாற்ற எண்ணி, "சரி, இப்போ நீ எதற்காக இங்கே வந்திருக்கிறே?" என்று கேட்டான்.

அதற்குள் தன்னை ஒருவாறு சமாளித்துக் கொண்ட பேச்சி முத்து, "என்ன சாமி, ஒன்றும் தெரியாத மாதிரிக் கேட்கிறீங்களே! இந்த நேரத்திலே, இப்படிப் பதுங்கிப் பதுங்கிப் பார்த்து முழிச்சுக்கிட்டு வேறே எங்கே வருவேனுங்க?" என்றான்.

"எனக்கு உண்மையிலேயே ஒன்றும் தெரியாது. நான் இந்த ஊருக்குப் புதுசு; நீயே விஷயத்தைச் சொல்லு?" என்றான் அவன்.

பேச்சி முத்துக்கு மீண்டும் சந்தேகம் வந்துவிட்டது. "அப்படின்னா நீங்க யாருங்க?" என்று கேட்டான்.

இந்த சமயத்தில் உள்ளே யிருந்து வந்த, ஒரு நெடிதுயர்ந்த மனிதர், "என்னடா பேச்சிமுத்து, இவனை உனக்குத் தெரியலையா? இவன் தான் என் மகன் நக்கீரன். பட்டணத்திலே படிச்சிகிட்டு இருந்தான்; இப்போ லீவிலே ஊருக்கு வந்திருக்கிறான்!" என்று அறிமுகப்படுத்தி வைத்தார்.

"அப்படியா சாமி, இவரு பட்டணத்திலே படிச்சிக்கிட்டு இருந்தவரா? அதான் இவருக்கு ஒண்ணுமே தெரியல்லே!" என்றான் பேச்சிமுத்து.

"ஆமாம், உன்னை நான் புழக்கடைப் பக்கமாகத் தானே வரச் சொன்னேன்? நீ ஏன் இந்தப் பக்கமா வந்தே?" என்று கேட்டார் அந்த ஆஜானுபாகு.

"அந்தப் பக்கமாத்தான் வந்தேன், சாமி! அங்கே இந்த நல்லமுத்துப் பய இல்லே. அவன் நின்னுக்கிட்டிருந்தான். அவனுக்கு நம்ம விசயம் தெரிவானேன்னு இப்படி வந்துட்டேன்!" என்றான் பேச்சிமுத்து.

"தெரிஞ்சா என்னடா? அந்தப்பய உன்னை வெல்லத்திலே வச்சி முழுங்கிடுவானா? அந்த மாதிரிச் சோனிப் பயல்களுக்கெல்லாம் நீ ஒண்ணும் பயப்பட வேணும். நாளையிலேயிருந்து நீ புழக்கடைப் பக்கமாவே வா; உன்னைப் போல எத்தனையோ பேர் அந்தப் பக்கமா வரப்போ, நீ மட்டும் இந்தப் பக்கம் வருவானேன்?" என்று ஊக்க மூட்டிய வண்ணம் அவனைப் புழக்கடைக்கு அழைத்துச் சென்றார் அவர்.

இப்போதுதான் எப்போது பார்த்தாலும் அங்கே பூட்டி வைக்கப்பட்டிருந்த ஓர் அறை நக்கீரனின் ஞாபகத்துக்கு வந்தது. முதல் நாள் இரவு அதைப் பார்த்த போது, 'அதற்குள் என்ன இருக்கிறது?' என்பதைத் தெரிந்து கொள்ள அவன் விரும்பவில்லை. இன்று தன்னுடைய தகப்பனார், பேச்சிமுத்தைப் புழக்கடைப் பக்கமாக அழைத்துச் செல்லவே, 'அந்த அறைக்குள் என்ன இருக்கிறது?' என்பதைத் தெரிந்து கொள்ள அவன் விரும்பினான்.

ஆனால், தன் மகன் தன்னுடன் வருவதைத் தகப்பனார் விரும்பவில்லை. அவர் அவனைத் தடுத்து நிறுத்தி, "இதெல்லாம் பெரியவங்க காரியம்; நீ ஒண்ணும் கண்டுக்கிடாதே! போ, போய் உன் வேலையைப் பாரு! இல்லாட்டா, ஏதாச்சும் ஒரு புத்தகத்தை எடுத்து வச்சுகிட்டுப் படி!" என்றார்.

"இருக்கட்டும், அப்பா! உங்களுடைய வேலையை நானும் தான் கொஞ்சம் பார்க்கிறேனே?" என்றான் அவன்.

"அப்படின்னா எனக்கும் அது சந்தோசமாத்தான் இருக்கும்; ஆனா இந்த விசயம் அக்கம் பக்கம் தெரியக்கூடாது—ஆமாம், கபர்தார்!" என்று அதே 'கபர்தா'ரைச் சொல்லி, அவனையும் எச்சரித்தார் அவர்.

அவன் சிரித்தபடி, '' அக்கம் பக்கத்திலேதான் யாரும் இல்லையே ? '' என்று சொல்லிக் கொண்டே அவர்களைத் தொடர்ந்தான்.

ஐயோ, இது என்ன ? அங்கே பூட்டியிருந்த அறை திறந்திருந்தது. அந்த அறைக்கு முன்னால் பத்துப் பன்னிரண்டு பேர் கூடியிருந்தனர். அதற்குள் போட்டிருந்த ஒரு நாற்காலியின் மேல் பெரிய ஜாடி ஒன்று நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது. அதன் அருகே பயங்கர ஆகிருதியுடன் ஒருவன் நின்று கொண்டிருந்தான். அவனுடைய கையில் ஓர் அளவுக் கிண்ணம் இருந்தது. அந்த ஆசாமி உள்ளே வந்த வாடிக்கைக்காரர்களுக்கெல்லாம் நாட்டுச் சாராயத்தை அளந்து ஊற்றிக் கொண்டிருந்தான்.

அதாவது, மதுவிலக்குப் பிராந்தியத்தில் அசல் சாராயக் கடை ஒன்று திறந்துவைக்கப்பட்டிருந்தது !

அருவெறுக்கத்தக்க இந்தக் காட்சியைக் கண்டதும் நக்கீரனின் கண்களில் தீப்பொறி பறந்தது. '' அப்பா ! நீங்கள்தானா சட்டத்தைமீறிச் சாராயம் காய்ச்சும் அந்தக் குடிகெடுக்கும் மனிதர் ? '' என்று அவன் வியப்புடன் கேட்டான்.

அவன் குரல் நடுங்கிற்று !

'' ஆமாண்டா, ஆமாம் ! '' என்று சொல்லிவிட்டு, அவர் ஒரு பயங்கரச் சிரிப்புச் சிரித்தார்.

அவன் தலை சுழன்றது !

'' அப்பா, இது சட்டவிரோதம் ! '' என்று ஆரம்பித்தான் அவன்.

'' அது எனக்குத் தெரியும்; அப்புறம் ? '' என்று உறுமினார் அவர்.

'' மனித தர்மத்துக்கும் விரோதம், அப்பா ! ''

'' அதுவும் எனக்குத் தெரியும் ; அப்புறம் ? ''

'' அப்புறமா ? திருட்டுச் சாராயத்தைக் காய்ச்சிஊற்றி இந்த ஊமை ஜனங்களை அணு அணுவாகக் கொல்வதைக் காட்டிலும் விஷத்தைஊற்றி ஒரேயடியாய்க் கொன்றுவிடலாம், அப்பா ! '' என்றான் அவன்.

'' அடேய், என்னசொன்னே ? நேற்றுபிறந்த பயல், நீ ! நீயா எனக்கு வந்து புத்தி சொல்றே ? 'இதெல்லாம் பெரியவங்க காரியம் ; நீ ஒண்ணும் கண்டுக்கிடாதே !' என்று நான் உனக்கு

முன்னலேயே சொன்னேனு, இல்லேயா?—வீணு என்னுடைய கோபத்துக்கு ஆளாகாதே, போ!''

"இந்த அக்கிரமத்தை நீங்கள் நிறுத்தாதவரை என் உயிரே போவதாயிருந்தாலும் சரி, நான் இங்கிருந்து நகர மாட்டேன்!''

''அட, பெரியசீமான் இவரு? போடா, நாயே! இந்தக் 'கபர்தார் கண்ணுயிரம்' கிட்டவா வந்து, நீ கணக்குப்பண்றே, கணக்கு? இந்த இடத்தைவிட்டு மரியாதையாய்ப் போறியா? இல்லே, நானே கழுத்தைப்பிடிச்சி வெளியே தள்ளட்டுமா?'' என்று அவர் சிம்மநாதம் செய்தார்.

அவ்வளவுதான்; மகன் ஆட்டுக்குட்டியாக அடங்கி நின்ற இடத்திலேயே நின்றுன்.

கபர்தார் கண்ணுயிரம் தம்கண்கள் 'ஜிவ்'வென்று சிவக்க, மீசைமுறுக்குக் கலேந்து துடிக்க, அவனே ஏறிட்டுப்பார்த்தார்.

அப்பொழுதும் அவன் அசைந்துகொடுக்கவில்லே!

அவ்வளவுதான்; 'பளீர், பளீர்' என்று இரண்டுஅறைகள் அவனுடைய கன்னத்தில் மின்னலிட்டன.

அவன் அசந்து போனுன்!

அதற்குப் பிறகு அவன் அங்கே நிற்கவில்லே: கன்னத்தைத் தடவிக் கொண்டே தன் அறைக்கு வந்து விட்டான்.

கள்ளச் சாராய வியாபாரம் எந்த விதமான இடைஞ்சலு மின்றி வழக்கம் போல் இரவு பத்து மணி வரை தொடர்ந்து நடந்து முடிந்தது!

பத்து மணிக்குப் பிறகு புழக்கடை அறையை பூட்டிக் கொண்டு வந்த கபர்தார், நக்கீரனின் அறைக்குள் ஆவேசத் துடன் நுழைந்தார்.

அவருடைய ஆவேசத்தைக் கண்டதும் அவன் தன்னே யறியாமலே எழுந்து நின்றுன்.

''எனக்கு முன்னமேயே தெரியும், நீ இப்படி ஏதாச்சும் 'தத்துப் பித்து'ன்னு உளறுவேன்னு! பேசாம நான் சொல்ற தைக் கேளு? உனக்கும் எனக்கும் இனிமே சரிப்பட்டு வராது; பட்டணத்துப் படிப்புப் படிச்சி உன் புத்தி கோணலாப் போயி டிச்சு! 'காத்துள்ளபோதே தூத்திக்கணும்' எங்கிருப் போல, கள்ளுக்கடையை எடுத்திருக்கிற இந்த நாளிலேதான் நாலு காசு சம்பாதிக்கணும்னு நான் இருக்கேன். அதுக்கு இடைஞ் சலா நீ இருந்தியோ, எனக்கு ரொம்பக் கோவம் வரும்—

ஆமாம், கபர்தார்! அந்தக் கோவத்திலே நான் உன்னே என்ன வேணுமானுலும் செய்துப்பிடுவேன். அதனுலே இன்னிக்கு ராத்திரியே நீ திரும்பிப் பட்டணத்துக்குப் போயிடறதுதான் நல்லது. இந்தா, அம்பது ரூவா; வச்சுக்கோ! அப்புறம் மாசா மாசம் உன் செலவுக்கு நான் வழக்கம் போலப் பணம் அனுப் பறேன்—என்ன?'' என்று நயத்துடன் கொஞ்சம் பயமும் காட்டிப் பார்த்தார் கண்ணுயிரம்.

''இருக்கிற காசே ஏழு தலைமுறைக்குப் போதுமே, அப்பா!'' என்று மீண்டும் ஏதோ சபலத்துடன் ஆரம்பித்தான் அவன்.

'' இந்த உபதேசம்தானே நான் வேணுங்கிறேன் ?'' என்று கர்ஜித்தார் அவர்.

நக்கீரனுக்கு அதற்கு மேல் என்ன சொல்வதென்று தெரிய வில்லை; வாயடைத்துப் போனுன்.

கபர்தார் கண்ணுயிரமோ அவனுடைய கையில் ஐம்பது ரூபாயைப் பலவந்தமாகத் திணித்தார்.

அவன் அந்தப் பணத்தையும் அப்பாவின் முகத்தையும் மாறி மாறிப் பார்த்தான். அதற்குப் பிறகு எதிர்ச் சுவரில் மாட்டியிருந்த தன் தாயாரின் புகைப்படத்தையும் பார்த்தான். ஒரு நீண்ட பெருமூச்சுக்குப் பிறகு, 'அம்மா இன்று உயிருடன் இருந்திருந்தால்?' என்று எண்ணி, அவன் மனம் ஆறுத லடைந்தது.

சிற்றன்னையோ அந்தப் பக்கம் தலையைக் காட்டவேயில்லை; கபர்தார் கண்ணுயிரத்தைக் கண்டால் அவளுக்கு அவ்வளவு தைரியம்!

அவன் நின்றது நின்றபடி நின்று, மேலே என்ன செய்வ தென்று யோசித்தான். கபர்தார் பொறுமையிழந்து, ''என்ன சொல்கிருய்?'' என்று அதட்டினுர்.

''அப்படியே ஆகட்டும், அப்பா!'' என்று சொல்லிவிட் டான் அவன்.

அந்த நிமிஷம் அப்பாவின் யோசனை அவனுக்கும் ஒரு விதத்தில் நல்லதாகவே தோன்றிற்று; ஆனுல் அடுத்த நிமிஷம் ?......

அவனுடைய மனத்திலே ஒரு பெரிய போராட்டம் எழுந் தது. அந்தப் போராட்டத்தின் காரணமாக அவனுடைய யோசனை வேறு திக்கை நோக்கிச் சென்றது. அந்தத் திக்கிலே

தன் பெயருக்குக் காரணமான ஒரு தமிழ்ப் புலவன், 'நெற்றிக் கண்ணைத் திறந்தாலும் குற்றம் குற்றமே!' என்று அருந்தமிழைப் பெற்றெடுத்த ஆதிசிவனையே எதிர்த்து நின்ற காட்சியை அவன் அகக்கண்ணால் கண்டான்.

அவ்வளவுதான்; அவன் உள்ளத்தில் குமுறிக்கொண்டிருந்த எரிமலை வெடித்தது!

அதன் பலன்?......

அன்றிரவே வீட்டை விட்டுச் சென்ற நக்கீரன், மறுநாள் காலை கபர்தார் கண்ணாயிரம் கொஞ்சம் எதிர்பாராதவிதமாகப் போலீஸ் அதிகாரிகளுடன் உள்ளே நுழைந்தான். அப்புறம் என்ன?—புழக்கடையில் பூட்டி வைக்கப்பட்டிருந்த அறை அவருடைய உத்தரவில்லாமலே திறக்கப்பட்டது. அதற்குள்ளிருந்த சாராய ஜாடிகளெல்லாம் போலீஸாரால் கைப்பற்றப்பட்டன.

அவர் கைதியானார்!

காட்டுத் தீ போல் பரவிய இந்தச் சேதி தாழம்பேடு முழுவதையுமே ஒரு கலக்குக் கலக்கிவிட்டது. அதன் காரணமாக நக்கீரனைச் சிலர் வைதார்கள்; சிலர் வாழ்த்தினார்கள். நல்லமுத்தோ அவனைத் 'தெய்வம்' என்றே கொண்டாட ஆரம்பித்து விட்டான்!

நக்கீரன் எதையும் பொருட்படுத்தவில்லையென்றாலும், அவனுடைய இதயத்தின் அடிவாரத்தில் மட்டும் இன்னதென்று விவரிக்க முடியாத ஏதோ ஒரு வேதனை குடி கொண்டது. அந்த வேதனையுடன் அவன் சிற்றன்னையை நெருங்கி, "சித்தி, என்னை மன்னித்து விடுங்கள். சித்தி!" என்றான் தழதழத்த குரலில்.

"என்னதான் இருந்தாலும் இப்படிக் கூடச் செய்யலாமா நீ?" என்றாள் அவள்.

நக்கீரன் அதற்குப் பதில் ஒன்றும் சொல்லாமல் தலையைக் குனிந்து கொண்டான். அவனுடைய கண்களிலிருந்து இரண்டு சொட்டுக் கண்ணீர்த் துளிகள் கீழே விழுந்து சிதறின.

"சொல் தம்பி, உன்னைப் பெற்று வளர்த்தவர் இல்லையா, அவர்?" என்றாள் அவள் மீண்டும்.

அதற்கும் அவன் குனிந்த தலை நிமிராமல், "ஆமாம்" என்றான்.

"நக்கீரன் என்று அழகாகப் பெயரிட்டு, நாவினிக்க அழைத்தவர் இல்லையா, அவர்?"

"ஆமாம்."

"நீ படித்து முன்னுக்கு வரவேண்டும் என்பதற்காகப் பணத்தைத் தண்ணீராகப் பாவித்துச் செலவழித்தவர் இல்லையா, அவர் ?''

'' ஆமாம்.''

எல்லாவற்றுக்கும் அவன் 'ஆமாம், ஆமாம்' என்று சொல்லவே, அவள் இன்னும் கொஞ்சம் அவனை நெருங்கி, "அப்படிப் பட்டவரா உனக்கு விரோதி?'' என்றாள் கொஞ்சம் வேகமாக.

அவ்வளவுதான்; ''அவர் எனக்கு விரோதி இல்லை!'' என்று சொல்லிக்கொண்டே அவன் தலை நிமிர்ந்தான்.

''பின்னே யாருக்குத் தம்பி, விரோதி ?'' என்றாள் அவள்.

''சட்டத்துக்கு விரோதி, சமூகத்துக்கு விரோதி; நீதிக்கு விரோதி, நேர்மைக்கு விரோதி!'' என்றான் அவன்.

—:o:—

# 20

# அரங்கேற்றம்

படாரென்று ஒரு வெடிச்சத்தம்.

கார் கொஞ்ச தூரம் சென்று ஒரு குலுக்கலுடன் நின்றது. உள்ளே இருந்தவர்கள் ஓர் ஆட்டத்துடன் சாய்ந்தார்கள். சாமாவின் கைகள் தம்புராவை அணைத்தன அந்த அதிர்ச்சியில்.

டிரைவர் கீழே இறங்கினன். முன்பக்கமும் பின்பக்கமும் சென்று வண்டியைப் பரிசோதித்தான்.

''என்னப்பா?'' என்ருர் வேம்புவையர்.

''பின் சக்கரம் பர்ஸ்ட் ஆயிட்டுதுங்க''

தலையைச் சொறிந்தபடி அவன் நின்ருன்.

''அட ராமா!'' வேம்புவையர் இடதுகையினுல் முகவாயைத் தாங்கிக்கொண்டார்.

''இப்போ என்ன செய்யறது?''

''கொஞ்சம் இருங்கசாமி. ஸ்டெப்னி இருக்குதான்னு பார்க்கறேன். வண்டியிலே வச்ச ஞாபகம்''

''வேறே சக்கரம் மாட்டறேங்கறயா?''

''ஆமாங்க, அதுக்குக்கூட ஒரு அரை அவர் ஆகுங்க''

''அட கஷ்டமே! சரியா ஆறு மணிக்கு அங்கே இருந்தாகணுமே?''

டிரைவர் வண்டியின் பின்பக்கத்தைத் திறந்து பார்த்தான். கவலைக்குறியுடன் மறுபடியும் வந்தான்.

''அதுகூட காணலீங்க!''

"என்னது?"

"ஆமாங்க. பகல்லே க்ளீன் பண்றப்போ எடுத்து ஷெட்டி லேயே வச்சுட்டேன் போலத்தோணுது"

"அப்போ என்ன வழி?" அவர் பதைபதைத்தார்.''

"பார்க்கலாங்க! ஏதவாது லாரி இந்தப் பக்கம் வந்தா ஊருக்குத் தகவல் சொல்லி அனுப்பிக்கொண்டாரச் சொல்ல வேண்டியதுதான்!"

வேம்புவையர் பேயடித்தாற்போல நின்றுவிட்டார்.

சரியாக ஆறுமணிக்குக் கச்சேரியை ஆரம்பித்து விடவேண்டும் என்று அந்தத் தனவந்தர் சொல்லியிருந்தார். இப்போது என்ன செய்வது?

காரிலிருந்து தகப்பனும் மகனும் இறங்கினர்கள்.

"எப்படியப்பா ஆச்சு?" என்ருன் சாமா.

"ஆணியோ எதுவோ வழியிலே கிடந்து கிழிச்சிருக்குதுங்க ...அதோ பாருங்க!"

அவர்கள் பார்த்த இடத்தில் சாலையில் தேய்ந்த மாட்டு லாடம் ஒன்று வெற்றிச் சிரிப்புடன் மல்லாந்து கிடந்தது.

"எந்த மடக்கழுதையோ மாட்டைச் சரியாகக் கவனிக்காமே வண்டியிலே கட்டி ஓட்டியிருக்கானுங்க!"

"பாவம்! அந்த மாடு வெறுங்காலுடன் எவ்வளவு சங்கடப் பட்டிருக்குமோ?" என்ருன் சாமா.

"ஆமான்டா! நீ ஒண்ணு! டயத்துக்குள்ளே போய்ச் சேரணுமேன்னு நான் கவலைப்பட்டுண்டிருக்கேன்?" வேம்புவையர் மகனைப் பார்த்து சீறினர்.

"சே! என்ன கஷ்டகாலம்? இருந்திருந்து நாள் நட்சத்திரம் எல்லாம் பார்த்து முதல் கச்சேரிக்கு ஏற்பாடு பண்ணிஞ இப்படியா ஆகணும்?" ஏமாற்றத்திலும் கோபத்திலும் அவரது உடல் படபடத்தது.

"வருத்தப்படாதேங்கோ அப்பா! எல்லாம் ஈஸ்வராக்ஞைப் படிதான் நடக்கும்! நாம்ப என்ன செய்ய முடியும்?"

"பெரிய வேதாந்தி இவன், எனக்குச் சொல்ல வந்துட்டான்!" சாமாவை முறைத்துப் பார்த்தார்.

"என்னப்பா டிரைவர்... வ்வளவுதாஞ?"

"நான் என்னங்க பண்றது? சோதனைபோல ஆயிடுச்சீங்களே?''

வேம்புவையர் உறுமினர்.

''சோதனையாமே! நீ மாத்துச் சக்கரம் கொண்டுவந்திருந்தியானு இங்கே இந்த அத்வானத்திலே இப்படிச் சந்தியிலே நிற்கும்படி ஆகுமா?

'' அதான் சொல்லியாச்சுங்களே மறந்துபோச்சுது. இப்போ என்ன செய்யச் சொல்றீங்க? வேறே வண்டி வேணுமானு வச்சுக்கிட்டுப்போங்க. எந்த வேளேயிலே இந்த கிராக்கியைப் பிடிச்சேனே...!'' டிரைவர் அரைகுறை எரிச்சலுடன் முகத்தைத் திருப்பிக்கொண்டான்.

என்ன செய்வது இப்போது?

யாரையாவது ஏதாவது சொல்லித்திட்டவோ செய்யவோ வேம்புவையர் துடித்துக்கொண்டிருந்தார். ஆனுல் இப்படி நடந்ததற்கு யாரை என்ன செய்ய முடியும்? தம் கையாலாகத் தனத்தைக்கண்டு அவருக்கே வெறுப்பு வந்தது.

நிம்மதியின்றி முன்னும் பின்னுமாகச் சாலேயில் நடந்து கொண்டிருந்தார். சாமா தம்புராவுடன் ஒரு மரத்தடியில் உட்கார்ந்துகொண்டு விட்டான்.

''எலே! எழுந்திர்ரு! புதுவேஷ்டியைக் கசமாக்கிப்பிடாதே''

தகப்பனுரின் கோபம் எந்தத் திக்கில் எதற்காகப் பாயும் என்கிற நியதி கிடையாது என்பதைச் சாமா அநுபவத்தில் தெரிந்து கொண்டிருந்தான். சொன்னபடி கேட்காவிட்டால் அவருக்கு வெறியே பிடித்துவிடும்.

எழுந்து வேஷ்டியைத் தட்டிவிட்டுக்கொண்டு நின்ருன் அவன். பொறுமையை இழந்தவராக வேம்புவையரே சிறிது நேரத்தில் அந்த மரத்தடியில் அமர்ந்தார்.

'' நீ அதிர்ஷ்டக்கட்டைங்கறது இன்னிக்குத்தானு எனக்குத் தெரியும்? பிறந்தபோதே நிச்சயமாகிப்போன விஷயந்தானே, அது?''

சாமாவுக்குக் கண்கள் கலங்கின. மௌனமாக அவரருகே நின்றிருந்தான்.

சாலேயில் கார் தன்னந்தனியே அநாதையைப்போல் நின்று கொண்டிருந்தது. டிரைவர் ஒரு பீடியைப் பற்றவைத்துக் கொண்டு புதர் மறைவுக்குப் போய்விட்டான்.

சுற்றுப்புறம் அமைதியாக இருந்தது. அழகான சூழ்நிலே. பசேலென்று பச்சைப்போர்வையைப் போர்த்திக்கொண்டிருந்தது பூமி. சாலேக்குக் கொஞ்சதூரம் தள்ளி வாய்க்காலொன்று மெல்லிய ஓசையுடன் ஓடிக்கொண்டிருந்தது. இறங்கிக்கொண் டிருந்த சூரியனின் கதிர்கள் வெண் மேகங்களுக்குச் செம்மண் இட்டுக் கொண்டிருந்தன. மங்கிய மஞ்சள் ஒளியில் அருகிலிருந்த கொன்றை மரங்கள் மஞ்சள் பூக்களுடன் முறுவலித்துக்கொண் டிருந்தன. சற்றுத்தள்ளி ஒரு மரத்தடியில் சூலம் ஒன்று நட் டிருந்தது. பட்டைபட்டையாகக் குங்கும விபூதிப் பூச்சுக்கள் அந்தப் பச்சைநிறச் சூழ்நிலேயில் அந்தச் சூலத்தைத் தெளிவாகக் காட்டின. அதன் அருகே சிறு உருவம்; எந்தக் கிராமத்துத் தேவதையோ? முனியனே, சங்கிலிக் கருப்பனே, எல்லேயம்மனே! உருவமும் தெரியாமல் கல்லா, மரமா என்பதை அறியமுடியாத வகையில் எண்ணெய் மொழுக்கும்பிசுக்குமாக அந்தத் தெய்வம் நின்றுகொண்டிருந்தது. அவ்வப்போது கால்நடையாகப் போய்க் கொண்டிருந்த ஓரிருவரையும் வீடு திரும்பும் ஆட்டு மந்தையை யும் தவிர சாலேயில் அதிக நடமாட்டம் இல்லே. இருள் லேசாகக் கவியத் தொடங்கியதும் சிள்வண்டுகள் சுருதி கூட்டத் தொடங்கின.

சாமா தன் தகப்பனரை ஒருமுறை பார்த்தான். கோப மெல்லாம் போய் அவர் முகத்தில் கவலேயும் நிராசையும் நிரம்பி யிருந்தன.

மேல்வேஷ்டியை இடுப்பில் கட்டிக்கொண்டான். அழுக் கடைந்த பழையகாலத்துப் பட்டுப்பையிலிருந்து விபூதியை எடுத் துக் கையில் போட்டுக்கொண்டு வாய்க்கால் பக்கமாக சாமா நடந்தான்.

வேம்புவையர் பிரமை பிடித்தவர் போல உட்கார்ந்திருந் தார். செய்திருந்த ஏற்பாடுகள் என்ன? நடந்தது என்ன?

பையனே முதன் முதலாகப் பெரிய சதஸில் பாட ஏற்பாடு செய்வதற்கு அவர் பட்ட சிரமங்கள் அவருக்குத் தான் தெரியும். சதஸ் பூராவும் நல்ல ரஸிகர்கள். போதாக்குறைக்கு ரஸிக சிரோமணியான ஒரு பணக்காரர் வீட்டில் நடக்க வேண்டிய கச்சேரி அது. அதற்காகக் காரியஸ்தரைப் பார்த்து எவ்வளவு தடவை பல்லேக் காட்டி வாய்க்கரிசியும் போடவேண்டியிருந்தது? தனவந்தர் நல்லவர்தான். அருமையான சங்கீதமாக இருந்தால் அள்ளி அள்ளிக் கொடுப்பாராம். இந்தக் கச்சேரி இன்று நடந் தால் அவர் தரும் சம்மானத்தைக் கையில் வைத்துக்கொண்டு, இத்தனே நாளாகத் தன்னுடன் ஒண்டுக்குடியாக இருந்துவரும் தரித்திரத்தின் முகத்தில் காறித்துப்பலாம் என்று அவர் கனவு

கண்டு கொண்டிருந்தார். சாமாவும் லேசுப்பட்டவனல்ல; அருள் போல அவனுக்கு வித்தை வாய்த்திருந்தது; ஸ்வயம் பிரகாச முள்ள சுடர்விளக்கைத் தூண்டிவிட அருமையான குருநாதரும் வாய்த்தார். இவ்வளவு நஷ்டத்திலும் அது ஒருபெரிய அதிர்ஷ் டம் என்பது வேம்புவையரின் தீர்மானம். உடல்நிலே சரியாக இருந்திருந்தால் குருநாதர் கூட இன்று வந்திருப்பார்; பெருமை யாகவும் இருந்திருக்கும்.

ஆனுல் வேம்புவையரின் முகத்தில் தான் துரதிர்ஷ்டம் கரி யைத் தடவி விட்டதே?

''என்னேவிட்டு ஓடவா பார்த்தாய்?'' என்று தரித்திர தேவதை அவர் கண்ணெதிரே நின்று நையாண்டி செய்து சிரிப்ப தைப்போல வேம்புவையருக்குத் தோன்றியது.

லக்ஷ்மியின் கடைக்கண் கடாட்சம் பெறவேண்டிய இந்த நேரத்தில், எங்கோ, நடுவே ஒரு குக்கிராமத்துச் சாலேயோரத்தில் சங்கிலிக் கருப்பனின் பார்வையில் உட்கார்ந்து இருக்கிருயே, என்று அவர் உள்ளம் வெதும்பி உள்ளம் குன்றியது.

கச்சேரி இந்நேரம் நடந்திருந்தால்?

முடிவில் கைநிறைய தானத்துடன் திரும்பலாம். அந்தப் பெரிய மனிதர் நிச்சயமாக சாமாவின் சங்கீதத்தைக்கேட்டுப் பிரமித்துப் போவார். நல்ல செல்வாக்குள்ள அவர் மட்டும் மனதுவைத்து சிபாரிசு செய்தால் இன்னும் நிறையக் கச்சேரிகள், நிறையப் பணம்...! இன்று தனக்கும் மகனுக்குமாகக் கடனில் வாங்கிய வேஷ்டி துணிமணிகளுக்கு அலட்சியமாகப் பணத்தை வீசலாம். மேலே பணம் சேர்த்தால் கிராமத்திலேயே முதலியா ரிடம் சொல்லி நல்லதாக ஒரு பத்துப்பதினேந்து குழி நஞ்சை வாங்கலாம். இரண்டு வருஷத்துக்குள் களஞ்சியம் நிறைய நெல், வீடு நிறையச் செழுமை, செல்வம், மகிழ்ச்சி! தரித்திரத்தையும் மூட்டுப்போட்ட பழந்துணிகளேயும் நிரந்தரமாக உதறிவிடலாம். சே! எல்லா ஆசையும் பாழ்! பாழும்விதி இம்மாதிரி செய்து விட்டதே?

பளிச்சென்று ஒளிவீசி அந்த இடத்தை நிறைத்தது. காரின் முன் விளக்குகள் தான்! நல்லவேளேயாக அந்த வாடகைக் காருக்கு முன்னதாகப் பணம் கொடுத்தாகி விட்டது. எப் போதோ அவர் மாமனுர்போட்ட கடுக்கன் இந்தக்கார் சவாரியில் கரைந்துவிட்டது.

''இருட்டிலே எத்தனே நேரம் உக்காந்திருப்பீங்க, சாமி! இப்படி வாங்க. பூச்சிபொட்டு இருக்கப்போகுது. உங்களுக்கா

கத்தான் விளக்கைப்போட்டேன். வெளிச்சத்திலே வந்து இருங்க !''

டிரைவரின் பரிவு அவரை அசைத்து விட்டது. நெடுமூச்சு டன் மரத்தடியைவிட்டு எழுந்தார்.

எதிரே சாமா பளிச்சென்று விபூதிப்பட்டையும் அதுவுமாக மந்தகாச முகத்துடன் நின்று கொண்டிருந்தான்.

'' சந்தியாவந்தனம் இங்கேயே வாய்க்கால்லே பண்ணிட் டேம்ப்பா ! ''

அந்தக்குரல் அவரைக் குழையச் செய்தது. அவனுடைய குழந்தை முகத்தை ஒருமுறை ஏறிட்டுப்பார்த்தார். 'இவனைப் போய்க் கோபித்துக் கொண்டோமே ! குழந்தை இவன் என்ன பண்ணினுன்; பாவம் !' என்று மனம் நெகிழ்ந்து பச்சாத்தாபப் பட்டார்.

'' கொஞ்சம் இரு, நானும் வந்துடறேன் ! ''

நித்திய நியமத்தை மகன் நினைவூட்டும்படியாகிவிட்டதே என்னும் வெட்கத்துடன் பட்டுப் பையை எடுத்தபடி வாய்க் காலை நோக்கி நடந்தார் வேம்புவையர்.

அனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு திரும்பி வந்தபோது கண்டகாட்சி அவரைத் திடுக்கிடச்செய்தது.

வாடகைக்காரின் முன்விளக்குகளின் பிரகாசமான ஒளியில் சூலத்துக்கும் அந்தக் கருஞ்சிலைக்கும் எதிரே தரையைச் சுத்தம் செய்துவிட்டு, கண்ணை மூடியபடி தம்புராவை மீட்டி சுருதிசேர்த் துக் கொண்டிருந்தான் சாமா.

'' என்னடா இது ? '' அவர் பதறினுர்.

சாமா கண்ணைத்திறந்து அவரைப் பார்த்தான்.

'' இங்கேயே பாடலாம்னு தான்...! ''

'' நன்னுயிருக்குடா காரியம் ! ''

'' நாளும், யோகமும், நட்சத்திரமும் பார்த்துப்பொறுக்கின வேளை தவறவேண்டாம்ப்பா ! ''

'' அதுக்காக ? ''

'' வெளியிலே முதன்முதல்லே நான் இன்னிக்குக் கச்சேரி செய்யணும்னு ஏற்பாடாச்சு. அது இந்த சுவாமி சந்நிதியிலேயே இருக்கட்டுமேன்னு...''

''ஏண்டா ! உனக்கென்ன மூளை பெரண்டு போயிடுத்தா ?''

சாமா பொறுமையுடன் அவரைப்பார்த்தான். அதற்குள்

கார்விளக்கு ஒளியைப் பார்த்துவிட்டு ஏழெட்டுப்பேர், சிறியவர், பெரியவர், கோவணங்கட்டியவர், மேல்துணி இல்லாதவர் இவ் விதமாக அங்கு சேர்ந்து, அதிசயத்துடன் வேடிக்கை பார்க்கத் தொடங்கி விட்டனர்.

''ஏம்ப்பா இப்படிச் சொல்றேள்? இங்கே இந்த சந்நிதியிலே தான் நான் பாடணும்னு ஈஸ்வராக்ஞை, அப்படீன்னு என் மனசிலே பட்டுது. அதனாலே இங்கேயே இந்தத் தெய்வத்தின் முன்னேயே உக்கார்ந்து அதன் எதிரேயே பாடி என் அரங்கேற் றத்தை நடத்திப்பிடறேன்!''

சாமாவின் முகத்திலிருந்த அலாதிப் பளபளப்பும் மலர்ச்சியும் வேம்புவையரை என்னவோ செய்தன.

''அங்கே பெரியமனுஷாளும் ரஸிகாளுமா சதஸ் நிரம்பக் காத்துண்டிருப்பா, அதைவிட்டாச்சு. என்னவோ இந்தக் காட்டுமரத்துக்கும், செம்மண் ரோட்டுக்கும், சூலாயுதத்துக்கும், கருப்பண்ணசாமிக்கும் எதிரே பாடப்போறானும்; இந்தக் கோவணாண்டிகள் சதஸ்தான் உனக்கு வேணுமா? சீச்சீ!''

நிதானமாக அவரை ஒருமுறை மலர்ந்த முகத்துடன் பார்த் தான் சாமா.

''அப்பா ரொம்ப சிரமப்பட்டு முதல் கச்சேரிக்கு வேலை பார்த்தேள். அதை வீணாக்காமே இப்பவே தொடங்கணும்னு என் ஆசை. இந்த நிமிஷமே பாடுன்னு என் மனசிலே ஏதோ ஒண்ணு சொல்றது. இந்த சந்நிதானத்தையும், இதோ இருக்கிற ஜனங்களையும் விடவா பெரிய சபை கிடைக்கப் போறது?''

வேம்புவையர் வாயடைத்துப் போனார். அவர் மேற்கொண்டு வேறு எதுவும் பேச முயலும் முன்பே தம்புரா சுருதியுடன் இழைந்து சாமாவின் குரல் இனிமையாகக் கிளம்பிற்று.

சிலைக்கும் சூலத்துக்கும் கையைக் கூப்பிக் கண்மூடி நமஸ் கரித்து விட்டு அவன் பாட ஆரம்பித்தான்.

சாலையில் வந்த ஓரிருவர் நின்றனர். கசமுசாவென்று பேசி னர். ஒரு சிலர் வேகமாக ஓடினர். எங்கோ, எதற்கோ! அந்த வழி வந்த மாட்டு வண்டி ஒன்றுகூட அங்கேயே நின்று விட்டது.

சாமா மெய்ம்மறந்து கீர்த்தனைக்கு மேல் கீர்த்தனையாகப் பாடிக்கொண்டே இருந்தான். முன்னிரவின் அந்த அமைதி யில் சிள்வண்டுகளும் ஓய்ந்து போய், அந்தக் கானவெள்ளத்தைப் பருகியது போலத் தோன்றிற்று. அவனது கண்டத்திலிருந்து

ராகங்கள் எல்லாம் சுஸ்வரத்துடன் பாவபூர்வமாகக் கிளம்பி வெளிவந்து சுற்றுப்புறத்தையே பரவசத்தில் ஆழ்த்தின. நேரத்தின் எல்லையே மறந்து போய் விட்டது போலத் தோன்றியது, அவன் அமர்ந்து பாடிய விதத்தைப் பார்த்தால்.

கண்ணைத் திறந்தபோது சாமா பிரமித்துப் போய்விட்டான். ஆணும், பெண்ணும், குழந்தையும் குட்டியுமாக ஐம்பது அறுபது ஜனங்கள் அங்கே குழுமியிருந்து திறந்த வாய் மூடாமல் லயித்துப் போய் உட்கார்ந்திருப்பது அவன் பார்வையில் பட்டது. இவர்களெல்லாம் யார்? எப்போது யாரால் அழைக்கப்பட்டு வந்தார்கள்? அவனுக்கே புரியவில்லை. தன் கண்களையே அவனால் நம்ப முடியவில்லை. தன் பாட்டுக்கு இவ்வளவு கூட்டமா? இத்தனை ரஸிகர்களா? வேம்புவையரும் சங்கீத மயக்கமும், கூட்டத்தைப் பார்த்த வியப்புமாக பிரமை தட்டிப் போய் உட்கார்ந்திருந்தார்.

சுய நினைவு வந்த சாமாவுக்கு மனதுக்குள் ஒரு புதிர் அவிழ்ந்தது. சங்கீதத்துக்காகச் சபையைக் கூட்ட வேண்டிய அவசியமே இல்லை. நல்ல சங்கீதம் தானே எப்பொழுதுமே ரஸிகர்களை அழைத்து வந்து சேர்த்துவிடும். தனவந்தர் வீட்டுப் பந்தலானாலென்ன, கருப்பண்ணசாமி சந்நிதியாக இருந்தாலென்ன? எதுவும் அதற்கு ஒன்றுதான். கடவுள் மாதிரி சங்கீதத்துக்கும் எந்த வித பேதமும் பாராட்டத் தெரியாது!

சாமா எழுந்தான். எட்டு அங்கமும் படியும் விதமாக அந்தச் சிலைக்கு நமஸ்காரம் செய்தான். பிறகு கூட்டத்தை நோக்கிக் கும்பிட்டான். அவன் மனத்தில் அலாதியான ஒரு நிறைவு ஏற்பட்டிருந்தது.

''சின்ன ஐயரு ரொம்ப நல்லாப் பாடினாருங்க!'' முன்னால் உட்கார்ந்திருந்த கிழவன் தான் பேசினான். திருப்தி அவன் வார்த்தைகளில் நிறைந்திருந்தது.

''ஆமாங்க'' என்று பல குரல்கள் ஆமோதித்தன.

''சாமிக்கு எந்த ஊருங்க?'' என்று கேட்டான் ஒருவன். வேம்புவையர் அவர்களைப் பார்க்கவும் பேசவும் பிடிக்காமல் மௌனமாக இருந்தார். சாமா பதில் சொன்னான்.

''நாங்கள்ளாம் அதோ அந்தச் சேரி ஜனங்க. எங்களுக்குக் கூட இந்த மாதிரி நல்லாப் பாட்டுக் கேக்க ஒரு சமயம் கிடைச்சுதே. எல்லாம் இந்தச் சங்கிலிக் கருப்பன் அருள் தான்.''

சேரி ஜனங்களா? 'சிவ சிவ' என்று மனதுக்குள் முனகியபடி முகத்தைச் சுளித்துக் கொண்டார் வேம்புவையர். முதலில் ஸ்னானம் வேறு செய்தாக வேண்டும் இந்தத் தீட்டு போவதற்கு.

''பசி, தாகம் எல்லாம் மறந்து கேட்டோம். எங்க ஜனங்களுக்கு அறிவு பத்தாதுங்க. ஆனாலும் சின்ன ஐயரு பாடினது அப்படியே மனசை ரொப்பிடிச்சுங்க. எல்லாரையும் எங்கேயோ ஆகாசத்திலே தூக்கிக்கிட்டுப் போன மாதிரி தோணிச்சுங்க'' என்றான் ஒருவன்.

''இதை வாங்கிக்குங்க சாமி!'' என்றான் கிழவன்.

சாமா நிமிர்ந்து பார்த்தான். கிழவன் கையில் ஒரு சட்டி இருந்தது.

''என்ன பெரியவரே?'' என்று கேட்டான் சாமா.

''ஒண்ணுமில்லீங்க. எங்களையெல்லாம் பாடி சந்தோசப் படுத்தின உங்களுக்கு ஏதாச்சும் தரணும்னு எங்களுக்கு ஆசை. ஆனா நீங்க ஐயமாரு. நாங்க தொட்டா சாப்பிடமாட்டீங்கன்னு தெரியும்...''

''எதுக்கு இதெல்லாம்?''

''சும்மா வாங்கிக்குங்க சாமி. பாலுதான், முனியன் வீட்டு ஆட்டுப் பாலு, நல்ல புல்லு தின்னு கொடுத்திருக்கு. பொழுது சாயக் கறந்தோம். காய்ச்சி வச்சிருந்ததை உங்களுக்குன்னு கொண்டாந்திருக்கான்.''

தகப்பனாரைப் பார்த்தான் சாமா. அவர் முகத்தில் சிறு அசைவு கூட இல்லை. கண்கள் வெறித்த பார்வையில் நிலைத் திருந்தன.

''இருக்கட்டும் பெரியவரே. நீங்கள்ளாம் இத்தனை நேரம் உக்காந்து கேட்டதே எனக்குப் பரம திருப்தி'' என்றான் சாமா அடக்கமாக.

''தட்டாமே வாங்கிக்குங்க. பாலுக்குத் தோஷம், தீட்டு இல்லீங்க. ஐயமாருக்குத் தெரியாத விஷயமா? நாங்க பிரியப் பட்டுக் கொடுத்ததை வாங்கிக்கிட்டா எங்களுக்கும் ஒரு சந்தோஷம். எங்களைப் போல ஏழைங்களாலே வேறே காசு, பணமா கொடுக்க முடியும்?''

கிழவனின் குரல் உணர்ச்சிப் பெருக்கில் கரகரத்தது.

அந்த அன்பையும் பரிவையும் சாமாவினால் மறுதளிக்க முடியவில்லை. வாங்கிக் குடித்தான். ஏதோ அமிர்தபானம் செய்தது போல இருந்தது அவனுக்கு, அவ்வளவு உவகை. இவர்களுக்கெல்லாம் தான் பாடிய பாட்டுக்களின் சாகித்யம் புரிந்ததா, ஸ்வரம் புரிந்திருக்குமா? ஆனாலும் நாதத்தின் சக்தியில், சுஸ்வரமான சங்கீதத்தின் பிணைப்பில் கட்டுண்டு

மெய்ம்மறந்து கேட்டிருக்கிறுர்கள். இன்னிசையை ரஸித்து அனுபவிப்பதற்கு இதைவிடவா தேர்ந்த சதஸ் வேண்டும்?

கௌரவம் வித்தைக்குத் தான். அதைப் பணக்கார உயர் குலத்தவன் கொடுத்தாலென்ன, அல்லது இந்த ஏழை அரிஜனங்கள் கொடுத்தால் என்ன ?

கிழவனின் பாதத்தைத் தொட்டு வணங்கினுன் சாமா.

''என்னங்க சாமி இது ?'' என்று பதறினுன் கிழவன்.

''டேய்!'' என்று வேம்புவையர் அலறினுர்.

''ஒண்ணுமில்லே பெரியவரே. உங்களேப் போல இருக்கிற வாளுடைய ஆசீர்வாதந்தான் எனக்குப் பெருமை'' என்ருன் சாமா.

''சங்கிலி ஆண்டவன் சின்ன ஐயருக்கு மெம்மேலே நல்ல பேரு கொடுக்கணும்'' என்று சூலத்தின் பக்கம் கையைக் காட்டி வேண்டினுன்.

மனதில் ஒரு பூரிப்புடன் தகப்பனுரை அணுகினுன் சாமா.

''முதல் கச்சேரியை நல்லபடியாகவே முடிச்சுட்டேம்ப்பா !''

''ம்!'' வெறும் முனகல் தான் வேம்புவையரிடமிருந்து வெளிப்பட்டது.

ஆண்டவனுக்கும் நாதப்பிரம்மத்துக்கும் குலம், ஜாதி பேதம் கிடையாது என்பது அவருடைய அறிவில் பொறி தெறித்தாற் போலப் பட்டது. ஆயினும் அவரது மனம், தன் மகன் கனதனவான்கள் இருக்கும் சதஸில் அரங்கேற்றம் செய்து பெற்றிருக்க வேண்டிய சம்மானத்தைப் பற்றித்தான் ஏங்கிக் கொண்டிருந்தது.

—:o:—

நாரண. துரைக்கண்ணன்

21

# இராவணுகாரம்

திருவல்லிக்கேணிப் பகுதி முழுதும் ஒரே பரபரப்பாய் இருந்தது. ஆங்காங்கு மக்கள் மூவர் நால்வராகக் கூடிநின்று பேசிக்கொண்டிருந்தனர். "என்ன ஆகுமோ? ஏது ஆகுமோ?" என்ற அச்சம் சிலர் முகங்களில் காணப்பட்டது.

"தம்பியப்பா வருகிருராமே?"

"சும்மாவா வருகிருர்? துப்பாக்கியைத் தூக்கிக் கொண்டல்லவா வருகிருராம்."

"இந்தச் சத்தியாக்கிரகிகளுக்கு இவருடைய சங்கதி தெரியாது போலிருக்கு."

"இவர்கள் இந்தக் கள்ளுக்கடைக்கு ஏன் மறியல் செய்ய வந்தார்கள்? வேறெங்காயினும் போவது தானே?"

"இங்கு மட்டும் என்ன? எல்லா மதுபானக் கடைகளிலுந் தான் மறியல் செய்கிருர்கள்; காந்தி மகாத்மா கட்டளைப் படி."

"மற்ற இடங்களில் எதுவாளுலும், என்னவாளுலும் நடக்கலாம். இந்தக் கிருஷ்ணும்பேட்டை இருக்கிறதே? இது இராவணன் தர்பார் நடக்கிற இடம் ஆச்சே! இதன் கிட்டே வரலாமா?"

"சத்தியாக்கிரகிகளுக்கு எல்லா இடமும் சமந்தான்."

"காந்தி ஆசாமிகள் யாருக்காகவும் எதற்காகவும் தங்கள் கடமையைச் செய்யாமல் விட மாட்டார்கள்."

"சாமிநாதப்பிள்ளை கடை வஸ்தாதுகள், சிலம்பம் ஆடுகிற கோதாவைக் காவலாகக்கொண்டதாச்சே! இந்த இடத்தில்

இவர்கள் அடியெடுத்து வைக்கலாமா?''

''சூரியன் அஸ்தமிக்காத பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தையே கிடுகிடுக்க வைக்கிற காந்தித் தொண்டர்களா, இந்த ஆப்காரி காண்டிராக்டரின் உருட்டல் மிரட்டல்களுக்குப் பயந்து போய் விடுவார்கள்?''

''என்னமோ ஐயா! இந்தச் சத்தியாக்கிரகிகளுக்குப் போதாத காலந்தான் இந்தக் கள்ளுக்கடையை மறியல் செய்ய வந்திருக்கிருர்கள் என்று எண்ணுகிறேன்.''

''பாவம்! யார் பெற்ற பிள்ளைகளோ?''

கும்பல் கும்பலாகக் கூடியிருந்தவர்கள் தங்களுக்குத் தோன்றியவாறெல்லாம் பேசிக்கொண்டிருந்தனர்.

காந்தியடிகள் வகுத்துக் கொடுத்த நிர்மாண வேலைத்திட்டப் படி 1931-ம் ஆண்டில் பாரதம் முழுதும் மதுபானக்கடை மறியலும், விதேசித்துணிக்கடை மறியலும் மும்மரமாக நடந்து கொண்டிருந்தன. நம் தமிழகத்திலும் இது எதிரொலி செய்து கொண்டிருந்தது.

காந்தி மகாத்மா தலைமையில் நடைபெற்று வந்த இச் சுதந்திரப் போராட்டம் இந்தியாவின் மற்றப் பகுதிகளில் தீவிர மாக நடை பெற்று வந்தது போலவே அவற்றுக்கு ஒரு படி மேலாகவே தமிழ் நாடு முழுவதிலும் தீவிரமாக நடந்து வந்தது. கள்ளுச் சாராயக் கடை மறியலையும், அன்னியத் துணிக்கடை மறியலையும் திறமையாகவும் தைரியமாகவும் நடத்திப் பல்லாயிரக் கணக்கான பேர் தடியடி பட்டும் ரத்தம் சிந்தியும் சிறை சென்று கொண்டிருந்தனர்.

இச் சுதந்திரப் போராட்ட வீரர்களைப் பின்பற்றித் தான் சத்தியாக்கிரகத் தொண்டர்கள் சிலர் கிருஷ்ணும்பேட்டை சாமிநாதப்பிள்ளை கள்ளுக்கடையை மறியல் செய்ய வந்தனர். இங்கு தொண்டர்கள் வந்து கள்ளுக்கடையை மறியல் செய்யப் போகின்ருர்கள் என்ற செய்தி எப்படியோ காட்டுத் தீப்போல் முன்னதாகவே பரவி விட்டிருந்ததால், அன்று பொழுது புலரு வதற்கு முன்னிருந்தே மக்கள் திரள் திரளாக வந்து கூடலா யினர். போலீஸாரும் தங்கள் கடமையை ஆற்றுவதற்காக ஏராளமாக வந்து இருந்தனர், ''இரகுபதி இராகவ இராஜா ராம்; பதிதபாவன சீதாராம்'' என்று பாடிக் கொண்டே சத்தியாக்கிரகத் தொண்டர்கள் உதயவனம் முகாமிலிருந்து வந்து கொண்டிருந்தனர். ''வீரசுதந்திரம் வேண்டி நின்ருர். பின்னர் வேருென்று கொள்வாரோ?'', ''என்று தணியும் இந்தச் சுதந்திர தாகம்? என்று மடியும் எங்கள் அடிமையின் மோகம்''

''ஜெய பேரிகை கொட்டடா,'' ''கத்தி இன்றி ரத்தம் இன்றி யுத்தம் ஒன்று வருகுது,'' என்பன போன்ற பாடல்களைப் பாடிக் கொண்டே வந்து சாமிநாதப்பிள்ளையின் கள்ளுக் கடையை அவர்கள் முற்றுகையிடலாயினர்.

கள்ளுக்கடை வாயிலின் முன் வரிசைக்கு இருவர் மூவராக அத்தொண்டர்கள் நின்று, கள் குடிக்க வருவோரைப் பார்த்துப் பணிவாக, ''ஐயா! கள்ளு குடிக்கப் போகாதீர்கள். அது உங்களுக்குப் போதையுண்டு பண்ணி உடம்பைக் கெடுக்கும். அது மட்டுமல்ல, இந்தக் கள்ளுக்குடி உங்கள் குடியை அடியோடு அழித்துவிடும். கடைக்குள் நுழையாமல் தயவுசெய்து திரும்பிப் போய்விடுங்கள்'' என்று கைகூப்பி வணக்கஞ் செய்து பணிவாகக் கேட்டுக் கொள்ளலாயினர். குடிக்க வந்தவர் சிலர் அத்தொண்டர்களுடைய வேண்டுகோளைச் செவியுற்றுத் திரும்பிப் போகலாயினர். சிலர், ''யாரடா இவன்கள்? நாங்கள் குடித்துக் கெட்டுப் போனுல் உங்களுக்கு என்ன வந்தது? உங்கள் வேலையைப் பார்த்துக் கொண்டு போங்கடா!'' என்று மூர்க்கத்தனமாகச் சொல்லிவிட்டுக் கடைக்குள் நுழையலாயினர். அப்படி நுழைபவர்களைத் தடுக்கச் சில தொண்டர்கள் அவர்களைக் கும்பிடுவது போல் தரையில் குறுக்கே விழுந்து வழி மறிக்கலாயினர். இது கண்ட சில குடியர்கள் அவர்களுடைய வழி மறிப்பு வேண்டுதலை மீற மனமில்லாமல் திரும்பிப் போகலாயினர். சிலர் சத்தியாகிரகிகளை லட்சியம் செய்யாமல் அவர்களைத் தாண்டிக் கொண்டும், மிதித்துக் கொண்டும் கடைக்குள் நுழையலாயினர்.

இக்காட்சியை உள்ளிருந்து கவனித்துக் கொண்டிருந்த கள்ளுக்கடை தலைமை குமாஸ்தா கைலாசப் பிள்ளை, ''யாரடா இங்கே? சண்டித்தனம் செய்யும் இந்தக் காந்திப் பசங்களை இழுத்துக் கொண்டு போய் வெளியே தள்ளுங்கடா! கடைக்கு வருகிறவர்களை வழி மறிக்கிறுன்கள்'' என்று கோபத்தோடு கொக்கரிக்கலானுர். இது கேட்டுக் கள்ளுக்கடை அடியாட்களும் குடிகாரர்கள் சிலரும், ''ஆய்!...யார்ரு நீங்க? மருவாதையா போறீங்களா? இல்லே; உங்க ஹூட்டியை அறுத்து எறிஞ்சுடட்டுமா?'' என்று கத்திக்கொண்டு வெளிவர முயன்றனர்.

இதுவரை நிலைமையைக் கவனித்துக் கொண்டிருந்த போலீஸ்காரர்கள் நிலைமை கட்டுமீறிப் போய்விடக் கூடாது என்று எண்ணி, ஏய்! ''நீங்க சும்மா இருங்கய்யா'' என்று உள்ளிருப்பவர்களைப் பார்த்து அதட்டிவிட்டுச் சத்தியாக்கிரகிகளை நோக்கி, ''தொண்டர்களே! உங்களுக்கு இரண்டு நிமிஷம் அவகாசம் தருகிறோம். இதற்குள் நீங்கள் இவ்விடத்தைவிட்டுக் கலைந்துபோய் விடுங்கள்; கள்ளுக் கடைக்கு வருபவர்களை வழி

மறித்து நிறுத்த முயல்வது சட்டப்படி பெருங்குற்றமாகும், இதை நாங்கள் அனுமதிக்க முடியாது. மரியாதையாகப் போய் விடுங்கள்'' என்று உத்திரவிடலாயினர்.

சத்தியாக்கிரகிகள் இதைச் செவியேற்கவே இல்லை. மறியல் செய்வதிலேயே கண்ணுங் கருத்துமாயிருந்தனர். கள்ளுக்கடை தலைமைக் குமாஸ்தாவிற்குக் கோபம் மிகுந்தது. அவருடைய மதுரை வீரன் மீசை துடிக்கலாயிற்று. அவர் போலீஸ்காரர்களைப் பார்த்து, ''என்னய்யா, கான்ஸ்டபிள்களே! நீங்கள் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள், இந்தப் பிச்சைக்கார நாய்களை இழுத்து வெளியே போடாமல்'' என்று முழக்கமிட்டார். போலீஸ்காரர்களும் பொறுமையிழந்து விட்டனர். கடை குமாஸ்தாவின் மரியாதையற்ற பேச்சு அவர்களுக்கு உணர்ச்சியை உண்டு பண்ணியது. சப்-இன்ஸ்பெக்டர் தன் கையில் உள்ள குறுந்தடியை ஒருவிதமாக ஆட்டிக் கண் சைகையால் கான்ஸ்டபிள்களுக்குக் குறிப்புக் காட்டினர். உடனே கான்ஸ்டபிள்கள், தொண்டர்கள் இருக்குமிடத்திற்குப் பாய்ந்து, ''ஊம் போங்கள், கடைக்குமுன் நிற்காதீர்கள். வழியை மறிக்காதீர்கள்'' என்று உரத்த குரலில் கூறியவாறு மறியல் செய்து கொண்டிருந்த சத்தியாக்கிரகிகளைத் தாங்கள் வைத்திருந்த குண்டாந்தடிகளால் முரட்டுத்தனமாகத் தள்ளிவிடலாயினர். தரையில் விழுந்திருந்தவர்களையும் தூக்கி நிறுத்தித் தள்ளிவிடலாயினர். ஆனல், போலீஸாரின் இந்தக் கெடுபிடிகளுக்குச் சத்தியாக்கிரகத் தொண்டர்கள் சிறிதும் அஞ்சவில்லை. அவர்கள் மறுபடியும் வந்துநின்று அமைதியாக மறியல் செய்யலாயினர். இது கண்டு ஒரு கணம் திகைத்துப்போன போலீஸார் அடுத்து தங்கள் குண்டாந்தடியைச் சுழற்றி அவர்களை விரட்டலாயினர். இதனல், சத்தியாக்கிரகிகள், சிலருக்குத் தடியடி விழலாயிற்று; சிலர் காயமுற்றனர்.

இது போன்ற துவந்துவ யுத்தம் வேடிக்கை பார்க்க வந்த பொது மக்களையும் ஆவேச உணர்ச்சி கொள்ள வைத்தது. இதற்குள் சிலர், சத்தியாக்கிரகத் தொண்டர்கள்வந்து கள்ளுக்கடையை மறியல் செய்வதையும், அதனல் ஏற்பட்டுள்ள நெருக்கடியான நிலைமையையும் கள்ளுக்கடை முதலாளியான சாமிநாதப் பிள்ளைக்குத் தகவல் சொல்லலாயினர். சிலர் முதலாளியின் தம்பியிடமும் முறையிட்டனர். முதலாளியோ இந்நிலைமையை எப்படிச் சமாளிப்பது என்று யோசிக்கலானர். ''தம்பியப்பா'' எனச் செல்லமாக அழைக்கப்படும் முதலாளியின் தம்பியான சௌந்தரராஜப் பிள்ளை மட்டும் சத்தியாக்கிரகிகள் தங்கள் கடையை மறியல் செய்ய வந்திருக்கும் செய்தி கேட்டுக் கோபத்தால் குதிக்கலானர். ''யாரடா அது? நம்ம கடையை வந்து மறியல் செய்வது? அவ்வளவு நெஞ்சுத்

தைரியமுடையவர்களும் இருக்கிறார்களா? அவர்களுக்கு நம்ம சங்கதி தெரியாது போலிருக்கு. இதோ வருகிறேன் என்று சொல்லு'' என்று முழங்கிக் கொண்டே பெரிய மலை போன்ற தம் உடம்பைத் தூக்கிக் கொண்டு வேகமாகப் புறப்படலானார். அடுத்த கணம் அவர் கையில் துப்பாக்கி இடம் பெற்றது: அவருடன் அவருடைய பரிவாரங்களும் கிளம்பலாயினர்: அக்கம் பக்கத்து மக்களும், ''தம்பியப்பா கோபத்துடன் கிளம்பி விட்டாரே! என்ன விபரீதம் நடக்கப் போகிறதோ?'' என்ற அச்சத்துடன் அவர்கள் பின்னால் நடந்தார்கள்:

சாமிநாதப் பிள்ளையின் வீட்டிற்கும், கள்ளுக் கடைக்கும் மூன்று பர்லாங்கு தூரம்கூட இருக்காது. அவர் இருக்கும் தெருவிற்கு அடுத்த திருப்பத்தில்தான் கள்ளுக்கடை இருந்தது: கடையை அடுத்தாற் போலவே 10 கஜ தூரத்தில் ஐஸ்ஹவுஸ் போலீஸ் ஸ்டேஷன் இருந்தது. ஆனால், அது திருவல்லிக்கேணி பகுதிக்கு மட்டுமே உரியது. கிருஷ்ணாம்பேட்டை பகுதிக்குப் பொறுப்பான போலீஸ் ஸ்டேஷன் இராயப்பேட்டை நெடுஞ் சாலையில் இருந்தது.

இந்தக் கள்ளுக்கடை மறியலால் ஏற்படும் நிலைமையைச் சமாளிக்க இராயப்பேட்டை போலீஸார்தான் வந்திருந்தனர்: 'ஐஸ்ஹவுஸ்' போலீஸ் ஸ்டேஷனைச்சேர்ந்த போலீஸார் இவர்களுக்கு உதவியாக இருந்தனர். இவர்களை மேற்பார்க்கவும் மறியல்நிலைமையைக் கண்காணிக்கவும் டிபுடி கமிஷனர் ஒருவர் வந்திருந்தார். இதுவன்றி 'இண்டலிஜன்ஸ்' டிபார்ட்மெண்ட்டைச் சேர்ந்த சி. ஐ. டிக்கள் சிலரும் உத்தியோக உடுப்பின்றி கூட்டத்தோடு கூட்டமாக நின்று நடப்பதைக் கவனித்துக் கொண்டிருந்தனர். இந்தச் சி.ஐ.டிக்களில் ஒருவர் சத்தியாக்கிரகப் படைத் தளபதி ஒருவரைக் குறிப்பாகப் பார்த்துக்கொண்டிருந்தார். இதைத் தற்செயலாகக் கவனித்துவிட்ட அத்தளபதி அந்தச் சி.ஐ.டியை உற்றுப் பார்த்துவிட்டு, ''யார் அனந்தனா? நீ இங்கேயாப்பா இருக்கே? ஊரிலிருந்துவந்து எவ்வளவு நாளாச்சு? என்ன செய்துகொண்டு இருக்கே?'' என்று உரத்தகுரலில் கேட்டார். தன்னை இன்னார் என்று காட்டிக்கொள்ளக் கூடாது என்று எச்சரிக்கையாய் இருந்த அந்தச் சி.ஐ.டி. தளபதியின் குரலைக்கேட்டுத் திடுக்கிட்டுப் போனார். பின் தன்னைச் சுதாரித்துக் கொண்டு ''ஓ! பத்மநாப அண்ணனா? நான்...நான்...'' என நிறுத்திப் பின், "நீங்களும் இங்கே தான் இருக்கிறீங்களா? திருச்சூரிலிருந்து எப்போது வந்தீங்க? எங்கே இருக்கீங்க?'' எனக் கேட்டார். ''போனவாரம் தான் வந்தேன். சத்தியாக்கிரகப் படையில்சேர்ந்து மறியல் செய்வதற்காக குருவாயூர் தலைவர் கேளப்பன் என்னை அனுப்பியிருக்கிறார்...'' எனச்

சொல்லிக் கொண்டிருக்கும்போதே கூட்டம் நெருக்கியடித்துக் கொண்டு வந்து அவர்களை மோதித்தள்ளிப் பிரித்து விட்டது.

கரிய பெரிய மலை அசைந்து வருவதுபோல் ஆடி அசைந்து வந்து கொண்டிருந்த தம்பியப்பா, கள்ளுக்கடையை நெருங்க நெருங்க மக்களிடையே பரபரப்பு அதிகமாகிக் கொண்டிருந்தது. அவர் வழி நெடுகிலும் மறியல்செய்ய வந்திருக்கும் சத்தியாக்கிரகத் தொண்டர்களைப் பற்றி வாய்க்கு வந்தவாறு வசைமாரி பொழிந்து கொண்டே வந்தார். இப்பேச்சு கேட்போர் சிலருக்குக் கேலியாகவும் இருந்தது; பயம் ஊட்டுவதாகவும் இருந்தது. அவர் கையில் வைத்திருந்த துப்பாக்கி பொதுவாக எல்லாருக்குமே அச்சத்தை ஊட்டியது.

இதற்கிடையே சத்தியாக்கிரகத் தொண்டர்கள் போலீஸாரின் கெடுபிடியையும், தடியடியையும் பொருட்படுத்தாமல் அணியணியாக வந்து மறியல் செய்துகொண்டு இருந்தனர். இதற்குள் ஏறக்குறைய 20 தொண்டர்கள் கைது ஆகி போலீஸ் வேனில் ஏற்றப்பட்டு இருந்தனர். இப்போது ஆருவது தொண்டர் படை, தளபதி பத்மநாபன் தலைமையில் மறியல் செய்து கொண்டிருந்தது. இந்தச் சமயத்தில் கள்ளுக்கடைக்கு முன் இருந்தவர்கள் இடையே சலசலப்பு ஏற்படலாயிற்று. ''அதோ தம்பியப்பா வருகிருர். சின்ன முதலாளி வந்து விட்டார்'' என்று சிலர் பதட்டக் குரலில் கூறினர். உடனே அங்கிருந்தோர் கிழக்கு திசையை நோக்கித் திரும்பிப் பார்த்தனர். தம்பியப்பா முன்வர அவருக்குப் பக்கத்திலும், பின்னுலும் பெருங்கூட்டம் வந்து கொண்டிருந்தது.

இதைக் கண்டதும் போலீஸார் திடுக்கிடலாயினர். ஆனுல் சத்தியாக்கிரகத் தொண்டர்கள் சிறிதும் பதட்டம் அடையவில்லை. வழக்கம் போலவே அவர்கள் அமைதியாகக் கள்ளுக்கடைக்கு வருவோரிடம் வேண்டுகோள் விடுத்தவாறு மறியல் செய்து கொண்டிருந்தனர். ''யாரடா அது? அங்கே? எங்கள் கடையை விட்டுப் போகப் போகிறீர்களா? இல்லையா?'' என்று தம்பியப்பா போட்ட அதட்டல் குரல்கூட அவர்களை அசைத்திடவில்லை. தன்னுடைய வருகையும் அதட்டலும்கூட சத்தியாக்கிரகிகளைச் சிந்தை கலங்க வைக்கவில்லை என்று அறிந்ததும், தம்பியப்பாவின் ஆத்திரம் அதிகமாய் விட்டது. அவர் காற்றினும் கடிய வேகமாகச் சத்தியாக்கிரகிகள் இருக்குமிடத்தை நோக்கித் தாவி வந்தார். இதற்குள் போலீஸ் அதிகாரிகள் அவருக்குக் குறுக்காக வந்து நின்று, 'சல்யூட்' அடித்து மரியாதை செய்தவாறு, ''நீங்கள் போங்கள் சார்! உங்களுக்குச் சிரமம் எதற்கு? நாங்கள் பார்த்துக் கொள்கிருேம்'' என்று சொன்னுர்கள்.

"சரிதானய்யா! உங்கள் பவிசு தான் இதோ தெரிகிறதே! கேவலம் இந்தக் காந்தி குல்லாக்காரன்கள் போலீஸ்காரர்களாகிய உங்களுடைய பௌருஷத்தைப் போக்கிவிட்டு உங்களைப் பிள்ளைப்பூச்சிகளாக்கி விட்டார்களே! உங்களைக் கண்டால் துடை நடுங்கி ஓடி ஒளிய வேண்டியவர்கள் அவர்கள். ஆனால், இப்போது நீங்கள் சோற்றுக்கு இல்லாத இந்தக் காந்தி தொண்டர்களைப் பார்த்து நடுங்கிச் சாகிறீர்கள். சரிதான், போங்கள் வழிவிட்டு, நான் இவர்களைக் கவனித்துக் கொள்கிறேன். உங்களுடைய உதவியொன்றும் எனக்கு வேண்டியதில்லை," என்று வீராப்பாகக் கூறிவிட்டு முன்னேக்கிப் போகலானுர். போலீஸ் அதிகாரிகள் இவருடைய ஆணவப் பேச்சைக் கேட்டு அதிர்ந்து போய் நின்றனர். டிபுடி கமிஷனர் சிந்தனையுடன் அவ்விடத்தினின்றும் மெல்ல அகன்ருர். கள்ளுக்கடை முன் குழுமியிருந்த மக்கள் கூட்டம் பயபக்தியுடன் தம்பியப்பாவுக்கு வழிவிட்டு ஒதுங்கி நிற்கலாயிற்று.

சத்தியாக்கிரகிகளின் மறியலைக் கண்டு தயங்கி வெளியே நின்றிருந்த குடிகாரர்கள் சிலர் சின்ன முதலாளியின் வருகையால் தைரியம் அடைந்து வேண்டுகோள் விடும் தொண்டர்களை விலக்கிக் கொண்டும், தரையில் படுத்திருக்கும் தொண்டர்களை மிதித்துக் கொண்டும் கள்ளுக்கடைக்குள் 'திமு திமு'வெனப் புகுந்தனர். இவர்களிடையே தம்பியப்பா துப்பாக்கியுடன் குறுக்கே பாய்ந்து, "டேய், வயிற்றுச் சோற்றுக்கு வக்கற்ற சோம்பேறிப் பசங்களே! எங்கள் கடையை விட்டுப் போகிறீர்களா? இல்லையா! உங்களைத் தொலைத்து விடுவேன் தொலைத்து, ஆமாம்; சொல்லிவிட்டேன். உங்கள் உயிர்மீது ஆசையிருந்தால் உடனே போய் விடுங்கள்" என்று ஓங்கிக் கூக்குரல் இட்டார். இது கேட்டு மக்கள் கூட்டமும் போலீஸும் கதிகலங்கி நின்றனர்: சத்தியாக்கிரகிகள் மட்டும் சற்றும் அசைந்து கொடுக்கவில்லை. இது இன்னும் தம்பியப்பாவிற்கு அதிக ஆத்திரத்தை உண்டு பண்ணியது. "என்னடா நான் சொல்லுகிறேன், சிறிதும் சட்டை செய்யாமல் அப்படியே நிற்கிறீர்களே! நான் ஏதோ வாயால் சொல்லுகிறேன் என்று நினைக்கிறீர்களா? இன்னும் ஒரு நிமிஷத்திற்குள் நீங்கள் கடையைவிட்டுப் போகவில்லையானல் பறவைகளைச் சுட்டுத் தள்ளுவதைப் போல் ஈவிரக்கமில்லாமல் உங்கள் எல்லோரையும் சுட்டுத் தள்ளிவிடுவேன்" என்று உறுமினுர். அத்துடன் நில்லாமல், தம் கையில் வைத்திருக்கும் துப்பாக்கியையும் தூக்கிப் பிடித்து அவர்களுக்கு நேரே குறி பார்ப்பது போல் நீட்டினுர்.

அச்சமயம் மறியல் செய்யும் தொண்டர்களை மேற்பார்வை செய்தவாறு சமயோசிதம் போல் அவர்களுக்கு உத்தரவு பிறப்பித்துக் கொண்டிருந்த தளபதி பத்மனுபன் முன்வந்து, "பிள்ளை

வாள்! எங்களைச் சுட்டுத் தள்ளப் போகிறேன் என்றுதானே சொல்லுகிறீர்கள்; காந்தி மகாத்மா கட்டளைப்படி தேசசேவை செய்ய வந்திருக்கும் எங்களுக்கு இந்தக் குண்டுப் பரிசு கிடைத்தால் அளவில்லா மகிழ்ச்சியுடன் அதை ஏற்றுக்கொள்வோம்'' என்று கூறி, தம்பியப்பாவிற்கு முன் நின்று தம் மார்பை நிமிர்த்திக் காட்டினர். கூட்டத்தோடு கூட்டமாக நின்று நடப்பவற்றை எல்லாம் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்த சி. ஐ. டி அனந்தனுக்குப் பத்மநாபனின் செயல் துணுக்கம் உண்டாக்கிற்று. நிலைமை எப்படித் திரும்புமோ என்ற கவலையுடன் அவன் பத்மநாபன் பக்கம் நெருங்கி நின்ருன். பத்மநாபனின் அமைதியான வீரப்பேச்சு தம்பியப்பாவிற்கு அவரைக்கேலி செய்வது போல் தோன்றியது. ஆகவே, அவர் இராவணுவதாரம் கொள்ளலானர். ''அட! துப்பாக்கிக் குண்டுக்கு முன் மார்பைத் திறந்து காட்டும் சூரப்புலியைப் பாருங்கடா! இப்படிப் பகட்டிப் பேசினல் நான் பிரமித்துப் போய்ப் பின்வாங்கிவிடுவேன் என்பது உன் நினைப்போ? அதெல்லாம் இந்த 'ஐயாவிடம் நடக்காது. நான் எச்சரித்திருக்கிறபடி உன் ஆட்களுடன் உடனே இவ்விடத்தை விட்டு நீ போகவில்லையானல், உங்களெல்லோரையும் சுட்டுப் பொசுக்கி விட்டு மறுவேலை பார்ப்பேன். ஜாக்கிரதை!'' என்று கூறிக்கொண்டே துப்பாக்கி முனையை அவர் மார்பின் மீது வைத்து அழுத்தினர். இது கண்டு அங்கு இருந்த எல்லோருமே (சத்தியாக்கிரகிகள் உட்படப்) பயந்துவிட்டார்கள். பத்பநாபனுக்குப் பக்கத்திலிருந்த அனந்தன் மட்டும் அச்சத்துக்கு இடங்கொடாது, திடீரெனப் பாய்ந்து தம்பியப்பாவின் கையிலிருந்த துப்பாக்கியைத் தட்டிவிட்டான். அத்துடன் நில்லாமல், அவன் கண்மூடிக் கண் திறப்பதற்குள் தன்னுடைய மேல் துண்டை உருவியெடுத்துத் தம்பியப்பாவின் கழுத்தில் போட்டுக்கைகளோடு சேர்த்துப் பிடித்துக்கொண்டான். இதுகண்டு ''ஆஹா...ஹா'' என்ற பயப்பீதி ஒலி எல்லோரிடமிருந்தும் எழலாயிற்று. போலீஸார் உட்பட எல்லோரும் பிரமைபிடித்து நின்றுவிட்டனர். சில விநாடிகள் கழித்து ஒரு கான்ஸ்டபிள் மட்டும் தூரப்போய் விழுந்து கிடந்த துப்பாக்கியை ஓடிச்சென்று தூக்கிக்கொண்டான்.

இராவணன் போல் வணங்காமுடியான தம்பியப்பா இவ்விதமான நிலையைச் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. நிமிர்ந்து நின்று தன் விருப்பம்போல் எதையுஞ் செய்து அவர் பழக்கப்பட்டவர் அவருக்குத் தடையெதுவும் ஏற்பட்டு அனுபவமில்லை. அவர் பிறரைத் தட்டிக் கேட்டு ஆணையிட்டதைத் தவிர அவரை இதுவரை யாரும் தட்டிக்கேட்டு அறிந்தவரில்லை. இப்போது இங்கும் தன்னை யாரும் தட்டிக் கேட்கமாட்டார்கள் என்று கருதியிருந்த அவருக்கு ஸி. ஐ. டி அனந்தனின் தீரச்செயல்

திடுக்காட்டத்தை யுண்டுபண்ணியது. அவர் தன் கையிலிருந்த துப்பாக்கியைத் தட்டிவிட்டதோடு, ஒருவன் தன்னையும் துணி போட்டுப் பிடித்துக் கொண்டதை உணர்ந்து பேரதிர்ச்சிகொண்டு நின்றுவிட்டார். இப்பிரமிப்பிலிருந்து தன்னை சுதாரித்துக் கொள்வதற்கு அவருக்குச் சில விநாடிகள் ஆயின. ''யாரடா! அவன் என்னைப் பிடிக்கிறது? என்னைத் தொடுவதற்குக்கூட ஒருவனுக்குத் தைரியம் வந்துவிட்டதா?'' என்று சொல்லிக்கொண்டே தன் தோள்களைக் குலுக்கி ஒரு உலுக்கு உலுக்கினர். இதனல் சி. ஐ. டி. அனந்தன் சிறிது நிலைகுலைந்துதான் போனன். தன் பிடி தளர்வதை உணர்ந்து திடுக்கிட்ட அவன் மிகச் சிரமத்துடன் சமாளித்துக் கொண்டு தன் பிடியை இறுக்கலானன். தனக்கு உதவியாக ஸி. ஐ. டி. சகாக்களும் போலீஸ்காரர்களும் வருவார்கள் என்று எதிர்பார்த்து அவன் ஏமாற்றத்தையே அடைந்தான். போலீஸார் அவனுக்கு உதவி புரியாதது மட்டுமல்லாமல் சிலர் உபதேசமும் செய்யலாயினர்.

''என்ன காரியம் செய்தாய், அனந்தன்?''

''அவர் யார்? எப்பேர்ப்பட்ட செல்வாக்குடையவர் என உனக்குத் தெரியாதா? நம்ம இலாகா பெரிய அதிகாரிகள் கூட அவர் முன் கூழைக் கும்பிடு போடுவார்களே.''

''அவரை விட்டு விடப்பா! வீணக நீ ஏன் வம்பையும் ஆபத்தையும் விலைக்கு வாங்கிக்கொள்கிருய்?''

இது போன்ற பேச்சுக்கள் தான் அனந்தன் காதில் விழுந்தன. இது கேட்டு அவன் மனம்வேதனையடைந்தான்.

''இங்கு நேரவிருந்த ஆபத்தான நிலைமையைச் சமாளிக்க என் கடமையைச் செய்தேன். இது தவரு?'' என்ற வார்த்தைகள் அனந்தனின் வாயிலிருந்து வந்தன. ''S. I.க்கும், D.C.க்கும் தெரியாதா? ஏதாயினும் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்ருல் அவர்கள் சொல்ல மாட்டார்களா? அதிகப் பிரசங்கித்தனமாக நீ இப்படி நடந்து கொண்டாயே?''

ஹெட் கான்ஸ்டபிள் ஒருவர் கோபமாகச் சொன்னர்.

''டிப்டி கமிஷனர் என்ன சொல்கிருர்? கேளுங்கள்?'' அனந்தன் சொன்னன்.

சில கான்ஸ்டபிள்கள் சுற்று முற்றும் பார்க்கலாயினர்.

''அவர் எங்கே இருக்கிருர்? அவர் போய் சிறிது நேரம் ஆயிற்றே!'' என்ருர் ஒரு கான்ஸ்டபிள்.

''ஏதோ தெரியாத்தனமாய் செய்தது செய்துட்டே. அவரை விட்டுட்டு அவரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளப்பா.''

அனந்தனைப் போல உள்ள ஒரு சி. ஐ. டி சொன்னர். இதற்குள் இலாவகமாக கழுத்தை இறுக்கிப் பிடித்திருந்த துண்டை எடுத்துத் தோள்களைச் சேர்த்துப்பின் கட்டாகக் கட்டிப் பிடித்துக் கொண்ட அனந்தன் ''ஊ ஹூம்...நான் இவரை விட முடியாது. இவரை விட்டால் அடுத்த கணம் ஆபத்தான நிலைமை தான் ஏற்படும். பிடித்தது பிடித்து விட்டேன். இவரை ஸ்டேஷனுக்கு அழைத்துச் சென்று இன்ஸ்பெக்டரிடம் ஒப்படைத்து விடுகிறேன். அவர் என்ன வேண்டுமானுலும் செய்து கொள்ளட்டும். எனக்கு அக்கறையில்லை''.

அனந்தன் உறுதியான குரலில் சொன்ஞன். அவன் தம்பியப்பாவைப் பிடித்திருந்த பிடி அவனுடைய சொல்லைப் போலவே அழுத்தமாயிருந்தது.

போலீஸாருக்கும் மற்றவர்களுக்கும் திகைப்பு அதிகமாயிற்று.

மற்றவர்களைப் போலவே திகைத்துப் போய்ச் செயலற்றிருந்த பத்மனுபன் இச்சமயம் அனந்தனை நோக்கி ஏதோ சொல்ல வாயெடுத்தார்.

அதற்குள் அனந்தன் தம்பியப்பாவைப் பிடித்துத் தள்ளிக் கொண்டு போலீஸ் வேனை நோக்கிச் சென்ருன். ஆஜானுபாகுவான தம்பியப்பா அவனுடைய பிடியிலிருந்து விடுபட எப்படியெப்படியோ திமிறிப் பார்க்கலானுர். அவருடைய ஜம்பம் ஒன்றும் சாயவில்லை. அவன் பிடி உடும்புப் பிடிபோல் இரும்புக் கணக்காய் இருந்தது.

எங்கோ போய்விட்டு வந்த சப்-இன்ஸ்பெக்டர், அனந்தன் தம்பியப்பாவை மேல் துண்டினுல் இரு கரங்களையும் பின் கட்டாக இறுக்கிக் கட்டித் தள்ளிக்கொண்டு போவதைப் பார்த்துவிட்டு, ''அனந்தன்! என்ன காரியம் செய்துட்டே! நீ?'' என வியப்பும், விதிர்ப்பும் மேலிடக் கூறினுர்.

''என் கடமையைச் செய்தேன் சார்'' எனச் சொல்லிக் கொண்டே திரும்பிப் பாராமல் போகலானுன். ஒரு கான்ஸ்டபிள் அவன் காதருகேசென்று, ''நீ பலே ஆளப்பா! உன் தைரியத்தைப் பாராட்டுகிறேன்'' என்ருன்.

''உங்க பாராட்டுக்கு நன்றி ஐயா! எனக்குத் தைரியமுண்டாக்கியது சத்தியாக்கிரகப் படைத் தளபதியின் அஞ்சா நெஞ்சம்தான். கள்ளுக் கடைக்காரரின் குண்டுக் குறிக்கு ஆளாக இருந்த அவர் எங்கள் ஊர்க்காரர். மலையாளி'' என்று அனந்தன் உற்சாகமாகச் சொன்ஞன்.

''ஓ! அப்படியா சங்கதி!'' என்ற கான்ஸ்டபிள், ''எது காரணமாக இருந்தாலும், நீ இப்பொழுது செய்துள்ளது அபாரச் செயல் ஆகும்'' என்று கூறிவிட்டு நகர்ந்தான்.

கடைசியாக, அனந்தன் போலீஸ் வேனண்டை சென்று, ''கொஞ்சங் கதவைத் திறவுங்கள், ஐயா!'' என்று கூறினுன்.

பிரமிப்புடன் வேடிக்கை பார்த்துக் கொண்டு, போலீஸ் வேனில் ஏற்றியிருந்த தொண்டர்களைக் காவல் புரிந்து கொண்டிருந்த போலீஸார் அனந்தன் அதிகாரத் தோரணையோடு கதவைத் திறக்குமாறு கூறியதைக் கேட்டுச் சிறிதுந் தயங்காமல் கதவைத் திறந்து விட்டனர். உடனே அனந்தன் தம்பியப்பாவின் முதுகில் தட்டி, ''ஊம்; வண்டியில் ஏறுங்க'' என்று சொல்லித் தோள்களைக் கட்டியிருந்த துணியை இறுக்கித் தூக்கித் தள்ளினுன். எப்படியும் விடுபட முடியாத நிலையில வேறு வழியின்றித் தம்பியப்பா வண்டியில் ஏறினுர். அனந்தனும் ஏறலானுன். இச்சமயத்தில் சில போலீஸ்காரர்கள் ஓடிவந்து வேனில் ஏறிக் கொண்டனர். அனந்தன் கதவைச் சாத்திக் கொண்டு, ''251! வேனை இராயப்பேட்டை ஸ்டேஷனுக்கு ஓட்டு! இல்லை...இல்லை, போலீஸ் கமிஷனர் ஆபீஸுக்கு ஓட்டு'' என்று கூறினுன். டிரைவர் கான்ஸ்டபிள்; வேனில் இருந்த மற்றக் கான்ஸ்டபிள்களை ஒரு விதமாகப் பார்த்துவிட்டு வண்டியை வேகமாக ஓட்டலானுன். சத்தியாக்கிரகிகளான தங்களைச் சிறை செய்து செல்வதற்காக வந்த போலீஸாரில் ஒருவன், கள்ளுக்கடைச் சொந்தக்காரனொருவனையே கைது செய்து கொண்டு வந்த அதிசயத்தைக் கண்டு தொண்டர்கள் மகிழ்ச்சியாரவாரம் செய்யலாயினர். இந்த உற்சாகத்தில் அவர்கள் ''பாரத மாதாகி ஜே! மகாத்மா காந்திக்கு ஜே!'' என ஜே கோஷம் போடலாயினர்.

இதுவரை மந்திரத்தால் கட்டுண்ட பாம்பைப் போல் உணர்வற்று, நடப்பதையெல்லாம் கவனித்துக் கொண்டிருந்த மக்கள் கூட்டம் போலீஸ்வேன் போனதும் பரபரப்படைந்து பலவிதமாகப் பேசிக் கொள்ளலாயினர்.

தங்கள் சின்ன எஜமானையே ஒரு சி ஐ.டி. கட்டிப் பிடித்து விட்டானே என்ற பயப்பிரமையால் செயலற்று இருந்த கள்ளுக் கடையாட்களும், குடிகாரர்களும் ஆளுக்கு ஒருவிதமாகப் பேசி ஆர்ப்பரிக்கலாயினர். கடைத் தலைமைக் குமாஸ்தா ஒரு சி.ஐ.டி. தம்பியப்பாவைப் பிடித்துக் கொண்டு போன செய்தியை முதலாளியிடம் போய்ச் சொல்ல சிப்பந்திகள் சிலரை ஏவினுர். சிலர் வெளியே வந்து 'ஆய்...ஊய்...' என்று கூவி விகாரமாகக் கை கால்களை ஆட்டலாயினர். எஞ்சியிருந்த போலீஸார், பிரமை பிடித்துப் போய் நின்றிருந்த சத்தியாக்கிரகத் தொண்டர்

களைப் பார்த்து, "இத்தோடு உங்கள் மறியலை முடித்துக் கொண்டு போங்கய்யா! இனியும் இருந்தால் ஏதேனும் விபரீத மாகப் போகிறது" என்று மெல்லக் கூறி விட்டுக் கூட்டத்தை நோக்கி, "சரி...சரி! போங்க கலேந்து" என்று அதட்டிக் கொண்டே போயினர். கூட்டம் மெல்லக் கலையலாயிற்று. அனந்தனின் துணிச்சலான செய்கையைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்த பத்மநாபன், கைது ஆகக் காத்திருந்த தொண்டர் களை நோக்கி, "சரி; வாருங்கள் நாம் முகாமுக்குப் போவோம்" என்று சொல்லிக் கொண்டு அவ்விடத்தை விட்டு மேற்கே நடக்க லானுர். அவர் வாய், 'அனந்தனுக்கு ஒன்றும் நேராமல் இருக்க வேண்டும். ஆண்டவனே!' என்று முணு முணுக்கலாயிற்று.

—: o :—

22

# உள்ளும் புறமும்

ஓட்டலின் 'குடும்ப அறை'க்குள் நுழையு முன்பு சிறிது நின்று சுற்று முற்றும் பார்வையை வீசிய முத்து, ''இன்னும் ரமணன் வரவில்லேன்னு தோணுது'' என்ருன்.

அருகில் நின்ற அவன் மனைவி வள்ளி ''நாம் போய் உட்காரலாம் வாங்க. அவர் வரப்போ வரட்டும்'' என்று அலுப்புற்ற குரலில் கூறினுள்.

''அது நல்லாயிருக்குமா? ஸ்பெஷலாய் இங்கே வந்து எங்களோடு சாப்பிடுன்னு அழைப்புக் கொடுத்துட்டு அப்புறம் அலட்சியப்படுத்தரேம்னு அவனும் அவன் பெண்டாட்டியும் நினைச்சுகிட்டால்?''

''நினேச்சால் நினேக்கவேண்டியதுதான். அதுக்கு நாம் என்னங்க செய்யறது? சொன்ன டயத்துக்குச் சரியா வரலேன்னு யார் தப்பு அது? அந்த பங்ச்சுவாலிடியெல்லாம் வெளியூர்க்காரங்க கிட்டேதான் கத்துக்கணும். நம்மவங்களுக்கு எங்கே!''

முத்துகிருஷ்ணனுக்கு நாற்பத்து மூன்று வயது. பிறவிப் பணக்காரன் மட்டுமன்றிப் பிரபல தொழிலதிபர் கூட. உணவு வாசனேத் திரவியங்களே ஏற்றுமதி செய்யும் வாணிபம் மிகச் செழிப்பாய் நடந்துகொண்டிருந்தது. அவ்வப்போது வெளி நாட்டுப் பயணங்களுக்காக அவன் கிளம்பும்போது வள்ளியும் உடன் செல்வாள். அந்நாடுகளில் அவளுக்கு ஏற்பட்ட ஈடுபாட்டினுல் அவையே நாகரிகத்தின் உறைவிடமாகவும் தன் சொந்த மண் பாமர நாடாகவும் தோன்றியது. புக்ககம் வந்துவிட்ட புதுமணப்பெண் பிறந்தகத்துக்கு ஏங்குவதுபோல் ''எங்கேயானும்

ஃபாரின்லே போய் ஸெட்டில் பண்ணிடலாங்களே!'' என்று அடிக்கடி கூறுவாள்.

முத்து பட்டதும் படாததுமாக ஒரு பார்வை அவளைப் பார்த்தான். அதில் அவன் மனத்தில் குழம்பிக்கொண்டிருந்த சஞ்சலங்களெல்லாம் நிழலாடின.

''நீ உள்ளே போய் உட்காரு. நான் அவங்க வந்ததும் கூட்டிகிட்டு வரேன்.''

''ஓட்டல் பையன் எவனண்டையாவது சொல்லி அவங்களை உள்ளே அனுப்பச் சொன்னால் போச்சு. அதுக்காக நீங்களேதான் காவல்காரன் மாதிரி நிற்கணுமா என்ன?''

''ரமணன் என் நண்பன், வள்ளி! ஞாபகமிருக்கட்டும். நாங்க ரெண்டுபேரும் ஒண்ணுப் படிச்சவங்க. ஒண்ணு சத்தியாக்கிரகம் செய்தவங்க. ஒரே கொள்கையைக் கடைப்பிடிச்சவங்க.''

அவன் முன், காலம் சரிந்தது. அந்தக் கொள்கை, அந்தச் சத்தியத் தீவிரம்...

அகிம்சையின் வழியிலேயே போராட்டம் நடத்தி அன்னிய ஆட்சியை முறியடிக்க அன்று அறைகூவல் எழுப்பிய ஓர் எளிய, மெலிந்த, முதிர்ந்த உருவம் அவன் மனத்தில் தெளிவாக எழுந்தது. அன்பே வடிவான அந்தத் தூய திருவுருவம், அந்த மகான், ஆயுதமின்றியே போர் நடத்தி அதில் வெற்றியும் கண்ட புதுமையை உலகமே பார்த்து அதிசயிக்கவில்லையா? பகைவனை வெறுக்காமல் அநீதியை மட்டுமே வெறுத்த அந்த அகிம்சைத் தளபதி காட்டிய நெறியில், அன்று அடிமைப்பட்டிருந்த நாட்டில் பலகோடி இதயங்கள் விழிப்படைந்து வீறு கொண்டன. சத்தியமும் அகிம்சையும் வீரதின் மறு பெயர்கள் என்பதைத் தம் ஒவ்வொரு செயலிலும் நிலை நிறுத்திக் காட்டினார் அவர்.

அந்த நினைப்பிலேயே முத்துவுக்கு மெய்சிலிர்த்தது. நாடு முழுவதிலும் அன்று சிம்ம கர்ஜனையாய் ஒலித்த அந்தச் சத்தியப் பெருமுழக்கம் தீமூட்டிச் சுடரெழுப்பிய எண்ணற்ற வாலிப உள்ளங்களில் அவனுடையது, கோபியினுடையது...

கோபி என்னவானான்? அவன் இருக்குமிடமே தெரியவில்லையே?... போகட்டும், இத்தனை ஆண்டுகளில் அவ்வவ்போது ரமணனையேனும் சந்திக்க முடிந்ததே.

''என்ன அப்படிப் பிரமிச்சுகிட்டு நிற்கறீங்க?''

''நீ உள்ளே போ வள்ளி, சொன்னேனில்லே?''

அதே சமயம் வாயிற்புறம் அடர்ந்த சிறு கும்பலிலிருந்து உதிர்ந்துகொண்டு முன்னால் வந்து நின்ற வடிவம் அவனைப் பார்த்துப் புன்னகை புரிந்தது.

''குட் ஆப்டர்னூன், முத்து! கொஞ்சம் லேட்டாயிட்டுது மன்னிச்சுக்கப்பா! நீ பெரிய பிஸினஸ்மேன். உலகம் பூரா சுத்தற பணக்காரன். உன் நேரத்துக்குக் கூட விலை உண்டுதான்! ஆனாலும் நண்பனாச்சேன்னு பொறுத்துக்க.''

''வா ரமணா! ரூமுக்குள்ளே போகலாம் வா''

''நான் ரெடி.'' தான் ஒரு செல்வச் சீமானின் நண்பன் என்பதைக் காட்டிக்கொண்டுவிட்டபிறகு, தனிப்பட்ட முறையிலும் தான் ஒரு முக்கியமான புள்ளி என்று வலியுறுத்துபவனாக ரமணன் சிறிதுநேரம் அப்படியே நின்று, அறையிலிருந்தவர்களில் யாரேனும் இயன்றால் தன்னை அடையாளம் கண்டுகொள்ள நேரமளித்தான். ''இதோ, இவள் என் மனைவி, சீதா. இவன்தான் என் நண்பன் முத்துக்கிருஷ்ணன். நாங்க அடிக்கடி சந்திச்சுக்க முடியாமல் போனாலும் ரொம்ப நாளைய நண்பர்கள். பழைய நாளில் ஒண்ணாப் படிச்சவங்க.''

அதைச் சொல்லும்போது அவன் உள்ளத்திலும் ஒரு வீறு கொண்ட இளைஞர் கூட்டம் தெரிந்ததோ? ''இந்தியாவினின்று வெளியேறு'' என்று அன்னியனை நோக்கி வீரவாக்கு மொழிந்து எந்தத் தண்டனைக்கும் அஞ்சாது நின்ற அந்த மகாத்மாவின் குரல் கேட்டுச் சிலிர்த்தெழுந்து, கிளர்ச்சியில் குதித்த மாணவர்க் கூட்டம் தெரிந்ததோ? முத்து அதை அறிய நண்பனின் முகத்தை உன்னினான். ரமணனின் திருப்திகொண்ட தோரணையில் அந்தத் துடிப்பு மிக்க கூட்டத்தின் காட்சி மங்கலாகக் கூடப் பிரதிபலிக்கவில்லை.

பரஸ்பரம் வணக்கம் தெரிவித்துக் கொள்கையில் இரு பெண்களும் ஒருவரையொருவர் கண்களால் நிறுத்து அளந்து கொள்வதை அவன் கவனித்தான். அதே சமயத்தில் அறையில் சிற்றுண்டி புசித்துக்கொண்டிருந்த ஒருவர் ரமணனை அடையாளம் கண்டுகொண்டுவிட்டு அருகிலிருந்த தோழனின் கையைத் தொட்டு ''அதோ அவர்தான் பி. டி. ரமணன். காந்திஜியைப் பத்தி நிறைய புத்தகங்கள் எழுதியிருக்காரே, அந்த ஆள்!'' என்று முணுமுணுத்தார். இதைக் கவனித்துக் கொண்ட ரமணனின் முகத்தில் திருப்தி அதிகரித்தது. பிறகு குடும்ப அறையினுள் நால்வரும் நுழைந்தனர். கண்ணாடிக் கதவு பின்னே மூடிக்கொண்டது. முதலில் உணர்வாகும் ஒருவித மெல்லிய நெடியோடு குளிர்சாதனத்தின் இதம் வந்து சூழ்ந்து கொண்டது.

"என்னடா சாப்பிடறே, ரமணு?" என்றான் முத்து.

"உனக்கு எது இஷ்டமோ கொண்டுவரச் சொல்லேன்!"

சரி, முதல்லே சூடாய் வெஜிடபிள் ஸமோஸா. அப்புறம் க்ரீன் பீ மஸாலா, பாதாம் அல்வா, உருளைக்கிழங்கு கட்லெட், அதன் கூட தக்காளி, பட்டாணி, லெட்யூஸ் இதெல்லாம் சேர்த்துந்தான். அப்புறமா காப்பி, ஐஸ்காப்பியாவே இருக்கட்டும், என்ன ரமணு?"

"ஓ கே! வாட் எவர் யூ ஸே,"

"அந்தப் பொருள்களின் பட்டியலே ரமணனுக்கும் சீதாவுக்கும் அஜீரணம் ஏற்படுத்திவிடும் என்ற நினைப்பில் சிறிது உற்சாகம் கொண்டவளாய் வள்ளி சீதாவை நோக்கிச் சிக்கனமாக ஒரு புன்னகை உதிர்த்தாள். ஆனால் தம்மிருவருக்கும் கூட இம்மாதிரி உணவு பழக்கம்தான் என்று காட்டிக்கொள்பவனாக ரமணன் முகத்தில் எவ்விதத் திகட்டலும் இன்றி இயல்பாக, "நல்லவேளை! போன தடவை நாங்க இங்கே வந்தப்போ வெஜிடபில் புலாவும் பட்டர் மசாலா தோசையும் குலோப்ஜானும் சாப்பிட்டோம். நீ அதையே சொல்லாதது நல்லதாப் போச்சு, அப்புறம் என்ன சமாசாரம் முத்து? மெட்ராஸில் எத்தனை நாள் இருப்பே?" என்றான்.

"இன்னும் ரெண்டு நாளில் ஊட்டிக்குக் கிளம்பறேன். நீயும் வாயேன் குடும்பத்தோட!"

"குடும்பத்தோடா! நாலு குழந்தைகளப்பா எனக்கு!"

"பரவாயில்லே. எனக்கும் தான் ரெண்டுபேர் இருக்காங்க!"

"ஆசைக்கொரு பெண், ஆஸ்திக்கொரு பிள்ளை! வேண்டியதுதான். ரெண்டும் நிறைய இருக்குதே உனக்கு முத்து!"

"உனக்கு மட்டும் என்ன குறைச்சல்? என்னைப் போல பிஸினஸ்மேனா இல்லேன்னாலும் நீயும் தான் கைநிறையச் சம்பாதிக்கிற வேலே பார்க்கறே. அதுவும் தவிரப் பெரிய எழுத்தாளன் வேறே!"

ரமணன் மிகுந்த செருக்குடன் நிமிர்ந்து உட்கார்ந்தான். "ஆமாம், நாற்பத்திரண்டாம் வருஷம் மாணவர்களாய் இருந்தப்போ நாம் கிளர்ச்சி, மறியல் எல்லாம் செய்திருக்கோமே! அந்த நாளிலே காந்திஜியாலே நாம் இன்ஸ்பைர் ஆனேமில்லேயா? அதனால் தான் நான் ஒரு எழுத்தாளன்!"

"ஆமாம், அவர் கொள்கைகள் ஒவ்வொண்ணைப் பத்தியும் தான் பல புத்தகங்கள் எழுதியிருக்கியே!"

"நீ மட்டும் சளேச்சவனு? அவர் பெயரிலே எத்தனை கட்டடம் நிறுவியிருக்கே நீ! உனக்கு அதனுலெல்லாம் எத்தனை புகழ் தெரியுமா?"

அந்தப் பாராட்டைக் கேட்டு முத்துவின் நெஞ்சம் உள்ளே குமையும் அதிருப்தியையும் மீறி உடனுக்குடன் பெருமிதமுற்றது.

"அப்படியா! எனக்குப் புகழ் வந்திருக்குன்னு சொல்றே?" என்ருன் புன்னகையை மறைத்துக்கொள்ள முயன்றவாறே.

"ஆமாம்ப்பா, ஆமாம்! நீ நிறுவிய காந்திக் கட்டடங்களில் வடக்கே ஏதோ ஒண்ணிலே அடிக்கடி ஏதானும் முக்கிய அரசியல் கூட்டங்களெல்லாம் அமோகமா நடத்தருங்களாமே! அங்கே நீ ஆர்டர் கொடுத்துத் தீட்டப்பட்ட காந்திஜி சித்திரம் கூடப் பிரமாதமாயிருக்குதாமே! இந்த மாதிரி எத்தனையோ புகழ் மாலை உனக்கு!"

முத்துவின் புகழ்ச்சியில் வள்ளி முக்குளிக்கும் பெருமையைக் கண்டு அதற்கு அணைபோடும் நோக்கத்துடன் சீதா, "இவங்க காந்தியடிகளைப் பத்தி எழுதியிருக்கற நூலெல்லாம் எத்தனை நல்லா விற்குது தெரியுமா? ரொம்பத் தெளிவாகவும் எளிமையாயும் பக்தியோடும் எழுதப்பட்டிருக்குதுன்னு சொல்லி எல்லாருமே பாராட்டறுங்க. பெண்கள் முன்னேற்றம், பெண்களை மதிச்சு நடத்தணும், அப்படிங்கற காந்திஜியின் கொள்கையைப் பத்தி இவர் எழுதின புஸ்தகத்துக்கு நாலாவது எடிஷன்கூடக் கொண்டு வரணும்னு பப்ளிஷர் சொல்லிக்கிட்டிருந்தாரு" என்றவாறு தன் பங்குப் பெருமைக்கு உரிமை நாட்டினுள்.

"அப்படியா! நான் அந்த மாதிரி புஸ்தகமெல்லாம் படிக்கறதில்லே". வள்ளி அலட்சியமாய்த் தன் அழகிய வாயைக் குவித்தாள். "படிப்பு, நாகரிகம் இதெல்லாம் எனக்கு எப்பவுமே இருந்ததாலே அது ஒரு பெரிய விஷயமாய் எனக்குத் தெரியலே. பாமரப் பெண்களாய் இருக்கிறவங்களுக்கு, பாவம், அதெல்லாம் அவசியம் படிச்சுத் தெரிஞ்சுக்க வேண்டியதுதான்" என்றவாறு சீதாவை நேருக்கு நேராக நிதானமாய்ப் பார்த்தாள்.

சீதாவின் முகம் சிவந்தது. ரமணனும் சட்டென்று வள்ளியை உற்று நோக்கி, "சீதா பாமரப் பெண்ணில்லை மிஸஸ் முத்து! அவளுக்கு எல்லா உரிமைகளும் உண்டு" என்ருன்.

சீதாவின் கோபம் இன்னும் தணியவில்லை. முத்துவைப் பார்த்து அவள், "ஏதோ நீங்களும் அவரும் ரொம்பப் பழைய சிநேகிதர்கள் அப்படின்னும் உங்களையும் உங்க சம்சாரத்தையும் நேத்து பீச்சிலே சந்திச்சபோது எங்களை நீங்க இங்கே டிபனுக்கு

அழைச்சீங்கன்னும் அவர் சொன்னரு. அதனுலேதான் முன்னே பின்னே எனக்குப் பழக்கமில்லேன்னுலும் பரவாயில்லேன்னு நான் வந்தேன். உங்களைப் பார்த்தால் நல்லவராய்த்தான் தோணுது. ஆனுல் அந்தம்மா என்னை இப்படி அவமானம் செய்ய வேண்டியது அவசியம் தானு?'' என்று படபடத்தாள்.

ரமணன் தேள் கொட்டிவிட்டவன் போல் மனைவியின் பக்கம் திரும்பி ''நீ எதுக்குப் பேசறே, சீதா? அவன் கிட்ட ஏதானும் சொல்லணும்னு நானே சொல்லிக்கறேன்'' என்று ஆத்திரமாய் முணுமுணுத்தான்.

முத்து ''மன்னிச்சிடுங்க மிஸஸ் ரமணன்'' என்றபோது ரமணனின் முகம் பின்னும் விகாரமாயிற்று. சூழ்நிலையில் படிந்த மௌனம் இனிமையாக இல்லையே என்று முத்து தவித்த நேரத்தில் ஓட்டல் சிப்பந்தி அறைக்குள் நுழைந்து உணவுப் பொருள்களை அவர்கள் முன் இட்டுச் சென்முன்.

''சாப்பிடுங்க எல்லோரும்'' என்ற அவனது உபசரிப்பின் நயத்திலும் பிறகு உணவு உட்கொள்ளும் கவனத்திலும் நிலைமையின் சங்கடம் சிறிது விடுபட்டது. ஆனுல் ரமணனின் முகத்தில் சிடுசிடுப்பு மாறவில்லை. மனைவியின் பக்கம் திரும்பி, ''சத்தம் போடாமல் உனக்குச் சாப்பிடத் தெரியாதா?'' என்று அவன் காரணமின்றிக் கடிந்தகொண்டபோதுதான், சீதா தன்னேடு அப்படி நேராகப் பேசிவிட்டது அவனுக்குப் பிடிக்கவில்லை என்பதை முத்து புரிந்துகொண்டான். மனைவிக்கு எல்லா உரிமையும் உண்டு என்று சொன்னவனின் உண்மையான மனப்பான்மை இப்படியா! எத்தகைய போலி இந்த ரமணன்! முத்துவின் உதட்டோரம் சுழித்துக்கொண்ட ஏளனப் புன்னகை அடுத்த கணமே வற்றிப்போயிற்று. 'நான் மட்டும் போலியில்லையா?'

மகாத்மா மகாத்மா என்று கதைக்கிருனே, அவர் கொள்கைகள் எங்கே? அவன் எங்கே? பொருள் ஈட்டுவதில் குற்றமில்லைதான். ஆனுல், 'செல்வர்களின் செல்வம் அவர்களிடம் ஏழையரின் நலனுக்காக ஒப்படைக்கப்பட்டுள்ள பொருளாக இருப்பது என்று கூறியிருந்தாரே அந்த மகான்! அவன் தன் செல்வத்தால் எந்த ஏழையின் துயரைக் களைந்தான்? அதுகூடப் போகட்டும் அவன் பொருள் தேடிய வழிகள்! எத்தனை சந்தர்ப்பங்களில் தொழிலில் மோசடி செய்திருக்கிறுன்! ஏற்றுமதி செய்த ஏலத்தில் எலிப்புழுக்கை சேர்த்த செயல் அத்தகைய எத்தனையோ சந்தர்ப்பங்களில் ஒன்றுதான். அவ்வாறெல்லாம் நேர்மை தவறியவர்கள் சத்திய வடிவினரின் பெயரில் பொதுக் கட்டடங்கள் கட்டுவதுமட்டும் போலியில்லையா?

அண்மையில் சிறிதுகாலமாக அவ்வப்போது இதுபோன்ற சுய ஆராய்ச்சிகள் தலையெடுத்து முத்துவின் நிம்மதியைக் குலைத்த வாறு இருந்தன. தன் செழிப்பில் மனைவியின் சகிக்கமுடியாத ஆணவத்தில், பதினாறு வயதான மகனின் கல்லூரிப் பிரவேசத்தில், பன்னிரண்டுவயதுப் பெண்ணின் "டாடி டாடி" என்ற கொஞ்சலில், எல்லாவற்றிலுமே திடீரென்று ஒரு சலிப்பு ஏற்பட்டு விட்டாற்போல் இருந்தது. வயதின் முதிர்ச்சி உட் பார்வையைத் தெளிவாக்கத் தொடங்கியதுமே வாழ்வின் வசதிகளையெல்லாம் தாண்டிக்கொண்டு அடியிலிருந்து இதயத்தின் ஒருபாகம் இலேசான புரட்சியில் தலைநீட்டிப் பார்க்க ஆரம்பித்துவிட்டது.

அன்று பாபூஜியின் காந்தத்தால் இழுக்கப்பட்ட மூன்று நண்பர்களில் தன் நிலை இப்படி; ரமணன் இப்படி. கோபி? கோபி எங்கே இருக்கிறானென்றே தெரியவில்லையே? கல்வி முடியும் வரையில் தான் அவனுடன் தொடர்பு இருந்தது. பிறகு அவன் அவர்கள் வட்டாரத்திலிருந்தே மறைந்து விட்டான். முத்துவும் ரமணனும் அடிக்கடி சந்தித்துக் கொள்ளாவிட்டாலும் சில ஆண்டுகளுக்கு ஒரு முறையேனும்—முத்து வடக்கிலிருந்து சென்னைக்கு விஜயம் செய்யும் நேரமும் ரமணன் தன் அலுவலக வேலையை ஒட்டி வெளியூர் செல்லாமல் சென்னையில் தங்கியிருக்கும் நேரமும் கூடும்போது—பார்த்துக்கொள்ள வாய்ப்புக் கிட்டும். மேலும் முத்து ஒரு வெற்றிகரமான தொழில் நிபுணன். ரமணன் ஒரு புகழ்பெற்ற எழுத்துச் சிற்பி. ஒருவரைப்பற்றிய செய்திகள் மற்றவர் காதில் விழ இவையும் காரணங்களாய் அமைந்தன. ஆகவே அந்தப் பிணைப்பு அறவில்லை: ஆனால் கோபியின் தொடர்பு தொடக்கத்திலேயே நின்றுபோய்விட்டது. நாட்டின் பெருத்த பரப்பு அவனை விழுங்கிக் கொண்டு விட்டது: அவன் சுவடே தெரியவில்லை. மகாத்மாவின் கொள்கைகளைப் பரப்ப ரமணன் நூல்கள் எழுதியது போலவோ, முத்து அவரைப் பற்றிய சொற்பொழிவுகளுடன் அவர் பெயரில் மன்றங்கள் எழுப்பியது போலவோ, கோபி அந்த மகானிடம் தனக்கிருந்த பக்தியின் நினைவாக எதுவும் செய்ததாகத் தெரியவில்லை. அப்படி அவன் அவருக்காக ஏதேனும் முறையில் பிரசாரம் செய்திருந்தால் அதுபற்றிய செய்தி எட்டாமலேயா இருந்திருக்கும்?

அவன் மெதுவாக எண்ணங்களினின்று தன்னை விடுவித்துக் கொண்டு "என்ன, ஒண்ணும் பேசாமலே இருக்கிறே, ரமணு!" என்றான்.

"என்னத்தைப் பேசறதாம்?"

"காந்திஜியின் தத்துவங்களில் உனக்கு ரொம்பப்பிடிச்சது எது?"

''பெண்கள் முன்னேற்றம்தான்.''

''அவர் நினைவுக்கு நீ செய்யற நல்ல பணி இந்த மாதிரி புஸ்தகங்கள் நீ எழுதறது. ஏதாவது சொல்லேன் அந்தப் புஸ்தகங்களைப் பத்தித்தான்!''

'' அதை ஏன் கேக்கறே!'' ரமணன் திடீரென்று ஆவேசமாய்ப் பேசினான். ''அந்த பப்ளிஷர் இருக்கானே, ஒண்ணும் நம்பர் ஃப்ராட். சரியாகவே பணம் கொடுக்கறதில்லை. புஸ்தகம் எழுதறவன் என்ன, தானமா செய்யறான்? காந்திஜி பேரைச் சொல்றதிலே எனக்குப் புகழ் கிடைக்குது, இல்லேன்னு சொல்லலே. ஆனால் அது மட்டும் போதுமா? புகழும்தான் வேணும், பணமும்தான் வேணும். இரண்டுக்காகவும்தான் நான் எழுதறேன். என்னை அந்த ஆள் மோசம் செய்யறாப்பலே நானும் அவனுக்குச் செய்யப்போறேன். அடுத்ததாக என்னை அவன் புஸ்தகம் எழுதித் தரச் சொல்றப்போ நான் எழுத மாட்டேன். இவனுக்கு எழுதித்தரதைவிட ஒரு சினிமாவுக்குக் கதை எழுதிக் கொடுத்தாலும் ஆயிரக் கணக்கில் வாரிக் குவிக்கலாமே! ஏதோ காந்திஜி பேரைச் சொன்னா நமக்கு ஒரு மதிப் பாச்சேன்னு பார்த்தால்...''

'நம்ப யாருக்குமே அந்தப் பெயரைச் சொல்லத் தகுதி இல்லேடா!' என்று கத்தவேண்டும் போலிருந்தது முத்துவுக்கு. தன் நாடே ஆத்மாவை இழந்துவிட்டிருப்பதாக அவனுக்குத் தோன்றியது. இங்கு விடுதலைப் போரை முன்னின்று நடத்தியவர் ஒரு மகாத்மா. அதிலிருந்தே அந்தப் பேரின் இயல்பு புரியவில்லையா? சாத்விக வீரமும் சத்தியத்தின் வலிமையும் அகிம்சையின் ஆண்மையும் நேர்மையான லட்சியங்களின் அஞ்சாமையும் புனிதர்களின் தியாகமும் படைகளாய் இலங்கிச் சாதித்த வெற்றி நம்முடையது. இப்போதெல்லாம் நடைபெறும் மறியல், வேலை நிறுத்தம், சத்தியாகிரகம், ஒத்துழையாமை இவற்றுக்கும் முன்பு நடந்தவைக்கும் சாரத்திலே எத்தனை வேறுபாடு! இப்போது இவற்றுக்கெல்லாம் அடிப்படை நோக்கம் சுயநலம் தான். முன்போ? அந்த மகான் உண்ணாவிரதம் மேற்கொண்ட போதெல்லாம் அதன் நோக்கம் தன்னைத் தூய்மைப்படுத்திக் கொள்வதும், நிகழும் குற்றங் குறைகளுக்கு ஒரு கழுவாயாக நோன்பு வடிவமாய் இறங்குவதும் தான். இப்போது எங்கும் சுயநலம் மலிந்த சூழ்நிலையில் முக்கிய நாட்களிலும் கூட்டங்களிலும் சொற்பொழிவுகளில் அடிபடும் ஒரு பெயர் மட்டுமாக நின்றுவிட்டாரே! பெரும்பான்மையோர் அவர் கொள்கைகளைக் காற்றில் விட்டுவிட்டார்களே! அவர்கள் யாவரும் அவருக்கு வாய்ப்பூஜை செய்வதை நிறுத்திவிட்டு ஒழுக்கத்தில் அவர் தத்துவங்களுக்கு உயிரளித்

தால் இந்தப் பாரத மண்ணில் பிறந்த ஒவ்வொருவரும் ஒரு காந்தியாகி விடமாட்டார்களா! ஏனெனில் அண்ணலே கூறி யிருக்கிறார்: ''நான் ஏதும் செயற்கரியது செய்துவிடவில்லை: நான்சாதித்தது ஒவ்வொருவரும் சாதிக்கக் கூடியதுதான்.''

ரமணன் இப்போதும் தன் மனைவியை நோக்கிச் சினப் பார்வையை அவ்வப்போது வீசிக் கொண்டிருந்தான். அற்ப விஷயத்துக்கெல்லாம் வெளியிடும் பொறுமையினால் மனைவியை அவமதிக்கும் இவன் மகாத்மாவின் பெண் முன்னேற்றம் பற்றிய கருத்துக்களை விரும்பி எழுதுகிறானும்! என்ன கேலி இது! பெண்ணுக்கு அவர் எத்தகைய சுதந்திரமெல்லாம் கொடுக்க வேண்டுமென்றார்! சொந்த வாழ்வில் மட்டுமென்றி நாட்டு விடு தலைப் போராட்டத்திலும் ஆணுக்கு நிகராய் அவள் இலங்க வேண்டுமென்றார். அவளுக்குக் கல்வி அவசியமென்றார். குழந்தைகளின் மனத்தைப் பக்குப்படுத்திப் போதிப்பதிலே அவளுக்குத்தான் முக்கிய பங்கு என்றார். அவ்வாறு பெண்மை யில் தாய்மைக்கு மதிப்பளித்துப் போற்றியவர், நாட்டுப் பிரிவினையை அடுத்து நிகழ்ந்த வகுப்பு வெறியாட்டத்தின் புயலிலே கற்பிழக்கும் கொடுமைக்கு ஆளான பெண்களின் விஷயத்தில் எத்தகைய கம்பீரமான, மனிதாபிமானக் கருத்தை முழங்கினார்!

அந்த நினைவிலேயே அந்தப் பழைய பேய் வெறியும் அதற் குப் பலியாகி அலமந்து நின்ற பெண் வடிவங்களும் அவன் கண் முன்னே காட்சியாய் எழுந்து நின்றன. கூட்டம் கூட்டமாய் அந்தப் பெண்கள் மரத்துவிட்ட உயிருக்குச் சாட்சியாய் பேய் கண்டவை போன்ற விழிகள் எதிரே நிலைகுத்தி வெறித்து நோக்கும் தோற்றம். இனி இழக்க எதுவுமே மிச்சமில்லை என்னும் கடைநிலையின் பரிபூரணத் துன்பம் நிராசையாகக் கவிந்துகொண்டுவிட்ட சாம்பிய கோலம். அவர்களில் ஒரு பெண்—அவள் பெயரைக் கூடப் பிறகு யாரோ சொன்னார் களே, என்ன அது?...ஆம், மிருணாளினி. திடீரென்று உணர்ச்சித் துடிப்பின் வேகத்தில் அந்தப் பெயர்கூட மின்வெட்டுப்போல் நினைவுக்கு வந்துவிட்டது—அந்தப் பெண் அதிர்ச்சியில் மரத்துப் போன நிலையில், அவலத்துக்கு ஒரு கண்ணாடி போல, வெறும் மனிதச் சிதிலமாகப் பிரமித்து உட்கார்ந்திருப்பதைப் பார்த்த வாறு அவனும் மற்றவர்களும் பயங்கரத்தில் உறைந்துபோன இதயத்தோடு கல்லாய் நின்ற நினைவு இப்போது சாணைதீட்டிய கத்திபோன்ற கூரிய தெளிவுடன் அவனுள் எழுந்தது.

அத்தகைய அபலையரின் சார்பில் அந்தக் கருணாமூர்த்தி எழுப்பிய நியாயத்தின் குரலும் இப்போது அவன் காதுகளில் ஒலித்தது:

''அவர்களுடைய குற்றம் இதில் ஏதும் இல்லை. அவர்கள் வஞ்சிக்கப்பட்டவர்கள். இவ்வாறு பலியான பெண்களை மணந்து கொள்ள இளைஞர்கள் முன்வர வேண்டும்.''

இவன்! இந்த ரமணன்! மனைவி இன்னொருவனுடன் வலுவில் பேசிவிட்டாள் என்பதற்காகச் சினந்து நோக்கும் இந்தக் குறுகியவன்! இவனா எழுதுகிறான் அவருடைய மாதர் முன்னேற்றக் கொள்கையைப் பற்றி!

போலி, போலி... ரமணன் சின்னமிட்ட போலித்தன்மை சமூகம் முழுவதிலுமே புரையோடியிருக்கிறது. தான் மட்டும் என்ன? காந்தியடிகளினால் ஈர்க்கப்பட்ட அந்த மாணவ இளைஞனின் ஒளிமிக்க விழிகள் என்னவாயின? அந்த உத்தமருக்கு ஆட்பட்ட உள்ளம் வெறும் கணநேரத் துடிப்பாக, இளமை ஆர்வத்தின் ஒரு தெறிப்பு மட்டுமாக, மாண்டு போய்விட வில்லையா? அந்தத்தூய லட்சியங்களையெல்லாம் மறந்து அவன் உலக வாழ்வின் புற வெற்றிகளுக்குத்தானே தன்னைத் தந்து கொண்டுவிட்டான்? அதில் உண்மைச்சத்து இல்லாததால்தானே இப்போது வாழ்வில் இந்த அலுப்பும் தோல்வி புணர்வும்.

அண்ணல் கூறியிருக்கிறாரல்லவா? ''நேர்மை, சத்தியம் போன்றவைகளை ஏதோ அரிய தெய்வீக குணங்களென்று கருத வேண்டாம். அவை மனிதப் பண்புகள்தாம். உண்மையான மனிதனுக்கு இயல்பாக இருக்க வேண்டிய குணங்கள்தாம்''.

அதாவது, அவை இருப்பது தனிப்பட்ட பெருமையல்ல. அவை இல்லாதவன் தான் விலங்கினம். அபப்டிப் பார்த்தால் அவன் மனிதனாகவே வாழவில்லை.

தாங்க இயலாமல் மூச்சு முட்டுவதுபோன்ற உணர்வில் அவன் சட்டென்று எழுந்து நின்றான். ''எல்லாரும் சாப்பிட்டாயிடுச் சில்லே? போகலாமா? ரமணா, நீயும் உன் மிஸஸ்ஸும் இப்படி எங்ககூட வீட்டுக்கு வந்துட்டுப் போங்களேன்'' என்று, சீதாவின் பக்கம் கவனமாய் முதுகைத் திருப்பிக்கொண்டு கேட்டான்.

வள்ளியின் முகம் சிணுங்கியது. இவர்களும் என்னதான் வசதியுள்ளவர்கள் என்றாலும் தம்மைப்போல் லட்சாதிபதி அல்லவே! எவ்வளவுக்கென்று ஒட்டிக்கொள்வது?

''அவங்களுக்கு எத்தனை வேலையோ என்னமோ பாவம்! நம்ம பங்களாவுக்கு வர நேரமிருக்குமா?'' என்றாள். சீதாவுக்குச் சுருக்கென்றது.

''ஆமாம். நாங்க என்ன, வேலையத்தவங்களா? அவர் இன்னிக்கு ஒரு முழு அத்தியாயம் எழுதியாகணும், நாங்க நேரே

வீட்டுக்குப் போயிடறோம். மிஸ்டர் முத்து கிருஷ்ணன் உங்க அழைப்புக்கு நன்றி'' என்று சீதா அவனை நோக்கிக் கரங் குவித்தாள்.

ரமணனின் முகம் தழலாய்ச் சிவந்துவிட்டது. இவள் என்ன தம்மிருவருக்காகவும் முடிவு செய்து ஓர் ஆண்பிள்ளையிடம் சொல்வது என்ற நினைப்போ?

'' நீ பேசாமலிருக்கமாட்டே, சீதா? நாங்க உன் வீட்டுக்கு வரோம் முத்து. நாம் ரெண்டுபேரும் எப்பவோ சந்திக்கறோம். நிறையத்தான் பேசுவமே!'' மனைவி மீது தன் அதிகாரத்தை நாட்டிவிட்ட பெருமையில் அவன் வேண்டுமென்றே சீதாவைப் பார்த்துச் சிரித்தான்.

முத்துவின் பளபளக்கும் அம்பாஸிடர் வண்டி நால்வரையும் சுமந்துகொண்டு மௌண்ட் ரோட்டிலிருந்து தியாகராய நகருக்குப் பாய்ந்தது.

அழகிய முகப்பு வாசல் அமைந்த நாகரிகமான கட்டடத்தின் முன் கார் நின்றதுமே உள்ளேயிருந்து குட்டைப் பாவாடையும் கழுத்தளவு முடியுமாக ஒரு சிறுமி ஓடிவந்து '' டாடி, வந்து பாரேன், அண்ணு கிட்ட இன்னிக்கு ஒரு காக்காய் மாட்டிக் கிட்டுது!'' என்று கிளர்ச்சி வெடிக்கும் குரலில் கூவி முத்துவின் கையைப் பற்றி இழுத்துச் சென்றாள்.

பின்புறத் தோட்டத்தில் செடிகளுக்கிடையே ஒரு காகம் செத்து விழுந்திருந்தது. கையில் துப்பாக்கியுடன் அதைப் பெருமிதத்துடன் பார்த்தவாறு மண்டியிட்டிருந்தான் முத்துவின் மகன். மேலே கூட்டமாய்க் காகங்கள் பெருத்த இரைச்சலுடன் வட்டமிட்டுக் கொண்டிருந்தன.

'' காக்காயை ஷூட் செய்துட்டேன்! செத்தே போச்சு டாடி! என் குறி இப்போ எவ்வளவு நல்லா ஆயிட்டுது தெரியுமா? இன்னிக்குத்தான் என் முதல் பெரிய ஸக்ஸஸ்!'' என்று பையன் தந்தையைக் கண்டதும் கும்மாளமிட்டான்.

முத்துவின் உடல் கூசிச் சுருங்கியது. மகன் ஆசைப்பட்டதற்காக 'ஏர் கன்' வாங்கித் தந்தவன் அவன்தான். இப்போது அந்தக் குறி அவனுள்ளேயே பாய்ந்து விட்டாப்போல் உயிர் துடித்தது.

'' பையன் கெட்டிக்காரனுயிருக்கானே!'' என்று ரமணன் பாராட்டினன்.

'' அதிருக்கட்டும் ரமணு, உன் குழந்தைகளை நான் அதிகம் பார்த்ததே இல்லையே, நாளைக்குக் கூட்டிக்கிட்டு வரியா? என்று

பேச்சை மாற்றிய முத்து மகனைப் பார்த்து, "நீ உள்ளே போ. அப்புறமா உன்னோடு பேசிக்கறேன்'' என்று கடுகடுத்தான்.

"அதுக்கென்ன முத்து, கூட்டிக்கிட்டு வரேன். என் இரண்டாவது பயல் உன் மகன்கிட்டேயிருந்து இந்தச் சாமர்த்தியமெல்லாம் கற்றுக்கட்டுமே :''

"வேணும், வேணும். சின்னக் குழந்தைக்கு இதெல்லாம் எதுக்கு? பத்து வயதுதானே ஆகுது அவனுக்கு? நல்லாப் படிக்கருனு?''

"ஏதோ, பேருக்குத்தான்!''

"தவருமல் பாஸ் பண்ணிகிட்டு வரானில்லே?''

"பாஸ் பண்றதுக்குப் படிக்கணுமா என்ன?'' ரமணன் அவனைப் பார்த்துக் கண்ணைச் சிமிட்டினுன். அதன் பொருள் புரிந்தபோது முத்துவின் நெஞ்சம் பின்னும் சுருங்கிக் கொண்டது.

எல்லோரும் ஹாலில் அமர்ந்து உரையாடிய போதெல்லாம் தமது பகட்டான உடையணிந்த வடிவங்களிடையே அரையில் உடுத்த ஒரே ஆடையுடன் ஓர் எளிய முதிய மோகன உருவம் சுவரில் தொங்கிக் கொண்டிருந்த படத்திலிருந்து தங்களை மூக்குக்கண்ணுடிக்குப் பின்புறமிருந்து பார்த்தவாறு தேனூற்ருய்ப் புன்னகைத்துக் கொண்டிருந்த காட்சியை அவனுல் தாங்க முடியவில்லை. அந்தப் புன்னகையில் கண்டனம் இல்லை. எதிராளியையே வெறுக்காத அன்பின் மந்தகாசம் அல்லவா? அது அவர்களுக்காகப் பரிதாபம் தான் காட்டியது.

"இதைவிடப் பெரிசாய்க் காந்திஜியின் படம் நான் என் வீட்டில் மாட்டி வச்சிருக்கேன்'' என்ருன் ரமணன்.

முத்துவின் உடல் எரிந்தது. அகிம்சையாளரின் பெயரில் கட்டடங்கள் எழுப்பிவிட்டு மகனுக்குத் துப்பாக்கி வாங்கித் தருபவனும், சத்தியத்தின் பூஜாரியைப்பற்றி நூல்கள் வரைந்துவிட்டு மகனின் தேர்வுக்காக லஞ்சமளிப்பவனும் கூடும் இடத்தில் அந்த மகான் ஏன் நிற்கிருர்? போலிகளிடையே அவருக்கு என்ன வேலை? அவர்களிடையே அவர் நின்ருல், எளியவர் துயர் துடைக்கும் பொருட்டுப் பகை நடுவில் அஞ்சாது நடந்த மெலிந்த பொற்பாதங்கள் கறைபடாவோ?

இவ்வாறு பேச்சுக்கும் செயலுக்கும் சம்பந்தமின்றி வாழும் தம்மிருவரைவிடப் பெயரைப் போலியாக உபயோகிக்காமல் ஒரேயடியாய் அவரை மறந்துபோன கோபி எத்தனையோ மேல்.

திடீரென்று அவன் கேட்டான். ''நம் ஸெட்டில் மூணு பேர் இருந்தோம். நீயும் நானும் தொடர்பு வச்சிக்கிட்டிருக் கோம். ஆனால் கோபி என்ன ஆனன்னே தெரியலே பார்த்தியா?''

''தெரியாம என்ன?''

அவன் அதிர்ந்து விட்டான். ரமணனுக்குத் தெரியுமா கோபியின் தற்போதைய விவரங்கள்? பின்னே இத்தனை பேச்சில் ஒருமுறை கூட அது பற்றிக் குறிப்பிடவில்லையே?

''உனக்குத் தெரியுமா ரமணு?''

''தெரியுமே!''

''எனக்கு நீ சொல்லவே இல்லையே! நம்ம ரெண்டுபேருக் குமே அவன் தொடர்பு விட்டுப் போச்சுன்னில்லே நினைச்சு கிட்டிருந்தேன்!''

''எனக்குக் கூட இவ்வளவு காலம்வரை தெரியாது. இப்போ தான் ஒரு மாசம் முந்தி தற்செயலாக அவனைப் பார்த்தேன்.

''இந்த ஊரிலேயா!''

''ஆமாம்.''

''என்ன செய்யருன்? எப்படி இருக்கான்?''

''அந்த நாளில் இருந்த மாதிரியே சோனியாய்த்தான் இருக்கான். வாழ்க்கையிலே ரொம்ப முன்னேறலேன்னு தோணுது. ஏதோ சாதாரண வேலைதான் பார்க்கருன். அது என்னன்னு கூடச் சொன்னன், எனக்கு மறந்துபோச்சு. தலை யெல்லாம் ஒரேயடியாய் நரைச்சு அடையாளமே தெரியாம மாறிட்டான்.''

''நீ பின்னே எப்படித் தெரிஞ்சுகிட்டே?''

''அவன்தான் என்னை அடையாளம் கண்டுகிட்டுக் கூப்பிட்டு விசாரிச்சான்.''

''அவன் வீடு எங்கேன்னு சொன்னனு?''

''ம்''

''அதெங்கே!'' ரமணன் உதட்டைப் பிதுக்கினன்: ''எனக்கு நேரமே கிடைக்கலே.''

தான் சந்திக்கச் சொல்லும் அளவுக்குக் கோபியின் வாழ்க் கைத் தரம் அமையவில்லை என்பது ரமணன் கருத்துப் போலும். அதைத் தெரிந்துகொண்டதாய்க் காட்டிக்கொள்ளாமல் முத்து ''இப்போ அவனைப் போய்ப் பார்க்கலாம் வரயா?'' என்றான்.

"இப்போவா? எனக்கு வேலை இருக்கே. இன்னொரு நாள் வேணும்னு......"

":டோண்ட் பி.எ. வெட்பிளாங் கெட்.' எனக்கு எத்தனை நாளா கோபியை மறுபடியும் சந்திக்கணும்னு ஆசை தெரியுமா? ஊட்டியிலேருந்து திரும்பியதும் நான் ஊருக்குக் கிளம்பிடுவேன். தற்செயலாய் இப்போ நாம் மூணுபேரும் ஒரே ஊரில் இருக்கோம். சும்மா வா போகலாம்."

ரமணனால் மேலும் மறுக்க முடியவில்லை.

இரு பெண்களும் தம் கணவரின் நண்பனைச் சந்திப்பதில் ஆர்வம் காட்டாததால் வள்ளியை அங்கேயே விட்டு விட்டு, சீதாவை அவள் வீட்டில் இறக்கிவிட்டு, முத்து, ரமணனுடன் அம்பாஸிடரை அயனாவரத்துக்கு ஓட்டிச் சென்றான்.

மாலைப் பொன் கருக்கத் தொடங்கும் நேரமாகி விட்டதே, கோபி சினிமாவுக்கோ கடற்கரைக்கோ போயிருப்பானோ என்று சுயவழக்கத்தின் சுவட்டில் இயல்பாய் எழுந்துவிட்ட அவன் எண்ணம் முற்றுப்பெறு முன்பே வாசலில் ஒரு வடிவம் வந்து நின்றது.

சிறிது நேர மௌன வெறிப்புக்குப் பிறகு, எதிரேயிருந்தவனின் முகமெங்கும் புன்முறுவலின் அலை ஒன்று படர்ந்தது.

"முத்து! முத்துதானே? வா வா! என்ன ஆச்சரியம்! எத்தனை காலமாச்சு நாம் சந்தித்து! சொப்பனம் மாதிரி இருக்குடா! நிஜமாகவா நீ வந்திருக்கே, முத்து? கோபி முன்னால் விரைந்து வந்து அவன் கைகளைப் பற்றிக்கொண்டான்.

"நான் அன்னிக்கு ரமணனைச் சந்திச்ச வேளை நல்லவேளை தான்! பழையநாள் சிநேகிதன்களில் ஒருவனைப் பார்த்த ஒரு மாசத்திலேயே இன்னொருவனையும் பார்க்கற சந்தர்ப்பம்னா சும்மாவா? வா, வா! வா, ரமணா!"

மகிழ்ச்சியுடன் தம்மை வரவேற்று வீட்டினுள் அழைத்து அமரச்செய்த நண்பனை முத்து உன்னிப்பாகப் பார்த்தான். ரமணன் சொல்லியிருந்தது உண்மைதான். கோபி அடையாளம் தெரியாமல் தான் மாறியிருந்தான். தம் மூவருக்கும் ஒரே வயதுதானென்றாலும் வசதியின் காரணமாய்த் தாமிருவரும் இளமையின்மீதே இளைப்பாறியிருக்க, கோபி மட்டும் கிழவனாகிக் கொண்டிருந்தான். ஆனால் அவன் பேச்சிலும் பழக்கத்திலும் பழைய நட்பு அணி செய்தது. இத்தனை ஆண்டுகளுக்குப் பின் அவனைச் சந்தித்ததில் அவனுடைய நீரோட்டமான சரளத் தன்மை தனிப்பட்ட ஒரு மகிழ்ச்சியைத் தந்தது.

'' நீ எப்படி இருக்கே கோபி? உன்னே ஆயிரம் கேள்விகள் கேட்கணும் போல இருக்குடா, ஆனுல் ஒண்ணுமே கேட்கத் தோணலே! உன்னேப்பத்தி எல்லாம் சொல்லு.''

கோபி விவரித்தான். சராசரியான, வியப்புறுத்தும் தன்மை எதுவுமற்ற எளிய வாழ்வு அவனுடையது. பாரதத்தின் கோடிக் கணக்கான மாந்தருள் அவனும் ஒருவன், அவ்வளவுதான்.

'' முத்து ஒரு பெரிய பிஸினஸ்மேன், கொள்ளேப் பணக்காரன், தெரியுமா?'' என்ருன் ரமணன்.

"அப்படியா! எனக்கு யாரைப்பத்தியுமே தெரியாது. நீ ஒரு புகழ்பெற்ற எழுத்தாளன்னு கூட அன்னிக்கு நீ சொல்ற வரைக்கும் எனக்குத் தெரியாதுன்னு பாரேன்!'' என்று கூறித் தன் அறியாமைக்குத் தானே சிரித்துக்கொண்டான் கோபி.

வெகுநேரம் அவர்கள் பேசிக்கொண்டிருந்தார்கள். ஆனுல் மகாத்மாவைப் பற்றிய ஒரு சொல் கூட கோபியின் வாயிலிருந்து வரவில்லே. அந்த அறையில் அவருடைய ஒரு படம் கூட மாட்டப்படவில்லே என்பதையும் முத்து கவனித்தான்.

"உங்க ரெண்டுபேருக்கும் சாப்பிட ஏதாவது...?''

'' சாப்பிட்டுத்தான் வந்தோம். கொஞ்சம் தண்ணி மட்டும் கொடு, தாகமாயிருக்கு'' என்ருன் முத்து.

கோபி எழுந்து உள்ளே சென்றுவிட்டு வந்தான். '' கொண்டு வரச்சொல்லியிருக்கேன்... அப்புறம் என்ன சங்கதி? டே, இன்னிக்கு உங்க ரெண்டு பேரையும் இப்படி என் வீட்டில் வர வேற்பேன்னு நான் நினேக்கவேயில்லேடா!''

நண்பனேப் பார்த்து விரிந்த முத்துவின் புன்னகை சட்டென்று நின்றது. உள்ளேயிருந்து வந்த ஒரு பெண் தன் கையிலிருந்த நீர் நிறைந்த தம்ளரை அவர்கள் முன் மேஜை மேல் வைத்தாள்.

'' இவள்தான் மிருணுளினி, என் மனேவி'' என்ருன் கோபி.

முத்து பேச இயலாமல் அப் பெண்ணேப் பார்த்துக்கொண்டே கல்லாய் அமர்ந்துவிட்டான். தலேமுடி சற்று வெளுத்திருந்ததே தவிர அவள் முகம் மாறவில்லே. அந்த முகத்தை மறக்கமுடியுமா? அவலத்துக்கு ஒரு கண்ணுடிபோல அவள் பிரமித்து உட்கார்ந்திருந்ததைப் பார்த்தவாறு இதயம் பயங்கரத்தில் உறைந்துபோனவனுகத் தான் நின்றிருந்ததைத்தான் மறக்க முடியுமா?

தன்னையும் ரமணனையும் போன்றோரின் உலகத்தை மகாத்தான தரிசனம் ஒன்று உலுக்கிப் பிளந்துவிட்ட அதிர்ச்சியில் அவன் வெறும் கண்ணாய், மனமாய், உணர்ச்சியாய், உயிராய், நோக்கியவாறிருந்தான்.

முத்துவின் பார்வையில் இதயம் சுரந்து வந்து ததும்பியது. துடிக்கும் இதழ்களுடன் தன் விழிகளை அவளிடமிருந்து அகற்றிக் கோபியின்மேல் பதித்தான்.

எழுந்து அப்படியே அவன் காலில் விழவேண்டும்போலிருந்தது. இருகரங்களாலும் அவனைத் தழுவிக்கொள்ள வேண்டும் போலிருந்தது. அவன் மார்பில் புதைத்துக்கொண்டு குழந்தை போல் விம்மியழுது ஆறுதலுற வேண்டும் போலிருந்தது. 'என் நாட்டின் ஆத்மா அழியவில்லை!' என்று எக்காளமிடவேண்டும் போல் இருந்தது.

கோபி... கோபி...

அவன் மகாத்மாவைப் பற்றி எழுதவில்லை, சொற்பொழிவுகள் நிகழ்த்தவில்லை, பேச்சில் கூட அவரைக் குறிப்பிடவில்லை.

இன்முகத்துடன் கம்பீரமாய் அருகில் மிருணாளினியுடன் வாய்பேசாது நின்றுகொண்டுதான் இருந்தான்.

ஒளி "என்னைப் பார்" என்று சொல்வதில்லை. அது உதிக்கிறது, நாம் பார்க்கிறோம், நம் பார்வை தெளிவுறுகிறது.

அதன் உதயமே அதன் விளக்கம்.

அந்த விளக்கத்தில், திடீரென்று மகாத்மாவின் அருட்புன்னகை அங்கு உயிர்கொண்டு பளீரிடுவதை உணர்ந்து உள்ளம் சிலிர்த்தபோது முத்துவும் பேசவில்லை.



# 23

# விமோசனம்

அங்கயற்கண்ணி அசையாமல் கற்சிலை மாதிரி தெருக் கோடியைப் பார்த்தவண்ணம் வாசலில் உட்கார்ந்திருந்தாள். சூரியன் அஸ்தமனம் ஆகி மாலை வெளிச்சமும் மங்கிக்கொண்டே வந்தது. வெளிச்சம் குறையக் குறைய அவள் மனத்திலும் நம்பிக்கை யென்னும் வெளிச்சமும் குன்ற ஆரம்பித்தது. காரணம் வேலைக்குப் போன அவள் புருஷன் வெகு நேரம் ஆகி யும் வீடு திரும்பாதது தான்.

அவள் புருஷன் துரைசாமியோடு ஆலையில் வேலை செய்யும் தொழிலாளர்களெல்லாம் வீட்டுக்கு வந்துவிட்டனர். ஆனல் துரைசாமியை மட்டும் காணவில்லை.

அங்கயற்கண்ணியின் கண்களில் நீர் மல்கியது.

''ஒரு வேளை மறுபடியும்......சீ! அப்படியும் இருக்குமா? ......பின்னே இவ்வளவு நேரம் ஆகியும் அவர் வீட்டுக்கு வராத காரணம்?''

இந்த நினைப்பு ஓட்டத்தில் எல்லையற்ற தூரம் பிரயாணம் செய்த அங்கயற்கண்ணி தன் நினைவற்ற சிந்தனலோகத்தை அடைந்தாள்.

* * *

துரைசாமி ஓர் ஆலைத் தொழிலாளி. அவன் வீடு திரும்பும் நேரம் நெருங்கும் சமயத்தில், வீட்டு வாசலில் ஆவல் நிறைந்த கண்களோடு அவனுடைய அருமை மனைவி அங்கயற்கண்ணி

காத்து நிற்பாள். அவனும் அடங்காத ஆர்வத்துடன், தன் ‘வழி மேல் விழி’ வைத்து நிற்கும் அங்கயற்கண்ணியையே பார்த்துக் கொண்டு வருவான்.

துரைசாமியின் சொற்ப சம்பளத்தைக் கொண்டு அங்கயற்கண்ணி மிகவும் சாமர்த்தியமாகக் குடித்தனத்தை நடத்திவந்தாள். துரைசாமி வீட்டுக் கவலையேயில்லாமல் ‘தான் உண்டு, தன் வேலையுண்டு’ என்று இருந்து வந்தான். இத்தகைய எளிய வாழ்க்கையிலும் அவர்கள் எவ்வளவு ஆனந்தமாய் இருந்தார்கள்!

துரைசாமி தன் குடும்ப நிலையையும் பொருட்படுத்தாமல் குழந்தை முருகன் கேட்டதையெல்லாம் வாங்கிக் கொடுத்து அவனைத் தன் கண்ணுக்குக் கண்ணாக வளர்த்து வந்தான். முருகனை நல்ல பையனாக, புத்திசாலிப் பையனாக, வளர்க்க வேண்டும் என்பது அவனது அத்யந்த ஆசை. அவனுக்குத்தான் சின்ன வயதில் படிக்க முடியாமல் போய்விட்டது. முருகனாவது படித்து முன்னுக்கு வரவேண்டும் என்பதில் அவனுக்கு இருந்த ஆசை கொஞ்ச நஞ்சமல்ல.

முருகனுக்குப் பத்து வயது ஆயிற்று. படிப்பில் மிகவும் அக்கரையுள்ளவனாக விளங்கினான் முருகன். அவனுடைய நல்ல குணங்களைப் பற்றித் தன் நண்பர்கள் புகழ்ந்து பேசுவதைக் கேட்கும்போது துரைசாமி பூரித்துப் போவான்.

அங்கயற்கண்ணிக்கும் இது ஆனந்தமாகத்தான் இருந்தது. ஆனால் அவர்களது ஆனந்த வாழ்க்கை ஆண்டவனுக்கே பொறுக்க வில்லை போலும். குதூகலமாகச் சென்று கொண்டிருந்த அவர்களது வாழ்க்கைப் படகு நாளடைவில் தத்தளிக்க ஆரம்பித்தது. காரணம் துரைசாமி தன் குடும்பத்தினிடம் காட்டி வந்த அக்கறை குறைய ஆரம்பித்ததுதான்.

துரைசாமியின் இந்த விபரீதப் போக்கு வரவர அதிகமாகி வந்தது. ஆலையை விட்டவுடன் முன்பெல்லாம் நேரே வீட்டுக்கு வந்துகொண்டிருந்த துரைசாமிக்கு இப்போது வழியில் எவ்வளவோ காரியங்கள் இருந்தன. இரவு நேரங் கழித்துத்தான் அவனால் வீட்டுக்கு வர-முடிந்தது.

முன்பெல்லாம் துரைசாமி அன்பும் ஆதரவும் நிறைந்த குரலில் அங்கயற்கண்ணியையும் முருகனையும் அழைத்துக் கொண்டே வீட்டுக்குள் நுழைவான். அதற்கு நேர்மாறாக இப்பொழுது குனிந்த தலைநிமிராமல் விர்ரென்று உள்ளே நுழைந்தான். அவன் யாருடனும் ஒரு வார்த்தைகூடப் பேசுவதில்லை. சதா சர்வ காலமும் அவன் முகத்தில் வெறுப்பும்

ஆத்திரமும் தாண்டவமாடின. உடம்பும் வரவர இளைத்துக் கொண்டே வந்தது.

வீட்டுச் செலவுக்காக அங்கயற்கண்ணியிடம் கொடுக்கும் தொகையையும் அவன் வரவரக் குறைத்துக் கொண்டே வந்தான். கடைசியில் பணம் கொடுப்பதையே நிறுத்திவிட்டான்: இதனால் அங்கயற்கண்ணி அரும்பாடுபடவேண்டி வந்தது; குடும்ப நிர்வாகப் பொறுப்பு முழுவதும் அவள் தலையில் விழுந்தது; நாலு வீட்டில் வேலை செய்தும், ஆலைத் தொழிலாளர்களுக்குச் சாப்பாடு எடுத்துச் சென்றும் குடும்பத்தை நடத்த வேண்டி வந்தது.

தன் குடும்பம் இவ்வளவு சீர்கேடான நிலையை அடைந்ததும் அவள் தன் புருஷன் மீது ஆத்திரம் கொள்ளவில்லை; அநுதாபமே கொண்டாள். அவனுக்கு உடம்பு சரியில்லாததனால் தான் இப்படியெல்லாம் நடந்து கொள்ளுவதாக அவள் நினைத்தாள்.

* * *

ஒரு நாள் துரைசாமி முருகனுக்கு ஒரு கண்டிப்பான கட்டளை இட்டான். ஊருக்கு வடக்குக் கோடிப் பக்கம் எந்தக் காரணம் கொண்டும் அவன் போகக் கூடாது என்பதுதான் அக் கட்டளை. ஏற்கெனவே பயந்த சுபாவமுள்ள முருகனுக்கு இம்மாதிரிக் கட்டளையும் பிறப்பித்து விட்டால் கேட்கவா வேண்டும்?

இப்படியெல்லாம் நடந்து கொள்ளும் துரைசாமியின் புத்தி மாருட்டத்துக்குக் காரணம் ஏதாவது தெய்வக் குற்றமாயிருக்குமோ என்று நினைத்து, அங்கயற்கண்ணி மாரியாத்தாளுக்குப் பொங்கலிட்டுப் பூசையும் போட்டாள்.

அக்கம் பக்கத்திலுள்ள பெண்களுக்கெல்லாம் அங்கயற்கண்ணியிடம் அளவு கடந்த அநுதாபம் உண்டாயிற்று. புருஷனின் வழி தவறின நடத்தையின் உண்மையை அறியாத அவளது கள்ளங்கபடமற்ற சுபாவம் அவர்களுக்கெல்லாம் ஆச்சரியத்தை அளித்தது.

ஆனால் துரைசாமியின் புத்தி மாருட்டத்துக்கு உண்மையான காரணம் இன்னதென்பதை அவளிடம் சொல்ல ஒருவரும் துணியவில்லை. அப்படியே அவர்கள் சொல்லியிருந்தாலும் அவள் நம்பியிருக்கமாட்டாள். புருஷனிடம் அவ்வளவு நம்பிக்கை அவளுக்கு.

ஆனால் அந்த நம்பிக்கைக் கோட்டை அன்று மாலையே தகர்ந்துவிட்டது. அப்பொழுது ஆறு மணியிருக்கும்; துரை

சாமியும் அவன் நண்பனும் ஏதோ பேசிக்கொண்டே வீட்டு வாசலுக்கு வந்தனர்.

துரைசாமியின் நண்பன் உரத்த குரலில், நாக் குழற "ஏய் துரைசாமி! நான் தாஜ்மஹாலை வாங்கப் போறேண்டா!" என்றான்.

அதற்குத் துரைசாமி, "போடா, முட்டாள்! நான் அதை விற்கப்போகிறதில்லை!" என்று உளறிக் கொட்டினான்.

இதைக் கேட்ட அங்கயர்கண்ணிக்குத் 'திகீர்' என்றது. "இந்தக் கொடிய பழக்கத்துக்கு நீங்கள் எப்படி ஆளானீர்கள்? கள்ளுக் குடிப்பது மகா பாவமில்லையா? நேற்றுக்கூட அந்தக் காங்கிரஸ்காரர் அப்படித்தானே பிரசங்கத்திலே சொன்னார்?" என்று கண்ணீர் பெருகக் கேட்டாள் அங்கயற்கண்ணி.

துரைசாமி ஒரு அட்டகாசச் சிரிப்புச் சிரித்துவிட்டு, "அவன் கிடக்கிறான், மூட்டாள்! குடி வெறியிலே அப்படிப் பேத்தி யிருப்பான்! அதை நீ பெரிசாச் சொல்ல வந்துட்டியே!" என்று சொல்லிக் கொண்டே நிற்கமுடியாமல் கீழே விழுந்து விட்டான்.

இந்தச் சமயத்தில் வெளியே சென்றிருந்த முருகன் ஓடோ டியும் உள்ளே வந்து, "அம்மா, அம்மா! இன்றைய தினம் நம்ம தெருப் பையன்களோடு நான் விளையாடப் போயிருந் தேன். ஊருக்கு வடக்குக் கோடிக்குப் போய் விளையாடினோம், அப்பா என்னை அந்தப் பக்கம் போகக்கூடாது என்று சொல்லி யிருந்தார். நான் ஆனமட்டும் அங்கே வரமாட்டேன் என்று சொன்னேன். பையன்களெல்லாம் ஒரேயடியாய்ச் சிரிக்க ஆரம் பித்துவிட்டான்கள். 'அங்கே ஒரு பெரிய கள்ளுக் கடை இருக் கிறது. உங்க அப்பன் தினம் அந்தக் கடைக்குத்தான் வந்து குடிக்கிறான். அது உனக்குத் தெரியக்கூடாது என்று தான் உன்னை இங்கே வரக்கூடாது என்று அவன் சொல்லியிருக்கிறான்' என்று ஒரு பையன் சொன்னான். அதற்கேற்றாற்போல் கொஞ்ச நாழிகைக்கெல்லாம் அப்பா கையிலே கள்ளுக் கலயத்தோடு தள்ளாடிக்கொண்டே அங்கு வந்தார். அவரைப் பார்க்க எனக் குப் பயமாயிருந்தது, அம்மா! ஓடி வந்து விட்டேன்!" என்று விம்மிக்கொண்டே முருகன் சொன்னான்.

அங்கயற்கண்ணி இதைக் கேட்டதும் இன்னும் கதறி விட்டாள்.

குடி மயக்கந் தெளிந்து எழுந்த துரைசாமிக்குத் தன் மகனை யும் மனைவியையும் தலை நிமிர்ந்து பார்க்கவே உள்ளம் கூசியது. முழங்காலைக் கட்டிக்கொண்டு விசித்து விசித்து அழுதான்.

சிறிது நேரத்துக்குப் பிறகு, அவன் அங்கயற்கண்ணி யிடமும் முருகனிடமும் தான் கள்ளுக்கடைப் பக்கமே இனி மேல் போவதில்லையென்று ஆயிரம் சத்தியம் செய்தான்; ஆனாலும் அங்கயற்கண்ணியின் மனம் சமாதானமடைய வில்லை; அவனைத் தினசரி சந்தேகக் கண்கொண்டே பார்த்து வந்தாள்.

* * *

"கண்ணு, ஏன் இப்படி மாமல்லபுரத்துச் சிலை மாதிரி உட்கார்ந்திருக்கே? ஏன் இந்தக் கண்ணீர்?'' என்று சிறிது நேரம் கழித்து வீடு திரும்பிய துரைசாமி கேட்ட பிறகு தான் அங்கயற் கண்ணி தன் சுய நினைவையடைந்தாள்.

உடனே அவள் கண்ணைத் துடைத்துக் கொண்டு, ''ஒண்ணு மில்லே, வாங்க! வெகு நேரம் ஆகியும் இன்னைக்கு நீங்க வராம இருந்திடவே, எனக்குச் சந்தேகம் உண்டாகிவிட்டது. மறுபடி யும் ஒரு வேளை நீங்கள் அந்தப் பாழும் கடைப் பக்கம் போய் விட்டீங்களோ என்று தான்!'' என்றாள்.

''சீ இனிமேல் அந்தப் பக்கம் போவேனா! அப்படியே போவதாயிருந்தாலும் நம்ம ஜில்லாவிலேதான் அடுத்த வாரத் திலே இருந்து கள்ளுக் கடைகளை எல்லாம் மூடிவிடறாங்களே! அதனாலே இனிமே அதைப் பத்தி நீ கொஞ்சம் கூடப் பயப்பட வேண்டாம்!'' என்றான் துரைசாமி உணர்ச்சி ததும்ப.

''எல்லாம் அந்த மவராசன் காந்தி புண்ணியம்; அவரு நல்லாயிருக்கணும்!'' என்றாள் அங்கயற்கண்ணி.

—: o :—

# 24

# வந்தே மாதரம்

சோமுவின் உள் மனதில் ஊடாடிக் கிடந்த அந்த மா பெரும் உணர்வுகள் கோபமா, துயரமா என்று உருப்புரியாமல் தத்தளித்தன. அவன் படபடப்பாகச் சுமதியின் முகத்தை நோக்கினுன். நேர்வழியில் செல்லும் நிதானத்தோடு, கொஞ்சம் கூடத் தட்டுத் தடங்கலின்றி அவள் மிதமான நடையோடு அவனைப் பின் தொடர்ந்தாள். மலர்ந்தும், மலராத, பெண்மை முழுதும் விகசிக்காத தோற்றம். மதர்த்த விழிகளில் ஏக்கத் தேக்கம். ரகசியமாகக் கட்டிக் காத்த உள்ளாசைகளைப் பிறர் உணர்ந்துவிட்ட வேதனையான வெட்கம். ஆனுல் ஈடு கொடுத்து எதிர்த்தே தீருவேன் என்ற உறுதியான முகபாவம், வீட்டுக்குள் நுழைந்ததும் இனி நடக்கப் போகும் விஷயங்களைக் கேட்டால் அம்மா எத்தனை அதிர்ச்சி அடைவாள்?

தெருவே வெரிச்சோடிக் கிடந்தது. இந்த நீண்ட தெருவின் தொலைவே தீராமல் வளர்ந்து கொண்டிருந்து விட்டாலும் நல்லதுதான். சோமுவின் கோபக் கனல் பெருகியது. வாய் திறந்து வார்த்தைகளைக் கொட்டி, அவள் உள்ளாசைகளை வெளியில் எடுத்து எறிந்துவிட்டு, அவள் மனதைச் சுத்தமாகத் துடைத்துவிட வேண்டும் என்ற ஓர் துடிப்பு. 'சலீம்' என்றதுமே உடல் முழுதும் ஒரு ரத்த வெறி பரவுகிறது. அது நேற்று வரை தோன்ருததுதான். ஆனுல் மறைந்திருந்த வெறிபோல 'சட்'டெனப் பற்றிக் கொண்டது. சோமு தன்னை அடக்கிக் கொள்ளத் தூர நோக்கினுன். தேசியக் கொடிகள் கம்பங்கள் மீதெல்லாம் படர்ந்து மகிழ்வால் துடிதுடித்தன. அந்தத் துடிப்பின் லயத்தில் அவன் உடல் முழுவதும் புதிய ஊற்றுணர்ச்சி பரவியது. சந்தேகமில்லாமல் அவன் ஒரு சராசரி மனிதனே

விட, நாட்டுப் பற்று மிகுந்தவன்தான்! ஆனாலும்...,விரும் பாததைக் கண்ட நேரத்தில், கேட்ட நேரத்தில் சொந்தமான விருப்பு, வெறுப்புக்களை உதறிவிட்டு அமைதியடைபவன் யார்?

சுமதியின் பள்ளியில் கொடியேற்று விழா. பள்ளித்தலைமை மாணவி என்ற முறையில் நாட்டு வணக்கமும், தமிழ்மொழி வணக்கமும் பாடினாள் சுமதி. பிறகு கொடி வணக்கமும், அணி வகுப்புமுறையும் நடந்தன. சுமதியை விழா முடியும் வரை இருந்து அழைத்து வர வேண்டும் என்று சோமு, அம்மா சொன்னபடி வந்திருந்தான். பள்ளி நிர்வாகியின் மகன் என்ற முறையில் சலீமும் மாணவர்கட்கு இனிப்புக்கள் வழங்கினான். அடிக்கடி ஏற்பாடு முறைகளைக் குறித்து சுமதியும், சலீமும் பேசிக் கொள்வதைச் சோமு கவனித்தான். அந்தப் பேச்சில், பழகிய நட்பும், ஆழ்ந்த பாசமும், ஒருவரையொருவர் வென்ற சிரிப்பும் தெறிப்பதை உணர்ந்து அவன் திடுக்கிட்டான். சூழ் நிலை தந்த வெறுப்பிற்கு ஈடு கொடுத்துவிட்டு, சுமதியருகே சென்று அம்மா அவசரமாக அழைப்பதாகக் கூறி விழா முடியு முன்பே அழைத்து வந்து விட்டான்.

சாலையில் சின்னஞ்சிறு சிறுர்கள் சுதந்திர மூவர்ணக் கொடி யணிந்து, பெருமிதமான நடையோடு வீடு நோக்கி ஓடினர். இந்தப் பொன்னாளை நினைத்து சோமு உடல் சிலிர்த்த நாட்கள் உண்டு. இன்று வெறுப்பின் சிகரமான நிகழ்வுகள் குலை நடுக்கம் காட்டி மிரட்டின. இந்தச் சுமதிக்கு எப்படி விளங்க வைப்பது? இப்படி அண்ணனும், தங்கையும் அரவமில்லாது, வாக்கு வாத மில்லாது நடந்து வருவது இது முதல் தடவை! இந்த அந்நியம் கொடூரமான உள்ளுண்மை! சோமு சட்டெனத் திரும்பிய போது சுமதியின் கைகளில் நழுவிய ஒரு புகைப்படம் தென் பட்டது. அவன் சந்தேகம் புகைப்படத்தைத் தழுவ, மௌன மாகப் படத்திற்குக் கை நீட்டினான் அவன். சுமதி, நடுக்கத்தை யெல்லாம் வாங்கும் கைகளுக்குத் தந்துவிட்டு, சலனமின்றி படத்தைக் கொடுத்தாள்!

மகாத்மா காந்தி!

சட்டென்று மனத்திற்கு ஒரு சவுக்கடி. புன்னகையும், எழிலுமாய் அவரின் சிரிப்பு, அவன் சந்தேகத்தின் அர்த்த மின்மைக்கோ? புத்தரைத் தொழுதுவிட்டு, புலால் உணவு கொள்வதுபோல், காந்தியைப் போற்றிவிட்டு, முகம்மதிய சகோ தரர்களை வெறுப்பதா? இந்த அர்த்தத்தைக் கற்பிக்கத்தான் சுமதி இதைக் கையில் வைத்திருக்கிறாளா? ஆனாலும்...படத்தைத் திருப்பியபோது, மறுபடியும் மாயையாகி மறைந்த கோபம் பீறிட்டது. வெண்மையான வழவழப்பில் பச்சை நிறத்தில் ''நாதிராவுக்கு அன்பளிப்பு—சலீம்'' என்ற ஆங்கில வாசகங்

கள், சட்டென கைகளுக்குள் சுருள இருந்த புகைப்படத்தை சுமதி பறித்துக் கொண்டாள். அவள் கண்களில் பொங்கும் நீர். அவன் கண்களில் விசுவரூபமாகி நின்ற வெறி. அதை வெல்ல அவள் மெல்ல மொழிந்தாள். ''அது பாபுஜியின் படம் அண்ணு!'' அவள் குரலில் தோய்ந்து கனிந்த உணர்வு இரக்கமா, ஏக்கமா என்றே அவனுக்குப் புரியவில்லை. ஆனுல் அவன் தன்னை உணர்ந்தான். ''சன்மார்க்க நெறி பிறழா, சத்தியப் போர் முனையில் அன்பு சுதந்திரம் கண்ட மகானையா அவமதிக்க இருந்தேன்? அதன் மூலம் நான் என்னையே அவ மானப் படுத்திக் கொள்ள இருந்தேனு?'' இந்தச் செயலைத் தடுத்த சுமதியை நன்றியோடு பார்த்தவாறே அவன் மிகவும் சிரமத்துடன் அவளைப் பெயர் சொல்லி அழைத்தான். அவள் அவனை நிமிர்ந்து பார்த்துவிட்டுக் குனிந்தாள். முழுக்கப் பார்க்கத் தெம்பில்லை.

தெருவோரம் சிலுசிலுத்த காற்றசைவில், உயர்ந்திருந்த காட்டுத் தீ புஷ்பங்கள் கொஞ்சம் கொஞ்சமாக உதிர்ந்து விழுந்தன. இரத்தமென சிவந்த பூக்கள் சிகப்பு வெல்வெட் படுதாவை விரித்தாற்போல் மிகப் பயங்கரமாகப் பெருகி... ஓடும் ரத்தமாக, தேங்கும் நாற்றமாகப் பரவி, நினைக்கவே நெஞ்சு நடுங்கும் ஓலமாக...இனம் தெரியாத ஊர்தான், அப்பாவுக்கு அங்கு வேலையென்ருல் அம்மாவும், சோமுவும் அங்கு இருக்க வேண்டியதுதானே? ஒரு நாள் அடுத்த வீட்டு முக்கர்ஜி பள்ளிக்கூடத்திற்கு வந்து அவனை அழைத்துப் போனுர். பள்ளிக்கூட மணி அடித்தும் கூட அன்று பிள்ளை களை வெளியே விடும் பெரிய கேட்டோ, சின்ன கேட்டோ திறக்கப்படவில்லை. ஒன்றும் புரியாத சிறுவர்கள் தவிக்கும் போது வீட்டிலிருந்து வேண்டியவர்கள் வந்து குழந்தைகளை அழைத்துப் போனுர்கள். அதே போல் தான் முக்கர்ஜி வந்து சோமுவைத் தூக்கிக் கொண்டு வீட்டிற்கு வந்தார். சோமு விற்கு ஆச்சரியம்! கடைகள் சாத்திக் கிடக்கின்றன, அங் காடிகள் சிதறிக் கிடக்கின்றன. வீடெல்லாம் திறந்து கிடக் கின்றன. நீள் நோக்கு வரையும் புகையும், மனித ஓலமும், தீயுமாக ஒரு பயங்கரச் சித்திரம் மனிதப் பூண்டே ஏதோ அழிக்கும் வெறிக்குப் பயந்து ஒடுங்கிவிட்ட நிலை முக்கர்ஜி யின் கண்களில் நீர் கொட்டுகிறது. சோமு அவர் கண் ணீரைத் துடைக்கிருன். அவர் 'கோ'வென்று கதறி ''உன் அப்பாவைக் கொன்று விட்டார்களடா'' என்று துடித்தார். சோமுவிற்கு எதுவும் புரியவில்லை. அவன் ''அப்பா'' என்று அலறினுன். இதைப் போன்ற ஆயிரம் குரல்கள் அன்று ஒலித்தன.

''அண்ணு!'' என்று வீறிட்டவாறே அவன் கைகளைப் பற்றினுள் சுமதி.

''சுமதி, என்னம்மா, நான் ஏதாவது உளறினேனு...?'' திடுக்கிட்டவாறு கேட்டான் சோமு.

''அப்பா என்று என்னமாக தீனமாக அலறினுய் நீ... என் குலேயே நடுங்கி விட்டதண்ணு...''

''உள்ளத்தில் வேகமாக வந்த பழைய நினைவுகள் அம்மா அவை. சுதந்திரம் பெற்ற ஓராண்டுக்குள் நிகழ்ந்த ஊழிக் கூத்து...அன்று ஜகத்தை அழிக்க உறுதி கொண்ட சாதிச் சண்டை, மதச் சண்டை. அந்த இம்சைப்போரில், அருவருப் பான கீழ்த்தரமான குழப்பத்தில், நம் தந்தையைப் பலி கொடுத்து, அந்தத் தீமை செய்த கொடுமைகளை அனுபவித்தவள் நம் தாய்...'' சோமுவின் குரலில் ஒலித்த சோகமான அமைதி பாவம் பளிச்சென மாறிவிட்டது. ''சு...ம..தி'' கடும் முரட்டுத் தனம் ஒலித்தது, அந்த மூன்றெழுத்தில். ''சுமதி! என் ரணத் தில் ரத்தத் துளிகள் கசியும் வேதனை இப்போது, நான் கண்ட காட்சி...நீ 'நாதிரா' என்று அழைக்கப்படும் போது என் காதில் காய்ச்சி ஊற்றிய நாராசம் என்னைச் செவிடாக்காமல் விட்டது குறித்து ஆச்சரியப் படுகிறேன்...'' உள்ளத்தில் புதைந் திருந்ததை வெளியே இழுத்த திகிலோடு அவளை நோக்கினுன். தன் சொற்களில் ஒலித்த ரௌத்திரத்தை எண்ணி அவன் கண் களே கலங்கின.

தெருவின் நாற்சந்தி வந்தது. வலது கை ஓரமாகத் திரும்பி இருவரும் நடந்தனர். நாற்சந்தியின் கடிகாரம் மணி ஒன்பது காட்டியது. நகரம் விழிப்புற்று சுறுசுறுப்பாக மாறி ஏறும் வெய்யிலில் களைப்படையக் காத்திருந்தது. அம்மா பூஜை செய் யும் நேரம் இது! எந்த நிமிடமும் 'அம்மா, அம்மா' என்று வளர்ந்து விட்ட நிலே அவனுக்கு. எல்லாம் அம்மாவுக்காகத் தான். அவளுக்கு ஆகாதது, அவனுக்கும் ஆகாது. அவளுக்குப் பிடித்தவை, அவனுக்கும் வெகு பிரியமானவை.

வாசல் இரும்புக் கிராதியைக் கடக்கும் போதே உள்ளே ஊதுவத்தியின் மணமும், உள்ளடங்கும் இனிமை பொங்கும் குரலில் பக்திக் குழைவு கலந்து பாடும் தாயின் குரலும் துல் லியமாகக் கேட்டது. முன் வாயிற் படியோரம் இருவரும் மயங்கி நின்றபோது, தாயின் குரலின் சோகம் அவன் நெஞ்சை வெட்டியது. அந்தக் கானத்தின் மொழிகள் சுமதியின் நெஞ்சை கிளுகிளுக்க வைத்தன.

ஈஸ்வர அல்லா தேரேநாம்
ஸப்கோ சன்மதி தேபகவான்

ராம ராம ஜய ராஜா ராம்
ராம ராம ஜய சீதாராம்...

'' அம்மா ! ''

'' அம்மா ! ''

ஒரு குரலில் விதிர்ப்பு ! ஒரு குரலில் களிப்பு !

அன்னை சட்டென விழித்துக் கொண்டாள். மைந்தன் உணர்ந்து கொண்ட துயரத்தை, அப்படியே புன்சிரிப்பாக்கி, அதைப் பார்வை மாலையாக அவனுக்குச் சாத்தினாள். அவன் நிறைவோடு அவளை உற்று நோக்கிச் சிரித்தான். '' பூஜை செய்கிறாயா, அம்மா? '' என்று அர்த்தமில்லாமல் கேட்டான்.

சுமதி எதுவுமே பேசாதது சோமுவிற்கு உறுத்திற்று. அவள் வேற்றுமையாகி நிற்பதுபோலக் குற்றம் சாட்டும் பாவனையில் அவளைப் பார்த்தான்.

'' சுமதி ! போய் அண்ணாவிற்கு 'டிபன்' எடுத்து வை '' என்றாள் அம்மா.

'' எனக்கு ஒரே அலுப்பு, அம்மா '' அவளின் கீழ்ப்படியாமை செல்லமாக மொழிந்தது.

சட்டெனத் தாயின் முகத்தைக் கண்டு திடுக்கிட்டான் அவன். கோபம் சீறும் விழிகள். அவள் பார்வையில் தங்கையின் மீது மட்டும் என்றும் அன்பு கனிந்து பொங்கியதில்லை. எப்போதுமே அதில் சுரீரென எரியும் தீப்போன்ற சுடர் தெறித்து மங்கி மறைவது போலத்தான் தோன்றும். இந்தப் பார்வையைத் தினமும் பார்த்துப் பயந் தெளிந்தவளாயிற்றே சுமதி! அவள் எழத் தயாராக இல்லை. அண்ணா கோபித்துக் கொண்டதை எல்லாம் வைத்து, அம்மாவிடம் செல்லமாகக் கீழ்ப்படிய மறுத்துப் பிடிவாதம் செய்தாள். நலிந்த உருவான அம்மா, அவளிடம் எப்போதும் போலவே ஒட்டியும், ஒட்டாமலும் '' பெண்ணென்றால் இப்படியா? எழுந்திருடி, நானே வருகிறேன். இரண்டு பேருமே சாப்பிடுங்கள் '' என்று முன் வந்தாள். சுமதியின் பிடிவாதத்தை, அம்மா இப்படிப் பெரும் போக்காக விட்டுத்தான், இப்படித் தான் தோன்றியாகி விட்டாளோ அவள்?

அம்மா இரண்டு தட்டுக்களில் இட்டிலி வைத்துவிட்டு, தானும் ஒரு தட்டில் இட்டிலி வைத்துக் கொண்டாள். மூவரும் விண்டு சாப்பிட ஆரம்பித்தார்கள்.

'' இன்றைக்கு மோர்க்குழம்புதானேம்மா ?'' என்றான் சோமு.

'' இல்லை, மோர்க்குழம்புதான் சுமதிக்குப் பிடிக்காதே...'' உதைத்துவிட்ட அந்தக் குழந்தையை எடுத்தணைக்கும் பரிவு அவள் குரலில்.

'' சுமதிக்குப் பிடித்ததெல்லாம் செய்வதானால் அது உன்னால் ஆகாதும்மா...'' என்ற சோமுவை எதிர்த்து '' அண்ணா ! சும்மா இருக்கமாட்டாய்...'' என்று குறுக்கிட்டாள் சுமதி.

சோமு அதை லட்சியம் செய்யவில்லை. '' சு...ம...தி என்று இல்லே நீ பெயரிட்டாய். அது நாதிராவாகிவிட்டது அம்மா. அனார்க்கலி கதை ஞாபகம் இருக்கிறதா அம்மா உனக்கு? அந்த சலீமின், அனார்க்கலியின், பெயர்தான் நாதிரா. இப்போது பள்ளி நிர்வாகியின் மகன் சலீமுக்காக இவள் பெயர் நாதிரா ஆகிவிட்டதம்மா...''

சோமு எதிர்பார்த்தபடி அம்மா எடுத்த விள்ளலைத் தயங்கவே செய்தாள். ஆனால் அடுத்த கணமே ஆட்டம் காணாத உறுதியாக நிலைத்தன கரங்கள். அவள் மிகவும் கஷ்டத்தோடு தன் முகத்தைக் கனிவாக்கிக் கொண்ட முயற்சி அது. "அதைப் பற்றி அப்புறமாகப் பேசலாமா, சோமு...!''
அவள் குரலில் செயற்கையான நிறைவு!

சிட்டுக்குருவியின் இறகுகளைப்போல் படபடத்த சுமதியின் உள்ளம் சில்லிட்டு உறைந்தது. அந்தக் கணத்தில் எதுவுமே பெரிதாகாமல், அன்னையின் பரிவே பெருகி, அவள் நெஞ்சு நிறைந்து அவளை விம்ம வைத்தது. '' அம்மா '' என்று உட்கார்ந்த வாக்கிலேயே தாயின் மடிமீது முகம் பதித்துத் தேம்பித் தேம்பிக் கதறினாள் அவள். அன்னை அவளைத் தேற்றவும் இல்லை, கடியவும் இல்லை. மகனை அவள் நோக்கவுமில்லை, அதிர்ந்து உட்கார்ந்து விடவுமில்லை. மகள் மடியில் கதற, மகன் எதிரில் குமுற, ஒரு தாய் சலனமின்றி உண்டு கொண்டிருக்கிறாள்! பூகர்ப்பத்தில் எரிகுழம்பை வைத்துக்கொண்டு நதிகளையும், வளங்களையுமே காட்டிக்கொண்டிருக்கும் பூமித்தாய் தானா இவள்? அவள் எப்போது குமுறுவாள்! தாயின் முன் தனக்குத்தான் குன்றி அடி பணிந்து சிறுமியாகிவிட்ட வெட்கம். ஏன்? நிமிர்ந்தான் சோமு. அவள் முகத்தில் இத்தனை நாள் நிலவிய சாந்திக்குப் பதில் விதிர்ப்பு! இந்த விதிர்ப்பை இதற்கு முன்பு எப்போதோ கண்ட நினைவு... அந்தத் தவிப்பில் விடுபடாத பயங்கரமான, நினைத்தால் நெஞ்சு கலங்கும் சீர் குலைவு... அவன் வயிற்றில் தீக்கங்குகள் உறையும் வேதனை பீறிட '' அம்மா '' என்றான்.

அவள் பேசவில்லை; மனநிழலில் ஒதுக்கம் கண்ட நினைவின் கூர்மை உறுத்தும் வேலாகிவிட்டதா? மாண்டுவிட்ட தந்தை நினைவு வந்துவிட்டதா அவளுக்கு?

"சுமதி!" சுமதியின் தோழி நீலாவின் குரல்.

அம்மா சுமதியை எழுப்பினாள்; "போ முகத்தை நன்றாகத் துடைத்துக்கொண்டு போ. நம் துயரங்களை எல்லாம் பிறர் உணரும்படி வைக்காதே. உன் தோழி நீலா போலிருக்கிறதே, அங்கேயே உட்கார்ந்து பேசுங்கள்..."

சுமதி முகத்தை அழுத்தித் துடைத்துக்கொண்டு நகர்ந்தாள். அவள் தட்டில் விண்ட இட்டிலிகள். சோமு மறுபடியும் அம்மாவைக் கூர்ந்து நோக்கினான்.

"நீ நினைப்பது சரிதான், சோமு. என்றுமில்லாத விதமாக உன் தாய் குழம்பிக் கிடக்கிறாள். ஆனால் எல்லாவற்றிற்கும் சேர்த்து இன்று நீயே ஒரு முடிவு காட்டிவிட்டாய், சோமு..."

"முடிவா...? என்னம்மா சொல்லுகிறாய் நீ...?"

"முடிவுக்கு வராமலேயே, முடிவுகள் கிளைப்பதுண்டு சோமு! நீ உன் தங்கையை என்றாவது ஒரு நாள் பிறனுக்கு விட்டுக் கொடுக்க வேண்டியவன்தானே...?" அம்மாவின் கண்களில் பெருகிய நீர் மனமூடி திறந்துகொண்டாற்போல் உருப்புரியா ஓர் உண்மையை அவனுக்கு உணர்த்த முயல்கிறாளோ. ஏதோ உள் பொருள் புதைந்து, அதை வார்த்தை நிறைய எடுத்துக் கூற முடியாத தயக்கம் ஏன் அவள் வார்த்தைகளில்?

அடுப்பின் புகையெல்லாம் கவிந்து கொண்டு விட்டது. எரிந்தும், எரியாமல் கிடந்த பச்சை விறகு புகையாய்க் கப்பிச் சூழ்ந்தது. அந்தப் பின்னேட்டத்தில் கிளைக்கும் சின்னஞ் சிறு சுடர் முகமாய் அம்மாவின் முகம், ஒளி மங்கி, துயர் தேங்கி நிற்கிறது. சோமு விதிர்த்தான். இதே முகம், துயர்...நீண்டு நீண்டு நெஞ்சையழிக்கும் துயரிடையே அன்று...

"அன்று..." சட்டென சோமு நினைத்த 'அன்று' அம்மாவின் வாயில் சொற்களாக வந்தது. "அன்று" என்று அந்த நாளைக் குறிக்கும் போதெல்லாம், இந்தச் சோகமான பீறிட்டோடும் வேதனை கிளர்ந்து சோமுவின் நெஞ்சை வெட்டும். இதோ இப்போதும் அம்மா "அன்று" என்று விட்டு உருகி நிற்கிறாள்... மேலே தொடரவில்லை.

புகை போன்ற தூரமான ஒரு பழைய மங்கிய காட்சியில்... இதோ நிற்கும் துயரத்தோடு கைகள் கட்டிலில் கட்டப்பட்டு ஆடைகள் கிழிந்து அரைகுறையான அலங்காரத்தோடு....

அடுத்த வீட்டு முக்கர்ஜி பள்ளிக்கூடத்திற்கு வந்து சோமுவை அழைத்துக்கொண்டு வந்தபோது, தந்தை பலியாகிவிட்ட செய்தியைக் கூறியதும் அவனை வீட்டினுள் அழைத்து வந்தார். அவரைக் கண்டதும் அம்மா வீறிட்டலறினாள். அவர் அம்மாவின் கட்டுக்களை அவிழ்த்தார். உடனே அவள் சோமுவைக் கட்டிக்கொண்டு 'ஓ'வென்று கதறினாள். முக்கர்ஜி முகத்தை மூடிக்கொண்டு கேவினார். ஒரு நண்பனே தன் தோழனின் மரணத்தைப் பற்றி, அவன் மனைவியிடம் கூறும் துர்ப்பாக்கியத்திற்கு வருந்தினார் அவர்.

"அன்று... முக்கர்ஜி உன்னைப் பள்ளிக்கூடத்திலிருந்து அழைத்து வந்து, கட்டிக் கிடந்த என்னை விடுவித்து விட்டு" மறுபடியும் அம்மாவின் தழதழத்த குரல் பொங்கும் உஷ்ண நீரோட்டமாகப் பீறிட்டது. "நான் தவித்துத் திணரும்போது 'அவர்' வருமுன் நான் என்னைக் கொன்று கொள்ள நினைத்த போது, அதை முக்கர்ஜி புரிந்து கொண்டார். அவர் தணிவான குரலில் 'தற்கொலைக்குத் துணியாதீர்கள் அம்மணி. உங்கள் செல்வ மகன் தந்தையற்றவன்... ஆம்! என்னெதிரிலேயே அவர் தாக்கப்பட்டு மாண்டார். அப்போது உயிர் பெரிதென ஓடி வந்தேன். இப்போது இதைச் சொல்லவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படும்போது, நானும் தாக்குண்டு இறந்திருக்கலாம் என்று தோன்றுகிறது அம்மணி!' என்றார். என் துயரத்திலும் அவரைக் கையெடுத்துக் கும்பிட்டேன். அவர் மட்டும் உன் தந்தை இறந்தசெய்தியைக் கூற வராவிட்டால்...நான் உன்னை அனாதையாக்கிச் சென்றிருப்பேனடா சோமு..." எத்தனை நாளோ கட்டிக்காத்த துயரம் கரை மோதியது.

சோமு விக்கித்து விட்டான்.

"நான் 'கோ' வென்று கதறினேன். அந்தக் கணம் சோமு... நான் உன்னைத்தவிர என் சகலத்தையும் இழந்தேன். உலகத்தில் இனி என்ன எனக்கு ஈர்ப்பு? உன்னைத் தக்கவிடத்தில் ஒப்புவித்துவிட்டு, நான்..."

"அம்மா!" என்று வீறிட்டான் சோமு.

"அதை நினைத்து இப்போது ஏன் அஞ்சுகிறாய் சோமு? என்றாவது ஒரு நாள் உனக்குத் தெரிய வேண்டிய உண்மைகள்தான் இவை என்று கட்டிக் காத்து வந்தேன். இன்று... அதற்குறிய நேரம் வந்துவிட்டது. அப்போது நீ சிறுவனல்லவா...? தீமை செய்த கொடுமைகளை அநுபவித்தவருள் முதன்மையானவர்கள் தாய்மார்கள். பிள்ளைகளைப் பள்ளிக்கனுப்பிவிட்டு, கணவனை அலுவலுக்கனுப்பிவிட்டு, 'சட்'டென தன்னைப் பலி கொடுத்தவர்கள். கண் சிமிட்டு முன் மூண்டெழுந்த கன

லில் வெறுப்பு, குரோதம், சதை, இரத்தம் இவைகளின் ஆட்சி வியூகமிட்டு விட்டது. கொடுமைக்குக் கொடுமை, பழிக்குப் பழி என்று பாதிக்கப்பட்டவர்களும் வெகுண்டெழுந்தனர். அறிவுக்கு, அறிவில்லை, அன்புக்கு அன்பில்லை. புன்னகையே உருவாக, சத்தியமே உறுதுணையாக நின்ற காந்திஜீ எந்த இரு பெரும் சமுதாய நலத்திற்குப் பாடுபட்டாரோ அதே இருவரும் கை கலந்தார்கள். வெற்றி அல்லது வீர மரணம் என்பதல்ல அது. அழிவு அல்லது மானக்கேடு. ஆண்களைக் கொன்று குவித்து, பிள்ளைகளை வெட்டியெறிந்து, பெண்களை அவமதித்து...அன்னையர் குலத்தைப் பழித்ததால் மாறுத சாபம் பெற்ற கரங்கள்... வீடெரித்து, மங்கையர் நெஞ்செரித்து, மாண்ட உடலெரித்து... மாளாத சிசுக்கள் பெற்ற தாய்மார் மட்டும் எஞ்சிய மக்களோடு நெஞ்சு துடித்து நிற்க...இனி சாவா, வாழ்வா? ஏன் இந்தக் கேள்வி? மானமழியின் தானழியும் பாரதப் பெண்ணல்லவா? பின் தயக்கம் ஏன்?''

''சோமு! உனக்குத் தெரியாது. அன்று இந்த நாடு ஒரே ஒரு மனித பலத்தில், சத்தியத்தின் திருக்கரத்தில், சாத்வீகத்தின் இனிப்பில், தன்னை மறந்து கட்டுப்பட்டிருந்தது. அந்த எளிய புன்னகைக்கு நாற்பது கோடி மக்களும் கட்டுப்பட்டுக் கிடந்தபோது, நான் ஒரு பொருட்டா? ஒரு முழ வேட்டி கட்டிய :ஒருவரிடத்தில் அடி பணிந்த பாரதம் இது. அது சத்திய உபாசகம்! அதையும் மீறி மூண்ட கனலில் ஈ, எறும்பு கடித்த நினைவாக, அதை ஒரு துர்க்கனவாக எண்ணி அன்னையாக வாழுங்கள், அன்பு மனைவியாக வாழுங்கள், என்று அறிக்கை விடுத்தார். ஆங்காங்கே முளைத்த சின்னஞ்சிறு கலகங்களுக்காகக் காந்தி அண்ணல் அந்தந்தப் பிராந்தியத்திற்கும் பாதயாத்திரை வந்தார். அவர் புன்னகைக்கும், பொன்மொழிக்கும் கட்டுப்பட்டது கலகம். அது நின்றுவிட்டது. தீமை புரிந்த கரங்களெல்லாம், அவர் கால் தூசி ஒற்றி நின்றன. அன்பும், தருமமும் அழிந்த நெருப்பில் பலியான என் போன்றவர்களும், அவரைக் கண்டு கதறித் துயர் தீர்ந்தோம். தோளுக்கும் நேஞ்சத் துணிவுக்கும் இடமற்ற மறப்போரில், மாதர்கட்கும், மழலைகட்கும் முதல் சுடுகாடாகிய அதர்ம வெறியில் சிக்கிவிட்டு மீண்டபோது மனப்பாரத்தை எல்லாம் கழட்டி அவர் பாதத்தில் வைத்தோம். ஏசுவைத் தொட்ட குஷ்டரோகிகள் நோய் தீர்ந்தாற்போல் அவர் பாததூளிகளைத் தொட்டு ஒற்றிக்கொண்டதின் மூலம் மாசு களைந்து புனிதமானது போல் தோன்றியது.''

''...ஆனுல்...'' அம்மாவின் குரல் இப்போது சன்னமாக இழைந்து வந்தது. ''நான் மீட்புக் குழுவில் சேர்ந்து, உன்னேடு தமிழ் நாட்டுக்கு வந்த பின்தான் உணர்ந்தேன். எந்த

அவமானத்திற்காகத் தற்கொலை புரிந்து கொள்வேன் என்று முக்கர்ஜி கருதினரோ, அதே அவமானம் உயிர்த்துப் பெருகி வந்து நானடைந்த மாசைக் கணந்தோறும் காட்டி என்னை வதைத்ததை நான் எப்படிச் சொல்வேன்?...மறுபடி அன்னையாகிய பாவி...உன் தங்கையின் தாய் நான்...'' இதைச் சொல்லும்போது அம்மா எப்படித்தான் அவமானத்தால் சிறுத்து விட்டாள். ''...ஆனாலும் சுமதியை விருப்போடு வளர்த்தேன். சில சமயம் என்னையும் மீறி வரும் சீற்றத்திற்கு அவள் பொறுப் பாளியல்ல என்ற ஞானோதயம் ஏற்படும். இந்தச் சலனங்களுக் கிடையேதான் நான் வாழ்கிறேன். நீ...நீ...கூறிய செய்தி உண்மையாயின் அவள் வழி அவளை வாழவிட்டு விடு! இதோ அவள் வாழ்வுப் பாதை விரிந்து வழி காட்டுகிறது. இது அவள் விதி. அவளை அந்த வழி நடக்க விடு. அவள் மதம் மாறி தனக்குற்றவனை மணப்பது விதியாயின் அதைத் தடுக்க முடிய லாதே. அவளுக்காக உலகில் ஒளி பிறக்கட்டும்...இனி உன் தந்தையின்—என் கணவரின்...உன் ஒருவனுக்காக மட்டும் நான் வாழ்ந்து கரையேறி விடுகிறேன்...''

''அம்மா'' உண்மை சோமுவின் மனதில் மோதி ரீங்கரித் தது. அம்மா அவனை அணைத்துக் கொண்டாள். ''சோமு! கடந்து போன இந்தக் கசப்பான உண்மைகளை சுமதி ஒரு போதும் உணரக்கூடாது. அவள் வாழ வேண்டும். அதுவும் என் ஆசை.''

அன்னை! அவள் உலகின் தாய்!

''சுமதி!''

அழுதவாறே சுமதி வந்தாள். வந்ததுமே தாயின் மடியில் முகம் புதைத்து ''என்னை மன்னித்துவிடு அம்மா. அண்ணு சலீமைப் பற்றிச் சொல்லிவிட்டாரா? நான் தவறு செய்திருந் தால்...'' என்று விக்கினுள்.

''இதோ பார் அசடு! சுமதி! எழுந்திரு'' அம்மா அவளைத் தாங்கியவாறே காந்தியின் படத்திற்கு எதிரில் வந்தாள். ''உன் அண்ணு சொன்னுன். நான் சம்மதித்துவிட்டேன். நிஜமாகத் தான், சுமதி. என்ன அப்படிப் பார்க்கிருய்? இதோ இந்தப் பூவைத் தலையில் வைத்துக்கொள். உனக்காக உலகில் ஒளி பரவட்டும், உனக்காக வாழ்வில் இன்பங்கள் மலரட்டும்...!''

''அம்மா'' சுமதி தாயின் மார்பில் ஆனந்தக் கண்ணீர் கொட்டினுள். அந்தக் கடலளவு பரந்த அன்பு அன்னையின் பூகர்ப்பத்தில் பொங்கித் துடிக்கும் ஆராத எரிகுழம்பை எண்ணி நெஞ்சு விம்மினுன் சோமு.

* * *

பூவை எஸ். ஆறுமுகம்

25

# சத்திய தரிசனம்

'மகாத்மா காந்தி மளிகை' என்னும் விளம்பரப் பலகையின் எழிலும் ஏற்றமும் அந்தக் கடையின் தொழிலிலும் தோற்றத்திலும் பிரபதிபலித்துக் கொண்டிருந்தன.

மளிகைக் கடை முதலாளியின் பெயர் வேணுகோபால் முதலியார்.

முதலியார் என்ருல், கடைச் சிப்பந்திகளுக்கு ஒரு நடுக்கம். அந்த நடுக்கத்துக்கு ஆதார சுருதியாக அமைந்தவை முதலியாரின் அன்பும் கண்டிப்பும்தான். 'எங்க முதலாளி ஐயாவுக்குச் சத்தியம் தான் கடவுள். அந்தச் சத்தியத்தை நம்பி, மதிச்சு, வழிபட வேணும்னு எங்களுக்கெல்லாம் சதா சொல்லிக் கொடுத்து வராங்க. எங்க கையிலே அவங்க காட்டுற அன்புக்கும் அளவில்லே; கண்டிப்புக்கும் எல்லே கிடையாது. ஆனபடியிஞலேதான், எங்க முதலாளியைக் கண்டால் எங்களுக்கெல்லாம் ஒரே நடுக்கம்!' என்று கடையின் தொழிலாளர்கள் ஒரு முகமாகக் கருதி வந்தனர்.

மளிகைக் கடையின் சுவர்க்கடிகாரம் எட்டுமுறை அடித்து ஓய்ந்தது.

அதோ, வந்துவிட்டார் முதலியார்; ஆமாம், வேணுகோபால் முதலியார்தான்.

நெற்றியில் நீறு மணத்தது; உடலில் கதருடைகள் மணத்தன.

காரினின்றும் இறங்கிய முதலியார் கடைக்குள் பிரவேசித்தார். ''முருகா''! என்று நெஞ்சுருகி அழைத்த வண்ணம்

மயில்வாகனனைக் கைதொழுதபடி, திரும்பினார்: அன்பையும் சத்தியத்தையும் உலகமாகக் கண்டு, உணர்ந்து, வாழ்ந்து அமரத்துவம் எய்திய காந்தியடிகளின் உருவத்தை இமைக்காமல் பார்த்தார்; அவர் கண்கள் கசிந்தன. தெய்வம் மனிதனாக வந்து, காந்தியாக வாழ்ந்து, 'மானுடம் வென்றது' என்ற உயர் தத்துவத்தின் சத்திய தரிசனமாக—அன்பின் வடிவமாகத் தோற்றம் தந்து கொண்டிருந்த அண்ணலுக்கு அஞ்சலி செலுத்தினார். 'முருகா!' — அவர் கல்லாவில் அமர்ந்தார். சாம்பிராணிப் புகையும் ஊதவத்தி மணமும் சுற்றிச் சூழப் பரவின.

கொத்தவால்சாவடி சுறு சுறுப்படையத் தொடங்கிய வேளை அல்லவா அது!

''தம்பி, மூணு காசுக்கு உப்பு குடு!'' குடு குடு கிழவி ஒருத்தி துட்டை நீட்டினாள்.

''இன்னு கேய்வி மூணு காசு யாபாரம்?'' என்றான் கடைச் சிப்பந்தி ஞானப்பிரகாசம்.

முதலாளி புன்னகை புரிந்தார். 'காலணா அரையணாவுக்கு உப்பு புளி மிளகாய் வியாபாரம் செய்ய ஆரம்பிச்ச அந்த நாளை நினைச்சால் எல்லாமே கனவாட்டம்தான் இப்போ தோணுது. கனவென்ன கனவு! எல்லாம் என் ஐயன் முருகன் கருணை!' என்பதாக அவரது எண்ணக் கயிறு முறுக்கேறியது. இன்றைக்கு வியாபாரம் ரூபாய்க் கணக்கில், கிலோ கணக்கில், மூட்டைக் கணக்கில்!

''தம்பி, மூணுகாசும் காசுதான். ம்...கிழவி கேட்கிறதைக் கொடு,'' என்று உத்தரவிட்டார் முதலியார்.

கிழவி சென்று விட்டாள்.

ஆதணக்கோட்டை முந்திரிப் பருப்பு டின் ஒன்றுக்கு ஆர்டர் வந்தது. வந்த வியாபாரி டின்னை எடுத்துவைத்துக் கொண்டு, நூறு ரூபாய்த் தாளை முதலியாரின் கைகளில் சமர்ப்பித்தவர், அவசரத்தில் முந்திரிப் பருப்பு டின்னுக்குரிய கிரயம் போக, மிச்சத்தை வாங்க மறந்து விட்டு, போய் விட்டார்.

பழைய நினைவுகளில் லயித்திருந்த முதலியார் சுயப் பிரக்ஞை கொண்டு கண்களைத் திறந்த நேரத்திலே, அவர் தமது கைகளில் விஷமப் புன்னகை சொரிந்து கொண்டே காட்சியளித்த அந்த நூற்று ரூபாய்த் தாளை நோக்கினார். தேள் கொட்டிய மாதிரி அவர் துடி துடித்தார். 'ஐயையோ! அந்தச் செங்கல்பட்டு வியாபாரி மீதிப்பணத்தை வாங்கிக்கிடாமல் போயிட்டாரே!'

என்று பதை பதைத்து, 'ஞானப் பிரகாசம்!' என்று பதட்டத்துடன் விளித்தார். அவர் குரல் ஒய்ந்தடங்கவில்லே.

அங்கே ஞானப்பிரகாசம் வேர்க்க விறுவிறுக்க வந்து நின்ருன்.

''எங்கேப்பா போயிட்டே அதுக்குள்ளாற?''

''செங்கல்பட்டு வியாபாரியை ஓடிப் போய் இட்டாற துக்குங்க, ஐயா. பாக்கித் துட்டை வாங்காமல் மறந்திட்டுப் போயிட்டாருங்களே!'' என்ருன் ஞானப்பிரகாசம்.

''பேஷ்!'' என்று அமைதிப் புன்னகை சொரிந்தார் முதலியார். அவர் காந்தியடிகளைத் தரிசித்த போது, அவர் கண்கள் பனித்திரையிட்டிருந்தன. 'என் கடையின் மானம் பிழைச்சிட்டுது!'

செங்கற்பட்டு வியாபாரி அசல் பட்டின் கம்பீரமான நாணயத்தை மனத்துள் போற்றித் துதித்தவராக விடை பெற்ருர். 'பழைய சிந்தினேயிலே லயிச்சிருந்த எனக்கு, பாக்கிப் பணத்தை கொடுக்கிறதுக்கு ஞாபகம் இல்லாமல் போயிட்டுது!' பழைய நினேவுகள் அவருள் மீளவும் சட்டை உரித்துக் கொண்டன. சுதந்தரம் எய்திய பின் தமிழ் நாட்டுக்கு விஜயம் செய்த மகாத்மா காந்திஜியைத் திருச்சியில் தரிசித்துத் திரும்பிய வேணுகோபால் முதலியார் முருகனேயும் காந்திஜியையும் நம்பி, காந்திஜியின் பேரால் சென்னே கொத்தவால் சாவடியில் ஆரம்பித்த மளிகைக் கடையின் அந்த நாள் கதையை அவர் எங்ஙனம் மறப்பார்?

* * *

வாய் பேசாமல், இதயத்தை மட்டிலும் பேசவிடும் டெலிபோன் அழைத்தது.

வேணுகோபால் முதலியார் தொலே பேசிக் கருவியைக் காதுடன் பொருத்திஞர்: ''யாரு மாமாவா?... மயிலாப்பூரிலேருந்தா பேசுறீங்க?...ஓ...அப்படீங்களா? ஆயிரம்தானே? இப்பவே அனுப்பிடுறேனுங்க. ஓ!...சரிங்க!''

முதலியார் தொலேபேசிக் கருவியினே அதற்குரிய ஒய்விடத்தில் வைத்துவிட்டுத் திரும்பிப் பார்த்தார். 'தீபாவளிக்கு ஜவுளி எடுத்த வகையிலே உடனே கட்டவேண்டிய தொகையிலே ஒரு ஆயிரம் குறையுதாம். ஆயிரம் ரூபாயை இப்ப யார் மூலம் அனுப்புறது?' என்று சிந்தை செய்தார். அவர் நெஞ்சில்

ஞானப்பிரகாசத்தின் நினைவுதான் எடுத்த எடுப்பில் வந்தது. சற்றுமுன் அவன் நடந்துகொண்ட முறை அவர் நெஞ்சில் பாலை வார்த்தது. நாணயத் தொடர்புள்ள வேலைகளைச் செம்மை யுடன் செய்து முடித்துக் காட்டி வந்தவன் ஞானப்பிரகாசம். நாலு வருஷங்களாக அவன் அங்கு பணிபுரிந்து வருகிறான். கொடுக்கப்பட்ட சந்தர்ப்பங்களையெல்லாம் அவன் நாணயமா கவே நிறைவேற்றியிருக்கிறான். ஐந்து, பத்து என்றாலும் நாணயம் நாணயம் தானே?

முதலாளியின் விழிகள் வெளிக் கடையைத் தாண்டி உள்ளே நுழைந்தன.

"ஞானப்பிரகாசம்!"

ஞானப்பிரகாசம் வந்தான். வந்தவனிடம் நூறு ரூபாய் நோட்டுக்கள் பத்து எண்ணிக் கொடுக்கப்பட்டன. போக வேண்டிய இடமும் குறிக்கப்பட்டது. "ஓ, தெரியுமுங்க எசமான்!" என்றான் ஞானப்பிரகாசம்.

அவன் சைக்கிளை எடுத்துத் தள்ளிக் கொண்டு புறப்படப் போனான்.

"ஞானப்பிரகாசம்! உங்க அம்மாவைத் தவிர வேறே யாரும் உனக்கு இல்லையா?" என்று வினவினர் முதலியார்.

"இல்லீங்க, ஐயா! எங்க அம்மா தான் எனக்குச் சகலமும்! அவங்கதான் எனக்குத் தெய்வமுங்க!"

ஞானப்பிரகாசத்தின் கண்ணீர் முதலியாரின் நெஞ்சிலிருந்து நல்லமூச்சை நெட்டித் தள்ளியது.

"ஏய்! பணம் பத்திரம்! போனதும் வந்ததுமாய் ஓடியார வேணும்!"

ஞானப்பிரகாசத்தை வேலைக்கு வைத்துக் கொள்ளும்படி கண்ணீரும் கம்பலையுமாய் வேண்டிய அவனது அன்னைவடிவம் அவருள் நிழலாடியது. 'முருகா!' என்று தம்முள் முணு முணுத் தார். காந்திஜியின் உருவம் அவருள் இரண்டறக் கலந்தது. ஞானப்பிரகாசத்தைக் கூர்ந்து நோக்கிய முதலியார் அவன் இளமையின் கம்பீரத்துடன் அங்கிருந்து புறப்பட எத்தனம் செய்ததைக் கண்டார். என்ன நினைத்துக் கொண்டாரோ, அவர் மீண்டும் காந்திஜியின் படத்தைப் பார்வையிட்டார். "ஞானப்பிரகாசம், காந்தி மகாத்மாவின் படத்திலே இருக்கிற பூச்சரம் கீழே நழுவப் பார்க்குது. அதைச் சரி செய்து போட்டிட்டுப் புறப்படப்பா," என்றார்.

ஞானப்பிரகாசம் தன் உரிமையாளரையும் சத்தியத்தின் காவலரையும் அர்த்த புஷ்டியுடன் பார்த்துவிட்டு, இடப்பட்ட கடமையைச் செய்து முடித்தவனாக அங்கிருந்து நகரலானான்!

முதலியார் பெருமூச்சுப் பறித்தார். 'ம்...ஒரு சத்திய சோதனை ஞானப்பிரகாசத்தோடே புறப்பட்டுப் போகுது, ஆயிரம் ரூபாய்ப் பணத்துடன்!...' என்று அவர் உள் மனம் நினைத்தது. அதைத் தொடர்ந்து, "சத்தியம் என்பது வாய்மை மட்டுமல்ல; உள்ளத்தின் உண்மை ஒளியையும் அது குறிக்கும். சத்தியப் பொருளும் நித்திய தத்துவமுமான இறைவனையும் அது குறிப்பிடும்!" என்ற காந்தீய தத்துவமும் நிழலாடியது.

* * *

ஆயிரம்!...ரூபாய் ஆயிரம்!...புத்தம் புதிய நூறுரூபாய்ச் சலவைத்தாள்கள் பத்து!...

தூங்குமூஞ்சி மரத்தின் நிழலில் சைக்கிளை நிறுத்திவிட்டு நின்ற இளைஞன் ஞானப்பிரகாசத்தின் கண்கள் இடுப்பில் செருகப் பட்டிருந்த ஆயிரம் ரூபாய்ப் பணத்தைக் கற்பனை செய்தன. மறுகணம், அத்தனை நோட்டுக்களும் அவனது கைக்கு இடம் பெயர்ந்தன. மண்ணடி மாறியது; பிராட்வே பிரிந்தது. பிடாரியார் கோவில் தெரு முனையில் இருந்த பழைய வீட்டின் வாசலில் சைக்கிளும் கையுமாக நின்றான் அவன். நாலு வீடு தள்ளிச் சென்றால், அவனுடைய வாசஸ்தலம்!

ஒரு கணம் அவனுடைய உள்ளம் முதலாளியின் மண்டியைச் சுற்றியது:

முன்தினம் காலையில் கடைக்குப் போய் ஒருமணி நேரம் கழித்து, வீட்டுச் செலவுக்குக் கொஞ்சம் பணம் வேண்டுமென்று முதலாளியிடம் வேண்டினான் ஞானப்பிரகாசம்.

"இடை நடுவிலே ஒரு பைசா கூடத் துட்டு தரமுடியாது. சம்பளம் ஏழாந்தேதி கொடுப்பதுடன் சரி!" என்று வெட்டு ஒன்று துண்டு இரண்டாகக் கூறிவிட்டார் முதலியார். இந்நிகழ்ச்சியை எண்ணியபோது, அவனையும் அறியாது பற்கள் 'நறநற' வென்று ஒலியை எழுப்பின. கையிலிருந்த நூறுரூபாய் நோட்டுக்களையே தொடுத்தகண் எடுக்காமல் பார்த்துக் கொண்டேயிருந்தான் அவன். ஆயிரம் ரூபாய்ப் பின்னணியிலே அழகான தொரு சொர்க்கலோகம் உருவாயிற்று. உடம்பை மூடிக்கொண்டிருந்த கந்தலும் கிழிசலும் பறிபோயின. வறுமையினால் திரையிட்டு மூடப்பெற்ற பொலி விழந்த வதனத்திலே வனப்பும் வளமும் அணையலாயின; நடந்தான்; வீட்டுவாசல் வந்தது. சைக்கிளை

'ஸ்டாண்ட்' போட்டு நிறுத்திஞன். வெளித்திண்ணையில் உட்கார்ந்தான் அவன்.

'தங்கம்!...'

உந்திக்கமலத்திலிருந்து உதயமான இந்தப் பெயர் எதிரொலி பரப்பி அடங்குவதற்குள், அவன் தஞ்சை மண்ணுக்குச் சொந்த மான வல்லத்துக்கு ஓடித் திரும்பிஞன். 'அத்தான்! நீங்களும் நாலுபேரைப்போல கையிலே ஆயிரம், ஐநூறு பணம் சேர்த்துக் கிட்டுத் திரும்புறபோதுதான் என்னை உங்க கையிலே ஒப்படைப் பாங்க என் அப்பா!'' என்று திட்டவட்டமாகச் சொன்ஞளே தங்கம்!

ஞானப்பிரகாசத்தின் ஊனக் கண்களிலே தங்கத்தின் உடற் கட்டும், அழகுக்கண்களின் மின்வெட்டும் நமட்டுச் சிரிப்பும் தோன்றி அவனது சிந்தையைக் கலக்கின. 'ஆமாம், இப்பவே தங்கத்தைப் பார்த்தால்தான் என்னுேட மனசு ஆறும்!'

பணத்தைச் சட்டைப் பையில் திணித்துக்கொண்டு, சைக்கிளை வீட்டுவாசலில் சாய்த்து வைத்துவிட்டு, புறப்பட் டான் ஞானப்பிரகாசம். துரிதவண்டி அவனைத் துரிதமாகவே சுமந்து சென்றது.

''தங்கம்!''

"அத்தான்!''

''தங்கம், நான் பட்டணத்துக்குப் புறப்படுறப்ப நீ கொடுத்த எச்சரிக்கை எனக்குள்ளே ஒரு தீவிர வைராக்ய மாக வளர்ந்துச்சு. பணமும் கைய்யுமா வந்திருக்கேஞக்கும்!''

''அத்தை வரலீங்களா?''

''அவங்க பட்டணத்திலே வெத்திலை பாக்குக்கடை நடத்து ருங்க. என்னைச் சேதி சொல்ல இங்கே முதலிலே அனுப்பிஞங்க. உனக்கு நகை நட்டு செஞ்சாகணும். அது முடிஞ்சதும், தந்தி கொடுத்து அம்மாவை வரவழைச்சுக்கலாம்!'' என்முன் இளவட்டம் ஞானப்பிரகாசம்.

பணம் பத்தரைமாற்றுப் பசும் பொன்ஞக உருகிப் பத்த ரிடம் அடைக்கலம் புகுந்தது. தங்கத்தாலி உருவானது. பரிசம் போடவும் முகூர்த்தம் வைக்கவும் 'நாள்' குறிக்கப்பட்டது.

அச்சமயந்தான், அவன் தலையிலே பேரிடி ஒன்று விழுந் தது. பட்டணத்துக்குச் சென்று திரும்பிய ஊர்க்காரர் ஒருவர் அவனிடம் வந்தார். "தம்பி! என்ன அநியாயம் செஞ்சிட்டே!... நீ வேலை செஞ்ச முதலாளி அவங்க மாமாகிட்டே கொண்டு

போய்க் கொடுக்கச் சொன்ன ஆயிரரூபாயை நீ எடுத்துக்கிட்டு ஓடி வந்திட்டியாமே? இப்படிச் சத்தியம் தவறலாமா? பாவம், நீ செஞ்ச தப்புக்காக உன்னைப் பெற்ற அம்மாவை ஜெயிலிலே போட்டு அடைச்சிட்டாராம் உங்க முதலாளி!'' என்றார்.

ஞானப்பிரகாசத்தின் முன்னர் உலகம் ஆலவட்டம் சுற்றியது.

''எசமான், எனக்கு எங்க அம்மாதான் சகலமும்!'' என்று முதலாளியிடம் தான் கண்ணீருடன் சொன்ன வாசகம் நினைவுக்கு வந்தது. தான் கடையை விட்டுப்புறப்படும் போது, காந்தி மகாத்மாவின் படத்திலிருந்த பூவைச்சரி செய்து போட்டு விட்டுச் செல்லும்படி பணித்த செயலின் உட்பொருள் அவனை வாள் கொண்டு அறுத்தது. 'சத்தியமே என் கடவுள்!' என்று புனிதர் மகாத்மா சொன்ன பொன் மொழியை அடிக்கடி ஞாபகப்படுத்தி வந்த தன் எஜமானரின் பேச்சும் அவனுக்கு நெஞ்சில் நிழலாடியது. ''சத்தியம் தவருது நடந்தால் நமக்குப் படி அளக்கத் தவறவே மாட்டானப்பா நம்மைப் படைச்ச ஆண்டவன்!'' என்று அடிக்கொரு முறை எச்சரித்து வந்த அன்னையின் உயிர் வடிவம் அவன் கண்ணீரில் கலந்தது. 'அம்மா! உன்னை நான் இனிமேல் காணவே முடியாதா? எப்படி நான் பட்டணத்துக்குள்ளே அடியெடுத்து வைப்பேன்?...நான் திருடினதுக்காக என் தெய்வம் தண்டனை அனுபவிக்கிறதா? கூடாது! கூடவே கூடாது!...பாக்கியிருக்கிற எழுநூறு ரூபாயையும் கொண்டு போய் எசமான் கையிலே கொடுத்து, அவரோட காலிலே விழுந்து மன்னிப்புக் கேட்டு, என்னைப் பெற்ற அம்மாவை விடுவிக்க வேணும்!...சத்தியம் தவறின எனக்கு நல்ல தண்டனை கொடுத்திட்டுது தெய்வம்!...ஐயையோ!...' என்று மனம் குமைந்து கண்ணீர் பெருக்கினான் ஞானப்பிரகாசம்!...

* * *

''ஏ, ஞானப்பிரகாசம்!''

வழிந்த வேர்வையை வழித்துவிடக் கூட உணர்வின்றி ஏறிட்டுப் பார்த்தான் ஞானப்பிரகாசம்.

பேச நா எழவில்லை அவனுக்கு. 'அப்படியானால், நான் கண்டது அத்தனையும் நிஜமாவே கனவு தானா?...' என்று மனம் மறுகி, குனிந்து சட்டைப் பையைப் பார்த்தான். பணத்தைக் காணவில்லை! 'அப்படின்னா, நான் இத்தனை நேரம் கண்டது கனவு இல்லியா? மெய்தானா? தெய்வமே!'

ஓர் அரைக் கணத்தில் அவனுக்கு விஷயம் புரிந்தது. தான் இதுவரை கண்டது கனவுதான் என்று உணர்ந்து கொண்டான் அவன். ஆனால், முதலாளி கொடுத்த பணம் ரூபாய் ஆயிரத்தைக் கண் அயர்ந்த தருணம் யாரோ 'ஜேப்படி' செய்து விட்டான் என்பதையும் அவன் தெரிந்து கொண்டான். 'அம்மா, நான் தப்பு செய்ய நினைச்ச குற்றத்துக்குப் பகவான் எனக்குத் தண்டனை கொடுத்திட்டார் அம்மா!...முதலாளி அவங்க மாமனார் கையிலே கொடுக்கச் சொல்லிக் கொடுத்த பணம் ரூபாய் ஆயிரத்தைப் பையிலே வச்சிருந்தேன். அதை எடுத்துக் கிணு உன் கையிலே கூடச் சொல்லாமல் தங்கத்தைக் காண ஓடிப் போயிடணும்னு நெனைச்சேன். அந்தப் பாவத்துக்குக் கூலி கிடைச்சிட்டுது. சத்தியம் என்கிற தெய்வம் எனக்குத் தண்டனை வழங்கிடுச்சு. யாரோ பணத்தைக் களவாடிட்டாங் களே! ஐயோ! அம்மா!...அம்மா!...தெய்வமே!...''

விழித்துப் பார்த்தான்.

மகா துர்க்கையென அவன் அன்னை அவன் முன்னே தரிசனம் கொடுத்தாள். ''ஐயோ!...பாவி நீ! சத்தியத்தை வாழவச்சா, உன்னைச் சத்தியம் வாழவைக்கும்னு சதா பாடம் படிச்சுக்கொடுத்தேனேடா!...நீ, உன்னை நம்பினவங்களுக்குத் துரோகம் செஞ்சிட்டியேடா!... அடபாவி!'' என்று அலறி, வீறுகொண்டு அவன் கன்னங்களிலே மாறி மாறி—மாற்றி மாற்றி அறைந்தாள் கோசலை அம்மாள்.

ஞானப்பிரகாசம் தூண்டில் புழுவானான்!

வெய்யில் எரித்தது.

* * *

அப்பொழுது, காரொன்று அவ்வீட்டின் வாசலில் வந்து நின்றது.

''கோசலை அம்மா!''

கோசலை அம்மாள் கண்களைச் சேலைத் தலைப்பினால் துடைத்த படி தலைநிமிர்ந்தாள்.

''மகாத்மா காந்தி மளிகை'யின் முதலாளியான வேணு கோபால் முதலியார் நீறும் நகையுமாக நின்றார். அவர் கண்கள் ஞானப்பிரகாசத்தின் முகத்தை நோக்கின.

''எசமான், என்னைக் காப்பாற்றுங்க எசமான்!'' என்று ஞானப்பிரகாசம் ஓலமிட்டு தன் முதலாளியின் பாதங்களிலே நெடுஞ்சாண்கிடையாக விழுந்தான்.

ஞானப்பிரகாசத்தின் கண்ணீரைத் துடைத்தார் முதலியார். அவனது கன்னத் தழும்புகள் அவர் கண்களில் கண்ணீரை நிரப்பின. ''நீங்கதான் உங்க மகனை இப்படி அறைஞ்சீங்களா அம்மா ?'' என்றார்.

''ஆமாங்க, நான் பெற்ற மகனை நானேதான் அறைஞ் சேனுங்க. நீங்க என் வார்த்தைக்கு நம்பிக்கை வச்சுத்தானுங் களே என் மகனை வேலைக்கு அமர்த்திக்கினீங்க? அந்த நாண யத்தை—சத்தியத்தைக் காப்பாத்த வேண்டியது தானுங்களே இவன் கடமை!''

ஞானப்பிரகாசம் செருமினான். ''எசமான் என்னைக் காப் பாற்றுங்க!'' என்று கதறினான்.

முதலியார் அன்பாகப் புன்னகை செய்தார். ''ஞானப் பிரகாசம்! எழுந்திரு. உன்னை, எனக்கு முந்திக்கினு உன் அம்மாவே காப்பாற்றிட்டாங்க. நான் கொடுத்த ஆயிர ரூபாயைச் சட்டைப் பையிலே வச்சுக்கினு நீ தூங்கும் போது, 'தங்கம்...தங்கம்'னு நீ புலம்பினதைக் கேட்ட உன் தாயாரே உன் மனசிலே ஓடின கெட்ட எண்ணத்தை யூகிச்சு, பயந்து போய், அந்தப் பணத்தை எடுத்தாந்து என் கையிலே ஒப்படைச் சிட்டாங்க. அவங்க சத்தியத்தை மதிக்கப் பழகின ஏழை. ரொம்பவும் ஜாக்கிரதையாய் நடந்துக்கிட்டாங்க. அவங்களை நம்பித்தான் உன்கிட்டே அவ்வளவு பெரிய தொகையை நான் கொடுத்தனுப்பவும் துணிஞ்சேன். பணத்தை உன் கையிலே தந்தவுடன், நான் உன்கிட்டே கேட்ட கேள்விக்கு, ''எங்கம்மா தான் எனக்குத் தெய்வம்''னு நீ கண்ணீருடன் சொன்ன அந்தப் பதில்தான் என் மனசிலே உன்னைப் பற்றி நன்னம்பிக்கையை உண்டாக்கிச்சு. காந்திஜியோட படத்துப் பூவைச் சரியாய் போட்டுட்டுப் போகும்படி சொன்ன செய்கையும், உன் மனசிலே சத்தியத்தை வாழச் செய்யும்னும் நான் நம்பினேன். என் நம்பிக்கை எப்படியோ காப்பாற்றப்பட்டிடுச்சு. எப்படியோ என் பணமும் பிழைச்சிட்டுது. நேற்றைக்கு நீ வீட்டுச் செல வுக்குப் பணம் கேட்டப்போ இப்போ கிடையாதுன்னு சொன்ன விஷயம் உனக்குக் கோபத்தை உண்டாக்கியிருக்கலாம். என் கண்டிப்பு இல்லாட்டா, நீ நினைச்சப்பவெல்லாம் பணம் கேட்டு, நினைச்சபடியெல்லாம் செலவழிச்சிட்டால் என்ன ஆகிறது?... சத்தியமே என் தெய்வம் அப்படின்னு அடிக்கடி காந்திஜி சொல்லி வந்தாங்க. அந்தச் சத்தியத்தை நான் மதிச்சுக்கிட்டு வாரவன். அதனாலேதான் பகவான் என்னை இந்த அளவுக்கு வச்சிருக்கான். அதே சத்தியத்தை உன் அம்மாவைப் போல நீயும் மதிக்கப் பழகிக்கிட வேணுமப்பா!...இந்தா பத்து ரூபாய்!...செலவுக்கு வேணும்னு கேட்டியே! அன்பு எதையும் கொடுக்கவே செய்யும் என்கிறதும் காந்தி தத்துவம். என்

அன்பு உனக்கு எப்பவுமே உண்டு. இந்தா, வச்சுக்க: இது உன் கணக்கிலே சேராது. இதைக் கொடுத்திட்டுப் போகவும், உன்னை மறுபடியும் வேலைக்கு அழைச்சிட்டுப் போகவும்தான் வந்தேன். தப்பு செய்யுறது இயல்பாக இருக்கலாம். ஆனல் மறுபடியும் தப்பு செய்யாமல் இருக்கப் பழகிக்க. அதுதான் உன் எதிர்காலத்துக்கு நல்ல வழிகாட்டும்!...'' என்ருர் முதலியார். ''பாக்கிப் பணத்தை வாங்காமல் மறந்திட்டுப் போன செங்கல் பட்டு வியாபாரியை அழைச்சிட்டுவந்த அந்த ஞானப்பிரகாச மாக நீ எப்பவும் இருக்கணுமப்பா!'' என்று முடித்தார்.

''எசமான்! எசமான்! காந்தி மகாத்மா என்னைக் காப் பாற்றிடுவாருங்க இனிமேல்!... நீங்களும் காப்பாற்றிட்டீங்க இப்போ!...'' சம்பளத் தேதிக்குப் பணத்தை வாங்கிக்கிறே னுங்க, ஐயா! இந்தப் பணத்தை நீங்க வச்சுக்கங்க. உங்க அன்புக்கு நானும் என் அம்மாவும் உயிருள்ள மட்டும் கடமைப் பட்டவங்களாயிருப்போமுங்க, எஜமான்! இது சத்தியமுங்க, ஐயா!...'' என்று விம்மினன் ஞானப்பிரகாசம். அவன் கண் களிலே புதிய ஒளி படர்ந்தது.

கோசலை அம்மாள் ஆனந்தக் கண்ணீர் சொறிந்து கொண் டிருந்தாள்!

—o—

ஸரோஜா ராமமூர்த்தி

26

# ஒரு துளி

வருடம் 1935. பனிக்காற்று வீசும் காலை நேரம். எந்த நிமிஷத்தில் எதைச் செய்துவிட்டு 'மகாத்மா காந்தீ கீ ஜே' என்கிற தாரக மந்திரத்துடன் தன் கணவர் சிறை சென்று விடுவாரோ என்று பயந்தபடி எழுந்தாள் செல்லம் படுக்கையை விட்டு. சற்று தள்ளி தரையில் கோரைப் பாயில் படுத்திருந்தார் வாசு. முரட்டுக் கதர் ஆடை அணிந்த தோற்றம். சுருண்டு நெளிந்து பம்மிக் கிடந்த கிராப்புத் தலையில் எள்ளும், பச்சரிசியும் கலந்தாற் போல் கறுப்பும், வெளுப்புமாய் நரை கண்டுவிட்ட முடி. உப்பு சத்தியாக்ரகத்தில் போலீசாரிடம் வாங்கிய தடியடியின் நினைவுச் சின்னம் போல் நெற்றியில் பிறைக் கீற்றாக வடு. எடுத்ததை, நினைத்ததைச் சாதித்து முடிக்கும் திறன் அவருக்குண்டு என்பது போல அழுத்தமான நீண்ட மோவாய்.

செல்லம் கவலையுடன் அவரைப் பார்த்தாள். தன் இன்னொரு புறம் படுத்துத் தூங்கும் அருமை மைந்தன் தியாகுவையும் பார்த்தாள். திடும் திடும் என்று அவர் சிறைக்குப் போய் விடுவதும், இந்த அக்ரகாரத்தில் தனியாக இந்தப் பையனை வைத்துக் கொண்டு காலந் தள்ளுவதும் அவளுக்குப் பழகிப் போன விஷயங்கள். இருந்தாலும், அவர் சமீபத்தில் ஒரு காரியம் பண்ணியிருக்கிறாரே அதைத்தான் அவளால் ஒத்துக் கொள்ள முடியவில்லை. 'அடியே அம்மா! அவர் கிட்டே பேசி என்னாலே ஜெயிக்கப்படுமா? என்னென்னவோ வேதாந்த மெல்லாம் பேசறார்.' திடு திப்பென்று அஞ்சாறு வருஷத்துக்கு முன்னே எங்கோ வெளியிலே போய்விட்டு வந்தவர் எட்டு வயசுப் பையன் ஒருவனைக் கையுடன் அழைத்து வந்தார். திரு திரு வென்று விழித்தபடி நின்ற அவனை அவர் வீட்டுக்குள் அழைத்து வரப்

பட்டபாடு கொஞ்சம் நஞ்சமல்ல. தயங்கித் தயங்கிப் பயந்தபடி அந்தப் பையன் வாசல் திண்ணையின் தூணைக் கட்டிக் கொண்டு உள்ளே வர மறுத்தான்.

''ஏண்டாலே! அடச் சீ...உள்ளே வாடா'' என்று இரைந் தார் வாசு. செல்லம் முகத்தையே கேள்விக்குறி போல் தூக்கி வளைத்துப் பார்த்து, ''யார் இது?'' என்று கேட்டு வைத்தாள்.

''இதுவா? தரித்திர நாராயணன் பெற்ற செல்வம் டீ, நம்ப பையன் இனிமே. நீதான் ஒண்ணே ஒண்ணு கண்ணே கண்ணுன்னு நின்னுட்டே...நம்ப பையனுக்கு ஒரு துணை வாண்டாமா?''

விளக்கடியில் படித்துக் கொண்டிருந்த தியாகு எழுந்து வந்தான். அவனுக்கு அம்மாவிடம் பயம். அப்பாவிடம் சலுகை யும், வாஞ்சையும் அதிகம்.

''ஓ! இவனு! நம்ப அமாசியின் மகன். இவனுக்கு அப்பன் இல்லையே அப்பா, போன வருஷம் வெள்ளத்துலே காவேரி யோடே போயிட்டானும்...''

''ஆமாம்டா, இப்ப, அம்மாவும் இல்லே. அவளும் செத்துப் போயிட்டாளாம். நான் அழைச்சிண்டு வந்துட்டேன். உன்னுேடே வளரட்டும்னு...''

இப்போது தியாகு தயக்கத்துடன் அம்மாவைப் பார்த் தான். திரும்பி இரட்டைச்சாரியிலும் வீடு கள்நிறம்பிய அக்ர காரத்தையும் பார்த்தான். லாந்தர் கம்பத்தில் விளக்கு எரிந் தாலும் அது தன் அடியில் மட்டும் வெளிச்சத்தைப் பரவவிட்டுச் சுற்றுப் புறத்தை இருளிலே மூழ்கடித்துக் கொண்டிருந்தது. அந்த இருளில் ஒவ்வொரு திண்ணையிலும் யாரோ படுத்திருந்தார் கள். யாரோ என்ன? எதிர் வீட்டில் ஜகன்னுதாச்சாரி பன்னிரண்டு திருமண் பளபளக்கச் சுவரில் சாய்ந்தபடி சிக்குப் பலகையில் இருந்த புத்தகத்திலிருந்து பாசுரம் படித்துக் கொண்டிருந்தார். அகல் விளக்கு குளுமையாக முத்துப் போல் எரிந்து கொண்டிருந்தது.

அதற்கும் அடுத்தாற்போல் வைதீஸ்வரன் வீடு. ரொம் பவும் பழைமையில் ஊறியவர். அவர் மனைவி நெருப்பை அலம் வதாக எல்லோரும் பேசிக் கொள்வார்கள். அவ்வளவு ஆசாரம். இரண்டு பேரும் கோயிலுக்குப் போய்விட்டு வந்து பலகாரம் பண்ணிவிட்டு வாசல் திண்ணைக்கு வந்து விட்டார்கள்.

''அடியே அம்மாளு! வாசு ஊர்லேதானே இருக்கான்?'' என்று அவர் தம் மனைவியை விசாரித்துக் கொண்டிருந்தார்.

''ஆமாம்...ஊர்லே இருந்தாலும் ஒண்ணுதான். இல்லாட்டாலும் ஒண்ணுதான்.''

''ஏண்டி அப்படிச் சொல்றே?''

''பின்னே என்னவாம்? கிழக்கு வெளுக்கறத்துக்கு முன்னுடி எழுந்திருந்து சேரிப் பக்கம் போனு...எப்பத் திரும்பி வரானே அப்பத்தான் அவனைப் பாக்க முடியும். காந்தி சொல்றாராம் அவாதான் ஹரியோடே குழந்தைகள்னு, அந்தக் குழந்தைகளை இவன் புனருத்தாரணம் பண்றனும்...''

''கறுப்பு நாயை வெள்ளை நாயாக்கப் பாக்கறுன். இல்லையா?'' இருவரும் சேர்ந்தே சத்தம் போட்டுச் சிரிக்கிறார்கள். வாசுவின் செவிகளில் இச்சொற்கள் விழுந்தாலும் அவர் அதற்கு ஓர் உருவம், மதிப்பு ஏதும் கொடுக்கவில்லை. செல்லம் அப்படியில்லை. அவள் அந்த ஊரோடு ஒட்டி வாழ்ந்தாக வேண்டும். அவள் பேச்சுப்படி இவர் ஜம்முனு வருஷத்திலே பத்துமாசம் ஜெயிலுக்குப் போயிடறார். இந்தப் பொல்லாப்பு புடிச்ச ஊர்லே நானுக்கும் குப்பை கொட்டணும்?

வைதீஸ்வரன் தம்பதியின் பேச்சைக் கேட்டவள் திரும்பி வாசல் தூணைக் கட்டிக் கொண்டு நிற்கும் அமாசியின் பையனைப் பார்த்துக் கொண்டே கல்லாக நின்றாள்.

''உள்ளே அழைச்சிண்டு போடா தியாகு. இனிமே அவனுக்கு எழுதப் படிக்கச் சொல்லித்தர வேண்டியது உன் பொறுப்பு...''

''அது சரி அப்பா...உங்க கொள்கை எனக்குப் புரியறது. இவன் தினம் தினம் நைட் ஸ்கூலுக்கு வேணுவரட்டும். பாடம் சொல்லித் தருவோம்...இங்கே ஆத்துலே வச்சுண்டா ஊரிலே நாலு பேர்...'' வாசு மகனையே உற்றுப் பார்த்தார். தன் கொள்கைகளை மனப்பூர்வமாக மனத்துக்குள் ஆதரிக்கும் மகனும், மனைவியும் இந்த நாலு பேருக்காகப் பயப்படுகிறார்கள்.

''இங்கே வா செல்லம்! இப்ப நாலு பேரோடு சமாளிக்க முடியாத பிரச்னையை நாளைக்கு நாலாயிரம் பேரோடே சமாளிக்கணும். அப்புறமா நாலு லட்சம், நாலு கோடின்னு ஆகும். பிற்பாடு நாற்பது கோடியோடே சமாளிச்சே ஆகணும். ஒரு நல்லது நடக்கணும்னு பலரோடே மோதிண்டுதான் ஆகணும் செல்லம், மோதிண்டுதான் ஆகணும்...இதெல்லாம் உனக்குப் புரியறது. ஆனு நாலு பேருக்காகப் பயப்படறே...''

இவர்களுடைய தர்க்கமெல்லாம் அமாசியின் மகன் குமரனுக்குப் புரியவில்லை. 'நாம் எப்படியோ போறேம்...இந்த

ஐயர் எதுக்கு நம்மை இவர் வூட்டுக்கு இட்டாறணும்?' என்று வியந்தபடி நின்றிருந்தான்.

''உள்ளே வாடா...'' என்று கர்ஜிப்பது போல் அழைத்தார் வாசு அவனை.

குமரன் தயங்கியபடி உள்ளே வந்தான். இடைக்கழியில் மறுபடியும் சுவருடன் ஒட்டியவாறு நின்றான். சுவரைக் கைகளால் தடவித் தடவிப் பார்த்தான். கல்லும், முள்ளும், குண்டும், குழியும் சாக்கடை ஓரமுமாக அந்த ஹரிஜனச் சிறுவன் பிறந்தது முதல் இன்று வரை தன் நாட்களை ஓட்டியவன். 'ஓ! இந்தச் செவரு எம்மாம் நைஸாக்கீது...'என்று திரும்பத் திரும்ப வியந்தான் அவன்.

செல்லம் ஓர் ஈயப்பாத்திரம் நிறைய சாதம் பிசைந்து எடுத்து வந்தாள். தாமரை இலையைப் போட்டுத் தயிர் சாதத்தை எடுத்து அதில் வைத்துத் தொட்டுக் கொள்ள ஊறுகாயும் வைத்தாள். அவள் பார்வை தெருவை அளந்தது. ஜகன்னுதாச்சாரி பாசுரம் படித்து முடித்துச் சிக்குப் பலகையை மடக்கியபடி எழுந்தார். 'அட ராமா! அவர் பார்த்துத் தொலைக்கப் போறார்' என்று முணு முணுத்தபடி செல்லம் கதவை ஒருக்களித்தாள்.

வாசுவுக்குச் சிரிப்பு வந்தது.

''அடியே! இப்ப கதவைச் சாத்தறே, நாளைக்கும் சாத்துவியா? அப்புறமா மறுநாளைக்கும் சாத்துவியா? காலம் பூராக் கதவைச் சாத்திண்டு புழுங்க முடியுமா? இந்தப் புழுக்கத்தைச் சமாளிச்சுடலாம்டி, ஆனு...மனசிலே புழுக்கம் இருக்கப்படாது.'

செல்லம் அவரைவிட ஒருபடி வேதாந்தம் அதிகமாகக் கற்றவள். சட்டென்று பட்டுக்கத்தரிப்பதுபோல் கதவை அகலத் திறந்து வைத்தாள். தெரு விளக்கின் வெளிச்சம் வாசல் குறட்டைத் தாண்டியபடி மிக லேசாகத்தான் ரேழிக்கு வந்தது.

வாசுவைப் பற்றித்தான் ஊராருக்கு ஒரு மாதிரியான எண்ணம் ஆயிற்றே...ஜகன்னுதாச்சாரி தம் பார்வையை இந்தப் பக்கம் ஓட்டினுர். கறுப்பாக கன்னங்கறேலென்று ஓர் பையன் சம்பிரமமாகச் சாப்பிட்டுக் கொண்டிருப்பதைப் பார்த்தார். அவர் நெஞ்சம் பட படவென்று அடித்துக் கொள்ள நாலெட்டில் வைதீஸ்வரன் வீட்டுப் படியேறிச் சுருக்கமாக ஏதோ கூறி அவரையும் தம் வீட்டுத் திண்ணைக்கு அழைத்து வந்து இக்காட்சியைச் சுட்டிக் காட்டினுர். வைதீஸ்வரனின் மனைவி அம்மாளு ஒருபடி மேலாகவே நடந்து கொண்டாள்;

''அடியே செல்லம்!'' என்று அவள் அழைத்த போது செல்லத்தின் நாக்கு மேலண்ணத்தில் ஒட்டிக் கொண்டது. உடம்பு வியர்த்து விட்டது. 'இவள் இந்த வேளேயில் எதுக்குக் கூப்படறு?' என்று நினேத்தபடி, ''வாங்கோ மாமி'' என்று பதில் குரல் கொடுத்தாள் செல்லம்.

''உள்ளே வரதுக்கில்லே, ரெண்டு வெத்திலே இருந்தாக் கொடேன்—''

''உள்ளே வாங்கோ...வெறும் வெத்திலேயா தரப்படாது. சீவல், மஞ்சளோடே, குங்குமத்தோடே தரேன் வாங்கோ...''

''ஊஹீம்...இந்த அகாலத்துலே யார் தீட்டுப் பட்டுண்டு குளிக்கறது?''

செல்லம் வெளியே வெற்றிலேத் தட்டுடன் வந்தபோது அம்மாளு எதிர்வீட்டு வாசலில் நின்றிருந்தாள். வாசு மனேவியின் பின்னுல் வந்து நின்று, ''ஏய் பைத்தியம்! இங்கே நீ யாருக்குச் சாதம் போடறேன்னு பாக்க வந்திருக்கா. அவ வெத்திலே கேட்டது நெசம்னு நினேச்சுண்டு நீ தட்டைத் தூக்கிண்டு ஓடறே'' என்று கடிந்து கொண்டார்.

செல்லம் தன் நெஞ்சில் யாரோ பளுவான கல் ஒன்றை ஏற்றி வைப்பது போன்ற சுமையுடன் பாதி தெளிவுடனும், பாதி கலக்கத்துடனும் குமரன் என்கிற பாரத்தைக் கணவனுக்காகச் சுமக்க இசைந்தாள்.

அடுத்த நாளே சேரிப்பையன் ஒருவன் வாசுவின் வீட்டில் வளர்வது குறித்து அந்த ஊரே அமளிப்பட்டது. அசுத்தத்தைப் பார்ப்பவர் போல் செல்லத்தை அவ்வூர்ப் பெண்கள் முகம் சுளித்தே பார்த்தார்கள். படித்துறையில் அவள் குளித்துவிட்டுக் கரையேறும்வரை பொறுத்திருந்துவிட்டு மற்றப் பெண்கள் அந்தப் படித்துறையையே மறுபடியும் கழுவி விட்டுத் தண்ணீரில் இறங்கிக் குளிப்பார்கள். இதை ஒருதரம் அவள் தன் கணவரிடம் கண்ணீர் பெருக வர்ணித்தபோது அவர் மறுபடியும் முதலில் அவளுக்குச் செய்த உபதேசத்தையே மீண்டும் கூறினுர்.

'ஒரு கொள்கை நனவாக வேண்டுமானுல் பலருடன் மோதிக் கொண்டுதான் ஆகவேண்டும்.'

தியாகு அவ்வூரில் படிப்பை முடித்துவிட்டுச் சென்னேக்கு மேல்ப்படிப்புக்காகச் சென்றுவிட்டான். குமரனும் வளர்ந்து விட்டான். ஐயாவுக்கும், அம்மாவுக்கும் தன்னுல் பெரிய சங்கடம் என்று நினேத்து அவன் வாசுவிடம் தன் கருத்தை ஒரு தினம் பணிவுடன் தெரிவித்த போது அவர் கூறிய செய்தி அவனேத் திகைப்பில் ஆழ்த்தியது. 'நீ ஊருக்கு வெளியே 'நைட்

ஸ்கூல்'லேயே தங்கிடறேன்னு சொல்றேப்பா... நானே அங்கே வந்துவிடலாம்னு பார்க்கிறேன். இந்த வீட்டைக் காலி பண்ணிட்டு அம்மாவைத் தியாகுகிட்டே அனுப்பிடறேன். அங்கே போய் அவனுக்கு வீட்டுச் சமையலா அவளும் சமைச்சுப் போடட்டும். அவளும் இந்த ஊரிலே தாங்கமுடியாத கஷ்டத்தைச் சுமந்து சுமந்து உருமாறிப் போயிருக்கா. ஓரளவுக்கு உன்னையும், எங்களையும் ஒண்ணுவே இந்த ஊர்க்காரா நடத்த ஆரம்பிச்சுட்டா. பட்டணத்திலே இவ்வளவு மோசமில்லே. மனசுக்குள்ளே குமைஞ்சுண்டாவது வெளியிலே வேஷம் போடுவா. தாங்க ரொம்ப முன்னேறிட்டதாக அவாளுக்கு ஒரு பிரமை. உண்மை நிலையை ஜீரணிக்கிறது ரொம்பக் கஷ்டம். பிரமை நிலையை எப்படியாவது சமாளிச்சுடலாம்.''

செல்லத்துக்கு ரயில் புறப்படுகிறவரைக்கும் என்னவோ போல் இருந்தது. வயல்காடு, தோப்பு, ஆற்றங்கரை, கோயில் எல்லாம் அவளுடைய அங்கங்களைப்போல அவளிடமிருந்து பிரிக்க முடியாதவை. ரயில் மெதுவாக நகரும்போது முதலில் தென்னந்தோப்பும், வயல்வெளிகளும் பின்தங்கின. அப்புறம் ஆறு. அவள் இறங்கிக் குளித்த—ஊராரால் அசுத்தம் என்று மதிக்கப்பட்ட—படித்துறை மெல்லப் பின் தங்கியது. கோயில் கோபுரம் மட்டும் அவளுடன் ஓடி வருவது போல் இருந்தது. ஸ்டேஷனுக்கு வந்திருந்த குமரன் கூடை நிறைய வெள்ளரிப் பிஞ்சுகளைக் கொடுத்து, ''அம்மா! தியாகுதான் என்னை மறந்திடிச்சி. நான் அதை மறக்கலேன்னு சொல்லுங்க. கிராமத்துக்கு வரச்சொல்லுங்க'' என்றான்.

''ஊருக்குப் போயிட்டு வா, செல்லம். நீ என்னுடைய கொள்கைளுக்குப் பணிஞ்சு, உனக்கென்று ஓர் எண்ணமும் இல்லாம ரொம்பத் தியாகம் பண்ணிட்டே. உன் பிள்ளை முன்னைப் போல இல்லே. மாறிண்டு வரான்னு தெரியறது. அந்த மாறுதல் உனக்கும் அவசியம்னு எனக்குத் தோண்றது...''

''அப்படியெல்லாம் நான் நெனச்சதேயில்லே—'' என்று கரகரத்த குரலில் பதில் சொன்னாள் செல்லம். அவரை விட்டுப் பிரிவது அவளுக்கும் கஷ்டமாக இருந்தது. இருந்தாலும், அந்த ஊர்க்காரர்களிடமிருந்து கொஞ்ச நாளைக்காவது பிரிஞ்சு வெளியே போகணும் என்று மனப்பூர்வமாக ஆசைப்பட்டாள் அவள்.

அவளுடன் ஓடி வந்த கோபுரமும் பின்தங்கி விட்டது. ஒரு கரும் புள்ளியாய் மறைந்தும் போயிற்று. செல்லம் சென்னையை வந்தடைந்தாள்.

## 2

எழும்பூர் ரயில் நிலையத்தில் தியாகுவைப் பார்த்தவுடன் திகைத்துப் போனுள் செல்லம். முரட்டுக் கதர் ஆடையைக் காணும். கள்ளமற்ற முகத்தில் ஓர் இறுக்கமும், ஆணவமும் சேர்ந்து காணப்பட்டது.

''வா அம்மா...அப்பாவையும் அழைச்சிண்டு வந்துடறது தானே? அவர் மட்டும் கிராமத்துலே என்ன பண்ணப் போருர்?'' என்றபடி வரவேற்ருன் தியாகு.

''அவரா வரப்பட்ட ஆசாமி? அவர் 'நைட் ஸ்கூலே' விட்டுட்டு வருவாரா என்ன? தியாகு, நீ மாறிப் போயிட் டேடா, அப்பா கூட சொல்ருர்; உன் பிள்ளே மாறிண்டு வராஞம். உனக்கும் அந்த மாறுதல் தேவை. போய் அவன் கிட்டே இருன்னு ... நெசம்மா நீ மாறித்தான் போயிருக்கே.''

தியாகு அழுத்தலாகச் சிரித்தான். டாக்ஸியில் பெட்டி, படுக்கையை எடுத்து வைத்தபோது வெள்ளரிப் பிஞ்சுகள் நிறைந்த கூடையைப் பார்த்தான் தியாகு. ஐந்தாறு வருஷங் களுக்கு முன்பாக இருந்தால் வெள்ளரிப் பிஞ்சுகளேக் கூடையி லிருந்து அள்ளிக்கொண்டு உப்பைப் பொடி செய்து தோய்த்துத் தின்று கொண்டேயிருப்பான். இப்போது அவனுக்கு இந்த வெள்ளரிப் பிஞ்சுகள் லட்சியமில்லே.

''உனக்குப் பிடிக்குமேன்னு குமரன் கொடுத்தான்'' என்று செல்லம் அவனுக்கு லேசாக அவனேப் பற்றி நினேவூட்டிஞள்.

''குமரனு? ஓ! அவன் எப்படியிருக்கான்? படிப்பெல்லாம் முடிஞ்சு போச்சா?''

''மேலே இங்கே வந்து படிக்கச் சொல்லி உன் அப்பா சொன்ஞர். அவன்தான் கேக்கலே. 'இவ்வளவு படிச்சதே பெரிசய்யா...' என்று சொல்லிவிட்டான். அதுலே உன் அப்பா வுக்கு ரொம்ப வருத்தம்—''

தியாகு எதையும் காதில் வாங்கிக் கொள்ளவில்லே. அவன் சிந்தனே பூராவும் எதிலோ லயித்திருந்தது. செல்லம் இளேத்துப் போயிருப்பதை அவன் கவனிக்கவில்லே. அதைப்பற்றி ஒரு வார்த்தையாவது விசாரிப்பான் என்று அவள் எதிர்பார்த் தாள்.

டாக்ஸி மயிலாப்பூரை அடைந்து பெரிய பங்களாவுக்குள் நுழைந்து ஒரு சுற்றுச் சுற்றி 'அவுட்ஹவுஸ்' பக்கம் போய் நின்றது.

வாசலில் அழகும், களையும் நிறம்பிய பெண் ஒருத்தி தன் நாய்க்குட்டியைக் கையில் பிடித்தபடி புன்முறுவலுடன் நின்றிருந்தாள்.

"ஹலோ! வஸந்தி! இதுதான் என் அம்மா..." அவள் மணியோசை போல நகைத்தாள். செல்லத்தைத் தலையிலிருந்து கால் வரை அவள் பார்த்த பார்வை வேறு விளக்கம் கொடுப்பது போல் இருந்தது. இடையில் கட்டியிருந்த முரட்டுக் கதர் புடவை, ஆடம்பர மற்ற நகைகள், ஒரு லட்சிய வாதியைக் கணவனுகக் கொண்டு அவனுடன் வாழ்க்கை பூராவும் நிறைவுடன் வாழ்ந்துவரும் கம்பீரமும், புறத்தோற்றத்தில் மனத்தைப் பறிகொடுத்து அதில் லயித்துவிடாமல் ஒதுங்கி நின்றே கவனிக்கும் ஆற்றலையும் படைத்தவள் அவள் என்று வஸந்தி புரிந்து கொள்ளவில்லை. சுருக்கமாகச் செல்லம் ஓர் ஏழை என்று நினைத்துக் கொண்டாள்.

செல்லத்துக்குத் தன் மகனைப் பற்றி உடனே புரிந்து விட்டது. தியாகுவின் கவனம் வேறு திசையில் சென்று விட்டது. அவன் இனி வாழப்போகும் உலகமும், அதற்கான பாதையும் வேறு என்பதை அவள் தெரிந்துகொண்டாள். 'தேச மக்கள் அடிமைப்பட்டுக் கிடப்பதோ, அதற்காக ஆயிர மாயிரமாக மக்கள் தியாகம் புரிவதோ அவன் கவனத்திலிருந்து மறைந்துவிட்டது. அவன் பகட்டும், படாடோபமும் நிறைந்த உலகத்துக்குள் நுழைய விரும்புகிருன்.

அன்றிரவு சாப்பிடும்போது வெகு நேரம் மௌனமாகவே இருந்தாள். "அம்மாவே ஏதாவது வஸந்தியைப் பற்றிக் கேட்பாள்' என்று நினைத்தான். செல்லத்தின் கவனமெல்லாம் வாசுவின் பேரில் இருந்தது. வாழ்க்கை பூராவும் சுகத்தைக் காணுமல் சுதந்திரப் போர் ஒன்றையே லட்சியமாகக் கொண்டு, காந்தியடிகளின் வேண்டுகோளின்படி ஹரிஜனச் சிறுவனை எடுத்து வளர்த்துத் தன் மகனைப் போல ஆளாக்கி, அதனுல் ஊராரால் ஒதுக்கப்பட்டு ஊரின் புறத்தே வாழ்ந்து கொண்டிருக்கும் அவரை நினைத்ததும் அவள் கண்கள் பனித்தன. தியாகு அவரைப்போல் லட்சியங்களையும், கொள்கைகளையும் கடைப்பிடிக்காவிடினும் தகப்பனின் மனம் குளிர அதைப் பற்றிப் பேசுவதையும் விட்டுவிட்டான் போல் இருந்தது. மகனின் நீண்ட மௌனம் அவளைப் பொறுமை இழக்கச் செய்தது. இலையில் பரிமாறிவிட்டு அவள் எதிரில் உட்கார்ந்து, "அப்பா ரொம்ப இளைச்சுப் போயிட்டாரடா, நீ சீக்கிரம் படிப்பை முடிச்சுண்டு ஒரு உத்தியோகம் தேடிண்டா கொஞ்ச காலமாவது அவர் நிம்மதியா இருக்கமுடியும்" என்று பேச்சை ஆரம்பித்தாள்.

தியாகு அம்மாவை நிமிர்ந்து பார்த்தான்.

''அவரை யார் நல்ல நிலைமைக்குப் போகவிடாமல் தடுத்தது? எம். ஏ. பி. எல். பாஸ் பண்ணிட்டுச் சத்தியாக்ரகமும், ஹரிஜன சேவையும் பண்ணிண்டிருந்தா வாழ்க்கையிலே சுகத்தை எப்படியம்மா காணமுடியும்? இந்த வீட்டுக்குச் சொந்தக்காரர் இங்கே பெரிய அட்வகேட். அவர் பொண்தான் நீ பார்த்தியே, வஸந்தி. இவர்களுக்கு மட்டும் தேசபக்தியில்லையாம்மா? மனசுக் குள்ளே இவர்களும் காந்தியடிகளின் கொள்கைகளை ஆதரிக்கிற வாதான். அப்பா மாதிரி பைத்தியமாயிடலே, பிழைக்கத் தெரிஞ்சவா...அந்தக் குமரனை வளத்தாச்சு. அவனை விட்டு தொலைச்சிட்டு இங்கே வந்துடறதுதானே?'' என்று படபடத் தான் தியாகு.

''அவர் வரமாட்டார். அவர் நடத்தற 'நைட் ஸ்கூல்'லே இப்ப எத்தனை பேர் படிக்கிறு தெரியுமா? கிட்டதட்ட நூறு பேருக்கு மேலே இருக்கும்... நம்ப ஊர்ச் சேரிப் பக்கம் நீ வந்து பார்க்கலே, கிளி கொஞ்சறது. குமரனும், அவருமாச் சேர்ந்து எவ்வளவு பண்ணியிருக்கா. அந்த ஏழைகள் எப்படி மனசு குளிரக் குளிர அவரை வாழ்த்தரு தெரியுமா?''

''வாழ்த்திண்டே இருக்கட்டும். நீ இனிமே இந்தக் கதர்ப் புடவையைக் கட்டறதை விட்டுடு...''

''ஏண்டா?''

''இங்கே அட்வகேட் வீட்டிலே உன்னை மதிக்கமாட்டா...''

''இவா மதிப்பு யாருக்கு வேணும் இங்கே?''

''நான் வஸந்தியைக் கல்யாணம் பண்ணிக்கப் போறேன் ...''

''பேஷாப் பண்ணிக்கோ, சௌக்கியமா இரு...அதுக்காக என்னுடைய லட்சியத்தை நான் விடமுடியுமா என்ன?''

''வஸந்தியோட அப்பா அவர் பெண்ணையும் கொடுத்து அவர் கிட்டே என்னை ஜூனியராவும் வச்சுக்கறுராம்...''

செல்லம் மேலும் பேசவில்லை. தியாகு வெளியே சென்ற பிறகு அவள் சுருக்கமாக அவனைப்பற்றி வாசுவுக்குக் கடிதம் எழுதினுள். அவரும் சுருக்கமாகவே பதில் எழுதினர்:

''ஓடு முற்றினுல் உறவு விட்டுப் போகும். நம் கடமையை நாம் செய்து முடித்துவிட்டோம். அவன் எங்காவது நன்ருக இருக்கட்டும். இங்கே குமரன் தியாகுவைவிடப் பன் மடங்கு என்னைக் கவனித்துக் கொள்கிருன்.''

தியாகுவின் படிப்பு முடிந்தது. உடனே திருமணத்துக்கு நாளும் குறித்தார்கள். எதற்கும் பிள்ளையைப் பெற்றவர் ஒரு

தரமாவது நேரில் வரவேண்டும். இல்லை, நாமாவது அங்கு போகலாம் என்று தியாகுவிடம் கேட்டார் அட்வகேட். எல்லோருமாகக் கிராமத்துக்குச் சென்றார்கள். எளிமையே உரு வான அந்தக் குடிலின் முன்பு இறங்கியவுடன் தியாகு கூனிக் குறுகிப்போனான். உள்ளே நார்க்கட்டிலில் படுத்திருந்தார் வாசு. சுவர் ஓரத்தில் கைராட்டையும், சுவரில் காந்தியடிகளின் படமும் இருந்தன. மண் கூஜாவில் நீர், கொடியில் மறுநாள் உடுத்த நாலுமுழம் கதர் வேட்டி, துண்டு. ஓர் ஓரத்தில் கள்ளிப் பெட்டியை 'ஷெல்ப்'பாக மாற்றி புத்தகங்களை அடுக்கி வைத் திருந்தார். கார்ல் மார்க்ஸ், டால்ஸ்டாயிலிருந்து அரவிந்தர், காந்திஜி வரை புத்தக உருவில் அங்கு கொலுவிருந்தார்கள். ஒரு மனிதனின் முக்கியமான தேவைகள் எதுவோ அவை மட்டும் அங்கிருந்தன.

''வா அப்பா, தியாகு...!'' என்றபடி அவர் எழுந்து உட்கார்ந் ததும் மகனே அவர் தோற்றத்தைக் கண்டு திடுக்கிட்டான். 'அப்பா ஏனிப்படிக் கறுத்துவிட்டார்? ஏன் அவர் உதடுகள் தடித்துவிட்டன?

செல்லத்தின் நெஞ்சு உலர்ந்துவிட்டது. ''நீங்கள் ஒரு வரி கூட எழுதவில்லையே, உடம்பு சரியில்லைன்னு எழுதப்படாதோ?''

அவர் சிரித்தபடி அவள் பேச்சை ஒதுக்கிவிட்டார்.

''வாசலில் யாரோ காரில் வந்திருக்கிறார்கள் போல இருக்கே...'' என்று மகனைப் பார்த்துக் கேட்டார். செல்லம் எல்லாவற்றையும் கூறியதும், அவர், ''அப்படியா? என்னை— குஷ்டம் பிடித்தவனை—அவர்கள் பார்த்தால் உனக்குப் பெண் தரமாட்டார்கள் தியாகு. நான் போர்த்திக்கொண்டு படுத்திருக் கிறேன். எனக்கு ஜுரமென்றே இருக்கட்டும். அவர்களை உள்ளே அழைத்துவா...'' என்றதும், அட்வகேட்டை உள்ளே அழைத்து வந்தான் அவன். ஒன்றிரண்டு நிமிடங்கள் பேச்சு நடந்தது. அவருக்குத் தியாகுதான் முக்கியமே தவிர தியாகுவின் தந்தை யல்ல.

''முடிந்தால் வருகிறேன். எப்படியும் அடுத்த மாசத்தி லாவது, ஆகஸ்டிலாவது மறுபடியும் சட்டமறுப்பு இயக்கம் ஆரம்பமாகும். இச்சமயத்தில் காந்தியடிகள் மிகத் தீவிரமாக வெள்ளையர்களை எதிர்க்கப் போகிறார். அதுலே நான் எப்படியும் கலந்துப்பேன். தியாகுவின் கல்யாணத்துக்கு என் மனப்பூர்வ மான ஆசிகள்.'' என்று உறுதியுடன் பதில் அளித்தார் வாசு.

செல்லம் மீண்டும் சென்னைக்கு மகனின் திருமணத்துக்குப் போய் வந்தாள். அதன் பிறகு அவள் எந்த ஊரைத் தன் மனத்

துக்கு இனியதாக நினைத்தாளோ அவ்வூரின் மண்ணுடன் கலந்து விட்டாள்.

தியாகு வந்தான். போனான்.

வாசு விரும்பியது போல் அவரால் சட்ட மறுப்பு இயக்கத்தில் கலந்து கொள்ள முடியவில்லை. செல்லத்தின் மறைவு அவரை நிலைகுலைய வைத்துவிட்டது. வாழ்க்கை பூராவும் அவள் விரும்பியோ விரும்பாமலோ அவருடைய எண்ணங்களை, நினைவுகளை அவள் செயல் படுத்தியவள். அக்ரகாரத்தில் ஹரிஜனச் சிறுவனை வீட்டுக்குள் ஏற்றுக்கொண்டு அன்னம் படைத்து வளர்த்தவள். அதனால், ஊராரால் அவளே தீண்டப்படாதவள் போல் ஒதுக்கி வைக்கப்பட்டவள். அவள் வயிற்றில் பிறந்தவனால் இந்தக் கொள்கைகளை ஏற்றுக்கொள்ள முடியவில்லை. அவன் தனக்கென்று ஒரு பாதையை வகுத்துகொண்டு போய்விட்டான்.

## 3

அன்று அடை மழை. கார்த்திகை மாதம். தேசம் எங்கும் ஆகஸ்ட் புரட்சிக்குப் பிறகு அமைதிகுலைந்து மக்கள் அடிமைத் தளையிலிருந்து விடுதலைபெறத் துடித்துக்கொண்டிருந்த காலம். காந்தியடிகள், மற்ற தலைவர்கள் ஆகாகான் மாளிகையில் சிறை வைக்கப்பட்டுத் தியாக வேள்வியில் தத்தம் ஆத்மாக்களை நெய் யாகச் சொரிந்து பாரதமாதாவின் விலங்கை அறுத்தெறியும் தபசில் ஈடுபட்டிருந்தார்கள்.

கிராமத்தில் ஜகன்னாதாச்சாரி இல்லை. அவரும் பட்டணம் போய் விட்டார். தியாகு அதிர்ஷ்டத்தில் கொழிப்பதைக் கண்டார். அப்சரஸ் போன்ற மனைவி, அந்தஸ்து, செல்வம் அவனிடம் இருப்பதைக் கண்டார். சட்ட மறுப்பு செய்து சிறை செல்லும் சத்தியாக்கிரகிகளுக்கு எதிராக அவன் சர்க்கார் தரப்பில் தன் கடமையைச் செய்துக் கொண்டிருந்தான்.

வைதீஸ்வரன் பெரிதும் மாறிவிட்டிருந்தார். அவருடைய வரட்டு ஆசாரங்கள் திடீரென்று மாறின. அம்மாளு மறைந்த பிறகு அவளுடன் அவருடைய வரட்டு வாதங்களும் மறைந்தன. தாமாகவே அவர் ஒரு நாள் வாசுவைத் தேடி வந்தார்.

''ஏம்பா! உன் பிள்ளை நல்ல நிலைமையிலே இருக்கானே. நீ அங்கேயே போயிடப் படாதோ?''

''இங்கே இருக்கிறதிலே இருக்கிற சுகம் அங்கே வராது, வைத்தி!''

''இந்த 'நைட் ஸ்கூலு'க்குப் பக்கத்துலே நான் ஒரு மருத்துவ விடுதி ஆரம்பிக்கலாம்னு இருக்கேன்—''

''பேஷாச் செய்யேன்...''

இதுவரை குமரன் மௌனமாக வாசுவின் புண்களை மருந்தினால் கழுவி ஒற்றித் துடைத்துக் கட்டுப் போட்டுக் கொண்டிருந்தான்.

"உன் பிள்ளை பண்ணுகிறது அநியாயம், வாசு!"

"இல்லை, வைத்தி! அவன் பண்றதுதான்— பண்ணியிருக்கிறது—நியாயமானது. அவனும் என்னைப் போல ஒரு தொண்டனா இருந்துட்டா எனக்கு என் வாழ்க்கையிலே பிடிப்போ ருசியோ ஏற்பட்டிருக்காது. எதிலுமே எதிர் மறையாக ஒன்று இருந்தால் தான் உண்மைக்குப் பலம் ஏற்படும்..."

வைத்தீஸ்வரனுக்கு அதிகமாக ஒன்றும் புரிந்து விடவில்லை

"குமரா! ஐயா கிட்டே இத்தனை வருஷமா இருக்கே. தேசம் பூராக் கொந்தளிச்சுண்டு இருக்கு. நீயும் சட்ட மறுப்பு செஞ்சுட்டு ஜெயிலுக்குப் போனா உனக்கு இன்னும் கௌரவம் ஜாஸ்தியாகும்..."

குமரன் முறுவலுடன் தலையாட்டினான். அவன் அவர் கூறியதை மறுத்தானா, ஏற்றுக் கொண்டானா என்பதும் அவருக்குப் புரியவில்லை.

கார்த்திகை மாதமாதலால் பகல் பொழுது மிகவும் சுருக்கமாக இருந்தது. எத்தனையோ ஆண்டுகளாக வாசு தனிமையில் தான் இருந்து வருகிறார். என்றுமே அவர் தம் மகனைப் பார்க்க ஆசைப் பட்டதில்லை.

பகல் உணவுக்காக வீடு செல்லும் குமரனை நோக்கி, "ஒண்ணு பண்ணேன். வழியிலே தபாலாபீசுக்குப் போய் தியாகுவை வரச் சொல்லி ஒரு தந்தி கொடு. எனக்கு அவனைப் பார்க்க ஆசையா இருக்குனு கொடு. தெரிஞ்சுதா?" என்றார்.

குமரன் அவ்விதமே செய்தான்.

அன்று மாலைப் பொழுதுக்குள் வானமெங்கும் கரிய மேகங்கள் திரண்டு கர்ஜனை புரிந்த வண்ணம் மழை தாரை தாரையாகப் பொழிய ஆரம்பித்தது. தொலைவில் நெடுஞ்சாலையில் அவ்வப்போது தெரியும் கார் விளக்குகளின் ஒளியைப் பார்த்தபடி வாசு படுத்திருந்தார். "தியாகு வருகிறான். வராம இருப்பானா? என்ன இருந்தாலும் பெற்ற பிள்ளையாச்சே... ரத்த பாசமாச்சே!" என்று எண்ணினார்.

கொட்டும் மழையில் சொட்ட நனைந்தவாறு குமரன் குடிலுக்குள் நுழைந்து விளக்கை ஏற்றி விட்டுக் கட்டிலின் அருகில் சென்று, 'ஐயா! காப்பி வாங்கி வந்திருக்கேன். சாப்பிடறீங்

களா ?' என்று அழைத்தான். வாசு பதிலேதும் கூறவில்லை. அயர்ந்து தூங்குகிறார் என்று நினைத்து வாயிலில் சென்று திண்ணையில் உட்கார்ந்து நெடுஞ்சாலையைப் பார்த்துக் கொண்டிருந்தான். எங்கோ செல்லும் கார் ஒளியைப் பார்த்து, "தியாகுவாகத்தான் இருக்கும்" என்று முணுமுணுப்பான். வரவரக் குறைந்து அந்தக் கார் தொலைவில் சென்றுமறையும். ஆழ்ந்த பெருமூச்சு அவன் இதயத்திலிருந்து கிளம்பும்.

மறுபடியும் மேக முழக்கம், மின்வெட்டு, மழைத்தாரைகள். கிராமமே இருளில் அமிழ்ந்து விட்ட தோற்றம்.

அடுத்தநாள் பொழுது விடிந்தது. கதிரவனைக் காணவில்லை. பகல் என்கிற பெயரில் இரவின் சாயலே உலகைப் போர்த்திக் கொண்டிருந்தது. அதிகாலையிலே குமரனுக்குத் தெரிந்துவிட்டது ஐயா வாசு போய் விட்டாரென்று. உலகத்தில் அவனுக்கு உற்றவராய், தந்தை போன்றவராய், நல் ஆசானாக இருந்தவர் போய்விட்டார். அவர் உண்மையில் எங்கும் போய்விடவில்லை. இவனுக்குத் தேசப்பணியில் ஆர்வம் அதிகரிக்கப் புதுப்பலம் ஊட்டும் வகையில் அவனுள் உறைந்து விட்டார்.

தியாகு வந்தான். முன்பு தாயைக் கரையேற்ற வந்தவன் மீண்டும் தந்தையைக் கரையேற்ற வந்தான்.

வானத்திலிருந்து அமுதம் போல் மழைத்தாரைகள் பொழிந்த வண்ணம் இருந்தன. சட்டுபுட்டென்று அவர் உடலை மயானத்தில் வைத்துத் தீ மூட்டிவிட்டு எல்லோரும் வந்து விட்டார்கள். அப்படி ஒரு பேய் மழை. நள்ளிரவில் குமரன் நெஞ்சில் ஏதோ ஒன்று பாரமாக அமுத்திக் கொண்டிருந்தது.

குடிலில் விளக்கு பிரகாசமாக எரிந்து கொண்டிருந்தது. தியாகு தன் வீட்டுத் திண்ணையில் படுக்கப் போய்விட்டான்.

வாசலில் நனைந்தபடி வெட்டியான் வந்து நின்று, " குமரா! ஐயா உடம்பு வேகவே இல்லையப்பா..."என்று அழைத்தான்.

"அதற்கு இவன் என்ன செய்யமுடியும்?

நீர்ப்பிரவாகம் மயானத்தை முற்றுகையிட்டுக் கொண்டிருந்தது. குமரன் நெஞ்சில் உறுதியை வரவழைத்தவாறு வெட்டியானுடன் மயானுத்துக்குச் சென்று தன்னை எவ்வகையிலும் மகனைப் போல் வளர்த்தவருக்கு மறுபடியும் தீ மூட்டினான்.

சிறிது மழை நின்றது. அவரின் உடலைத் தீ நாக்குகள் சுற்றிச் சூழ்வதை அமைதியுடன் பார்த்தான் குமரன். இன்னும் அரை மணிக்குள் அவர் பஞ்சபூதங்களுடன் கலந்து விடுவார்.

காலையில் வைதீஸ்வரன் குமரன் நேற்றிரவு தன்னிடம் வந்து 'நைட் ஸ்கூல்' பொறுப்பையும் தன்னை ஏற்றுக் கொள்ளும் படி கூறிச் சாவிக்கொத்தை ஒப்படைத்ததாகச் சொன்னார்.

குமரன் எங்கு போனான்? பாரதமக்கள் அன்னையின் விடுதலைக்காகப் புரியும் ஆத்ம வேள்வியில் தன்னையும் கரைத்துக் கொள்ளும் ஒரு துளியாக அவன் எங்கோ மறைந்து விட்டான்.

★

27

# துணி வெளுக்க மண்ணுண்டு

"பொக்கிலே! ஓடியாயேன். நம்ம கவலையைத் தீர்க்க முருகன் கண்ணைத் திறந்துவிட்டான். காத்தி தீபம் கனஜோராய் எரியும். நீயும் ஒரு புதுப் பொடவை கட்டிக்கிட்டு வெளிச்சம் போடலாம்'' என்று எக்காளமாகத் தன்னுடைய மனைவியைக் கூவி அழைத்தான், ஏகாலி ராசா கண்ணு. அவனுடைய மகிழ்ச்சி மத்தளம் கொட்டியது; ஆசை அம்மானை பாடியது!

ஏகாலியின் மனைவி பொக்கிலேயும் என்னமோ, ஏதோவென்று அடுக்களையைவிட்டு அவசர அவசரமாக ஓடி வந்தாள். ராசாகண்ணு புகையிலையைக் குதப்பிய வாயுடன் அவளை நோக்கிச் சிரிக்க முடியாமல் சிரித்தான். வறுமையின் ஜீவனும் அவனுடைய சுருக்கம் விழுந்த முகக்கோடுகளில் ஒளிந்து சிரிக்கலாயிற்று.

''என்ன மச்சான், என்னமோ அம்புட்டு அவசரமா அழைச்சியே!''

''ஒண்ணுமிலே, குட்டி! நீ தீபாவளிக்கே புதுப்புடவை எடுத்துத் தரலேன்னு கோவிச்சுக்கிட்டியே, இப்போ தீபத்துக் காவது எடுத்து கொடடா, ஏகாலின்னு முருகன் கட்டளைபொறந்திருக்கு.''

"அட, விஷயத்தைச் சொல்லாம உம்பாட்டுக்கு வளவளன்னு இப்பவர கடுதாசித் துணிமாதிரி வளைச்சிக்கிட்டுப்போறு...''

இந்தப் பாரு பொக்கிலே! குறிபோட எடுத்த இந்தச் சட்டையிலே எந்த மவராசனே பத்து ரூபாய் நோட்டை விட்டு

பிட்டான். ஆங்...அவன் விட்டுப்பிட்டானு? ஆண்டவன் நம்ம கஷ்டத்தைப் பாத்து அவன் மனசுலே அப்படி ஞாபகமறதியைக் கொடுத்திருக்கணும்!''

ராசாகண்ணு தெம்மாங்குத் தெம்பில் தொடை தட்டிப் பேசினுன். பொக்கிலேக்குக் கோபம் மனத்துள் கனன்றது.

''ரொம்ப பவுசாத்தான் இருக்கு, உங்கப் பேச்சு. அடுத்தவன் சொத்துக்கு ஆசைப்படறதுதான் ஆண்டவன் இஷ்டமா? இந்தப் பாரு மச்சான். மின்னே இந்த ரூபாயை உடைவங்க கிட்டே ஒப்படைக்கிறதுதான் உத்தமம். இன்னிக்கு நம்ம பத்து ரூபாய்க்கு ஆசை வச்சிப்பிடலாம். நாளேக்கு இருபது ரூவா செலவு தன்னுலெ வந்து தொலேயும். நமக்கு மென்னியைப் பிடிச்சா ஜீவன் போவுது. நெலமை அப்படி. நம்ம புள்ளேக் குட்டிகளுக்கு, சட்டையைப் போட்ட மவராஜன் சாபம் வேண்டா மச்சான்!''

ராசாகண்ணு, பொக்கிலேயைக் கடூரமாகக் கவனித்தான். அவனுடைய கண்கள் வலிய வந்த சீதேவியை உதைத்துத் தள்ளும் மூதேவியும் இருப்பாளா என்று கேட்பனபோல் கவனித்தன.

''பொக்கிலே! யோசனே பண்ணிச் சொல்லு. அடுத்தவாரம் கார்த்திகை தீபம். கையிலே காலணு இல்லே. நீயோ ஒரே பழம் பொடவையே நம்ம தொழில்லே பழக்கிக் கட்டிக்கிட்டு வாரே! இந்தக் காலத்திலே பச்சாத்தாபம், பாவம் இதுகளே யெல்லாம் மூட்டைகட்டி வச்சிப்பிட்டாத்தான் பொழைக்க முடியும், என்னு சொல்றே?''

''சொல்றத்துக்கு என்னு இருக்கு சொரைக்குடுக்கைலே? ஒரு பழம் புடவை கொடுத்த மகராசிபோல இன்னெரு பழம் புடவை கொடுக்கற மகராசி இருப்பாங்க. மொதல்லே இதை லாண்டிரிகார ஐயாகிட்டேக் கொடுத்து உடையவர் கிட்டே சேர்க்கச் சொல்லுங்க. உங்கமேலே சத்தியமா இந்தப் பணத்தை நான் தொடமாட்டேன். ஆமாம், சொல்லிப்புட்டேன்.''

பொக்கிலே அதற்குமேல் அங்கு ஒரு விநாடியும் நிற்கவில்லே நேரே அடுக்களேக்கு விரைந்து கேப்பைக் கூழைத்துழாவி விட்டாள். ரசாகண்ணு என்ன செய்வதென்று தோன்றுமல் திரு திருவென்று விழித்தான். அப்படி விழித்தாலும், வறுமை நிலேமையிலும் தன்னுடைய மனேவியின் நேர்மை சுபாவத்தை நினேந்து நெக்குருகிப் போனுன்.

* * *

முருகன் லாண்டிரியின் சொந்தக்காரன் ஏகாலி ராசா கண்ணுவின் செயலேக் கண்டு ஆச்சரியக் கண்களே அகல விரித்துக்

கொண்டிருந்தான். அவனுக்கும் என்ன சொல்வதென்று புரியாத நிலைமை ஏற்பட்டுவிட்டது. இந்தக் காலத்தில் இத்தனை நேர்மை சுபாவமுடைய மனிதன் வாழ்கிருனு, என்று அவனுடைய நெஞ்சம் அவனையே கேட்டுக்கொண்டது. அதுவும் அந்த நேர்மை எங்கே வாழ்கிறது? ஒரு சாதாரண ஏகாலியிடம்; வறுமையின் சொந்தக்காரனிடம், வாழ்வைக் குடிசைக்குள் காணும் வற்றிய மனிதனிடம்!

''என்னங்க சாமி, இம்முட்டு யோசனை பண்ணுறீங்கோ?'' ஏகாலியின் குரல் லாண்டிரியின் சொந்தக்காரன் சிந்தனையைக் கலைத்தது.

''ஒன்றுமில்லே, ராசாகண்ணு. உன்னுடைய உலகம் தெரியாத சுபாவத்தை நினைத்து யோசனை செய்தேன்.''

''நீங்க ஒண்ணு சாமி! சம்பாதிக்கிற பணமே மனுஷன் கிட்டேருக்கிறதில்லேன்னு, இதெல்லாமா தாங்கிடப் போவுது? பாவம் பணத்தை தொலைச்சவன் மனம் பதறக்கூடாது, சாமி! தயவு பண்ணிக் கொடுத்திடுங்க.''

லாண்டரிக்காரன் அதற்குமேல் ஏதும் பதில் சொல்லவில்லை. வந்த துணிகளை மேற்பார்வையிடலானுன்.

''ஆமாம், ஏன் இந்தத் தடவை துணி மங்கலாக இருக்கு?''

''சேத்துப்பட்டே அடை மழையிலே சேருப் போச்சிங்க களே. உங்களுக்கு தெரியாதா சாமி?''

துணிகளை எண்ணிக் கொண்டதும் ராசாகண்ணு விடை பெற்ருன். அவனுடைய மனத்தில் ஒருபுறம் மனைவியின் போக்கு பூரிப்பை உண்டு பண்ணினுலும், மறுபுறம் புழுக்கத்தையுண்டு பண்ணத் தவறவில்லை. எப்படியோ தேடி வந்த செல்வம் ஓடி விட்டது!

* * *

லாண்டரியின் சொந்தக்காரன் அன்று லாகவமாக இஸ்திரிப் பெட்டியை ஓட்டிக் கொண்டிருந்தான். தினமும் பீடி பிடிக்கும் அவன், அன்று சிகரேட்டைப் புகைத்துக் கொண்டிந்தான்.

எதிரே அமாவாசைச் சோற்றுக் காக்கைகள் போல், பசையுள்ள இடத்தில் கொட்டமடிக்கும் நண்பர் குழாம் குஷியாகப் பேச்சில் ஈடு கொடுத்துக் கொண்டிருந்தது. பக்கத்துத் தேநீர்க் கடையிலிருந்து அரை மணிக்கு ஒருதடவை நான்கு 'கப்' தேநீர் வரவழைக்கப்பட்டது. மூன்ரும் காட்சி சினிமா பார்த்த ஜோரோடு நேரே லாண்டரிக்கு வந்து வேலை பாரத்த சொந்தக் காரனேடு, தாங்களும் கண்விழிப்பதில் என்ன கெட்டுப் போய்

விட்டது? பத்து ரூபாய் நோட்டு ஒரே நாளில் பறந்ததே! இத்த நண்பர்கள் கண் விழிக்கும் உதவிக்குக் கூடவா தகுதி யற்றவர்கள்?

பாவம்! ஏகாலி ராசாகண்ணு அனுபவிக்காத அந்த ரூபாயை எடுபிடிகளின் சொல்லைக் கேட்டு அனுபவிக்கலானன் லாண்டரிக்கு உடையவன்.

* * *

அப்போது அவர்கள் தாங்கள் பார்த்துவந்த சினிமாவைப் பற்றிய பேச்சில் மூழ்கியிருந்தார்கள். அதன் கதாநாயகனின் வர்ணனையில் உறங்காத கண்களுடன் உறக்கம் கண்டனர். கார்ப்பரேஷன் கடிகாரம் கனத்த குரலில் இருமுறை இனிமை யாக அலறியது. வீதி வழியே அவ்வப்போது பூகம்ப யந்திர ரிக்ஷாக்கள் இரவின் அமைதிக்கு எதிரியாகிக் கொண்டிருந்தன.

கதாநாயகியின் அழகில் கண் சொக்கி வாய் மறந்து நண்பர் களை நோக்கித் திரும்பிய லாண்டரியின் சொந்தக்காரன், சில விநாடிகள் சென்று தீய்ந்த வாசனை வரவே சுய நினைவுக்கு வர லானன். திரும்பினன். அவனுடைய மனம் 'பகீ'ரென்றது.

அழகான மைசூர் சில்க் சேலையின் மத்தியில் இஸ்திரிப் பெட்டியை நிறுத்திவிட்டுப் பேசியதால் ஏற்பட்ட நஷ்டம்தான்!

ஏகாலி ராசாகண்ணு நான்கு தினங்கள் கழித்துத் துணி யெடுக்க லாண்டரிக்கு வந்தான். அவன் எடுக்க வேண்டிய துணிகளை எண்ணிவிட்டு மூட்டை கட்டிக்கொண்டு புறப்பட லானன். அப்போது லாண்டரிக்குடையவன் "ராசாகண்ணு!" என்றழைக்கவே நின்று திரும்பினன்.

"இந்தா இந்த சில்க் சேலையை நீயே எடுத்துக் கொள்!"

ராசாகண்ணு புரியாமல் விழித்தான்.

"ராசாகண்ணு! நீ கொடுத்த பத்து ரூபாயை, நானே எடுத்துக் கொண்டதற்காக கிடைத்த தண்டனையப்பா. உன்னைப் போல் நல்ல குணம் எனக்கேற்படாததால், செலவு செய்து விட்டேன். அதனல், எந்த மனிதன் பத்து ரூபாயை விட்டானே, அவன் வீட்டு சேலையையே ஞாபக மறதியாகத் தீய்த்து விட் டேன். கடைசியில் நான் சேலைக்கான அபராதம் பத்து ரூபாய் செலுத்த வேண்டி இருந்தது. முதலிலேயே அந்த மனித னுடைய பத்து ரூபாயைக் கொடுத்திருந்தால் சன்மானமாக இரண்டு ரூபாயாவது கிடைத்திருக்கும். இப்போது பத்து ரூபாய் நஷ்டத்திற்கு நஷ்டம்; நீ கொடுத்த பத்து ரூபாயைப் பாவிப் பயல்களுடன் சேர்ந்து வீணக்கியது வேறு. உன் நெஞ்சத் தால் என்னைத் திருத்தியதற்காக இந்தப் பழஞ் சேலையை உனக்கே தந்து விடுகிறேன்."

ராசாகண்ணுவிற்குத் தன்னுடைய மனைவி கூறியது நினைவுக்கு வந்தது. நேர்மையின் உருவத்தை அவனுடைய நெஞ்சம் புரிந்து கொண்டதால், நெடுமரம்போல் நிற்கலானான்.

துணி வெளுக்க மண்ணுண்டு என்று நிறைவாக இருந்த ராசாகண்ணுவை நினைத்து, மனம் வெளுக்கச் சாணையில்லையே என்று வேதனைப்பட்டார் லாண்டரிக்குடையவர்.

★★

# 28

# கங்கை இன்னும் வற்றிவிடவில்லை

பத்துப் பன்னிரண்டு ஆண்டுகளுக்குப்பின் தாய்நாட்டுக்குத் திரும்புகிறவனுடைய மன நிலையை உங்களால் அநுமானம் செய்ய முடியுமானால்தான் என்னுடைய மன நிலையைச் சரியாக நீங்கள் புரிந்து கொள்ள முடியும்! நான் ஓர் இந்தியன் என்று மட்டும் சொல்லிக் கொள்வதைவிட, 'இந்தியன் என்று சொல்லிக்கொள்வதிலேயே பெருமைப்படுகிறவன்'—என்று சொல்வதுதான் பொருத்தமாக இருக்கும். வெளிநாட்டு வர்த்தகக் கம்பெனி ஒன்றில் பணி புரியும் நான் அநேகமாக உலகின் எல்லா முக்கிய நகரங்களிலும் சில மாதங்களாவது இருந்திருக்கிறேன். உலகிலுள்ள எல்லா முக்கிய நதிகளின் தண்ணீரையும் ருசி பார்த்திருக்கிறேன். ஆனாலும் எனக்கு என்னுடைய இந்திய நகரங்களின் மேல் தான் தீராக்காதல். ஆயிரம் நதிகள் ஓடுகிற இடங்களைப் பல்லாயிரம் முறை சுற்றிப் பார்த்தாலும் என் இதயத்தில் என்னவோ கங்கைதான் ஓடிக்கொண்டிருக்கிறது.

பதினைந்து ஆண்டுகளுக்குமுன் குளிர்ந்த காற்று வீசிக் கொண்டிருந்த ஒரு முன்மாலை வேளையில் ஹரித்துவாரத்தில் கங்கைக் கரையில் படிக்கட்டில் உட்கார்ந்து முழங்காலளவு நீரில் நனைய மணிக்கணக்காக நான் கங்கையைப் பார்த்துக் கொண்டிருந்ததுண்டு. இந்த விநாடியிலும், எந்த விநாடியிலும் நான் அப்படித்தான் பார்த்துக் கொண்டிருக்கிறேன் என்பதாக எனக்குள் ஒரு பாவனை. அன்று அந்த முன்மாலை வேளையில், நேர்ந்துகொண்டவர்கள் தொன்னைகளில் ஏற்றி மிதக்கவிட்ட அகல் விளக்குகள் கங்கையில் அங்கங்கே மிதந்து கொண்டிருந்தன. ஒருபுறம், மலைச்சரிவு, ஆசிரமங்களின் கட்டிடங்கள், குளிர்ந்த காற்று, சின்னஞ்சிறு விளக்குகள் மிதக்கும் கங்கை பார்க்கச் சலிப்படையாத காட்சி. கங்கை என் உடம்பை நனைக்

கும் போதெல்லாம் என்னுள்ளிருக்கும் சத்தியமும், தர்மமும், கருணையும் கிளர்ந்திருக்கின்றன. உலகத்தின் மாபெரும் நதிகளுக்கும் என் கங்கைக்கும் ஒரு வேறுபாடு உண்டு. பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் என்னுடைய தேசத்தின் பூர்வ கால ஞானிகள் சத்தியத்தையும், தர்மத்தையும்—அவையிரண்டின் விளைவாகிய கருணையையும்—கங்கையின் கரைகளில் தான் கண்டு கொண்டார்கள். கங்கையின் ஒரு கரை சத்தியம். மறுகரை தர்மம். நடுவே ஓடும் கங்கைதான் கருணை—என்று உணர்ந்தவன் நான். என்னுடைய தேசத்தின் புனித உணர்வுகள் எல்லாம் இந்த நதியின் பிரவாகத்தோடு உடனிகழ்ச்சியாகப் பிரவாகித்தவை என்பதை நான் அறிவேன்.

இந்த நதி பெருகுகிறவரை இதன் கரையில் அல்லது கரையாக ஏற்படுத்தப்பட்ட சத்தியமும், தர்மமும் என் தேசத்தை விட்டுப்போய்விட முடியாது என்பதில் எனக்கு அழுத்தமான நம்பிக்கை உண்டு. பன்னிரண்டு ஆண்டுகளுக்குப்பின் மறுபடியும் நான் எதற்காக இந்தியாவுக்குப் புறப்படுகிறேன் தெரியுமா? சொன்னல் ஒருவேளை நீங்கள் சிரிக்கலாம், அல்லது என்னைப் பைத்தியக்காரன் என்று நினைக்கலாம். ஹரித்துவாரத்தில் இரண்டு நாட்கள் கங்கைக் கரையில் இருந்துவிட்டு வரவேண்டும். ஊரில் எனக்கு உறவினர்கள், வீடு, வாசல், தாய், தந்தை, யாரும் கிடையாது. இப்போது வயது நாற்பத்திரண்டு. இது வரை திருமணமும் ஆகவில்லை. அப்படி ஓர் ஏற்பாட்டிற்கு இனி அவசியமும் இல்லை. ஊர்சுற்றுகிறவனுல் குடும்பத்தைக் கட்டிக்காக்க முடியாமற் போனுலும் போகலாம். எனக்குப் பூர்வீகம் இராமநாதபுரம் மாவட்டத்தில் சாத்தூர் தாலுகாவில் ஒரு சிறிய கிராமம். அந்தக் கிராமம் இப்போது இருக்கிறதோ இல்லையோ? இளம்வயதில் தாய்தந்தையரை இழந்துவிட்ட என்னை ஜில்லா போர்டு பள்ளி ஆசிரியரான என் தாய்மாமன் வளர்த்துப் படிக்கவைத்து ஆளாக்கினுர். அவரும் ஒரு ஊர் மாற்றுகிற ஜில்லாபோர்டு உத்தியோகத்திலே இப்போது எந்த ஊரில் இருக்கிருரென்று எனக்குத் தெரியாது. படித்ததும் டெல்லியிலுள்ள வெளிநாட்டு வர்த்தகக் கம்பெனியின் கிளை ஒன்றில் வேலை கிடைத்தது. பிறகு அதே கம்பெனியில் ஸ்டெனுேகிராபராக முடிந்தது. கம்பெனிக் காரர்களுக்கு என்னை மிகவும் பிடித்ததனுல் பதவிஉயர்வு கொடுத்தார்கள். கல்கத்தா, பம்பாய், ஹைதராபாத், பங்களூர் ஆகிய நகரங்களில் ரீஜனல் மானேஜராகச் சிறிதுகாலம் இருக்கச் செய்தார்கள். பிறகு வெளிநாட்டுக்குப் போகச் சம்மதமா என்று கேட்டார்கள். புறப்பட்டு விட்டேன். டில்லியிலிருக்கும்போது பதினேந்து நாட்களுக்கு ஒரு முறையாவது ஹரித்துவாரம் போய்வருவேன்.

அதே ஹரித்துவாரத்தைப் பன்னிரண்டு வருடங்களாகக் காணமல் இருந்துவிட்ட தவிப்புடன் இப்போது ஊர் திரும்பு கிறேன். இப்போது நான் வேலை பார்க்கிற இடம் தாய்லாந்தி லுள்ள பாங்காக் நகரம். அரிய முயற்சியுடன் இந்தியா சென்று வருவதற்காகக் கம்பெனியில் பதினைந்து நாள் லீவுவாங்கியிருக் கிறேன். என்னுடைய தேசத்தைப் பற்றிப் பத்திரிகைகளில் நான் படிக்கும் செய்திகள் எனக்குத் திருப்தியை அளிக்கவில்லை. முந்தா நாள் மாலை ஒரு யூதன் என்னைக் கேட்டான் :—

''யூ ஆர் இண்டியன்! ஐ ஹேட் இண்டியன்ஸ்...என்று தொடங்கி உங்களை வெறுத்து அவமானப்படுத்தும் சீனவுடன் கூட நீங்கள் டிப்ளமேடிக் உறவுகளை விடவில்லை. ஆனல் இஸ்ரேலுடன் உறவுகளை விட்டுவிட்டீர்களே?'' என்று ஆங்கிலத் தில் கோபமாக வினவினன் அவன்.

''பொறுத்திருந்து பார், நண்பனே! எனது நாடு கங்கை பாயும் நாடு. எனது நாட்டில் கங்கை இன்னும் வற்றிவிடவில்லை. நாங்கள் யாருக்கும் கெடுதல் செய்யமாட்டோம்...'' என்று ஆங்கிலத்தில் சாந்தமாக மறுமொழி கூறினேன்.

''யார் கண்டார்கள்? உங்கள் கங்கை ஒருவேளை இப்போது வற்றியிருக்கலாம்'' என்று மறுபடியும் கோபமாகவே ஆங்கிலத் தில் இரைந்தான் அவன். ''ஒருநாளும் இல்லை'' என்றேன் நான். அவன் என் பதிலில் திருப்தியடையவில்லை.

இரண்டு வருடங்களுக்கு முன் நான் டோக்கியோவில் இருந்த போது, 'கிராண்ட் ஒஸாகா பார்' இல் எனக்கும் ஒரு ஜப்பா னியனுக்கும் சண்டையே மூள இருந்தது.

''உனது இந்திய நகரங்களில் இரவு சூனியமாக இருக்கிறது. பெரிய நகரங்கள் கூட இரவில் இருளடைந்து கிடக்கின்றன. இரயில்கள் சுத்தமாக இல்லை, டாக்ஸிகளோ அழுக்கு மயம்...ஹாங் காங், டோக்கியோ போல் இரவில் ஒளிமயமாக மின்னும் நகரம் ஒன்று கூட உன் இந்தியாவிலே இல்லை'' என்முன் அவன்.

''உங்களைப் போல் வெளிச்சம் போட எங்களுக்குத் தெரி யாது'' என்றேன் நான்.

''நோ...நோ...யூ ஆர் ராங். ஏ ஸிடி இஸ் லைக் எ வுமன். ஷி மஸ்ட் ஹேவ் ப்யூடி, ப்ரைட்னெஸ் அண்ட் ஆல் கைண்ட் ஆஃப் அட்ராக்ஷன்ஸ்...ஷீ மஸ்ட் ட்ரை டு கெட் அட்டென்ஷன் ஆஃப் அதர்ஸ்,'' என்முன் அவன்.

''இந்தியப் பெண்களும் அப்படி இல்லை. இந்திய நகரங்களும் அப்படி இருக்க முடியாது...எங்கள் நாட்டில் கங்கை இன்னும் வற்றிவிடவில்லை......'' என்று ஆத்திரத்தோடு பதில் கூறினேன் நான். குடிவெறியில் அவன் என்னைக் கண்டபடி திட்டினான்.

ஆனால் அவன் அன்று கூறியதில் ஒருபகுதி உண்மை என்பதை இன்று பாங்காக்கிலிருந்து இரவு விமானத்தில் சிங்கப்பூருக்குப் புறப்பட்டபோது தற்செயலாக உணர்ந்தேன். 'பாங்காக்' விமான நிலையத்திலிருந்து விமானம் மேலெழும்பிய போது கீழே வண்ணவண்ண ஒளிகளை வாரிவீசிய நகரின் இரவுத் தோற்றம் கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. கண்ணுக் கெட்டிய தூரம் வரை பளிச் பளிச் சென்று மின்னும் பலநிற வைரக்கற்களை நெருக்கமாக வாரிக் குவித்ததுபோல் எத்தனை அழகான காட்சி!

இந்திய நகரங்களுக்கு இத்தனை ஒளிக்கவர்ச்சி இல்லைதான்! வேண்டுமானால் கல்கத்தா பம்பாய் சென்னை டில்லி போன்ற சர்வதேச நகரங்கள் கொஞ்சம் பிரகாசமாக இருக்கலாம். ஆனால் அவைகளும் டோக்கியோ, நியூயார்க், லண்டன், பாரிஸ், பெர்லின், பாங்காக், ஹாங்காங், சிங்கப்பூர் போல அவ்வளவு ஒளிமயமாக இருக்க முடியாது தான்!

உலகின் சர்வதேச நகரங்களிலுள்ள கவர்ச்சிகள் என்னுடைய ஏழை இந்தியாவில் இல்லாமல் போகலாம். ஹோனலூலுவின் இரவு விடுதிகள், பாரீஸின் பகட்டு, நியூயார்க்கின் நேர்த்தி, பாங்காக்கிலும், மலேயாவிலுமுள்ளவை போல் அழகிய சாலைகள், ஜெர்மனியின் ஆட்டோபான் ரோடுகள் போல எல்லாம் என் இந்தியாவில் இருக்க முடியாது. ஆனால் என்னுடைய இந்தியாவில் கங்கை இன்னும் ஓடுகிறது.

'இன் நறு நீர்க்கங்கை ஆறெங்கள் ஆறே'—என்று நான் தலைநிமிர்ந்து கூறமுடியும். ஒரு தேசத்தின் பண்பாடாகவே பெருகிவரும் இத்தகைய புனிதநதி உலகில் வேறெங்குமே இருக்க முடியாது. ஒவ்வொரு இந்தியனுடைய மனத்திலும் கங்கை சுரக்கும் போது அது கருணையாகவே சுரக்கிறது. நீண்ட நாட்கள் அடிமைப்பட்டுக் கிடந்தபின் முதல் முதலாக எங்கள் காந்தியின் மனத்தில் கங்கை சுரந்தது. அது கருணையாக, விடுதலை வேட்கையாக, தரித்திர நாராயணர்களுக்கு உதவும் நெகிழ்ச்சியாகச் சுரந்து பாரத தேசமெங்கும் பெருகி நனைத்தது. அதே கங்கை இன்னும் வற்றியிருக்காது அல்லவா?

பாங்காக்கிலிருந்து புறப்பட்ட விமானம் பினங்கில் இறங்குகிறது. என் பக்கத்தில் அமர்ந்திருந்த மலாய்க்காரர் விமானத்

திலிருந்து இறங்கத் தயாராகிறார். பினங்கு விமான நிலையத்தில் கொஞ்சம் இறங்கி நிற்கலாம் என்று தோன்றவே நானும் இறங்கினேன். இறங்கும் போது விமானப் பணிப்பெண் மலாய்க் காரரை வாழ்த்தி வழக்கமான உபசரணைச் சொற்களை உரைத்து விடை கொடுக்கிறாள்.

'த்ரி மா காஸி' (உதவிக்கு நன்றி) என்று மலாய் மொழியில் மெல்லக் கூறிவிட்டு நிதானமாகப் படியிறங்குகிறார் மலாய்க்காரர். பினங்கு நாற்புறமும் கடல் சூழ்ந்த தீவு. மிக அழகான-சுத்தமான—தூசி படியாத நகரம். நான் பலமுறை பார்த்திருக்கிறேன். மலேசியாவில் தமிழர்கள் அதிகமாக இருக்கும் நகரம் என்ற ஞாபகம் வரவே அந்த விநாடியே என் மனத்தில் கங்கை சுரந்தது.

மறுபடி விமானம் புறப்பட்டது. கோலாலும்பூரில் இறங்கி வேறு விமானம் மாறிச் சிங்கப்பூருக்குப் போக வேண்டும். கோலாலும்பூரில் சிங்கப்பூர் போகிற மலேசியன் ஏர்வேஸ் விமானம் தயாராயிருக்கும்.

நினைத்துக் கொண்டிருக்கும் போதே விமானம் கோலாலும்பூர் கபாங் சர்வதேச விமான நிலையத்தில் இறங்கி விட்டது.

கோலாலும்பூர் விமான நிலையத்தில் இறங்கி சிங்கப்பூருக்கு விமானம் மாறியபோது என்னுடன் முத்திருளப்பன் என்பவர் பயணம் செய்தார். அவரிடம் பேசிக் கொண்டிருந்ததில், ''தமிழ்நாடு தலை எடுக்கமுடியாமல் வடவர் ஆதிக்கமும், வட இந்திய ஆதிக்கமும் தடுத்து வருவதாக''க் குறைப் பட்டுக் கொண்டார்.

''அப்படிச் சொல்லாதீர்கள், ஏகஇந்தியா என்ற மனப் பான்மையை நாம் வளர்க்க வேண்டும். பிரதேச மனப்பான்மை நமது ஒற்றுமையைக் குலைத்துவிடும்'' என்றேன் நான்.

''சும்மா நாமாக அப்படி நினைத்துக் கொண்டிருக்க வேண்டியதுதான். அவனவன் தன் பிரதேசத்துக்காக மற்றவர்களைச் சுரண்டுகிறான்'' என்றார் முத்திருளப்பன்.

'சுதந்திரம் பெற்றுக் கால் நூற்றாண்டு நிறைவதற்குள் தான் எத்தனை அபிப்ராய பேதங்கள்? எத்தனை ஒற்றுமைக் குலைவுகள்?' என்று எண்ணிய போது தேசத்தையே தெய்வமாக நினைக்கும் என் கண்களில் ஈரம் நெகிழ்ந்தது. எனது தேசத்தில் கங்கை வற்றி விட்டதா? என்ன?

சிங்கப்பூர் விமான நிலையத்தை அடைந்ததும் அதிர்ச்சி தரும் ஒரு செய்தி எனக்காக அங்கே அப்போது காத்திருந்தது.

சிங்கப்பூரிலிருந்து அடுத்த மூன்று நான்குமணி நேரத்தில் அன்றிரவே சென்னை போய்விடலாம் என்று எண்ணியிருந்த என் எண்ணத்தில் மண் விழுந்தது.

''ஏர் இந்தியா விமானிகள் திடீரென்று வேலை நிறுத்தம் செய்துவிட்டதால் சிங்கப்பூரிலிருந்து சென்னைக்கு ஏர் இந்தியா சர்வீஸ் இல்லை'' என்று அறிவிக்கப்பட்டது. நான் திகைத்தேன். அப்போது அங்கே என் காது கேட்கவே 'ஏர் இந்தியா' வைக் குறை சொல்லிப் பேசிய வெளிநாட்டுப் பயணிகளின் சொற்கள் என்னைத் தலைகுனிய வைத்தன.

''இந்திய விமானக் கம்பெனியில் மட்டும் திடீர் திடீரென்று இப்படி மூன்று நாளைக்கொருதரம் ஸ்டிரைக் வந்து விடும். இந்திய விமானத்தை நம்பினால் தெருவில் நிற்க வேண்டியது தான்'' என்று ஒரு வெள்ளைக்காரன் மற்றொருவனிடம் கூறியதைக் கேட்க எனக்கு அவமானமாக இருந்தது. தேசத்தின் மேலுள்ள பிரியத்தைத் தெய்வத்தின் மேலுள்ள பிரியத்தைவிட அதிகமாக வளர்த்துக்கொண்டு விட்ட என் இதயத்தில் நித்தியமாக ஓடிக் கொண்டிருந்த கங்கை அந்த விநாடியே மெல்ல மெல்ல வற்றுவது போல் ஒரு பிரமையை உணர்ந்தேன்.

''பி. ஓ. ஏ. சி. விமான மூலம் கொழும்பு போய் அங்கிருந்து சென்னைபோக விரும்புவதானால் அதற்கு உடனே ஏற்பாடு செய்து தருவதாக'' விமானக் கம்பெனிக்காரர்கள் கூறினர்கள். நானோ இந்திய விமானத்திலேயே செல்ல விரும்பினேன்.

''வேறு வெளிநாட்டு விமானத்தில் போவதானால் கல்கத்தா போய்ச் சேரக்கூட உடனே ஒழுங்கு செய்யமுடியும்'' என்றும் கூறப்பட்டது.

''இல்லை! நான் சிங்கப்பூரிலேயே சில நாட்கள் தங்கிப் பின்பு செல்கிறேன். அதற்குள் ஸ்டிரைக் சரியாகிவிடும் என்று நினைக்கிறேன்'' என்றேன்.

சிங்கப்பூரில் நான் 'சவுத் ஈஸ்ட் ஏஷியா' ஓட்டலில் தங்கினேன். பக்கத்து அறையில் ஃப்ராங்பர்ட்டைச் சேர்ந்த வர்த்தகக் கம்பெனி ஒன்றின் பிரதிநிதியாகிய ஜெர்மானியன் ஒருவன் தங்கியிருந்தான். அவனோடு எனக்குப் பரிச்சயம் ஏற்பட்டது.

பழகத் தொடங்கிய சிலமணி நேரங்களுக்குள்ளேயே அவன் என்னைக்கேட்ட முதல் கேள்வி:

''உங்கள் நாட்டில் பீகார் மாநிலத்தில் தினம் ஆயிரக் கணக்கான மக்கள் உணவுப் பஞ்சத்தினால் செத்துப் போய்க் கொண்டிருக்கிறார்களாமே?''

''பஞ்சம் இருக்கலாம்! ஆனால் அந்தச் செய்தி உங்களுக்கு மிகையாகத் திரித்துச் சொல்லப்பட்டிருக்கிறது'' என்றேன்.

''நோ, நோ, ஐ யாம் டெல்லிங் திட்ருத். ஐ ஸா இட் இன் டெலிவிஷன்.'' என்றான் ஜெர்மானியன்.

''டெலிவிஷனில் வெளிநாடுகளில் எங்கள் நாட்டைப்பற்றிக் காண்பிக்கிற எல்லாமே மிகைப்படுத்தப்பட்டவை. இரவில் ரெயில்வே பிளாட்பாரத்தில் போர்த்திக்கொண்டு தூங்குகிற ஏழை மக்களையும், நடைபாதை வாசிகளையும் படம்பிடித்து 'இதோ பாருங்கள்! இந்தியாவில் பஞ்சத்தினால் மக்கள் கூட்டம் கூட்டமாகச் செத்துக் கிடக்கிறார்கள்,' என்றெல்லாம் கூடக் காட்டுகிறீர்கள். ஒரு கௌரவமான இந்தியன் என்ற முறையில் அதை நான் ஒப்புக்கொள்ள முடியாது'' என நான் கூறியதை அவன் ஒப்புக்கொள்ளவில்லை.

மறுநாள் மாலை சிங்கப்பூரில் நிரந்தரமாக நடைபெறும் 'கிரேட் வேர்ல்ட்' பொருட்காட்சியைப் பார்க்கப் போயிருந்த போது தற்செயலாக ஓர் அமெரிக்க டூரிஸ்ட்டைச் சந்தித்தேன்; அவனிடம் பேசிக்கொண்டிருந்தபோது,

''உங்கள் இந்தியாவில் மகாராஜாக்களும், பாம்பாட்டிகளும் தான் நிறைய இருக்கிறார்களாமே? பெரிய நகரங்களில் 'லிக்கர்' கூடக் கிடைக்காதாமே?'' என்றான்.

இதைக் கேட்டதும் எனக்கு வெளிநாடுகளில் உள்ள இந்தியத் தூதுவரகங்களின் மேல் தாங்கமுடியாத கோபம்தான் வந்தது. இந்தியாவைப்பற்றி நல்ல முறையில் செய்திகளைப் பரவச் செய்யாமல் தூங்கும் இந்தியத் தூதரகங்களால் வருகிற வினை இது. தாஜ்மகாலிலிருந்து தஞ்சைக் கோயில்வரை இமய மலையிலிருந்து கோடைக்கானல் வரை—கங்கைக் கரையிலிருந்து காவிரிக்கரை வரை இந்தியாவைப்பற்றி அழகிய படங்களோடு கூடிய பிரசுரங்களையும் ஃபோல்டர்களையும் விநியோகித்து உலக யாத்திரிகர்களைக் கவரத் தெரியாத நிலைக்காக வருந்தினேன். இந்தியாவிலுள்ள வெளிநாட்டுத் தூதரகங்கள் செயல்படும் விதத்தைப் பார்த்தும் வெளிநாடுகளிலுள்ள இந்தியத் தூதரகங்கள் உறங்குவதை என்னவென்று சொல்வது?

'எனது மாபெரும் தேசத்தில் கங்கை பாய்வதை டெலிவிஷனில் காட்டாதவர்கள் சாக்கடை பாய்வதை மட்டும் காட்டி ஏன் இழிவு படுத்துகிறார்கள்?'' என்று மனம் நொந்தேன்.

காளிதாசன், கம்பன், துளசிதாசர், தாகுர், பாரதி—போன்ற கவிமேதைகளும், வள்ளுவர், காந்தி, நேரு, சுபாஷ் போன்ற தேசபக்த மேதைகளும் எங்கள் பாரத பூமியினர் என்பதைக்

காட்டிலும் பாம்பாட்டிகளும், மகாராஜாக்களும் பிரபலமாகி யிருப்பதைக் கேட்டுத் தலைகுனிந்தேன் நான்.

ஆனாலும்கூட ஓர் இந்தியன் என்று சொல்லிக்கொள்ள நான் தயங்கவில்லை, தளரவில்லை. என் இதயத்தில் கங்கை வற்றுகிற வரை அது தளராது. கங்கை இன்னும் அங்கே வற்றி விடவில்லையே?

ஐந்து நாட்கள் கழிந்து விட்டன. நான் எடுத்த விடுமுறை யில் இன்னும் பத்தேநாட்கள் தான் மீதமிருக்கின்றன. பதி னோராவது நாள் காலை விடிந்தால் நான் மறுபடி பாங்காக்கில் இருக்க வேண்டும். சென்னைவரை செல்வதற்கும், சென்னையி லிருந்து திரும்புவதற்கும்தான் விமானப் பயணம் ஏற்பாடு செய்து கொண்டிருந்தேன். சென்னையிலிருந்து டில்லி, டில்லியிலிருந்து ஹரித்துவார் எல்லாம் இரயில் பயணம்தான் செய்யவேண்டும். சிக்கனத்திற்காக அல்ல; என் தாய்நாட்டு மண்ணைப் பறந்தே கடக்க விருப்பமில்லை. சென்னையிலிருந்து டில்லிவரையும் டில்லி யிலிருந்து ஹரித்துவார் வரையும் இரயிலில் சென்றால்தான் எனது தாய்நாட்டின் வாழ்க்கை வனப்புகளை, அல்லது துயரங் களை நான் அறியமுடியும். அதை இழக்க விரும்பாமல்தான் இந்திய மண்ணை அடைந்தபின் முழுவதும் இரயில் பிரயாணமே செய்ய விரும்பினேன். இரயில் பயணம் நாட்களை விழுங்கும். என் லீவிலே மீதமிருப்பவையோ பத்தே நாட்கள். 'என்ன செய்யலாம்?' என்று நான் கவலைப்பட்டுக்கொண்டிருந்தபோது இந்திய விமானக் கம்பெனியிலிருந்து ஃபோன் வந்தது. 'இன்றிரவில் ஏர் இந்தியா சர்வீஸ் மறுபடி தொடங்குகிறது. பயணத்துக்குத் தயாராயிருக்கவும்' என்றார்கள். உற்சாகமாகப் பயணத்துக்குத் தயாரானேன்.

இந்திய நேரப்படி ஒன்பது மணி நாற்பத்தைந்து நிமிடங் களுக்குச் சென்னையிலிருப்போம் என்று நினைக்க நினைக்க மகிழ்ச்சி யாயிருந்தது.

சிங்கப்பூரிலிருந்து ஏர் இந்தியா விமானம் மேலெழும்பிய போது கீழே தெரிந்த ஒளிமயமான நகரக்காட்சி மறுபடியும் என் அருமை இந்திய நகரங்களின் நினைவை உண்டாக்கியது. விமானத்தில் அருகில் அமர்ந்திருந்த ஆங்கிலப் பெண்மணி திடீ ரென்று தான் படித்துக்கொண்டிருந்த ஏதோ ஓர் ஆங்கிலச் செய்தித்தாளைக் காட்டி, ''இது உண்மையா? இந்தியாவில் மேற்கு வங்காளத்தில் 'நக்ஸல் பாரி' என்ற இடத்தைச் சீனர் கள் கைப்பற்றி ஆள்கிறார்களாமே...?'' என்று வியப்போடு வினவினாள்.

''அது உண்மையாயிருக்காது! டோண்ட் பிலீவ் ரூமர்ஸ்...'' என்று மறுமொழி கூறினேன். அதே சமயத்தில் என் மனம்

நினைத்தது. 'இந்தியாவுக்கென்றிருக்கும் தத்துவங்களை நம்பாமல் அந்நிய நாட்டுத்தத்துவங்களை வீரவணக்கம் புரியும் தீவிரவாதிகளால் என் நாட்டின் ஒற்றுமை பாதிக்கப்படுவதை என்னவென்று சொல்வது?'

சீனுவில் இந்தியத் தூதரக அதிகாரிகள் கொடுமைப் படுத்தப்பட்ட செய்தியும் அதே பத்திரிகையில் வந்திருந்தது. அதையும் அந்தப் பெண்மணி எனக்குச் சுட்டிக் காட்டினுள்.

நாட்டுக்கு விடுதலை வாங்கிக்கொடுத்த சொந்த நாட்டுத் தேசபக்தியை மறந்து எந்த நாட்டுத் தேசபக்தியையோ முதலாகச் கொண்டு இந்த நாட்டைப் பாழாக்குகிறவர்களை எண்ணி எண்ணிக் குமுறினேன்.

வேறுநாட்டுத் தத்துவங்களைப் பருகி வாழும்படியான ஈன நிலைக்குக் கீழிறங்கும்படி—எனது நாட்டில் கங்கை இன்னும் வற்றி விடவில்லையே?

விமானத்தில்—முறையாக வழங்கப்படும் 'டிஸ்எம்பர்கேஷன்' கார்டு வழங்கப்பட்டது. பாஸ்போர்ட் எண்ணைக்குறித்து சிடிசன் என்பதற்கு நேரே 'இந்தியன்' என்று ஒவ்வொரு கேபிடல் எழுத்தாக எழுதும்போது என் மெய்சிலிர்த்தது. எங்கிருந்தாலும் நான் இந்தியன் தான். இந்தியாவின் கஷ்ட நஷ்டங்களில் எனக்கும் பங்கு உண்டு. மனப்பான்மையினுலும் சிந்தனையினுலும் கூட நான் இந்தியன்.

வெளிநாட்டில் எங்காவது இருபத்தைந்து முப்பது மாடிக் கட்டிடங்களைக் கண்டால் 'இப்படி ஒரு கட்டிடம் இந்தியாவிலும் கூட எங்காவது தோன்றியிருக்கும், தோன்ற வேண்டும்' என்று நினைப்பேன். வெளிநாட்டில் அழகிய விரிவான சாலைகளைப் பார்த்தால் இப்படி அழகிய பெரிய சாலைகள் இந்தியாவில் வரவேண்டும் என்றெண்ணுவேன். வாழ்க்கைத்தரம் உயர்ந்த வெளிநாட்டு மனிதனைப் பார்த்தால் இந்தியனின் வாழ்க்கைத் தரமும் அப்படி உயர வேண்டும் என்றெண்ணுவேன்.

''லுக்கிங் டயர்ட்...ஹேவ் ஸம் டிரிங்...'' என்று ஆதரவாக வந்து கூறினுள் விமானப் பெண்.

''நோ...தாங்ஸ்...'' அவள் சிரித்துக்கொண்டே போய் விட்டாள். விமானத்தில் மெல்லிய இசை எழுந்தது. சென்னை நிலயத்தில் இறங்குவதற்கான அறிவிப்பும் இந்திய நேரமும் கூறப்பட்டன. சில விநாடிகளில் விமானம் இறங்கியது. தாய் நாட்டு மண்ணில் இறங்கும் போது தான் எத்தனை பெருமிதமாக இருக்கிறது?

கஸ்டம்ஸ் பரிசோதனைக்கு முன் 'அரைவ்ட் இண்டியா' — என்று எண்ட்ரி குறிக்கிறார்கள். கஸ்டம்ஸில் நான் வெளிநாட்டில் எந்த விமான நிலையத்திலும் பார்த்திராத முறையில் ஒரு வழிப்பறிக்காரனை விடக் கடுமையாக எல்லாவற்றையும் உதறிப் பார்த்தார்கள். இது என் பொறுமையைச் சோதித்தது.

நிலையத்திற்கு வெளியே வந்ததும் டாக்ஸி பிடித்து நகருக்குள் புறப்பட்டேன், டாக்ஸிக்காரன், "மீட்டர் வேலை செய்யாதுங்க! மொத்தமா இருபது ரூபா கொடுத்திடுங்க!" என்றான்.

கிண்டி வருவதற்குள் அவன் என்னிடம் என்னென்னவோ கேட்டுவிட்டான்.

"அருமையாவுள்ள இடங்கள்ளாம் இருக்குது சார்!..."

"... ..."

"சார் 'பர்மிட்' வச்சிருக்கீங்களா? பர்மிட் இருந்தா 'கன்னிமரா'விலேயே தங்கலாம்..."

டாக்ஸி தேனாம்பேட்டையை நெருங்கியதும் தெருவில் ஒரே கூப்பாடாயிருந்தது. ஆட்கள் கம்பும் கடப்பாரைகளுமாக ஓடிக் கொண்டிருந்தார்கள். பக்கத்தில் குடிசைகள் சில எரிந்து கொண்டிருந்தன.

"என்னப்பா இது?..."

"இதுங்களா? அதான் ஊர் பூரா ஒரே காபராவாக் கிடக்குதுங்களே?"

"என்ன காபரா?"

"எந்த நாசமாப் போறவனுவ்ளோ ஒவ்வொரு ஸ்லம்மா நெருப்பு வச்சுட்டு ஓடிடறான். யாரு என்னன்னே புரியலே? ஊர் பூராத் தெருவிலே திண்டாடறாங்க..."

என் மனம் நினைத்தது:

'இப்படிப்பட்ட குடிசைகளில் எல்லாம் மங்கல விளக்குப் பிரகாசமாக எரிய வேண்டுமென்றல்லவா எங்கள் காந்தி இந்த நாட்டுக்கு விடுதலையை வேண்டினார்!'

என் மனத்தில் ஒரு வாரத்துக்கு முன் பாங்காக்கில் அந்த யூதன் கேட்ட கேள்வி நினைவு வந்தது.

"யார் கண்டார்கள்! ஒருவேளை உங்கள் கங்கை இப்போது வற்றினாலும் வற்றியிருக்கலாம்..."

''ஒரு போதும் இராது: கங்கையாவது வற்றுவதாவது ?''

ஆனல்...?

'கங்கை பெருகியுள்ளதா? வற்றி விட்டதா என்று பார்த்துத் தான் தெரிந்து கொள்ள வேண்டும் போலிருக்கிறது...'

''எங்கே சார்... போகணும்...?''

டிரைவரின் கேள்விக்குப் பதிலாக ஒரு சாதாரண இந்திய முறையில் நடத்தப்படும் ஹோட்டலின் பெயரைச் சொன்னேன். ஏனென்ருல் சென்னையில் அதிக நேரம் தங்க வேண்டிய அவசியம் எனக்கில்லை. மறுநாள் காலையில் நான் டில்லி புறப்பட வேண்டும். டில்லி போய் ஹரித்துவாரம் சென்று மறுபடி சென்னை திரும்பி விமானமேற ஏற்றபடி என் நாட்கள் சரியாக இருந்தன. டாக்ஸி டிரைவர் ஹோட்டலில் இறக்கி விட்டுஎண்ணி ரூபாய் இருபது வாங்கிக் கொண்டு போய்விட்டான். அந்த ஹோட்டல் இருந்த இடத்திற்கு விமான நிலையத்திலிருந்து வர மீட்டர்படி எட்டு ரூபாய் கூட ஆகாது என்பதை நான் உணர்ந்தேன்.

அந்த அகாலத்தில் ஹோட்டல் ரிஸப்ஷன் அழுது வடிந்தது. அதிக நேரம் கூச்சலிட்டபின் படுக்கையிலிருந்து எழுந்த கோலத்தில் ஆஃப் டிராயருடன் மாரில் புஸு புஸுவென்று ரோமம் சிலிர்த்த ஆள் ஒருவன் வந்து, ''என்ன சார்! ரூம் வேணுமா? ரூம்ஸிங்கிளா இல்லே! ...'காட்டேஜ்' இருக்கு ஒரு நாளைக்கு நாற்பத்தைஞ்சு ரூவா ஆகும்! கொடுக்கவா?''

''ரூபாயைப் பற்றி என்ன? ரூம் கொடு...''

அவன் அழைத்துக் கொண்டு போய் விட்ட இடம் கார் ஷெட் போலிருந்த ஒரு டபுள் பெட்ரூம். பாத்ரூம் உள்ளேயே இருந்தது. ஒரே நாற்றம். சுவரில் பல கறைகள். ஓர் இரவு தானே என்று பொறுத்துக் கொள்ள எண்ணினேன்.

காலையில் காபி கொண்டு வந்து கொடுத்த சர்வர் பையனிடம் நாலணு டிப்ஸும் கொடுத்து ஒரு நியூஸ் பேப்பர் வாங்கி வரச் சொன்ன போது, ''சாரே! உங்களிடம் ஒரு விஷயம் பறையணும். இந்த ரூமுக்கு மானேஜர் என்ன சார்ஜ் பண்ணிஞன்? ஞான் அறியலாமா?'' என்று ஆவலோடு கேட்டான்.

நான் பதில் கூறியதும் அவன் முகத்தில் வியப்புத் தெரிந்தது.

''இந்த மானேஜர் ஒரு அக்கிரமக்காரன்: டபுள் ரூமுக்கு இங்கே வழக்குமான சார்ஜு பந்தரண்டரை 'ரூபாதான்...நீங்க வெளியூரான்னு நாற்பத்தஞ்சு கொள்ளேயடிச்சிருக்கான்...''

எனக்குக் கோபம் வந்தது. இந்திய டாக்ஸி டிரைவருக்கு, இந்திய ஹோட்டல் முதலாளிக்கு, இந்திய வியாபாரிக்கு, ஏன் சராசரி ஒவ்வொரு இந்தியனுக்கும் சக இந்தியனைச் சுரண்டி வாழும் மனப்பான்மை இருப்பதை உணர்ந்தேன். தான் சொகு சாக வாழ அடுத்தவனைச் சுரண்டும். தேசத்திற்கு என்று முன்னேற்றம் வரப்போகிறது என்பதை என் சிந்தனையால் கணிக்க முடியவில்லை. ஏ! இந்தியாவே! உன் பழம்பெருமை வாய்ந்த கங்கையும் அதன் சத்திய தர்மக் கரைகளும் வற்றிப் போய் விட்டனவா?

செய்தித் தாள் வந்தது. விஜயவாடாவுக்கு அருகே ஆந்திர மாணவர்கள் ஏதோ பெருங் கிளர்ச்சி நடத்துவதால் ரயில்கள் வழிமறிக்கப் படுகின்றனவாம். அதனுல் நான்கு நாட்களுக்குச் சென்னை செண்டிரலிலிருந்து டில்லி, கல்கத்தா ரயில்கள் புறப் படாது என்றிருந்தது. இப்போது எனது நிலை தர்மசங்கடமாகி விட்டது. என்ன செய்வதென்று யோசித்தேன். திரும்புகாலை யில் டில்லியிலிருந்து விமானத்தில் திரும்பினுல்கூடத் திட்டம் சரி யாக வருமா என்று தயக்கம் தோன்றியது.

ஆனுல் மனம் என்னவோ சரியாக இல்லை. செய்தித் தாளைக் கூர்ந்து கவனித்துப் படித்த போது பல விவரங்கள் தெரிய வந்தன. சுதந்திரத்திற்கு முன்பும் சுதந்திரம் கிடைத்த உடனே யும், ஒரு இந்தியன் அவன் வங்காளியாயிருந்தாலும், மலையாளி யாயிருந்தாலும், பீஹாரியாயிருந்தாலும், தமிழனுயிருந்தாலும், ஆந்திரனுயிருந்தாலும்—தான் முதலில் இந்தியன் என்பதை மனப் பூர்வமாக நம்பினுன், உணர்ந்திருந்தான். இன்று அந்த மனத் திடம் ஒவ்வொரு மாநிலத்திலும் நலிந்து விட்டதாகத் தோன்றி யது. கல்கத்தாவிலுள்ள 'கேராவ்' வேலை நிறுத்தங்கள் திடுக் கிட வைப்பனவாயிருந்தன. பம்பாயின் 'சிவசேனை' பயமுறுத்தி யது. பக்கம், பக்கமாகக் கதவடைப்பு, வேலை நிறுத்தம், பீகார்ப் பஞ்சத்துக்கு உதவ வேண்டுகிற பிரதம மந்திரியின் அறிக்கை எல்லாவற்றையும் பார்க்கப் பார்க்க எனது இந்தியாவை நினைத் துக் கோவென்று கதறி அழ வேண்டும் போலிருந்தது.

சுதந்திரப் போராட்டக் காலத்தில் இமயம் முதல் குமரி வரை ஒற்றுமைப்பட்டு 'வெள்ளையனே வெளியேறு' என்று குரல் கொடுத்ததெல்லாம் இத்தனை ஆண்டுகள் கழித்து இப்படிப் படிப் படியாக மொழியின் பெயரால், பிரதேசத்தின் பெயரால், ஜாதி யின் பெயரால் வேறுபடுவதற்காகத்தானு? இன்று வேறு படுவ தற்காகவா அன்று ஒன்றுபட்டோம்?

ஏ! இந்தியாவே! உன் கங்கை ஒரு வேளை வற்றி விட்டதோ? வறண்டு விட்டதோ?

நான்காம் நாள் காலை இரயில்கள் புறப்படுமென்று தெரிந்தது. பன்னிரண்டு மணிக்கு மேல் கிராண்ட்ரங்கில் டில்லி புறப்பட வேண்டும். அன்று வெள்ளிக்கிழமையாதலால் 'காந்தி மண்டபத்துக்குப்' போய்வர எண்ணினேன். நான் தங்கியிருந்த ஹோட்டல் வாசலில் ஒரு டாக்ஸி பிடித்து, "காந்தி மண்டபத்துக்கு விடு..." என்றதும் "அது எங்கே இருக்குங்க..." என்று கேட்டான் அவன். எனக்குத் தூக்கிவாரிப் போட்டது.

"இந்தியாவில் இவ்வளவு வேகமாகக் காந்தியை மறந்து விட்டார்களா?" என்றேன்.

"ஓ! கிண்டிலே கீதே அத்தைச் சொல்றியா...?" என்று சிரித்தான், டாக்ஸி டிரைவர்.

என் இதயத்தில் கங்கை வறண்டது. குருதி வடிந்தது.

இந்தியாவில் உள்ள ஒவ்வொரு மாநிலமும் இந்தப் பதினைந்து ஆண்டுகளில் தன்மொழி, தன்தேவை, தன்பிரச்னைகள், என்று மட்டுமே கவனிக்குமளவிற்கு மனப்பான்மையால் சுருங்கியிருப்பதைப் பத்திரிகைச் செய்திகள் எனக்கு உணர்த்தின. தேவையானால் புதிய மாநிலங்களைப் பிரிப்பதற்குப் போராடும் மனநிலை கூடச் சில பகுதிகளில் இருப்பதாகத் தெரிந்தது.

'ஜனத்தொகையைக் குறையுங்கள்! 'ப்ளான் யுவர் ஃபேமிலி, என்ற குடும்பக் கட்டுப்பாடு விளம்பரங்கள் எங்கும் தென்பட்டன.

சென்னையில் இருந்தபோது நான் ஒரு தமிழ் சினிமாப்படம் பார்த்தேன். அதில் மதுரையைச் சேர்ந்த கதாநாயகன் கும்பகோணத்தைச் சேர்ந்த மாலதியைத் திருச்சி கல்லூரியில் படிக்கும் போது காதலித்து சேலம் ஏர்காட்டுக்கு எக்ஸ்கர்ஷன் போகிறபோது ட்விஸ்ட், கோ, கோ, முதலிய நடனங்களை ஆடிக் கொண்டே மலையேறுவதாக வருவதற்குள் இடைவேளை வந்துவிட்டது. அதற்குமேல் நானும் எழுந்து வந்துவிட்டேன். ஒரு வேளை இடைநேரத்திற்குப் பின் இன்னும் என்னென்ன வருமோ? என் தேசத்துப் படங்களில் என்னுடைய மண்ணின் பழக்க வழக்கங்களோ, நடையுடைபாவனைகளோ இல்லை என்பதற்காக நான் வெட்கப்படத்தானே வேண்டும்? மறுபடியும் அன்று பாங்காக்கில் அந்த யூதன் கூறிய வாக்கியம் என் செவிகளில் ஒலித்தது.

"யார் கண்டார்கள்? உங்கள் கங்கை ஒருவேளை இப்போது வற்றிப்போனாலும் போயிருக்கலாம்".

இரயிலில் முதல் வகுப்புப் பெட்டியில் என்னோடு ஒரு பார்லிமெண்ட் உறுப்பினர் பயணம் செய்தார்.

ஓங்கோலில் டிபன் வரவழைத்துச் சாப்பிடும்போது இருவரும் மெல்ல அறிமுகமானோம். நான் பாங்காக்கிலிருக்கிறேன் என்று தெரிவித்ததும் அவர் சிறிது நேரம் பிரியமாக உரையாடினர்.

பாங்காக்கில் உள்ள நைட் கிளப்புகளைப் பற்றி ஆர்வமாக விசாரித்தார். 'அமெரிக்காவில் 'டாப்லெஸ்' கூடாது என்கிறார்களாமே?' என்று வருத்தப்பட்டார்.

''இந்தியாவைப் பற்றி ஏதாவது சொல்லுங்கள். நான் மிகவும் ஆவலாயிருக்கிறேன்...'' என்றேன்.

''இந்தியாவைப் பற்றியா? இந்தியாவிலே பேசறதுக்கு ஒரு மண்ணுமில்லே! ஒவ்வொரு நாடா உணவுக்கு கப்பரை ஏந்திக்கிட்டிருக்கோம்...'' என்றார் அவர்.

எங்கள் இரண்டு பேரைத் தவிர எதிர்த்த வரிசையில் ஒரு கர்ப்பிணி தன்னுடைய பத்து வயதுச் சிறுவனுடன் அமர்ந்திருந்தாள். அடுத்து கௌபாய் சூட்டில் ஓர் இளைஞன். அவன் கையில் ஒரு ஃபிலிம்பேர் பத்திரிகை. அதைச் சுவாரஸ்யமாகப் படித்துக்கொண்டிருந்தான் அவன். படிக்காத நேரங்களில் கையோடு கொண்டு வந்திருந்த டிரான்ஸிஸ்டரை மெதுவாகத் திருகி இசையை இரசித்தான் அவன்.

கர்ப்பிணியோடு பேச்சுக் கொடுத்ததில் அவள் நாக்பூர் போக வேண்டுமென்று தெரிந்தது. மகாராஷ்டிரப் புடவைக் கட்டுக் கட்டியிருந்தாள். ஆங்கிலம் அவளுக்குச் சரளமாகப் பேச வந்தது.

கௌபாய் சூட் பையன்—ஏதோ வெளிநாட்டு ஸ்காலர்ஷிப் பிற்காக டில்லியில் ஒரு இண்டர்வ்யூவுக்குப் போவதாகக் குறிப்பிட்டான். சென்னையில் ஏதாவதொரு பணக்காரக் குடும்பத்தைச் சேர்ந்தவனாயிருக்க வேண்டுமென்பதை அவன் தோற்றம் சொல்லியது.

விஜயவாடா வருவதற்குள் அவன் என்னிடம் ஒரே ஒருமுறை தான் ஒரு கேள்வி கேட்டான்.

அது வருமாறு:

''பாங்காக்லே டெரிலீன் ரொம்ப சீப்பா கிடைக்குமில்லே...?'' என்பது தான் அந்தக் கேள்வி.

விஜயவாடா வந்ததும் மற்றோர் அதிர்ச்சி காத்திருந்தது. விஜயவாடா ஸ்டேஷனில் கலவரம் வலுத்திருந்தது. ஸ்டேஷனில் ஒரே சூன்யம். 'ரெஸ்டாரெண்ட்' மூடிக்கிடந்தது. கடைகள் எதுவும் இல்லை. பிளாட்பாரத்தில் சோடாபாட்டில்கள் உடைந்து

கிடந்தன. இரயில்கள் மேலும் போவது உறுதியில்லை என்ற நிலையை அறிந்தோம். 'கார்டு' ஒவ்வொரு கம்பார்ட்மெண்டாக வந்து கதவுகளையும் ஜன்னல்களையும் ஜாக்கிரதையாக மூடிக் கொண்டு உள்ளே இருக்குமாறு கூறிவிட்டுப் போய் விட்டார்.

பார்லிமெண்ட் உறுப்பினர், கார்டைத் தன்னைக் கூட்டி ஸ்டேஷனிலிருந்து உள்ளூர் ஆந்திர பார்லிமெண்ட் உறுப்பினர் ஒருவருக்குப் ஃபோன் செய்து வரவழைத்து அவரோடு காரில் ஊருக்குள் போய் விட்டார். கர்ப்பிணியின் முகத்தில் பீதி தெரிந்தது. கெளபாய் சூட் பையன், ''அடாடா! நாளன்றைக்கு இண்டர்வ்யூ வீணுகி விடுமே?'' என்று அலுத்துக் கொண்டான்.

விஜயவாடா ஸ்டேஷனில் தொடர்ந்து நடந்த கலகங்களின் சின்னமாக வீசி எறியப்பட்ட கற்கள், பாதி எரிந்த ரயில் போகிகள், எல்லாம் தென்பட்டன. ஸ்டேஷனில் சரியாக விளக்குள் எரியவில்லை. பல இடங்களில் விளக்குகள் கல்லால் அடித்து நொறுக்கப்பட்டிருந்தன. நிலைமை கவலைக்கிடமாக இருந்தது. கர்ப்பிணியின் பையன், 'பசிக்கிறது' என்ருன். அவள் பையனைக் கோபித்துக் கொண்டாள். கெளபாய் சூட் பையனிடம் கொஞ்சம் பழங்களும், பிஸ்கட்டும் இருந்தன. அங்கேயே வைத்துச் சாப்பிடக் கூசியவனுக அவன் அதை எடுத்துக் கொண்டு 'காரிடார்' பக்கம் போய்விட்டான்.

பிறர் பசித்துக் கிடக்கும்போது தனியே தின்பதற்கு எடுத்துக்கொண்டு ஓடும் அந்த மனப்பான்மை என்னைத் துணுக்குறச் செய்தது. என்னிடமோ, அந்தக் கர்ப்பிணிப் பெண்ணிடமோ சாப்பிட ஒன்றுமில்லை.

வெளிநாடுகளில் சகபிரயாணி புகைபிடித்தால் கூட, 'ஸிகரெட்' என்று அருகிலிருப்பவரையும் வேண்டிவிட்டுப் புகைக்கத் தொடங்கும் பழக்கத்தைக் கண்டிருக்கிறேன். இந்தியாவிலோ அருகிலிருப்பவர்களுக்குக் கொடுக்கத் தயங்கித் தனியே தின்பதற்கு எடுத்துக்கொண்டு ஒடுகிறவர்களைக் காண்கிறேன். இந்த நாட்டிலா கங்கை ஓடுகிறது? என்று மனம் கொதித்தது. கீழே இறங்கிப் போய், 'உணவுக்கு ஏதாவது வழி செய்ய முடியுமா? எனது கம்பார்ட்மெண்டில் ஒரு கர்ப்பிணியும் அவள் பையனும், நானும் பட்டினி' என்று கார்டிடம் கேட்டேன்.

''இப்போதுள்ள நிலையில் எதுவும் முடியாது'' என்று கைவிரித்து விட்டார் அவர்.

''நகருக்குள் போய் வாங்கவும் முயலாதீர்கள். நிலைமை ஆபத்தானதாக இருக்கிறது'' என்று என்னை எச்சரிக்கவும் செய்தார் கார்டு. துணிந்து நானுக நகருக்குள் போகலாம்

என்றாலும் ஸ்டேஷனைச் சுற்றி ஒரே இருட்டு. எதுவும் தெரியவில்லை. அந்த நிலையில் போகவும் முடியாது. சோர்வோடு வண்டியில் வந்து உட்கார்ந்தேன். 'கௌபாய் சூட்' மேல் பெர்த்தில் படுக்கை விரித்துக் கொண்டிருந்தான். கர்ப்பிணி பயங்கலந்த குரலில் ஆங்கிலத்தில் 'உணவுக்கு வழியுண்டா?' என்று கேட்டாள்.

''ஒன்றும் சரியாயில்லை. எதுவும் கிடைக்காது போலிருக்கிறது! ஊருக்குள்ளும் போக வழியில்லை...'' என்றேன்.

''நாக்பூரில் இந்தப் பையனின் அப்பா ஒரே கவலையாயிருப்பார். தகவலும் தெரிவிக்க முடியாது...''

''கவலைப்படாதீர்கள்! எல்லாம் சரியாகிவிடும்...விடியட்டும்! பார்க்கலாம்!''

விடிந்தது! ஆனால் எங்களுக்குத்தான் ஒரு வழியும் விடியவில்லை.

கார்டிடம் கேட்லாம் என்றால் கார்டையே காணவில்லை. இரயிலில் பல போகிகளில் ஆட்களே இல்லை. இறங்கிப் போய் விட்டார்கள் போலிருக்கிறது.

என் பசி, என் எதிரே இருந்த கர்ப்பிணியின் பசி, குழந்தையின் பசி, எல்லாமாகச் சேர்ந்து என்னைக் கவலைப்படச் செய்தன. எனது தாய் நாட்டிலா இப்படி நிகழ்ச்சிகள்? அந்த யூதன் அன்று கூறியது மீண்டும் நினைவுக்கு வந்தது. ''உனது தேசத்தில் இப்போது கங்கை வற்றினாலும் வற்றியிருக்கலாம்...''

ஆம்! கங்கை வற்றித்தான் போயிருக்க வேண்டும்.

நான் சோர்ந்து உட்கார்ந்துவிட்டேன். கர்ப்பிணி சுருண்டு படுத்து விட்டாள். அவள் பையனும் தூங்கிவிட்டான்.

கௌபாய் சோப் டவல் சகிதம் பாத்ரூமுக்குள் நுழைந்தான்.

அடுத்த இரவும் விடிந்துவிட்டது. நான் இரயிலிலிருந்து இறங்கி நடக்கவும் சக்தியின்றியிருந்தேன். கர்ப்பிணியின் பையன் பெரிதாக அழுது கொண்டிருந்தான். அவளுடைய கண்களும் பஞ்சடையத் தொடங்கியிருந்தன.

'டில்லிக்கும் ஹரித்துவாருக்கும் போகும் ஆசை இப்போது எனக்கு இல்லை. எப்படியாவது அந்தக் கர்ப்பிணிக்கு உணவு வாங்கிக் கொடுக்க வேண்டும். அந்த ஆசை நிறைவேறினாலே போதும்.'

நடுப்பகலில் சில ஆட்கள் ஒவ்வொரு கம்பார்ட்மெண்டாக வந்து, ''இரயில் இன்னும் இரண்டு நாட்களுக்குப் புறப்படாது! சென்னைக்குத் திரும்பப்போகிறவர்கள் யாராவது இருந்தால் தலைக்கு ஐம்பது ரூபாய் கொடுத்து லாரியில் போகலாம்...'' என்றார்கள். கெளபாய் சூட் உடனே புறப்பட்டு விட்டான். 'நீங்கள் வரவில்லையா?' என்று என்னைக் கேட்டான். நான் கர்ப்பிணியின் முகத்தைப் பார்த்தேன்.

அவள் பீதியோடிருந்தாள். 'கெளபாய்' ஐம்பது ரூபாய் கொடுத்து லாரிப் பயணம் புறப்பட்டுப் போய்விட்டான்.

இரயிலில் விளக்குகள் எரியவில்லை. பாத்ரூமில் தண்ணீர் வருவது நின்றது.

மூன்றாவது நாளும் விடிந்து விட்டது.

காலையில் யாரோ சமூக சேவகர்கள் உணவுப் பொட்டலம் கொண்டு வந்து வழங்கினார்கள். ஒரே கூட்டம். கர்ப்பிணி நைப்பாசையோடு கீழே பிளாட்பாரத்தில் இறங்கி நின்றாள்.

''கூட்டத்தில் நீங்கள் போக வேண்டாம்! நான் வாங்கி வருகிறேன்,'' என்று விரைந்தேன். மூன்று நாட்களாகப் பசித்த கூட்டம் முண்டியடித்துக் கொண்டு நின்றது. சிலர் உணவுப் பொட்டலங்களைக் கொடுப்பவர் வழங்கு முன் தாமாகவே புகுந்து சூறையாடினர். நாகரிகமடைந்த நாடுகளில் இப்படி வேளைகளில்கூட 'க்யூ'வில் நிற்பார்கள். இங்கே ஏது அந்த நல்ல வழக்கம்?

இடி மிதி பட்டது தான் மிச்சம். என்னால் உணவுப் பொட்டலம் வாங்க முடியவில்லை. என் நெஞ்சு வறண்டது. என் இதயத்திலிருந்த கங்கை ஏற்கெனவே வறண்டிருந்தது.

நான் வெறுங்கையோடு தலைகுனிந்தபடியே அந்தக் கர்ப்பிணிக்கு முன் போய் நின்றேன். அப்போது அந்தப் பாதையாகத் தலைக்கு மேல் தலையை விடப் பெரிய முண்டாசு கட்டிய ஒரு முரட்டுத் தெலுங்கர் தாம் சிரமப்பட்டு வாங்கிய உணவுப் பொட்டலத்துடன் தள்ளாடித் தள்ளாடி வந்து கொண்டிருந்தார்.

அவர் கர்ப்பிணியைப் பார்த்ததும் தயங்கி நின்றார். தெலுங்கில் ஏதோ கேட்டார். எங்களுக்குப் பதில் சொல்லத் தெரியவில்லை. பேசாமல் தன் கையிலிருந்த உணவுப் பொட்டலத்தை அக்கர்ப்பிணியை நோக்கி நீட்டினார். அவள் வாங்கிக் கொள்ள மறுத்தாள், பையனிடம் கொடுத்துவிட்டு அந்த முரட்டுத் தெலுங்கர் மறுபடி உணவு கொடுக்கும் இடத்தை நோக்கி நடந்தார்.

''பாவம்! யாரோ பரோபகாரி! கொடுத்து விட்டுப் போகிறார். சாப்பிடுங்கள் அம்மா! பையனுக்கும் கொடுங்கள்! நான் போய்த் தண்ணீர் கொண்டு வருகிறேன்...'' என்று புறப்பட்டேன்.

தண்ணீர் பிடித்துக் கொடுத்த பின், ''நீங்களும் கொஞ்சம்...'' என்று அந்தப் பொட்டலத்தைப் பங்கிடத் தொடங்கிய அவளை மறுத்து, ''நான் போய் மறுபடி முயன்று வாங்கிக் கொள்ள முடியும். இதைப் பங்கிட்டால் ஒருவருக்கும் காணாது...'' என்று கூறிவிட்டுப் பொட்டலம் வழங்கும் இடத்தை நெருங்கினேன்.

அங்கே அசாதாரணமான அமைதி நிலவியது. இரண்டு போலீஸ்காரர்கள் நின்று கொண்டிருந்தார்கள். கூட்டத்தை விலக்கிக் கொண்டு புகமுயன்றேன். ''யாரோ இரண்டாவது தடவை உணவுப் பொட்டலம் வாங்க முயன்றானாம். முதல் முறையே உணவு கிடைக்காத கோபக்காரன் ஒருவன் பக்கத்தி லிருந்த ஸ்டேஷனின் மணியடிக்கும் இரும்புத் தண்டினால் இரண்டாம் தடவை வாங்க வந்தவனின் மண்டையைப் பிளந்து விட்டான். அங்கே போகாதீர்கள்! வீண் வம்பு'' என்றார் ஒருவர்.

எட்டிப் பார்த்தேன்.

ஆம்! அந்தப் பெரிய தலைப்பாகையோடு கூடிய முரட்டுத் தெலுங்கர்தான் இரத்தம் ஒழுக விழுந்து கிடந்தார். தலைப் பாகை விலகிச் சிறிது தொலைவு தள்ளிக் கிடந்தது. மண்டை யிலிருந்து குருதி பெருகித் தரையை நனைத்துக் கொண்டிருந்தது. என் உடல் நடுங்கியது. கண்கள் நீரைச் சிந்தின.

''எனது தேசத்தில் கங்கை இன்னும் வற்றிவிட வில்லை! அதை நான் ஹரித்துவாரம் வரை போய்த் தெரிந்து கொள்ள வேண்டியது அநாவசியம். இதோ பெருகி வருகிறதே இந்த ஏழை விவசாயியின் குருதி; இதுவே கங்கைதான்'' என்று எனக்குள் முணு முணுத்துக் கொண்டேன் நான்.

நான்காவது நாள் விடிந்தபோது என்னுடைய விடுமுறை நாட்கள் மிக மிகக் குறைந்து விட்டன. நான் பாங்காக் திரும்ப மட்டுமே போதுமான நாட்கள் இருந்தன. எனவே நான் விஜயவாடாவிலேயே இறங்கிப் பயணத்தை ரத்துச் செய்து சென்னை திரும்பிவிட்டேன்; கார்டிடம் அந்தக் கர்ப் பிணியையும் குழந்தையையும் ஒப்படைத்துவிட்டுத் தெற்கே புறப்பட்ட முதல் இரயிலில் நான் சென்னை வந்தேன்.

மறுநாள் பகலில் நான் மறுபடி பாங்காக் போவதற்காக விமானமேறிய போது, தற்செயலாக அன்று என்னிடம் கேட்கப் பட்ட அந்த யூதனின் கேள்வி நினைவு வந்தது.

'யார் கண்டார்கள்! உனது தேசத்தில் கங்கை இப்போது வற்றியிருக்கலாம் அல்லவா?'

'இல்லவே இல்லை! கங்கை என்பது ஒவ்வொரு இந்தியனின் இரத்தத்திலும் ஓடுகிற கருணையாக இருக்கும் வரை அது வற்றவே வற்ருது! கருணை பெருகாத இந்தியனை நான் இந்தியனுகவே நினைக்கமாட்டேன்' என்று என் மனம் எண்ணியது. விமானம் மேலே பறந்தது. நாளை இரவு நான் மீண்டும் 'பாங் காக்'கில் இருப்பேன். போய் வருகிறேன். வணக்கம்.

—o—

29

# மடவார்ப் பொறை

எனக்கும் இந்த உலகத்துக்கும் ஐம்பத்துமூன்று வருஷத் தொடர்பு உண்டு. இரண்டு உலக மகாயுத்தங்களும் எனக்குப் பின் தோன்றிப் பிரபலமடைந்தவை.

"வந்தே மாதரம் என்றுயிர் போம்வரை
வாழ்த்துவோம்—முடிதாழ்த்துவோம்
எந்த மாருயி ரன்னையைப் போற்றுதல்
ஈனமோ ?—அவ மானமோ ?"

என்று சுதந்திர முழக்கமிட்ட உண்மைக் காங்கிரசையும், உண்மைத் தலைவர்களையும், சென்னையில் காந்திஜி தொடங்கிய ஒத்துழையாமை இயக்கப் பிரசாரத்தையும், ஒத்துழையா மையை விடுதலைக்குரிய பெரும் போராக நடத்திய ராஜாஜி யின் சூறுவளி இயக்கத்தையும் நான் நேரடியாகக் கண்டவன்.

காங்கிரஸின் உயிர் மூச்சான விடுதலை கிடைத்துவிட்ட பிறகு அதற்குப் புத்துயிர் ஊட்டத் தலைவர்கள் நிலவரம்பு, 'சோஷலிஸம்' என்றெல்லாம் தடுமாறிக் கொண்டிருப்பதையும் கண்டு இன்னும் குருடாகாமல் இருப்பவன். ஒரு கட்சியை எப் பொழுதும் சக்தி வாய்ந்ததாக வைத்துக்கொண்டிருக்கப் பெரும் பாலானவர்களின் ஆசைகளை, கனவுகளை அதற்கு ஆதாரமாகக் கொடுத்துக் கொண்டிருக்க வேண்டும். பெரும் தலைவர்கள்கூட இந்த உணவுக்கொள்முதலில் மட்டரக வியாபாரிகளாக நடந்து கொண்டு வருவதையும் பார்த்தபடிதான் இருக்கிறேன்.

"எத்தனை கோடி இன்பங்கள் வைத்தாய் இறைவா !"

உணர்ச்சிக் கவிஞன் கண்ட உலகையும், அதிலே நிறைந்த கோடானு கோடி இன்பங்களையும் எனக்குக் காட்டாமல் விட்டது

இந்தக் காங்கிரஸ்தான். இதை எதிர்க்கட்சிக்காரன் குறைகூறும் விதத்தில் எடுத்துக்கொள்ள வேண்டாம். ஒரே குடும்பத்தில் புதுத் தலைமுறை ஒன்று கிளைத்துப் படர்ந்துவிட்ட பிறகு, இதன் நல்வாழ்வுக்காகத் தியாகம் செய்த முன் தலைமுறையின் முணு முணுப்பு என்று தான் எடுத்துக்கொள்ள வேண்டும்.

நான் ஐந்தாவது பாரம் படித்துக் கொண்டிருக்கும்பொழுதே காங்கிரஸ் என்னை வலைப்போட்டுப் பிடித்துவிட்டது. சத்திய மூர்த்தியின் கனல் உரையும் ராஜாஜியின்தீர்க்க தரிசன வாசக மும், சீனிவாச சாஸ்திரியாரின் 'மாணவர்கள் கல்விக்கூடங் களைத் துறப்பார்களா?' என்ற கேள்வியும், சர்தார் படேல், ஜம்னுலால் பஜாஜ், மோதிலால் நேரு, சித்தரஞ்சன் தாஸ் ஆகி யோரின் சுதந்திர முழக்கமும் என்னை ஒரு விடுதலை வீரனுக்கி விட்டன. 'உங்களுக்குச் சந்தேகம் எதற்கு சாஸ்திரியாரே? இதோ கல்விக் கூடத்தைத் துறந்து விட்டேன்!' என்று நான் கூறியபோது, தலைவர்களே அயர்ந்து விட்டார்கள். அதற்குக் காரணம் உண்டு. அரசியல் சூழ்நிலை உருவாகிய ஆரம்பக் காலம் அது. சுதந்திரக் கனல் உள்ளத்தில் எழுந்தாலும் அதை வெளி யிட்டு வெள்ளைக்காரனை எதிர்க்கப் பெரும்பாலான மக்கள் தயங் கினர்; பதினைந்து வயதுப் பையன் அந்த நிலையில் நாட்டு விடுதலைப் போரில் குதிப்பதென்பது சாமான்யமா?

* * *

ஒத்துழையாமை இயக்கத்துக்குத் தமிழ் நாட்டில் தொண்டர் களைச் சேர்ப்பதற்கு நான் ஒரு விளம்பரப் பலகையாக இருந் தேன். பால் வடியும் என் முகத்தைக் காட்டி, 'பாலகன் குதித்து விட்டான் பாரத விடுதலைப்போரில், பார்த்துக் கொண்டிருக்கப் போகிறீர்களா இன்னும்?' என்று தலைவர்கள் விடுத்த வேண்டு கோளுக்குப் பலன் இருந்தது. சுதந்திர வேள்வியில் வீறுகொண்டு குதித்தவர் ஆயிரமாயிரவர்.

இத்தனை சின்ன வயதில் பூமாலையும் புகழுரையும் கிடைப் பது என்றால் எத்தனை பெரிய விஷயம்? என் உள்ளமெல்லாம் ஒரே மகிழ்ச்சி.

என் அப்பா ஒரு தாசில்தார். வெள்ளை அரசாங்கத்தின் பரம பக்தர். அவர்தான் தலையில் அடித்துக்கொண்டு என்னையும் தடிகொண்டு தாக்கினர். மகனுடைய தேச பக்தியால் தந்தை யின் ராஜ விசுவாசம் சந்தேகிக்கப்படுமோ என்ற பயம். அதனால் என்னை அறைக்குள் அடைத்து வைத்தார். சிறு கதவுதானு கொழுந்துவிட்டு எரிந்த என் சுதந்திரக் கனலை அணைத்து மறைத்து விட முடியும்? குடும்பத்தை விட்டு நிரந்தரமாகப் பிரிந்து, எங் கள் இயக்க வானத்திற்குப் பறந்து போய்விட்டேன்.

அப்பொழுதெல்லாம் காங்கிரஸை யாரும் பொழுதுபோக்கு மண்டபமாக நினைத்தது கிடையாது. 'பெர்மிட்' லாபங்களுக்காகக் கதர்க்குல்லாயை மாட்டிக்கொண்ட கள்ளச் சந்தைக்காரர்கள் இல்லை. சர்வபரித் தியாகம் செய்யத் துணிந்த சத்திய சீலர்களே அங்கு இருந்தனர். அவர்கள் சிந்தை 'நாட்டு விடுதலை' என்ற ஒன்றைத் தவிர வேறெதும் கொள்ளவில்லை. லௌகீக வாழ்க்கையின் சபலம் சுதந்திரக் கனலில் எரிந்து ஸ்புடமாகிய மனிதர்கள்தான் காங்கிரஸ் தொண்டர்கள். நானும் அவர்களிலே ஒருவன்.

கொடி பிடித்தோம். கோஷம் எழுப்பினோம்.

**'தொண்டு செய்யும் அடிமை—உனக்குச் சுதந்திர நினைவோடா? பண்டு கண்டதுண்டோ? அதற்குப் பாத்திரமாவாயோ?'**

என்று வெள்ளைக்காரன் கேட்டான். கேட்ட தோடா நின்றான்? தடியால் அடித்தான்; தாங்கிக்கொண்டோம். ஆனால் பின் வாங்கினோமில்லை. உப்பு எடுத்தோம்! சிறைபட்டோம். வெள்ளைச் சிங்கத்ததைத் துரத்த 'அடிமை நாய்'களை வில்லும் வேலும் வாளுமாகத் தயாரித்தோம். அத்தனையும் அஹிம்சை உலையில் வார்க்கப்பட்டவை.

இதைத் தவிர மனித வாழ்க்கையின் அனுபவ ஏடுகள் எதையும் நாங்கள் புரட்டிப் பார்த்ததில்லை. ஆனால் வாலிபம் என்னிடம் ஏடு புரட்டிப் பார்த்தது. பருவ உணர்ச்சிகளுக்குத் தீனி போடாத கல் நெஞ்சனாக நான் இருந்தாலும் எங்கள் தலைவர் சத்தியமூர்த்திக்கு என்னைப் பற்றிய பயம் வந்து விட்டது. "இந்தப் பயலை ஒரு குட்டி மயக்கிக் கூட்டிப் போய்விட்டால் நாம் நல்லதொரு தொண்டனை இழந்து விடுவோமே!" என்றார்.

"என் பாரதத் தாயைச் சிறை வைத்துவிட்டு, நான் குஷாலாகக் குடும்பம் அமைத்துக்கொள்வதா? அவள் விடுதலை அடையும் வரை நான் திருமணம் செய்துகொள்ளமாட்டேன்!" என்று வீராவேசத்தோடு கூறினேன்.

"உன் ஆயுளில் விடுதலை சாத்தியமில்லாவிட்டால்?"

"எனக்குத் திருமணமும் சாத்தியமில்லை."

"சத்திய மூர்த்தியடா நான்! பொய்யாக்கினாயோ பழி வாங்கிவிடுவேன்!" என்று சிரித்துக்கொண்டே, என் முதுகில் தட்டிக்கொடுத்தார்.

* * *

**1947**—இந்தியத் தாய் அடிமை விலங்கு அறுபட்டு, சர்வாலங்கார பூஷணியாய்த் தன் நாற்பது கோடி மக்களுக்குக்

காட்சி அளித்தாள். இந்தப் புனிதக் கோலத்தைக் காண்பதற்காகத் தம் வாழ்வையே அர்ப்பணித்த எங்கள் மோதிலால் இல்லை; சித்தரஞ்சன தாஸ் இல்லை; ஜம்னுலால் பஜாஜ் இல்லை; சத்தியமூர்த்தியும், சாஸ்திரியாரும் இல்லை. அடிநாளில் உழைத்த பல்லாயிரக் கணக்கானவர்களில் சில ஆயிரமவரே இருந்தோம். காந்தி அடிகளார், 'சுதந்திரம் வாங்குவதற்காக உதயமான காங்கிரஸின் லட்சியம் பூர்த்தி அடைந்துவிட்டது; இனிக் கட்சியைக் கலைத்து விடலாம்' என்று கூறிய பிறகும் கட்சியை யாரும் கலைக்கவில்லை. ஆனுல் என்னைப்போன்ற உண்மைக் காங்கிரஸ்காரர்களில் பலர் கட்சியை விட்டு விலகினர். நான் எனக்கு முற்றிலும் புதியதான மனித வாழ்க்கைக்குத் திரும்பினேன்.

வயதோ நாற்பத்து இரண்டு. வாழ்க்கையில் செங்கனிப் பக்குவம் ஏறவேண்டிய வயதில், வாழ்க்கையின் அரிச்சுவடியைக் கற்கும் பிள்ளைப் பிராயத்தவனுய் மாற முடியுமா? காரியத்திற்காகச் சிரிப்பதும், போலித்தனமாகப் பழகுவதும், உணர்ச்சி மயமான வாழ்க்கையில் துறவியைப்போலப் போடும் வேஷமும் எனக்கு வெறுப்பை அளித்தன.

ஒரு சோற்றுக் குழியை மூட மனிதன் செய்த முயற்சிகளில் எத்தனை பெரிய தோல்விகள்! இவன் கண்டுபிடித்த இயந்திரம் இவனைவிடச் சக்தி வாய்ந்தது. இவன் தரையில் நின்ருல் இவன் கண்டுபிடித்த விமானம் உயரே பறக்கிறது! இவன் ஒரு சாதாரண மனிதனுக இருந்துகொண்டு, தன் முயற்சிகளுக்கு ராட்சச பலத்தைக் கொடுக்கலாமா? காரியங்கள் விஸ்வரூபம் பெற்றுவிட்டால் காரணங்கள் கடுகாகத் தேய்ந்து அழிந்து போகின்றன; காரணமான மனிதனும் காரியமான அவன் முயற்சியும் அம்மாதிரியானவைதாம். மனிதன் சிறுத்துக்கொண்டு வருவதன் அறிகுறிகள் இவை. சாதனைக்குச் சக்தியைக் கொடுத்துவிட்டு, மனித தத்துவம் மரணமாகிற அலங்கோலம் இது. தன் சாதனையின் உயரத்துக்குக் கீழே தனித்து நிற்பவன், 'வெற்றி, வெற்றி' என்று வீற்றுவது பைத்தியக்காரத்தனம்.

நாம் மனித உலகிலே வெறுப்புக்கொண்டாலும், அதன் அளவுக்கு இறங்கி வந்திருப்பவன் தானே? மண் மூடிக்கிடந்த மனத்திலே சபலம், பாசம் என்றெல்லாம் முளைகள் விட்டன. எந்தையும் தாயும் நினைவுக்கிளை வழியே உள்ளத்தில் இறங்கினர். ஊருக்குப்போனேன். அம்மா எத்தனையோ வருஷங்களுக்கு முன்னுல் என் பிரிவாலே வாடி இறந்துவிட்டாளாம். இதையும் மனிதத்தன்மையின் தோல்வி என்றுதான் சொல்ல வேண்டும். தன் ஆணிவேரைப் பறித்து என்னிடத்தில் ஊன்றி வைத்தாள். ஆணி வேர் பிடுங்கிக்கொண்டு போனதும் மரம் சாய்ந்து

விட்டது. இது இயற்கைக்கு விரோதம் இல்லைதான்: ஆனால் வழுக்குகிற பாசத்திற்கு நியாயம் தேவை இல்லை: இல்லாமல் போன என் தாய் நீராக என் கண்ணில் நிறைந்தாள்: நெஞ் சோடு கிளர்ந்து, நெடு மூச்சாக விரிந்தாள்:

அப்பாவின் மூச்சும் ஒரு சுழிப்பில்தான் நின்று கொண்டி ருந்தது. என்னைப் பார்த்ததும் ஒரே திருப்தி. அவரிடமிருந்து பறந்த உயிர்ப்பறவைக்கு என் வருகையே இறக்கைகளாகி விட்டன. சர்க்காருக்குப் 'பென்ஷன்' லாபத்தோடு எனக்கும் ஒரு லாபம். அவர் சம்பாதித்து வைத்திருந்த லக்ஷ ரூபாய் ஆஸ்தி எனக்குக் கிடைத்தது.

பணம் பத்தும் செய்யும் என்பார்களே! வாழ்க்கையின் அரிச்சுவடி முதல் ஆனர்ஸ் வரையிலுள்ள எல்லா வழித்துறை களும் சாமர்த்தியங்களும் எனக்கு வந்து விட்டன, வாழ்க் கையைப் பழித்ததற்கு நான் சுமக்கிற பொதியாகவும் இருக்க லாம் இது!

சௌகரிய வாழ்க்கையில் ஒரு தினவு ஏற்பட்டிருப்பதை நாளாவட்டத்தில் கண்டேன். வாலிபத்தில் விடுதலை வேட்கை யின் இறக்கைக்குக் கீழே மறைந்து கிடந்த தாம்பத்ய வேட்கை இந்த வயதில் வெளிப்பட்டுச் சீறுவானேன்? வாலிபத்தில் இறங்கிய விதை முப்பது ஆண்டுகளுக்குப் பிறகு மட்கிப் போகாமல் எப்படி முளை நீட்டிக் கிளைவிடுகிறது?

முதலில் ஆச்சர்ய ரஸிகனானேன். பின்னர் காலம் கடந்த வேட்கையை விரட்டத் தாயுமானவரைத் துணைக்கு அழைத் தேன்: கருணைக்குரல் எடுத்துப் பாடினார்:

"மதியுங் கங்கையுங் கொன்றையு(ம்) மத்தமும்
பொதியுஞ் சென்னிப் புனித! நின் பொன்னடிக்
கதியை விட்டிந்தக் காமத்தி லாழ்ந்தவென்
விதியை எண்ணி விழிதுயி லாதன்றே,"

தாயுமானவர் விண்டதைக் கண்டவர். காமத்தில் ஆழ்ந்த விதியைக் கிழித்துக் கர்மேச்வரனைக் கண்டவர். விதியின் கை விளையாட்டுப் பண்டமான நான் இறைவனை அழைத்த போதெல்லாம் காம ஸ்வரூபிணியே காட்சி தந்தாள். தாயு மானவர் குரல் ஒடுங்கினார். என் கிழட்டு உடலிலிருந்து இளமைக் குரல் வீங்கி எழுந்தது.

'ஒரு பெண் வேண்டும்.'

* * *

நான் பணக்காரன். எனக்கு நூறு வயதானாலும் பதினாலு வயது அழகுப் பெண் கிடைப்பாள். ஆனால் இந்த இடத்தில்

தான் கொஞ்சம் புத்திசாலித்தனமாகச் சிந்தித்தேன். ஏதோ நெருக்கடியால் எனக்குக் கழுத்தைக் கொடுத்துவிட்டுப் பிறகு வாழ்நாளெல்லாம் கண்ணீர் வடித்துக் கொண்டிருக்கும் ஒரு பெண்ணால் எனக்கு இன்பம் கிடைக்காது. அவள் என்னை மனப்பூர்வமாக விரும்புபவளாக இருக்க வேண்டும். எவளாவது கண்ணுள்ளவள் அப்படி விரும்புவாளா? எழுபது வயதுத் தலைவர் ஒருவரை விரும்பிய பெண்ணும் இந்தத் தமிழ் நாட்டில் தானே இருந்தாள்? அந்த வகையில் இன்னொரு பெண்ணும் இந்தத் தமிழகத்தில் இருக்க மாட்டாளா, என்ன?

ஒரு பள்ளி ஆசிரியர் அழகே உருவான தன் பெண்ணை எனக்குக் கொடுக்க முன் வந்தார். அவள் நன்றாக வாசித்தவளாம். ஏழு பெண்களுக்கு முன் பிறந்த சீதேவியாம். பணம் இல்லாத காரணத்தால் இருபத்தைந்து வயதுவரை கன்னியாக இருக்கிறாளாம். வயதானவர்களுக்கு இப்படி இடங்களில்தான் பெண் கிடைக்கும். பணக்காரக் கிழவர்களின் ஆசைத் தாமரை மலர்வதற்கு, அடிமட்டத்தில் வறுமைச் சேறு இருப்பது அவசியம்தானே? ஆனால் ஒரு நிபந்தனை போட்டிருந்தேன். அந்தப் பெண்ணோடு நான் தனிமையில் பேசிய பின்னர்தான் என் அபிப்பிராயத்தைத் தெரிவிக்க இயலும் என்று. அதுவும் நான் இருக்கும் இடத்திற்கு அவள் வரவேண்டும் என்பது நிபந்தனையின் முதல் ஷரா.

வாத்தியார் எல்லாவற்றிற்கும் ஒப்புக் கொண்டார். எனக்கு ஓர் உறுத்தல். நான் அவர்கள் ஏழ்மையை, நெறிகளைக் கடக்கும் தோணியாக உபயோகப்படுத்திக் கொள்கிறேனோ? எனக்கே சிரிப்பு வந்தது. நெறியைத் தின்று உணர்வைக் கொழுக்க வைத்திருக்கிற எனக்கு இந்த ஞானோதயம் வருவானேன்?

''ஸார்!......'' வாசலில் அலைந்த மென்குரல் என் சிந்தையைத் தேய்த்தது. எழுந்து வாசலுக்குப் போனேன்.

அழகு அள்ளிய இளமையில் புன்னகையை மலர விட்டபடி நின்று கொண்டிருந்தாள் ஒரு பெண். இருக்கும் இடம் தேடி வந்த தீனியைக் கொழுத்த கிடா தின்னவேண்டியது தானே? மாறாக என் வயதுக்கேற்ற தன்மைதான் மேலோங்கி நின்றது.

''நான் வாத்தியார் பெண். நாம் உள்ளே போகலாமா?''

நான் உள்ளே நடந்தேன். அவள் என்னைத்தொடர்ந்தாள். மல்லிகை மணத்தை நிறைத்துக் கொண்டிருந்த அந்த அறையில் ஒரு பெண்ணில் பெண்ணைப் பார்க்க விரும்பினேன். சில சமயங் களில் பெண் தெரிந்தாள்; பல சமயங்களில் பாரத அன்னை தெரிந் தாள். இரண்டில் ஒன்றைக் காண விரும்பினேன். ஒன்றில்லை

இரண்டு; இரண்டில்லை, ஒன்று. ஒன்றும் மற்றொன்றும் அலையாய், புயலாய், ஆழிசூழ் உலகின் இரு கரைகளாய்த் தோன்றித் தோன்றி என்னை வதைத்துக்கொண்டிருந்தன.

"என்னை நீங்கள் வரச் சொன்னீர்களாம். உங்களை மணந்து கொள்ள எனக்குப் பூரண சம்மதம். எதாலும் நிர்ப்பந்திக்கப் படாத என் சர்வ சுதந்திரமான விருப்பம் இது. நீங்கள் உடனே முகூர்த்தத்திற்கு நாள் பார்த்துவிடலாம்!" என்று என் மௌனத்தைக் கலைத்தாள்.

என் மனத்தில் தீர்மானிக்கப்பட்டிருந்த கேள்விகளுக்கெல்லாம் மொத்தமாகப் பதில் அளித்துவிட்டாள். ஆனாலும் என்னைத் தேக்கிக் கொண்டிருந்த சந்தேகம் சொல்லால் விரிந்தது. "நான் வயதானவன்."

"நானும் பதினாறு வயதுக் குமரி இல்லையே!"

இப்பொழுது அவள் எனக்கு முழுதும் ஒரு பெண்ணாகவே தெரிந்தாள். எனக்கு மகிழ்ச்சி விருந்தாகியது. உலகமே தெரியாத பதினாறு வயதுப் பெண்ணின் பேதமையைவிட, சற்று வயதானவளின் அநுபவக் கூர்மை என் தயக்கத்தையும், சிரமத்தையும் குறைக்கும் அல்லவா? "அடுத்த வாரமே முகூர்த்தம்" என்றேன்.

"நீங்கள் வித்தியாசமாக நினைக்காவிட்டால் ஒன்று சொல்ல விரும்புகிறேன்."

"தாராளமாகச் சொல்லலாம்."

"என்னைப் போலவே என் தங்கை கல்யாணத்திற்கு நிற்கிறாள். அவளுக்கும் ஒரு வகை உங்களால் பிறந்தால் அவள் மனத்தில் வரித்தவனைத் தடையின்றி அடைவாள். இந்தக் காரியத்தை என்னுடைய விலையாக நினைப்பதென்றால் வேண்டாம்."

"அதை ஒரு மனிதனின் உயர்ந்த சேவை என்றே நினைக்கின்றேன். நாளைக்கே உன் அப்பாவிடம் ரூபாய் ஐயாயிரம் தந்துவிடுகிறேன்."

"நீங்கள் உயர்ந்தவர்."

"உன்னை விடவா?"

அவள் தடுமாறினாள். நான் அடுத்த வாரத்தைப் பற்றிச் சிந்தித்தேன்.

* * *

வாரம் வந்தது. ஆடம்பரம் இல்லாத எங்கள் கல்யாணம் அமைதியாக நடந்து முடிந்தது.

அன்றிரவு ஐம்பத்து மூன்று வருஷங்களாக உறைந்து கட்டப்பட்டுப் போயிருந்த சுகத்தைத் தேடப் பள்ளி அறைக்குப் போனேன். சிறிது நேரத்தில் நிலவு பூக்கும் என்று ஆவலோடு எதிர்பார்த்திருந்தேன். கதவு திறந்திருந்தது. நிலவு நுழைந்தது. அழகுப் பெட்டகமாய் வந்த சிவகாமி மஞ்சத்தைப் பிடித்துக் கொண்டு கேவிக் கேவி அழுதாள். பதறினேன், பற்றினேன் அவள் தோளே. ''என்ன சிவகாமி!'' என்றேன் கலவரத்துடன்.

''நான் உங்களே ஏமாற்றிவிட்டேன்!'' புரண்ட வெள்ளம் இரு கண்களில் பாய்ந்தது.

அவளுடைய நடுங்கிய உடல் என் கைகளில் தேங்கியது. பதைத்த என் உள்ளம் பாய்ந்தது. ''என்ன சொல்கிறுய் சிவகாமி? என்னே ஏமாற்றினுயா?''

''ஆமாம்; நான் உங்களுக்கு ஒரு மனேவியாக நடந்து கொள்ள முடியாது. நீங்கள் கொள்ளே ஆசையுடன் புதுப் பித்துக் கொண்டிருக்கும் வாலிப வேட்கைக்கு ஆறுதல் கிடைக்காது......''

ஆசை வலே அறுத்த வேகத்தில் படுபாதாளத்தை நோக்கிப் போய்க்கொண்டிருக்கும் நான், ''ஏன்?'' என்று கீச்சிட்டேன்.

''நான் தாம்பத்ய சுகத்திற்கு லாயக்கற்றவள். விவரமாகச் சொல்லப் போனுல் பூப்படையாத பெண் நான். இயற்கையின் மலட்டுத்தனத்திற்குப் பெண் உருவம் தாங்கிய வெற்றுப் பிண்டம்...'' சொல்லிவிட்டு என்னேப் பீதியுடன் பார்த்தாள். நடக்கக்கூடாத ஒன்று நடக்கப்போகிறது என்பதை எதிர்பார்க்கும் நடுக்கம் அவள் உடலில் இருந்தது.

நான் அவள் எதிர்பார்ப்பதைப் போல அவளுடைய கழுத்தை அழுத்த வேண்டியவன்தான். ஆனுல் எதிர்பாராத ஒன்று என்னே அடைத்துக்கொண்டு நின்றது. எல்லாம் இழந்த நிலேயில் தளர்ந்து தள்ளாடும் குரல்தான் நீந்தியது: ''எதற்காக சிவகாமி, என்னே வஞ்சித்தாய்?''

''இதைப் போலத்தான் என்னே ஆரம்பத்தில் கேட்டுக் கொண்டேன்: 'இவர் ஏன் வயதான காலத்தில் பெண் உலகத்தை வஞ்சிக்கக் கிளம்பி யிருக்கிறுர்?' என்று. பூப்படையாத நான் உங்களே வஞ்சித்துத் திருமணம் செய்து கொண்டு, வாழத் தகுதியுள்ள மற்ற ஒரு வாலிபப் பெண்ணேக் காப்பாற்ற எண்ணினேன். பெண் உலகத்துக்கு நான் செய்யும் பெரும் சேவை என்றும் இதை எண்ணினேன். நான் அருகிருந்து 'தகுதி இல்லாத ஆசைக்குத் தகுந்த தண்டனே'யாக உங்களே வாட்டிக் கொண்டிருக்க ஆசைப்பட்டேன். இதற்கு எங்கள் குடும்ப நிலே

யும் ஒரு காரணம். எனக்குக் கூறிக்கொள்ள இயற்கைக் காரணம் ஒன்று இருந்தாலும், நான் திருமணம் ஆகாமல் இருப்பதைப் பலர் பழித்தனர்; சந்தேகித்தனர். இதனால் என் தங்கையும் கல்யாணமாகாமல், பிறருடைய ஏசலுக்கு ஆளானாள். பணம் இருந்தால் அவளை எப்படியாவது தள்ளிவிடலாம். அது தான் எங்களை வஞ்சித்ததே! என் கல்யாணத்தின் மூலம் என் பழிப்புக்கு விடுதலை தரவும், என் தங்கையின் கல்யாணத்திற்குப் பணம் கிடைக்கவும், வாழத் தகுதியுள்ள ஒரு பெண்ணை உங்கள் வலையில் விழாதிருக்கவும் வகை செய்ய எண்ணினேன். எல்லாம் நடந்தன. வெற்றி கிடைத்தது! ஆனால் பூரிக்க வேண்டிய என் மனம் பொங்கிக் குமைகிறது; உங்கள் பெருந்தன்மை வதைத்து உருக்குகிறது. அன்று நீங்கள் என்னைத் தனிமையில் சந்தித்த போது எத்தனை கௌரவமாக நடந்துகொண்டீர்கள்? தன் தந்தை இடத்தில் ஒரு மகளுக்குப் பெருகும் பாசம் அன்று எனக்கு உதயமாகியது. ஆனால் புத்தியில்லாத பெண்ணாக நடந்துகொண்டுவிட்டேன். மனித இயற்கையின் ஓர் ஆசை ஐம்பத்து மூன்று வருஷங்களுக்குப் பிறகு உங்களிடம் தலை தூக்கி யது. அந்த நியாயமான ஆசைக்கு நான் எவ்வளவு பெரிய தடுப்புச் சுவர் எழுப்பி விட்டேன்? ஐயோ, இந்தக் கொடு மைக்கு அணைபோட என் கண்ணீரால் முடியாதே? இத்தனை ஆசையுடன் காத்துக்கொண்டிருக்கும் உங்களைத் திருப்திப்படுத்த முடியாத பாவியாகிவிட்டேன்!'' என்று கதறினாள்.

''நீ பாவி அல்ல, சிவகாமி! என்னைக் காப்பாற்றியிருக்கிறாய்!'' என்ற என் கலங்காத குரலைக் கேட்டுக் கலங்கித் துடித்தாள் அவள்,

குலையாமல் இருந்த பழங்களையும், குடிக்காமல் இருந்த பாலை யும், வாடாமல் இருந்த மலரையும், கலையாமல் இருந்த படுக்கை யையும் பார்த்துச் சுளித்த விழிகளை, நீர்க்கோலமாய் நெளிந்து கொண்டிருந்த சிவகாமியிடம் திருப்பினேன். ''நான் மனிதனாய்த் தான் பிறந்தேன். ஆனால் பின்னர் நாட்டு விடுதலை இயக்கத் தில் என் மனிதத்தனம் முழுதுமாகக் கரைந்துவிட்டது. இயக்கம் வெற்றி கண்டதும் நான் மனிதனாக்கப்பட்டு உணர்ச்சி நிறைந்த இந்த உலகத்திற்கு அனுப்பப்பட்டேன். விடுதலைப் பசியில் அலைந்த என் உள்ளம் வேட்கைப் பசியில் நாட்டம்கொண்டு விட்டது. நான் நாயாக மாறினேன். நீ கல்லாக எறிந்தாய். கல்லெறி பட்டதும் என் தவறு புரிகிறது. 'காங்கிரஸ்காரன் அயோக்கியத்தனம் செய்கிறான்' என்று பேசப்படும் இந்த நாளில் நான் ஓர் உதாரணமாக இருந்தேன். என்னை மீட்டு விட்டாய். என் பேதைமையால் நான் ஏற்றுக்கொண்ட சுமை யைக் கீழே தள்ளிவிட்டாய். எங்கள் தலைவர் சத்தியமூர்த்தி கனலாக எழுப்பிய ஒன்றைக் கனியாக மாற்றிவிட்டாய். நீ

என் மாங்கல்யத்தால் மனைவியாக இருந்தாலும் மகள்தான்; என் அருமை மகளே!'' என்று கமறிய குரலில் கூறிய நான், அவளை நெஞ்சத்தோடு சேர்த்து அணைத்தேன். குழந்தைபோல என் அணைப்பில் தேம்பினாள் சிவகாமி.

'இட்டும் தொட்டும் கௌவியும் துழந்தும் நெய்யுடை அடிசில் செய்பட விதிர்த்த' செல்வத்தின் ஸ்பரிச சுகத்தைக் கூறுகிறார் வள்ளுவர் :

**மக்கள்மெய் தீண்டல் உடற்கு இன்பம்—மற்று அவர்**
**சொல்கேட்டல் இன்பம் செவிக்கு.**

தீண்டினேன். இன்பம் பெற்றேன். சொல் கேட்டேன்; துன்பம் கெடுத்து இன்பம் எய்தினேன். பகலில் மனைவியைக் கண்டவன் இரவிலே மகளைக் கண்டேன். தீண்டலும், கேட்டலும், பார்த்தலுமான முப்பெரு நிதிகளை ஒரே நாளில் அடைந்த நான் எத்தனை பெரிய அதிர்ஷ்டக்காரன்!



பெ. தூரன்

# 30

# புதுக் கடை

கந்தப்பன் இப்பொழுது பெருங் குடிகாரனுகி விட்டான். வீரப்பனேடு சேர்ந்துகொண்டு பழகிய இந்தக் கெட்ட குணம் அவனை இன்று இறுகப் பிடித்துக்கொண்டது! முதலில் தனியே குடிக்கப்போக அஞ்சுவான்; அவன் கால்கள் கடைக்குள் எட்டி வைக்கக் கூசும்; ''யாராவது பார்த்தால், மானம் போச்சே!'' என்ற எண்ணம் அவனுக்கு உண்டாகும்! உண்மையில் வீரப்பன் இல்லாவிட்டால் அவன் அந்தப் பக்கமே போயிருக்கமாட்டான். இப்பொழுதோ கந்தப்பன் எந்த நேரத்தில் வேண்டுமானுலும் கடைக்குள் நுழையப் பின் வாங்குவதில்லை. கந்தப்பன் பெருத்த குடிகாரனுகிவிட்டான் என்பது கிராமம் முழுவதும் தெரிந்து விட்டது.

சில வேளைகளில் அவன் குடிவெறியால் நடு வழியில் உருண்டு கிடப்பான். அப்போது அவனைப் பார்த்தவர்கள், ''ஐயோ! சூது வாது தெரியாத இவனும் சேர்க்கையால் இப்படிக் கெட்டு விட்டானே!'' என்று இரக்கப்படுவார்கள்.

கந்தப்பன் செங்காளிபாளையத்தில் ஒரு பண்ணையாள்; கிடைக்கும் சம்பளத்தைக் கொண்டு தன் மனைவி, இரு குழந்தை களோடு சுகமாக வாழ்ந்து வந்தான். ஊரில் எல்லோரும் அவனை, '' அப்பாவி '' என்று புகழ்ந்து பேசுவார்கள்.

கந்தப்பனுக்குக் காலை முதல் மாலைவரையில் பண்ணைக்கார னுக்குத் திருப்தி ஏற்படும்படி வேலை செய்யத்தான் தெரியும். கூலியைத் தன் மனைவி வேலாயியிடம் கொடுத்து விடுவான்; தனக் கென்று அவன் ஒரு காசுகூட வைத்துக்கொள்ள மாட்டான். வேலாயி வீட்டுக்கு எஜமானி; குழந்தைகளோடு கொஞ்சுவதும்,

பகலெல்லாம் உழைத்துக் களைப்புடன் திரும்பிவரும் கந்தப்பனை உபசரிப்பதுந்தான் அவள் வேலை. கந்தப்பன் தன் மனைவியின் அமுத மொழிகளால் சலிப்பெல்லாம் நீங்கிக் களிப்புறுவான்.

புதன்கிழமை செங்காளிபாளையத்திற்குச் சந்தை நாள். அன்று ஒருவரும் வேலைக்குப் போக மாட்டார்கள். சில கூலிக் காரர் அன்றுதான் தலையில் இரண்டு செம்பு தண்ணீர் ஊற்றிக் கொள்வார்கள்; வேலாயி அதிகாலையிலேயே தன் கணவன், குழந்தைகளை எண்ணெய் தேய்த்துக் குளிக்கச் செய்து, பின்பு தானும் எண்ணெய் தேய்த்து முழுகுவாள். சூரியன் உதயமாக ஆக இன்பக் குடும்பம் தூய ஆடை உடுத்துக்கொண்டு, கற்பூரம் ஊதுவத்திகளோடு கோவிலுக்கு வந்துவிடும்; அவ்வூரில் சிவன், விஷ்ணு, மாரியம்மன் கோயில்கள் பக்கம் பக்கமாகவே இருந்தன. அவர்களுக்கு எல்லாம் கடவுள்தான்; சைவம், வைணவம் என்ற பெயரே தெரியாது. அவர்கள் மூன்று கோவிலுக்கும் சென்று வணங்குவார்கள்; கந்தப்பனுக்குக் கற்பூர ஆராதனை நடக்கும்போதும், மணிச் சத்தங் கேட்கும் போதும் கண்களில் நீர் பெருகிவிடும். வேலாயி, "என் கண்ணுட்டிகள் (கணவனும், பிள்ளைகளும்) சுகமாக இருக்க வேண்டும்" என்று மனமாறத் தொழுவாள்.

மாலை வேலாயி சந்தைக்குச் சென்று வீட்டுக்கு வேண்டிய 'செலவும்' பிள்ளைகளுக்கு மிட்டாயும் கந்தப்பனுக்குக் கரும்பும் வாங்கி வருவாள். கந்தப்பனுக்குக் கரும்பைவிட அவள் அன்பே அதிகமாக இனிக்கும்.

ஆனல் இவையெல்லாம் குடிப் பேய் பிடிப்பதற்கு முந்திய நிகழ்ச்சிகள். இப்பொழுது எல்லாம் மாறி விட்டன. கந்தப் பனுக்குக் குடிப்பதற்கே கூலிப்பணம் கட்டுவதில்லை. வீட்டில் ராகிகூட இருக்காது; அதைப்பற்றி அவன் கவலைப்பட மாட்டான்; சில சமயம் வேலாயி, இரண்டணுவாவது கொடுக்கும் படி கெஞ்சுவாள். குடி மயக்கம் இல்லாவிட்டால் கந்தப்பன், "இந்தா" என்று கொடுப்பான்; குடிமயக்கமாயிருந்தால் வேலாயிக்கு அடிதான் கிடைக்கும்.

இன்பம் குடிகொண்டிருந்த அக் குடும்பத்தில் வறுமை புகுந்துவிட்டது. வேலாயி உடல் மெலிந்து களையிழந்து வாடி விட்டாள். வீட்டில் இருந்த நகைகளை எல்லாம் விற்ருய் விட்டது. குழந்தைகளுக்குச் சரிவரச் சோறு போடுவதே இப் பொழுது முடிவதில்லை.

* * *

ஒரு நாள் மாலை பண்ணைக்காரன் கந்தப்பனிடம் நூறு ரூபாய் கொடுத்துப் பக்கத்து ஊரில் ஒருவனுக்குக் கொடுத்து

வரும்படி சொன்னான். கந்தப்பன் போகும் வழியில் ஒரு கள்ளுக் கடை இருந்தது. அவன் அன்று காலை முதல் கையில் காசு இல்லாததால் குடிக்கவில்லை. கடையைக் கண்டதும் கந்தப் பனுக்குக் கால் அங்கே இழுத்தது. சற்றுநேரம் தயங்கினான். பண்ணைக்காரனுக்குத் தெரிந்தால் அப்புறம் வேலைக்கு வரவேண்டாமென்று சொல்லி விடுவானே என்ற பயமும் உண்டாயிற்று; ''உம் நாலணுவுக்கு குடித்துவிட்டுப் பிறகு யாரிடத்திலாவது வாங்கிக் கொடுத்துவிட முடியாதா?'' என்ற எண்ணமும் நடுவே தோன்றியது. இதற்குள் அவன் கடைக்குப் பக்கமாக வந்துவிட்டான். ''கந்தப்பா! வா வா, உன்னைப் பத்தித்தான் இவ்வளவு நேரம் பேசிக்கிட்டிருந்தேன்'' என்று கடையில் உட்கார்ந்து கொண்டிருந்த வீரப்பன் கூப்பிட்டான்; ''எங்கே, இப்படி இரண்டு கொண்டா; டேய் சாக்கண!'' என்று கூவினான் வீரப்பன். பண்ணைக்காரன் கட்டளை பறந்து விட்டது. கந்தப்பன் தன் நண்பனோடு சேர்ந்து குடி குடி யென்று குடித்துவிட்டான்.

கந்தப்பன் தள்ளாடிக் கொண்டு நடக்கிறான். எந்தப் பக்கம் போகிறான், ஏன் அங்கே போகிறான்? ஒரு நிதானமும் இல்லை. பாதையை 'அளக்கிறான்'. முகத்தில் களிப்புப் பொங்கு கிறது; ஒரு சிறு தெம்மாங்கு அவனை அறியாது வாயிலிருந்து கிளம்புகிறது.

கடையைவிட்டு ஒரு காடுகூடத் தாண்டவில்லை. அதற் குள்ளேயே கந்தப்பனுக்குக் கால் நிலத்தில் பாவவில்லை. அப்படியே திண்டாடி ஒரு கள்ளிப் புதர் அருகில் பொத்தென்று விழுந்தான். கெட்ட நாற்றத்தோடு அவன் வாயிலிருந்து கள் வழிந்தது. வேட்டி சரியாக இடுப்பில் இல்லை; மடிப்பையைக் காணோம்.

மறு நாள் காலை: கதிரவனோடு தூங்கிக் கதிரவனோடு விழிக் கும் பறவைகள் தங்கள் இணையுடன் உல்லாசமாகப் பேசிக் கொண்டிருக்கின்றன; இன் துயில் நீங்கிப் புத்துயிருடனும் புது மகிழ்ச்சியுடனும் மரத்துக்கு மரம், கிளைக்குக் கிளை பறந்து திரி கின்றன. இயற்கைத்தேவி அருளிய மந்த மாருதத்தில் நீந்தி, உணவைத் தேடி உண்டு, ஊறும் தீஞ்சுவைத் தண்ணீரைப் பருகி வாழும் அப்பறவைகளுக்கு அடக்க முடியாத, மயக்கந்தரும் களிப்பும் கிடையாது; பின்பு அதனால் ஏற்படும் தளர்ச்சியும் கிடையாது.

மயக்கத்திலிருந்து தூக்கத்திற்குச் சென்று விழித்த கந்தப்பன் மிகுந்த குடியால் தளர்வுற்று அப்படியே படுத்துக் கொண்டு சற்று நேரம் இந்தக் காட்சியைக் கவனித்தான். அவனை அறியாமலேயே அவனுக்குச் சிரிப்பு வந்தது. புதிதாகத்

தோன்றிய பகலவனும் சிரித்தான். மறு கணம் கந்தப்பனுக்குத் தன் மேலேயே வெறுப்புண்டாயிற்று. குடி பெருந்தீங்கு என்ற எண்ணம் திடீரென்று அந்தப் பறவைகளைப் பார்த்ததாலோ வைகறையின் வசீகரத்தாலோ அவனுக்கு ஏற்பட்டது.

இந்த எண்ணத்துடன் அவன் தன் வீட்டுக்குள் நுழைந்தான். இரவு பட்டினியாகையால் குழந்தைகள் இரண்டும் வயிறு ஒட்டிப் பிய்ந்த பாயில் படுத்துக் கொண்டிருந்தன. தூக்கமோ, பசிமயக்கமோ—குழந்தைகள் அவனைக் கண்டு ஒன்றும் பேசவில்லை. வேலாயி, இரவில் வெகு நேரம் தூங்காமல் அழுது கொண்டிருந்தபடியால் தலை நோவுண்டாக, பக்கத்து வீட்டுக்காரி கொடுத்த நாலு மிளகை அரைத்து நெற்றியில் தடவிக் கொண்டிருந்தாள். இக்காட்சியால் கந்தப்பனுக்கு அடக்க முடியாத துக்கம் வந்துவிட்டது. பழைய அன்பு, குடியில் வெறுப்பேற்பட்டவுடன் திரும்பிவர, அவன் வாய்விட்டுக் கதறினான்!

''இனிமேல் நான் இந்தப் பாழும் கள்ளைக் கையில்கூடத் தொடுவதில்லை'' என்று தன் மனைவியின் முன் சத்தியம் செய்தான். அப்பொழுது தான் அவனுக்குச் சிறிது ஆறுதல் உண்டாயிற்று.

வேலாயி மறுபடியும் நல்ல நாட்களைக் காண ஆரம்பித்தாள். கந்தப்பன் தனது சத்தியத்தைக் கைவிடவில்லை. கூலிப் பணம் பழையபடி வேலாயி கையில் விழுந்தது. ஆனால் தொலைத்து விட்ட நூறு ரூபாயைக் கொடுக்க அடகு வைத்த தாலியை இன்னும் திருப்பவில்லை. வேலாயி கழுத்தில் தாலிக்குப் பதிலாக ஒரு சிறு நூல் சரடுதான் இருக்கிறது.

கந்தப்பன், தன்னை அவமானத்திலிருந்து காக்கத் தன் மனைவி தாலியை அடகு வைக்கத் துணிந்ததைக் கண்டு அவள்மேல் முன்னிலும் அதிக அன்பு கொண்டான். ''குடிப்பதில்லை, இது உறுதி'' என்று பலமுறை சொல்லிக் கொள்ளுவான். அதோடு கிராமசேவையில் ஈடுபட்ட பல தொண்டர்கள் அக்கிராமத்தில் வந்து செய்யும் மதுவிலக்குப் பிரசாரத்தை அவன் தப்பாமல் கேட்பான். படிக்கத் தெரியாவிட்டாலும் பல சொற்பொழிவுகளைக் கேட்டு அவன் மதுபானத்தின் தீங்கைப் பற்றி நன்றாகத் தெரிந்து கொண்டான்.

ஆனால் மதுபானம் தீங்கு என்ற உண்மையை உணர்ந்து அவன் அதைத் தொடாமல் இருக்கவில்லை; சத்தியத்தைக் காப்பாற்றவேண்டும், குடிப்பதால் மனைவி மக்கள் துன்புற வேண்டியிருக்கிறது என்ற எண்ணங்களே அவனைக் குடிக்காமலிருக்கச் செய்தன.

கந்தப்பன் தனது உறுதியில் வெற்றிப் பெறுவதற்கு அரசாங் கத்தில் உண்டான ஒரு முக்கிய மாறுதலும் உதவி புரிந்தது. முதன் முதலில் காங்கிரஸ் ஆட்சி சென்னை மாகாணத்தில் ஏற்பட் டதும் சேலம் மாவட்டத்தில் மதுவிலக்கு அமுலுக்கு வந்தது. செங்காளிபாளையம் அந்த மாவட்டத்தில் இருந்ததால் அங்கு மதுக் கடைகள் மூடப்பட்டன. கந்தப்பன் குடியை அறவே மறந்துவிட்டான்.

* * *

காலம் மெதுவாக நழுவிக் கொண்டிருந்தது. அப்படி நழுவிய ஐந்தாறு ஆண்டுகளில் எத்தனையோ மாறுதல்கள் உண்டாயின. இரண்டாம் உலகப் போருக்குப் பின் இந்தியாவுக்கு சுதந்திரம் தருவதாகத் தெளிவான வாக்குறுதி கிடைக்காததால் காங்கிரஸ் ஆட்சியை விட்டு விலகிக்கொண்டது. பயங்கர யுத்தம் உலகத் தையே வளைத்துக் கொண்டது. சேலத்தில் மது அரக்கன் மறு படியும் தாண்டவமாடலானான்.

மறுபடியும் ஒரு புதன்கிழமை. கந்தப்பனுக்கு இப்பொழுது சம்பளம் சிறிது அதிகம். மத்தியானம் சுமார் இரண்டு மணிக்குக் கந்தப்பன் கூலிப்பணத்தை வாங்கிக்கொண்டு வந்தான்; இத்தனை ஆண்டுகளாக மிச்சம் பிடித்த பணத்துடன் இதையும் சேர்க்கவே மொத்தம் 103 ரூபாய் இருந்தது. அதைக் கண்டு அவன் உள்ளம் பூரித்தது. ''இனி அடகு வைத்த தாலியைத் திருப்பி விடலாம்'' என்று அந்தப் பணத்தை எடுத்துக்கொண்டு சந்தைக் குப் புறப்பட்டான்.

சந்தைக்குள் நுழைவதென்றால் கள்ளுக்கடையைத் தாண்டி வந்தாகவேண்டும். சந்தையன்று மக்கள் அதைப் பார்க்காது சென்றாலும் ஏழு நாளைய புளித்த கள் நாற்றத்தையாவது மூக்கில் ஏற்றிக் கொண்டு போய்த்தானாக வேண்டும். அதோடு வழக்கமாக அன்று கள் விலை சொப்பு ஓர் அணா ஆகிவிடும். ''விலை சொப்பு ஒரு அணா'' என்று ஒருவன் திடுமம் அடித்துக் கொண் டிருப்பான்.

கந்தப்பன் கடையை அணுகியதும் பழைய நினைவு எப்ப டியோ உதயமாகிவிட்டது. நல்ல வெயிலில் இரண்டு மைல் களுக்குமேல் நடந்ததால் அவனுக்கு மிகுந்த தாகம் உண்டா யிற்று. ''தாலியைத் திருப்ப 100 ரூபாய் போதும்; சந்தைச் செலவுக்கு இரண்டு ரூபாய் வேண்டுமென்று வேலாயி சொல்லி யிருக்கிறாள். ஒரு ரூபாய் மீதி இருக்கிறதே, அதைச் சொந்தச் செலவிற்கு வைத்துக் கொண்டால் என்ன? இன்றைக்கு ஒரு நாள் மட்டும் மனமாரக் குடித்துவிட்டுப் பிறகு அதை நினைக் கிறதே இல்லை'' என்று இம்மாதிரி அவன் மனத்தில் நினைப்

போடியது. களைப்பாறவோ என்னவோ அவன் சந்தைக்குள் நுழையாமல் கள்ளுக்கடைக்குப் பக்கத்தில் இருந்த ஒரு வேப்ப மரத்து நிழலில் உட்கார்ந்தான்.

கந்தப்பன் மறுபடியும் கள்ளைப் பற்றி நினைத்தான்: ''விட்டது முதல் அதன் மேலேயே ஒரே பைத்தியமாக இருக்கிறது. இன்றைக்கு ஒரு நாள் குடிப்பதால் என்ன முழுகிவிடும்? நான் முன்னைப்போல் தினமுமா குடிக்கப் போகிறேன்? இந்த ஆசையைத் தீர்த்துக்கொள்ள இன்றைக்கு மாத்திரம். மறுபடியும் இதைத் தொடுவதே இல்லை. மறுபடியும் கடையைத் திறந்திருக்கிறார்களே. ஒரு தடவை குடித்தால் என்ன கெட்டுப் போகும்? புதுக் கடையைக் கண்டது முதல் அதே நினைவாக இருக்கிறது. இன்றைக்கு மாத்திரம் குடித்துப் பார்த்துவிட்டு மறுபடியும் அதைத் தொடுவதே இல்லை. இன்றைக்கு மாத்திரம்; மறுபடியும் கிட்டக் கூட போவதில்லை'' என்று அவன் மறுபடியும் உறுதியாகத் தீர்மானிக்கத் தொடங்கினான். ''ஆகக் கூடி ஒரு நாலணுக் காசு–இந்த ஆசை தொலையட்டும்'' என்று முனகிக் கொண்டே கந்தப்பன் கடைசியாகக் கடைக்குள் நுழைந்து விட்டான்.

அன்று அவன் வேலாயியைப் பார்க்கவில்லை. புளித்த கள்ளை வெயில் நேரத்தில் 'இன்றைக்கு மாத்திரந்தானே' என்று நிறையக் குடித்ததனாலும், நெடுநாளாகக் குடிப்பழக்கம் விட்டுப் போனதாலும் அவனுக்குப் போதை மீறிவிட்டது. சந்தை சென்று திரும்பிய வண்டிக்காரன் ஒருவன் அவன் வழியில் தடுமாறுவதைக்கண்டு வண்டியில் தூக்கிப்போட்டுக் கொண்டு போய் அவன் வீட்டில் விட்டான்.

கந்தப்பனுக்குப் போதை தெளிவதற்குள் இருட்டிவிட்டது. முதலில் எங்கிருக்கிறோமென்றே அவனுக்குத் தெரியவில்லை. பிறகு கொஞ்சம் கொஞ்சமாக நடந்தவையெல்லாம் நினைவிற்கு வந்தன. ''வாக்குத் தவறினதுமல்லாமல், வேலாயிக்குத் தெரியும்படி நடந்துகொண்டேனே! யாரிடத்திலாவது அவளிடம் கொடுக்கும்படி இரண்டு ரூபாயை முதலிலேயே கொடுத்திருக்க வேண்டும்'' என்று பலவாறு நினைத்துக் கலங்கினான். அப்பொழுதுதான் அவனுக்குந் தான் கொண்டுபோன ரூபாயைப் பற்றிய எண்ணம் வந்தது. மடியைத் தொட்டுப் பார்த்தான். பையைக் காணவில்லை.

சந்தையில் ஒரு செலவும் வாங்காமல் வேலாயி வெறுங் கூடையுடன் வீட்டுக்கு வந்தாள். ''அடே அம்மா வந்துட்டா; அம்மா! மிட்டாயி'' என்று சத்தம் போட்டுக்கொண்டு சிறுவர்கள் ஓடிவந்தார்கள்.

கந்தப்பனுக்கு இதைக்கேட்கப் பொறுக்க முடியவில்லை. வேலாயியிடம் நடந்ததை ஒளிக்க அவன் இப்பொழுது கருதாமல் தனது மனதைக் கலைத்த கள்ளுக்கடையை ஒரு சிலந்திக் கூடு என மனதிற்குள்ளேயே சபிக்கலானான். அதே சமயத்தில் வேலாயியின் வாடிய கண்கள் அவன் கண்களைச் சந்தித்தன. "ஐயோ! கடையை மறுபடியும் திறந்துவிட்டு என் புத்தியைக் கெடுத்து விட்டார்களே! கடையில்லாவிட்டால் நான் புத்தி கெட்டு போயிருக்க மாட்டேனே;" என்று அவன் கதறினான்.

—●—

தி. சா. ராஜு

# 31

# மேஜர் ரஹ்மான் பேசுகிறேன்

நான்தான் மேஜர் ரஹ்மான். என்னை உங்களுக்குத் தெரியாது; ஆனால் உங்கள் அனைவரையும் எனக்குத் தெரியும்.

தமிழ் மொழி எட்டாத இந்தத் தொலை தூரத்தில், மலைச் சாரலில், ஒரு கூடாரத்தினுள் உட்கார்ந்து சிந்தனை செய்யும் போது, 'நீங்களே தான் நான்' என்ற உணர்வு எனக்குத் தோன்றுகிறது.

அன்னை காவிரி, கடலுக்குள் கலப்பதற்கு முன்னால் ஐந்து கிளைகளாகப் பிரிந்து பூம்பொழில் விளையாட்டு ஆடுகிறாளே, அந்த மாவட்டத்தில் பிறந்தவன் நான். என்னுடைய ஊர் பாபநாசத்திற்கும் ஐயன்பேட்டைக்கும் இடையே உள்ளது. அங்கேயுள்ள பூவரசு மரங்கள், தாமரைக் குளம், வாழைக் கனி, வெற்றிலைக் கொடிக்கால், ராஜன் வாய்க்கால், பிள்ளையார் கோயில், வெண்ணிற மசூதி எல்லாம் எனக்குச் சொந்தம். அவை என்னுடைய உதிரத்துடன் தொடர்பு கொண்டவை. அவைகளிலிருந்து என்னைத் தனியே பிரித்துவிட்டால் நான் வெறும் கட்டை, உயிரற்ற சவம்!

அரபு, தமிழ், ஸம்ஸ்கிருதம் ஆகியவற்றின் கலப்பான கொச்சை மொழி ஒன்றை வீட்டில் நாங்கள் பேசுவோம். சோழ மன்னர்கள் காலத்தில், நாகப்பட்டினத்திற்கு அருகில் கரை தட்டிய மரக்கலம் ஒன்றில் வந்த அரபுப் பெண் ஒருத்தியை என் மூதாதையர் மணந்ததாக என் நானி—அதுதான் பாட்டி—கூறுவது வழக்கம். என் நானிக்கு மதம் என்று ஒன்றும் கிடையாது. அவளுக்குக் குமரன் ஆவேசம் வரும்; மாரியம்மன் கோயிலுக்குப் போய் வருவதும் உண்டு. ரம்ஜான் மாதங்களில்

நோன்பும் இருப்பாள். பல ஏழைகளுக்கு 'தக்காத்' கொடுப்பாள். அவர்களில் முஸ்லிம் அல்லாதவர்களும் உண்டு. ஆனல் என் தாத்தா அப்படி இல்லே. 'பஞ்ச் நமாஜி' — அதாவது, திருக்குர்ரான் ஷெரீஃபில் கூறியுள்ள வகைப்படி ஒரு நாளேக்கு ஐந்து முறை தொழுகை புரிபவர். எந்த வேலே செய்துகொண்டிருந்தாலும் தொழுகை நேரத்தில் அவருடைய மனம் ஒருமுகப்பட்டுவிடும். அந்த வேளேயில் அவரை யாராவது காயப்படுத்தினுல் கூடத் தெரியாது, மெய்ப்பொருள் நாயஞரைப் போல.

நான் ஒரு மௌல்வியாக வேண்டும் என்று என் பாட்டனுருக்கு ரொம்ப ஆசை. அதற்காகவே அவர் என்னேச் சிறு வயதில் ஜப்பார் தாத்தாவிடம் அனுப்பினுர். ஜப்பார் தாத்தா பெரிய கல்விமான். பேசும்போதெல்லாம் அவருடைய நீண்ட வெண் தாடி அசைவது வேடிக்கையாக இருக்கும் என்ருலும் நான் கற்றுக்கொண்ட ஒவ்வொரு எழுத்துக்கும் ஒரு வாதுமை அல்லது ஒரு கல்கண்டு கொடுப்பார். அவற்றை எல்லாம் வாங்கி நான் கைலியில் கட்டிக்கொள்ளுவேன். எங்கள் சந்தில் வசித்த மீனுவுக்கும் அதில் பங்கு உண்டு. மீனு யார் என்றும் உங்களுக்குச் சொல்லியாக வேண்டும். அவள் என் இளமைத் தோழி. ஆப்பம் சுட்டு விற்கும் பட்டாச்சியின் ஒரே மகள். வாளே மீனேப்போன்ற அவளுடைய சலிக்கும் கண்கள் மிகுந்த அழகாக இருக்கும்.

ஜப்பார் தாத்தா உருது பாஷையைப் பற்றிச் சொன்னது இன்னும் எனக்கு நினேவிருக்கிறது. 'அஜீஸ் பாயி'—அவர் என்னே அப்படித்தான் அழைப்பார். இந்த மொழி சௌர்சேனி பிராகிருதத்திலிருந்து கிளேத்தது. டெல்லியின் சுற்றுப்புறத்தில் மொகலாய அரண்மனேயை ஒட்டிப் பிறந்ததால் இதற்கு தேஹ்லாவிஎன்று பெயர். பிறகு அவர்கள் ஆட்சியில் இது தழைத்து வளர்ந்தது; கடிபோலி என்று பெயர் பெற்றது. பின்னுல் உருது ஆயிற்று...''

...'உலகத்திலுள்ள மொழிகள் பெரும்பாலும் 'அ'வைத் தொடக்கமாகவும் 'ல'வை இறுதியாகவும் கொண்டும் பிறந்தவை. 'ஆலிப்' என்கிறது உருது. 'ஆல்ஃபா' என்பது கிரீக். 'ஆல்பபெட்' என்று ஆங்கிலம் சொல்லுகிறது. 'ஆலோ அந்த்யக்ஷர,' என்கிருர் பாணினி!...அவர் பேசிக்கொண்டே போவார். நான் கோலியாடுவதற்கு மெல்ல நழுவி விடுவேன். புளியடி மைதானத்தில் மஜீத், வஹ்ஹாப், சிங்காரம் எல்லோரும் எனக்காகக் காத்திருப்பார்கள்.

எனக்கு அவர் சொல்லிக்கொடுத்தது அதிகம் பிடபடவில்லே என்ருலும் ஷேக்ஸாதி, ஜமாலுத்தீன் ரூமி, ஃபர்தௌஸி,

காலிஃப், மீர் ஆகியவர்களைப் பற்றி மட்டும் இன்னும் நினைவிருக்கிறது. தாத்தாவுக்குத் தமிழ்நாட்டுச் சமய ஆசாரியர்களைப் பற்றியும் நிறையத் தெரியும். வடநாட்டுக் கஜல், கவ்வாலி, தாத்ரா, தும்ரி ஆகியவைகளில் எவ்வாறு மனத்தைப் பறிகொடுத்தாரோ, அதே அளவு ஈடுபாடு அவருக்குப் பழந்தக்க ராகத்திலும், புற நீர்மையிலும் இருந்தது, 'நேநெந்து வேதகுதூரா'— 'நான் உன்னை எங்கே தேடுவேனடா?' என்ற கீர்த்தனையின் சங்கதி வரிசைகளில் மத்திமம், தைவதம், நிஷாதம், மேல், கீழ் ஷட்ஜமம், கடைசியில் மேல் பஞ்சமம் வரையில் சென்று இறைவனைத் தியாகையர் தேடியதை அவர் விவரிக்கும்போது என் உடல் சிலிர்த்துப் போகும்.

'நோக்கரிய நோக்கே, நுணுக்காய நுண்ணுணர்வே' என்ற திருவாசகத்தைத் திரும்பத் திரும்பக் கூறி என் இதயத்தை ஆனந்தத்தால் நிரப்பிவிடுவார். உமறுப் புலவனின் சீறுப் புராணத்திற்கு ஆதாரமாக இருந்தது கம்பனின் ஆற்றுப்படலம் என்று செவிகுளிர வர்ணிப்பார்.

இதையெல்லாம் எதற்காகச் சொல்லுகிறேன் என்றால், ஒருவனுடைய இளமைப் பருவத்து நினைவுகள், சொந்த ஊர், மொழி ஆகியவை எந்த அளவு அவனை ஆட்கொண்டு விடுகின்றன என்பதை நிரூபிப்பதற்காகத்தான்.

என் பாட்டனாரின் கனவு நிறைவேறவில்லை. நானும் மற்றவர்களைப் போலத்தான் படித்தேன். வேங்கடராகவன் ரத்தினவேலு, தங்கராஜ் ஆகிய என் நண்பர்களைப் போலத்தான் நானும் பள்ளியில் எதிர்காலத்தைப் பற்றி விசேஷமான நம்பிக்கை ஏதுமின்றிப் படித்தேன். எனது உயர்நிலைப் பள்ளிப் படிப்பு முடியும் தறுவாயில், என் மாமா தாஜ்மல் ஹுஸ்ஸேன் பர்மாவிலிருந்து வந்தார். அவர் ஒரு ஹாஜி—அதாவது, புனித ஹஜ் யாத்திரை போய் வந்தவர். பர்மாவில் வசதியாக வாழ்ந்துவந்த அவர், அங்கு ஏற்பட்ட அரசியல் மாறுதல்களினால் சொந்த ஊருக்குத் திரும்பும்படி ஆயிற்று. அவர்தான் முதன் முதலில் இந்த யோசனையைச் சொன்னார்: 'தம்பி அஜீஸை டாக்டருக்குப் படிக்க வைக்கவேண்டும்' என்று. நானும் ஆசைப்பட்டேன். எதற்கு? 'சென்னைக்குப் போனால் நிறைய ஹிந்திப் படம் பார்க்கலாம்! இங்கே எப்போதாவது பாலக்கரைப் பக்கம் சென்றால்தான் பார்க்கமுடியும்!'

மருத்துவக் கல்லூரியில் இடம் கிடைப்பது கஷ்டம் என்றார்கள். மனுப்போட்டு வைத்தேன். நண்பன் வேங்கடராகவன் நிறைய மார்க்குகள் வாங்கியிருந்தான் என்றாலும் எனக்குத்தான் இடம் கிடைத்தது. ஜனநாயக அரசியலில்

பிற்போக்கு இனத்தினருக்குக் கொடுக்கப்படும் சலுகை அது. கல்லூரியிலும் சுமாராகத்தான் படித்தேன்; அதிக மதிப் பெண்கள் பெறவில்லை. பொட்டாஸியமும் நைட்ரஜனும் மனித உடலில் விளைவிக்கும் மாறுதல்களைவிட, மால் கௌஸும், ஹிமன் கல்யாணும் உள்ளத்தில் அதிக பலனை விளைவிக்க முடியும் என்ற என் நம்பிக்கைதான் மேன்மேலும் வலுப்பட்டது.

* * *

வஞ்சகச் சீனன் அப்போதுதான் நமது வட எல்லையை முழு வலிமையுடன் தாக்கினான். நாட்டைக் காக்கும் படை வெள்ளத்தில் நானும் ஒரு சிறு துரும்பானேன். நான் பெற்றிருந்த கல்லூரிப் படிப்பின் விளைவாக எடுத்தவுடனேயே எனக்கு உயர்ந்த பதவி கிடைத்தது. இரண்டு ஆண்டுகள் ஹவுஸ் சர்ஜனாகப் பணியாற்றிவிட்டு, ஐயன்பேட்டையில் பெயர்ப் பலகை மாட்டிக்கொண்டு அவஸ்தைப்படாமல், எடுத்ததுமே பெரிய ஆஸ்பத்திரியில் பணி புரியும் பெரிய வாய்ப்பு அது. நம்பவே இயலாத வசதிகள்; பெருந்தொகை ஊதியம்; திரும்பும்போதெல்லாம் சலாம் வைக்கும் சிப்பாய்கள்—தலை கிறுகிறுக்கத்தான் செய்தது.

ஆஸ்பத்திரிக்கு வரும் நோயாளிகளிடம் உறவாடிய பிறகு எனக்குத் தோன்றியதெல்லாம் இதுதான். படை வரிசையின் கீழ்ப்படியில் உள்ளவர்களுக்குத் தேவையானது பரிவுணர்ச்சியே தவிர மருந்தல்ல, என்பதுதான் அது. நான் மருந்துச் சீட்டை எழுதும்போதெல்லாம் என் பாட்டியைத்தான் நினைத்துக் கொள்ளுவேன். அவள் கொடுப்பதெல்லாம் ஒரே மருந்துதான். மசூதியிலிருந்து வரும் நாட்டுச் சர்க்கரை — அதைத்தான் ‘இன்ஷா அல்லா’, என்று கூறி அவள் தருவாள். பண்டார வாடைக் கிராமத்தில் பிரசித்தி பெற்ற வைத்தியர் எங்கள் பாட்டிதான். நானும் மனதிற்குள் சொல்லிக் கொள்ளுவேன். ‘இன்ஷா அல்லா? — இறைவனின் திருவுள்ளப்படி.’

இந்த உல்லாச வாழ்வு நிலைத்திருக்கவில்லை. ஆயிரம் படையினர் கூடிய ரெஜிமெண்ட் ஒன்றிற்கு நான் மருத்துவனாக நியமிக்கப்பட்டேன். அந்தப் படைப் பகுதி நாட்டின் வடகிழக்கு எல்லைக்குச் சென்று, அங்குள்ள மலைச் சாரலில் முகாம் இட்டது. உயர்ந்து அடர்த்தியான வனங்களிடையே நாங்கள் மூங்கில் வீடுகளில் குடியிருந்தோம். வெகு தொலைவில் கீழேயிருந்த ஒரு சுனையிலிருந்து குடி தண்ணீர் வரவேண்டும். செதில் செதிலாகப் பனிப்பாறை படர்ந்த மலைப் பிளவுகளுக்கிடையே, குளிர் உடை தரித்துக்கொண்டு, வெறும் கட்டாந்தரையைக் காவல் காக்கும் சிப்பாய்கள். இரவும் பகலும் சோர்வைத்தரும் ஒரே மாதிரி

யான காட்சியில் பார்வையைச் செலுத்திக் கொண்டிருக்கும் அந்த வீரச் சிலைகளை நினைக்கவே நெஞ்சு கூசுகிறது. அந்தக் காவலருக்குப் பக்கத்தில் ஒரு கணப்புச் சட்டி, கொடும் பனியினுல் வெடித்து மரத்துப் போய் ரத்தம் கசிந்து நிற்கும் அந்தச் சிப்பாய்களின் புண்களை என் பணியாள் ஹர்கீரத் வெந்நீரினுல் கழுவுவான். நான் மருந்தைப் பஞ்சில் தேய்த்துத் தடவுவேன். அப்போது என் அன்னையின் புண்களுக்கே மருந்திடுவது போன்ற ஒரு மெல்லுணர்ச்சி என்னைக் கவ்வும். அந்த வீரர்களுக்கு உற்ற தோழன், தாய் சகோதரி எல்லாம் நான்தான்.

என் பணிமகன் ஹர்கீரத் சிங், தாடியில்லாத ஒரு சீக்கியன். நாட்டுப் பிரிவினையின்போது கலகக்காரர்களிடமிருந்து தப்பு வதற்காக வேஷம் மாறியவன், அப்படியே இருந்துவிட்டான். அமைதியே வடிவான பேருரு. அவனைக் காணும்போதெல்லாம் என் மனத்தில் பரவச உணர்ச்சி உண்டாகும். ஹர்கீரத்துக்குக் கோபம் வந்து நான் பார்த்ததே கிடையாது. சதா ஒரு பஜனைப் புத்தகத்துடன் அவனைக் காணலாம்.

எங்கள் படை முகாமுக்கு மறுபடியும் மாற்றல் உத்தரவு வந்தது. உடனடியாகப் பட்டாண்கோட்டிற்குப் புறப்பட்டோம். எங்கள் படையினர் காவல் புரிந்த இடத்தை அஸ்ஸாம் போலீஸார் ஏற்றுக்கொண்டார்கள். சர்க்கஸ் கம்பெனியைப்போல நாங்கள் குடி பெயர்ந்தோம்.

மறுபடியும் மெஸ் ஆடலரங்கு, ரெஃப்ரிஜிரேட்டர், ஜின், டைட் கம் மீஸ், ஹேர்டூ, ஸ்லீவ்லெஸ் ப்ளவுஸ், லாவண்டர், ஸோஷல் நைட்!—ஆனுல் இப்போது எனக்கு இவைகள் அவ்வளவு இதம் தரவில்லை. கட்டாயப் படுத்தப்பட்டாலொழிய மெஸ்ஸிற்குப் போவதையே நிறுத்திக்கொண்டேன். ஹர்கீரத் சிங், ஜப்ஜீயும் சுக்மனியும் படித்தான். வாரிஸ் ஷாவின் ஹீர், ராஞ்சாவைப்பற்றி எனக்குக் கூறினுன். செனுப் நதிக்கரையில் வாழ்ந்த அமரகாதலர்களான ஸஸ்ஸிபுன்னு, மீர்ஜா ஸாஹிபான் ஆகியோர் என் கனவில் உலாவினர். அவனுடன் பேசிக் கொண்டிருப்பதே எனக்குப் பெரும் பொழுதுபோக்காக இருந்தது. அப்போது காஷ்மீர எல்லையில் புகைந்துகொண்டிருந்த கனல் கொழுந்துவிட்டது; சற்றே பரபரப்பு-எங்கள் படை முகாமைப்பற்றிக் கவலையில்லை; நாங்கள்தான் ஓய்வில்இருக்கிறோமே!

1965 செப்டம்பர் நான்காம் தேதி என்று நினைவு. எங்கள் முகாம் இலேசாக ஆட்டம் கொடுத்தது. அண்மையில் வெடிச் சத்தம் கேட்கத் தொடங்கிற்று. நாங்கள் அம்யூனிஷன் பூட்ஸுகளைத் தேடலானேம். செப்டம்பர் ஏழாம் தேதி நாங்கள்

புறப்படுவதாக முடிவாயிற்று. ஹர்கீரத்துக்கு உடல் நலம் சரியில்லை. அவனை ரியர் பார்ட்டியில் விட்டு வரும்படி கமாண்டிங் அதிகாரி உத்தரவிட்டார். அதை ஹர்கீரத்திடம் கூறியபோது, அவனுடைய கண்கள் கலங்கின. ''காப்டன் ஸாஹிப், நான் உங்களோடு தான் வருவேன். உங்களை விட்டால் எனக்கு வேறு துணை ஏது?'' என்றான் அவன், தழதழத்த குரலில். நான் நெகிழ்ந்து போய்விட்டேன். ''எனக்கு மட்டும் உன்னை விட்டால் வேறு உதவி ஏது ஹர்கீரத்? நீ என்னோடு வா! உன் உடல் நிலையையும் வயதையும் எண்ணித்தான் அவ்வாறு முடிவு செய்தோம். நாம் இப்போது எங்கே போகப் போகிறோம் என்று தெரியுமல்லவா?'' என்றேன் நான்.

ஹர்கீரத் தன்னுடைய அகலமான மோவாயைத் தடவி விட்டுக்கொண்டான். ''அது தெரிந்து என்ன ஆக வேண்டும், ஸாஹிப்? என்றைக்குமே நான் நாளையைப் பற்றிக் கவலைப்படவில்லையே! இந்த நாட்டில் தர்ம ராஜ்யம் நடக்க வேண்டும் என்றால், சுதந்திரம் பறி போகாமல் காக்க வேண்டும். அதற்காக ஒவ்வொரு சிப்பாயும் செய்யும் பணி மகத்தானதல்லவா?'' என்று சொல்லிக்கொண்டே அவன் வானத்தை நோக்கினான். பிறகு, ''அவர்களுடைய துயரத்தை நீங்கள் போக்குறீர்கள். அத்தகையவர்களுக்கு என்னால் ஆன உதவியைச் செய்கிறேன் என்ற திருப்தி மட்டும் எனக்குப் போதுமே?'' என்றான்.

ஹர்கீரத்தின் தத்துவம் முழுவதும் எனக்குப் புரியவில்லை தான். என்றாலும் அவனுடைய முக பாவமும் குரலும் என்னை இளக்கிவிட்டன.

* * *

இந்தப் பிராந்தியத்தில் தசராவுக்கு முந்திய பருவம் மிகவும் ரம்மியமானது. கடும் வெய்யிலின் கொடுமை தணிந்து, மழை பெய்து, புழுதி அடங்கி, குளிர் காலம் தொடங்குவதற்கான அறிகுறிகள் தலை காட்டும். வாதுமை முதிரும்; அக்ரோட் உதிரும்; செக்கச் சிவந்த ஆப்பிள்பழங்கள் கன்னியரைப் போல் நாணிச் சிவக்கும். பப்புகோஷா, நாஷ்பதி, ப்ளம், பீச், க்ளாஸ் என்று பலவகைக் கனிகள். அவைகளைச் சுவைக்க மத்திய ஆசியாவிலிருந்து கூடப் பல வண்ணப் பறவைகள் இங்கு வரும். பீர்பஞ்சால் மலையின் உச்சியிலுள்ள மூன்று தெய்வ சிகரங்களும் இந்தப் பருவத்திற்குரிய அலங்காரமான வெண்பனி மகுடம் தரிக்கத் தயாராக நிற்கும். காற்றிலே ஒரு நைப்பு; ஈரத்தின் கனம்; உயிரினம் துணையை நாடும் தாபம் எழும். அந்தத் தாபத்தை இந்தச் செனுப் நதிக் கரையில் வாழ்ந்த கவிஞர்கள் அற்புதமாக வர்ணித்திருக்கிறார்கள். ஆத்ம லயம் பெறக்கூடிய

பேரின்பத்திற்கு அடிக்கல்லாகச் சரீர தர்மத்தை அடிப்படையாகக் கொண்டு, உள்ளத்தைக் கிளர்ந்தெழச் செய்யும் அழகுக் கவிதைகளை அவர்கள் யாத்தார்கள். அவற்றை மனத்தை உருக்கும் பண்களில் அமைத்துப் பாடினார்கள். இப்படி எத்தனையோ மதுர பாவக் காட்சிகளைக் கண்டுள்ள பனிநீர் ஆறு, இப்போது வேறு விதமான அனுபவத்தைப் பெற இருந்தது.

நிர்வாகத் திறனும், படை அனுபவமும் கொண்ட பாகிஸ்தானின் அதிபர் இத்தகைய தவற்றைச் செய்திருக்க வேண்டாம். சீனப் படையெடுப்பு நம்மை நிலை குலையச் செய்தது உண்மைதான். என்றாலும் அது நம்மை விழிப்படையவும் செய்துவிட்டது. கட்ச் பிரதேசத்தில் நம்மைக் கலக்கி ஆழம் பார்த்தார் அயூப். நிலைமை அவருக்குச் சாதகமாக இருப்பதைப் போல் தோன்றியது. ஆகவே, சற்றும் எதிர்பாராத மூலையில் தமது படை ஆப்பைச் செலுத்தித் தேவா, சம்ப், சக்ராணு ஆகிய பகுதிகளில் இந்திய எல்லைக் காவலைத் தடுமாறச் செய்து, மனேவர் நதியைக் கடந்து, ஜௌடியான் வரையில் மின்னல் வேகத்தில் பாகிஸ்தான் படைகளை முன்னேற விட்டார். இன்னும் இரண்டு நாட்கள் தாமதித்திருந்தால் இந்திய நாட்டின் ஒரு பெரும் பகுதி துண்டாகியிருக்கும். பஞ்சாப்பைத் தாக்கும் ரகசியத் திட்டம் ஒன்றும் அவரிடம் இருந்தது.

கொல்லாமைத் தத்துவத்தை மேற்கொண்ட காந்தியடிகள், சமாதான நோக்கைக் கொண்டிருந்த நேருபிரான் ஆகியோரிடம் பயிற்சி பெற்ற குற்றுருவப் பெருமகன் லால்பகதூர் சீறி எழுந்தார். வேரும் வேரடி மண்ணுமில்லாமல் வெந்து போகும்படி பகைவனைச் சாட உத்தரவிட்டார்!

மலை அசைந்தது!

அது எப்படி நிகழ்ந்தது என்று என்னால் விவரிக்க இயலவில்லை. ஆனால், அது நடந்தே விட்டது. படையினரின் கவனம் எல்லாம் பாகிஸ்தானின் திசையை நோக்கியே இருந்தது. கேம்கரன், அமிர்தசரஸ், குருதாஸ்பூர், ரணபீர்சிங்புரா—இப்படிப் பல இடங்களிலிருந்து பாரதப் படைகள் முன்னேறிய வண்ணம் இருந்தன. ஒரே கோஷம் வானை அளாவிற்று: ‘சலோ லஹோர்!’

பாகிஸ்தானிகளும் இதே மண்ணினால் ஆனவர்கள் தானே? அவர்களும் பதிலடி கொடுத்தார்கள். இந்தியப் படையினர் முன்னேற முடியாமல் டேராபாபா நானக் என்ற இடத்தில் ராவி நதிப் பாலத்தையே தகர்த்தெறிந்தார்கள். இரவோடிர

வாக அதைக்கட்டி முடித்து நதியைக் கடந்த இந்திய என்ஜினீயர் படைகளை எப்படிப் புகழ்வது? என்ன கூறி வாழ்த்துவது?

பாகிஸ்தானின் களஞ்சிய நகரம் என்று கூறத் தக்க சியால் கோட் முற்றுகைக் குள்ளாகியிருந்தது. சவிண்டா என்ற கேந்திரத்தை எங்கள் ரெஜிமெண்ட் கைப்பற்றிவிட்டது. நாரோன்வால் ஸ்டேஷனும் எங்கள் கையில். சியால்கோட்டுக்கு எத்தகைய உதவியும் போக முடியாது. அங்கிருந்து யாரும் வெளியேற முடியாது. நிலையிழந்து போன பாகிஸ்தான் படையினர் சர்வதேசப் போர் உடன்பாடுகளை மீறி, நேபாம் வெடிகுண்டுகளை வானத்திலிருந்து வீசத் தொடங்கினார்கள். அவற்றினால் இந்தியப் படைகளுக்கு நேர்ந்த ஆட்சேதம் கொஞ்ச நஞ்சமல்ல. உடல் முழுவதும் தீப்புண்கள் பட்டு முகாம் ஆஸ்பத்திரிக்கு வந்த வீரர்களுக்கு எங்களால் அதிக வைத்திய வசதிகூட அளிக்க முடியவில்லை; முகாம் ஆஸ்பத்திரி அவ்வளவு சிறியது.

பகலெல்லாம் நோயாளிகளைக் கவனித்துவிட்டுச் சிறிது நேரம் நாற்காலியில் அமர்வேன். நிறையச் சீனி போட்டு, ஒரு குவளைத் தேநீரை எனக்குக் கொடுப்பான் ஹர்கீரத். மாலை நெருங்கும்; மறுபடியும் ஒரு ஸ்ட்ரெச்சர் வண்டி வரும். அதில் இருப்பவர்களை இறக்கி, மோசமான கேஸ்களைப் பெரிய ஆஸ்பத்திரிக்கு அனுப்புவதற்குள் அபாய அறிவிப்பு விட்டு விட்டு ஒலிக்கும். கையில் ஸர்ஜிகல் ஸ்பேட்டுலாவுடன் பதுங்குக் குழியில் ஒளிவேன். நீண்ட குழல் ஒலி கேட்ட பிறகுதான் வெளியே வருவேன். மறுபடியும் நோயாளிகள், முனகல், வலி, வேதனை, ரத்தம்—நின்றபடியே உறங்குவேன்; உறங்கிக்கொண்டே ஊசி போடுவேன். என்னை எந்தச் சக்தி ஊக்கிற்று? எனக்கே தெரியாது. என்னுடைய கைகள் இரண்டும் வேலையில் ஈடுபட்டிருக்கும் தருணத்தில் சூடான தேநீரை என் உதட்டருகில் கொண்டு வருவான் ஹர்கீரத். அதை உறிஞ்சி விட்டு மேலே பணியைத் தொடர்வேன். இறைவனின் கருணை இப்படித் தான் இருக்குமோ?

* * *

செப்டம்பர் பதினன்கு என நினைக்கிறேன். இந்தியப்படை எதிர்பாராத முறையில் தாக்கப்பட்டது. பெரும் சேதம் இரு தரப்பிலும். அன்று வந்த காஷுவாலிடிகளில் பாகிஸ்தானிகளும் இருந்தனர். அழகிய இளைஞன் ஒருவன் எனது ஆபரேஷன் மேஜையில் படுத்திருந்தான். அவனுடைய இடது தோளில் குண்டு பாய்ந்திருந்தது. ப்ளேடினால் அவனுடைய சட்டையைக் கிழித்தான் ஹர்கீரத். அங்கே ஒரு வெள்ளித் தாயத்து பளபளத்தது. அதை மெல்ல நீக்க முற்பட்டான் அவன்.

''தொடாதே!''-அரை மயக்க நிலையிலும் அந்த வாலிபன் அதைத் தடுத்தான். ஹர்கீரத் சிங்கின் உடல் பதறிற்று. அந்த இளைஞனின் தலையை அன்புடன் கோதிவிட்டான். அப்போது அவனுடைய ரோமங்கள் பொடித்து நின்றதை நான் கவனித்தேன். ஒரு கணம் செயலற்று நின்றுவிட்டு, வெந்நீர் கொண்டு வர உள்ளே ஓடினான். ஐந்து நிமிஷங்கள் கழிந்தன. நான் பொறுமை இழந்து பின்னறைக்குச் சென்றேன். இரு கைகளிடையே முகத்தைப் புதைத்துக்கொண்டு விம்மி விம்மி அழுதவாறு இருந்தான் ஹர்கீரத் சிங். அவன் அழுவதை நான் அன்றுதான் பார்த்தேன். அதற்கு மேல் அங்கு நிற்க நேரமில்லாமல் முன்னறைக்கு வந்தேன்.

துப்பாக்கி ரவை அதிக ஆழத்திலில்லை. அதை வெளியே எடுத்துக் கட்டுப் போட்டுவிட்டு, அடுத்த நோயாளியைக் கவனித்தேன். அடுத்தடுத்து அவர்கள் வந்தவண்ணமிருந்தார்கள்; எனக்கு ஓய்வே இல்லை.

மறுநாள் காலை அந்த இளைஞனின் முகத்தில் தெளிவு கண்டிருந்தது. ஹர்கீரத்தின் உதவியுடன் அவனுடைய உதடுகளை விலக்கி, நான் மருந்தை உள்ளே செலுத்தினேன். அவன் அதை வாயில் அடக்கி வைத்திருந்து, என் முகத்தில் 'தூ' வென்று உமிழ்ந்தான். அவனது கண்களில்தான் அப்போது எத்தனை குரூரமான பாவனை!

''என்ன அஹமத்?''

அவனுடைய பெயர் எனக்குத் தெரிந்திருந்தது. பதறிப்போன ஹர்கீரத், ஏப்ரனின் உதவியால் என் முகத்தைத் துடைத்தான்.

''காஃபரின் கை தொட்டு நான் எதுவும் சாப்பிட மாட்டேன்!'' என்றான் அவன்.

'தாருல் லார்ப்—தாருல் இஸ்லாம்!'—எனக்கு எங்கள் ஜப்பார் தாத்தாவின் நினைவு வருகிறது.

ஹர்கீரத் இள நகை புரிகிறான்; ''மகனே! காப்டன் சாகிபும் இஸ்லாமானவர்தான்!'' என்கிறான்.

வலது கை விரல்களை ஒன்று சேர்த்துக் குவித்து நெற்றியில் வைத்து நான் சலாம் செய்கிறேன்:

'ரஹம துல்லா வராகத்!'

அஹமதின் கண்கள் வியப்பினால் மலர்கின்றன. ஆம், 'இந்தியாவில் முஸ்லிம்கள் எல்லாம் காலில் விலங்கு பூட்டப்

பட்டு உலாவுகிறார்கள்' என்று அவனுக்குப் போதனை செய்யப் பட்டிருந்தது!

இஸ்லாமானவர், இந்தியாவில் ஒரு போர்ப் படை அதிகாரி; அதுவும் முன்னணியில். பாகிஸ்தான் படையிலோ ஹிந்துக்களே கிடையாது!

அஹமதின் கண்கள் அயர்கின்றன; ஹர்கிரத் அவனுடைய நெற்றியை வருடுகிறான்.....

அப்போது நான் தங்கியிருந்தது ஒரு பள்ளிக்கூடக் கட்டிடம். சுவரில் பெரிய கரும் பலகை பதித்திருந்தது. அடுத்ததொரு சிற்றறையில் ஹர்கீரத் தங்கியிருந்தான். பல இடங்களில் சுவர் வெடித்திருந்தது. துப்பாக்கி ரவையினால் ஏற்பட்ட துளைகள் வேறு அங்கங்கே காணப்பட்டன.

மாலைத் தொழுகையை முடித்து விட்டு என் சிறிய பாயை நான் சுருட்டிக் கொண்டிருந்தேன். ஏனோ எனக்கு ஹஸரத் அலிகான் நினைவு வந்தது. போர்க்களத்தில் அவருடைய உடலில் ஓர் அம்பு பாய்ந்துவிட்டது. அதை நீக்கினால் அலி அவர்களுக்கு மிகுந்த வேதனையும் உதிரச் சேதமும் உண்டாகும் என்று கூட வந்திருந்த ஹக்கீம்கள் கருதினார்கள். அவர் தொழுகைக்கு அமரும் சமயத்தில் அந்த அம்பை நீக்கிவிடுவது என்று அவர்கள் முடிவு செய்தார்கள். அதாவது, ஹஸரத் அவர்களுக்கு பிரார்த்தனை நேரத்தில் தன் நினைவே இராது என்பதை அவர்கள் கண்டு வைத்திருந்தார்கள். ஏக தெய்வம், ஏகாக்ரதை ஆகிய கொள்கைகளை ஒரு போர் ஆவேசத்துடன் பரப்பியதை நபிநாயகம் (ஸல்) அவர்களின் மிகப் பெரிய சாதனை என்றுதான் கூறவேண்டும். அதனால் தான் அந்தத் தரத்திற்கு மிகச் சிறிய சலனம் ஏற்படுவதையும் இஸ்லாமியர் தீவிரமாக எதிர்க்கிறார்கள்.

நம் நாட்டிலும் நெஞ்சில் குண்டு பட்டு ஆவி பிரியும்போது காந்தியடிகள் கூறிய கடைசி வார்த்தை 'ஹே ராம்' என்பது தான். அந்த இரண்டரை அட்சரம் கடைசி வினாடியில் நினைவுக்கு வர வேண்டுமானால், வாழ்நாள் முழுவதும் அதை உருப்போட்டிருக்க வேண்டும். பக்கிரி கபீர் அப்படித்தான் கூறுவார். இஸ்லாமியத் தத்துவங்களை அடியாழம் வரை ஆராய்ந்த அவர், ராம நாமத்தை 'டாயி அட்சர்'-இரண்டரை அட்சரம் என்றுதான் குறிப்பிடுவார். என்னைப் பொறுத்த வரையில் அத்தகைய ஒரு முனைப் பாங்கு ஏதும் என்னிடம் கிடையாது. ஆனால், தொழுகை முடிந்தபின்னர் மனத்தில் மணமிக்க நல்லெண்ணங்கள் தோன்றுவது வழக்கம். ஆனால் தொழுகையின் போதோ?—அது ஒரு தனி அத்தியாயம்...

வெளி வராந்தாவிலே நிழல் ஆடிற்று. செண்ட்ரி உள்ளே வந்து ஸலாம் வைத்தான். ''ஸாஹிப், யாரோ ஒரு புர்க்கா ஸ்திரீ வந்திருக்கிருள். உங்களை உடனடியாகப் பார்க்க வேண்டுமாம்!'' என்ருன்.

எனக்கு வியப்பாக இருந்தது. பாசறை. முன்னிரவு நேரம். என்னைப்பார்க்க ஒரு பெண்!...

என் அறையில் அப்போது ஒரே ஒரு மெழுகுவத்தி மட்டும் எரிந்துகொண்டிருந்தது. என்னை அவள் எதற்காகப் பார்க்க வேண்டும்?...

''கூட யாரும் இல்லையா!''

என் நாவு ஏனோ தடுமாறுகிறது.

''ஒரு சிறு பையனும் வந்திருக்கிருன்!''

நான் நெட்டுயிர்க்கிறேன்.

''உள்ளே வரச்சொல்!''

முதலில் ஒரு சிறுவன் உள்ளே வந்து உடலை வளைத்துத் தன் பிஞ்சுக் கரங்களால் வணக்கம் தெரிவித்தான். ஜரிகை தைத்த மெல்லிய மஸ்லின் குர்த்தா. அதனுள்ளிருந்து இடது கையில் ஒரு தாயத்து தெளிவாகப் புலப்படுகிறது. தலையில் பெரிய ஃபெஸ் தொப்பி. அவனுக்குப் பின்னல் பர்தா அணிந்த மாது; மருக்கொழுந்தின் இனிய மணம்; அவளுடைய கால்களில் அழகிய செருப்புக்கள்; செம்பஞ்சுக் குழம்பு பூசிய சந்தன வண்ணப் பாதங்களில் வெள்ளி ஆபரணங்கள்...

நான் எழுந்து நிற்கிறேன். அறையில், என் முகாம் கட்டிலைத் தவிர ஒரே ஒரு ஸ்டூல் மட்டும் உள்ளது. முகத்திற்கு முன்னுலிருந்த வலைச் சன்னல் வழியாக அவள் என்னைப் பார்த்துப் பேசுகிருள்:

''ஐயா, எனக்கு உங்கள் அனுமதி வேண்டும். என் தம்பி அஹமதை நான் பார்க்க வேண்டும்!''

எடுத்தவுடனேயே வந்த காரியத்தைப்பற்றிக் கூறுகிருள் அவள்.

''உட்கார்ந்துகொண்டு பேசலாமே?''

நான் பணிவுடன் என் கட்டிலைக் காட்டுகிறேன்; அவள் அந்தச் சிறுவனுடன் அமர்கிருள்.

''என் பெயர் ரஹ்மான். என்னையும் உடன் பிறந்தவனாக மதிக்கலாம், ஆப்பாஜான்! அண்ணனின் முன்பு தங்கை பர்தா அணிவது வழக்கமில்லையே?''

நான் தழதழத்த குரலில் அவளை உற்றுப் பார்த்தவாறு கூறுகிறேன்.

அவள் முகத்திரையை அகற்றுகிறாள். பாஞ்சால நாட்டின் வளமான மண்ணும் தட்ப வெட்பமும் அவளுடைய உடலுக்கு மெருகூட்டியிருந்தன. ஒவ்வொரு அங்க வளைவும் எழிலைப் பறை சாற்றின. என் கண் முன்னால் பனிக் காலத்துச் செனுப்நதி தென்பட்டது. தேநீருடன் வந்த ஹர்கீரத் வாயிற்படியில் ஒரு கணம் தயங்கி நிற்கிறான். கோப்பையைக் கையில் வாங்கிக் கொண்டு, ''இன்னும் கொஞ்சம் தேநீர் வேண்டும், கொஞ்சம் பிஸ்கட்டும்கூட'' என்று கூறுகிறேன். புர்க்காவினால் தன்னை மறைத்துக் கொள்ளும் முன்பு அந்த யுவதியை மறுபடியும் அவன் ஏறிட்டுப் பார்க்கிறான். பிறகு, அவன் திரும்பி நடக்கும் போது ஏனோ அவனுடைய நடை தளர்கிறது.

அந்த யுவதி தேநீர் அருந்தியவாறு சொன்ன வரலாறு இது:

* * *

வல்லியான் என்ற அந்தக் கிராமத்தில் அவர்கள் குடும்பம் பல தலைமுறைகளாக வசித்து வருகிறது. ரெஹானாவின்—அது தான் அவள் பெயர்—தந்தை பல கரும்பு வயல்களுக்குச் சொந்தக் காரராக இருந்தார். அவர் ஒரு சீக்கியர். அவளுடைய தாய் ஒரு முஸ்லிம்; ஷரீன் என்று பெயர். அவளுடைய பெற்றோர் களின் கூட்டுறவைச் சமுதாயம் ஏற்கவில்லை. அவளுடைய தந்தையோ பெரிய செல்வந்தர்; ஆள் கட்டும் செல்வாக்கும் உடையவர். அதனால் யாரும் எதிர்த்துப் பேச முன் வரவில்லை. ஆனால் நாட்டுப் பிரிவின்போது ஊரார் அவர் மீது குரூரமாகப் பழி தீர்த்துக்கொண்டார்கள். அந்தக் கிராமத்தில் முஸ்லீம் அல்லாதவர்களே இருக்க முடியாத நிலை ஏற்பட்டுவிட்டது. அதன் விளைவாக அவளுடைய தந்தையும் ஊரை விட்டே போய் விட்டார். இன்று பதினெட்டு ஆண்டுகளுக்கு மேல் ஆகிவிட் டது...

''உன் தாயார் நலமாக இருக்கிறாரா?''

நான் வினவுகிறேன்.

அவள் உச்சி முகட்டை நோக்கினாள். கண்களை நீர்த்திவலை மறைத்தது. தேநீர்க் குவளையைக் கீழே வைத்தாள்.

"மறு நாள் பிற்பகலில் வந்தால் தப்பி அஹமதைச் சந்திக்கலாம் என்று கூறி, ரெஹானுவை அனுப்ப முற்பட்டேன்.

சிறுவன் எழுந்திருந்து தலையைக் குனிந்து வலது கையை நெற்றிக்கு உயர்த்தினன்.

"குதா ஹாஃபீஸ் சாச்சாஜீ!"

"குதா ஹாஃபீஸ்! உன் பெயரை எனக்குச் சொல்லவேயில்லையே?"

அவனுடைய முதுகை வருடினேன்.

"என் பெயர் இப்ராஹிம்!"

ரெஹானுவின் கையைப் பிடித்துக்கொண்டு நடந்தான் அவன். வெளி வேலிவரை சென்று அவர்களை வழி அனுப்பி விட்டுத் திரும்பி வந்தேன். ஹர்கீரத் சிங் மெழுகுவத்தி வெளிச்சத்தில் ராகம் போட்டுக் குருவானியைப் படித்துக் கொண்டிருந்தான். அவனுடைய வலது கை, தன் இடது தோளிலிருந்த தாயத்தைத் தடவிய வண்ணமிருந்தது.

"தேஹோ ஷிவா (ஹ்)வர்
மோஹே யஹே
ஷுப் கர்மண் தே
கப்ஹூ நடரு(ன்)..."

('உலக நன்மைக்கான நற்பணிகளைச் செய்ய முற்படும் போது எத்தகைய தயக்கமும் எனக்கு ஏற்படாதிருக்க அருள் இறைவா!'—குரு கோவிந்தர்.)

* * *

மற்ற நாட்களாக இருந்தால் நானும் அவன் பக்கத்தில் போய் உட்கார்ந்து கொள்ளுவேன். அவன் பாபா நானக்கின் பேருரைகளை உணர்ச்சி பொங்கப் படித்துக்காட்டுவான். ஸத்னு, ஃபரீத், மர்தானு, பாலா ஆகிய இஸ்லாமியர்கள்கூட அவருக்குச் சீடர்களாக ஆன விவரத்தை அவன் எனக்குக் கூறும்போது அவனுடைய கண்கள் கலங்கிவிடும். ஃபரீதின் மணி மொழிகள் கூட குரு கிரந்த சாஹிப்பில் உள்ளன என்று அவன் பெருமையோடு கூறுவான். அப்போது அவனுடைய விழிகள் கண்ணீரில் மிதக்கும்.

ஆனல் இன்று என் மனம் ஒரு நிலையில் இல்லை. செனுப் நதி சுழிப்புடன் ஓடும் காட்சிதான் தென்பட்டது. கட்டிலில் படுத்தேன்; இரவு முழுவதும் நான் உறங்கவே இல்லை.

போர் உச்ச நிலையை அடைந்தது !

தனது நெஞ்சில் வந்து உட்கார்ந்து சதையைப் பிருண்டிக் கொண்டிருக்கும் பாரதப் படைகளை எப்படியாவது விலக்கிவிட வேண்டும் என்று பாகிஸ்தான் தீவிரமாக முயன்று பார்த்தது. அந்த முயற்சியில் அது இழந்த படைக்கலன்கள் கொஞ்ச நஞ்ச மல்ல ! ஐ. ந. ாவின் செயலாளர் இந்தத் துணைக் கண்டத்திற்கு வந்து நிராசையுடன் திரும்பிச் சென்றார். வெற்றியடைந்த நிலையிலும் இந்தியா போர் நிறுத்தத்திற்குத் தயார் என்று உலகிற்கு அறிவித்துத் தன் பெருந்தன்மையைக் காட்டிக் கொண்டது. ஆனால் காயமடைந்த புலியோ, படுத்தவாறே சீறிற்று. நிணம், தீ, உதிரம், பேயரவம், இடி பாரதம் அங் குலம் அங்குலமாகப் பாகிஸ்தானிய மண்ணில் முன்னேறிற்று.

ஹர்கீரத் சிங்கின் நடத்தையில் சிறிய மாறுதலைக் கண் டேன். அவன் ஒரு போதும் பாசறை முகாமை விட்டு வெளி யேறுவது வழக்கமில்லை. ஆனால் தற்போது அவன் மாலையில் படை வீட்டிற்குள் தங்குவதில்லை. எங்கே போகிறானென்றும் தெரியாது. ஆனால் அவன் திருப்பி வரும்போது அவனுடைய முகத்தில் அசாதாரணமானதோர் அமைதி நிலவக் கண்டேன். அவனது செயல்களில் ஒரு புதிய வேகம் மிளிர்வதைப் பார்த் தேன். இரவு வேளையில் அவன் மெழுகுவத்தியின் ஒளியில் வெகு நேரம் வரை படித்துக்கொண்டிருந்தான். குரு கோவிந்த ரின் அந்த வேண்டுகோள் என் மனதிற்குள் புகுந்து ரீங்கார மிட்டது.

''அத்ஹீ ரண்மே தப்
ஜ்யூஜ் மரு(ன்)...''

* * *

செப்டம்பர் இருபத்து நாலு. கடைசியாகப் போர் நிறுத்தம் ஏற்பட்டு விட்டது. அது ஏற்படப் போகிறது என்று தெரிந் தும், அந்தக் கடைசி எல்லை நேரத்திற்கு இரண்டு மணி நேரம் முன்பு நிராதரவான அமிர்தஸரஸ் குடிகளின்மீது குண்டு மழை பொழிந்தது. பாகிஸ்தான் ஆனாலும் பாஞ்சாலம் கலங்கவில்லை. சிக்கந்தரின் நாளிலிருந்து எத்தனை எதிரிகளை அது சமாளித்திருக் கிறது !

எங்களைச் சுற்றியிருந்த இரும்பு வளையம் சற்றே தளர்ந்தது. இரவில் பிரகாசமான விளக்குகள்; ரேடியோ-படை வீரர்கள் முகாமை விட்டுச் சற்று விலகி, விளை நிலங்கள் வரை சென்று உலாவி வர அனுமதி.

எங்கள் படைத் தலைவர் வெகு கண்டிப்பான பேர்வழி. பாகிஸ்தானி கிராமவாசிகளுக்கோ, அவர்களுடைய பயிர்வகை, கன்று காலிகளுக்கோ, தம் படையினர் எத்தகைய ஊறும் விளைவிக்கக் கூடாது என்ற கொள்கையைத் தீவிரமாகக் கடைப் பிடித்து வந்தார். எங்கள் முகாமைச் சுற்றி முற்றிய கதிருள்ள விளை நிலங்கள். வல்லியான் கிராமத்தின் நம்பர்தார் வயல்களை அறுவடை செய்துகொள்ள அனுமதி வேண்டினர். உடனடியாக அதை அளித்ததுடன், அவற்றைக் கிராமத்தினுள் கொண்டு சேர்க்க வாகன உதவியும் தந்தார், எங்கள் டிவிஷன் கமாண்டர்.

செப்டம்பர் முப்பது. போர் நின்றுவிட்டாலும் அந்தச் சூழ்நிலை முற்றிலும் விலகவில்லை. இரு தரப்பிலும் மறுபடியும் பொறி விழுந்து தீப்பற்றிக் கொள்ளாமல் இருக்க வேண்டுமே என்று எனக்குக் கவலைதான்!

அன்று மாலை நான் கேஸ் குறிப்புகளைப் பார்வையிட்டுக் கொண்டிருந்தபோது, ஏதோ ஒரு மருத்துவ வார்த்தையின் அர்த்தத்தில் சந்தேகம் வந்தது. அதைக் குறித்து எண்ணிக் கொண்டிருக்கும் வேளையில் என்னையறியாமலேயே வலது கை ஏதோ கிறுக்கிற்று.

'சரியாகச் சீர் செய்யப் பெருத குழல் கற்றைகள், பிறை நிலா நுதல், வாதுமைக் கண்கள், காஷ்மீர நாசி, செப்பு வாய், செதுக்கி எடுத்த தாவாங்கட்டை, சங்குக் கழுத்து, செழுந்தோள்கள், கம்மீஸிலிருந்து விம்மிப் புடைத்த தனங்கள், ஒடுங்கிய இடை!'-சே, இதென்ன? மனத்தின் அடியாழத்தில் புதைந்த எண்ணம் எந்த வகையிலாவது வெளிப்பட்டே தீர்கிறது. ரெஹானவை அதற்குப் பிறகு ஒரே ஒருதரம்தான் பார்த்தேன். அதாவது மறுநாள் தன் தம்பியைக் காண வந்தபோது. அடுத்த இரண்டு நாட்களில் மற்றக் கைதிகளுடன் அஹமதையும் டெல்லிக்கு அனுப்பி விட்டேன்; என்றாலும் அவளுடைய உருவம் நெஞ்சிலிருந்து நீங்கவில்லை!

''டாக்டர் ஸாஹிப்!''

வெளியே பரபரப்பான குரல் கேட்டது. திடுகிட்டு எழுந்து ஓடினேன். சுபேதார் அட்ஜுடண்ட் கையைப் பிசைந்தவாறு நின்றுகொண்டிருந்தார். அவருடைய உடல் நடுங்கிற்று.

''ஐயா, நிராயுதபாணியாக உலாவச் சென்ற ஹர்கிரத் சிங்கின்மேல் யாரோ குறி பார்த்துச் சுட்டுவிட்டார்கள். அது உள்ளூர் வாசியாகத்தானிருக்க வேண்டும்.''

என் மனம் தவித்தது. ''எங்கே அவன்? கொண்டு வந்திருக்கிறீர்களா?'' என்றேன்.

"இல்லை!"

அட்ஜுடண்ட் ஆத்மராம் கூறினர்: "அவன் வர மறுத்து விட்டான். விலாவில் குண்டு பாய்ந்திருக்கிறது. ஒரே உதிர வெள்ளம். ஊருக்கு வெளியே இருக்கும் கல்லறைகளின் பக்கத்தில் அவன் கிடக்கிருன். 'என்னை இங்கேயே சாகவிடுங்கள்; நான் பிழைக்க மாட்டேன்' என்று கூறுகிருன்!" என்ருர் அவர்.

நான் ஓடுகிறேன்; என்னைப் பலர் பின் தொடருகின்றனர். நீல ஆகாயத்திலிருந்து பஞ்சு மேகம் ஒன்று இளஞ் சிவப்பு நுனியுடன் பசுமலையைத் தழுவ வருகிறது.

ஹர்கிரத் சிங் சலனமின்றிக் கிடந்தான். அவனுடைய முகத்தில் எத்தகைய கடூரமான பாவனையும் இல்லை. அவனது தலைப்புறத்தில் ஒரு கல்லறை; அதன் மேல் நட்டிருந்த சலவைக் கல்லில் உருது மொழி எழுத்துக்கள். அதைப் படித்ததும் என் வயிற்றில் குழி விழுகிறது.

'ஷரீன்!'

ஹர்கிரத் சிங்கை எப்படி அடக்கம் செய்வது என்பதைப் பற்றி எங்கள் முகாமில் சிறு விவாதம் எழுந்தது. இறுதியில் எனது முடிவைப் படைத் தலைவர் ஏற்றுக் கொண்டார். அவனுடைய உடலைத் தகனம் செய்து அஸ்தியின் சிறு பகுதியை செனுப் நதியில் கரைத்தோம். மிகுதியை ஒரு செப்புக் கலசத்திலிட்டு, ஷரீனின் கல்லரைக்குப் பக்கத்திலேயே புதைத்து, இன்னும் ஓர் அழகிய கட்டிடம் கட்டினர்கள் ராணுவ எஞ்ஜினீயர் படையினர்.

ஃபர்தௌஸியின் கவிதை வாசகம் ஒன்றை அதில் பொறிக்கச் செய்தேன் நான்:

'அன்பு-எந்த வடிவிலிருந்தாலும் சரி, அதுதான் ஆண்டவனின் செயல் முறை!"

ஹர்கிரத் சிங், தன் கையில் தரித்திருந்த தாயத்தை மட்டும் நான் என்னுடன் வைத்துக் கொண்டுவிட்டேன்.

"தேஹோ ஷிவாஹ் வர்
மேஹே யஹே...!"

இனி மேஜர் ரஹ்மான் பேசுகிலேன்!

—:o:—

கே. ஜயலக்ஷ்மி

32

# எது வெற்றி?

பகல் மணி பதினொன்று இருக்கும்.

வேலையெல்லாம் முடிந்துவிட்டபடியால் ஓய்வாகப் பத்திரிகை களை எடுத்து வைத்துக் கொண்டு படிக்க உட்கார்ந்தேன்.

தபதபவென்று யாரோ தெருக் கதவைத் தட்டுகிற ஓசை கேட்டது. எழுந்துபோய்க் கதவைத் திறந்தேன்.

''ஐயம் தாண்டி!''

''நல்ல வேளை. எப்படியோ வீட்டைக் கண்டுபிடித்து விட்டோம்!''

வந்திருந்தவர்கள் இருவரும் ஒருவருக்கொருவர் பாராட் டுரை வழங்கிக் கொண்ட பிறகுதான் எனக்கு முக தெரிசனம் தந்தார்கள்.

எனக்குச் சிறிது குழப்பம். மிகவும் தெரிந்த முகம் போலவும் இருந்தது. எப்போதோ பார்த்தது போலவும் இருந்தது. இவர்கள் யார்?

என் விழிகளில் நெளிந்த வினாக்குறி அவர்களின் சூட்சுமப் பார்வைக்குப் புலப்பட்டிருக்க வேண்டும்.

''என்னமோ முழிக்கிறயே! எங்களைத் தெரியவில்லையா? எங்களுக்கு மன்னார்குடி. இவள் என் தங்கை ருக்கு. என் பெயர்...''

''ரங்கம் தானே!'' நினைவு வந்துவிட்டப் பெருமிதம் என்னைப் பூரிக்க வைத்தது.

''பரவாயில்லையே...ஞாபகம் வைத்துக் கொண்டிருக்கிறாய். பட்டணத்து வாசம், பங்களா வாழ்வு, நாகரீகத் தோற்றம், எல்லாம் எங்களை மறந்துவிடவில்லை. ரொம்ப சந்தோஷம்'' என்றாள் ரங்கம்.

''உள்ளே வாருங்கள். பிஞ்சுப் பருவத்தில் பழகிய பசுமை யான நினைவுகள் சிறிது மெருகு குன்றி வேண்டுமானால் போகுமே தவிர, அடியோடு ஒருபோதும் மறந்து போகாது ரங்கம். உன்னுடைய இந்தக் கிழ வேஷம் தான் என்னைக் கொஞ்சம் தடுமாற வைத்துவிட்டது...'' என்றேன் அவர்களை உட்பக்கம் அழைத்தபடியே, அவள் பதினெட்டு முழம் புடவையைக் கொசு வம் வைத்து உடுத்தியிருந்தாள்.

''ஒரு வருஷமா, இரண்டு வருஷமா ? இருபது வருஷங்கள். நினைவு வைத்துக்கொள்வது கஷ்டம்தான் ஐயம். நீ இந்த ஊருக்குத் தகுந்தபடி இருக்கிறாய். மன்னார்குடியில் இப்படி யிருக்க முடியுமா ? அது சரி, வீடு நிசப்தமாக இருக்கிறதே. குழந்தை குட்டி ?''...என்று இழுத்தாற்போல் வினவினாள் ருக்கு.

''நிறைய இருக்கிறது. எல்லோரும் பள்ளிக் கூடத்திற்குப் போயிருக்கிறார்கள். இந்த நேரம்தான் எனக்குக் கொஞ்சம் ஒய்வு''.

''நிறைய என்றால் எத்தனை ?'' ருக்கு தான் கேட்டாள்.

''நான்கு. அதிகம் தானே'' என்றேன் நான்.

''நான் ஒப்புக் கொள்ளமாட்டேன் ஐயம். எனக்கு ஒரே ஒரு பையன்தான். ருக்குவுக்கு அதுகூட இல்லை. எங்களுக்கு இன்னமும் ஆசை விடவில்லை. குறைதான்'' என்று கூறினாள் ரங்கம். அவள் வார்த்தைகளைவிட குரலில் அளவு கடந்த ஏக்கம் பிரதிபலித்தது.

''அதிருக்கட்டும். எங்கே இப்படி மன்னார்குடியிலிருந்து இவ்வளவு தூரம் ?'' என்று வினவினேன் நான். அவர்களுக்கு உட்காரப் பாயை விரித்துப் போட்டுக் கொண்டே.

''ருக்கு இங்கேதான் நுங்கம்பாக்கத்தில் இருக்கிறாள். எத்தனையோ தடவைகள் பட்டணத்துக்கு வந்து போயிருக் கிறேன். ஒவ்வொரு தடவை வரும்போதும் உன் அத்தையிட மிருந்து உன் விலாசத்தைக் கேட்டுக் கொண்டுதான் வருவேன். ஆனால் வந்ததே இல்லை.''

''ஏனம் ?''

''நீ கதையெல்லாம் எழுதுகிறாயாமே ! பேப்பரிலே எல்லாம் உன் படம் வந்ததைப் பார்த்தேன். நீ ரொம்பப் பெரிய மனுஷி

யாகி விட்டாயே! உன்னைத் தேடிக் கொண்டு வந்தால் நீ முகங் கொடுத்துப் பேசுவாயோ, மாட்டாயோ என்று பயம்...'' என்றாள் ரங்கம்.

''என் கதைகளையெல்லாம் படித்திருக்கிறீர்கள் அல்லவா?'' இருவரையும் பார்த்துத்தான் கேட்டேன்.

''ஓ! ஒரு பத்திரிகை பாக்கி கிடையாது. எல்லாம் படிக்கிறோம். ரேடியோவிலும் நாடகங்கள், பேச்சுக்கள் கேட்டிருக்கிறோமே...'' என்று சொன்னாள் முந்திக்கொண்டு, ருக்கு.

''எப்படியிருக்கின்றன எல்லாம்?''

''எல்லோருக்கும் நல்லதைத்தான் சொல்லுகிறாய். கருத்தில்லாத உன் கதைகளை இதுவரையில் நான் படித்ததில்லை.'' என்றாள் ரங்கம்.

''அப்படியிருந்துமா வீடுதேடி வருகிற உன்னிடம் நான் முகங்கொடுத்துப் பேசுவேனோ மாட்டேனோ என்று பயப்பட்டாய் ரங்கம்? எழுத்தாளர்கள் என்றால் அவர்கள் கூடிய மட்டில் தாம் எழுதுவது போலவே வாழ்ந்தும் காட்டக் கடமைப் பட்டவர்களுக்கு. முகம் தெரியாத யாரேனும் வீடுதேடி வந்தால்கூட அவர்களுடன் முகங்கொடுத்துப் பேசிப் புதிய நண்பர்களைப் பெற்றுக்கொண்டு விடுவது தமிழர்களின் பண்பாடாயிற்றே!''

''அழகாகத்தான் பேசுகிறாய். ஏண்டி ஜயம்! நம்ப கோமளவல்லி இந்த ஊரில்தான் இருக்கிறாள். உனக்குத் தெரியுமா? அவளை நீ பார்த்திருக்கிறாயா?'' ரங்கம்தான் கேட்டாள்.

''இந்த ஊரில்தான் என்றால் எங்கே? நான் அவளைப் பார்த்ததில்லை'' என்று சொன்னேன்.

''மாம்பலத்தில்தான் இருக்கிறாள். என்னிடம் விலாசம் இருக்கிறது'' என்றாள் ருக்கு.

''போய்ப் பார்த்துவிட்டு வரலாமா ஜயம்?'' ஆவல் மேலிட வினவினாள்.

''உனக்கு ஆசையாக இருந்தால் போய்வந்தால் போச்சு!''

''உனக்குத் தெரியுமா? அவள் ஒரு 'நான் பிராமி'னைக் கல்யாணம் செய்து கொண்டிருக்கிறாள். இரண்டு குழந்தைகள் கூட இருக்கிறது. அதனால்தான் அவளைப் பார்த்துவிட்டு...''

ரங்கம் வார்த்தையை முடிக்கவில்லை. ''உண்மையாகவா?'', என்று ஆச்சர்யம் தாங்காமல் கேட்டேன் நான்.

"ஏன் இவ்வளவு ஆச்சர்யப்படுகிருய் ஜயம். இந்தக் காலத்தில் இது ஒரு அதிசயமா ?" என்ருள் ருக்கு.

"இல்லேயில்லே. கோமளவல்லியின் குடும்பம் ரொம்பவும்..."

"ஆசாரசீலர்கள் தான். ஆனுல் இது இவளாகக் காலேஜில் ஏற்பட்ட பழக்கத்தின் பேரில் செய்து கொண்டது..."

'பெற்ருேர்களின் விரோதத்தின் பேரில்தானே...?'

"பட்டணத்தில் இருந்துகொண்டு நீ இப்படிப் பட்டிக்காடு மாதிரிப் பேசுகிருயே ஜயம் ?" ரங்கத்திற்கு ஆச்சர்யமாக இருந்தது என் கேள்வி.

"கலப்பு மணங்கள் உனக்குப் பிடிக்காது போலிருக்கிறது..." சிரித்துக்கொண்டே கூறினுள் ருக்கு.

"சே ! சே ! ரொம்பப் பிடிக்கும். சமுதாயத்திலுள்ள ஏற்றத் தாழ்வுகளேயும் பழக்க வழக்கங்களேயும் சமனப்படுத்த உதவுகிறது என்கிற முறையில் எனக்கு அது பிடித்தமானதுதான்..." என்று கூறினேன்.

"சரி, கிளம்பு. மாம்பலம் இதோதானே இருக்கிறது. போய் வந்துவிடலாம்..." என்று கூறி, எழுந்தாள் ரங்கம்.

"டிபன்–காபி சாப்பிட்டு விட்டுப் போகலாமே..." என்றேன்.

"மணி பதினென்றரை தானே ஆகிறது, போய் வந்து பின் சாப்பிட்டால் போதும்" என்ருள் ருக்கு.

குழந்தைகள் எல்லோரும் கையில் சாப்பாடு கொண்டு போயிருந்ததால் நானும் அவர்களுடைய அழைப்புக்கு இணங்கிப் புறப்பட்டேன்.

* * *

ஓ ! நீங்களா ! வாங்க, வாங்க" என்றபடி ஓடிவந்து வரவேற்ருள் கோமளவல்லி. உடம்பெல்லாம் தெரியும்படியான நைலான் புடவை, வாரப்படாத பரட்டைத்தலே, பொட்டில்லாத நெற்றி, மெட்டியில்லாத கால்கள். இவளா கோமளவல்லி?

"இது யாரென்று தெரிகிறதா கோமு. நம்ப ஜயம்" என்று என்னே அவளுக்கு அறிமுகப்படுத்தி வைத்தாள் ரங்கம்.

"நம்ப ஜயமா ? வா, ஜயம் ! ரொம்ப மாறிட்டியே" என்று புன்முறுவல் செய்தாள் கோமளவல்லி.

"அவளைப் பின் தொடர்ந்து நாங்கள் மூவரும் வீட்டினுள்ளே சென்றோம். கருவாட்டின் மணம் குப்பென்று மணம் வீசி எங்களை வரவேற்றது, வீடெல்லாம் ஒரே கோழிகளின் அசுத்தப் பொருட்களின் நெடி வேறு.

"குந்துங்க. இதோ வந்துவிட்டேன்." ஒரு எண்ணைச் சிக்குப்பிடித்த பாயை விரித்து எங்களை உட்கார வைத்துவிட்டு உள்ளே போனாள் கோமளவல்லி.

"இதென்ன இப்படிப் பேசுகிறாள் இவள்!" ரங்கத்தைப் பார்த்து மெல்லிய குரலில் வினவினேன் நான்.

"நான்பிராமினைக்' கல்யாணம் செய்துகொண்டிருக்கிறாள் இல்லையா? அதனால் இவளும் 'நான்பிராமினாக' ஆகிவிட்டாள். இதுதானே பாரதப்பெண்களின் தனிப் பண்பு?" என்று என்னையே திருப்பிக்கேட்டாள் ரங்கம்.

நான் முகத்தைச் சுளித்தேன்.

இதற்குள் கோமளவல்லி எங்களிடம் வந்துவிட்டாள்.

"காபி போடட்டுமா? நீங்களெல்லாம் சாப்பிடுவீங்களா?" என்று சிரித்துக்கொண்டே கேட்டாள்.

"மன்னார் குடியில் உங்கள் வீட்டுக் காப்பிக்குத் தனிப் பெயராச்சே!" என்றேன் நான். அவளுடைய மனத்தில் சகஜ நிலையை ஏற்படுத்துகிற நோக்கத்துடன்.

"அந்த வீட்டுப் பழக்க வழக்கங்களில் இங்கே ஒன்றுகூடக் கிடையாது ஐயம். இங்கே வந்ததும் நான் எல்லாவற்றிலும் ரொம்ப மாறிவிட்டேன். சுருக்கமாகச் சொல்லனும்னா...நான்... நான்...நானும் இப்போது ஒரு 'நான்பிராமின்' பெண்மணி தான்" என்று கூறினாள் கோமளவல்லி.

"சாதியைப் பற்றி விட்டுவிடுவோம். பழக்க வழக்கங்களால் தான் ஏற்றமும் தாழ்வும் நம்மிடையே உண்டாகிறது என்பது என் கருத்து" என்று ரொம்பவும் அழுத்தமாகக் கூறினேன் நான்.

"உண்மைதான் ஐயம்! ஆனால்...கணவனுக்காக எல்லாவற்றையும் தியாகம் செய்வதுதானே இந்தியப் பண்பு? அந்தப் பெண்மையின் பண்புப்படி நான் அவருடன்-அவருடைய இயல்புடன்-அவருடைய பழக்க வழக்கங்களுடன் இரண்டறக் கலந்து விட்டேன். அதிகமாக விவரிப்பானேன்? நான் இப்போது அசைவ உணவுகள் கூடச் சாப்பிடுகிறேன்......போதுமா?" என்றாள் கோமளவல்லி.

நான் பேசவில்லை.

"ஆச்சர்யம்தான்!" என்றாள் ரங்கம்.

"ஸ்டோர் ரூமில் அடுக்கடுக்காக அடுக்கி வைத்திருக்கிற பானை வரிசைகளைப் பார்த்தாலே தெரிகிறதே!" என்றாள் ருக்கு.

"ஆமாம் ருக்கு! அவருக்கு என்னை மணந்து கொண்டதால் எந்த ஒரு விதமான மாறுபாடும் தெரியக்கூடாது என்பதே என் லட்சியம். அந்த என் லட்சியத்தில் நான் வெற்றி பெற்று விட்டதாகவே எண்ணுகிறேன்..." இதைச் சொல்லிவிட்டு எங்கள் எதிரிலேயே காபி போடத் தொடங்கினாள் கோமளவல்லி.

ஸ்டவ்வைப் பற்றவைத்து, அதில் ஒரு அலுமினியம் 'டேக்ஸா'வில் தண்ணீரைக் கொதிக்க வைத்தாள். பிறகு அதில் காபித்தூளைக் கொட்டி-வடிகட்டினாள். பிறகு பாலும் சர்க்கரையும் சேர்த்து அதிவிரைவில் எங்கள் முன் காபியைக் கொண்டுவந்து வைத்துவிட்டாள் கோமளவல்லி.

நீலம் பாரித்துக் கிடந்த அந்தக் காபியைப் பார்க்கவே எனக்கு அருவருப்பாக இருந்தது.

"நான் காபி சாப்பிடுவதில்லை கோமு!" என்று கூறினேன் உள்ளத்தின் அருவருப்பை முகத்தில் காட்டாமல்.

"ஆசாரமா?" என்று வினவினாள் கோமளவல்லி.

"அதெல்லாமில்லை. மோர் கொடு, சாப்பிடுகிறேன்—" என்றேன்.

மோர் கொண்டுவந்து கொடுத்தாள். குடித்து வைத்தேன் அரைமனத்தோடு. அதில்கூட அசைவ உணவின் வாடை அடிப்பதுபோல் ஒரு பிரமை எனக்கு.

"போகலாமே..." என்றேன் ருக்கு-ரங்கத்தைப் பார்த்து.

"போகவேண்டியதுதான். நேரமாச்சு." இருவருமே எழுந்து விட்டார்கள். அவர்கள் எப்படியோ அந்தக் காபியைக் குடித்திருக்கிறார்கள்.

"என் வீட்டுக்கு எப்போது வரப்போகிறாய் கோமு!" என்று வினவினாள் ருக்கு.

"வரேன் ருக்கு. கோவிச்சுக்காதே!" என்றாள் கோமள வல்லி.

நாங்கள் மூவரும் விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டோம். ஒரு குங்குமம் கூட எங்களுக்கு வழங்கவில்லை கோமளவல்லி. மன்னார்குடியில் அவளுடைய பிறந்தகத்துக்குப் போனால்... அவளுடைய அம்மா தேங்காய் இல்லாமல் வெறும் வெற்றிலைப் பாக்குக்கூடக் கொடுக்கமாட்டாள். அவளுடைய பெண்தான் இவள். அவள் மறந்து விட்டாள். ஆனால் என்னால் மறக்க முடியவில்லையே!

"இருந்தாலும் நீ ரொம்பமோசம் ஜயம். காபியைத் தொடவேயில்லையே! அவள் ஏதாவது நினைத்துக் கொண்டால்...?" என்றாள் ரங்கம் என்னைக் குற்றம் சாட்டுகிற பாவனையில்.

"நினைத்துக் கொள்ளட்டும்...ஏன், ரங்கம்! பில்டர் வைத்து நல்லமுறையில் போட்டுத் தருகிற நல்ல காபியை அவளுடைய கணவர் சாப்பிடமாட்டாரா? அவர் ஹோட்டலில் இதுபோன்ற காபியைப் பார்த்திருக்க முடியாதே!" என்றேன் ஆத்திரம் மேலிட.

"உனக்கு நாக்கு ருசி ரொம்ப அதிகமடி! அவள் தான் நான் அடியோடு மாறிவிட்டேன் என்கிறாளே!" என்றாள் ரங்கம்.

"இந்த மாற்றத்தை என்னால் விரும்ப முடியவில்லை..." என்றேன் நான்.

இரண்டு தெருக்களைக் கடந்து மூன்றாவது தெருவில் நுழைந் தோம். அந்தத் தெருவின் திருப்பத்தில் ஒரு வீடு. வாசலில் பளிச்சென்று கோலமிட்டு செம்மண் பூசியிருந்தது. அந்த வீடு எனக்குத் தெரிந்தவர்களுடையது தான்.

"இந்த வீட்டில் ஏதோ விசேஷம் போலிருக்கிறது. செம் மண் பூசியிருக்கிறது" என்றாள் ருக்கு.

"இன்று கிருத்திகை இல்லையா? அதனால்தான். வருகிறீர் களா? உள்ளே போய் பார்த்துவிட்டு வரலாம்...?" என்று அவர்களைப் பார்த்து வினவினேன்.

"உனக்குத் தெரிந்தவர்களின் வீடா?" இருவருமே கேட்டார்கள்.

"ஆமாம், வாருங்கள்" என்று அவர்களை அழைத்துக் கொண்டு அந்த வீட்டின் வாசற்படியில் ஏறினேன்.

முத்துமுத்தாக இட்டிருந்த மாக்கோலங்களுக்கு அடுத்த படியாக வாசற்படியின்மேல் வரிசையாகக் கோர்த்துக் கட்டி

யிருந்த மாவிலைத் தோரணம் எங்களை வரவேற்றது. அது அன்று கட்டியது அல்ல. மாவிலைகள் காய்ந்து போய்த்தான் இருந்தன. இருந்தும் அதில் ஒரு புனிதம், கவர்ச்சி.

''வரவேண்டும், வரவேண்டும்...'' என்ற இனிய குரலும் இசைக்குத் தப்பாத தாளம் போன்ற 'ணிங்! ணிங்! என்ற மெட்டியோசையும் எங்களைக் கட்டியம் கூறி வரவேற்றன.

''சௌக்கியமா சீதா? இவர்கள் இருவரும் என் பால்யத் தோழிகள். இவர்களுடன் இந்தப் பக்கமாக வரவேண்டி யிருந்தது. அப்படியே உன்னையும் பார்த்து விட்டுப் போகலா மென்று வந்தேன்...'' என்றேன்.

''அதனுலென்ன? நீங்கள் வந்ததுதான் பெரிது. எல்லோரும் உள்ளே வாருங்கள்...'' என்று முகமலர்ந்து அழைத்தாள் சீதா.

நாங்கள் மூவரும் அவளைப் பின் தொடர்ந்தோம்.

சாம்பராணியின் புகை வீடு பூராவும் வியாபித்திருந்தது. அதை மிகைப்படுத்துகிற விதத்தில் ஊதுபத்தியின் இனிய சுகந்தம் வேறு. மல்லிகை-ரோஜாக்களின் தெய்வீகமணம். இவைகளுக்கெல்லாம் மேலாக, பூஜை அறையினின்றும்.

'ஏறுமயில் ஏறி விளையாடுமுகம் ஒன்றே
ஈசருடன் ஞானமொழி பேசுமுகமொன்றே...'

என்ற இசைவேறு, பண்ணுடன் ஒலித்தது. நிச்சயமாக அது ஓர் ஆணின் கட்டைக் குரல்தான்.

''இன்று அலுவலகம் விடுமுறையா சீதா?'' என்று வினவினேன்.

''இல்லை. இவராக வேண்டுமென்றுதான் விடுமுறை வாங்கிக் கொண்டிருக்கிருர்....கொஞ்சம் உட்கார்ந்து கொள்கிறீர்களா இதோ வந்து விட்டேன்...'' என்ருள் சீதா. நாங்கள் மூவரும் அவள் தரையில் விரித்திருந்த பாயில் அமர்ந்தோம்.

ஐந்தே நிமிஷத்தில் திரும்பி வந்தாள் சீதா.

ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு டம்ளர் பசும்பால், இதமான சூட்டுடன். சிறியசிறிய தட்டுகளில் ரஸ்தாளிப் பழங்கள் நான்கு நான்கு. எங்கள் எதிரில் பணிவுடன் வைத்துவிட்டுத் தானும் பாயில் அமர்ந்து கொண்டாள்.

ரங்கத்தையும் ருக்குவையும் பார்த்து,

"எங்கள் வீட்டில் யாரும் காபியே சாப்பிடுவதில்லை. வீட்டில் இரண்டு பசுக்கள் பால் கொடுக்கிறது. ஐயம் எல்லாம் சொல்லியிருப்பாரே..." என்று கூறி முறுவலித்தாள் சீதா.

"காபி சாப்பிடாதது நல்ல பழக்கம் தான்..." என்றாள் ரங்கம்.

"இந்த ரஸ்தாளிப் பழங்கள் கூட வீட்டிலேயே காய்த்துப் பழுத்தது தான்...அப்படித்தானே சீதா?" என்றேன்.

"ஆமாம். உங்களுக்குக் கொடுத்தனுப்ப வேண்டும் என்ற ஆசை. வரமுடியவில்லை. நான் மனப்பூர்வமாக விரும்பினேனல்லவா? தாங்களே வந்துவிட்டீர்கள்..." என்றாள் சீதா.

சர்க்கரை போடாமலே இனித்த பசும்பாலையும் ரஸ்தாளிப் பழங்களையும் காலி செய்துவிட்டு நாங்கள் எழுந்திருந்தோம்.

"ஒரு ஐந்து நிமிஷம் பொறுத்துக் கொள்ளுகிறீர்களா? கத்தரிக்காய் பிஞ்சாக நன்றாக இருக்கிறது. உங்கள் வீட்டுக்காரருக்குப் பிடிக்குமே" என்ற சீதா என் பதிலுக்காகக் கூடக் காத்திருக்காமல் சின்னக் கூடை ஒன்றைக் கையில் எடுத்துக் கொண்டு தோட்டத்துப் பக்கம் ஓடினாள்.

ரங்கத்தையும் ருக்குவையும் அழைத்துக் கொண்டு நானும் தோட்டத்துப்பக்கம் சென்றேன்.

தோட்டத்தைப் பார்த்துவிட்டு ரங்கமும்-ருக்குவும் அப்படியே அசந்து போய்விட்டார்கள்.

"இதில் காய்க்கும் காய்கறிகளையெல்லாம் வீட்டுக்கு மட்டுமே உபயோகித்துக் கொள்ள முடியாது போலிருக்கிறதே..." என்றாள் ரங்கம் வியப்புத் தாங்காமல்.

"குறைந்த பட்சம் தினமும் ஐந்து ரூபாய்க்காவது நாங்கள் காய்கறிகளை விற்காமல் இருந்ததில்லை. கருவேப்பிலை-அகத்திக்கீரை இப்படி...ஏதாவது ஒன்று இல்லாவிட்டால் இன்னொன்று...விற்க முடிகிறது..." என்று சொன்னாள் சீதா.

"புஷ்பங்கள் கூட நிறைய விற்கலாம் போலிருக்கிறதே!" என்றாள் ருக்கு.

"விற்கலாம்தான். ஆனால் நாங்கள் விற்பதில்லை. கோவில்களுக்கும்-வீட்டுக்கு வந்துசெல்கிற-அல்லது அக்கம் பக்கத்திலுள்ள சுமங்கலிகளுக்கும் நிறையக் கொடுத்து வருகிறோம். மஞ்சள் கூட வீட்டில் பயிராகிறது" என்றாள் சீதா.

''இதற்குக் கடுமையாக உழைக்க வேண்டுமே.,,'' என்றுள் ரங்கம்.

''ஆம், உழைக்கவே செய்கிறோம்...'' இதைச் சொல்லும் போது சீதாவின் முகத்தில் ஓர் அசாதாரணமான ஒளி பரவி நின்றது.

இதற்குள் சீதா பேசிக்கொண்டே ஒரு வீசைக்கும் மேல் கத்தரிக்காயும் வெண்டைக்காயும் பறித்துக் கூடையை நிரப்பி விட்டாள்.

தட்டு நிறைய வெற்றிலை-பாக்கு-மஞ்சள்-புஷ்பம்-தேங்காய் எல்லாம் வைத்து எங்களுக்குக்கொடுத்தாள். மூவரும் அவளிட மிருந்து மனமில்லாமலே விடைபெற்றுக் கொண்டு வெளியே வந்தோம். வாசல் தாழ்வாரத்தில் நாற்காலியில் உட்கார்ந் திருந்தார், சீதாவின் கணவர். பட்டை பட்டையாக உடம் பெல்லாம் திருநீறு. கையில் 'ராமகிருஷ்ணரின் பொன் மொழி கள்' என்ற புத்தகம். நல்ல கருப்புத்தான். இருந்தாலும் முகத் தில் ஓர் உயர்ந்த ஒழுக்கத்தால் ஏற்பட்டிருந்த புனிதமானதும் கம்பீரமானதுமான பொலிவு மேலோங்கி நின்றது.

என்னைப் பார்த்துவிட்டு வெள்ளைப் பற்கள் பளிச்சிட,

''வணக்கம்'' என்று கரம் குவித்தார். நானும் பதில் வணக்கம் தெரிவித்தேன்.

மூவரும் தெருவில் இறங்கி வேகமாக நடந்தோம்.

''இந்த வீட்டைப்பற்றி உன் அபிப்பிராயம் என்ன ரங்கம்?'' என்று கேட்டேன்.

''அழகான குடும்பம். உயர்ந்த பண்பாடு'' என்றுள் ரங்கம்.

''என்ன இருந்தாலும் பிராமணக் குடும்பம்'''பிராமணக் குடும்பம் தான்!'' என்றுள் ருக்கு.

''நான் இதை ஒப்புக்கொள்ள முடியாது ருக்கு: நம் அண்ணல் காந்திக்கு மிகமிக விருப்பமான பாடல் இருக்கிறதே 'வைஷ்ணவ ஜனதோ...' அது என்ன சொல்லுகிறது? உண்மை யான வைஷ்ணவனின் குணங்களை எவ்வளவு அழகாக அது சொல்கிறது. அதன்படி பார்த்தால் ஒருவன் பிறப்பினுல் மட்டும் உயர்வாக இருக்கமுடியாது. ஒழுக்கத்தால் தான் உயருகிறுன் என்று தெரிகிறதல்லவா? நம் கோமளவல்லி பிராமண வகுப்பின ளாக இருந்தாலும் ஒழுக்கக்குறைவுகளால் அதற்கு உரிய பெரு மையை அடையமுடியவில்லை; இந்த சீதாவோ...''

"சீதா பிராமணப்பெண் இல்லையா ஐயம்? ஆச்சர்யம் தாங்காமல் வினவினுள் ருக்கு.

"சீதா பிராமணப்பெண்தான். ஆனுல் அவளுடைய கணவர் தான்...ஒரு ஹரிஜன வகுப்பைச் சேர்ந்தவர்."

"என்ன! உண்மையாகவா?" இருவருக்குமே ஆச்சர்யம் தாங்கமுடியவில்லை.

"ஆமாம் சீதாவின் கணவர் ஓர் ஹரிஜன். சீதாவின் தகப்பனுரே கலப்பு மணத்தை ஆதரிக்கும் நோக்கத்துடன் இந்தத் திருமணத்தை நடத்தி வைத்தார். கலப்பு மணங்களால் எந்த நல்ல அம்சங்களையெல்லாம் சாதிக்க வேண்டும் என்று அவர் விரும்பினுரோ அதையெல்லாம் சீதா தன் ஒப்பற்ற பெண்மையின் சக்தியால் சாதித்துக் காட்டிவிட்டாள். கோமளவல்லியைப்போல் அவளும் ஒரு 'நான் பிராமினுக' மாறிவிடவில்லை. அதற்குப் பதிலாகத் தன் கணவரையே ஓர் ஒழுக்கத்தால் உயர்ந்த பிராமணனுக மாற்றிவிட்டாள். தன் வகுப்பில் உள்ள நல்ல அம்சங்களையெல்லாம் தன் புகுந்த வீட்டில் புகுத்தி அதை ஒரு பிராமணக் குடும்பமாக ஆக்கியதுடன் அவள் விட்டுவிடவில்லை. அந்தக் குடும்பத்திலுள்ள உழைக்கும் சக்தியையும்-பொறுமையையும் தானும் ஏற்றுக்கொண்டு குடும்பத்தையே உழைப்பால்-உழைப்பின் பெருமையால் உயர்த்திவிட்டாள். உள்ளபடி பெண்மையின் வெற்றியை நான் சீதாவிடத்தில் தான் ரங்கம் காண்கிறேன். கோமளவல்லியிடம் காணவில்லை." உணர்ச்சி பொங்கப் பேசிக்கொண்டே போனேன் நான்.

"அப்படியானுல் முன்பெல்லாம் 'பேய்க்கு வாழ்க்கைப் பட்டால் புளியமரத்தில் ஏறத்தானே வேண்டும்' என்பார்களே..." என்று இழுத்தாள் ருக்கு.

"அது அப்போதைக்குச் சரியாக இருக்கலாம். இப்போதைய புதுமைப் பெண்ணின் கடமை-லட்சணம் என்னவென்ருல்... பேய்க்கு வாழ்க்கைப்பட நேர்ந்துவிட்டால் அந்தப் பேயுடன் சேர்ந்து தானும் புளியமரம் வாசம் செய்யக்கூடாது. அதற்குப் பதிலாக அந்தப்பேயைக் கீழே இறக்கி அதையும் ஓர் மனிதத் தன்மையை அடையும்படி செய்துவிட வேண்டும். பெண்மைக்கு, அதற்கான சக்தி உண்டு என்பதுதான்," என்று கூறி முடித்தேன் நான்.

"கலப்பு மணங்களால் சமுதாயத்திலுள்ள ஏற்றத்தாழ்வுகளெல்லாம் மறையும் என்றுதான் காந்தியடிகள் விரும்பினுர். அந்த ஏற்றத் தாழ்வுகள் வெறும் பணம்-காசுகளோ அல்லது சாதிப்பிரிவுகளோ மட்டும் அல்ல. மனிதனின் திறமைகளும்-

உயர்ந்ததும் நல்லதுமான ஒழுக்கங்களும் கூட என்று சொல்லு கிறுய், அப்படித்தானே ?'' என்று கேட்டாள் ரங்கம்.

"ஆமாம், பெண்மையின் வெற்றி இதுதான். தன் லட்சியத் தில் வெற்றி பெற்றுவிட்டதாகக் கூறுகிருள் கோமளவல்லி. உண்மையில் லட்சியத்தில் வெற்றி பெற்றவள் சீதா தான்'' என்றேன்.

"அதில் சந்தேகமில்லை'' என்று கூறினர்கள் ரங்கம்-ருக்கு இருவரும்.



# 33

## பாங்கொலி

'டம, டம' என்ற பள்ளிவாசல் நகராவின் டங்காரம் காற்றிலே மிதந்து சென்றது. வானமுகட்டை அண்ணுந்து நோக்கும் மணராக்களின் உச்சிக் குடைவுகளினின்றும் புருக்கள் கிளம்பிச் சிறகடித்துப் பறந்தன. சிறிது நேரத்தில் ''மஃரிப்'' தொழுகைக்கு அழைக்கும் மோஞதிரின் பாங்கொலி கேட்டது.

'அல்லாஹு அக்பர்,.........லாஇலாஹ இல்லல்லாஹ்'

மோதிஞர் முஸ்தபாவின் வெண்கலக் குரலில் கணீரெனக் கேட்டது பாங்கு நாதம்.

வடிவம்மாளுக்குக் கைநிறைய வேலே. பொழுது சாய்வதைக் கூட உணராமல், மும்முரமாக அவள் வேலேயில் ஊன்றியிருந்தாள். பாங்கின் நாதம் கேட்டதும், அப்படியே இருந்த இடத்தில் சாமான்களேப் போட்டு, எழுந்துநின்ருள். கடிகாரத்தின் இரு முட்களேப் போல, அவள் வாழ்வில், பாங்கொலிக்கும், அவள் பச்சிளங் குழந்தைக்கும் தொடர்பு உண்டு. தன்னுடைகளே மாற்றிக் கொண்டு, தொட்டிலில் கிடக்கும் தன் 'உயிர்ப்பிஞ்சை' தூக்கி முத்தமீந்தாள். வீட்டைவிட்டு வெளியேற எண்ணியதும், அவள் மனசு 'திக்'கென்று ஒரு முறை அடித்தது. ஆனுல் கைக் குழந்தைக்கோ காய்ச்சல் தகித்துக் கொண்டிருந்தது. நேற்று முன் தினம் நிகழ்ந்த சம்பவம் அவள் மனத்திலே சுழித்து நின்றது ஒரு விஞடி. சிறிது நேரம் சிந்தித்து நின்ற அவள் ஏதோ தெம்பு கொண்டவள் போல் வீட்டை விட்டு வெளியேறிஞள். வடிவம்மாள் செல்வத்தைக் கண்டதும், அடுத்தவீட்டு, எதிர்வீட்டு மாதர்களும் அவள் நிழலேயொட்டிப் பின்பற்றினர். வடிவம்மாளுக்கும், மற்ற பெண்களுக்கும் நெஞ்சிலே ஒரு சலனம். அதற்கு வித்தாயிருந்தது ஊரிலே சுழன்ற சலசலப்பு.

தொழுகை முடிந்ததும், 'பாத்திஹா' ஓதுவது, வடிவம்மாள் காதுகளில் ரீங்காரித்து. இன்னும் சில நிமிடங்களில் மோதிஞர் வருவாரென எதிர்பார்த்து நின்றனர் அந்தப் பெண்கள். ஊரில் புரையோடிய பிளவால் அவர் மனசு மாறிடுமோ என மற்றப் பெண்கள் எண்ணினும், அந்த எண்ணத்தின் கீற்றுக்கூட வடிவம்மாள் சிந்தனையில் எழவில்லை. அவரின் பொன்னன குணத்தைப் பற்றியும், கனிவான மொழியைப் பற்றியும் அவளுக்கு 'ரொம்ப காலமாகத் தெரியும். அதாவது அவள் தாயானது முதல், இதுவரை—மூன்ருவது குழந்தையை ஏந்தி நிற்கும் வரை. அவள் மோதிஞரை 'அப்பா' என்று தான் அழைப்பாள். அவரும் தன் மகளைப்போல வாஞ்சையோடு 'அம்மா, வடிவு' என்றே சொல்லுவார். தனது ஒவ்வொரு குழந்தைக்கும் ஏதாவது உடல் நலக்குறைவு ஏற்படின், முதன் முதலில் தன் 'அப்பா' விடம்—மோதிஞரிடமே, ஓதி ஊதக் குழந்தையை எடுத்து வருவாள்; அல்லது அவரைத் தன் வீட்டுக்கு அழைத்துச் செல்வாள். மோதிஞரின் வருகை அவள் நினைவுத் தொடரை நிறுத்திவிட்டது. வடிவம்மாள் அருகில் வந்து, அக்குழந்தையின் புன்னகையை வர வழைத்து, அதற்கு ஓதிப் பார்த்தார். அதைப்போல் மற்றவர்கள் குழந்தைகளையும் ஓதிப் பார்த்தார். வடிவம்மாள் குழந்தைக்குக் கொஞ்சம் அதிகமாகவே ஓதியதாக மற்றப் பெண்கள் உள்ளூர எண்ணிஞர்கள்.

நல்லூரிலே நேற்று முன்தினம் வரை எல்லோரும் நல்லவர்களாகவே இருந்தார்கள்; நல்லவர்களாகவே வெளிப் பார்வைக்குப் பட்டார்கள். மனிதர் உள்ளக் காட்டில் மேயும் எண்ணங்களை அறியும் பூதக் கண்ணுடி ஒன்று கண்டு பிடிக்கப் பட்டால், ஒரு வேளை உலகில் பூசலுக்கே இடமில்லாது போகலாம். நேற்றுவரை, இன்றுவரை, ஏன் நாளையுங்கூட, அண்ணன் தம்பிகளாக, மாமன், மருமகன்களாக முறை கொண்டாடிப் பழகியவர்கள், பழகப்போகிறவர்கள் மத்தியில் பகை புகைந்து, காட்டுத் தீயாக வளர்ந்தது என்ருல், மனித வாக்கும் போக்கும் வேறுபட்டு இருப்பதே காரணம்.

நல்லூரை இரண்டாகப் பிரித்துச் சென்றது, பொருனையினின்றும் கிளைவிட்ட ஒரு கால்வாய். அதன் ஒரு கரையில் நிற்கும் கோயிலும், மறு கரையில் நிற்கும் பள்ளிவாசலும் காலத்தையே அளக்க உதவும் சின்னங்களாக இருக்கின்றன. முறையே இரு கரைகளிலும் இந்துக்களும் முஸ்லிம்களும் வாழ்கின்றனர். இரண்டு கரைகளையும் இணைக்கும் பாலம் ஒன்றினைப் போலவே, இரு சாராரும் நேசமுடன் இருந்தார்கள். எப்போதே அவர்கள் மூதாதையரோடு புதையுண்டுபோன ஒரு பிரச்சனை, மீண்டும் புத்துயிர் பெற்றுவிட்டது. அப்பொழுது மோதிஞருக்கு

ந்ரை காணுதவயசு. இன்று அவருக்கு அறுபது வய்சு கண்டு விட்டது. ஆனல் அச்சம்பவம், நேற்று நடந்ததைப் போலப் பட்டது.

இந்துக்கள் கோயிலில் பெரும் விழாக் கொண்டாடினர்கள். அன்று வெள்ளிக் கிழமை. கால்வாயைக் கடந்து செல்லுகையில், கோயில் ஊர்வலம் பள்ளிவாசல் அருகில் வரலாம் என்று யாரும் எதிர் நோக்கவில்லே. 'ஜூம் ஆ' தொழுகை துவங்கும் வேளே. எனவே சிறிது தூரத்திற்குக் கொட்டடிப்பதை நிறுத்திக் கொண்டு செல்ல வேண்டினர் முஸ்லிம்கள். இந்துக்களுக்கு அந்தக் கோரிக்கை புதிராகப் பட்டது; காரணம் அவர்கள் தெரிந்தவரை, இது போன்ற ஒரு பிரச்சினே எழுந்ததாக இல்லே. முஸலிம்களுக்கும் இந்த மாதிரி இக்கட்டான சந்தர்ப்பம் இது வரை ஏற்பட்டதாக நினேவில்லே. எனவே இந்த அண்ணன், தம்பிமார்கள்' ஒருவர்க்கொருவர் விட்டுக் கொடுக்கத் தயங்கினர்கள், வார்த்தைகள் தடித்தன; வாய்ச் சண்டை, கைச் சண்டையாகி, பின்னர் கலவரமாக வளர்ந்தது, ரத்தம் சிந்தி விட்டனர் இரு சாராரும். இருவகையினரும் நீதியைத்தேடி, கோர்ட்டுக்குச் சென்றனர். இரு கட்சிகளுக்கும் 'கில்லாடி' வக்கீல்கள் தான். இந்த சிக்கலான பிரச்சினேயை சுமுகமாகத் தீர்த்து வைத்தார் வெள்ளேக்கார ஜட்ஜ்.

பள்ளிவாசலுக்கு மேற்புறம் நூறு கஜ தூரத்தில் ஒரு எல்லேக் கல் நாட்டப்பட்டது. அதற்கு மேற்புறமாக எந்நேரத்திலும், கொட்டடித்துச் செல்லலாம். இந்த முடிவை இரு கட்சியினரும் ஏற்றுக்கொண்டனர். மேளச் சத்தம் நூறு கஜ தூரத்திற்கு அப்பால் தானே கேட்கும்! எனவே அதிகத் தொல்லே இராது எனக் கருதியே நீதிபதி அவ்விதம் தீர்ப்புச் செய்தார்

அன்றிலிருந்து அந்த எல்லேக்கல்லுக்கு முக்கியத்துவம் ஏற்பட்டது. இந்து முஸ்லீம்களுக்குள் நேசத்தையும் அன்புறவையும் வளர்த்தது. புகைந்த பூசலேயும், பகைமையையும் வேரறுத்த பெருமை அந்த எல்லேக்கல்லுக்குத் தான்! இப்படியே காலம் ஓடியது. அன்று முதல் இன்றுவரை முஸ்தபாவே மோதினராகப் பணியாற்றி வருகிறர்.

இப்பொழுது மோதினருக்கு நரையும் திரையும் கண்டாலும், அறுபதாவது வயதைத் தாண்டினலும் பள்ளிவாசல் காரியங்களே' சிரமப்பட்டாவது, தம் மகன் காஸிமின் உதவி கொண்டாவது, மிகத் தெம்புடனே ஆற்றி வந்தார். உள்ளத்தில் வலிமை குன்ருதவர். யாருக்கும் எதற்கும் அஞ்சாதவர். பட்டவர்த்தனமாக மனதில் பட்டதைக் கூறுவார். பள்ளிவாசல் சம்பந்தமான எந்தப் பிரச்சனேயையும் 'ஜமா அத்' தாரிடம்

துணிந்து பேசுவார். இதற்கெல்லாம் அவருக்கிருந்த 'ஈமானே' காரணம்!

ஊரிலே மிகவும் செல்வாக்கும், செருக்கும் படைத்தவர் அப்துல்காதர். பஞ்சாயத்துபோர்டு உதவித்தலைவர் ஊர் பிரமுகர்களில் முக்கியமான புள்ளி. அவர் உதட்டசைவுக்கு ஊரில் பலர் காத்துக்கிடப்பார்கள். அவர் நேரடியாகச் சம் பந்தப் பட்டப் பிரச்சனையை, அவரைப் பாதிக்கும் ஒரு விஷ யத்தை, அன்று 'ஜும்ஆ'வில் மோதினார் வெளியிட்டார் எனில், அவரது துணிவைப் பாராட்டத்தான் வேண்டும். மோதினார் கிளப்பிய பிரச்சனையைக் கேட்டு 'ஜமா அத்தார்' முகங்களில் ஆச்சர்யம் காணப்பட்டது. 'என்ன துணிச்சலப்பா இந்த கிழத்துக்கு?' என உள்ளூறப் பேசினார்கள். அதுவும் 'அப்துல் காதருக்குப் போட்டியாக ...! என கொஞ்சம் நெஞ்சு 'திக்'கியவாறே முணுமுணுத்தனர். மோதினார் தூண்டிவிட்ட விஷயத்தைக் கேட்டதும், அப்துல்காதரே அதிர்ந்து விட்டார்!

எல்லைக் கல்லுக்கு அப்பால், அப்துல் காதருக்குச் சொந்த மான வருமானம் ஈயாத வெட்டவெளித் தரிசு கிடந்தது. ஒரு செப்புக்காசும், செலவின்றி, துளி உழைப்பின்றி அதிலிருந்து மாதம் இருநூறு ரூபாய் சுளையாகக் கிடைப்பதென்றால், யார் தான் வேண்டாம் என்பார்கள்? அந்த வெளியில் சினிமாக் கொட்டகை போட்டுக்கொள்ள அனுமதித்தார் அப்துல் காதர். பஞ்சாயத்துப் போர்டில் தனக்குள்ள செல்வாக்கினால், விரைவில் லைசென்ஸும் வாங்கிக் கொடுத்தார். மேள தாளத்தோடு, சினிமாக் கம்பெனி துவங்குகிறது! எல்லைக் கல்லுக்கு அப்பாலே சினிமாக் கொட்டகைக்காரர்கள் 'பாண்டு' முழங்கினார்கள். அவர்கள் போடுகிற ரிக்கார்டு சங்கீதம், 'மஃரிப்' தொழுகை யின் போது 'கணீரென'க் கேட்டது. இதனையே ஒரு பிரச்சினை யாக கொண்டுவந்தார் மோதினார். 'ஜமாஅத்தார்' கூடிப் பேசலானார்கள்.

''அப்துல் காதர் மனசு வச்சா இந்தச் சங்கடமே தீர்ந்து விடும்'' என மோதினார் அவரைப் பார்த்தே கூறினார்.

தம் வருமானத்தில் கை வைக்கிறார்களே என்று அவருக்கு ஆத்திரம். ஒருவனும் தனக்குப் போட்டியாக முளைக்க மாட் டான். இந்த மோதினார்—இந்தக் கிழம் தனக்குப் போட்டி யாக......என ஓடியது அப்துல்காதர் சிந்தனை.

''எல்லைக் கல்லுக்கும் தள்ளித்தானே கொட்டகை இருக் கிறது?'' அப்துல் காதர் பிரச்சினையை சமாளிக்க முயன்றார்.

'ஆனால் கொட்டகைச் சத்தம், தொழுகைக்கு இடைஞ் சலாக இருக்கிறது' என்றது ஒரு துடியான வாலிபம்.

'சினிமாக்கொட்டகைக்கு லைஸென்ஸு இருக்கும் போது நாம் என்ன செய்ய முடியும்?' அப்துல் காதரின் நிழலில் ஒதுங்கிய ஒரு நபரின் கேள்வி இது. கலெக்டருக்கு எழுதணும்' என்றார் மோதினார் சிறிதும் தயங்காமல். சில வாலிபர்கள் வரவேற்றனர். அப்பொழுதுதான் அப்துல் காதருக்கு ஆத்திரம் பீறிட்டது. சீற்றமும், வெறியும் கலந்த குரலில் 'உங்களால் ஆனதைப் பாருங்கள்' என உரத்துக் கூறி விட்டு வெளியேறினார்.

வாலிபர்கள் தங்களுக்கு ஆதரவாகப் பேனாவையும் தாளை யும் நாடினார்கள். அப்துல் காதருக்கு ஆள் பலம், செல்வாக்கு பலம். அதிகாரிகள் விசாரணை ஆரம்பிக்கவே, 'ஜமாஅத்' இரண்டு பட்டது. இந்தச் சந்தர்ப்பத்தில் கோயிலில் உற்சவம் ஏற்பட்டது. ஐம்பது அறுபதாண்டுகளுக்குப் பின்னர் அது ஒரு பெரிய, முக்கியமான உற்சவமாம். அண்டைக் கிராமங் களிலிருந்து அநேகர் வந்தார்கள். எல்லைக் கல்லின் பெருமைக் கும், ஊர் அமைதிக்கும் சோதனை ஏற்பட்டது.

கோயிலினின்றும் மிகப் பிரமாண்டமான ஊர்வலம் கிளம்பி நகர்ந்து வந்தது. வழக்கத்திற்கு மாறாக, உற்சவ உற்சாகத் தீவிரத்தில் ஊர்வலத்தின் வழி தப்பியது. எல்லைக் கல்லுக்கு இப்பால் ஊர்வலம் போகையில் 'மஃரிப்' வேளை. பிறகு கேட்கவா வேண்டும்? சரித்திரம் ஒரு கிளிப்பிள்ளை மாதிரி! சொன்னதையே திரும்பக் கூறும்! மற்றொரு இந்து முஸ்லிம் கலவரம், அந்த நல்லூர் வரலாற்றில் இடம் பெற்றுவிட்டது. அதன் விளைவாகக் குறைந்தது இருபத்தைந்து பேர், இரு சாராரி லும் ஆஸ்பத்திரியில் இடம் பெற்றனர். போலீஸ் கண்காணிப் பில் ஊர் உறங்கிற்று. காலிகளுக்கும் கேடிகளுக்கும் கொண் டாட்டம்; ஒன்றுமறியாத அப்பாவி மக்களுக்குத் திண்டாட்டம்!

ரங்கன் ரவுடிகளில் முதல் நம்பர்! அவன் அட்டகாசம் இன்னும் ஒழுங்காக ஆரம்பமாகவில்லை! அவன் இன்னும் யாரிடமிருந்தும், அத்தகைய காரியத்திற்கு 'அட்வான்ஸ்' பெறவில்லை. எனவே அவன் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்திருந் தான்.

அன்றிரவு வடிவம்மாளின் குழந்தைக்கு நல்ல காய்ச்சல். அவளுக்கு ஒரே பீதியும், பயமுமாயிருந்தது. மோதினாரை அழைத்து வந்து ஓதிப் பார்க்கவேண்டுமென்று எண்ணினாள். ஆனால் வெளியே கண்ணைப் பொட்டையாக்கும் கும்மிருட்டு, காலமோ கெட்டுக்கிடக்கிறது! இந்த அகால வேளையில் 'அப்பா' வருவார்களா? என்ற ஐயம் அவள் மனத்தில் தெளிந்தது. இருந்தாலும், தூங்கும் மூத்த குழந்தைகளுக்கும், காயலில் கிடக்கும் கைக் குழந்தைக்கும் காவலாகக் கணவனை வைத்து

விட்டு, மனத்தில் ஒரு நம்பிக்கையுடனும், உறுதியுடனும் வெளியேறினுள். 'அப்பா' இரவில் எங்கிருப்பார் என்ற விவரம், அவளது முதல் குழந்தை பிறந்தது முதல் நன்ருகத் தெரியுமே? அவள் கால்கள் நடுக்கமுடன் பள்ளிவாசலை நோக்கி நடந்தன. மோதினூர் 'தஸ்பீஹ்' மணிகளை உருட்டிக்கொண்டு ஓதியவாறிருந்தார் அங்கே. 'அப்பா...' குரலைக் கேட்டெழுந்த மோதினுர், மின்சார ஒளியில் வடிவம்மாளைக் கண்டதும் திகைத்தார்.

'யார் வடிவா ?' என வியப்புடன் வினவினுர்.

'ஆமாம்...அப்பா'

'என்ன விசேஷம்மா ?' என்று கூறிக்கொண்டே படிகளில் இறங்கினுர்.

'குழந்தைக்கு ரொம்பக் காய்ச்சல் அடிக்குது, அப்பா! நீங்க ஒரு தடவை வீட்டுக்கு வந்து ஓதிட்டு வந்தாப் போதும்' என்ருள் வடிவம்மாள்,

'ரங்கனைத் தானே வரச் சொல்லணும். நீயாம்மா வந்தே ஒத்தையிலே' என்ருர் மோதினுர்.

'அவங்களை அனுப்பிச்சா நீங்க ஒருவேளை வருவீங்களோன்னு சந்தேகம். அதனுல்தான் நானே வந்தேன் ?' அவள் சந்தேகத்தை அவர் புரிந்துகொண்டார். ரங்கன்தான் ரவுடியாயிற்றே! அவன் நிழல் பட்டால்கூடப் போதுமே, தீவினைக்கு!

மோதினுர் சிறிது சிந்தனை செய்தார். கொஞ்சம் தயக்கம் ஏற்பட்டது. ஒருமுறை வடிவம்மாளின் துயர் தோய்ந்த முகத்தைப் பார்த்தார். உள்ளத்தில் தயக்கம் வற்றிவிட்டது. வடிவம்மாளைப் பின்தொடர்ந்து, அந்த நடுநசியில், அவள் மனை ஏகினுர். ரங்கன் மிகவும் பக்தியாகக் கைகட்டிக் கொண்டு நின்ருன். நீண்ட நேரம் கைக் குழந்தைக்கு ஓதிப் பார்த்துவிட்டு, மற்றிரு குழந்தைகளுக்கும் ஓதிப்பார்த்தார்.

"அல்லாஹ் அருளால் குணமாகி விடும்; நீ ஒண்ணுக்கும் கவலைப்படாதேம்மா" மோதினுரின் இச்சொற்கள் தான் வடிவம்மாளுக்கு எவ்வளவு நம்பிக்கையையூட்டின ?

அவர் வெளியேறவும், 'துணைக்கு நான்' வரட்டுமா ? என்ருன் ரங்கன்.

"வயசு தள்ளிப்போன எனக்கென்னப்பா பயம்? வடிவுக்குத் துணையாயிரு!" என்று சொல்லிவிட்டுப் போனுர் பெரியவர்.

மறுநாள் குழந்தைக்கு நல்ல குணம் கண்டிருந்தது. காய்ச்சலும் விட்டிருந்தது. வடிவம்மாளுக்கு ஒரு திருப்தி. அவளுக்கு நன்றி கலந்த உணர்ச்சி உள்ளத்தில் மிகைந்து நின்றது. மோதினுருக்கு எவ்விதம் கைம்மாறு செய்யமுடியும்; அவளோ ஏழை! ஆனல் 'அப்பா'வுக்குத்தான் அவள் மீது எவ்வளவு பாசம்! அவள் மனம் இவற்றை எண்ணிப் பூரித்தது. 'ஆண்டவனுக்கு அடுத்தாற்போல்' எனவும் ஒரு கணம் எண்ணியது.

அன்று காலையில் ஊர்ப் பிரமுகர் ஒருவர் அழைப்பதாக ரங்கனைத் அவன் கூட்டாளிகளில் ஒருவன் அழைத்துச் சென்ருன். மாலை நேரத்தில் நாலைந்து பேர் ரங்கன் வீட்டில் கூடினுர்கள். வடிவம்மாள் அடுப்பங்கரையில் வேலை பார்த்துக் கொண்டிருந்தாள். ரங்கனின் கோஷ்டி வெளிக் கதவைத் தாளிட்டுக் கொண்டு, ஏதோ இரகசியமாகப் பேசலானுர்கள். வடிவம்மாள் அடுப்பங்கரை வேலையினின்றும் மீண்டு, அவர்கள் பேசுவதை ஒதுங்கி நின்று உன்னிப்பாகக் கேட்டாள். அவர்கள் பேச்சில் 'பள்ளி வாசல், இரவு பன்னிரண்டு மணி' என்ற சொற்கள் அதிகமாக அடிபட்டன. ஏதோ ஆபத்துக்கு வித்திடும் பேச்செனப் பட்டது, வடிவம்மாளுக்கு. அவளுக்கு உள்ளூர கலக்கம். ரங்கனை தடுத்து நிறுத்த அவளால் முடியாது. பள்ளிவாசல் என்றபோது 'அப்பா'வின் நினைவே எழுந்தது. என்ன செய்வதென்றும் அவளுக்கு விளங்கவில்லை. அவர்கள் பேச்சிலிருந்து அன்றிரவு ஏதோ அசம்பாவிதம் நடக்கப்போகிறது என்று மட்டுமே தெளிவாகத் தெரிந்தது. ரங்கன் ஆறு மணிக்கே வீட்டைவிட்டுக் கிளம்பி விட்டான். வடிவம்மாளின் மனக் கலக்கம் அதிகரித்தது. அவள் நிம்மதி இழந்தாள். இரவு பத்தரை மணி வரை ரங்கன் வராதது அவள் எண்ணத்தை நிச்சயப்படுத்தியது. 'அப்பா'வின் நினைவுதான் அவள் உள்ளத்தைக் குலைத்தது. மூன்று குழந்தைகளும் நிம்மதியாக உறங்கிக் கொண்டிருந்தன. ஒரு விதமான துணிவு அவள் உள்ளத்தில் உருவாயிற்று. ஆண்டவன் பாதுகாப்பில் குழந்தைகளை விட்டு விடத் தீர்மானித்தாள். கதவை இழுத்துச் சாத்திவிட்டு வெளியேறினுள்.

நல்ல இருட்டு! பேச்சு மூச்சற்ற அமைதி! ஆள் அரவம் இல்லாத மோனம்! கால்வாயைக் கடந்ததும், அவள் மனம் 'பட பட'வென அடித்துக் கொண்டது; உள்ளம் அலையாடிக் கொண்டு தவித்தது. இன்னும் ஒரு பர்லாங்கு தொலைவில் பள்ளிவாசல் இருக்கிறது. வடிவம்மாள் வேகமாக விரைந்து கொண்டிருந்தாள். சினிமாக் கொட்டகைச் சத்தம் தூரத்தில் கேட்டது. இரண்டாவது ஆட்டம் முடிந்த பிறகுதான் ரங்கன் கோஷ்டி காரியத்திலிறங்கும். இதை வடிவம்மாள் ஒட்டுக் கேட்டிருந்தாள். எனவே அதற்குமுன் 'அப்பா'விடம் விஷயத்தை

எத்திவிட வேண்டும் என எண்ணினுள். அவள் போகும் வேகத்தில், சேலைத் தலைப்பு காலில் பின்னியது. பின்னிய கால்கள், கற்பாறையொன்றில் மோதியதும் அவள் தலை குப்புற வீழ்ந்தாள்.

'அம்மா !...'

அலறல் இருட்டூடே கேட்டது. அந்தக் குரல் வந்த பக்கம் பாட்டரியின் ஒளிப்பாணம் தூரத்திலிருந்து வந்து விழுந்தது. சிறிது நேரத்தில் அந்த பாட்டாரியின் ஒளிப் பிழம்பு அந்த இடத்தை நெருங்கியது. பாட்டரியைப் பிடித்திருக்கும் கை நடுங்குவதை, ஒளிப்பாணத்தின் சிதறல் காட்டிற்று. 'ஆ...வடிவு...'

ரங்கன் அவள் நெற்றியிலிருந்து விழும் இரத்தத்தைக் கண்டதும் திகைத்துவிட்டான். அவள் மயங்கிக் கிடந்தாள். அப்படியே அவளைத் தூக்கி எடுத்து, தோளில் போட்டுக்கொண்டு வீட்டுக்கு விரைந்தான்.

இரவோடு இரவாகக் 'கம்பவுண்டரை' அழைத்துவந்து காட்டி அவள் நெற்றிக் காயத்துக்கு மருந்து கட்டச் செய்து. பயத்தோடும், கண்ணீர்த் திவலையோடும் அவள் அருகிலேயே இரவு முழுவதும் விழித்திருந்தான் ரங்கன். கிழக்கு வெளுக்கும் நேரமாகிவிட்டதைக்கூட அவன் உணரவில்லை. படுக்கையில் வடிவம்மாள் புரள்வதைக் கண்டதும் அவனுக்குத் தெம்பும், நம்பிக்கையும் ஏற்பட்டன.

'அப்பாவுக்கு ஒண்ணுமில்லையே?' என்ருள் வடிவம்மாள் பதட்டமாக; படுக்கையினின்றும் எழுந்து அமர்ந்தாள்.

'ஒன்றுமில்லை வடிவு. நீ நிம்மதியாகத் தூங்கு' ரங்கன் பேச்சில் அவளுக்கு அவ்வளவு நம்பிக்கையில்லை. பிறகு அவன் முழு விவரங்களையும் கூறி முடித்தான்.

அத்தருணம் காலை மோனத்தைக் கலைக்கும் முதற் குரல் ஒலித்தது. வடிவம்மாளின் காதுகள் அக்குரலை உன்னிப்பாகக் கேட்டன.

'அல்லாஹு அக்பர்; அல்லாஹு அக்பர்...லாஇலாஹ இல்லல்லாஹ்' என முடிந்தது அந்த இனிய கீதம். இப்பொழுது ரங்கன் பேச்சில் முழு நம்பிக்கை கொண்டாள் வடிவம்மாள். அவள் விருப்பத்திற்கும், வேண்டுகோளுக்கு மிணங்க, அப்பாவை அழைத்து வந்தான் ரங்கன். அவரைக் கண்டதும், அவளுக்கு மலர்ச்சி ஏற்பட்டது. மலர்ந்த அவள் முகத்தைக் கண்டதும் ரங்கன் மனம் தேறியது. அப்பாவிடம் ரங்கனை வைத்துக் கொண்டே முழு விவரமும் கூறினுள் வடிவம்மாள். அவள்

நெற்றிக் காயத்தைக் கண்டதும் அவருக்கும் வேதனை ஏற்பட்டது. ரங்கனுக்கோ அவளைப் புரிய முடியவில்லை. அவன் முகம் குன்றி னாலும், வடிவம்மாள் தேறிவிடுவாள் என்ற எண்ணம் இன்ப மூட்டியது.

அப்பாவுக்கு ஒன்றுமில்லை என்றதுமே, தன் நெற்றிக் காயம் ஆறிவிட்டதாக உணர்ந்தாள் வடிவம்மாள். அவளுக்கிருந்த பக்தியும் பாசமும் தளிர்த்துச் செழித்தன.

அந்த எல்லைக் கல்லுக்கும் அப்பால்...மோதினார் முஸ்தபா வையும் வடிவம்மாளையும் பிணைக்கும் அன்புப் பாலத்தை நல்லூர் வரலாறு சொல்லப் போகிறதா என்ன? நல்லூரார்தான் உணரப் போகிறார்களா?

—o—

சோமு

34

# ஸத்யமேவ ஜயதே

"டால் என்ற சத்தம் கேட்டது. சரோஜா பதறியடித்து ஓடிப்போய்ப் பார்த்தாள். அலமாரியில் வைத்திருந்த பெரிய நெய் ஜாடி விழுந்து உடைந்து கிடந்தது. சரோஜாவின் அம்மா நெய்யை எடுக்கும்போது கை நழுவிக் கீழே விழுந்துவிட்டது.

இந்த ஜாடி சரோஜாவின் அப்பா தில்லியிலிருந்து வெகு சிரமப்பட்டு வாங்கி வந்தது.

சரோஜா அலமாரிக்குப் பக்கத்தில் போய் நின்றுகொண்டு பார்த்தாள். அம்மா கைப்பிடித் துணியை வைத்துத் தரையைத் துடைத்துக்கொண்டிருந்தாள். அரைப்படி நெய் இருக்கும். அவ்வளவும் கீழே சிந்தியிருந்தது!

''என்னம்மா இது. எவ்வளவு நெய்'' என்று சரோஜா குழப்பமாகக் கேட்டாள்.

''சரி, சரி, நீ ஒருத்தி அனுதாபப் படுறத்துக்கு இல்லே யேன்னுதான் குறைப்பட்டேன்'' என்ருள் அம்மா வெடுக்கென!

அம்மா முகத்தில் இருப்புச் சட்டியிலே காய்கிற வெண்ணெய் போல 'சட சட' என்று கோபம் பொரிந்து கொண்டிருந்தது!

''என்னம்மா, இப்படிக் கோபப்படறே? நீதானே அன்னிக்கு ஒரு கரண்டி நெய் அதிகமாக் கேட்டத்துக்கு கோபிச்சே என்னே—நெய் விற்கிற விலையிலே கூடயும் ஆச்சு, முறமும் ஆச்சுன்னு''

''சரி சரி, எனக்குத் தெரியும். நீ போ பெரிய மனுஷி.''

',இல்லேம்மா...நான்—வந்து...''

''இந்தா சரோஜா, நீ பேசாமப் போறியா இல்லையா?''

''அம்மா, நான் அப்பாகிட்டச் சொல்லிடுவேன்னுதானே பயப்படுறே, அம்மா?''

''சொல்லுவே. சொன்னே, அவ்வளவுதான். அப்புறப் பாரு உன்னே என்ன செய்யறேன்னு.''

''இல்லேம்மா, நான் சொல்லவே மாட்டேனம்மா. கோபிச் காதேம்மா, சத்தியமா நான் அப்பாகிட்டேச் சொல்லமாட்டேன் அம்மா...''

சரோஜாவின் அம்மாவுக்குக் கோபம் தணிந்தது. சத்தியத் துக்கு எவ்வளவு மதிப்பு இருக்கிறது என்று சரோஜாவுக்கு அப் பொழுதுதான் மிக நன்ருய்ப் புரிந்தது. அந்த ஒரு வார்த்தை எவ்வளவு எளிதாக அம்மாவினுடைய கோபத்தை விரட்டி விட்டது என்று சந்தோஷப்பட்டாள் சரோஜா!

அன்று சாயந்திரம் சரோஜாவின் அப்பா ஆபீஸிலிருந்து வந்ததும், என்னவோ வாசனை பார்க்கிறது மாதிரி மூக்கை இழுத்து இழுத்து சுவாசித்துக்கொண்டே வந்தார்.

''இதென்ன... ஒ! நெய்யா, சரி சரி—நெய் விற்கிற விலை யிலே...'' என்று ஆரம்பித்தார் அப்பா.

'' நான் ஒண்ணும் கொட்டலே, நம்ம வீட்டிலே வளர்கிறதே ஒரு செல்லப் பூனே, அதுதான்...'' என்று அம்மா வார்த்தையை இழுத்தாள்.

''ஓகோ' ஜாடியுமே போயுட்டுதா, ரொம்ப சரி'' என்று சொல்லிக்கொண்டே உடைந்து போன துண்டுகளைப் பார்த் தார்.

''ஒரு தாவிலே தாவி நெய்யையும் கொட்டி, ஜாடியை யும் உடைச்சுட்டு காத்தாப் பறந்துட்டுதே'' என்று அம்மா சொன்னுள். ஒரே ஆச்சரியத்தில் மூழ்கிப் போனவள் போல

சரோஜாவின் அப்பாவுக்கு ஆத்திரம் வந்தது. அந்த நிட ஷத்தில் பூனேமட்டும் அகப்பட்டிருந்தால் அவ்வளவுதான் பொதுவாகவே அஹிம்சையில் அவருக்கு அவ்வளவாக நம்பிக்கை கிடையாது!

அம்மா சொன்னதையெல்லாம் சரோஜா கேட்டுக்கொண் தான் இருந்தாள். ஆனுலும் நடந்த விஷயத்தை அப்பாவிட

சொல்லவில்லே; அம்மாவுக்கு சத்தியம் அல்லவா செய்து கொடுத்திருக்கிருள் !

இந்தக் குழப்பம் எல்லாம் நடந்து அரை மணி நேரம் கழித்து அவர்கள் வீட்டிலே வளருகிற அந்தக் கறுப்புப் பூனே வந்தது. வந்தால் என்ன? கோபத்தில் அந்தமாதிரி ஒரு காரியம் அப்பா செய்வார் என்று சரோஜா எதிர் பார்த்தாளா? இல்லே. என்ன செய்தார் அவர்? அந்தப் பூனேயைப் பிடித்து ஒரு சாக்குக்குள்ளே போட்டுக் கட்டி எங்கேயோ ஊருக்கு வெளியே கொண்டுபோய் விரட்டி வந்துவிட்டார் !

சரோஜாவுக்கு மிகவும் கஷ்டமாக இருந்தது. அதைத் தூக்கிப் போடும்போது அந்தச் சாக்குக்குளே இருந்து கேட்ட பூனேயின் பரிதாபக் கூச்சல் சரோஜாவின் காதில் கேட்டுக் கொண்டே இருந்தது.

அன்று இரவு அவள் சரியாகச் சாப்பிடவில்லே. கறுப்புப் பூனேயிடம் சரோஜாவுக்கு அபாரமான பிரியம் உண்டு. பாவம் அது என்ன செய்தது? ஜாடியைக் கீழே தள்ளினது அம்மா அல்லவா! அப்பாவோ என்ருல் இந்தப் பூனேயைக் கொண்டு போய் எங்கோ கண் தெரியாத இடத்தில் விட்டு விட்டாரே! சரோஜாவுக்கு அப்பாவின் பேரில் கோபம் கோபமாக வந்தது. ஆனுலும் அப்பாவையுந்தான் சொல்ல என்ன குற்றம்? நெய் ஜாடியைக் கீழே தள்ளியது பூனேதான் என்று அவர் உண்மையிலேயே நம்பினுர். அம்மாதானே பொய் சொன்னுள்? ஆனுல் பாவம், அம்மா ஏன் பொய் சொன்னுள்? அப்பா கோபத்துக்குப் பயந்துதானே. அவள் மேலேயும் குற்றமில்லே. என் மேல்தான் குற்றம். நான் ஏன் அப்பாவிடம் நிஜத்தைச் சொல்லவில்லே?'' என்று சரோஜாவின் குழந்தை உள்ளம் துடித்தது.

சரோஜா படுக்கையில் புரண்டுகொண்டே தன்னுடைய பசலே அறிவுக்கு எட்டியபடியெல்லாம் யோசனே செய்தாள்: ''இப்படியே போய் அப்பாகிட்டே நிஜத்தைச் சொல்லிட்டா என்ன ஆனு சத்தியம் பண்ணிக் கொடுத்திருக்கோமே அம்மா கிட்டே, சத்தியம்...சத்தியமு மாச்சு சக்கரைப் பொங்கலுமாச்சு. பேசாமே தைரியமா அப்பாகிட்டே போயி சொல்லிடத்தான் போறேன். ஆனு அப்பா பூனேயைக் கொண்டு போய் வெளியே விட்டு விட்ட மாதிரி அம்மாவையும் கொண்டுபோய் வெளியே விட்டுட்டு வந்திட்டா...?''

சரோஜாவுக்கு அந்த எண்ணத்தையே தாங்க முடியவில்லே. அந்த இரவு முழுதும் அவளால் உறங்கவே முடியவில்லே: எப்போது விடியும், எப்போது இந்தக் கோபக்கார அப்பாவை

யும், பொய் சொன்ன அம்மாவையும் மறந்து கொஞ்ச நேரம் பள்ளிக்கூடத்தில் போய் இருக்கலாம் என்று எண்ணினள்.

* * *

மறு நாள் விடிந்ததோ இல்லையோ அவசரம் அவசரமாகக் குளித்தாள் சரோஜா.

''அம்மா, தலையைச் சீவிவிடம்மா, இன்னிக்குப் பள்ளிக் கூடத்துக்கு சீக்கிரம் போகணும்'' என்ருள்.

''இதென்ன அம்மா ஒரு நாளும் இல்லாத திரு நாளா இருக்கு? பள்ளிக்கூடத்திலே என்ன உனக்கு திடீர்னு இத்தனை அக்கறை?'' என்று அம்மா கேட்டாள்.

இல்லேம்மா, இன்னிக்கு எங்க பள்ளிக்கூடத்துக்கு இன்ஸ் பெக்டர் வரார். கொஞ்சம் சீக்கிரமே போகணும்மா.''

இவ்வாறு சரோஜா ஒரு குட்டிப் பொய் சொல்லி விட்டுப் பள்ளிக்கூடத்துக்குக் கிளம்பினள். போகிற வழியிலேயே ஒரு யோசனை வந்துவிட்டது: இன்ஸ்பெக்டர் வரார்னு சொன் னேனே அம்மாகிட்டே, இது மட்டும் பொய் இல்லையா. செ, செ! அம்மா ஒரு பொய் சொன்னதுனலே அதுக்காக நான் எத்தனை பொய் சொல்லவேண்டியிருக்கு? கடவுளுக்குப் பொய்னு பிடிக்காதுன்னு வாத்யார் சொல்லி யிருக்காரே, ஒரு பொய்யை மறைக்கிறதுக்காக நான் எத்தனை பொய் சொல்லிட்டேன்...அப் படின்னு கடவுளுக்கு என்னைப் பிடிக்காதா?'-சரோஜா என் னென்னவோ யோசனை பண்ணி மூளையைக் குழப்பிக் கொண் டாள். இவளுடைய அதிருஷ்டம் அன்று பள்ளிக்கூடத்தில் முதலாவது வகுப்பு தமிழ் வகுப்பு. திருக்குறள் பாடம். அதிலும் எந்த அதிகாரம்? 'வாய்மை.' சரோர்ஜா வகுப்பைக் கவனிக் காமல் ஏதேதோ யோசனை பண்ணிக் கொண்டிருந்தாள். தமிழ் ஐயா இதைப் பார்த்துவிட்டர்.

''சரோஜா, எங்கே கவனிக்கிருய்,...ஹூம்? அந்த மூன்ரு வது குறளைப் படி'' என்று அதட்டினர்.

சரோஜா எழுந்து படிக்க ஆரம்பித்தாள்:—

**"தன் நெஞ்சு அறிவது பொய்யற்க; பொய்த்தபின்**
**தன் நெஞ்சே தன்னைச் சுடும்"**

திக்கிக்கொண்டே சரோஜா வாசித்தாள். தமிழ் ஐயா அவளை அதோடு விடவில்லை...''அதற்கு என்ன பதவுரை எழுதியிருக் கிறது, வாசி'' என்ருர்.

சரோஜா தொடர்ந்து படித்தாள் :—

''தன் நெஞ்சு அறிவது—தன்னுடைய மனத்துக்கே பொய் என்று தெரிவதை

பொய்யற்க—அந்தப் பொய்யைச் சொல்லாதே;

பொய்த்தபின்-அப்படிப் பொய் சொன்னால், பிறகு—

''தன் நெஞ்சே தன்னைச் சுடும்—தன்னுடைய மனமே தன்னைச் சுட்டுப் பொசுக்கும்''

'இந்தத் திருவள்ளுவர் தன்னைப்பற்றியே எழுதியிக்கிறாரே' என்று சரோஜாவுக்கு ஒரே வியப்பாக இருந்தது. தமிழ் ஐயாவோ, அன்று வகுப்பில் இதற்கு மேல் இன்னும் வியாக்யானம் செய்தார். ''என்ன கஷ்டம் வந்தாலும் நாம் பொய் சொல்லாமல் இருக்க வேண்டும். நன்மை வரும்போது உண்மை பேசுவது பெரிதில்லையே. கெடுதியே வரும் என்று தெரிந்தாலும் கூட உண்மையே சொல்வதுதான் சிறப்பு'' என்றார். சரோஜாவுக்கு 'ஏன் பள்ளிக்கூடத்துக்கு வந்தோம்' என்று ஆகிவிட்டது. எப்பொழுது வீட்டுக்கு விடுகிற மணி அடிக்கும் என்றே காத்துக் கொண்டிருந்தாள். நேற்று ஒரு நாள் அவளுடைய அம்மாவுக்குச் செய்து கொடுத்த சத்தியம் சத்தியமா, பொய்யல்லவா அது என்று தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டாள்—அந்தப் பொய்ச் சத்தியத்தினால் அவள் அடைந்த வேதனை போதும் போதும் என்றாகிவிட்டது!

அப்பா தன்னைக் கோபித்துக் கொண்டாலும். அம்மாவையே கோபித்தாலும் அதனால் என்ன கெடுதிவந்தாலும், இனிமேல் ஒரு நிமிஷம்கூட ஜாடியை உடைத்த விஷயத்தை அப்பாவிடம் சொல்லாமல் இருக்கக்கூடாது என்று தீர்மானித்துவிட்டாள் சரோஜா. அப்பா அம்மாவை ஏதாவது கோபித்து இம்சித்தால், தானே குறுக்கே நின்று தன்னைத் தண்டிக்கும்படி சொல்லிவிடலாம் என்ற முடிவுக்கு வந்தாள்!

சரோஜா வீட்டிற்கு வந்தபோது அம்மா அப்பாவிடம் ஏதோ பேசிக்கொண்டிருந்தது கேட்டது :

''உங்களுக்குக் கோபம் வந்தாலும் இப்படியா வரும்...? பாவம், அந்தப் பூனையைக் கொண்டு எங்கேயோ விட்டுட்டு வந்துட்டீங்களே'' என்றாள் அம்மா.

''சரிதான். நேற்று நெய் ஜாடியை உடைச்சுது. நாளைக்குப் பால்—செம்பை கவிழ்க்கும், நாளைக்கு மறுநாள்...''

''இப்படி அபாண்டமாகச் சொல்லக்கூடாது; அது என்ன செய்தது பாவம்?'' என்று கேட்டாள் அம்மா.

"ஏன், நெய் ஜாடியை உடைச்சது போதாதா... இன்னும் வேறே?" என்று கடுகடுப்புடன் அப்பா கேட்டார்.

"நெய் ஜாடியை உடைச்சது...பூனை இல்லை" என்று மெதுவாக வார்த்தைகளை அசைபோட்டாள் சரோஜாவின் அம்மா. சரோஜா கூர்ந்து கேட்டாள்.

"அப்ப யாரு உடைச்சது ஜாடியை?"

"நீங்கதான் மகா கோபக்காரரர் ஆச்சேன்னு ஒரு சின்னப் பொய்யைச் சொன்னேன். அதுக்காக நீங்க இந்தப் பூனையைக் கொண்டு இப்படி விட்டுடுவீங்கன்னு கண்டேனு...பாவம், எங்கெல்லாம் நின்று தவியாய்த் தவிக்குதோ..." என்று அம்மா ஒரு சோகக் குரலுடன் கேட்டாள்.

சரோஜாவுக்கு அதைக் கேட்டதும் அழுகை அழுகையாய் வந்தது. உண்மையில் அவளுடைய அம்மா சொன்ன விதத்தில் அப்பாவுக்குங்கூட இரக்கம் வந்து விட்டதுபோலத் தோன்றியது. அதைவிட அவளுக்கு வருத்தம், தான் அப்பாவிடம் முதலில் உண்மையைச் சொல்லவில்லையே என்றுதான்.

"அப்பா, அப்பா, நீ கோவிச்சுக்காதே, ஒண்ணு சொல்லட்டுமா?" என்று அப்பாவுக்கு அருகிலே வந்தாள் சரோஜா.

"என்னடா கண்ணு சொல்லு" என்றார் அப்பா.

"அப்பா, நீ கோவிச்சுக்குவே..."

"இல்லையம்மா, கோவிச்சுக்கலை நான்..."

"சத்தியமா கோவிச்சுக்கமாட்டேன்னு சொல்லு."

"சத்தியமா கோவிச்சுக்கலை,"

"ஜாடியை அம்மாதான் கீழே போட்டு உடைச்சா. ஆனா உன்கிட்டே சொல்லக்கூடாதுன்னு என்னை சத்தியம் வாங்கிட்டா அப்பா...அதனாலேதான் நான் சொல்லலையப்பா"...வார்த்தைகளை முழுதும் முடிக்குமுன் சரோஜாவுக்கு அழுகை அழுகையாய் வந்துவிட்டது. சரோஜாவின் அப்பா சிரித்துவிட்டார். அப்பொழுது தான் சரோஜாவுக்கும் தைரியம் வந்தது.

"அப்பா, என் பூனைக்குட்டி? அது இல்லாமே எனக்கு எப்படியோ இருக்கப்பா. அதைக் கூட்டிகிட்டு வாரியாப்பா" என்று சரோஜா கெஞ்சினாள்.

அப்பொழுது தடால் என்று சத்தம் கேட்டது. என்ன ஆச்சரியம்! சாக்குக்குள்ளே போட்டு ஊருக்கு வெளியே கொண்டு போய்த் துரத்திவிட்ட பூனைக்குட்டி, இப்பொழுது மறுபடியும்

வீட்டை அடையாளம் பிடித்து வந்துவிட்டது; வந்ததோடு மட்டுமில்லே, 'ஷெல்பி'லே சொருகி வைத்திருந்த எதையோ கீழே வேறு தள்ளி விட்டது-உண்மையிலேயே, சத்தியமாகவே, தள்ளி விட்டது! அப்பா அம்மா இருவரும் போட்டி போட்டுக் கொண்டு பூனையைப் பிடித்தார்கள். ஆனால் அது இருவரிடமும் தப்பித்துக்கொண்டு சரோஜா மடியிலே தாவியது.

அம்மா கீழே விழுந்த புத்தகத்தை எடுத்துக் கொண்டு வந்து கொடுத்தாள். சரோஜாவின் தாத்தா கடைசிவரை விட்டுப் பிரியாமல் வைத்துப் படித்துக் கொண்டிருந்த புத்தகம் அது. அவருடைய சொத்துக்கு யார் யாரோ தாயாதிகள் வந்து வியாஜ்யம் போட்டு தாவர ஜங்கமங்களை எடுத்துக் கொண்டு போனார்கள், ஆனால் இந்தப் பழம் புத்தகத்தை மட்டும் யாருமே சீண்டுவாரில்லை.

''அது என்ன புஸ்தகம்பா?'' என்று சரோஜா கேட்டாள்.

உண்மையில் அவளுடைய அப்பாவுக்கே அது என்ன புத்தகம் என்று இதுவரை தெரியாது. ரிஜிஸ்டர் பத்திரமானால் இதற்குள் கரைத்துக் குடித்திருப்பார்—பழம் புத்தகந்தானே அது!

''அப்பா, நான் கேட்டேன், சொல்ல மாட்டேங்கிறியே, அது என்ன புஸ்தகம்பா?'' என்று மறுபடியும் சரோஜா கேட்டாள்.

உங்க தாத்தா வச்சுட்டுப் போன சாஸனப் பட்டயம்'' என்று எகத்தாளமாகச் சொல்லிக் கொண்டே அந்தச் சுவடியைத் தூசு தட்டி முதல் முறையாகப் பிரித்தார் அப்பா.

தாத்தா விட்டுப்போயிருந்த சாஸனத்தைப் பிரித்ததும் அந்த உபநிஷதச் சுவடியில் எழுதியிருந்த வாசகம் இது தான் :—'' ஸத்யமேவ ஜயதே!

அப்பா அதற்கு வியாக்யானம் சொன்னார், '' பொய் சொன்னே, கறுப்புப் பூனை காணுமப் போச்சு, உண்மையை ஒத்துக்கொண்டே, உடனே போன பூனை திரும்ப வந்துட்டுது!''

சரோஜா அந்தக் குடியரசு மந்திரத்தைத் தனக்குள்ளே உச்சரித்துக் கொண்டாள் :—'' ஸத்யமேவ ஜயதே!''

—o—

# 35

## ஆண்பிரிய வாழாது

வீட்டு வாசலை நெருங்கி வந்து நின்றது வண்டியின் சதங்கை யோசை அலங்கானூர் பண்ணையார் அம்பலவாணன் வண்டியி னின்று இறங்கினர். வாசலில் தண்ணீர் தெளித்துக் கொண்டி ருந்த வேலைக்காரி ராஜாமணி தலை நிமிர்ந்தாள் பண்ணையாள ரைக் கண்டதும் சோர்வுற்றிருந்த அவள் முகத்தில் தென்பு தெளிந்தது.

'' வாங்க, வாங்க, உங்களுக்குக்காகத்தான் புலம்பிக்கிட்டே இருக்கு.''

ஆசை நம்பிக்கையுடன் புரளும் குரலில் அவரை வரவேற்று அழைத்துக்கொண்டு உள்ளே செல்லலானுள். ராஜாமணி அம்பலத்தின் மனம் எண்ணவலை இழைக்க அவர் உரையா விரை வுடன் உள்ளே சென்று குமுதம் படுத்திருக்கும் அறையை அடைந்தார்.

காய்ந்த சருகாய்க் கிடந்தாள் குமுதம் கட்டிலிலே.

சாளர வழியூடே நுழையும் மாலை மஞ்சள் வெயில், பாதையில் காற்ளேடு கலந்து பரவித் திரியும் தூசி மண்டலத்தின் மூலம் தன் ஒளிக்கும் உருவம் ஏற்று தூசிகளின் உருவுக்கும் ஒளி யூட்டி தரையில் வழிந்து குழம்பியது.

' ஒளி யார் ? எது தூசி ?'

அந்தக் காட்சி கிளம்பிய நினைவை அம்பலத்தால் சீரணிக்க முடியவில்லை. அருகே மருந்து புட்டிகள் அடுக்கிக் கிடந்தன— குமுதத்தின் வாழ்வு நோயிடம் பெற்று வரும் தோல்வியின் அறி

குறிபோல், நெஞ்சத்தை நீர்த்திருக்கும் நினைவுகளில் நெருப்பைக் கொட்டியது அந்தத் தோற்றம்.

வாழ்வின் பாழ்முடிவாய்ப் படுத்திருந்த அவள்முன் தாழ்வின் கீழ்நிலையாய் அமர்ந்து அநுதாபத்துடன் நோக்கினர் அம்பலவாணன்.

" குமுதா !"

அந்தச் சொல்லிற்கா அமுதத்துளி போன்ற அவ்வளவு சக்தி !

விழி இதழ்கள் வெளி விரிந்து மொழி பேசும் அக் கண்ணின் மணிகள் இத்தனை நாட்களுக்குப்பின் இன்று சுடர்ந்தன. குமுத மலர் முகை அவிழ்க்கும் கோலத்தோடு குமுதா தன் வாய் திறந்து கூப்பிட்டாள்.

" அத்தான்!"

முத்தான அழைப்பைத் தொடர்ந்து கருத்திலே ஊறிக் கண்கள் வழியே விழுந்தன இரு நீர்முத்துக்கள். தலை தலையணையில்புதைந்தது. உடல் நடுங்க உணர்ச்சிகள் விசும்பலாய்க் கிளம்பின.

" அழாதே, குமுதம் "

ஆனல், அழுது பழுதைத் திருத்த முடியாவிட்டாலும் அழாமல் எப்படி இருப்பது?

" ஊ...ம் " அம்பலவாணனது அகச் சிறையின்று நினைவுப் புள் 'சிவிக்' கென்று கிளம்பி, மறைந்த வாழ்க்கையின் பாதையோடு பறந்து செல்லத் தொடங்கியது.

*     *     *

ஆறு ஆண்டுகட்குமுன்,... அன்றொரு நாள்

கூடல் மதுரையின் ஆடும் தெய்வத்து அருட் சபை முன் குமுதம் கலை அரங்கேறிக் கன்னி நடனம் புரிந்த நன்னாள்.

அன்று குமுதா இளமையின் அழகொளிர, கலையின் மெருக விழ ஆடினள். பண்ணார் மொழி பேசும் பாவங்களை பின்னேர் எழில்கொண்ட மேனியொளி வெளியிட, கண்டத்தில் ஊறிவரும் கனிச்சாறு சுவைக்குரல் இசையார்ப்ப, எழில் விழி சுழன்று உள்ளத்தை அள்ள ஆடினள், குமுதம்.

அரங்கிலாடிய அந்தக் கன்னியிடம் அவையிலிருந்த அம்பலத்தின் உள்ளம் அதுபோதுதான் கொள்ளைபோனது. நாட்டியம் முடிந்து வீட்டிற்குச் செல்லும்போது குமுதத்தின் இதயக் கூண்டில் அம்பலத்தின் மனக்கிளி சிறைபட்டுக் கிடந்தது.

* * *

பிறந்த அறிமுகம் வளர்ந்த உறவில் கலந்த உணர்வாகி ஒட்டிய இரு உள்ளங்களாகி விட்டன.

குமுதா குலத்தால் தாசியானால் என்ன? குணத்தால் உயர்ந்து குப்பையில் பூத்த குருக்கத்தி அல்லவா? அம்பலத்தின் அன்பிலே மூழ்கித் திளைத்து, மண்ணை விண்ணாக்கி மகிழ்ந்தது அவள் மனம்.

ஆனால் கனவும், நனவும் கொற்கையும் செயலும், ஆசையும் பேறும் கூடாத தத்துவங்களா? மதி கட்டிய மணல் வீட்டை விதி சீறிச் சிதைக்கும் விளையாட்டா வாழ்க்கை?

காலக் கடும் புயல் குமுதத்தின் கோல வாழ்வை ஒரு நாள் குலைத்து விட்டது.

அவள் அம்பலவாணனின் கருத்துக் கிசைந்த காதலிதான். உள்ளத்தைக் கவர்ந்த கிள்ளைதான். அவர் குலப் பெருமையை நீத்து அன்பிற்காக உறவு பூண்ட குமுதம்தான். ஆனால், அவர் அன்று கண்ட காட்சி? கூடத்து ஊஞ்சலில் அந்நிய இளைஞன், அவர் அறியாத ஒருவனுடன் அவள் அருகிலமர்ந்து பேசியவாறே சிரித்து மகிழ்ந்து கொண்டிருந்த எதிர்பாராத விபரீதம்!

மனது மருகி விட்டது. நெஞ்சம் நீர்த்துப் போனது.

வானில் பறந்திடும் காற்றாடியின் நூல், வெள்ளத்தில் நீந்தும் நீர்க்கோளத்தின் மேலுறை—இவற்றைப் போன்றதே காதல் வாழ்விலே கனிந்திடும் நம்பிக்கையென்ற மென்மையான உணர்வும். சந்தேகம் என்ற அழிவு நினைவு அங்கே முளைத்து விட்டால் அன்புக்கு மரணம் தான்.

“மண்பரியை நம்பித் தண்ணீரில் இறங்குகிறாய். மாணிக்கத்தை வேண்டி மண் புற்றைக் கிளறுகிறாய் என்று பெற்றோரும் பெரியோரும் அன்று கூறிய போதனைகள் இயல்பான உண்மை தானா?”

குலப்பற்று குமுதத்தின் உறவை ஒப்பாமல் கூறிய ஊர்ப் பேச்சு அந்த விகாரமான நிலையில் மின்வெட்டுப்போல் எண்ண வெளியைக் கீறி அமிழ்ந்தது. எனவே, அவளைப் பார்க்க வந்த அம்பலம் அங்கே கண்ட காட்சியிலும், அக்காட்சிக்கு சாட்சி

சொல்லிக் கருத்தைச் சிதைத்த நினைவிலும் மயங்கி உள்ளே நுழையாமல் தீர்மானிக்கக் கூடாத ஒன்றைத் தீர விசாரியாமல் முடிவு செய்து வெகு வேகமாகத் திரும்பினர். அவரது ஆவேச வெறிக்கு அடியில் துடிப்பு துணைக் குறியிட்டது.

வாயிலில் ஆள் அரவம் கேட்டுக் குமுதம் திரும்பிப் பார்த்து நடப்பதைக் கண்டு துணுக்குற்று விரைவாக வெளியே வந்தாள். அதற்குள் அம்பலம் வண்டிக்குள் ஏறிவிடவே, வண்டியும் பரபரப்பாகக் கிளம்பிவிட்டது—நின்றிருந்த இடத்தில் ஒரே புழுதிப் படலத்தை எழுப்பிக்கொண்டே!

அவளுக்குப் புரிந்துவிட்டது.

* * *

"அத்தான்!"

நினைவுப் பாதையிலே பறந்துகொண்டிருந்த அம்பலத்தின் மனப்புள் திரும்பிக் கூடடைந்தது.

"குமுதா!"

"அன்று நீங்கள்..."

"மறந்து விடம்மா"

"மறந்துதானே விடவேண்டும்; ஆகட்டும். இன்னும் கொஞ்சநேரம். பிறகு எனக்கு எல்லாமே மறந்துவிடும்!"

அவளது இதழோரத்தில் ஒரு வரட்டுச் சிரிப்புப் பிறந்து மறைந்தது.

"குமுதா..."

அம்பலம் அதைப் பொறுக்க சக்தி இல்லாமல் அரற்றினர்.

"அன்று... அவர் என் அண்ணு, அத்தான்"

"என்ன? எனக்கு ஒன்றும் புரியவில்லையே குமுதம்."

"ஆனல் அன்று எல்லாமே புரிந்து போய்விட்ட மாதிரி முடிவு பண்ணிவிட்டீர்கள், அப்படித்தானே. இருந்தாலும் புரியப்படுத்த வேண்டியதைத் தெரியப்படுத்தாமல் இந்தப் பாழும் மூச்சு நின்றுவிடமாட்டேன் என்று..."

"கு...மு...தம்!"

அம்பலவாணன் அதிர்ச்சியினல் செயலற்றுச் சமைந்து போய்விட்டார். வெறியினல் ஏற்பட்ட பலத்தில் குமுதம் குமையக் குமையப் பேசினள்.

"அம்மாவின் அபிமான புருஷனுன என் தந்தை ஏகாம்பரத்திற்குத் தன் உரிய மனைவி மூலம் பிறந்த பிள்ளை மணவாளன் தான் அவன். என்னுடன் பிறவாக் குறையை நிறைவு செய்து வரும் அவனை நீங்கள் அறியாத காரணத்தால் தவருக எண்ணிக் கொண்டு......பிறந்த குலமும் போதாத காலமும் எனக்குத் துரோகம் செய்துவிட்டது."

"நீ உடனே சொல்லி அனுப்பி இருக்கலாமே, குமுதம்"

"அதைச் செய்ய விரும்பாமல்தான் நான் என்னை இந்த நிலைக்குக் கொண்டுவந்துவிட்டேன். திரிந்து போன உறுதியின் விளைவாகப் பிரிந்துபோன உறவைச் சேர்க்க முயலுவது பைத்தியக்காரத்தனமல்லவா? சாதியால் மலைமடு நிலையில் இருந்த நாம் நீதியால் ஒன்றுபட்டோம் என நினைந்து மகிழ்ந்து வந்தேன். கொள்கையில் வாழ விரும்பி இயல்பை ஏற்க மறுத்தேன். இறுதியில்......"

"ஐயோ, குமுதா! இது என்ன சோதனை?"

"ஆத்ம சோதனை, அத்தான். உங்களைப் போன்றவர்களை என் போன்றவர்கள் இனம் கண்டுகொள்ள வாழ்வு எனக்கு ஏற்படுத்தித் தந்த ஆராய்ச்சி"

"இல்லை, இது நீ என் அறியாமைக்கு இட்ட தண்டனை, குமுதம்."

"தண்டனையா? ஆராயாமல் ஐயம் கொண்டது, ஆத்திரத்தில் அறிவை மறந்தது, காரியத்தை கருத்து மிஞ்சிவிட்டது. கண்மூடித்தனமாக நம்பியிருந்தவளை உதறிவிட்டுப் புதியவள் ஒருத்தியைப் புணர்ந்து கொண்டது யார் யாருக்களித்த தண்டனை?"

அம்பலம் தாங்கமுயாமல் தத்தளித்துப் போனர். குமுதம் பொங்கப் பொங்கப் புலம்பினுள். நீர் கக்கி நின்ற அவள் நயனங்கள் சற்று அயர்ந்து மூடி இளைப்பாறின. மூச்சு மேல் கீழாக ஊசலாடியது. பிறகு, சிறிது நேர்த்திற்குள்ளாகவே தன் களைப்பை அடக்கிக்கொண்டு உணர்ச்சிகள் துடிக்கப் பேசலானுள்.

"உருகி, உலர்ந்து, உடைந்து போகப் போகும் இந்த அந்திமப்போதில் உங்கள் ஒருவருக்கு மட்டுமே என் நெஞ்சறிய உரிமையாக இருந்தேன் என்ற நினைவுடன் போகிறேன். இதை நீங்களும் புரிந்து கொள்ளவேண்டுமென்றுதான் உங்களை என்னுயிர் பிரிந்து விடுமுன் பார்க்கவேண்டுமென்று......"

"போதும் குமுதம், போதும், போதும்!"

அம்பலத்தின் கேவல் அந்த அவல நிலையை அகழ்ந்து காட்டியது. அவரது கரங்கள் அவளைத் தீண்டத் துடித்து நீண்டு நெருங்கின—அந்த ஸ்பரிசத்தின் மூலம் தன் பிழைக்கே கழுவாய்த்தேட விரும்புவதுபோல.

ஆனால்.........

குமுதம் தன் சக்தியையெல்லாம் திரட்டிக்கொண்டு முள்ளை மிதித்ததுபோல் துள்ளி விலகினாள். அவளது கண்களிலே சிவந்து சிதறும் சினம், நாசிகளில் வெளிறி உதரும் வெறுப்பு, உதட்டிலே கருத்து வழிந்திடும் கடுமை.

மிதிபட்ட நாகம்போல் சீறித் தன் உள்ளத்தையே கக்கி விட்டாள் குமுதம்.

என்னைத் தொடாதீர்கள். என் தூய்மையில் உங்கள் மாசை அப்பிக் களங்கப்படுத்தி விடாதீர்கள். நெறி பிறழாது நின்ற ஒருவரின் பாதை திறம்பாத காதலியாக இருந்தேன் என்ற நிம்மதியில் போய்விடுகிறேன். இருவரைத் தொட்டவரை ஏற்க மாட்டேன்."

இது அவள் உள்ளம் மட்டும்தானா? "கற்பு நிலையென்று சொல்லவந்தார். இரு கட்சிக்கும் அஃது பொதுவில் வைப் போம்" என்று மனிதத்துவம் நிரம்பிய புதுமையின் குரல் அல்லவா.

குமுதம் என்ற அந்தச் சிறுபறவை தன் ஆண்மை நிறைந்த ஜோடியைப் பிரிந்த வேதனையில் துடித்து வீழ்ந்து விட்டது.

—o—

# 36

# கங்கை எரிகிறது

**கா**ந்தி சமாதியருகே ஒரு பைத்தியம் அழுகிறது: அழுக்கேறிய காவி உடை. சடை விழுந்த முடி, தாடி; தோளில் ஒரு ஜோல்ஞ பை.

தூரத்தில் நின்றபடியே பிரஸ் போட்டோகிராபர் ஒருவன் பல கோணங்களில் அவரைப் படம் பிடிக்கிறுன். கறுப்பு நாயொன்று சுற்றிச் சுற்றி ஓயாமல் குரைத்துக் கொண்டிருக்கிறது.

பின்னணியில் யமுனே. பக்கத்தில் செங்கோட்டை. எதிரில் ஜும்மா மசூதி !

ஆ! அற்புதமான காட்சி.

ஆணையர் வருகிருர். பைத்தியத்தையும் நாயையும் வெறிக்கிருர். கைகளேப் பிசைகிருர். புருவத்தை நெளிக்கிருர். குறிப்பறிந்த நாலு போலீஸ்காரர்கள் 'தாடி'யைத் தரதரவென்று இழுத்துப்போய் தூரத்தில் நிற்கும் 'வானி'ற்குள் ஏற்றுகின்றனர். கறுப்புநாயும் குரைத்துக் கொண்டே பின்னுல் ஓடுகிறது.

அடுத்த சில நிமிஷங்களில் சமாதியில் நூறுபேருக்கு மேல் கூடுகின்றனர். கப்பல் கப்பலாய் சாலேயை அடைத்துக் கொண்டு கண்ணேப்பறிக்கும் வண்ணங்களில் கார்கள் தூரத்தில் நிற்கின்றன. விதேசித் தூதுவர் ஒருவர், அவரைச் சேர்ந்த ஏழெட்டு பேர், இந்திய உயர் அதிகாரிகள், வில்லேயணிந்த அரசாங்கச் சேவகர்கள், பத்திரிகைக்காரர்கள், 'பாப்' வைத்துக் கொண்டு கறுப்புக்கண்ணுடி அணிந்த பெரிய இடத்துப் பெண்

கள் எல்லோரும் சமாதியைச் சுற்றி நிற்கின்றனர். விதேசித் தூதுவர் ஒரு பெரிய மலர் வளையத்தை, இரு மெய்காப்பாளர்களின் உதவியோடு, சமாதியில் வைத்துவிட்டு நிமிரும்போது இருபது காமிராக்கள் 'க்ளிக்' அடிக்கின்றன.

காலை வெய்யிலில், அங்கு நின்றவர்களின் டெரிலின் உடைகள் தகதகக்கின்றன. வில்லைச் சேவுகர்களைத் தவிர அங்கிருந்த மற்றவர்கள் உடலில் மருந்துக்குக் கூடப் பருத்தி நூலிழை கிடையாது.

தூதுவர், மற்றவர்கள் புடைசூழ, ராஜரீகப் புன்னகைகளை உதிர்த்துக் கொண்டே திரும்பிவிட்டார். சத்தமோ, புகையோ ஏதுமின்றி எல்லாக் கார்களும் மாயமாய் மறைந்துவிட்டன.

போலீஸ் வானில் ஏற்றியிருந்த அந்தத் 'தாடி'யை கீழே இறக்கிவிட்டார்கள். அது மீண்டும் சமாதியருகே வந்து ஓவென்று அழவாரம்பித்தது. கறுப்புநாயும் விடாமல் சுற்றிச் சுற்றிக் குரைத்தது.

* * *

நாற்பத்து இரண்டாம் வருஷத்திலேயே—ஒருநாள் திண்ணையில் 'தேமேன்னு' உட்கார்ந்திருந்தவரைப் பிடரியில் கை கொடுத்து தடதடவென்று வெளியே தள்ளிக் கொண்டு போய், "நீ காந்தி பக்தன்தானேடா?" என்று கேட்டு, ஒரு காரணமுமில்லாமல் மண்டையில் மடேர் மடேரென்று குண்டாந்தடியால் போலீஸ்காரர்கள் அடித்து நொறுக்கியபோதே—அவருக்குப் பைத்தியம் பிடித்திருக்க வேண்டும். ஆனால், ஒரு வெள்ளி விழாக்காலம் தள்ளி, அறுபத்தெட்டில் தில்லியின் பொசுக்கும் கோடையில், காந்தி சமாதியினருகில் வந்து பித்துப் பிடித்தாற் போல் அவர் அழுவார் என்று யாருக்குத் தெரியும்?

* * *

கும்பகோணத்திற்குத் தெற்கே எட்டாவது மைலில் இருந்த ஒரு கிராமத்தில் கோவிந்த தீட்சிதருக்கு விட்ட சீட்டு சென்று கொண்டிருந்த காலம்! முப்பாட்டனார் செய்த 'வாஜபேய' யாகத்தினால், 'ஓசி'யில் கிடைத்த தீட்சிதர் என்ற விருது, சந்தியாவந்தனம் கூட ஒழுங்காகச் செய்யாத கோவிந்தனின் பெயரோடு ஒட்டிக் கொண்டது. விருதோடு வந்த பிதுரார்ஜிதத்தில், ஐந்து வேலி நிலம், நாலு ஓட்டு வீடு, இரு வில் வண்டி, ஒரு ரேக்ளா யாவுமிருந்தன. எடுபிடிகள், 'ஆமாஞ்சாமி' விற்பன்னர்கள், மூணுசீட்டு ஜமா, ஆகியவர்களின் உறவு போதாமல்,

கும்பகோணத்துக் கனகாங்கியின் அந்தரங்க உறவையும், சேர்த்துக் கொண்டான் கோவிந்தன். வாரத்தில் மூன்று நாட்கள் ரங்காட்டம். இரவையும் பகலையும் பிரித்துக்காட்ட, பரிசாரகன் வெள்ளிக் கூஜாவில் கொதிக்கக் கொதிக்கக் கொண்டு வந்து வினியோகிக்கும் காப்பிதான் சாட்சி. கீழண்டை வீட்டுத்திண்ணையில் மும்முரமான நிசப்தம் நிலவும். பேச்சே இருக்காது. தபஸ் செய்வது போல் எல்லோர் முகத்திலும் ஒரு உக்ரம். 'கலவை'யின் போது புகையிலையைத் துப்பத்தான் நேரமிருக்கும். துப்பாமல் விழுங்கும் வான்கோழிகளும் சில இருந்தன. கால்கடுக்க நின்று, கைகள் இற்று விழுவதுபோல் ஒருவன் 'பங்கா' இழுத்துக் கொண்டிருப்பான்.

வாரத்தில் மற்ற நாட்களில் தீட்சிதர் கும்பகோணத்திலிருப்பார். "இப்படி ராக்கண் முழிச்சா ஐயா உடம்பு என்னத்துக்கு ஆகும்?" என்று கனகாங்கி கரிசனம் பொங்கக் கூறுகையில், தீட்சிதருக்கு உடல் அசதியெல்லாம் இருக்குமிடம் தெரியாமல் பறந்துவிடும். "கனகு, உடம்பு, உடம்புன்னு புலம்பிகிட்டிருந்தா, போகும்போது உடம்பைக் கூடவாத் தூக்கிட்டுப் போப்பபோம்? ஏதோ, இருக்கிறவரையில் அனுபவிக்க வேண்டியது. அது கெடக்குது. உன் கையாலே இரண்டு வேளை கண்டந்திப்பிலி ரஸம் வச்சுப்போடு. உடம்பு கலகலன்னு ஆயிடும்!"

தீட்சிதருக்கு உடம்பில் நல்ல தெம்பு இருந்தது. கையில் பசையிருந்தது. வாழ்க்கையின் உயர்ந்த ரஸனைகளைப் பற்றித் தெரிந்துகொள்ள அவர் விழையவில்லை.

கனகாங்கிக்கு அவள் தொழிலுக்குத் தேவையான அத்தனை லக்ஷணங்களுமிருந்தன. எந்தெந்த வேளையில் எதைச் செய்ய வேண்டுமென்ற அபூர்வமான தேர்ச்சி. "இந்த ஊர்லே இருக்கற அத்தனைப் பெண்களும், கல்யாணமாகறத்துக்கு முன்னே உங்கிட்டப் பத்து நாள் ட்ரெய்னிங் எடுத்துக்கிட்டுப் போவணும் கனகு" என்பார் தீட்சிதர்.

அப்பேற்பட்ட தீட்சிதரின் வாழ்வில் ஒருநாள் திடீரென்று ஓர் அதிசயம் நிகழ்ந்தது. இரவோடு இரவாகத் தீட்சிதர் புனர் ஜன்மம் எடுத்துவிட்டார். நவீன நாகரிகத்தின் நிழலைக்கூட மிதிக்காமல் இருந்ததாலும், படிப்பு வாஸனை அறவே இல்லாமல் இருந்ததாலும், குயுக்தியினால் அயோக்யத்தனத்தைக் கூடக் கலாச்சாரமாக்கிவிடும் நகர வாழ்க்கையிலிருந்து விலகி வாழ்ந்ததாலும், அவருக்கே இயல்பான கிராமிய வெகுளித்தனம் தீட்சிதரைப் பூரணமாக ஆட்கொண்டது.

ரங்காட்டம், கனகாங்கியின் உறவு யாவற்றையும் தீட்சிதர் ஒருங்கே துறந்தார். சொத்து முழுவதையும் கனகாங்கிக்கு எழுதி வைத்துவிட்டு, கதர் வேஷ்டியும் துண்டுமாகச் சேரியின் நடுவில் ஒரு குடிசையைப் போட்டுக் கொண்டார். தோட்டிக ளோடு இவரும் தெருக் கூட்டினுர். குஷ்டரோகிகளுடன் உழன்ருர். கையில் கொடியேந்தி கள்ளுக் கடையில் போய் மறியல் செய்தார். ஹரிஜனங்களுக்கெல்லாம் திருநீறு அணி வித்து தானும் தனக்குரிய ஜபதபங்களில் மூழ்கினுர். வெற்றிலை யைத் துறந்தார். சுயம்பாகம் ஆரம்பித்தார்.

அவரது குடிசைச் சுவரில், மகாத்மாவின் படத்திற்கடியில் சில வரிகள் வருவோரின் கவனத்தை ஈர்த்தன:

"எனது தகப்பனுர் எமனுடன் போராடும் வேளையில் நான் அடுத்த அறையில் என் மனைவியுடன் பருவ மழையில் திளைத்துக் கொண்டிருந்துவிட்டு, அவர் உயிரிழக்கும் தரு வாயில் பக்கத்தில் இல்லாதிருந்த வெட்கக்கேட்டை ஊரறியச் சொல்லி அழுதால்தான் நான் செய்த பாவம் தொலையும். உடலுறவு மோகத்தினுல் ஆத்மாவைத் துருப்பிடிக்க வைத்துவிடும் எல்லோருக்குமே இது பாடமாக இருக் கட்டும்."

கோவிந்த தீட்சிதரை மீண்டும் பிராமணனுக்கிய வாசகம். கனகாங்கியின் வீட்டிலிருந்து திரும்பும் போது ஒருநாள், வழியில் வண்டியை நிறுத்தச் சொல்லி, பட்டாணிக் கடலை வாங்கச் சொன்னுர். கடலையைத் தின்றுவிட்டு, காகிதத்தைக் கசக்கி எறியாமல் படிக்க வேண்டுமென்று அவருக்குத் தோன்றியது, முப்பாட்டனுர் செய்த வாஜபேய யாகத்தின் பலனே, அல்லது இவரே பூர்வஜன்மத்தின் விட்டகுறை தொட்ட குறையாக இத்தனை நாள் போக வாழ்வு வாழ்ந்துவிட்டு அவ்வினையிலிருந்து விடுபட வேண்டிய காலம் வந்துவிட்டதோ, தெரியாது; வண்டி யைத் தெரு விளக்கொளியில் நிறுத்தச் செய்தார். காகிதத்தி லிருந்த வரிகளை ஒருமுறை படித்தார்; இருமுறை படித்தார். படித்துக் கொண்டேயிருந்தார். கண்களில் தாரை தாரையாக நீர் வழிந்தது. "மகாத்மா, மகாத்மா" என்று வாய் புலம் பிற்று.

அவ்வளவுதான். கணீரென்ற குரலில் தீட்சிதர்—

"டேய்! வண்டியை ஆத்துப்பக்கமாக் கொண்டு போடா!" என்ருர்.

வண்டி காவிரியை அடைந்தது. தீக்ஷிதர் இறங்கி, நீரில் கிழக்கே பார்த்து நின்று கொண்டு அவசர அவசரமாக மூன்று

முழுக்குகள் போட்டார். பிறகு விருட்டென்று, ஈரத்துணி யுடனேயே வண்டியில் ஏறிக் கொண்டு, ''என்னைப் புடிச்ச சனியன் இன்னியோட விட்டுதுடா, விடு வண்டியை!'' என்ருர்.

பிரக்ருதியின் இடையரு இயக்கத்தின் வேகத்தில் பிசிரில் லாமல் ரீங்காரம் செய்யும் லோகச்ருதியோடு, தனிமனிதனின் அடிமனத்தில் சிந்துவாரின்றிச் சுருண்டு கிடக்கும் ஆத்ம ஒலி, ஏதோ ஒரு தருணத்தின் தவப்பயனுல் மீட்டப்பட்டு இழையும் போது, வாழ்க்கையின் சுருதி சுத்தமாகிவிடுகிறது. இசையற்ற, சுருதியற்ற, ஆத்ம ரஸனையற்றக் கடந்தகாலக் கட்டாந்தரை வாழ்க்கை கெட்ட சொப்பனம் போல் அர்த்தமற்றதாகி, கண் களைக் கசக்கிக் கொண்டு வாழ்க்கையில் முதல் முதலாகச் சூரியோதயத்தைப் பார்ப்பது போன்ற ஓர் இனிமையான அனுபவம் ஏற்படுகிறது.

எட்டு வயதில், பூணூல் போட்ட காலத்தில், வெள்ளித் தாம்பாளங்களில் 'பிக்ஷை' அரிசியுடன் பெண்கள் சூழ, கோவணாண்டியாக மணையில் நின்று கொண்டு, பட்டு அங்க வஸ்திரப் போர்வையின் மறைவில், தகப்பனுர் காதில் ஓதிய பிரம்மோபதேசத்தின்போது, பிராமணனுகாத கோவிந்தன், முப்பது ஆண்டுகள் கழித்து, நடுத்தெருவில், மறைவற்ற தெரு விளக்கின் மங்கலில், பட்டாணிக் காகிதத்தில் தெரிந்த சில வரிகளினுல், பிரம்மணீயத்தை—பிரம்மச்சரியத்தை—ஒரே தாவில் பிடித்துவிட்டார்.

தீட்சிதரின் செய்கைகள் யாவரையும் பிரமிக்க வைத்தன. சிலரைக் கிண்டல் செய்யவும் வைத்தன. ''மறை லூஸ்'' என்று 'நக்கல்' செய்தனர். அவர்களது கேலி வார்த்தைகள் தீட்சிதர் செவிகளுக்கும் எட்டின. ''உள்ளுணர்வின் புலம்பலினுல் பத்ரம் கழன்று லூஸ் ஆகும் போதுதாண்டா, மனுஷனின் போலிச் செதிள்களெல்லாம் உதிர்ந்து போகின்றன. தளைகளை அறுத்துக் கொண்டு உள் பிரக்ஞை வீறுகொண்டு எழும் போது, உலகமே அதற்குள் அடக்கம். தனித்துநின்று அவ்வெழுச்சியைப் பைத் தியக்காரத் தனம் என்று சொல்ல யாருக்குடா யோக்யதை இருக்கு?'' என்று தீட்சிதர் பொதுப் படையாகச் சொல்வார்.

தீட்சிதரின் பாஷையின் உட்கருவைச் சேரிமக்கள் அறிந்தார் களில்லை. ஆனுல் அந்த அறியாமையே, அவர்கள் தீட்சிதர் பால் கொண்டிருந்த பக்திக்கு, ஆனபலமாக நின்றது.

மஹாத்மாவை தீட்சிதர் நேரில் பார்க்கவில்லை. விழையவும் இல்லை. அந்தப் போர்பந்தர் யோகியைத் தரிசனம் செய்ய லக்ஷக்கணக்கில் ஜனங்கள் கும்பகோணம் ரயிலடியில் நெரியும்

போது, இவர் காவிரிப் படித்துறையில் உட்கார்ந்து கொண்டு ஜபத்தில் மூழ்கியிருந்தார். பிறகு, ''என்ன இப்படிப் பண்ணிட்டீங்களே?'' என்று இவரைத் துக்கம் விசாரிப்பது போல் யாரோ கேட்ட போது, தீட்சிதர் சொன்னார்: ''ஐயா, அவர் என் தெய்வம். தெய்வத்தை நேரில் பார்த்துட்டா ஒரு மாத்துக் கொறச்சல்தான். கண்ணுலேபடாம ரகஸியமா இருக்கிறவரையில் தான் தெய்வம். நான் அவரைத் தெய்வமாகவே பூஜிக்க விரும்புகிறேன்!''

1948 ஜனவரி முப்பது, வெள்ளிக்கிழமை. தீட்சிதரின் தெய்வம், மனித உடலை நீத்து, எல்லோருக்குமே கண்ணுக்குத் தெரியாத தெய்வமாகி விட்டது. வானொலியில் ஷெனாயின் அழுகையும், பாபுஜி, பாபுஜி என்ற கதறல்களும், அதைக்கேட்டு மயக்கம் போட்டு விழுந்தவர்களும், வீதியில் புரண்டு அழுதவர்களுமாக, நாடே சோக அவலத்தில் மூழ்கியிருந்த போது, தீட்சிதர் ''ராமா, ராமா'' என்று கதறிக் கொண்டிருந்தார்.

''சாமி! குழந்தேங்க கூட சாப்பிடாம அழுவுதுங்க சாமி! இந்தக் கண்ராவியை வந்து பாருங்களேன்!'' என்று யாரோ வந்து தீட்சிதரிடம் முறையிட்டபோது, ''குழந்தைகள் கூட அழறதா? எல்லோரும் அழறாங்களா? அழட்டும்டா. நன்னா அழட்டும்டா......''

''சாமி! தாங்க முடியலீங்களே!''

தீட்சிதர் பளிச்சென்று அழுகையை நிறுத்தினார். பிறகு ஏதோ ஆவேசம் வந்தவர்போல்,

''மனுஷன் ரேடியோவை, டெலிபோனை, டெலிவிஷனை எல்லாத்தையும் கண்டுபிடிச்சிட்டு, தொலைவை வென்று உலகத்தையே சுருக்கிட்டதாக மார் தட்டறான். ஆனால், இவன் கண்டு பிடிக்காத ஒன்று, இவனுக்குள்ளேயே இருந்துண்டு, தொலைவையும் சுருக்கி, மனசையும் விசாலமாக்கக் கூடிய தெய்வ மருந்தா அமைஞ்சு போயிடுத்து. அது என்ன? தெரியுமாடா?''

வந்தவன் இவர் பேச்சையே லட்சியம் செய்யாமல் அழுது கொண்டிருந்தான். தீட்சிதரும் அவன் அழுகையை லட்சியம் செய்யாமல் பேசிக்கொண்டே போனார்.

''நீயும் நானும் இப்ப அழறோமே, அதுதாண்டா அந்த மருந்து. அழுகைதாண்டா ஞானம். கோடிக்கணக்கான உள்ளங்களை ஒரு நிமிஷமேனும் அழுது உருக வைத்து விடறவன் மகாத்மா. நான் அவரைப் பார்த்ததுகூட இல்லை. நான் ஏண்டா அழறேன்? நீ ஏண்டா அழறே; இந்த வேளை தெய்வ வேளை. உலகத்துலே ஒவ்வொரு நிமிஷமும் எல்லோரும் உருகி

அழுதுண்டேயிருந்தா மனசறிஞ்சு ஒரு பாவத்தைச் செய்யத் தோணுமாடா?''

இதைச் சொல்லிவிட்டு தீட்சிதரும் ஓவென்று அழுதார்.

அடுத்த நாளிலிருந்து தீட்சிதர் அந்தக் கிராமத்தில் இல்லை. வடக்கே தபஸ் செய்யப் போய்விட்டதாக எல்லோரும் பேசிக் கொண்டனர்.

* * *

இருபது வருடங்கள் கழித்து, ஹிமாலயத்தின் ஏதோ ஒரு பகுதியிலிருந்து தீட்சிதர் வெளியே வந்தபோது, கங்கை எரிந்து கொண்டிருந்தது.

மண்ணெண்ணெய் கங்கை நீருடன் கலந்து விட்டதால் எரிகிறது என்று எல்லோரும் வாளாவிருந்தனர். யாரும் பதறி அழவில்லை. 'தெய்வகுத்தமாக இருக்குமோ?'' என்று பயப் படும் பத்தாம்பசலி அஞ்ஞானத்தில் யாரும் உழலவில்லை. கல் பாந்த காலமாக இக்கர்ம பூமியின் பாவத்தையெல்லாம் அலுக் காமல் சுமந்து கொண்டு, ஞானிகளையும், தெய்வக் கவிஞர்களை யும், உபநிஷதங்களையும் வேதங்களையும், இராமரையும், மஹாத் மாக்களையும் ரிஷிகளையும், தனித்வம் மிக்க ஒரு கலாச்சாரத்தை யும் இந்நாட்டுக்கு ஈந்த அந்த ஹிமவான் புத்ரிக்கு நேர்ந்த தீவிபத்தை மிகச் சாதாரண விஷயமாக்கி, அதற்காக ஒரு சொட்டுக் கண்ணீர் கூட வடிக்காத இந் நாட்டுமக்களின் ஆன்மீக வரட்சியை நினைத்து, தீட்சிதருக்குப் பகீரென்றது.

நாட்டு மக்கள் ஏதோ அபச்சாரம் செய்து விட்டதால் தான் இப்படி ஒரு விபத்து நேர்ந்து விட்டது என்று அவரது பழமையான கிராமிய அறிவு குத்திக்காட்ட, அடிவயிற்றின் குமைச்சலின் உந்தலில் என்னதான் நேர்ந்து விட்டது என்ற வேட்கை மிக, பதறும் நெஞ்சத்துடன் அவர் ஊர் ஊராகச் சுற்றிய போது—

நகரங்களிலும், கிராமங்களிலும், பட்டி தொட்டிகளிலும் இருவிதமான நச்சரவுகள் ஊர்ந்து நெளிவதைக் கண்டார்: அதிகார மோஹமும், சினிமா மோகமும் மக்கள் ரஸனையை சிந்தனைத் தெளிவை, தியாகத்தை, நேர்மையை, கற்பை, நாண யத்தை, யோக்யப் பொறுப்பை எல்லாவற்றையும் எவ்வளவு தூரம் அரித்திருக்கிறது என்பதைப் பார்த்தார். ''வந்தே மாதரம்!''—தாயை வணங்குகிறேன்—என்ற, இதயத் தரத்தை யும் அடக்கத்தையும் உணர்த்தும் அஞ்சலி கோஷம் போய்,

''வாழ்க்கைத் தரம்'' என்ற உடலைச் சார்ந்த வரட்டுக் கோஷம் வளர்ந்திருப்பதைப் பார்த்தார்.

ஜாதிப் பூசல்களிருந்த இடத்தில் காட்சிப் பூசல்களைப் பார்த்தார். அரசியல் பதவிகளுக்காக அடுத்துக் கெடுக்கும் கயமையைப் பார்த்தார். புனிதக் கொள்கைகள், இலட்சியங்களிலிருந்த பிடிப்பு விட்டுப் போய், 'எரிகிற வீட்டில் பிடுங்கிய வரையில் ஆதாயம்' என்ற வெறித்தனம் எல்லாத் துறைகளிலும் வியாபித்திருப்பதைக் கண்டார். ரகஸியமாகவும், பகிரங்கமாகவும் உடலுணர்ச்சிகளின் தேவையைப் பெரிது படுத்தி, அத்தேவைக் கேற்ப, கற்பின் இலக்கணத்தையே 'இழுத்த இழுப்புக்கு' வரும் படியாக மாற்றியமைத்து, குடும்பம் என்ற சமூக ஆணிவேரையே அறுக்கும் ஒரு புதிய நாகரிகத்தைப் பார்த்தார். மக்களின் நடை, உடை, பாவனைகளின் பால் உணர்ச்சியைப் பொங்க வைக்குமாறு கையாளும் சாமர்த்தியமான புதிய யுக்திகளைப் பார்த்தார். பஸ்ஸில் ஏறுவதிலிருந்து, அமைச்சரவையில் ஸ்தானம், பிடிப்பது வரையில் நடக்கும் ஒரே மாதிரியான 'குடுமிபிடிச் சண்டை'யைப் பார்த்தார். சத்தியம் செல்லாக் காசாகி விட்டதைப் பார்த்தார். ஆன்மீகம் அர்த்தமற்றதாகி விட்டதைப் பார்த்தார். ஆமையுள்ளங்களைப் பார்த்தார். சிறுமையைக் கண்டு துடிக்காத தோள்களைக் கண்டார். மக்களின் சிந்தனை, உடை, நடவடிக்கைகள் எதிலுமே இந்த மண்ணின் முத்திரை இல்லாமலிருப்பதைப் பார்த்தார். உருகி அழக்கூடிய ஞானத்தைக் கூட மனிதர்கள் இழந்து விட்டதாகத் தோன்றியது, தீட்சிதருக்கு.

கடைசியாக தில்லிக்கு வந்து சேர்ந்தார். காந்தி சமாதியின் அருகில் போய் ஓவென்று தேம்பித் தேம்பி அழுதார்.

''பாபுஜி! கங்கை எரிகிறது. இம்மண்ணின் அன்னை எரிகிறாள். சத்தியம் எரிகிறது. தெரியவில்லையா உங்களுக்கு? வாருங்கள், இன்னொரு முறை வாருங்கள். இன்னும் ஆயிரம் முறை வாருங்கள்......மீண்டும் மீண்டும் இம்மண்ணில் பிறந்து எங்களை மனிதர்களாக்குங்கள்.........அண்ணலே! சமுத்திரத்தில் பெருங்காயத்தைக் கரைத்ததுபோல், இந்நாட்டிற்கு ஒரு காந்தி எப்படிப் போதும்? வாருங்கள்...மீண்டும் மீண்டும் வாருங்கள்.........''

தீட்சிதர் அழுது கொண்டேயிருந்தார். கறுப்பு நாய் ஓயாமல் குரைத்துக் கொண்டேயிருந்தது.

பின்னணியில் யமுனை, பக்கத்தில் செங்கோட்டை, எதிரில் ஜும்மா மசூதி!

ஆ! அற்புதமான காட்சி!

—o—

வல்லிக் கண்ணன்

37

# சத்திய சோதனை

'உன் கோத்திரம் என்ன என்று உன் தாயிடம் கேட்டுவா' என்று குரு அனுப்பி வைத்ததும், 'மகனே, உன் குலம் கோத்திரம் எதையும் நான் அறியேன். இளமையில் நான் பல இடங்களிலும் வேலை செய்து பிழைத்தபோது, உன்னைக் கருவுற்றேன். நீ பிறந்ததும், உனக்கு சத்யகாமன் என்று பெயரிட்டேன். நீ ஜாபாலை மகன். இதையே உன் குருவிடம் சொல்லு' என்று ஜாபாலை தன் மகனுக்கு அறிவித்தாள். அப்படியே அவன் முனிவரிடம் சொன்னான்: 'சரி. இனி நீ ஜாபாலை சத்யாகமன் என அழைக்கப்படுவாய்' என்று குரு தெரிவித்தார். வாழ்க்கை இருளில் ஆன்ம ஒளியோடு உண்மையைத் தேடித் தவமிருந்த முனிவர்கள் சத்தியத்தை கௌரவிக்கத் தவறியதேயில்லை.

சதானந்தத்துக்கு மன உளைச்சல் ஏற்பட்டிருந்தது. அவருடைய வாழ்க்கையில் மற்றும் ஒரு சோதனை!

சாதாரண மனிதனின் வாழ்விலும் எத்தனையோ சோதனைகள் குறுக்கிடத்தான் செய்கின்றன. சிரமங்களைச் சகித்துக் கொண்டு அவற்றில் வெற்றி பெறுவதோ, அல்லது அவற்றினால் அமுக்கி அழுத்தப்படுவதோ அவரவர் மனத்திண்மையைப் பொறுத்தது.

சதானந்தத்துக்கு மன உறுதி மிகுதியாக இருந்தது. வாழ்க்கை உலைக்களத்தில், அனுபவத் தீயில் காய்ந்து, சிந்தனை-பயிற்சி முதலிய சம்மட்டிகளினால் அடித்துத் தன்னையே ஒருவாறு பதப்படுத்திக் கொண்டவர் அவர்.

அவ்வாறு அவர் தேர்ந்து தெளிவடைவதற்கு அவருடைய தாய் லட்சுமி அம்மாளும் முக்கிய காரணம்தான். அவளே அவருக்கு நல்லாசானுகவும், சிறந்த வழிகாட்டியாகவும், பக்க பலமாகவும் இருந்து வந்தாள். தன் மகன் நல்லவனுக வாழ வேண்டும், சான்ருேனுகத் திகழவேண்டும், என்று அவள் ஆசைப் பட்டாள். பிள்ளைப்பிராயத்தில் சதானந்தம் பிழைகள் புரிந்த போது, பொய்கள் சொல்லத் துணிந்தபோது, அவள் அன்பினு லும் கண்டிப்புகளினுலும் திருத்தி, நல்வழிப்படுத்தத் தவறியதே யில்லை.

பொய் சொல்லக் கூடாது, எப்பொழுதும் சத்தியத்தையே கடைப்பிடிக்க வேண்டும் என்று அவள் தன் மகனுக்கு வற் புறுத்தி வந்தாள். நீதிக் கதைகளையும், பெரியோரின் வரலாறு களையும் அவள் அவனுக்கு எடுத்துச் சொல்லி, உண்மையின் உயர்வை இளம் உள்ளத்தில் நன்கு பதியவைத்தாள். அவதார புருஷர்களும் அருள் ஞானிகளும் தான் உயர்ந்த கொள்கைகளைக் கையாள முடியும் என்று எண்ண வேண்டியதில்லை; மக்கள் மத்தி யில், அவர்களோடு கலந்து, அவர்களில் ஒருவராக வாழும் மனிதனும் சத்தியம், அன்பு, அகிம்சை முதலிய சிறந்த பண்பு களை நன்கு அனுஷ்டிக்க முடியும் என்று கூறி, அவள் காந்திஜீயை அடிக்கடி உதாரணமாகக் காட்டி வந்தாள்.

இதனுல் எல்லாம் சதானந்தத்தின் உள்ளம் நன்கு பண்பட்டு வந்தது. என்ருலும், அவ்வப்போது சிறு சிறு சபலங்கள் அவரை வழி விலகத் தூண்டுவதும் உண்டு. மனிதன் பலவீனங்கள் உடையவன் தானே?

பிறகு அவருடைய மனமே அவரைக் குறை கூறி, அமைதி யற்றுத் தவிக்கச்செய்யும். அவர் தன் பிழைக்காக உளமாற வருந்தி, உண்மையை அறிவித்துப் பரிகாரம் தேடிகொண்ட பின்னரே, இயல்பான அமைதியையும் மனமகிழ்ச்சியையும் அடை வார்.

பள்ளிப் பருவத்தில் சதானந்தம் செய்த குற்றம் ஒன்று என்றும் அவர் நினைவில் அழுத்தமாகப் பதிந்து கிடந்தது. அந் நாளையிலேயே, தாயின் உபதேசப்படி அவர் உண்மையை ஒப்புக் கொண்டு ஆவன செய்துவிட்ட போதிலும், அச் செயல் உறுத் தும் ஓர் அனுபவமாய் அவர் உள்ளத்தில் நிலைபெற்று நின்றது.

அப்போது சதானந்தத்துக்குப் பதிமூன்று வயது. அவன் படிப்பில் ஆர்வமும் ஆற்றலும் உடைய மாணவனுகத்தான் இருந்தான். ஆயினும், ஒரு பரீட்சையில் ஒரு பாடத்தில் கடுமை யான கேள்விகள் வரும் என்று அவனுக்குத் தெரிந்த போது, அவன் நேரிய வழியில் செல்லாமல், சுருக்கு வழியில் மிகுதியான

மதிப்பெண்கள் பெற ஆசை கொண்டான். விடைகளை சாமர்த்தியமாக எழுதி எடுத்துச் சென்று, திறமையாகப் பார்த்தெழுதி, திருப்தி அடைந்தான். முடிவில், நல்ல மார்க்குகளும் பெற்று விட்டான்.

மிகப்பலர் குறைவான மதிப்பெண்கள் பெற்றிருந்தபோது, அவன் மிகுதியான மார்க்குகள் பெற்றுச் சிறப்பாக விளங்குவதைக் கண்டு பலர் அவனைப் பாராட்டினார்கள். இயல்பாகவே அவன் திறமைசாலி என்பதையும், படிப்பில் அவன் காட்டும் ஊக்கத்தையும் உழைப்பையும் எல்லோரும் நன்கு அறிந்திருந்ததனால், யாரும் அவனை சந்தேகிக்கவில்லை.

பிறகு ஒரு நண்பனிடம் அவன் இதை விளையாட்டாகவும் பெருமையாகவும் சொல்லிக் கொண்டிருந்தது அவன் தாய் காதில் விழுந்தது. அவள் அவன் செய்தது குற்றம், அதை எண்ணிப் பெருமை கொள்வது தவறு என்று சுட்டிக் காட்டினாள். சத்தியத்தைப் பெரிதென மதித்த அவள் தன் மகனுக்கு இட்ட கட்டளை அவனுக்குக் கசப்பாகத் தான் இருந்தது. ஆனாலும் அவன் அதைச் செய்தே தீரவேண்டும்.

சதானந்தம் தயங்கித் தயங்கித் தன் ஆசிரியரை அணுகினான். தான் செய்த குற்றத்தையும், தாயின் கண்டிப்பையும், அவரிடம் ஒப்புக்கொண்டான். 'நல்ல பையனான நீ இப்படி ஏமாற்றலாமா? உன் தவறுக்காக நீயே வருந்துவது சரி. இதைத் தலைமை ஆசிரியரிடம் தெரிவிக்கவேண்டியது என் கடமை' என்று கூறி, அவர் அவனையும் அழைத்துக்கொண்டு போனார்.

தலைமை ஆசிரியரின் கண்டிப்பும் கடுமையான குணமும் பள்ளிக்கூடம் முழுவதும் பிரசித்தி பெற்றிருந்த விஷயம். அவர் முன் செல்கையிலேயே சதானந்தத்துக்கு உள்ளப் பதைபதைப்பும் உடல் நடுக்கமும் உண்டாயின. எனினும், ஒருவாறு உண்மையை ஒப்புக்கொண்டு, தன் தாயின் கருத்தையும் தெரிவித்தான். 'என்னை மன்னியுங்கள். இனிமேல் நான் ஒருபோதும் இப்படிக் குற்றம் செய்யமாட்டேன்' என்றும் சொன்னான்.

தலைமை ஆசிரியர் 'ஊம்' என்று உறுமினார். மௌனமாக அவனை நோக்கினார். அவர் என்ன தண்டனை தருவாரோ என்று அஞ்சி நின்றான் அவன்.

'நீ செய்தது பெரிய தவறு. அதற்காக உன்னை பெயிலாக்க வேண்டும். இருந்தாலும், நீ உன் குற்றத்தை உணர்ந்து, உண்மையாகவே வருத்தப்படுகிறாய். உன் அம்மா நல்லவள், உன் தவறை எடுத்துக்காட்டி உன்னை நல்வழிப்படுத்தத் தயங்காதவள் என்று தெரிகிறது. அந்த அம்மாளுக்காகவும், நீ உன் தவறை

எண்ணி வருந்துவதனுலும், இந்தத் தடவை உன்னை மன்னித்து விடுகிறேன். இனி இதுபோல் நடக்காதே!' என்று கண்டிப்புக் குரலில் பேசினுர் அவர்.

அன்றிலிருந்து சத்தியத்தின் மீது அவன் மிகுந்த பற்றுதல் கொண்டான்.

அதற்கு இப்போது ஒரு சோதனை வந்திருந்தது.

## 2

அன்பு, அகிம்சை, அறம் ஆகியவை மனிதருக்கு மாண்பு அளிக்கும். வாழ்க்கை இருளில் ஒளிதேடித் திரிந்து, மக்கள் அனைவருக்கும் வழிகாட்ட முன்வந்த உத்தமர்கள் — புத்தர், ஏசு, வள்ளுவர் போன்ற — அனைவரும் சத்தியத்தைச் சிறப்பித்துச் சொன்னுர்கள்.

மனிதருள் உயர்ந்தோர் வகுத்துக் காட்டிய வழியில், கொள்கையில் உறுதியான பிடிப்புடன் வாழ்க்கை நடத்தத் துணிகிற சாதாரண மனிதரின் அன்ருட வாழ்வில் சிரமங்களும் தொல்லைகளும் ஏற்படத்தான் செய்கின்றன. இதைச் சதானந்தம் நன்கு புரிந்துகொண்டார்.

ஆரம்ப நாட்களில், அவர் மனசில் இருந்திருக்கக்கூடிய சஞ்சலங்களும் சலனங்களும் அகன்று தெளிவு பிறப்பதற்கு அவருடைய தாய் பெரிதும் உதவினுள்.

லட்சுமி அம்மாள் தன் வாழ்நாட்களில் வறண்ட கோடை வெயிலையே மிகுதியாக அனுபவித்திருந்தாள். எனினும் அவளுக்கு இயல்பாக ஏற்பட்டிருந்த தெய்வ பக்தியும், உயர் பண்புகளிடமுள்ள பற்றுதலும் அவளுக்கு மனநிறைவையும் அமைதியையும் அளித்து வந்தன. உத்தமர்களின் வரலாறுகளையும், காந்திஜீயின் சிந்தனைகளையும் அவள் தன் மகனுக்குச் சிறு பிராயம் முதலே கற்பித்து வந்தாள். அவனுடைய தந்தையின் விருப்பு வெறுப்புகள் அவனிடம் படிந்துவிடலாகாது என அவள் கண்ணும் கருத்துமாகக் கவனித்தாள்.

சதானந்தத்தின் தந்தை மகாலிங்கம் நல்ல நிலையில் வாழ்ந்தவர் தான். ஏதோ ஒரு உத்தியோகமும் பார்த்து வந்தார். முரட்டுத்தனமும், அகங்காரமும், வாழ்க்கை இன்பங்களில் மிதமிஞ்சிய நாட்டமும் கொண்டிருந்த அவர் கிடைத்த பணத்தை எல்லாம் கரியாக்கி வந்தார். சூதாட்டம், மதுக்குடி, மங்கையர் இன்பம் என்று அலைந்து திரிந்த அவர் சில சமயம், கண்டவர்

அனைவரும் வெறுக்கத் தகுந்த விதத்தில், அருவருப்பாக நடந்து கொள்வது உண்டு.

சதானந்தத்துக்கு அத்தகைய நிகழ்ச்சிகள் எத்தனையோ தெரியும். அவற்றிலே ஒன்று, இப்போது நினைத்தால் கூட குமட்டல் வருகிற அளவுக்கு, அவன் உள்ளத்தில் அது உறைந்திருந்தது.

ஒருநாள் முன்னிரவு. அவன் திண்ணையில் 'அரிக்கன் விளக்கு' முன் அமர்ந்து படித்துக் கொண்டிருந்தான். அவன் வீட்டின் முன்னே குதிரை வண்டி ஒன்று வந்து நின்றது. அதிலிருந்து அவன் அப்பா தான் இறங்கினார். அவர் நன்றாகக் குடித்திருந்தார் என்பதை அவருடைய தோற்றமும், உளறலும், தள்ளாட்ட நடையும் விளம்பரப்படுத்தின.

'போடா...போடாங்கேன்...என்னடா ரூபா?' என்று கத்தினார். தொடர்ந்து சங்கீதம் என்ற நினைப்பில் ஊளையிட்டார்.

'மேகம் திரண்டு வர்ருது
வெள்ளம் புர்ரண்டு வர்ருது
தண்ணி உருண்டு வர்ருது
தாகம் தணிஞ்சு வர்ரலே!'

தெருவில் வேடிக்கை பார்க்கும் கும்பல் கூடிவிட்டது. அவர் சில எட்டுகள் காலடி பெயர்த்து வைத்ததும், வாந்தி எடுத்தார். குடலைப் பிடுங்கும் நாற்றம்! சகிக்க முடியவில்லை சதானந்தத்துக்கு.

அவர் தள்ளாடி அதிலேயே விழுந்தார். பிரக்ஞை தவறி விட்டது. அநேகர் சேர்ந்து, அவரைத் தூக்கி, வீட்டினுள் எடுத்துச் சென்றார்கள். படுக்க வைத்தார்கள். வெளியே போனார்கள். 'இவருக்கு ஏன் இந்தக் கேடு? கண்ணு மூக்கு தெரியாமல் குடிச்சிருக்காரு!' என்று பல பல பேசி நடந்தார்கள். அதெல்லாம் சதானந்தம் காதில் விழுந்து, மனசில் தைத்தன. அவனுக்கு வெறுப்பு அதிகரித்தது.

அவன் தாய், தந்தையின் சட்டையை அகற்றி விட்டு, ஈரத் துணி கொண்டு அவர் உடம்பை சுத்தம் செய்தாள். மீண்டும் படுக்க வைத்தாள். அவர் கட்டையாகத்தான் கிடந்தார். அவனுக்கு அவன் அம்மா மீது மிகுந்த பரிவும் பாசமும் உண்டாயின.

அவன் சீக்கிரமே தூங்கிப்போனான். எவ்வளவு நேரம் சென்றிருக்கும் என்று தெரியாது. திடுக்கிட்டு எழுந்தான். காட்டுக் கூப்பாடும் சண்டையும் போல் ஒலிகள் அவன் காதில் பட்டு,

அவனை எழுப்பி விட்டன. கவனித்தான். அவன் தந்தையின் குரல்தான். எவ்வளவு வெறித்தனமாக ஒலித்தது அது!

'அப்படித்தான் குடிப்பேன். அது என் இஷ்டம். நீ யாருடா என்னை அதிகாரம் பண்ண?' இதையே அவர் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தார். அவர் அம்மாவை அடித்தது போலவும் தெரிந்தது. அவன் தாய்க்காக விம்மி விம்மி அழுதான்; குடிவெறியால் மிருகமாக மாறிவிடும் தந்தையை வெறுத்தான்.

குடி, மனிதனை எவ்வளவு கேவலமாக ஆக்கிவிடுகிறது! மதுவின் உதவியால் மனிதன் எவ்வித இழிந்தவன் ஆகி விடுகிறான்! இதை நன்கு உணர்வதற்கு அவனுக்கு நிறையவே வாய்ப்புகள் கிட்டின. அதனால்தான், மனிதன் மனிதனாக வாழவேண்டும் என விரும்பிய உத்தமர்கள் மதுக்குடியை வெறுத்து, அதை விலக்க வேண்டும் என்று சொன்னார்கள்; அதனாலேயே காந்திஜீயும் மதுவிலக்கைத் தீவிரமாக ஆதரித்தார் என்பதைச் சதானந்தம் நன்கு புரிந்து கொள்ள முடிந்தது.

அவன் தந்தை சீக்கிரமே செத்துப்போனார். அவர் சொத்து, பணம் எதுவும் விட்டுவைக்கவில்லை. அனைத்தையும் குடி, கூத்தி வகையராவில் தீர்த்துவிட்டுப் போயிருந்தார்.

பொருளாதார நோக்கிலும் மதுக்குடி மனிதரை நன்கு வாழ விடுவதில்லை. அது தனி நபர் வாழ்வையும், குடும்ப வாழ்வையும் சிதைத்துச் சீரழித்து விடுகிறது என்று கருதிய காந்திஜீயின் சிந்தனை உயர்வை சதானந்தம் அனுபவப்பூர்வமாக உணர்ந்து போற்றினார்.

குடியில் உல்லாசம் பெற விரும்பியவர்களுக்கு அவர் நல்லுரைகள் புகல்வது வழக்கம்.

அவருடைய நண்பர்களில் ஒருவர் 'ஜாலியாகக் குடிப்பதை' பெருமையாக மதித்து வந்தார். ஒரு சமயம் அவர் சதானந்தத்தைக் காண வருகையில் குடித்து விட்டு வந்தார்.

'நண்பரே, குடிப்பது நல்லதல்ல. நீங்கள் ஏன் குடிக்கிறீர்கள்?' என்று அமைதியோடு கேட்டார் சதானந்தம்.

'அது என் இஷ்டம். அது எனக்கு சந்தோஷம் தருகிறது. நான் விரும்பும் இன்பங்களில் அதுவும் ஒன்று' என்று நண்பர் வாதாடினார்.

சாதாரணமாகத் தொடங்கிய பேச்சு சூடான விவாதமாகத் திரிந்தது. ஒரு கட்டத்தில் நண்பரின் ஆத்திரம் அடக்க முடியாதது ஆயிற்று. 'வாயை மூடு!' என்று சொல்லி, அவர் சதானந்தத்தின் கன்னத்தில் ஓங்கி அறைந்தார்.

சதானந்தம் மெலிந்தவரல்லர். கோழை இல்லை. எதிரே இருந்தவரை நையப் புடைக்கும் சக்தி அவரிடம் இருந்தது. ஆயினும் அந்த எண்ணம் அவருக்கு இல்லை. காந்திஜீயின் வரலாறும் மணி மொழிகளும் அவரை அமைதி நிறைந்த மனிதனாக வளர்த்திருந்தன.

அவர் புன்னகை புரிந்தார். 'நண்பரே, உமக்கு இன்பமும் சந்தோஷமும் உண்டாகும் என்றால், இந்தக் கன்னத்திலும் ஓங்கி அறைந்துகொள்ளலாம்' என்று மறு கன்னத்தைக் காட்டினார் சதானந்தம்.

நண்பர் அதிர்ச்சியுற்றவர் போல் செயலிழந்தார். சதானந்தத்தின் அமைதி மலர்ந்த முகத்தையே சிறிது நேரம் பார்த்திருந்தார். பேசாது எழுந்து போனார்.

மறுநாள் அவரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. மன்னிப்புக் கோரி எழுதியிருந்தார். அறிவை இழக்கச் செய்யும் குடியை விட்டுவிட முயலுவேன் என்றும் அறிவித்திருந்தார் நண்பர்.

அப்பொழுதும் சதானந்தம் புன்னகை தான் புரிந்தார்.

பண்பட்டிருந்த அவர் உள்ளத்திலும் ஊசலாட்டம் உண்டாக்குவதாக இருந்தது அவருக்கு வந்திருந்த புதிய சோதனை.

## 3

சத்தியத்தைக் காப்பதற்காக அரசு துறந்து, நாட்டை இழந்து, மனைவியையும் மகனையும் அடிமைகளாக்கி விட்டு, சுடலை காத்து நின்ற மன்னன் அரிச்சந்திரன் தீயெழக் கண்டு ஓடிவந்து பார்த்த போது, தன் மனைவியே தங்கள் மகனின் உயிரற்ற உடலை எரிக்க முயல்வதை அறிந்தான். ஆயினும், கட்டணம் இல்லாமல் எரிமூட்டக் கூடாது என்று தடுத்தான். சத்தியம், தன்னைக் காதலிப்பவர்களை, வெகுவாகச் சோதனை செய்யும் இயல்புடையது.

சத்தியத்தை விடாது கைக்கொள்ள விரும்புகிற சாதாரண மனிதனும், வாழ்க்கையில் பல சோதனைகளையும் போராட்டங்களையும் அனுபவிக்கத்தான் வேண்டியிருக்கிறது. இதைச் சதானந்தம் உணராதவரில்லை.

அவருக்கு உறுதியான பலமாக இருந்து நல்வழி காட்டி வந்த தாய் லட்சுமி அம்மாள் இறந்து போன புறகு, அவர் தமது மனோ திடத்துடனும் கொள்கைப் பிடிப்புடனும்தான் முன்னேற வேண்டியிருந்தது. லட்சியப்பாதை—அது தனிநபர்

தேர்ந்து கொண்டதாயினும், சமுதாயம் தனக்கென அமைத்துக் கொண்ட தாயினும், ஒரு நாட்டுக்கென்று தீர்மானிக்கப்பட்ட தாயினும்—கரடு முரடானதே, பண்படுத்தப்பட்ட வழவழப்பான சாலைவழி அல்ல என்பதை அவர் அடிக்கடி நினைவுபடுத்திக் கொள்வது வழக்கம்.

என்றாலும், வியாபார ரீதியில் செயல் புரிகிற இன்றைய மனிதர்கள் மத்தியில், பணத்தையும் பணம் சேர்க்கும் சுலப வழிகளையும் போற்றி வழிபடும் இந்த நாகரிக யுகத்தில், சத்தியத்தில் தீவிரமான பற்றுக் கொண்டு விட்ட சதானந்தம் எத்தனையோ சங்கடங்களை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டியிருந்தது. சந்தர்ப்பங்களும் சூழ்நிலைகளும் சகமனிதர்களும் அவரை, அவருடைய லாபத்துக்காக இல்லாது தங்களுடைய நன்மைக் காகப், பொய் சொல்லும்படி தூண்டியபோதும் அவர் தன்னம் பிக்கையோடும் மனஉறுதியோடும் மறுத்துவிட நேரிட்டது. அவ்வேளைகளில் அவருக்கு ஏற்பட்ட இடைஞ்சல்கள் பல.

ஒரு நிகழ்ச்சியை முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். அவர் ஒரு பெரிய வீட்டின் சிறு பகுதியில் குடியிருந்தார். நாற்பது ரூபாய் வாடகை. ஒரு சமயம் வீட்டுச் சொந்தக் காரர் அவரிடம் சொன்னார்—''வரி விதிக்கிறவர்கள் வந்து கேட் பார்கள். நீங்கள் எங்களுடைய உறவினர்கள் என்றும், வாடகை எதுவும் கிடையாது என்றும் சொல்லுங்கள் என்று'' சதானந்தம் அதற்கு இசையவில்லை. நான் தான் வாடகை கொடுத்து வருகிறேனே; நான் ஏன் பொய் சொல்ல வேண்டும் என்றார். உள்ளதைச் சொன்னால் அதிகமான வரி விதித்து விடுவார்கள்: எனக்கு ஒரு உதவியாக இதைச் செய்யுங்கள் என்று கோரினார் வீட்டுக்காரர். சதானந்தம் பிடிவாதமாக மறுக்கவும், போகிறது; குடக்கூலி பத்து ரூபாய் என்று சொல்லுங்கள் என்று கேட்டுக் கொண்டார் அவர். நான் யாருக்காகவும் பொய் சொல்ல முடியாது; உள்ளதை உள்ள படியே சொல்லுவேன். பத்துரூபாய் தான் வாடகை என்று நான் சொல்ல வேண்டுமானால், நீங்கள் பத்து ரூபாய் மட்டுமே வாங்கிக்கொள்ள வேண்டும் என்று வாதாடினார். வீட்டுக்கார ருக்கும் அவருக்கும் தகராறு முற்றியது.

சதானந்தத்துக்குக் கல்யாணமாகி ஒரு வருஷம் தான் ஆகி யிருந்தது. அவர் தம் மனைவியையும் தமது வழியில் பழக்கு வதற்கு அரும்பாடு பட்டு வந்தார். இச் சந்தர்ப்பத்திலும் அவள் தன் சுபாவப்படி, 'நீங்கள் வேண்டுமானால் அப்படிச் சொல்ல வேண்டாம். ஒன்றுமே பேசாமல் இருந்து விடுங்கள், நான் சொல்கிறேன். இதனால் நமக்கு என்ன கஷ்டம்?' என்றாள்.

சதானந்தம் அவளுக்காக, அவளது அறியாமைக்காக. இரக்கப்பட்டார்: தமது கொள்கையில் விடாப்பிடியாக இருந்தார்: வீட்டுக்காரரர் ஆத்திரம் கொண்டு, வீட்டை உடனடியாகக் காலிசெய்து விடவேண்டும் என்று கட்டளையிட்டார்:

அவருடைய மிரட்டலோ, மனைவியின் வேண்டுதலோ, சதானந்தத்தின் உறுதியைத் தளர்வுறும்படி செய்ய இயலவில்லை. அவர் தீவிர முயற்சி செய்து, ஒரு நண்பரின் துணையோடு, சிறிது தூரத்தில் உள்ள தோட்டம் ஒன்றில் குடிசை கட்டிக்கொண்டு, வீட்டைக் காலி செய்துவிட்டார்.

அவர் மனைவி பாக்கியம் அதற்காக அடிக்கடி அவரைக் குறை கூறி வந்தாள். இதர பல விஷயங்களிலும் அவள் முணுமுணுத்து முரண்டுவதும் உண்டு. ஆயினும், சதானந்தம் அன்போடும் பிரியத்தோடும் பொறுமையோடும் அவளுடன் பழகி அவளைத் தனக்கு ஏற்ற துணைவியாக மாற்றிக்கொண்டார்.

அவ்வப்போது சிறு சிறு பிணக்குகளும் குறைபாடுகளும் தலைகாட்டாது போவதில்லை. குழந்தைகள் பிறந்து, குடும்பம் பெரிதான பின்னர் இவ்வித நெருக்கடிகளுக்குக் குறைவே கிடையாது:

ஆனாலும், சதானந்தம் மனம் சோர்வதே கிடையாது: உயர் கொள்கைகளிலிருந்து நழுவியதும் இல்லை.

அவர் வாழ்க்கையில் எதிர்ப்பட்ட பலப்பலச் சோதனைகளிலும், இப்போது தலையெடுத்து அவருக்குப் பெரும் மன உளைச்சல் தந்துகொண்டிருந்தது தான் மகாப்பெரியது, கடுமையானது என்று சதானந்தத்துக்குத் தோன்றியது:

## 4

'கடவுள் சத்திய மயம்' (GOD IS TRUTH) என்று எழுதி வந்த காந்திஜீ, சத்தியத்தின் மாண்பையும் சக்தியையும் உணர்ந்து கொண்ட பிறகு, 'சத்தியமே கடவுள்' (TRUTH IS GOD) என்று எழுத முற்பட்டார்:

வெகு நேர மனக்குழப்பத்துக்குப் பிறகு சதானந்தம் ஒரு முடிவுக்கு வந்தார்.

அப்படி ஒரு முடிவுக்கு வரவேண்டியிருப்பதற்காக அவர் வேதனைப்படத்தான் செய்தார். இருந்தாலும் வேறு வழியில்லை: அவருடைய மனசாட்சி அந்த முடிவைத்தான் அவருக்கு வகுத்துக் காட்டியது. அவருடைய சத்திய வேட்கை அப்படிச் செய்யவேண்டியது அவர் கடமை என உணர்த்தியது:

அவரை சேர்ந்தவர்களுக்கு அவருடைய தீர்மானமான முடிவு அளவிலா வருத்தமும் துக்கமும் உண்டாக்கும். அவருடைய மனைவி அழுது புலம்பி என்றென்றும் அவரைக் குறை கூறிக் கொண்டேயிருப்பாள். அவர் மகள் தன்னுடைய வாழ்வே இருண்டுவிட்டது என்று சாம்பிக் குவிந்துகிடப்பாள். தனது வாழ்வைப் பாழ்பண்ணியது தன் தந்தையேதான் என்று புழுங்கிக் குமைந்து, அவரை வெறுக்கத் தொடங்கிவிடுவாள். இதை எல்லாம் அவர் சிந்திக்காமலில்லை.

பூத்துக்குலுங்கி மகிழ்வும் மங்களமும் நிறைந்த குடும்பமாகத் திகழவேண்டிய வீட்டில் களங்கமும் இருளும் துயரமும் ஏக்கமும் படிந்துவிடுமே—அந்த நிலைக்கு ஆளாகக் கூடியவள் தன் அருமை மகள் மரகதமாக இருக்கிறாளே—என்ற எண்ணம்தான் சதானந்தத்தின் மனசை உலைய வைத்தது.

மரகதம் நன்றாக வாழவேண்டும் என்றுதான் அவர் ஆசைப் பட்டார். அவளை முத்துசாமிக்குத் திருமணம் செய்து, தனிக் குடித்தனத்துக்கு வேண்டிய வசதிகள் பலவும் அமைத்துக் கொடுத்தபோது, அவளுடைய எதிர்காலம் ஒளியும் வளமும் நிறைந்ததாகவே இருக்கும் என்று எண்ணினார். முத்துசாமி நல்ல இளைஞன், உழைக்கும் ஆர்வமும் ஆற்றலும் உடையவன் என்றே பலரும் அபிப்பிராயப்பட்டார்கள். அவருக்கும் அவ்வாறே தோன்றியது.

பல மாதங்கள் வரை மரகதத்தின் வாழ்க்கை குளுமையும் இனிமையும் பெற்றே விளங்கியது. மெதுமெதுவாகத் தான் முத்துசாமியின் உண்மை உருவம் சதானந்தத்துக்குப் புலப் படலாயிற்று.

பஸ் கண்டக்டர் பணி புரிந்து வந்த முத்துசாமி ஒழுங்காக வேலை செய்வதே கிடையாது. அலுவலுக்குப் போகாமல் வேறு எங்கோ போய் சில நண்பர்களுடன் பணம் வைத்துச் சீட்டாடிப் பொழுது போக்கும் வழக்கம் உடையவன் அவன். உழைத்துப் பாடுபடுவதை விட, உடல் உழைப்பு இல்லாமல் உல்லாச முறைகளிலேயே எளிதில் விரைவில் பணம் பண்ணிவிட வேண்டும் எனும் ஆசைபற்றி அலையும் எத்தனையோ பேர்களில் அவனும் ஒருவன். அதனால் அவன் குதிரைப் பந்தயம், சூதாட்டம் முதலியவைகளில் மிகுந்த உற்சாகம் காட்டி வந்தான். இவற்றினும் மேலாக இன்னொரு விஷயம் சதானந்தம் உள்ளத்தில் தைத்து இரத்தம் கசிய வைத்தது.

அவன் திருட்டுச் சாராயம் காய்ச்சி, கள்ளத்தனமாக விற்பனை செய்யும் குழுவிலும் முக்கியமான பங்கு ஏற்றிருந்தான்.

இவ் உண்மைகளில் சில மரகதம் மூலம் தெரிய வந்தன. பிறகு அவர் விசாரித்து அறிய முயன்றபோது எல்லா விவரங்களும் அம்பலமாயின.

சதானந்தம் முத்துசாமியிடம் நல்லுரைகள் புகன்றார். மரகதத்துக்கு போதித்து அவனை நல்வழிப்படுத்த முயன்றார். அவன் திருந்துகிறவனாய்த் தோன்றவில்லை. மேலும் மேலும் நாசப் பாதையிலேயே முன்னேறிக் கொண்டிருந்தான்.

அவர் இறுதி முறையாக அவனுக்கு நல்ல வார்த்தைகள் சொன்னார். அவன் அவரை அலட்சியமாக மதித்தான். 'என் போக்கில் தலையிடுவதற்கு நீர் யார்? நான் எப்படியும் வாழ்க்கை நடத்துவேன். என் இஷ்டம்போல் என்ன வேண்டுமானாலும் செய்வேன். உம் மகள் கஷ்டப்படவில்லை. அவள் என்னோடு இருப்பது உமக்குப் பிடிக்கவில்லை என்றால், அவளை அழைத்துக் கொண்டு போய் உமது வீட்டோடு வைத்துக்கொள்ளும்!' என்று திமிராகப் பேசினான். இப்போது தயாரிப்பதை விட அதிக அளவில் சாராயம் காய்ச்சி விற்கப் போவதாகப் பெருமை வேறு பேசினான்.

அவன் போக்கு சதானந்தத்துக்குக் கசப்பு அளித்தது. மனித உருவில் நடமாடும் கயவன், 'மக்கட் பதடி' அவன்; அவனைச் சீர் திருத்துவது சாத்தியமில்லை என்று அவருக்கு நிச்சயமாகப்பட்டு விட்டது. சத்திய மார்க்கத்தில் செல்லும் தம்முடைய கடமை என்ன என்று அவர் சிந்தித்தார். அதனால் எழக்கூடிய விளைவுகள் அவருக்கு மனவேதனை தந்தன. எனினும் அவர் தம் கடமையைச் செய்யத் துணிந்தார். சமூகத் துரோகியாய், தீமையான செயல்களைப் புரிந்துகொண்டு கெக்கலி கொட்டித் திரியும் வீணனை சட்டத்தின் கைகளில் அகப்பட வைத்து உரிய தண்டனை பெறும்படி செய்யவேண்டியது தான் என்று அவர் தீர்மானித்தார். அப்படி அகப்படக் கூடியவன் தன் மகளின் கணவன் தான் என்பதனால் அவர் கலக்கம் அடையவில்லை.

உரிய முறைகளின்படி ஆவன செய்து விட்டு அமைதியாக இருந்தார் அவர்.

மறுநாள் போலீசார் வந்து, பல இடங்களையும் சோதனை செய்து, திருட்டுச் சாராயம் தயாரிக்கும் சாதனங்களைக் கைப் பற்றிக்கொண்டு, முத்துசாமியையும் மற்றும் சிலரையும் கைது செய்து சென்ற செய்தி அவருக்குக் கிடைத்தபோது சதானந்தம் புன்னகை புரிந்துகொண்டார்.

'அப்பா, என் குடி கெட்டுதே! என் வீட்டில் விளக்கு அணைஞ்சு போச்சே!' என்று அழுது அடித்துக்கொண்டு மரகதம் வந்து சேர்ந்தபோதும் அவர் அமைதியாகத்தான் இருந்தார்.

சத்தியத்தின் சந்நிதியில், கடுமையான சோதனையில் வெற்றி பெற்று நிற்க முடிந்ததற்காக சதானந்தம் ஆத்ம திருப்தியே கொண்டார்.

★

# 38

# சோதனை

பங்குனிமாதத்துப் பூர்ணிமையிரவு. சந்திரனுடைய படுக்கையறையில், ஜன்னல் வழியாகப் பாய்ந்து வந்த நிலவு அவனுடைய படுக்கையில் வியாபித்திருந்தது.

படுக்கையில் படுத்திருந்த சந்திரனின் பார்வை, நீலவானில் ஊர்ந்து செல்லும் முழுமதியில் லயித்திருக்க, மனதிலே நினைவுகளின் மோதுதல்கள் !

சாந்தி நிகேதனத்தில் மாணவனுகக் கல்வி கற்றபோதும், காந்தி கிராமத்தில் 'சேவக்' காகப் பொதுநலத் தொண்டனுகப் பணியாற்றியபோதும் தனது எளிய வாழ்க்கையில் நிலவியிருந்த நிம்மதியும், நிறைவும் உற்சாகமும்...இப்போதுள்ள செல்வச் செழிப்பில், போக பாக்கியங்களில் காணமுடியாததோடு...

படக்,

அறையில் வெளிச்சம் பரவியது !

தலைநிறைய மல்லிகைப்பூ வைத்துக்கொண்டு நெற்றியில் சாந்துப்பொட்டும், கொள்ளைச்சிரிப்புமாக உள்ளே வந்த சியாமளா கையிலிருந்த பால் செம்பை மேஜைமீது வைத்துவிட்டு, ''நிலாவைப் பார்த்தீர்களா, பட்டப்பகல் மாதிரி !'' என்ருள் உவகையுடன்.

பார்வையைத் திருப்பாமலே, விளக்கை அணைத்துவிடு சியாமளா, நிலா வெளிச்சமே போதும், என்ருன் சந்திரன். ''பாலைச்சாப்பிட்டு, வெற்றிலை போட்டுக்கொள்ளுங்கள். பிறகு அணைக்கிறேன்.'' என்று சொல்லி, பாலை டம்ளரில் விட்டுக் கொடுத்துவிட்டு, வெற்றிலைக்குச் சுண்ணும்பு தடவி, நரம்பைக்

கிழித்து வைத்துக்கொண்டு பாக்கு பொடியைக் கொடுத்து, வெற்றிலையை மடித்துக் கொடுத்துக் கொண்டே, "இந்தமாதிரி நிலாவிலே திருஷ்டியைச் செலுத்தி, நிலாவிலேயே படுத்துத் தூங்கினால் நிச்சயமாகப் பைத்தியம் பிடித்துவிடுமாம்! எங்கள் தாத்தா சொல்லுவார்..." என்றாள் சியாமளா.

சந்திரன் சாவகாசமாகத் திரும்பிப் பார்த்து, "நிலவின் ஒளியிலே வாழ்க்கை முழுவதையும் செலவுசெய்து நிலவின் சௌந்தரிய விலாசங்களை வர்ணித்த வால்மீகி, காளிதாஸன், ரவீந்திரர் போன்ற ஞானிகளுக்குப் பிடித்த பைத்தியம் எனக்கும் பிடிக்காதா என்ற ஆசைதான்!"

"போங்கள், கோணல்கட்சி பேசுவதே உங்கள் வழக்கமாகப் போய்விட்டது! நான் பொய் சொல்லுகிறேன் என்று நினைக்கிறீர்கள்?"

"நீ விளக்கை அணை முதலில். பிறகு பேசலாம்—இன்றிரவு ஒரு நல்லகதை சொல்லப்போகிறேன் உனக்கு," என்றான் சந்திரன்.

விளக்கை அணைத்துவிட்டு வந்து அமர்ந்தாள். சந்திரன் தன்னை மறந்தான்.

நிலாவையும், வானத்து மீனையும்
    காற்றையும் நேர்பட வைத்தாங்கே
குலாவு மமுதக்குழம்பைக் குடித்தொரு
    கோலவெறி படைத்தோம்.
உலாவுமனச் சிறுபுள்ளினை எங்கணும்
    ஒட்டி மகிழ்ந்திடுவோம்
பலாவின் கனிச்சுளை வண்டியிலோர் வண்டு
    பாடுவதும் வியப்போ!"

நல்ல ராகஞானம் உண்டு சந்திரனுக்கு! பாடிமுடித்துவிட்டுத் திரும்பிப் பார்த்தான். "சியாமளாம்பிகைக்கு ரொம்பக் கோபம் போலிருக்கிறதே!" என்றான் விளையாட்டாக. "ஆமாம்! என்னைவிட உங்களுக்கு அந்த நிலாத்தேவன்தான் உயர்த்தி,"

"நீதான் எனக்கு உயர்த்தி சியாமளா! நிலவுத்தேவனல்ல!" என்றான் மனமும், குரலும் நெகிழ.

"ஆமாம், ரொம்ப நிஜம்!"

"நிரூபித்துக் காட்டினால் சரிதானே?"

"பேசவாவது கற்றுக்கொண்டிருக்கிறீர்களே—என்னை ஏமாற்ற என்று!"

"குடலைக்கிழித்துக் காண்பித்தாலும் 'இது வாழைநார்' என்கிறவர்களை வைத்துக்கொண்டு எப்படி காலட்சேபம் செய்வது?"

"நான் அவ்வளவு பொல்லாதவள்; அப்படித்தானே?"

"சே! நல்ல மனதும், வாக்கும் இருப்பதால்தான் எனக்கு உள்ளபடியே இதுவரையில் பைத்தியம் பிடிக்காமலிருக்கிறது! இது கிடக்கிறது, கதை சொல்லுகிறேன்..."

"சொல்லுங்கள், சொல்லுங்கள்..."

நிஜக்கதை வேணுமா, பொய்க்கதை வேணுமா?"

"பொய்க்கதை ஒன்றும்வேண்டாம். நிஜக்கதையே சொல்லுங்கள்."

"என் சிநேகிதன் ஒருவன் கணேசன் என்று..."

"என்னவோ கதை என்றீர்கள்?"

"அவன் கதைதான் உனக்கு இப்போது சொல்லப்போகிறேன்...."

"ஐயோ பாவம், கதையாகிப்போய்விட்டதா உங்கள் நண்பர் வாழ்க்கை."

"ஆமாம்: சமுதாயம் தன் சட்டப்படி அவன் நடக்கவில்லையென்று அவனைத் தண்டித்து விட்டது!"

"அப்படியென்றால்?"

"கேட்டுக்கொண்டே வாயேன், புரிந்து விடுகிறது!' கணேசனுடைய பாட்டனார் ஒரு புரோகிதர்,"

"உங்கள் பாட்டனார் மாதிரி!"

"சாஸ்திரிக்கு ஒரே பேரன், செல்லமாக வளர்த்தார், படிக்கவைத்தார்...பையனுக்கு அரசியல் பித்துப் பிடித்துவிட்டது, காந்தி இயக்கத்தில் பற்றுக்கொண்டு, அதில் சேர்ந்து தொண்டனாகி விட்டான்...

"கதையா இது?"

"ஏன், சுவாரசியப்பட வில்லையோ?"

சியாமளா அவன் முகத்தைப் பார்த்தாள்! அதைக் கவனியாமலே அவன் மேலே சொல்லிக்கொண்டு போனான்!

"வந்து,—சேவக் காக—பல இடங்களுக்குப் போனான்...ஒரு இடத்தில் நோய்வாய்ப்பட்டதால் இரண்டு மாதம் தங்க

நேர்ந்தது. கன்னிகாதானபலன் வேண்டுமென்று—ஒரு பணக்கார ஸனுதன தர்மசீலர் தன் பெண்ணுக்கு பாலியத்திலேயே விவாகம் செய்தாராம்—அதுவும் எதற்காக?'' கன்னிகாதானம் சாஸ்திர விதிப்படி செய்தால் புத்திரபாக்கியம் உண்டாகுமென்று ஜோசியன் சொன்னதைவைத்து, அந்த ஆசையில் பண்ணிவிட்டார்!

புத்திரன் பிறக்காததோடு—பதின்மூன்றுவயதிலேயே பெண் விதந்துவாகி நின்ருள்! மனசாட்சிக்குப்பதில் சொல்ல வழி தெரியாமல் அநியாயமாக அவர் பிராணனை விட்டார்!

வீட்டிலே பொழுது போகவில்லை-உள்ளூர் காந்தி கிராமத்தில் சேர்ந்து பொதுப் பணியில் தன்னை அர்ப்பணித்துக் கொண்டாள் அவர் பெண்.

சியாமளா—! நான் நோயுடன் போராடும் போது அந்தப் பெண்—எனக்குச் செய்த தொண்டும், பரிவும் என்னை—கட்டைப் பிரம்மசாரியாக வாழ நினைத்து உறுதி பூண்ட என் திடசித்தத்தைக் குலைத்து விட்டாள்!

தன்னுடைய நிர்க்கதி—சூனிய மான வாழ்க்கை சோகத்திலே நலிந்து கிடக்கும் தாய்க்குப்பின் நமக்குத் துணை யார் என்ற திகில், எல்லாவற்றுக்குமாக—அந்தப் பெண் மனத்துள் அழுது அலறுவதை உணர்ந்தேன்!

சியாமளா, உணர்ந்த பிறகு என்னுல் ஒதுங்கிக் கொள்ள இயலவில்லை. ஒரு அபலைப் பெண்ணுக்கு வாழ்வளிக்க உறுதி பூண்டேன்.

''சியாமளா! அன்றும் இதே நிலா இரவுதான்! நான் நோய் தெளிந்து ஒய்வுக்காகத் தங்கியிருந்தேன் அந்த ஆசிரமத்தில்''

''ஆசிரமத் தாழ்வாரத்தில் அமர்ந்து கண்ணீர் பொழிய மன மிழந்து தடுமாறினுள் அந்தப்பேதை!''

''ஏன்? தன் வரலாற்றைக் கேட்டு அறிந்து—ஒரு அபலைக்கு வாழ்வு கொடுக்க முன் வந்து தன்னை ஏற்றுக் கொள்வதாக உறுதி கூறும் ஆண்மகனை நம்பவும் விரும்பினுள்—ஆனுள் பயந்தாள்! ஐயோ விதியே என்று அழுதாள்!''

''என்னை மறந்து நான் எழுந்து ஓடினேன்! அவளை ஏற்றுக் கொண்டேன்! பிறகு—ஒரு மாதம் சென்ற பிறகு தான்—வயதான பெற்றோர்களைப்பற்றி நினைவு வந்தது!...''

"இருங்கள், — மீதியை நான் சொல்லிக் கதையை முடிக்கிறேன்! காந்தி மகானின் கொள்கைகளில் பற்றுள்ளதால் சீர்திருத்த மணம் செய்து கொண்டீர்கள். ஒரே பிள்ளையான தங்கள் பெற்றோர்கள் இதை ஆட்சேபிக்கிறார்கள்!"

"ஆட்சேபிப்பதோடு இல்லை சியாமளா—"

"நான் எதிர்பார்த்தது தான்! இரண்டு நாளாக எப்படிப் பட்ட எதிரியுடன் போராடி வெற்றி பெற்றிருக்கிறேன் தெரியுமா?"

"எப்படி—கொஞ்சம் விளக்கமாகச் சொல்லேன்!"

"பெண்மையின் தன்மைப்படி!—நானும் மகாத்மாவின் அடிச்சுவடுபற்றி வருபவள் தானே? பிறர் மனம் நோக நான் சகிக்க மாட்டேன்...!"

"நான் உன்னை இழக்க மாட்டேன் சியாமளா..."

"காலம் வந்தால்—எல்லாம் ஏற்க வேண்டியதே...இருங்கள் என்ன சத்தம் கீழே..."

* * *

உங்கள் நியாயம் உங்களோடு இருக்கட்டும்.

"அவன் வீட்டை விட்டுப் போகக் கூடாது!"

"அவனை நான் போகச் சொல்ல வில்லையே!"

"அவன் வேண்டுமானால் அவளும் வேண்டும்; என் குழந்தையை நான் இழக்க மாட்டேன்..."

"யார் இழக்கச் சொன்னார்கள்? போயேன் நீயும் அவனோடு!"

"ஏன் போகணும்? சொத்துக்கு வாரிசுதான் அவன், பிதுர் ஆர்ஜிதம் என்பது ஞாபக மிருக்கட்டும்."

"அப்போ, நான் வெளியே போக வேண்டியது தான்!"

"நீங்களும் போகக் கூடாது! என்ன வந்து விட்டது இப் போது? அந்த நாட்களில் நீங்களும் தான்—காந்தியின் அஹிம்சை, சத்தியம், பரோபகாரம், அஞ்சாமை, ஆகிய வற்றைப் பிரமாதமாகப் புகழ்ந்து கொண்டாடியவர்தானே?"

அவன் முழுக்க முழுக்கக் காந்திக் கொள்கைகளைக் கடைப் பிடிப்பவன்—நல்லபெண்ணாக இருக்கவேதான் ஏதோ செய்து

கொண்டான்! சந்தோஷமாக இருக்கட்டுமென்று விட்டுவிட வேண்டியதுதான்! காலத்தையும் அனுசரித்துத் தானே போக வேண்டும்?

இருக்கிற ஒரு பிள்ளையை விட்டு விட்டு, நாம் எங்கே போனுல் நமக்கு இருப்புக் கொள்ளும்—அவனுக்கும் தான் என்னமாக இருக்கும்? பார்த்தாயா என்று மனசு உடைந்து போகாதோ?

எல்லாம் அவன் செயல்! என்று நிச்சிந்தையாக இருங்கள்—சமைத்துப் போடுகிறேன்—சாப்பிடுங்கள். ராம நாமாவை ஜபித்துக் கொண்டு இருந்தால் தன்னுல் காலம் வரும் போது போய் விடப்போகிறோம்!

என்ன வீராப்பும், வைஷம்மியமும் வேண்டியிருக்கிறது?... என்ருள் வேதாம்பாள் உரக்க!

"அம்மா! மலைபோன்ற பிரச்னையை மிக சுலபமாகத் தீர்த்து விட்டாயே தாயே! என்ன விருந்தாலும் தாய், தாய் தான்! நேற்று நான் வந்ததும் என் மனைவியைப் பார்த்து என்ன எது என்று விசாரித்த போது உண்மையை உரைப்பதே சரி! அதனுல் என்ன நேர்ந்தாலும் சரிதான் என்று உன்னிடம் ஒளிக்காமல் சொன்னேன்!"

"கடைசியில் உண்மைதான் வெற்றி பெற்றிருக்கிறதே!" என்ருன் சந்திரன் வாய்விட்டு!

"வெற்றி தேடித்தந்ததோடு எதிர்பாராத ஆனந்தத்தையுமல்லவா தேடித் தந்திருக்கிறது" என்ருள் சியாமளா மெய் சிலிர்க்க!

"ஆமாம்! இவ்வளவு சீக்கிரத்தில், இம்மாதிரி சுமுகமான முறையில் பிரச்னை தீர்ந்து விடும் என்று நான் எதிர்பார்க்க வில்லை?"

அப்பா செய்த அமர்க்களத்தில், நான், உன்னைத் துறப்பதா—அவர்களைத் துறப்பதா என்ற நிலைமைக்கு வந்து—நான் பட்ட வேதனை...கலங்கிய கலக்கம்...

என்கண் கண்ட தெய்வமாகி விட்ட அம்மா கச்சிதமாக—நீதி வழங்கி விட்டாள்! நம்முடன் கொண்டு வந்துள்ள மகாத்மாவின் படத்திற்கு நாளைக்கே கண்ணுடி போட்டுக் கொண்டு வந்து கூடத்தில் மாட்ட வேண்டும்!.

"ஆமாம்! எனக்கு வாழ வழி வகுத்த மகான்..."

"மடைச் சீ! நமக்கு என்று சொல்!" என்று இடைமறித்துத் திருத்தினுன் சந்திரன்!

★★

டி. என். சுகி சுப்பிரமணியம்

39

# சிலையும் சிந்தனையும்

நகராட்சி மன்ற உறுப்பினர் திருவாளர் இராமாமிர்தம் காய்கறி வாங்குவதற்குப் பையும் கையுமாக வந்தார்.

தெருவிலுள்ள அசுத்தங்களைப் பார்த்ததும் பதவிக்கு வந்த மனம் ஒருமாத காலம் நைந்து வருந்திற்று. அவரது அதிகாரத் தொல்லைக்குப் பயந்து ஒருசில சமயம் நகரசுத்திகள் ஓடோடி வந்து சுத்தம் செய்தனர். நாளானதும் அவர் சொல்லும் போது முகம் சுளிக்க ஆரம்பித்தனர்.

'என்ன சாமி, உங்கள் தெருவையே பார்த்துக் கொண்டிருந் தால் மற்றத் தெருக்கள் கதி என்னாகும்?'

'நியாயமான பேச்சு' என்று அவர் பதவி மனம் பேசிற்று.

பழைய குருடியாக மாறி நின்றது அவரது தெரு. அத் தெருவைத் தாண்டிப் போவதற்குச் சாமர்த்தியம் வேண்டும். கொஞ்சம் சர்க்கஸ் வித்தையும் தெரிய வேண்டும். குடும்பக் கட்டுப்பாடு என்ற சர்க்கார் முரசம் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னதாகவே அந்தத் தெருவுக்குள் முழங்க வேண்டும். படை படையாகக் குழந்தைகளைப் பல்லாண்டு பல்லாண்டுகளாக வளர்த்து வரும் தெரு. குழந்தைகளின் விளையாட்டுப் பூமியும், தனித்து ஒதுங்கும் பூமியும், கடற்கரை, ஆற்றங்கரை என்ற மாலைப் பொழுதுபோக்கு நந்தவனமும் ஒன்றே. நகராட்சி மன்ற உறுப்பினர் பயின்ற தாண்டல், குதித்தல், எம்புதல் என்ற வித்தைகள் செய்து தமது தெருவைக் கடந்து அடுத்த எல்லைக் குள் வந்தார்.

அவருடைய தாத்தாவின் பக்தி முதிர்ந்து, விளைவித்த பிள்ளையார் கோவில் நின்றது. கண்டதும் இராமாமிர்தத்துக்கு எல்லையில்லாத வெறுப்பு. காரணம் கோவில் தர்மகர்த்தா பதவி அவரை விட்டு விடை பெற்று விட்டது. மண்டிக்கடை மான்முண்டியாப்பிள்ளை பணத்தாலும், ஆள்கட்டுப் பலத்தாலும் அந்தப் பதவியைப் பிடுங்கிக் கொண்டார்; பழக்கம் பெரிய விலங்கு. பிள்ளையார் கோவில் கண்ணில் பட்டதும், அவர் செருப்பு காலைவிட்டுக் கழன்றது; கை மேல் துண்டைத் தோளுக்கு இறக்கிற்று; உடல் வளைந்து, தோப்புக்கரணத்துக்குத் தயாராகிறது.

இன்றும் அப்படித்தான் நிகழ்ச்சிகள் ஆரம்பித்தன. யாரும் தம்மைக் கவனிக்கவில்லை என்பதை அறிந்து பிள்ளையார் முன் மூன்று தோப்புக் கரணத்தோடு தாடையில் போட்டுக் கொண்டார். பிறர் கண்காணிக்காத போது அவர் செய்கிற காரியம். மேலும் 'அப்பனே கணேச மூர்த்தி உன் தயவுதான் வேண்டும். நானே என் பிள்ளையோ உன் கோவிலுக்கு மீண்டும் தர்ம கர்த்தாவாக இருக்க அருள் புரியப்பா, படுபாவி மான்முண்டி ஒழியட்டும்' என்று எண்ணினர். கோவில் மணியடித்தது. கணீர் கணீர் என்று கேட்டதும் 'அப்பன் உத்தரவு தந்து விட்டான்' என்று சிரித்தார். ஒரு கணம் அவர் மனம் வான ளாவப் பறந்தது.

மறுகணம், 'சை அந்தத் துரோகி மான்முண்டி வாங்கி வைத்த வெண்கல மணியின் ஓசை ஆயிற்றே. நமக்கு நல்ல சகுனம் அதுவா உத்தரவு சொல்லும்?' என்றபடியே கோபத்துடன் காந்தி மார்க்கெட்டுக்குள் வேகமாக நடை போட்டார்.

நகரசபைச் சேவகன், கண்டிராக்டர் கண்ணுசாமி, இருவரும் கூழைக்கும்பிடு போட்டனர். சிறிது குசலப்பிரச்சனம்; விலை வாசித் தொல்லைகள் பற்றி மேல் போக்கு விசாரணை நடை பெற்றது.

'ஐயாதான் நகரசபை மன்றத்திலே அடித்துப் பேசி காந்தி சிலையைக் கொண்டு வந்தாங்க. பெருமை இவங்களுக்குத்தான்.'

நகராட்சிச் சேவகன் இது வரை லட்சம் தடவை இராமாமிர்தம் பிள்ளையைக் காணும்போதெல்லாம், சொல்லிவிட்ட பழைய பல்லவி; காந்தி சிலைக்குக் காரணம் இராமாமிர்தம் ஆனாலும் அதை லட்சார்ச்சனையாகக் கேட்பதிலும் நகரமன்ற உறுப்பினர்க்குப் பரம திருப்தி.

'ஐயா பாடுபட்டதினாலே தான் காந்திக்கு மார்க்கெட்டுக்குள் சிறந்த இடம் கிடச்சுது' என்று அனுபல்லவி பாடினர் கண்டிராக்டர்.

இராமாமிர்தம் உடல் உள்ளம் இரண்டும் சில்லிட்டது. புகழ்ச்சிக்கு இருக்கும் விறுவிறுப்பு புதுப் பெண்ணின் கரத்தைப் பிடிக்கும் ஆணுக்கு இருக்குமோ இருக்காதோ? இராமாமிர்தம் முகம் குப்பென்று சிவந்து சிலிர்த்தது. முத்து முத்தான வியர் வைத் துளிகள்; காந்திக்கு உரிய இடமல்லவா? பெருமை இருக் காதா? மயிர்க்கால்கள் குத்திட்டன. பகீரதப் பிரயத்தன செய்கையைத் தாம் செய்து விட்டது போல் உணர்ந்தார். இராமாமிர்தம் இத்தனைக்கும் வெள்ளைக்கார சார்ஜெண்டு பூட்சு காலில் உதை பட்டவர்; மறியல் செய்த தேச பக்தர். அன்று வெள்ளையன் காலால் அடிபட்ட போது எத்தனை ஆனந்தமாக அகிம்சாவாதியாகப் பட்டுக் கொண்டு உடலையும் உள்ளத்தையும் ஒடுக்கினாரோ அதுபோல அவர் இப்போது ஒடுங்கவில்லை. உள்ளம், உடல், இரண்டும் விசுவரூபம் எடுக்கிறது.

'காந்தியின் அருமை எந்தப் பயலுக்கு நம்மூரில் தெரியும்? கொள்ளை அடிக்கத்தான் தெரியும். கறுப்பு மார்க்கெட்டு, வெள்ளை மார்க்கெட்டு இரண்டையும் எவன் விட்டான்?'

அவர் குத்திக் காட்டியது மான்முண்டியாப்பிள்ளையை.

'ஆமாம் ஐயா. கொள்ளையடிக்கிறது கோடி கோடியாக, சந்நிதிக்கு சரவிளக்குப் போடுகிறேன்; கோவிலுக்குக் கும்பா பிஷேகம் செய்கிறேன், தானதர்மம் செய்கிறேன் என்பார்கள்.'

இராமாமிர்தத்தின் உடல் பனிமலைக்குள் புதைந்ததுபோன்ற உணர்ச்சி. ஆனாலும் வாய்விட்டு மான்முண்டிப்பயல் செய்து விட்ட அக்கிரமம் எதையும் காண்டிராக்டர் சொல்லவில்லையே.

அப்போது கார் வேகமாகத் தூசியை அள்ளி நிற்பவர்கள் முகத்தில் திணித்து விட்டுப் பாய்ந்தது. அது மான்முண்டியா பிள்ளையின் கார்.

'அது யார் கார்?'

காரோடும் திசைக்குத் திரும்பி கோடாலிக் கும்பிடாக வணக்கம் போட்ட காண்டிராக்டர் 'பாம்புக்கு வாலும், மீனுக் குத் தலையும் காட்டிக் கொண்டிருந்த விலாங்கு.'

''அட போகிற ஜோரைப் பாருங்கள். தர்மகர்த்தா போகிறார்' என்று கேலியாகச் சொன்னார் காண்டிராக்டர்.

'இவனைப் போல் தர்மகர்த்தா இருந்தால் கோவிலில் கடவுள் இருப்பாரா? ஊர் உருப்படுமா? எனக்கே தோன்று கிறது. கோவில் குளங்களைத் தூர்த்துவிட்டால் இவனைப் போன்ற அயோக்கியன் பதவிக்கு வரமுடியாது. கோவில்

மரியாதை கொடுக்க வேண்டாம். சின்ன மனிதர்களின் பெரிய தனத்திற்காக கடவுள் கைகொடுக்க வேண்டுமா?'

'ஆமாம்' பாட்டுப் பாடினர் உடன் இருந்த இருவரும்.

'தெய்வீகமான கோவிலை நிர்வாகம் செய்யவேண்டியவன் யார்? துறவிபோல் வாழும், கிடைப்பதை நியாய வழியில் சம்பாதிக்கும் யோக்கியன் அங்கே இருக்க வேண்டும்.'

இராமாமிர்தம் சொல்லுக்குக் கண்ணுச்சாமி பேசுகிறார்.

'நீங்கள் சொல்லுகிற ஆளால் கோவிலுக்குப் புகழ் வராதே. மான்முண்டியார் வெள்ளி அங்கி சாத்தப் போகிறதாகக் கேள்வி. ரூபாய் பதினாயிரம் மதிப்புப் பெறுமாம்',

'தள்ளு குப்பையில், காந்தி சிலைக்கு வெள்ளிக்கிழமை யாவது மாலை போடுகிறார்களா?'

'போடுகிறாங்க; பூ, பூக்கடை வாடிக்கை. அல்லாபிச்சை ராவுத்தர் நாலு ஊதுவத்தி கொடுக்கிறார். சாமுவேல் கடையில் சந்தனம் வாங்கிக் கொள்கிறாங்க.'

'அதுதான் சரி.'

இராமாமிர்தம் நகர்ந்தார். அவருக்கு வணக்கம் செலுத்தினர் பேசிய நபர்கள். பிரதான வாயிலைக் கடந்து உள்ளே வந்தார். அவருடைய தெருக்களில் இல்லாத புதுவிதமான அசங்கியங்கள் அவர் காலில் மிதிபட்டன. அத்தனையும் மார்க்கெட்டில் விலை போகாத எச்சங்கள்; மிச்சங்கள். எங்கும் ஈ மொய்க்கும் ஈரச் சதசதப்பு.

அவர் மனம், அடுத்த ஆண்டுக்குள் 'நீ இங்கே செமிட்டி பாவியாக வேண்டும்' என்று கட்டளையிட்டது. நகரமன்ற உறுப்பினர் மனம், சாதாரண மனிதனைக் கட்டளை இடுகிறது.

பலசரக்குக் கடை, தேங்காய்க் கடை பகுதிகள் சுத்தமான பகுதிகள்; மார்க்கெட்டுக்குள் நரகம் என்ற உரிமை கொண்டாடும் காய்கறி விற்பனைப் பகுதிக்குள், வித்துவின்றி விதை தெளிக்கலாம். சேறும் சகதியும் முட்டளவு ஆழம் காண்பிக்கும். இராமாமிர்தம் மனம் வழக்கம்போல் திட்டமிட்டது. அந்தப் பகுதியும் செமிட்டிக்குள் வந்தாக வேண்டும். செமிட்டி போடுவது பணமா? மனந்தானே. விஸ்தாரமாகப் போட்டது.

மேலே நகர்ந்தார். யாரோ ஒரு சில கடைக்காரர்கள் யந்திர கதியில் வணக்கம் செலுத்தினார்கள்; பதில் வணக்கம் போட்டுக்கொண்டு போனார். வாழைக்காய் விற்கும் பகுதிக்குள் வந்தபோது இரண்டு சோதாப் பயல்கள் பேசும் குரல் கேட்டது.

கடையிலே ஆள் இல்லையே, உள்ளே காரியமாக இருக்கிறுரா கடைக்காரர்?

'டேய் அந்தப்பக்கம் ஓடிப்போய் நில்லு'

'அணுவுக்கு எத்தனை வாழைக்காய் விற்பது?''

'மூன்றுகாய் விற்கலாம்'.

இராமாமிர்தம் மனதில் வாழைக்காய் மலிவாக விற்குமிடத்தைத் தெரிய ஆசை. எங்கும் அணுவிற்கு இரண்டு காய்க்குமேல் கிடைக்காதபோது மூன்று என்றுல் ஆசை பிறக்காதா? அவரும் ஆசைக்கு அடிமையான மனிதர்.

குனிந்து பார்த்தார். கடைக்குப் பின்னுல் நின்ற வாழைக்காய் ஏற்றிய பார வண்டியில் இரண்டு பயல்கள் காய் பிய்த்து, தூக்கிக் கட்டிய வேட்டியின் பின்பக்கம் போட்டுக் கொண்டிருந்தார்கள். அதாவது அவர்கள் பாரவண்டியில் திருடி, திருடிய காய்களை அணுவிற்கு மூன்று விற்கிறுர்கள். முதல் போடாத முதலாளிகள் என்பதை அறிந்தார்.

'சை திருட்டுப் பயல்கள்' என்று காறி உமிழ்ந்தார். இன்னும் கடைக்காரர் வெளியே வரக்காணும். அதனுல் அடுத்த கடைக்கு நகர்ந்தார்.

பின்பக்கமிருந்து சோதாக்களின் குரல் வந்தது.

'டேய் விற்கிற காசை எங்கே வைக்க? அந்தப் படுபாவி ரத்தினம் வந்தால் பிடுங்கிக் கொள்ளுவானே?'

'ஆமாடா விற்க விற்கக் காசைக் கொண்டுபோய் **காந்தி சிலை இருக்கிறதே அதன் வலது தோளில் வைத்துவிடு.** நான் வந்து சௌகரியம்போல எடுத்துக்கொள்ளுகிறேன் என்றுன் மற்றவன். இருப்பு முறம் நிறைய நெருப்பை அள்ளி இராமாமிர்தம் நெஞ்சைத் திறந்து கணகணவெனக் கொட்டியது போல இருந்தது. காந்திஜி சிலையின் வலது தோள், காத்திரஜ் பெட்டி; திருடும் சிறுவர்களுக்குப் பணப்பெட்டி காந்திஜி சிலையா? இராமாமிர்தம் திடுக்கிட்டுப் பார்க்கவும் இரு பயல்களும் ஓடிவிட்டார்கள். அவர்கள் வேட்டிக்கட்டு மடிப்போடு முழங்காலுக்கு மேலாக இருந்தது. பை போன்ற அதில் வாழைக்காய்கள் கனத்துக் கிடப்பது தெரிந்தது. நகர மன்ற உறுப்பினர் யோசித்தபடி நடந்தார். காய்கறி வாங்க வந்த காரியம் சிறிதாகப்பட்டது. அவர் நினைப்பு காந்திஜி சிலைமீது பதிந்தது.

அப்பக்கமாக வந்துகொண்டு இருந்தார். அழுக்குத் துணி கட்டிய சிறுவன் அந்தச் சிலைக்கு அருகாக வாழைக்காய் கடை போட்டிருந்தான். அத்தனையும் சிதறிய காய்கள் ஒன்றுகூட

சிப்பாக இல்லை. எதிர்க்கடையில் அமர்ந்து இராமாமிர்தம் பையன் வியாபாரத்தைக் கவனித்தார். அந்தப் பையன் கொண்டுவரும் காய்களுக்கு முன்கூட்டியே கிராக்கி நின்று கொண்டிருந்தது. அவன் வருகைக்காகப் பலர் காசும் கையுமாக நிற்கிறார்கள்.

பையன் ஐந்து விநாடிக்கு ஒருமுறை எழுந்துபோய் காந்திஜி சிலையைத் தொட்டுவிட்டு வந்தான்.

இராமாமிர்தத்திற்குச் சிரிக்கவா அழவா என்று தெரியவில்லை.

பத்து நிமிடம் சென்றதும் சாயவேட்டி கட்டிய முரட்டு உருவம் (ரௌடி ரத்தினம்) வந்து 'திருட்டுப் பயலே என்னடா வியாபாரம் ஆச்சுது?' என்று கேட்டபோது சின்னப் பையன் கையை விரித்தான். இன்னும் 'போணியே' ஆகவில்லையாம்.

பெரிய சோதாவிடம் பயந்து பொய் சொல்லுகிறான் என்பதை அறிந்துகொண்ட இராமாமிர்தம் இன்னும் சிறிது வேடிக்கை பார்க்க இருந்தார். ரௌடி ரத்தினம் போய்விட்ட பின்னர், சின்னப்பயல் ஒருவன் வந்தான். அவன் குரலைத்தான் கேட்டிருக்கிறாரே;

'பெரிய அண்ணே, ரத்தினம் வந்தார். 'ரப்பா' பேசினார்.'

'காசைப் பிடுங்கிப் போயிட்டுதா?', ஏக்கம் ஏற்றமாகத் துடித்தது.

'இல்லை காந்தி சிலையிலே வலது தோள்பக்கம் காசு இருக்குது. போய் எடுத்துக்கோ. நமக்கு இன்னிக்கு ராவுலே ஏக ஜல்சா, பிரியாணியும், சினிமாவும் மறந்துவிடாதே.'

'மறப்பேனா?' என்றபடியே வந்த பயல் காந்தி சிலையை நெருங்கினான்.

அவர் உள்ளம் கொதித்தது. காந்திஜியின் சிலை, இவர்கள் திருட்டுக்கு 'திருட்டுக்காய் விற்ற காசுக்கு இருப்புப் பெட்டியாகப் பயன்படவா? ஐயோ நகராட்சியில் கரடியாகக் கத்தி காந்தி சிலை வேண்டுமென்று அவர் கேட்டார்? கிளர்ச்சி செய்தார். பிரதிஷ்டை பண்ணினார்.

'சை முட்டாள்கள் நிறைந்த உலகம்' என்று கத்தினார் இராமாமிர்தம்.

'என்னங்க கௌன்சிலர் ஐயா திட்டுறீங்க?' என்றார் பல சரக்குக் கடை முதலாளி.

'பாருங்கள், திருட்டுப் பயல்கள், பொறுக்கிப் பயல்கள், வாழைக்காய் திருடி விற்ற காசை எங்கே ஒளித்து வைக்கிறுர் கள்' என்று காட்டினுர்.

'சின்னப் பயல்கள் அப்படித்தான் செய்வார்கள். வேறு என்ன செய்ய? லட்சம் லட்சமாகக் காந்திஜி பேரைச் சொல் லிப் பணத்தை ஒதுக்கிவிட்டு வசதியாக இருக்கிறவர்கள் நம் ஊரில் இல்லையா? இவங்க என்ன நாலணு எட்டணு பசங்கள். காந்திஜீ இலட்சியத்திற்கும் பயன்பட்டார் இரண்டணுவுக்கும் பயன்படுகிறுர்'.

அரசியல் வாடை அவர்கள் தர்க்கத்துள் இடம் பெற்றது. இருவரது காரசாரமான பேச்சு அரைமணி கட்டிப் புரண்டது.

'நீங்கள்' நல்ல எண்ணம் பரவ வேண்டும். காந்திஜீ சிலை யைக் கண்டால் அன்பு கருணையாகப் பெருகி ஆத்மீகம் பொது நலம் எழவேண்டும். இதற்காக நடுச் சந்தியில் மார்க்கெட்டு வழியில் நகரசபையாரைச் சிலை வைக்கச் சொன்னீங்க.'

'ஆமாம் இப்போது திருட்டுக்காகக் காசு ஒளித்து வைக்க அது பயன்படலாமா?'

'காலம் போகப் போக எந்தக் காரியமும் மாறுவது இப்படித் தான் மாறும். என்ன நோக்கத்தோடு, செய்யப்பட்டதோ அதற்கு மாறுன திசையில் கவிழ்ந்து விடுகிறது. நீங்கள் வைத்த காந்திஜீ சிலையாக இருப்பதால் உங்கள் மனம் நோகிறது. எங்களுக்கு இதுவெல்லாம் சகஜம்.'

அப்போதுதான் இரண்டணுவோ ஒரு அணுவோ கொண்டு போய் சிலையின் வலது தோள்பக்கம் பதுக்கினுன் சோதாப் பயல்.

'சை என்ன உலகம். புனித நோக்கத்திற்குக் காரண காரியம் அறியாத முட்டாள் உலகம்.'

அன்று அவர் வீசின கையும் வெறும் கையுமாக வீடு நோக்கி வந்தார். வருகிற வழியில் தாத்தா பிரதிஷ்டை செய்த பிள்ளை யார் கோவில் குறுக்கிட்டது.

பிள்ளையார் கோவிலை நோக்கிப் போனுர்: எந்தவிதமான ஒளிப்பும் மறைப்பும் இல்லாமல் பிரகாரம் சுற்றி வந்து சந்நிதியில் சாஷ்டாங்கமாக வெட்கம்விட்டு விழுந்து வணங்கினுர்.

'அப்பனே கணேசமூர்த்தி நல்ல நோக்கத்தோடு பிரதிஷ்டை செய்யப்பட்டவர். மான்முண்டி தர்மகர்த்தாவாக இருந்தால்

என்ன? என் முயற்சியால் நாட்டச் சொன்ன சிலையால் என் மனம் உண்மை அறிந்தது. நோக்கங்கள் மீது குறையில்லை : காலமும் அறிவற்ற மக்களும் கருணையற்றுக் கொடிய விலங்குகளாக மாறியிருக்கிறார்கள் ' என்று வணங்கினார்.

—○★○—

உமா குருமூர்த்தி

40

# ராஜியின் கணவன்

ராஜி எழுந்து வரும்போது மாதவன் பரணில் இருந்து எதையோ எடுக்கும் பணியில் ஈடுபட்டிருந்தான். காலை உதயத்தில், மணம் பரப்பி எழில் பொங்க மலரும் புத்தம் புது மலர் எனக் காட்சியளித்த அவளை அங்கிருந்தே கண்கொட்டாமல் பார்த்தான் அவன்.

''அதற்குள்ளாகவா எழுந்து விட்டீர்கள்? என்ன அவசரமாம்? எனக்கு முன்பே எழுந்து...''

நாணத்தின் பூச்சேறிய முகம் சற்றே சிணுங்கிற்று: ''அம்மாவும் நானும் அதிகாலை நாலு மணிக்கே எழுந்து விடும் பழக்கமுடையவர்கள் ராஜி!...''

''எழுந்து?...''

அவள் புருவங்கள் கேள்விக் குறியில் வளைந்தன.

''...காலைக்கடன் முடித்து, பிரார்த்தனை செய்வோம்.. அப்புறம் வீட்டு வேலைகள்..''

பூஜையறையின் நுழை வாயிலில் மாட்டப் பட்டிருந்த மகாத்மாவின் பெரிய படத்தில் மலர் மாலை, காலை இளங்காற்றில் இலேசாய் அசைந்தாடிற்று. உள்ளே சுடர் விட்ட ஐந்து முகக் குத்து விளக்கு; ஊதுபத்தியின் மணம்.

அப்போது தான் இவையனைத்தையும் கவனித்த அவள் முகத்தில் ஆச்சரியம்.

''ஆமாம். அதிகாலையில் அங்கே என்ன தேடும் படலம்?'' அவள் ஏணியைப் பற்றியபடி அவனை நிமிர்ந்து நோக்கினாள்.

''இதோ, இதைத் தான்!... காலை வேளையில் இதன் அவசியம் இப்போது தேவைப் படுகிறது...'' என்று கூறியபடியே அவன் நீட்டிய பொருளை எட்டி வாங்கினாள் ராஜி.

அவள் வியப்பு இரட்டிப்பாகி வினவாயிற்று.

''இப்போது தான் இதன் அவசியம் தேவைப் படுகிறதா?... அப்படியானால்.... இத்தனை நாளும்?....''

நாக்கில் துடித்த சொற்கள் நழுவி விழுந்தன.

''நாங்கள் காபி சாப்பிடுவதில்லை ராஜி!..''

அவன் சிரித்தபடியே கீழே இறங்கினான்.

''எனக்கு என்று எதையுமே தனியாகச் செய்ய வேண்டாம்... காபி இல்லையானால், ஓவலோ, போர்ன்வீடாவோ, காலையில் நீங்கள் சாப்பிடுவதையே நானும்....''

அவள் கூறி முடிப்பதற்குள் அவன் கண்ணாடிக் குப்பி உடைந்தாற்போல் சிரித்தான்.

''ஊஹூம்!.. அது மாட்டுப் பெண் நீ!.. நாங்கள் சாப்பிடுவதையெல்லாம் உனக்குத் தர முடியுமோ?... உனக்கு உன் வீட்டு வழக்கப்படி காபி தான்!...''

அவள் முகம் விழுந்து போயிற்று; அவன் குறும்பாய்ச் சிரித்தான்.

''என்னடா நீ?... புதிசு, பழசு என்று அவளுடன் வம்பு செய்கிறாய்... நீ தப்பாக எடுத்துக் கொண்டு விடாதேயம்மா ராஜி!.. அவன் அப்படித்தான். கேலியும் கிண்டலும் தான் முழு மூச்சு...''

அக்கணம், அங்கே பிரவேசித்த அவள் மாமியார் வாஞ்சையுடன் ராஜியை நோக்கினாள். அவளுக்கு வெட்கம் மிகுந்தது.

கணவரும் மாமியாரும் காலையிலேயே எழுந்து அலுவல்களில் ஈடுபட்டிருக்கையில், அவள் மட்டும் தாமதமாய் துயில் கலைந்து வந்தது அவளுக்கு என்னவோ போலிருந்தது. சிவந்த முகத்துடன் கையிலிருந்த பற்பசையையும் தூரிகையையும் கணவரிடம் நீட்டினாள் அவள்.

''எல்லாம் ஆயிற்று. நான் உபயோகிப்பது அதோ அந்த 'பிரஷ்' தான்!...''

மாதவன் சுட்டிய திசையில் கப்பும் கிளையுமாய் ஒரு பெரிய வேப்பமரம் காட்சியளித்தது.

''ஆலும் வேலும் பல்லுக்கு உறுதி!''

ஆரம்பப் பள்ளி மாணவனைப் போல அவன் நீட்டி முழக்கினான். புன்னகையில் அவள் கன்னம் குழிந்தது.

பல் தேய்த்து விட்டு சமயலறையில் நுழைந்த போது பரணிலிருந்து எடுத்த பில்டர், பளபளவெனத் துலக்கப்பட்டு, டிகாக்ஷன் நிரப்பப் பெற்றிருந்தது. காபியைக் கலந்து ஆவி பொங்க அவளிடம் கொடுத்தாள் மாமியார்.

''இன்றைக்குத் தூங்கிப் போய் விட்டேன். நாளை முதல் சீக்கிரமே எழுந்து, காபிக் கொட்டை அரைத்து வைக்கிறேன்...'' என்றாள் ராஜி.

''காபிக் கொட்டை அரைக்கப் போகிறாயா?...''

கனகம்மா மெல்லச் சிரித்தாள். ''...இனிமேல் தான் நம் வீட்டில் கைமெஷினும், ரோலரும் வாங்க வேணும் ராஜி. இது கடைப் பொடிதான். டவுனுக்குப் போய் மாதவனை காபிக் கொட்டையும் மெஷினும் வாங்கி வரச் சொல்கிறேன்...'' கனகம்மா கபடற்றுப் பேசினாள்.

கடைப் பொடியா?!.

ராஜிக்கு வயிற்றைப் புரட்டியது.

ஊரில், அவள் அம்மா உயர்ந்த ரக பீபரிக் கொட்டை வாங்கி, பொன் போல் ரோலரில் வறுத்து, அவ்வப்போது காலையில் மெஷினில் போட்டு அரைத்து, மணக்க மணக்கக் காபி போடுவாள். தொட்டால் ஒட்டிக் கொள்ளும் போலிருக்கும் அந்தக் காபியின் மணமே அலாதி தான். அந்த மணம் நாசியில் எட்டியபின்தான் அவள், படுக்கையிலிருந்து எழுவாள்.

இங்கே?...

அவளுக்கு மட்டும் தான் அந்த 'திரவம்'...

வேண்டா வெறுப்பாக அவள் காபியைக் குடித்து முடிப்பதற்குள் மாதவன் குளித்து விட்டு வந்தான். திருநீறு துலங்க, துல்லியமான ஆடைகளுடன் அவனைக் கண்ட போது அவள் திகைத்துப் போனாள். அவள் இன்னும் 'பாய்லர்' போடவில்லையே!

அடுத்து மாதவன் செய்த காரியம் அவளுக்கு மேலும் அதிர்ச்சி தருவதாயிருந்தது.

வெள்ளித் தட்டத்தில் பழையமுதைப் பிழிந்து வைத்து, ஆடைத் தயிரை ஊற்றினுள் கனகம்மா. விரலிடுக்கில் தயிர்ப் பசை நூலாய் வழிய 'கமகம' வென கடாரங்காய் மணத்துடன் உணவை ருசித்துச் சாப்பிட்டவனுய் ராஜியைப் பார்த்து விஷமமாய்க் கண் சிமிட்டினுன் மாதவன்.

'' புது மாட்டுப் பெண் நீ! நாங்கள் சாப்பிடுவதையெல்லாம் உனக்குத் தர முடியுமோ?... ''

உதடுகளில் சப்தமற்ற சிரிப்பு வழிய சன்னக் குரலில் கூறினுன் அவன்.

ஆம். ராஜியின் வீட்டில் அஞ்சலே கூட தண்ணீர் விட்ட சாதத்தை விலக்கிச் சுடுசோறு தான் கேட்பாள்.

இங்கே—

எல்லாம் அவளுக்குப் புதுமையாக இருந்தது. அவளுக்காகத் தான் குளிக்க வெந்நீர் போடப் பட்டது. அவளுக்கு என்று பிரத்யேகமாய் 'டிபன்' செய்தோ, வாங்கியோ தரப் பட்டது.

'பெரிய இடத்துப் பெண். நேற்றுத் தான் இங்கு வந்திருக்கிருள்... நம் வழக்கம் அவளுக்குப் பிடிபடும் வரை அவர்கள் வீட்டில் நடப்பது போல், செய்து விட்டோமானுல், புகுந்த இடம் அவளுக்குச் சிரமம் தராது, என்று கனகம்மா மருமகளுக்குப் பிரத்யேக சலுகைகள் அளித்து எதையும் பார்த்துப் பார்த்துச் செய்து வைத்தாள்.

ஆயினும் ராஜிக்குப் புக்ககத்துப் பழக்க வழக்கங்கள் புதுமையாக இருந்தன. அதிகாலேயிலேயே எழுந்து விடுவதும் அலுப்புச் சலிப்பில்லாமல் உழைப்பதும், ஏழைமையில்லாதிருந்தும் எளிய வாழ்வு வாழ்வதும், தேவைகளேக் குறுக்கிக் கொள்வதும்...

அடுத்தாற் போல், ஆறு மாதங்களுக்கு முன் மணமான அவள் அக்காவின் வீட்டில் அவள் எப்படியிருக்கிருள்! அப்படி ஒன்றும் 'ஓகோ' என்று உயர்த்தியான குடும்பமும் இல்லே; வேலேயும் இல்லே. அத்திம்பேருக்கும் அவர் அப்பாவுக்குமாகச் சேர்த்து ஐநூறு ரூபாய் வருகிறது. உடுத்திய உடை நலுங்காமல், கிடைத்த கௌரவத்தை விடாமல், நாலுபேரை அதிகாரம் பண்ணிக்கொண்டு நாகரீகமாக வாழ்கிருர்கள்.

இந்தக் காலத்திலும் இப்படி உழைப்பவர்களே ராஜி இங்கு தான் இந்த வீட்டில் தான் பார்க்கிருள்.

விடியற்காலேயில் எழுகை; தொழுகை; பின்னர் தொழுவத்தில் மாடுகள் பராமரிப்பு, தோட்டவேலே, வேலேக்காரர்களே

விசாரிப்பு...இப்படி ஒன்பது மணிக்குள் ஓயாத வேலைகள்: நியமம் தவறாமல் காரியங்களை நடத்தி விட்டு உரிய நேரத்தில் பள்ளிக்குச் சென்று விடுவான் மாதவன். உள்ளூரிலேயே உயர் நிலைப்பள்ளி யொன்றில் தலைமையாசிரியராய் இருந்தான் அவன்: பாதி நாட்கள் பக்கத்துக் கிராமத்தில் நூற்புயக்ஞம், சேரியில் காரியம் என்று வெளி வேலைகள் வேறு.

மாதவன் தான் இப்படி என்றால் கனகம்மாவோ?...மாடும் கன்றும் வீடும் வாசலும் வேலைகள் கொள்ளை கொள்ளையாய்க் காத்திருக்கையில் இந்தத் தள்ளாத வயதிலும் வேலைக்கு ஆளின்றி எப்படித்தான் சமாளிக்க முடிகிறதோ?

ராஜியின் பிறந்தகத்தில், அஞ்சலை ஒருவேளை வரவில்லை என்றால் வீடு அல்லோலகல்லோலப்படும். ஆங்காங்கே தோய்க் கப்படாத துணிகள்; தேய்க்கப்படாத பாத்திரங்கள்: வழ வழக்கும் சிமெண்டுத் தரையில் அடியடியாய்த் தூசிகள்: வீடு ஒரே களேபரம் தான்!

ராஜியின் அப்பா ஒரு உயர்தர உத்தியோகஸ்தர். அந்த அந்தஸ்துக்குத் தக்கபடி தானே அவர் குடும்பத்தார் சமூகத்தில் நடமாட வேண்டியிருக்கிறது! அவர்களுடைய தகுதிக்கு, வீட்டில் சமையலுக்கு ஆள் இல்லை என்றாலே நாலுபேர் நகைப் பார்கள். அப்படியிருக்க அஞ்சலையின் வேலையை அவர்களால் எப்படிச் செய்ய முடியும்?

பிறந்தகத்தில் ராஜி காலை ஏழு மணிக்கு மேல் தான் எழுவாள். எழுந்து காலைக் கடன் முடித்து, காபி அருந்திய பின், ஏதாவது படித்துப் பொழுது போக்குவாள். ஒன்பது மணிக்குச் சாப்பாடு. மதியம் 2 மணிக்கு காபி, டிபன். தினமும் ஏதாவது ஸ்வீட்; பூரி தோசை, பஜ்ஜி என்று இரட்டை டிபன். மாலை ஐந்து மணிக்கு டீயுடன் ஏதாவது பழங்கள். இரவு எட்டரைக்கு உணவு.

அப்பாவுக்கும் குழந்தைகளுக்கும் விடுமுறை நாளானால் கேட்கவே வேண்டாம். சினிமா, டிராமா, கடற்கரை என்று ஊர் சுற்றிவிட்டு வீடு திரும்பினால், படுக்கப் பத்தரைக்கு மேலாகிவிடும்.

ஆனால்...

இங்கேயோ?...

பழையமுதை 'அமுதாய்' பாவித்துச் சாப்பிட்டு விட்டு 'மங்கு மங்கு' என்று உழைக்கிறார்கள் இவர்கள்! அவளால் அப்படி இருக்க முடியுமா?...

ஆனால் யாரும் அவளை எதற்குமே கட்டாயப் படுத்த வில்லை! ராஜிக்குத் தான் தனக்கு மட்டும் அளிக்கப்படும் சலுகை சஞ்சலத்தைத் தந்தது.

* * *

மாதவனை ராஜிக்குக் கணவனாகத் தேர்ந்தெடுக்கையில், அவள் அப்பாவிற்குச் சிறிது தயக்கம் தான். பட்டணவாசத்தில் அருமை பெருமையாய் வளர்ந்த பெண், கிராமத்து ஆசிரியருக்கு வாழ்க்கைப் பட்டு வசதியான வாழ்க்கையை அமைத்துக் கொள்ள முடியுமா என அவர் யோசிக்கவே செய்தார். ஆனால் மாதவன், அளவற்ற ஆஸ்திகளுக்கு ஒரே வாரிசு என்பதை அறிந்த போது அவர் மனம் ஆறுதல் அடைந்தது. மாதவனின் அழகு மிக்க தோற்றம் ராஜியைப் பெரிதும் கவர்ந்தது. ராஜியின் தாய்க்கு, கனகம்மாவின் களங்கமற்ற சுபாவம் மிகவும் பிடித்தது. இவையெல்லாவற்றையும் விட ராஜிக்கு அங்கே 'முடி' போட்டிருந்தது. கல்லூரிப் படிப்பை உதறி விட்டு, பள்ளி ஆசிரியரைக் கைப் பிடித்தாள் ராஜி.

விடுமுறை நாட்களில் கணவருடன் பக்கத்து டவுனுக்கு சினிமா பார்க்கப் போக அவள் உள்ளத்தில் ஆவல் துடிக்கும். ஆனால் அந்தத் தினங்களில் எல்லாம் மாதவனுக்குக் கொள்ளை அலுவல்கள் குவிந்து கிடக்கும்.

கொல்லையில் நந்தவனமும், சுந்தரக் காடுமாகத் தோட்டம் பாழ்போகிறதே! 'கொத்து' 'வெட்டு' என்று பாத்தியில் இறங்கி விடுவான். மாட்டைக் குளிப்பாட்டி மஞ்சள் குங்குமம் பூசி, கொட்டில் கழுவி...

வாசலில் பள்ளிச் சேவகன் காத்திருப்பான். ஏதாவது ஒரு மாணவனின் பெற்றோர், உதவி ஆசிரியர்களில் இரண்டொருவர்...ஊர்ப் பிரமுகர்கள் சிலர்...

இப்படி எவராவது மாதவனின் பேட்டிக்காகத் திண்ணையில் காத்திருக்கையிலும் கூட, கலைந்த கிராப்பும், வியர்வை வழியும் முகமுமாய், தட்டுச் சுற்றாகக் கட்டியிருந்த வேட்டியும் பனியனுமாய் மாதவன் அவர்களுக்குப் பேட்டி தருவான்.

''...தோட்ட வேலையில் ஈடுபட்டிருந்தீர்கள் போலிருக்கு! என்னிடம் சொல்லியிருந்தால் வகுப்புப் பையன்களில் சில பேரை அனுப்பியிருப்பேனே?...'' என்பார் ஒரு ஆசிரியர்.

''...நான் இங்கனே தானே அரைமணியா நின்னுக்கிட்டு இருக்கேன்...ஒரு குரல் கொடுத்தா ஓடிப்போய் செய்துடமாட்டேன்?'' என்பான் சேவகன்.

ராஜிக்கு அவமானம் உடலை அனலாய்த் தகிக்கும். தனக்காக இல்லாவிட்டாலும், பிறருக்காகவாவது சுயமதிப்பைப் பாராட்ட வேண்டாமா?

தன் அந்தரங்கத்தைத் தனிமையில் அவள் மாதவனிடம் சொற்களாய் வடிப்பாள்.

''எது அகௌரவம் ராஜி? நம் வேலையை நாமே செய்து கொள்வது மதிப்புக் குறைச்சலா?...அல்லது எதற்கும் பிறர் கையை எதிர்பார்ப்பதா?...''

அவன் அவளை மௌனியாக்கி விட்டு, பாத்திக்கு நீர் பாய்ச்சப் புறப்பட்டு விடுவான்.

அபூர்வ மனிதர்கள்!

உணவில் தான் எளிமை என்றால், உடையிலும் கூட அதே எளிமை. தேவைக்கு அதிகமான எந்தப் பொருளும் வீட்டில் இடம் பெறாது. முப்பது வயது இளைஞன் மாதவன்; புது மணம் புரிந்து கொண்டவன். உல்லாச வாழ்விலும், சல்லாப நோக்கிலும் விதம் விதமாய் உடையணிவதிலும் ஆசை இராதோ?

* * *

அன்று...

பிறந்தகத்திலிருந்து வந்த செய்தியுடன் ஆவல் பொங்க மாதவனிடம் ஓடினாள் ராஜி.

'' என்ன ராஜி? ''

'' நாளைக்கு அண்ணா வருகிறானாம்! ...''

'' எனக்கும் கடிதம் வந்தது...''

'' அத்திம்பேரும் கூட வருகிறாராம்!...''

'' அவரும் கூட எழுதியிருக்கிறார்...வரவேற்க ஆவன செய்யப்படும்...''

'' ...அது சரி!...நாளைக்கு ஒரு நாள் மட்டும் நீங்கள்...அவள் பார்வை கெஞ்சிற்று''.

'' ...வேட்டி, ஜிப்பாவை விடுத்து, உன் அத்திம்பேரைப் போல் 'பான்ட்' போட வேண்டுமாக்கும்!...''

'' அது இயலாதது என்று எனக்குத் தெரியும்...உங்களிடம் தான் அப்படிப்பட்ட உடையே இல்லையே?...''

‘‘...பின்னே?...’’

‘‘...நாளைக்கு ஒரு நாள் மட்டும் நீங்கள் காலையில்...அவள் பார்வை தயக்கத்துடன் அவனை நோக்கி இறைஞ்சிற்று. அவனுக்குப் புரிந்தது. அவள் கரத்தைப் பற்றித் தன் மார்புடன் அணைத்துக் கொண்டான் அவன்.

‘‘அசடு...இது அகௌரவம் என்று நினைக்கிறாய்?...உடலுக்கு நல்லதைச் செய்யும் உணவும், உள்ளத்துக்கு நன்மை பயக்கும் செயலும் எதுவாயிருந்தாலும் கேவலமில்லை. உழைப்பது கேவலம் என்றால், உலகம் தழைப்பதுவும் சாத்தியப் படாது; உயரிய கலைகளும் கட்டடங்களும் கூட உருவாக முடியாது; சதுப்பு நிலங்களைக் கூட விளைவிக்கும் தனிப் புகழ் கொண்டது உழைப்பு; காடுகளையும் மேடுகளையும் கூட மாட மாளிகை களாகச் செய்யும் சக்தியுடையது உழைப்பு. வளமார்ந்த சமுதாயத்துக்கு அஸ்திவாரம் இளமையின் சலியா உழைப்புத் தான்?...’’

அவன் ஒரு குட்டிப் பிரசங்கமே செய்து முடித்தான். அதற்கு மேல் அவளுக்குப் பேச என்ன இருக்கிறது?

‘ஆனாலும் கஞ்சப்பிரபுவடி ராஜி உன் கணவர்’ என்று அண்ணு கேலி செய்யத் தான் போகிறான்; அத்திம்பேர் இளக் காரமாய்ப் பார்வையை வெளியிடுவார்.

அவளுக்கு ஊமை கண்ட கனவாய் வேதனை அரித்தது. அந்த நாளும் வந்தது; அவள் பயந்தது உண்மையாயிற்று.

* * *

அண்ணு சிரித்தபடியே அவள் எதிரில் வந்து அமர்ந்தான். ஆம்; ராஜியைப் பார்க்க வந்தவன் அப்படியே அவளை ‘மறு வீடு’ அழைத்து வந்திருந்தான். சில மாதங்களே ஆயினும் ராஜியின் பிரிவு அவர்களை மிகவும் பாதித்திருக்க வேண்டும். அப்பா மெலிந்து காணப்பட்டார்; அம்மா கூடச் சோர்ந்திருக் கிறாளே!

குழந்தைகளும் அப்பாவும் அவளைக் கண்டதும் அன்புடன் சூழ்ந்து கொண்டு விட்டார்கள். அம்மாவுக்கு எதிலும் ஒரு நிதானம். உணர்ச்சிகளை உண்டாக்கி, அன்பை ஆசை பொங்கும் பார்வையால் மட்டுமே வெளிப்படுத்தும் சாமர்த்தியம் அம்மா வின் தனித்துவம்.

‘‘அம்மா! விஷயம் தெரியுமோ உனக்கு? ராஜியின் வீட் டில் இந்தக் கண்ட கண்ட பானங்களையெல்லாம் கையால் கூடத்

தொடுவது இல்லை. ராஜிக்கு மட்டும் தான் ஸ்பெஷலாய் காபி போடுகிறார்கள்.''

அம்மா வியப்பால் விழிகள் விரிய ராஜியை நோக்கினாள்:

''மாப்பிள்ளை?''

''அவரா? இந்தியன் காபி!''

அம்மா திகைத்தாள்.

''ஆடைத்தயிரும், நீர் விட்ட சாதமுமாய்...''

அண்ணா விளக்க ஆரம்பித்தான். ராஜிக்குத் துக்கமும் அவமானமும் பொங்கியது.

''காபி சாப்பிட்டால் அவர் உடம்புக்கு ஒத்துக் கொள்ளவில்லை...'' அவள் படபடத்தாள்.

''பலே! நீயும் பெரிய ஆளாகி விட்டாய் ராஜி! சரி, காபி வேண்டாம். ஓவல், ஹார்லிக்ஸ் என்று ஏதாவது குடிக்கக் கூடாதோ? பணமா இல்லை? சிக்கனம் தாயே! சிக்கனம். படிபடியாக மாடு கறக்கிறது. பாலை மட்டுமா விற்கிறார்கள். சாணத்தைக் கூட அல்லவா காசாக்கி விடுகிறார்கள்!...''

''சிக்கனமும் சேமிப்பும் நல்லதுதானே அண்ணா!''

ராஜியும் விடவில்லை.

''காதறுந்த ஊசியும் வாராது காண் கடைவழிக்கே! உள்ள வரை அனுபவிக்க வேண்டும். ஏதோ புதிதாய் வந்தவள் ஆயிற்றே என்று உனக்கு மட்டும் இப்போது சலுகையளிக்கிறார்கள். இன்னும் கொஞ்சநாள் ஆனால்...''

''நானே அவர்கள் வழியில் சென்று விடுவேன்!''

இடைமறித்த ராஜியின் குரலில் ரோசம்.

காபி அருந்தி விட்டு ஹாலில் சென்று ரேடியோவின் முன் அமர்ந்தாள் ராஜி. அவள் மனம் நிம்மதியின்றித் தவித்தது.

முதன் முதலாகப் புக்ககம் சென்று திரும்பியிருக்கும் பெண்ணை அப்பா முதல் அனைவரும் அன்புடன் விழுந்து விழுந்து உபசரித்தார்கள். வந்த சில நாட்களுக்கு அதைப்பற்றி ராஜி பெருமிதமும் இன்பமும் கொண்டாள்.

ஆனால்... நாளடைவில்

ஒவ்வொரு செயலின் போதும் அவள் புக்ககம் சிறுமைப் படுத்தப் படுவதாய் ராஜி நாளடைவில் உணர்ந்து கொண்டாள். பற்பல பண்டங்கள் அவளுக்கு வழங்கப் படுகையில்,

''ராஜிக்கு முதலில் கொடு! அங்கே போனுல் அவளுக்குக் கிடைக்காது!'' என்று அப்பா, அண்ணு இவர்களிடமிருந்து, இவ்வித சொற்களுடன் கலந்து தான் கிடைத்தன.

''காபியை அதிகம் கொடுத்துப் பழக்கப் படுத்தி விடாதே அம்மா! அப்புறம் அக்கா அங்கே போனுல் திண்டாடப் போகிருள்!...'' என்பான் தம்பி.

ராஜிக்கு அழுகை குமுறிக் கொண்டு வரும்.

இங்கே, அவள் அனுபவிக்கும் ஒவ்வொரு சுகபோகமும் அவள் புகுந்த இடத்துக்குச் சிறுமையளிப்பதாக இருக்கையில் அவள் மட்டும் அவற்றை அனுபவிப்பதில் என்ன அர்த்தம் இருக்கிறது!

ராஜிக்குப் பிறந்தகத்தில் காபி கசந்தது! இனிப்புப் பண்டங்கள் கேலிச் சொற்களின் பின்னணியில் நாவிலும் மனதிலும் உறைத்தன. இருபது வருடங்களுக்கு மேலாகத் தனிச் சலுகையுடன் செல்வத்திலும் செல்லத்திலும் திளைத்த பிறந்தகம் திடீரென்று முள்ளாய் உறுத்திற்று. உடனடியாகப் புக்ககம் போகத் துடித்தாள் அவள்.

ஆனுல் திடீரென்று அத்திம்பேருக்கு உடல் நலமில்லை என்று செய்தி வந்து அப்பா பட்டணம் புறப்பட்டுப் போனுர். அவர் வந்ததும் போகலாம் என்றிருந்தாள் ராஜி.

''நான் வந்ததும் போகலாம் ராஜி! உன் உடம்பு இளைத்துக் கறுத்து விட்டது. நல்ல 'ரெஸ்ட்' எடுத்துக் கொண்டு போகலாம். போகும்போது நல்ல வேலைக்காரியாகப் பார்த்துக் கூடவே அழைத்துக்கொண்டு போ!

அனல் வீச்சுக்களாய் அப்பாவின் சொற்கள் ராஜியின் நெஞ்சில் சுட்டன.

தனிமையில் அம்மாவிடம், மனம் வெதும்பி, வெடித்துத் தீர்த்தாள்:

''அங்கே அவர்களுக்கு வசதியில்லாததாலா ஆள் வைத்துக் கொள்ளவில்லை, அம்மா! போலி கௌரவத்துக்கு அடி பணிவதால் வீண் செலவுகள் தாம் மிஞ்சும் என்பதை அறிந்து உழைப்பின் உன்னதத்தை உணர்ந்தவர்கள் அவர்கள். வயதையோ, மதிப்பையோ பாராட்டாமல் வளம் பெற உழைத்து, காந்தியடிகளின் அடிச்சுவட்டைப் பின்பற்றுபவர்கள். சுதந்திர பாரத நாட்டின் சீரிய வளர்ச்சிக்குச் சிக்கனமும், சிறு தொழிலும் சிறந்ததொரு சாதனங்கள் என்பதைக் கண்டவர்கள். தோட்ட

வேலையில் ஈடுபட்டு, காய்கறி, மற்ற உற்பத்தியைப் பெருக்கு வதிலும் மாட்டுப் பண்ணையைப் பேணி, மதலைகளுக்குப் பால் தந்து ஆதரிப்பதும் தான் அவர்களுக்குப் பெருமை.

அங்கே யாரும் என்னை அவர்களுடைய கட்டுப்பாட்டுக்கு அடங்கி வரவேண்டும் என்று வற்புறுத்தவில்லை. நானே தான் மனமுவந்து அந்தச் சூழ்நிலைக்கு என்னைப் பழக்கப் படுத்திக் கொள்கிறேன்; உண்மையில், இப்போதெல்லாம் உல்லாச வாழ்வை வெறுத்து எளிய வாழ்வில் தான் இன்பம் காண்கி றேன். சோம்பேறியாக எதற்கும் பிறர் கையை எதிர்பார்ப் பதை விடுத்து 'சுயதேவைப் பூர்த்தி' செய்து கொள்வதைப் பெரிதும் வரவேற்கிறேன்.

முதல் தடவையாக இப்போது இங்கே வந்திருப்பதால் உங்களுக்கு மன வருத்தம் ஏற்படக் கூடாதே என்பதற்காக இங்கு காபி குடிக்கிறேன். கை கால் கூட அழுக்குப் படாமல் சோபாவில் சாய்ந்திருக்கிறேன். இங்கே அனுபவிக்கும் ராஜ போகத்தை விட அங்கே அவர்களுடன் சேர்ந்து உழைக்கும் எளிய சேவையே எனக்கு நிறைவைத் தருகிறது...''

''பலே ராஜி! பிரசங்கமே செய்து விட்டாயே?'' அம்மா! உன் அருமை மகள் சொல்லுவதைக் கேட்டாயா!'' அங்கு போய் இன்னும் முழுசாய் மூன்று மாதமாகவில்லை! ''உத்தர விடுங்கள் அம்மணி! ஒரே நொடியில் நம் வீட்டுத் தோட் டத்தை...''

அண்ணு போலிப் பயத்துடன் கை கட்டி வாய்பொத்தி நின்றான். இதற்குள் செய்திப் பத்திரிகையுந் தானுமாய் அம்பி ஓடி வந்தான்.

''அக்கா! அத்திம்பேரின் தோட்டத்திற்குச் சர்க்காரில் முதல் பரிசு கிடைத்திருக்கிறது! அடுத்தவாரம் அங்கேயே வைத்துப் பரிசளிப்பு விழாவாம்!''

இன்ப அலைகள் நுரைத்துப் பொங்கி ராஜியின் இதயக் கடலின் கரையில் ஒதுங்கின. பெருமிதத்துடன் தமையனைப் பார்த்தாள்.

மறுநாளே அப்பா வந்துவிட்டார்.

''எடை குறைய வேண்டும்...எளிமையான உணவு வேண்டும் என்று டாக்டர் கூறுகிறார். மூத்த மாப்பிள்ளைக்கு வயிற்றில் ஏதோ கோளாறும். தினமும் காலையில் தோட்டத்துப் புல் வெளியில் படிந்திருக்கும் பனித்துளியில் அவரே தினமும் எழுந்து சென்று ஒரு அவுன்ஸ் சேகரித்துச் சாப்பிடச் சொல்லுகிறாராம்.

பட்டண வாசத்தில் தோட்டத்திற்கு எங்கே போவது? ராஜியின் வீட்டுக்குத்தான் போக வேண்டும் என்று கீதா சொல்லுகிருள். அவள் ஊருக்குப் போவதற்குள் அவளைக் கேட்டுத் தகவல் எழுதும்படி சொல்லியனுப்பினுள்...'' என்று செய்தி கொண்டு வந்தார் அவர்.

''இதற்கு என்னைக் கேட்க வேண்டுமா, அப்பா? கூடவே அழைத்து வந்திருக்கலாமே நீங்கள்! எங்கள் தோட்டத்து வேப்பமரக் காற்று பட்டாலே வியாதியெல்லாம் பறந்தோடி விடும். மேலும் தோட்டத்துப் புல் வெளியின் பனித்துளியைச் சேகரித்து ஏன் சாப்பிடச் சொல்லியிருக்கிருர் என்று யோசித்துப் பார்த்தீர்களா? தினமும் காலையில் எழுந்து தானே தோட்டத்திற்குச் சென்று புல் வெளியில் உட்கார்ந்து எழுந்து சேகரிப்பது ஒரு 'எக்ஸர்ஸைஸ்' போல. நியமமாய் உழைக்க வில்லையானுல் இப்படி ஏதாவது உழைப்பில் ஈடுபட்டுத்தான் உடல் நலனைப் பேண வேண்டியிருக்கிறது!''

ராஜியின் மதிநுட்பத்தைக் கண்டு வியந்தார் அப்பா.

அண்ணுவின் மூலம் பரிசுச் செய்தியைக் கேட்ட அவர் மகிழ்ச்சி இரட்டை மடங்காயிற்று.

''ரைட்டோ, ராஜி? பரிசளிப்பு விழாவுக்கு எல்லோரும் வந்து விடுகிருேம். கீதாவையும், மாப்பிள்ளையையும் அழைத்து வரும்படி அண்ணுவை நாளைக்கே அனுப்புகிறேன்'' என்ருர்.

பட்டம் பெற்ற ஆசைமகள் பட்டிக் காட்டில், பாட்டாளியாய் உழைத்து, கட்டுப் பெட்டியாய் வாழ்கிருளே என்று இப்போது அவர்கள் வருந்தவில்லை. குடும்ப நிர்வாகத்தில் அடங்கி, உழைப்பின் உயர்வை உணர்ந்து இலட்சிய வாழ்வு வாழும் அவர்களைக் கண்டு மகிழ்வும் நிறைவும் கொண்டார்கள்.



புலவர் நாகசண்முகம்

41

# அடிச்சுவடு

கரிய பெரிய மனிதனுடைய வெள்ளைப் பற்களைப் போல, இருண்டு கிடந்த வானத்தில் ஒளிக்கீற்றுகள் மின்னிக் கொண்டிருந்தன.

இங்கொன்றும் அங்கொன்றுமாக விழத் தொடங்கிய மழைத் துளிகள் அந்தப் பேரொளியில் வைர நெடுங்கம்பிகள் போலக் காட்சி தந்து கொண்டிருந்தன.

அந்த ஒளிக்கற்றைகளுக்கு முன்னே, பொன்னியூர்த் தெருக்களில் மின்னிக் கொண்டிருந்த தெரு விளக்குகள் வலுவிழந்து காணப்பட்டன.

மற்றொரு முறை வானம் மின்னிச் சிரித்தபோது அந்தப் பெருஞ் சிரிப்பைக் கண்டு அஞ்சியது போல் மின்சாரம் தன் ஆற்றலை இழக்கவே தெருவிளக்குகள் அணைந்தன.

பொன்னியூர் இருள் அரக்கனின் கோரப்பிடியில் சிக்குண்டு விட்டதோ, என்று எண்ணும்படியாக அந்த ஊரை இருள் சூழ்ந்து கொண்டது.

மழை ‘‘சோ’’வெனப் பெய்யத் தொடங்கியது.

இந்த நிலையில் விலை உயர்ந்த பெரிய கார் ஒன்று பொன்னியூர்த் தெருக்களின் ஊடே மண்டிக்கிடந்த, இருளைக் கிழித்துக் கொண்டு ஊரின் தென்புறத்தே உள்ள மூன்று மாடிக் கட்டிடத்தை நோக்கிச் சென்றுகொண்டிருந்தது:

‘‘பல நாட்களாக நான் கோடை வெய்யிலில் காய்ந்தேன் ஒரு நாளாவது கொட்டும் மழையில் நான் நனைந்து மகிழ

வேண்டாமா ?'' என்று கேட்பது போல அந்த விலே உயர்ந்த கார் மூன்று மாடிக் கட்டிடத்தின் அருகில் வந்ததும் நின்று விட்டது.

அதை ஓட்டிக்கொண்டு வந்த இளைஞன் என்ன முயன்றும் காரை இயக்கும் முயற்சியில் வெற்றி பெறவில்லை. எனவே காரைவிட்டு இறங்கிப் பங்களாவை நோக்கி அவன் நடக்கத் தொடங்கினுன்.

உள்ளபடியே தள்ளாடும் நிலேயில் இருந்த அவனே கொட்டிக் கொண்டிருந்த மழை வேறு தள்ளாடச் செய்தது.

எப்படியோ பங்களாவின் வெளிக் கதவுகளே அவன் அடைந்து விட்டான். இரவு மணி ஒன்பதாகியும் அவன் வரவிற்காக அந்தக் கதவுகள் பூட்டப்படாமலிருந்தன. கார் எப்போது வரும் என்று எதிர்பார்த்தபடியே காவற்காரன் அவனுக்காக உருவாக்கப்பட்டிருந்த மரப் பெட்டியின் உள்ளே உட்கார்ந் திருந்தான். அதனுல் அவனுடைய முதலாளியான அந்த இளேஞன் வந்ததை அவன் கவனிக்கவில்லே.

தள்ளாடியபடியே பங்களாவை நோக்கி நடந்து கொண் டிருந்த அந்த இளம் முதலாளி பங்களா முற்றத்தை அடைவ தற்கு முன்னுல் இருந்த சிறிய வீட்டின் அருகில் சென்றதும் நின்ருன்.

அந்த வீட்டில் வாழ்ந்து கொண்டிருந்த கண்ணனும் அவன் மனேவி கமலாவும் பேசிய வார்த்தைகள் அவனே நிற்கும்படி செய்தன.

'' மணி என்னங்க ஆகுது ?''

'' ஒன்பது ஆகுது ''

'' இன்னம் அந்தப் பாவி மனுஷனேக் காணுமே ''

'' நீயே பாவி மனுஷன்னு உண்மையைச் சொல்லிட்டியே அப்படிப்பட்ட ஆளுக்கு நேரமும் காலமும் ஏது கமலம் !...''

'' இந்த இருட்டிலே மைதிலி கைக்குழந்தையோடே எப்படிக் கவலேப் பட்டுகிட்டிருக்காங்களோ ''

'' தெய்வமா இருக்க வேண்டிய கணவனே தெருவிற்கு வந்த பின்னுலே நாமெல்லாம் என்னதான் உதவி செஞ்சுட முடியும். அந்த அம்மாவுக்குத் தெய்வம்தான் இனித் துணே.''

இலேசாகத் திறந்திருந்த ஜன்னல் வழியே அந்த இளேஞன் உள்ளே பார்த்தான். தன்னேக் குறைத்துக் கொள்வதன் மூலம் அந்தத் தம்பதிகளுக்கு மத்தியில் இருந்த மெழுகுவர்த்தி ஒன்று

சிறிய அளவில் ஒளி தந்து கொண்டிருந்தது. அந்த ஒளியில்கூட கண்ணன், கமலம் இருவர் கண்களிலும் கலங்கி நின்ற நீர்த் திவலைகள் பளிச்சென்று தெரிந்தன. சுடரின் சூட்டால் உருகிக் கொண்டிருந்த மெழுகுவர்த்திகூட அவர்கள் கூறிய மைதிலிக் காகக் கண்ணீர் சிந்துவது போல அவனுக்குத் தோன்றியது.

உணர்வுகள் மங்கிக்கிடந்த அந்த இளைஞனின் உள்ளத்தில் இந்தக் காட்சிகள் சுரீர் என்று தைத்தன. சவுக்கடிக்கு ஆளான நிலையை அவன் அடைந்தான்.

அவன் யார்?

* * *

பொன்னியூர் ஒரு சிறு கிராமம்! இது பழைய கதை. இன்று, அது ஓர் அழகிய சிறு நகரம்.

தாலூகா அலுவலகங்கள், கால் நடைப் பராமரிப்பு நிலையம், கோழி வளர்ப்புப் பண்ணை, குடும்பக் கட்டுப்பாட்டு நிலையம், ஆண், பெண்களுக்குத் தனித் தனியே விளங்கும் உயர்நிலைப் பள்ளிகள், காந்தி மகான் பெயரால் விளங்கும் மாபெரும் சேவை அரங்கம், அதன் உள்ளே விளங்கும் பல தொழிற் பிரிவு கள், மாபெரும் நூல் நிலையம்—முதலியன அது ஒரு நகரம் தான் என்பதை நிலைநாட்டிக் கொண்டிருந்தன.

தமக்காகவே வாழ்ந்து சுயநலச் சேற்றிலேயே அழுந்தி, அதுவே சுவர்க்கம் என்று எண்ணித் திரியும் மாந்தர் நிறைந்த இந்த உலகில் பிறருக்குச் சேவை செய்வதற்காகவே சிலர் பிறக் கிறார்கள்.

அப்படிப் பட்டவர்களில் ஒருவர் தான் இராமநாதன்.

இராமநாதன் பருவக்காலப் பணக்காரர் அல்ல. பரம்பரைப் பணக்காரர்.

பொன்னியூர்க் கிராமத்திலேயே மாபெரும் மிராசுதாராக விளங்கிய மாணிக்கவேலரின் ஒரே மகன்!

இராமநாதன் இளமையிலேயே தந்தையை இழந்து விட்டார் என்றாலும் சிறந்த முறையில் படித்து உயர்ந்த வகையில் வாழ்க் கையை அமைத்துக் கொண்டார்.

அந்த இராமநாதனின் கடும் உழைப்பால் — தன்னலம் கருதாத தொண்டால்—தான் பொன்னியூர் புகழ் மணக்கும் ஊராக மாறியது.

இராமநாதன் உள்ளப் பெருவெளியில் காந்தீயத் தத்துவங்கள் முளைவிடத் தொடங்கிய போது தான் அவர் சேவையின் சிறப்பை உள்ளவாறு தெரிந்து கொண்டார்.

அவர் காந்தியடிகளை ஞானகுருவாக ஏற்றுக் கொண்ட பரம சீடராக விளங்கி வந்தார்.

" தன்நிகரற்ற பெருமகன் ஒருவருடைய தத்துவங்கள் தான் உயிர் பெற்றுச் சமுதாயத்தை வாழவைக்கின்றன; அந்தத் தத்துவங்களின் செயலகத்திற்கே கட்சி பிறக்கிறது; தலைவன் எவ்வழி, அவ்வழி தொண்டர்கள். கட்சித் தலைவனுடைய தூய்மையே கட்சி வாய்மை வழியிலே செல்ல வழி வகுக்கிறது." என்ற எண்ணங்களை உடையவர் இராமநாதன்.

நல்ல வசதியும் ஏராளமான வாய்ப்புகளும் கொண்ட இளைஞரான இராமநாதன் முரட்டுக் கதர்த் துணியை அணிந்து கொண்டு தாழ்ந்த குடிமக்கள் என்று மற்றவர்களால் ஒதுக்கி வைக்கப்பட்ட ஏழை எளியவர்களோடு கலந்து பழகத் தொடங்கிய போது ஊரே வியப்படைந்தது; ஊர் மக்கள் அவரைத் தெய்வமாக நினைத்தார்கள்.

தெய்வ சந்நிதானத்தில் விளங்கும் திருவிளக்குப் போலச் சீதை என்ற குணவதி அவருக்கு மனைவியாக வாய்த்தாள்.

தம்மைப் பார்க்கப் பல ஊர்களிலிருந்தும் வருபவர்கள் தங்குவதற்கு வசதியாக இருக்கட்டும், வளத்திற்கு ஒரு எடுத்துக் காட்டாகத் திகழட்டும், ஊருக்கு பெருமையாக இருக்கட்டும் என்று எண்ணிய இராமநாதன் அழகிய முறையில் மூன்றடுக்குக் கட்டிடம் ஒன்றைக் கட்டினர்.

அந்த மாளிகையில் கணவனும் மனைவியும் இராமபிரானும் சீதாப்பிராட்டியும் போலவே வாழத் தொடங்கினர்.

அந்த அன்புத் தம்பதிகளுக்கு ஆண்குழந்தை ஒன்று பிறந்தது; ஊரே மகிழ்ந்தது. அக் குழந்தைக்கு தயாளன் என்று இராமநாதன் பெயர் சூட்டினர்.

எங்கும் எதிலும் அமைதி நிலைக்க வேண்டும் என்று தான் பெரியவர்கள் விரும்புகிருர்கள். ஆனல் அவ்வாறு எங்கே அமைகிறது ?...

ஒரு நாள், ஒத்துழையாமை இயக்கப் போராட்டத்தில் கலந்து கொண்ட இராமநாதன் போலீசாரின் தடியடிக்கு இலக்கனர்—மயங்கி வீழ்ந்தார்; பிறகு அவர் பேசவில்லை—

உடற் கூண்டிலிருந்து உயிர்பறவை பறந்து விட்டபிறகு அவர் எப்படிப் பேசுவார்?

தங்களுடைய மகிழ்ச்சிக்கெல்லாம் காரணமாக இருந்தவர் பிரிந்ததை அறிந்து ஊர் மக்கள் பெரும் அதிர்ச்சிக்கு ஆளானார்கள், அழுதார்கள், புலம்பினார்கள். என்றாலும் தங்களைத் தேற்றிக் கொண்டு துணை இழந்து கொடிபோல் துவண்ட கோதையை, இராமநாதன் மனைவி சீதையை அனைவரும் சென்று தேற்றினார்கள்.

தன் ஒரே செல்வனின் அறிவுக்கூர்மை நிறைந்த விழிகளைப் பார்த்து—தன் கணவனைப் போலவே இருந்த அவன் தோற்றத்தை நோக்கி அந்தக் கோதையும் மனம் தேறினாள்.

படகை இழந்தவனுக்குக் கிடைத்த பற்றுக் கோடுபோல கணவனை இழந்த சீதைக்குத் தயாளன் உற்ற துணையாக வளர்ந்து வந்தான்.

பருவங்கள் மாறின. ஆண்டுகள் கரைந்தன. தயாளன் உருவத்தில்தான் எத்தனை மாற்றம்! இராமநாதன் இந்த உலக வாழ்வை நீத்தபோது பாலகனாக இருந்த அவன் பதினெட்டு வருடங்களைக் கடந்த போது மற்றொரு இராமநாதனாகவே காட்சி தந்தான்.

ஊரார் அவனைச் சின்ன இராமநாதன் என்றே குறிப்பிட்டு வந்தார்கள்.

கோடி கோடி செம்பொன் கொடுத்தாலும் பெறமுடியாத குணக்குன்றான மைதிலியை தயாளனுக்கு சீதை மணம் முடித்து வைத்தாள்.

கங்கையிலும், காவிரியிலும் கழிவு நீர்கள் கலப்பதற்கு என்ன காரணம் சொல்வது?

புனிதரான, புகழின் உருவமான இராமநாதனின் மகன் மற்றொரு இராமநாதனா வருவான் என்ன தான் பெற்றவளும், மற்றவர்களும் நினைத்தார்கள். அவன் புகழ் சேர்க்கும் இராமநாதனாக வராவிட்டாலும் சாதாரணத் தயாளனாகவாவது இருந்திருக்கலாம். ஆனால் தரம் கெட்டவனாக தந்தையின் புனிதமான சேவைகளுக்கே உலைவைப்பவனாக, சுருங்கச்சொன்னால் குடிகாரனாக மாறினான்.

நினைவோடு வீட்டை விட்டுச் சென்று நினைவு தடுமாறிய நிலையிலே வீட்டை அடையும் கணவனைக் கண்டு மைதிலி நைந்தாள்.

சாணம் நாறலாம்—சந்தனம் நாறலாமா? மாபெரும் தேச பக்தரான இராமநாதன் மகன் குடிகாரன் ஆகாலாமா? இந்தக் கொடுமையை அந்த உத்தமரின் மனைவி அறிந்தால் என்ன நடக்குமோ என்று மைதிலி கலங்கினாள்.

உலைவாயை மூடலாம்—ஊர்வாயைக் கூட மூடலாம்—ஆனால் உண்மையை எப்படி மூடமுடியும்!

அதை மூட முடிந்திருந்தால் சத்தியம் என்ற சொல்லுக்கு பொருள் வேறாக அல்லவா ஆகியிருக்கும்.

தன் மகன் இரவில் நெடுநேரம் கழித்து வருகிறான் என்பதை அறியத் தொடங்கிய, தாய் உள்ளம் பதறியது.

குலவிளக்கான மனைவியை விட்டு விட்டு குடி கெடுக்கும் எவளிடமாவது தன் மகன் தொடர்பு கொண்டு விட்டானோ என்று தான் அந்தப் பேதைத் தாய் எண்ணினாள்.

ஆனால் மனிதனை மிருகமாக்கும் மது அரக்கனுக்கு ஒப்பற்ற தேசபக்தரான இராமநாதரின் மகன் பலியாவான் என்று அவள் கற்பனை கூடச் செய்யவில்லை.

ஒருநாள் இரவு மகனைச் சந்தித்த பிறகுதான், தன் அறைக்குச் செல்வது என்ற தெளிவான முடிவோடு சீதை ஹாலில் அமர்ந்திருந்தாள் மைதிலி, ''நேரமாகிறது நீங்கள் போய்ப் படுத்துக்கொள்ளுங்கள்'' என்று என்ன சொல்லியும் அவள் கேட்கவில்லை.

குடித்து விட்டு வரும் தன் கணவனை அத்தை பார்த்ததும் என்னென்ன விபரீதங்கள் நேரப் போகின்றனவோ என்று குமுறியபடியே மைதிலி சீதை அருகில் நின்று கொண்டிருந்தாள்.

தயாளன் தள்ளாடியபடியே வந்து சேர்ந்தான். தனயனைக் கண்ட தாய் உள்ளம் பதறியது. கடுமையான நோய்க்கு எதிர் பாராமல் இலக்காகி விட்டானோ என்று தான் அந்தத் தாய் உள்ளம் முதலில் எண்ணியது.

''மகனே! என்னடா உடம்பு'' என்று கேட்டபடியே புதல்வன் அருகில் சீதை வந்தாள்.

அவன் வாயிலிருந்து வந்த நெடி அவள் வயிற்றைக் குமட்டியது. நம்பமுடியாத அளவு பெரும் அதிர்ச்சிக்கு அவள் ஆளானாள்.

''குடிக்கிறாயா! அட பாவி, குடிக்கிறாயா?'' தாய் அலறினாள்.

"ஏன் அலறுகிறாய்—இதிலெல்லாம் தலையிட நீ யார்? வயதான காலத்தில் கிருஷ்ணா, ராமா என்று ஜபம் செய்து கொண்டு பேசாமல் இருக்க வேண்டியது தானே?" அவன் உளறினான். மது அரக்கன் அவனை உளறச் செய்தான்.

"நம் உடம்பில் தானே நோய் ஏற்பட்டிருக்கிறது? என்று நோயை வரவேற்க முடியுமா?

நம் பிள்ளை குடித்து விட்டுத் தானே உளறுகிறான் என்று தாய் நினைக்க முடியுமா? அதுவும் இராமநாதன் மனைவியால் அது எப்படி முடியும்?

சீதையின் வயிறு எரிந்தது. தன் கணவன் இறந்த போதே தானும் இறக்காமல் போனேனே என்று துடித்தாள்.

ஹாலிலே நெடிதுயர்ந்து நின்ற காந்திமகானின் படத்தை அவள் தன் மகனுக்குச் சுட்டிக் காட்டினாள்.

"இந்த மகானின் பரம பக்தர்களில் ஒருவரான உன் தந்தைக்கு நீயா பிள்ளை?" என்று சீறினாள்.

தயாளன் பேய் போலச் சிரித்தான். "இந்தக் காந்தி படம் இருப்பதால் நான் குடிக்கக் கூடாது என்றால் இப்போதே அதை நான் எடுத்து எறிந்து விடுகிறேன்" என்று உளறிய அந்த வெறியன் மகானின் படத்தை நோக்கி நடந்தான்.

மைதிலி பயத்தால் ஊறிட்டாள்.

அந்தத் தெய்வத் தாய்க்கு, எங்கிருந்து தான் அந்த பலம் வந்ததோ படத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்த மகனை நோக்கி ஓடியவள், அவனை அப்படியே தன்புறம் திருப்பினாள். அடித்தாள், கை ஓயும் வரை அடித்தாள்.

பிரமைபிடித்த நிலையில் தயாளன் நின்றான். கை ஓயும் வரை அடித்த அந்தத்தாய் மெய்சோரக் கீழே விழுந்தாள். மறுநாள் உதயத்தில் சீதை இந்த உலகை விட்டுப் போய் விட்ட செய்தியைத்தான் ஊர் மக்கள் கேள்விப் பட்டார்கள்.

சீதை இறந்த ஒரு மாதத்திற்கெல்லாம் மைதிலி ஆண் குழந்தைக்குத் தாய் ஆனாள். தாய் இறந்ததாலோ தனயன் பிறந்ததாலோ தயாளன் எந்த மாற்றத்திற்கும் இலக்காக வில்லை.

அவனை மைதிலி திருத்த முயலவில்லை. தாயால் முடியாமல் போனதைத் தன்னால் சாதிக்க முடியும் என்ற நம்பிக்கையே அவளுக்கு இல்லை.........!

எண்ணச் சூழல்களுக்கு இலக்காகி நின்ற தயாளன் தன் தலையிலிருந்து வழிந்து கொண்டிருந்த மழை நீரைத் தன் கைகளால் வழித்து விட்டுக் கொண்டான்.

மீண்டும் கண்ணனும் கமலமும் பேசத் தொடங்கினுர்கள்.

"கமலம், மணி ஒன்பதரை ஆகுது. வா நாம சாப்பிடலாம்."

"எனக்கென்னவோ மனசே சரியில்லீங்க. பாவம் மைதிலி கைக் குழந்தையோடே கண்ணீர் விட்டுக் கலங்குறதை நினைச்சா என் நெஞ்சே வெடிச்சுடும் போலே இருக்கு."

"நமக்கு அப்படியிருக்கு, ஆனுல் தாய் இறந்த பின்னுலே கூட அந்தத் தயாளன் புத்திமாறலையே!"

"மழை கொட்டுது. அந்த ஆளாக குடிவெறியிலே காரைக் கொண்டு போய் எங்கேயாவது மோதிட்டா, அதனுலே ஆகக் கூடாதது ஏதும் ஆயிட்டா, மைதிலி நிலை என்னங்க ஆகும்?"

கமலம் விம்மினுள்.

"நீ இதைச் சொல்ற போது தான் எனக்குப் பழைய நினைவு வருது. என் பாட்டன் காலத்தில் 'இந்தத் தயாளன் குடும்பத்திற்கு இணையாகத் தான் எங்கள் குடும்பமும் இருந்தது. என் தந்தை குடிக்கத் தொடங்கிக் குடியையே கெடுத்து விட்டார். தயாளன் தந்தை நல்லவராக இருந்ததால் என்னைப் படிக்க வைத்து ஆளாக வழி செய்தார். இப்போது அவர் இல்லா விட்டாலும் அவர் குடும்பத்தில் வேலை பார்க்கும் நிலைக் குக்கூட வழி செய்தார்."

கமலத்தின் விம்மல் ஒலி அதிகமாயிற்று.

மேலும் அங்கு நிற்க முடியாத தயாளன் உள்ளம் தடுமாற உணர்ச்சிகள் வட்டமிட, அங்கிருந்து மெல்ல நடந்தான். தன் வீட்டு ஹாலை அடைந்தான்.

ஹாலில் ஓர் ஓரத்தில் அரிக்கேன் விளக்கு ஒன்று எரிந்து கொண்டிருந்தது. மைதிலி தன் செல்வனைத் தோளில் போட்டுத் தட்டிக் கொடுத்தபடியே விம்மிக் கொண்டிருந்தாள்.

வேலைக்காரி ஓர் ஓரமாக உட்கார்ந்தபடியே தூங்கிக் கொண் டிருந்தாள்.

"மைதிலி!"... தயாளன் மனைவியை அழைத்தான். அவன் குரல் கரகரத்தது.

சிறிய விளக்கொளியில் வந்தது கணவன் தான் என்பதைச் சரியாகப் புரிந்து கொள்ள முடியாத மைதிலி ஒரு முறை கீரிச்சிட்டு விட்டாள்.

"நான் தான், மைதிலி!"...... தயாளன் இப்போது தெளிவாகக் கூறினுன்.

அவன் குரலிலிருந்த மாற்றத்தைக் கண்டு மைதிலி வியப்புணர்ச்சிக்கு ஆளானுள்.

முற்றத்துப் படியில் நின்ற அவன் அங்கிருந்து உள்ளே வந்தான். அவன் தன்னை நோக்கித்தான் வருகிருன் என்று மைதிலி நினைத்தாள்:

அவன் ஹாலின் மற்றொரு புறத்தை நோக்கி நடந்தான்.......

அவன் எங்கே போகிருன்? குடி மயக்கத்தில் நினைவற்றுப் போகிருனு? பேதை நெஞ்சம் தவித்தது.

தயாளன் இப்பொழுது நினைவோடு தான் சென்று கொண்டிருந்தான்.

நெடிதுயர்ந்து நின்ற மகாத்மாவின் படத்திற்கு அருகிலே சென்று அவன் நின்ருன். அந்த எளிய வெளிச்சத்திலும் அந்த ஏந்தலின் கால்களைத் தொட்டு வணங்கியபடி அவன் விம்மினுன்.

என்ன வியப்பு! மின்னல் ஒளியால் செயலற்றுப் போன மின்சாரம் மீண்டும் செயல்படத் தொடங்கியது. வீடு எங்கும் மின் விளக்குகள் பளிச்சிடத் தொடங்கின.

முற்றத்திலே கண்ணனும் கமலமும் நின்று கொண்டிருப்பதை தயாளனும் மைதிலியும் கண்டார்கள்.

யாரோ போவது போன்ற ஓசை எழவே கண்ணன் வெளியே வந்து பார்த்ததால், போவது தயாளன் தான் என அறிந்து என்ன நடக்கிறது என்று காணத் துடிப்போடு அவனை பின் தொடர்ந்து வந்தவர்கள் அங்கே நின்று கொண்டிருந்தார்கள்.

நீர் ஒழுகும் கண்களால் தயாளன் மனைவியையும், கண்ணனையும், கமலத்தையும் பார்த்தான்.

"கண்ணு! மைதிலியின் துயரத்தைப் பற்றி நீயும் உன் மனைவியும் கொண்ட கவலையில் நூற்றில் ஒரு பங்குகூட நான் கொள்ளவில்லை. நீங்கள் அப்படிக் கவலைப் பட்டதற்குக் காரணம் என்ன? உங்கள் உள்ளம் நல்ல உள்ளம். உள்ளம் நல்லதாக

அமைந்து விடுகிற போது அன்பும் பாசமும் அங்கே குடியிருக்கத் தொடங்கி விடுகின்றன. அதனுல் தான் காந்தியடிகள் மனத் தூய்மையோடு வாழ வேண்டும் என்று கூறினர். அதை நான் உணர்ந்து விட்டேன். மனிதனுக்குச் சிறப்பாக உள்ளது பகுத் தறிவு. அதையே பாழ் செய்யக் கூடியது குடி. எனவே குடிப்ப வன் எப்படி முழு மனிதனுவான் ?.. மைதிலி! இன்று முதல் நான் முழு மனிதனுகி விட்டேன். கண்ணீரைத் துடைத்துக் கொள் !... மகான்களுடைய அடிச் சுவடுகள்தான் மக்களை பூவுலகிலேயே சுவர்க்க போகத்தில் வாழச் செய்யும் வழிகாட்டிகள் ஆகும் நமது புண்ணிய பூமிக்கு காந்தியடிகளுடைய அடிச் சுவடுகளை விடச் சிறந்த வழிகாட்டிகள் எங்கே அமைய முடியும். இவற் றைக் கூறிய தயாளன் உணர்ச்சிப் பிழம்பாக நின்ருன்.

மைதிலியும், கண்ணனும், கமலமும் மானசீகமாக காந்தி மகானின் அடிச் சுவடுகளுக்கு மாபெரும் அஞ்சலி செலுத்தினர் கள்.

—o—

# 42

## சத்தியத்தின் சின்னம்

மங்கிப் போயிருந்த அந்தக் குத்துவிளக்கைச் சுடர் தட்டி, எண்ணெய் ஊற்றிப் பிரகாசிக்கச் செய்தாள் ரங்கநாயகி. அந்தத் தீப ஒளியிலே, குடிசையினுள் உறங்கிக் கொண்டிருந்த மூன்று குழந்தைகளும் முனகிக் கொண்டே புரண்டு புரண்டு படுப்பது அவளுக்குத் தெரிந்தது. கிழிந்த பாயிலும், ஓலையிலும் சுருண்டு கொண்டிருந்த ஜீவன்களுக்கு அருகில், பளிச்சென கம்பீரமாகக் காட்சி கொடுத்துக் கொண்டிருந்தது அவளுடைய சுழல் ராட்டை.

விளக்கைத் தூண்டிய பிறகு, மீண்டும் ராட்டை அருகே சென்று அமர்ந்தாள் ரங்கம்; கை தானுக அதைச் சுழற்றியது. ராட்டையைப் போலவே அவள் மனமும் சுழன்றது.

அவள் கணவன் முருகேசன், வீட்டுக்கு வந்து போய் முழுசாக மூன்று நாட்கள் ஆகிவிட்டன. அன்று கடைசியாக அவன் வந்த போது, சட்டிப் பானைகளையெல்லாம் துழாவி ஏதாவது சில்லறைக் காசு இருக்கிறதா என்று ஆராய்ந்தான். ஒன்றுமில்லாமற் போகவே, ஏமாற்றத்தில் ரங்கத்தின் மீது எரிந்து விழுந்தான். கணவனின் மனநிலையைப் புரிந்து கொண்டிருந்த ரங்கம், அவனுக்குப் பிடித்தமான கீரைக் குழம்பும் சோறும் போட்டு, ஆத்திரத்துடன் வந்திருந்த அவனைச் சற்று அமைதியுறச் செய்தாள்; உண்ட பிறகு சிறிது நேரம் மனைவியுடன் சிரித்துப் பேசிக்கொண்டிருந்தவன், அப்படியே தூங்கி விட்டான்.

பொழுது விடிந்ததும் எங்கேயோ எழுந்து போய்விட்டான். அவ்வளவுதான்; இனி என்றைக்கு வீடு திரும்புவான் என்பது அவனுக்கே தெரியாது. இப்படித்தான் அவனுடைய வாழ்க்கைச்

சக்கரம் சுழன்று கொண்டிருந்தது. ஒழுங்காக ஒரு இடத்திலே 'வாட்ச்மேன்' வேலை செய்து கொண்டு வந்தவன், போக்கிரி களுடன் சேர்ந்து கொண்டு, வேலையைத் துறந்து, சோம்பேறியாக மாறின தினத்திலிருந்தே ரங்கத்துக்கு மனது உடைந்து விட்டது. ஒழுங்காக இயங்கிக் கொண்டிருந்த அவளுடைய வாழ்க்கை இழை, அதுமுதல் அடிக்கடி அறுபட்டுக் கொண்டிருந்தது. தன் மனைவியின் பஞ்சு போன்ற மென்மையான உள்ளத்தை மிக மிக நோகச் செய்தான் அவன்.

வாரம் ஒரு முறை, இரு முறை வீட்டிற்கு வருவான். அப்பொழுதெல்லாம், 'துரை'க்கு நல்ல சாப்பாடு தயாராக இருக்க வேண்டும். இல்லாவிட்டால் அடி, உதை, குத்துதான்! பாவம், ரங்கம் ஒரு கைராட்டையை வைத்துக் கொண்டு, அதில் நூல் நூற்று, சிட்டம் தயாரித்து, அதில் வரும் வருவாயைக் கொண்டு, திட்டமாகக் குடித்தனம் நடத்தி வந்தாள். அம்பர் ராட்டை வாங்கினல், இன்னும் சுலபமாக அதிகப் பணம் சம்பாதிக்கலாம் என்ற ஆசையில், கணவனுக்குத் தெரியாமல் கொஞ்சம் கொஞ்ச மாகப் பணம் சேமித்துக் கொண்டிருந்தாள். முருகேசனுக்குத் தன் மனைவியிடம் இருக்கும் பணத்தைக் கொள்ளையடிக்கச் சொல்லியா தரவேண்டும்? அந்த முழுப் பணமும் ஒரு முறை, முருகேசனல் கிண்டிக்கு எடுத்துச் செல்லப்பட்டு விட்டது. ஆனல் அதற்காக ரங்கம் முருகேசனிடம் கடுமையாக நடந்து கொண் டாள், பொறுமையை இழந்து பேசினள் என்பதே கிடையாது. காந்தி மகான் கண்டுபிடித்த கைராட்டையைச் சுழற்றிப் பயிற்சி பெற்றவர்களுக்கு பொறுமையை இழக்கவே முடியாதே! ராட்டை போதிக்கும் மாபெரும் பாடம் அது தானே! என்ருவது கணவன் திருந்த மாட்டான என்ற நம்பிக்கையில் அவள் வாழ்வு ஆமை வேகத்தில் நகர்ந்து கொண்டிருந்தது.

அண்மையில் தீபாவளி நெருங்கிக் கொண்டிருந்ததால், அவள் கொஞ்சம் நூலை அதிகமாகவே நூற்ருள். தான் வைத் திருந்த பழைய தையல் மிஷினில் சிலருக்குத் துணியும் தைத்துக் கொடுத்துக் கொண்டிருந்தாள். நல்ல வேளை, இன்று வரை அந்த இரண்டுக்கும் முருகேசனல் ஆபத்து வர வில்லை. அது ரங்கம் செய்த பெரும் புண்ணியம்தான்!

* * *

சீட்டி ஒலியை மெதுவாக எழுப்பிக் கொண்டு, கட்டம் போட்ட கைக்குட்டையை கழுத்தில் கட்டிய வண்ணம் பிளாட்பாரத்தில், ஏதோ பெரிய காரியத்தை சாதிக்கப் போகிறவன் போல், ஆழ்ந்த சிந்தனையுடன் நடந்து கொண்டிருந்

தான் முருகேசன். டாணு தெரு திருப்பத்தில், ஒருகை வந்து அவன் சட்டையைப் பிடித்து இழுத்துத் தடுத்து நிறுத்தியது. திடுக்கிட்டுத் திரும்பியவன், தன் எதிரில் காங்க்லேன் பக்கிரி நின்றுகொண்டிருப்பதைக் கண்டு, முகத்தில் சிரிப்பைத் தவழ விட்டான்.

''என்ன வாத்தியாரே, இப்படி மஜாக்கா போரும் போல இருக்குது?'' என்று ஆரம்பித்தான் பக்கிரி.

''என்ன மஜா?'' என்றான் விரக்தியுடன் முருகேசன்.

''உனக்கு விசயம் தெரியுமா?'' என்று கேட்டான் பக்கிரி.

''சொன்னாத்தானே தெரியும்!''

''நம்ம மூலைத் தெரு முனுசாமி இல்லே, அதாம்பா அல்டாப் ஆறுமுகத்தோட தம்பி......''

''யாரு, ப்ளேட் பழனியோட சண்டை போட்டுகிட்டு, வெத்திலே பாக்குக் கடை வச்சிருக்கானே, அவனா?''

''அவரே தான்! அவரு மூக்காத்தா தெரு மூலையிலே, நேத்து சாயந்தரம் ஒரு குழந்தையை மிட்டாய் தரதா சொல்லி இட்டுக்கிட்டுப் போய், கழுத்திலிருந்த 'செயினை அபேஸ் பண்ணிட்டாரு!''

''சே, சே! அவன் ரொம்ப யோக்கியனாச்சே! அப்படி யெல்லாம் செய்ய மாட்டானே? வேறே யாரையானா பார்த்துட்டுச் சொல்றயா?''

''அட நீ ஒண்ணு! நான் சொன்னதை நிசம்னு நம்பிட்டே! அவன் அழச்சிக்கிட்டுப் போனதை நீ கண்ணாலே கண்டதாக, கோர்ட்டிலே வந்து சாட்சி சொல்லணும்னு உன்னைக் கூப்பிடறேன்.''

''பொய் சாட்சி சொல்லக் கூப்பிடறயா? பாவம்பா! அவன் கிட்டே உனக்கேன் இந்த குரோதம்?''

''தம்பி! நம்ம கிட்டயே இல்லே அவரு வேலையைக் காட்டறாரு! இந்த தபா நம்பளெ உள்ளே தள்ளினவரே அவருதான்! நம்ப ப்ளேட் பழனி கிட்டே கூட 'ராங்' பண்ணினாரு! விடுவேனா? அதெல்லாம் என்ன பேச்சு, உன்னாலே ஆவல்லேன்னா சொல்லு, வேறே கிராக்கி பார்த்துக்கறேன்'' என்று முடிவு கட்டுவதுபோல் பேசினான் பக்கிரி.

முருகேசன் சிறிது யோசித்தான். விஷயம் கொஞ்சம் தவருக இருந்தாலும் வேலே சுலபம். நல்ல கூலியும் கிடைக்கும் போலிருக்கிறது, ஒப்புக்கொண்டால் என்ன ?

''சரி, கோர்ட்டுக்கு வந்து பொய் சாட்சி சொன்னு எவ்வளவு கொடுப்பே? நூறு ரூபாய் கொடுப்பியா ?'' என்று கேட்டான்.

'' அடப்பாவி ! செயின் விலேயே அவ்வளவு இருக்காதே ! சும்மா இரண்டு வார்த்தை சொல்றதுக்கா இவ்வளவு பணம் கேட்கிறே ?''

'' பொய் சாட்சின்னு சும்மாவா ? மனச்சாட்சியையே இல்லே விக்கணும் ?''

''அதல்லாம் இல்லே; ஐம்பது ரூபா தரேன். அட்வான்ஸா இந்தா பத்து ரூபாய்'' என்ருன் பக்கிரி.

கையை நீட்டிய முருகேசத்திடம், பத்து ரூபாய் நோட்டை வைத்து, '' முருகேசு ! டபாய்ச்சிடப்போறே ! ஏட் ஐயா கிட்டே கூடச் சொல்லி வச்சிருக்கேன். திங்கக்கிழமை கரெக்டா பதினேரு மணிக்கு வந்துடு'' என்று எச்சரித்தான்.

'' நீ போ நயினு, என்னே கரிக்டா பதினேரு மணிக்கு கோர்ட்லே கண்டுக்கலாம்'' என்று சொல்லிவிட்டுச் சென்ருன் முருகேசன். அன்றிரவு அவன் நேரம் கழித்துத்தான் வீடு திரும்பினுன். அப்போது அவன் கண்ணுக்குப் பட்ட உருவங்களெல்லாம் இரட்டையாகவே தெரிந்தன.

* * *

ஞாயிற்றுக்கிழமை இரவு வீட்டுக்கு வந்த முருகேசத்தின் நிலேயைச் சாதாரணமாக வர்ணிக்க முடியாது. அன்று ஒரு சினிமாக் கொட்டகையில் புதுப் படம் ஒன்று வெளியாகியிருந்தது. டிக்கெட் கொடுக்கும் ஜன்னலுக்கு முன்னுல் கூட்டம் இடித்துப் புடைத்துக் கொண்டு நின்றது. முருகேசன் அந்த கூட்டத்தில் எப்படியோ புகுந்து அடிபட்டு உதைபட்டு சட்டை கிழிந்து அலங்கோலமாக வெளியே வந்தான். இத்தனேயும் எதற்காக? டிக்கெட் வாங்கி சினிமா பார்க்க அல்ல ! அந்த டிக்கெட்டுகளே வாங்கிக் கள்ள மார்க்கெட்டில் விற்று 'நாலு ஐந்து' தேற்றிக்கொள்ளத்தான்.

இரவு பன்னிரண்டு மணிக்கு வீடு வந்து சேர்ந்தவன், மறு நாள் பகல் பத்துமணிக்குத்தான் எழுந்திருந்தான்.

அன்று திங்கட்கிழமை, கோர்ட்டுக்குப் போக வேண்டிய நாள்.

முருகேசன் அவசர அவசரமாக முகம் கழுவிக் கொண்டு பெட்டியைக் குடைந்தான், ஒரு சட்டைக்காக, சோதனையாக ஒன்று கூடக் கிடைக்கவில்லை. கோபம், ஆத்திரம், ஏமாற்றம் எல்லாமாகச் சேர்ந்து வந்தது அவனுக்கு.

''ரங்கம், ரங்கம்'' என்று உரக்கக் கத்தினான்.

''என்னுங்க'' என்று கேட்டுக் கொண்டே வந்தாள் அந்த பெண் திலகம்.

''என் சட்டைகளெல்லாம் எங்கே? ஒண்ணுக் கூடக் காணோமே! அவசரமா எனக்கு வெளியே போகணும்'' என்று இரைந்தான்.

''ஆமாம், அப்படி என்ன அவசரம், ஜட்ஜு வேலை தடு மாறிப் போவுதா?'' என்று அவள் சொல்லவில்லை. அதற்குப் பதிலாக ''உங்க சட்டைங்களெல்லாம் அழுக்கா இருக்கேன்னு இப்பத்தான் அரையணு சோப்பு வாங்கியாந்து கசக்கிப் போட்டேன்'' என்று இழுத்தாள்.

''ஐயோ, நான் என்ன பண்ணுவேன்? ரொம்ப அவசர மாச்சே'' என்று அலறினான் முருகேசன்.

ரங்கம் சற்று யோசித்தாள். பிறகு ''கொஞ்சம் இருங்க'' என்று உள்ளே சென்றவள், தன் பெட்டியைத் திறந்து ஒரு புது சட்டையை எடுத்து வந்து கணவனிடம் கொடுத்தாள்.

கதர்ச் சட்டையென்றால் தன் கணவன் போட்டுக் கொள்ள மாட்டான் என்று தெரிந்திருந்தும், ஒரு அல்ப ஆசையில் அதைத் தைத்திருந்தாள் அவள். அன்பையே இழையாகக் கொண்டு நெய்யப் பட்டிருந்த ஆடை அது. ஆபத்துக் காலத்தில் கணவ னுக்கு அது உதவுகிறதே என்ற சந்தோஷத்தில், ஆவலுடன் அதைக் கணவனிடம் கொடுத்தாள்.

லஸ்லின், ஸில்க், லினன் தவிர மற்றவை முருகேசன் உடலில் ஏறாது. ஆனால் அன்றைய அவசரம்? ஏதோ ஒரு சட்டை கிடைத்ததே என்று அது என்னவென்று கூடப் பார்க்காமல் மாட்டிக் கொண்டு ஓடினான். சும்மாவா? ஐம்பது ரூபாய் ஆயிற்றே?

* * *

மணி பதினொன்றை நெருங்கிக் கொண்டிருந்தது. பக்கிரி கோர்ட்டில் நிலைகொள்ளாமல் தவித்தான். முருகேசன் காலை

வாரி விட்டு விடுவானே என்று பயந்தான். நல்ல வேளையாகத் தூரத்தில் முருகேசன் வருவதைப் பார்த்ததும் தான், அவனுக்கு நிம்மதி ஏற்பட்டது. ஆவலுடன் அவனை எதிர் கொண்டு அழைத்தான் பக்கிரி.

"என்னப்பா இவ்வளவு லேட்டு" என்று ஆரம்பித்தவன், "அட கதர்ச் சட்டையா? பெரிய ஆள் ஆயிட்டேப்பா நீ" என்றான்;

முருகேசன் தான் போட்டுக் கொண்டிருந்த ஷர்ட்டைப் பார்த்தான். அவனுக்குச் சுரீர் என்றது. 'என்ன! கதர் சட்டையா?' என்று சொல்லிக் கொண்டே சட்டையைத் தூக்கிப் பார்த்தான். அந்தச் சட்டையில், அந்த வெண்ணிற ஆடையில், அண்ணல் காந்தியின் முகம் தெரிந்தது, அவனுக்கு. அந்தத் தூய ஆடையில், தேசத்தின் சின்னம் தெரிந்தது அவனுக்கு. அந்தப் பரிசுத்தத் துணியில் ஆயிரமாயிரம் தியாகிகள் ஈடுபட்ட புனிதமான தேசீயப் போராட்டம் தெரிந்தது அவனுக்கு.

'ஐயோ, இது சத்தியத்தின் சின்னமல்லவா? காந்தி மகாத்மா கண்டு பிடித்த மூலிகை அல்லவா? இதை வைத்துக் கொண்டு தானே நமக்கு அவர் சுதந்திரம் வாங்கிக் கொடுத்தார்? நமக்குக் கிடைத்த சுய ராஜ்யமே இதனால் தானே? சத்தியத்தின் சின்னமான இந்தத் தூய கதராடைக்கு மாசு ஏற்படுத்துவதா?" முருகேசனின் மனப்பாறையில் இப்படிப்பட்ட எண்ண அலைகள் வந்து மோதின.

சட்டையையே கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தான் முருகேசன். பக்கிரிக்கு ஒன்றும் புரியவில்லை. முருகேசனின் உள்ளத்தில் மிகப் பெரிய போராட்டம் நடந்து கொண்டிருப்பதை அறியவில்லை அவன்.

விசாரணை ஆரம்பமாயிற்று. முருகேசன் சாட்சிக் கூண்டில் ஏறினான். பொய் சாட்சி சொல்லக் கூண்டில் ஏறினவன், உண்மை பேசினான்! தான் பொய் சாட்சி சொல்ல வந்ததாக! தனக்குப் பணம் கொடுத்துப் பேசச் சொன்னார்கள் என்று கூறி தான் கை நீட்டி அட்வான்சாக வாங்கிய அந்தப் பத்து ரூபாயை வீசி எறிந்தான். பக்கிரியின் மூக்கு உடைந்து விட்டது. முருகேசனுக்குப் பைத்தியம் பிடித்து விட்டது என்றே அவன் எண்ணினான். முருகேசனின் உள்ளத்தை அந்தக் கதர்ச்சட்டை மாற்றி விட்டது என்பதை அவனால் புரிந்து கொள்ள முடியவில்லை! புடம் போட்ட தங்கத்தைப் போன்று, அக்கினியில் வீழ்ந்தெழுந்த உத்தமியைப் போன்று, சத்தியத்தின் சின்னத்தின்

சேர்க்கையால் அவன் தூயவனுகி விட்டான் என்பது பக்கிரிக்குப் புரியவில்லே.

பலத்த போலீஸ் பந்தோபஸ்துடன், வீட்டுக்கு வந்து சேர்ந்தான் முருகேசன். சர்க்காவில் நூல் நூற்றுக் கொண்டிருந்தாள் அவன் மனேவி. கணவன் போலீசுடன் வருவது கண்டு திடுக்கிட்டாள்.

''ரங்கம்'' என்று அவள் அருகில் வீழ்ந்த முருகேசன், தான் திருந்திய வரலாற்றைத் தெரிவித்தான்

பொறுமையின் சின்னமான அந்தப் பெண் திலகம், சத்தியத்தின் சின்னத்தை நமக்களித்த, சத்திய சோதனேக்குள்ளாகி வெற்றி கண்ட சாந்த புருஷனின் படத்தைப் பார்த்தாள், கண்களில் ஆனந்தக் கண்ணீர் மல்க.

—□□□—

ஜ. ரா. சுந்தரேசன்

# 43

# அவள் இட்ட குங்குமம்

வாலாங் பகுதியில் கடும் சண்டை நடந்து கொண்டிருந்த நேரம்.

மிருகத்தனமான சீனன், பாரத மண்ணில் வைத்த காலைத் துண்டிக்கத் துடித்தெழுந்த ஆயிரமாயிரம் வீர இளைஞர்களில் கோவிந்தராஜுவும் ஒருவன்.

மையிருளிலும், பனியிலும், காற்றிலும் அச்சமென்பதே இல்லாத நிலையில் ஆயுதமும் கையுமாய் வடகிழக்கு எல்லையைக் காக்கும் ஜவான்களில் கோவிந்தராஜுவும் ஒருவன்.

துப்பாக்கியும் கையுமாய், இருளில் எதிரியைக் கொன்று கிழிக்கும் துடிப்புடன் கோவிந்தராஜு காவலிருந்தான்.

தூரத்தே சீனனின் ஈவிரக்கமற்ற மார்ட்டர் பீரங்கிகளின் அனல்கக்கும் வெடி ஓசை கேட்டுக் கொண்டிருந்தது.

கோவிந்தராஜுவின் ரத்தம் கொதித்தது. துப்பாக்கியைப் பிடித்திருந்த அவன் உணர்ச்சி தாளாமல் அடிக்கட்டையை மண்ணில் அறைந்தான்.

மூன்று மைல் தொலைவுள்ள யுத்தகளத்துக்கு அவன் போகத் துடித்தான். ஆனால், ராணுவ அதிகாரியின் கட்டளையை எப்படி மீற முடியும்? இந்தக்காவல் நிலையத்தில்தான் அவனுக்கு வேலை. முதல் அணி போர் செய்து கொண்டிருந்தது, மூர்க்கத்தனமாக முன்னேறி வந்து கொண்டிருந்த சீனனுடன்.

இரண்டாம் அணி தயாராக நின்றிருந்தது, உத்தரவுக்குக் காத்து. இரண்டாம் அணியைச் சேர்ந்தவன் கோவிந்த ராஜு.

காதில் விழும் ஒவ்வொரு வெடிச் சத்தமும் எத்தனை வீர உயிரைக் குடித்ததோ? எப்போது வரும் கட்டளை, எப்போது வரும் கட்டளை என்று நொடிக்கு நொடி எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர் கோவிந்தராஜுவும் அவனைச் சேர்ந்த பிரிவினரும்.

கோவிந்தராஜு இருப்புக் கொள்ளாமல் நடந்தான்.

''ராஜு!'' என்றான் அவனுடைய தோழன் அஹமத். ''இன்று நீ வழக்கமாகச் செய்யும் காரியத்தைச் செய்யவில்லை போலிருக்கிறதே?''

ராஜுவுக்கு அப்போதுதான் நினைவு வந்தது.

முத்தம்மாவை இன்று பூராவும் அவன் நினைக்கவே இல்லை. எப்படி நினைக்க முடியும்? அவன் உடலில் ஓடிய ஒவ்வொரு அணுவிலும் சீனனை விரட்டும் சினமே கொந்தளித்துக் கொண் டிருந்தது.

போர்க்களத்தில் வீட்டையும், காதலையும் நினைக்க நேர மில்லை.

அது வீரனைக் கோழையாக்கும் என்றா? அல்லவே அல்ல.

கோவிந்தராஜுவின் பரம்பரை வீரப் பரம்பரை. அவனது தந்தையும் யுத்த வீரராக இருந்தவர்தான். தன் மகன் ராணு வத்தில்தான் சேர வேண்டும் என்று அவர் அவனைச் சேர்த் தார். தாய் மட்டும் இளைத்தவளல்ல. வீரப்புதல்வனைப் பெற்றதோடல்ல; யுத்த நிதிக்குத் தன் திருமாங்கல்யத்தையே கழற்றிக் கொடுத்துவிட்டு, மஞ்சள் கொம்பும் கழுத்துமாய்ப் புன்னகையுடன் விளங்குகிறாள்.

கோவிந்தராஜுவுக்கு உணர்ச்சி முட்டியது.

அவனது இளம் மனைவி முத்தம்மா.

அவள் அவனது நெற்றியில் வீரத் திலகமிட்டுப் போருக்கு அனுப்பி வைத்தாள். அவளைப் பற்றிப் பெற்றோர் அவனுக்கு எழுதிய கடிதம் ஒரு வாரம் முன்னர் அவனுக்குக் கிடைத்தது. 'போர்க்களத்தில் அவர் குளிரிலும் பனியிலும் போரிட, எனக்கு பஞ்சு மெத்தை தலையணையா?' என்று முத்தம்மா வெறும் தரையில் தான் படுக்கிறாளாம். எவ்வளவு குளிராயிருந்தாலும் போர்த்துக் கொள்வதில்லையாம்.

'...இலை போட்டுச் சாப்பிடுவதில்லை. ரொட்டியோ சோறோ, ஏதேனும் ஒரு வேளைதான்.'

இரவுத் தூக்கமும் நாலு மணி நேரத்துக்கும் குறைவு. இப்படி உன் மனைவி ஒரே பிடிவாதமாகச் சுகங்களைத் துறந்திருக்கிறாள். நீ அவளுக்கு ஒரு வார்த்தை அன்புடன் கண்டித்து எழுது. அவள் உடம்பு எதற்காகும்? உனக்காக, நாட்டுக்காக அவள் எடுத்துக்கொண்டுள்ள விரதங்கள் பட்டியலில் அடங்காது.

அப்புறம், ஞாபகமாக உனக்கு இதை எழுதச் சொன்னாள். அவள் என்னவோ உன்னிடம் சொல்லியிருக்கிறாளாம், அதைத் தினமும் விடாமல் செய்து வரவும் என்று எழுதச் சொன்னாள். இங்கு அனைவரும் நலமே. நீ வீரத்திருமகன். கொடுமைச் சீனனை வென்று உன்னை ஈன்ற பாரதத் தாயின் மணி வயிற்றைக் குளிரச் செய். உன் உயிரைப் பணயம் வைத்தாலும் கடமையிலிருந்து வழுவாதே. அதற்காக நாங்கள் வருந்த மாட்டோம். நெஞ்சு மகிழ்வோம், நாட்டைக் காக்க ஒரு நல் வீரனைத் தந்தோம் என்று.

உன் வீரம் வாழட்டும். எதிரியைப் பொடி செய்! மாற்றான் மனை புகுந்த ஈனப் பகைவனை உன் துப்பாக்கி முனை கொன்று கிழிக்கட்டும்.

உன்,

தந்தை'.

கடிதத்தை மடித்துப் பையில் போட்டுக் கொண்டான்.

முத்தம்மா சொன்னதை நேற்று வரை தினமும் அவன் நடத்தி விட்டான். இன்று உணர்ச்சிப் பெருக்கில், காதில் ஒலித்த எதிரியின் பீரங்கிச் சப்தத்தில், சீறி எழுந்து துடிக்கும் சினத்தில் மறந்து போய்விட்டான்.

அஹமத் ஞாபகப்படுத்திவிட்டான். "மிகவும் நன்றி அஹமத்," என்று கூறிவிட்டு, கோவிந்தராஜு தன் மடித்த பிளாங்கட்டுக்குள் வைத்திருந்த பொட்டலத்தை எடுத்தான். அது அவன் மனைவி அவன் நெற்றியில் தினமும் அவள் நினைவாக இட்டுக் கொள்வதற்காகக் கட்டிக் கொடுத்த குங்குமம்.

"அத்தான், எனக்கு நல்ல தைரியம் தான். நீங்கள் நிம்மதியாகப் போய் வெற்றியுடன் வாருங்கள்," என்று அவன் நெற்றிக்குப் பொட்டிட்டவள் கூறினாள். "அத்தான்! எனக்காக ஒன்று செய்வீர்களா?"

"சொல்லு, செய்கிறேன்."

''இது நம் அம்மன் குங்குமம், உங்களுக்கு நம்பிக்கை இருக்கிறதோ இல்லையோ, என் ஞாபகத்துக்காக தினமும் இதைக் காலையில் நெற்றியில் வைத்துக்கொள்ள வேண்டும். இதை நெற்றியில் வைக்கிறபோதெல்லாம் உங்களுக்கு 'நான் வெற்றி யோடு வாங்க' என்று பொட்டிட்டது ஞாபகம் வரும். என் பெயரைச் சொல்லி ஒரு பத்து எதிரியைக் கொல்வதற்கு வீரம் பிறக்கும்!''

கோவிந்தராஜு குங்குமத்தை நெற்றியில் இட்டுக் கொண்டான். ஏனோ சரியாக ஒட்டவில்லை.

அது எப்படி ஒட்டாமல் போகும்? விடலாமா அதை?

அஹமத் உதவிக்கு வந்தான். ''கொஞ்சம் தண்ணீர் போட்டுக் குழை. பிசின் இல்லே?'' என்றவன் தன் வாட்டர் பேக்கிலிருந்து தண்ணீர் சிறிது விட்டான்.

''போதும், போதும். கை நிறையவா ஊற்றுகிறது?'' என்று சிரித்த கோவிந்தராஜு, குங்குமத்தை அளவாகத் தண்ணீர் விட்டுக் குழைத்து நெற்றியில் திலகமிட்டுக் கொண்டான்.

''அச்சா! பிளாரசென்ட் கலர் மாதிரி டாலடிக்குதே? ஒஸ்திக் குங்குமம்!'' என்று சிரித்தான் அஹமத்.

''நமது ரத்தத்தைவிடச் சிவப்புக் குறைவுதான். நமது வீரத்தைவிட ஒளி குறைவானதுதான்,'' என்று கோவிந்தராஜு சிரித்தான்.

அதே நேரம் ஒயர்லஸ் அலறியது! உத்தரவு வந்துவிட்டது!

''இரண்டாம் அணித் துருப்புக்கள் உஷார். உடனே புறப் படுங்க. எதிரி முதல் அணியைப் பிளந்துவிட்டான்.''

சிம்மம்போல் சிலிர்த்தெழுந்தது இரண்டாம் அணி.

சீனனை நேருக்கு நேர் யுத்த களத்தில் கோவிந்தராஜு அப்போதுதான் முதல் தடவை பார்த்தான். குள்ளநரி உருவங்கள் மலைச்சரிவில் பீரங்கிகளுடனும், துப்பாக்கிகளுடனும் வெறி பிடித்த வேகத்தோடு முன் வருவது தெரிந்தது.

இந்தியத் தரப்பில் யந்திரத் துப்பாக்கிகள் அனல் கக்கின. குண்டு மழை பொழிந்தன. இந்தியப் பீரங்கிகளின் கர்ஜனை எல்லை கடந்த உலுத்தர்களின் உயிரை வாங்கத் தவறவில்லை. ஆயினும் ஈசல்கள் விளக்கில் விழுவது போல் எதிரிகள் வந்து குவிந்த வண்ணமிருந்தனர்.

கோவிந்தராஜு ஒரு பாறை மறைவில் மறைவாக இருந்து கொண்டு எதிரிகளுக்கு அதிகபட்சம் எவ்வளவு சேதமுண்டாக்க முடியுமோ அவ்வளவும் செய்தான். எறி குண்டுகளை எறிந்து இருபது பேர் அடங்கிய சீனப் பிரிவை நிர்மூலமாக்கினான்: "தாயே, உன்னை இழிவாக நினைத்து உன்னை நெருங்கிய அன்னியனை இன்னமும் ஒழிப்பேன்,'' என்று கத்தியவாறு, மற்றுமொரு எறி குண்டை எறிய யத்தனிக்கையில் தான்...

எதிரிகளில் ஒருவன் கோவிந்தராஜுவின் மறைவிடத்தை அறிந்துவிட்டான்.

அடுத்த நிமிடம் அந்தச் சீனனின் யந்திரத்துப்பாக்கியின் நோக்கு கோவிந்தராஜுவின் பக்கம் திரும்பியது.

பட பட பட பட வென்று தொடர்ந்து சுட்டுத் தீர்த்தபின் திமுதிமுவென்று ஓடிவந்தனர் சீனர்கள்.

பாவம், அவர்களுக்குத்தான் எத்தனை ஏமாற்றம்! குறைந்தது ஆறு இந்தியச் சிப்பாய்களாவது அந்தக் குழியிலிருந்து கொண்டு இவ்வளவு நேரம் தங்களைத் தாக்கியிருப்பார்கள் என்று நினைத்து வந்து பார்த்தால், ஒற்றை வீரன் மல்லாந்து கிடக்கிறான்!

சீனமொழியில் ஏதோ பேசியவர்கள் கோவிந்தராஜுவைக் காலால் எட்டி உதைத்து இருவர் புரட்டினர். ஒரு சீனன் தன் துப்பாக்கிக் கட்டையால் கோவிந்தராஜுவின் நெற்றியைக் குத்தினான். பிறகு, "ஒழிந்தான்!'' என்று கத்தினார்களோ என்னவோ உற்சாகத்துடன் அந்த ஈனக் கூட்டம் அகன்றது.

சரியாக அரைமணி.

கோவிந்தராஜு மெதுவே கண்விழித்தான். அவனுக்கு நடந்தது பூராவும் ஒன்றுவிடாமல் தெரியும்.

அவன் சாகவில்லை. எதிரி சுட்ட குண்டுக்கு இலக்காகாமல் அவன் பத்திரமாக ஒதுங்கிக்கொண்டுதான் இருந்தான். அவர்கள் அவனை நோக்கி முன்னேறி வந்ததும் குண்டு பட்டவன்போல் படுத்துவிட்டான்.

ஆனால் அவனுக்குப் புரியவில்லை, எவ்வாறு, அந்தக் கூட்டம் அவனது பாசாங்கை நம்பிவிட்டது என்று.

நெற்றியைத் தடவிக்கொண்டவன் கையைப்பார்த்தான். புறப்படுமுன்னர் இட்டுக்கொண்ட குங்குமம் அழிந்து கையில் பட்டிருந்தது.

நெற்றியில் அகலமாய் அப்பியிருந்த இந்தக் குங்குமத்தை— என் முத்தம்மா கொடுத்த குங்குமத்தை பார்த்து எதிரிகள், நெற்றியில் குண்டு பட்டு நான் இறந்துவிட்டதாக நினைத்து விட்டார்கள் போலும். ஒரு சீனன் துப்பாக்கிக் கட்டையால் நெற்றியில் குத்தியதற்குக்கூட 'இதோ காயம்' என்று சுட்டிக் காட்டத்தான் இருக்குமோ ?

உள்ளம் பொங்கி உவகை நிறைந்தது கோவிந்தராஜுவுக்கு. 'அஹமத் ; உனக்கும் என் நன்றி' என்று அவன் மகிழ்ந்தான்.

உயிர் பிழைத்த மகிழ்ச்சியோடு, இப்போது இன்னுமொரு மகிழ்ச்சி அவனுக்கு ஏற்பட்டது. சீனத் துருப்புக்கள் போட்டிருந்தபடை முகாமுக்கு அருகில் அவன் இருந்தான்.

இந்தியர்களைப் பின்வாங்க வைத்துவிட்டோம் என்ற வெற்றி மதர்ப்பில் சீனர்கள் தங்கள் முகாமில் குடித்துக் களித்துக்கொண்டிருந்தனர். 'நமது படைதான் இந்தியர்களை விரட்டிக்கொண்டு பதினைந்து மைல் தொலைவில் போரிட்டுக் கொண்டிருக்கிறதே?' என்று நினைத்து மனச்சாராயம் குடித்துக்கொண்டிருந்த முகாமில் படீல் படீல் படீல் எனச் சரமாரியாக பத்துப் பதினைந்து குண்டுகள் வெடித்தன. முகாம் முழுவதும் ஒரே தீ: அங்கிருந்த நூற்றுக் கணக்கான சீனர்களில் இறந்தவர்கள் போக மற்றவர்கள் நிலைகலங்கி அலறிக் குழம்பிப்போய் முகாம்களை விட்டு ஓடினர். ஓடும் அவர்களை நோக்கி இருளிலிருந்து மீண்டும் ஒரு எறி குண்டு எறியப்பட்டது. ''முத்தம்மா! உனக்காக, நீ சொன்னுயே, 'என் பெயரைச் சொல்லிப் பத்து சீனனைக் கொல்லுங்கள்' என்று, அதை நிறைவேற்றி விட்டேன்,'' என்று மனத்திருப்தியுடன் கூறிக்கொண்டான். கோவிந்தராஜு.

★★

கோமதி சுப்பிரமணியம்

# 44

## சட்டத்திற்கு வாழ்க்கைப்பட்டவள்

கண்களில் பொங்கிய கண்ணீரை மேல் துண்டால் துடைத்துக் கொண்டார் நீலமேகம்;

"'நேற்றுப் பிறந்த பயல்...என்னை மீறி அவனால் செய்யவும் முடிந்ததே!''

அவரது நெஞ்சு குமையவில்லை; குமுறிற்று.

''சட்டம் துணை நிற்கிறது. ஏன் அவராலே அதைச் செய்ய முடியாது? எல்லாம் முடியும்...''

பார்வதி முந்தானையால் கண்களைத் துடைத்துக்கொண்டே கூறினாள்.

"இந்தா, நீ ஏன் அழவேண்டும்? உடன் பிறந்த எனக்கே ஏற்படாத பரிதாபமா உனக்கு ஏற்பட்டுவிட்டது? கழுதை போகிறாள் தன் விதிப்படி...''

"இருந்தாலும் பெண்ணுக்குப் பெண். இனிமேல் சாரதா நிலையை நினைத்தால் பரிதாபமாகத்தானே இருக்கிறது?''

"அவளாக விரும்பி ஏற்றுக்கொண்டது தானே? இதற்கு நாம் என்ன பண்ணுவது? நீ போய் உன் வேலையைப் பார்." நீலமேகம் பேச்சைச் சுருக்கிக் கொண்டார்.

கணவரின் அமைதியான தனிமைக்கு இடையூறாக நில்லாமல் அங்கிருந்து அகன்றுவிட்டாள் பார்வதி.

நீலமேகத்தின் மனம் அமைதியையா அனுபவித்தது?

எதிர்வீட்டில் சிரிப்பும் கொம்மாளமும் சதிராட்டம் போட்டுக் கொண்டிருந்தது. சீரழிவுக்கு வித்திடும் சிரிப்பு அங்கே அலேமோதிக் கொண்டிருந்தது. இங்கே சீறிப் பாயும் நெருப்பு நீலமேகத்தின் நெஞ்சில் சுழல் வட்டமடித்தது.

மிகவும் குறுகிய தெருவாதலால் எதிர்வீட்டு நிகழ்ச்சிகள் நீலமேகத்துக்குத் தெளிவாகத் தெரிந்தன.

நல்ல உள்ளங்களில் நஞ்சைப் பதியமிடும் நச்சுப் பாம்புக் கூட்டம் சுற்றிச் சூழ்ந்திருந்து சரவணனைப் பாராட்டிக்கொண்டிருந்தது.

"என்ன இருந்தாலும் நீ கெட்டிக்காரன்தானப்பா, சரவணா உன்னைவிடப் பெரியவர்களெல்லாம் உன் தங்கை படும் கொடுமையைப் பார்த்திருந்தும் பாராதிருந்துவிட்ட வேளேயிலே நீ செயலில் இறங்கி வெற்றியும் பெற்று விட்டாயே..." என்று போற்றிக் கொண்டிருந்தார், முன்னேற்றப் பாதையிலே வெகு வேகமாய்ச் சென்றுகொண்டிருந்த நண்பர் ஒருவர்.

"வயதிலே மட்டும் பெரியவராக இருந்தால் போதுமா? செயலுக்கல்லவா வயது வளர வேண்டும்?" என்று நண்பனுக்கு மற்ருெரு பாராட்டு மாலேயை அணிவித்தான் தங்கத்துரை.

"கங்கிராஜுலேஷன்ஸ்! கேஸிலே வெற்றி பெற்றுவிட்டாயாமே," என்று கை குலுக்கியவர்கள் இரண்டொருவர்.

சத்தியத்தைச் சாட்சி வைத்து நடத்திய கல்யாணத்தை, சட்டத்தின் மூலம் பிரித்துவிட்டதற்குப் பாராட்டுகிருர்களே! ஆயிரம் உறவு கூடி, இந்தக் கல்யாணத்தை நடத்திவைத்தவர் அவர். ஆனல் இந்தப் பயல் சரவணன் ஒருவனுக விடுதலே வாங்கித் தந்து விட்டான்.

நீலமேகத்தின் கண்களிலே நீர் துளிர்த்து வடிந்தது. நெஞ்சிலே ரத்தம் துளிர்த்துக் கசிகிறது.

சரவணனின் வீரத்தைப் பாராட்ட அவனேயொத்த மனப் போக்குப் படைத்த நண்பர்கள் வந்தார்கள்; மனதாரப் பாரட்டினர்கள். அவன் கொடுத்த கலரையும், காப்பியையும் பருகியவர்கள் விடைப்பெற்றுப் போகும்பொழுதும் மறக்காமல் அவனது வலிமையைப் பாராட்டிச் சென்ருர்கள்.

போகுமுன்னதாக, சுதந்திரம் பெற்று நின்ற மங்கை சாரதாவையும், சற்று உரிமையைப் பார்வையில் தேக்கிப் பார்த்துச் சென்ருர்கள். இந்த அவலத்தை அவளும் உணரவில்லே;

அவளுக்கு விடுதலை வாங்கித் தந்த சின்ன அண்ணன் சரவண னும் உணரவில்லை.

ஆனால், தெருவில் எதிர்ச்சாரி வீட்டின் ஜன்னல் கம்பிகளி னூடாக, தம்பியின் வீட்டிலே நடக்கும் அவலத்தைக் கண்டும் தடுக்க முடியாத கையாலாகாத்தனத்தை நினைத்துப் பொங்கிப் பொருமி நின்ற நீலமேகம் பார்த்துக் கொண்டு தான் இருந்தார்.

அவர் நெஞ்சம் கொல்லன் உலைக்களமாய் கொதித்துக் கொண்டிருந்தது. உருகியோடும் இரும்புச் சூட்டிலே பாதம் பதித்து நடப்பவரைப் போலத் துடித்தார். சரவணனும், சாரதாவும் அவரைவிட வயதில் சிறியவர்கள்...ஆனால், செய லிலே மிகப் பெரியவரின் செயலையும் மிஞ்சிவிட்டார்களே—

சே...!

தெய்வத்தைச் சாட்சியாக வைத்து, தெய்வ மனம் படைத் தவர்கள் ஆசீர்வாதம் பெற்று, மங்கல நாண் முடித்துப் பிணைத் துக் கொண்ட உறவை, கோர்ட்டார் முன்னிலையில், கொடியவர் கள் சாட்சியுடன் விடுதலை வாங்கித் தந்து விடுவதாமே...

நீலமேகத்தின் நெஞ்சு வெடித்துச் சிதறி விடாதிருக்கத் தன் கரங்களை மார்பிலே புதைத்துக் கொண்டார். அவர் நினைவு எங்கெங்கோ மூழ்கி எதையெதையோ தேடி எடுக்க முனைந்தது.

'சட்டத்தின் மூலம் அவன் உறவைப் பிரிக்கலாம்; அவனது நினைவை அழிக்கவே முடியாது,' என்ற முடிவிலே தான் வந்து நின்றார்.

நாலைந்து மாதங்களுக்கு முன்னால் சாரதா கணவனோடு கோபித்துக் கொண்டு தன் வீடு தேடி வந்த போது நீலமேகம் அவளை வரவேற்கவில்லை; வாழ்த்தவுமில்லை.

கணவனைப் பகைத்துக் கொண்டு ஓடிவருவது சாரதாவுக்கு அது முதன் முறையுமல்ல; முடிவான முறையுமல்ல.

விவாகமான சில நாட்களில் தொடங்கிய பழக்கம், அவளைப் பொறுத்தவரை ஒரு விளையாட்டுப் பொழுது போக்காகவே ஆகிவிட்டது. கணவனிடம் காணும் சின்னஞ்சிறு குற்றங்களை யெல்லாம் பெரிதாகப் பாராட்டிக் கொண்டு அவனோடு பெரும் போராட்டமே நடத்தி முடித்து முடிவில், 'உன் தயவே தேவை யில்லை' என்று அண்ணன் வீட்டிற்கு ஓடி வந்து விடுவாள். உண்மையை உணராத நீலமேகம், தங்கையின் கண்ணீருக்கு மதிப்புக் கொடுத்து மைத்துனரைக் கண்டிப்பார்.

காலம் போகப் போகத் தவறு எங்கே பிறக்கிறது என்பதைப் புரிந்து கொண்டார் நீலமேகம். தங்கையைத் திருத்த முயன்றார்.

அவரது புத்திமதிகள் விழலுக்கிறைத்த நீராயின. அண்ணன் கொடுத்தனுப்பும் பணம் இருக்கும் வரை கணவன் வீட்டில் கொட்டமடித்து விட்டு, கை வரண்டதும் கணவனேடு எதையாவது பேசிப் புயல் எழுப்பிவிட்டுப் புழுதியாய் ஓடிவந்து விடுவாள் அண்ணன் வீட்டிற்கு.

இம்முறை வந்தபோது, அண்ணன் நடையேற்ற மறுத்து விட்டார். தங்கை அழுதாள்; கெஞ்சினுள்; 'என் நிலை தெரிந்துமா என்னை இப்படி ஒதுக்குகிருய் ?' என்று மன்ருடினுள்.

நீலமேகம் மனம் கலங்கவே இல்லை.

கணவன் வேலு அடித்ததனுல் மண்டையில் ஏற்பட்டிருந்த ரத்தக் காயத்தை—கட்டை அவிழ்த்து அவள் காட்டியும் கூட—நீலமேகத்தின் மனம் இளகவே இல்லை. பெண்ணுக்குக் கணவன் வீடே சகலமும் என்பதை அவள் உணர வேண்டும் என்று எண்ணிஞர் நீலமேகம்.

"உன் கணவன் வேலு, முரடன். ஒப்புக் கொள்ளுகிறேன்; ஆஞல் அவன் முரட்டுத்தனம் வெறியாக மாறும் அளவுக்கு அவனை மாற்றிய குற்றவாளி நீதானே? ஒரு மனிதன் நல்லவனுகவோ கெட்டவனுகவோ மாறுவது அவனுக்கு வந்து வாய்க்கும் மனைவியைப் பொறுத்ததே...தவறு உன் மேல் தான் !''

"என் மீது தவருனல் என்னைத் திருத்த நீ முயற்சிக்கலாம் அண்ணு,'' என்ருளே, அந்த வார்த்தை இன்று விசுவரூபம் எடுத்து அவரை வதைத்தது.

'நான் பாவி. அன்றைக்கு வந்தவளை வீட்டிலே சேர்க்க மாட்டேன் என்று மறுத்தால் உடனே ஊருக்குப் போய் விடுவாள் என்று நினைத்தேன். இப்படி உறவையே துண்டித்து விடுவாள் என்று கண்டேனு ?'

இதற்கு முன் சாரதா எத்தனையோ முறை, கணவனுடன் சண்டையிட்டுக் கொண்டு என் வீட்டோடு வந்து தங்கியிருந்திருக்கிருளே, அப்பொழுதெல்லாம் தங்கையை எட்டியும் பார்த்தறியாத சரவணன், இன்று, 'நான் இருக்கிறேன் உனக்கு,' என்று சொல்லி அழைத்துப் போஞன். போனதோடு நிறுத்தியிருக்கலாம். அவள் மண்டைக் காயத்தையே ஆதாரமாகக் காட்டி கோர்ட்டிலே விவாகரத்துக் கோரி அவள் சார்பாக வழக்குப் போட்டு விட்டான். வெற்றியும் பெற்று விட்டான்.

பிளவுபட்ட குடும்பத்தை ஒன்று சேர்க்க ஆயிரம் முயற்சிகள் தேவை. கீறல் விழுந்த இதயத்தை ஒட்டுப் போடச் சிரமம் தேவை;

இப்பிறப்பன்றி, ஏழ்பிறப்பிலும் தொடர்ந்து வருவதாய்க் கூறும் உறவையும் உள்ளத்தையும் கூறு போடவும் முயற்சி தேவைதானே ?

சரவணன் ஒருவனுகவே நின்று, அந்த முயற்சியில் முனைந்து வெற்றியும் பெற்று விட்டானே !

வீட்டுக்குள் அடங்கிக் கிடக்க வேண்டிய பெண்மையைக் கோர்ட்டுக்கு இழுத்து விட்டானே—இதை வெற்றியென்று கொண்டாடுகிருர்களே !

நீலமேகம் மனம் புழுங்கினுர்.

* * *

ஆட்களும் விருந்துமாகத் தடபுடல் பட்டுக் கொண்டிருந்த சரவணனின் வீடு, ஆய்ந்து ஓய்ந்து அமைதிக்குள் அடங்கியது.

வீதியிலே மின்னும் ஒளி விளக்குகளின் வெளிச்சத்திற்குத் துணையாக, வானவீதியில் நிலவோனும் பவனி வரத் தொடங்கி விட்டான்.

நீலமேகம் இருந்த அறையிலே, வீதியிலிருந்து வந்து பாயும் ஒளிக்கதிர்களைத் தவிர, வேறு வெளிச்ச மில்லாது இருண்டு கிடந்தது அவரது இதயத்தைப் போல.

திடீரென்று மின்சார விளக்குப் பளிச்சிட்டது.

"அடப் பாவி" என்று குமுறிக் கொண்டே ஒளிக்குள் ஒளியாய் வந்து நின்ருள் பார்வதி.

மனைவி குறிப்பிடும் 'பாவி' யாரென நோக்கிய கணவனிடம் கூறினுள்.

"உங்கள் தம்பியின் நண்பன்—அவன் தான் கூடிக் குடியைக் கெடுக்கும் தங்கதுரை—பேசிச் சென்றதைக் கேட்டேன். என் வயிறு பற்றி எரிகிறது. கடைசியிலே அந்தப் பெண் சாரதாவுக்குக் கிடைத்த கதி இதுதானு ?" என்று விம்மினுள் பார்வதி.

"ஏன் அழுகிருய்? உன் மைத்துனனும், நாத்தனுரும் மகிழ்ச்சியிலே மூழ்கியிருக்கின்ற வேளையிலே நீ ஏன் கண்ணீர் வடித்துக் கொண்டிருக்கிருய்? என்னைப் பார். நான் எப்படி மகிழ்விலே மிதந்து கொண்டிருக்கிறேன். இதை உன்னுல் உணர முடியாது பார்வதி...என்னுல் துணிந்து செய்ய முடியாத செயலை என்னைவிடச் சின்னவன் செய்து முடித்துவிட்டானே என்கிற பூரிப்பிலே மிதந்துகொண்டிருக்கிறேன் !"

நீலமேகம் அழுகையை அடக்கிக்கொண்டு பொய்யாகச் சிரிக்க முயன்ருர்.

"போதும், உங்கள் போலிச் சிரிப்பு போதும். அங்கே உங்கள் தங்கையின் வாழ்க்கையே பாழ்பட்டுச் சிரித்து நிற்கிற வேளையிலே..."

"பார்வதி! இன்னொரு முறை அப்படிச் சொல்லாதே; இப்போதுதான் அவள் முழு உரிமையும் பெற்ற சுதந்திரவாதி!"

"அவள் சுதந்திரம் நாசமாய்ப் போகட்டும். அவளுக்குக் கிடைத்த சுதந்திரத்தாலே, அவளது பெண்மையே பறிபோய் விடும் போலிருக்கிறதே!"

"என்ன சொல்லுகிருய் நீ?"

"உங்கள் தம்பி, தங்கைக்கு விடுதலை வாங்கிக் கொடுத்த புகழிலே மிதப்பவர்; அந்தப் புகழின் போதையிலே மூழ்கி, மேலும் தனக்குப் புகழ் தரக் கூடிய செயலில் இறங்கிவிட்டார்."

புரிந்துகொள்ள முடியாமல் நெற்றியைச் சுளித்தார் நீலமேகம்.

"ஆமாம், தன் செயலுக்கு உறுதுணையாய் நின்ற தங்கத் துரைக்குத் தன் நன்றியின் காணிக்கையாகத் தங்கையையே அர்ப்பணிக்க முன்வந்து விட்டார்."

"என்னது? சாரதாவுக்கு மறுமணமா?"

நீலமேகத்தின் உடலெங்கும் நெருப்பு ஜ்வாலை கொழுந்து விட்டு எரிந்தது.

"இப்பொழுதே போய் அவளைக் கழுத்தை நெறித்துக் கொன்றுவிட்டு வருகிறேன்..."

கண்களில் ரத்தச் சிவப்புக் கனன்றது. கைகள் தங்கையின் கழுத்தை ஸ்பரிசிக்கத் துடிதுடித்தன. சிறைக்குச் சென்ருலும் பாதகமில்லை. அதனுல் தன் மானம் பறிபோனுலும் சரி, தங்கையின் மானம் காக்கப்பட வேண்டும் என்ற வெறியோடு நீலமேகம் எழுந்தார். சற்றைக்கெல்லாம் ஆவேசமான உருவம் ஒன்று எதிர்வீடு நோக்கி விரைந்ததைப் பார்த்து பதறினுள் பார்வதி.

தம்பியின் வீட்டு வாசலில் அவர் காலடி வைத்த வேளை, உள்ளிருந்து சாரதாவின் குரல் பரிதாபமாய்ப் பிரலாபித்தது. அந்தக் குரலிலே ஆணவம் அடங்கி, அபலைத்தனம் மேலோங்கி ஒலித்தது:

சாரதா கண்ணீரும், கேவலுமாக வாதிட்டுக் கொண்டிருந் தாள்.

"சரவணு! நீ என்னிலும் மூத்தவனுக இருக்கலாம்; ஆனல் புத்தியில் என்னிலும் சின்னவனுக, மட்டமானவனுக மாறிவிட் டாய். எனக்கு விடுதலே வாங்கித் தந்துவிட்ட உரிமையின் பேரிலே எதை வேண்டுமானுலும் பேசலாம் என்று துணிந்து விட்டாய். நான் விவாகரத்துக்கோரியதன் அடிப்படை, என் கணவருக்கு விடுதலே கொடுக்க வேண்டும் என்ற ஒரே நோக்கத் தைத் தவிர, எனக்கு மறு வாழ்வு தேடிக்கொள்ள வேண்டும் என்ற மாற்று எண்ணத்தால் அல்ல. அவர்...அவர்... வேருெரு பெண்ணே மிகவும் மனம் விரும்பி நேசிக்கிருர். அவர்கள் இன்ப வாழ்வுக்கு இடையூருக என் நினேவு அவரிடையே இருக்க வேண்டாம் என்பதற்காக மட்டுமே நான் குணம் கெட்டவளாக மாறி அவரிடமிருந்து விடுதலேயும் வாங்கிக்கொண்டு விட்டேன். அதற்காக இன்னெருவனே மணந்து கொள்வேன் என்றும் நினேத்துவிட்டாயே? தூ...!" சாரதா விக்கி வெடித்துக் கொண் டிருந்தாள்.

அதை அடக்கிச் சரவணனிடமிருந்து சிரிப்பொலி பறந்தது.

"அப்படியானுல் மிகவும் நல்லதாயிற்று சாரதா. உன் கணவருக்கு எப்படி இன்னெரு பெண்ணே நேசிக்க உரிமை இருந்ததோ, அதைப்போலவே உனக்கும் இன்னெருவனே மணந்து கொள்ளவும் உரிமை உண்டு என்பதை நிலேநாட்டிவிட்டால் போயிற்று! எனக்கும் என் கடமை முடிந்தாற் போலிருக்கும்."

"போதும் நிறுத்து, உன் கடமையும், பாசமும். மேலே ஒரு வார்த்தை பேசினுலும் என்ன நடக்குமோ தெரியாது!" குமுறிக்கொந்தளித்தாள் சாரதா.

"என் சொல்லேக் கேட்டு நடப்பதானுல் மட்டுமே உனக்கு இந்த வீட்டில் இடமுண்டு. இல்லேயானுல் இந்த நிமிடமே இந்த இடத்தை விட்டு வெளியேறு..."

"எங்கே அண்ணு போவேன்?" சாரதா அனுதையாகத் தடுமாறினுள்.

எங்கே வேண்டுமானுலும் போ!" என உறுமினுன் சரவணன்.

"அண்ணு!"

"நான் இருக்கிறேன். என் வீட்டிற்கு வா அம்மா சாரதா போகலாம்." என்ற அழைப்புக் குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தாள்.

அண்ணன் நீலமேகம் நின்று கொண்டிருந்தார்.

"திருமணம் என்பது நினைத்த மாத்திரத்தில் மாற்றிக் கொள்ளும் கடைச் சரக்கல்ல; கணவன்-மனைவி உறவு, காலம் காலமாய்த் தொடர்ந்து வரக்கூடியது. அதை எந்தக் காரணத்தாலேயும்—தியாகத்தின் அடைப்படையாலும் கூட முறித்துக் கொள்ள முடியாத உறவு. பாசம், பற்று எல்லாமே அது தான். சட்டமும் சமூகமும் உங்களைப் பிரித்தாலும், அன்பும், பாசமும் விட்டுக் கொடுக்கும் தன்மையும் உங்களை ஒன்று சேர்க்கட்டும். நான் உங்கள் உறவு ஒன்றுகூட முயற்சி செய்கிறேன்," என்று கூறிய அண்ணனின் பேச்சைத் தொடர்ந்து, அவரைப் பின்பற்றி நடந்தாள் சாரதா.



முத்துராமலிங்கம்

45

# விளக்கேற்ற வந்தவள்

"மணம் செய்யாது என்றும் கன்னியாகவே உள்ள பெண்களை, ஆண்கள் சமுதாயம் சற்றுச் சந்தேகக் கண்களுடனேயே பார்க்கும். ஆனால் தமிழ் இனமோ, மணமாகாத பெண்களை அவ்வளவாக மதிப்புக் கொடுக்காததோடு அவர்களைப் பூர்ணத்துவம் பெற்றவர்களாக அங்கீகரிப்பதும் இல்லை'' என்ற இந்த வார்த்தைகளை யாரோ யாருக்கோ சொன்ன வார்த்தைகளாக ஒதுக்கித் தள்ள முடியவில்லை, மிஸ். சாந்தா, எம். ஏ., அவர்களால். கோமதி ஈஸ்வரர் பெண்கள் கல்லூரியின் பிரின்ஸ்பால் சாந்தாவின் உள்ளமும் சிந்தனையும் இந்த வார்த்தைகளுக்கு மதிப்புக் கொடுக்க ஆரம்பித்ததே சென்ற இரண்டு ஆண்டுகளாகத் தான்.

இருபத்து மூன்றும் வயதில் எம். ஏ. பட்டம் பெற்ற சாந்தா, இரண்டு ஆண்டுகள் விரிவுரையாளராகப் பணிபுரிந்த பிறகு கடந்த எட்டு ஆண்டுகளாக கல்லூரி பிரின்ஸ்பாலாக பணிபுரிந்து வருகிறார். பிரபல வழக்கறிஞர் ரத்தினவேல் முதலியாரின் மூத்தமகளான சாந்தாவுக்கு, இரு சகோதரர்களும் ஒரு சகோதரியும் உண்டு. சகோதரர்கள் இருவரும் வழக்கறிஞர்களாகப் பெரும் புகழும் பணமும் பெற்று வாழ்ந்து வந்தனர். சகோதரிக்கு மணமாகி மூன்று குழந்தைகளும் இருந்தன. ஆனால் எல்லோருக்கும் மூத்தவளான சாந்தா மட்டும் மணம் ஆகாத கன்னியாகவே இருக்கிறாள். கல்லூரியில் படிக்கும் பொழுது படிப்பினால் ஏற்பட்டுள்ள கர்வத்தினால் ஆண்களை அலட்சியம் செய்தாள். ஒருவனை மணந்து கொண்டு அவனுக்கு மனைவியாக அவனது ஆசாபாசங்களுக்கு, கட்டுப்பட்டு அடங்கி நடக்க அவளது தன்மானம் இடம் கொடுக்கவில்லை. உணர்ச்சிகளை அடக்கி வாழ்வு முழுவதும்

வடுப்படாத கன்னியாகவே வாழ ஆசைப் பட்டாள்; வாழ்ந்தும் வந்தாள் கடந்த பல ஆண்டுகளாக. முப்பத்திரண்டு வயதைத் தாண்டிய அவளது உள்ளத்தில் மணம் செய்து கொள்ள வேண்டும் என்ற ஆசை அதிகம் ஏற்பட்டதேயில்லை. பருவத்தின் கொந்தளிப்பு அவளைப் பல முறை வாட்டி வதக்கிய போதெல்லாம், மகாத்மா காந்தியடிகளின் பிரம்மச்சரிய ஆலோசனைகள் அவளது சுய உணர்வைத் தட்டி எழுப்பி நேர்மைப் பாதையில் அவளை அழைத்துச் செல்லும்.

அன்ன நடை, பின்னல் சடை, வண்ண உடை, சின்ன இடை, —இவை அவளிடம் இன்னும் இருந்தன. புன்னகை புரியும் சந்திர வதனம், கயல் கண்கள், கட்டமைந்த மேனி, பொன்னைத் தோற்கடிக்கும் பளபளப்பான நிறம் இவை அவளை விட்டுச் செல்லவில்லை. பசுமை மறைந்து காய் கனியானதும் உள்ள கவர்ச்சி, சுவைக்கப்படாத கனியின் ஈர்ப்பு, அவளிடம் சரணடைந்தே இருந்தன. அவளது பள்ளிப் படிப்பிலே பார்த்து மயங்கியவர் பலர். கல்லூரி வாழ்விலே கட்டிளம் காளையரின் அம்புவிழிகள் பல அவளைத் தாக்கி உள்ளன. விரிவுரையாளராகப் பணிபுரியும் பொழுதும், பிரின்ஸ்பாலான பிறகும் பல உயர்தரமானவர்களின் பார்வையின் ஈட்டி அவளை நோக்கி வீசப்பட்டதுண்டு. ஆனால் எந்த அம்பு விழிகளோ, பார்வை ஈட்டிகளோ அவளது மூடிய இதயக் கோட்டையின் முன் செயலற்றுத் தான் போயின. எட்டாத உயரத்தில் அவள் இருப்பதாக எண்ணிக் கொண்டனர், அவளை நாடினர். ஆம், அவளும் எட்டாக் கனியாகவே தான் இருந்தாள். அப்படி இருக்கத்தான் ஆசைப் பட்டாள். ''ஒவ்வொரு இந்தியப் பெண்ணும் மணம் செய்து கொள்வதற்காகவே பிறக்கவில்லை. பிரம்மச்சரிய வாழ்க்கையை மேற்கொண்டு பாரதப் பூமிக்குப், பெருமை தேடித் தரப் பிறந்தவளே'' என்ற காந்தியடிகளின் பொன்மொழியை அடிக்கடி தன் மனத்தில் எழுதிப் படித்துப் பார்த்துக் கொள்ளுவாள்.

இந்த ஆண்டு, கல்லூரி தமிழ்ப் பேரவையின் கூட்டத்திற்கு பிரபல பேச்சாளர் கோபாலன் அழைக்கப்பட்டிருந்தார். பிரபல கதாசிரியர். பெரிய பத்திரிகை ஒன்றின் உதவி ஆசிரியர். தூயதமிழில் மடைதிறந்த வெள்ளம் போன்று பேசும் இயல்பினர். காந்தியக் கருத்துக்களில் ஆழ்ந்த புலமை பெற்றவர்; முப்பது வயது குறுக்கிப் பிடித்துள்ள இளைஞர். பார்ப்பதற்குக் கம்பீரமான தோற்றம் கொண்டு இருந்ததே போல், கம்பீரமான பேச்சு வன்மையும் அவரிடம் அடைக்கல மடைந்திருந்தது. தமிழ்ப் பேரவையிலே முழங்கினார். அவரது முழக்கத்தின் ஒலி அலைகள், தன் அறையில் அமர்ந்திருந்த சாந்தாவின் செவிகளை மெதுவாக எட்டின. அந்த ஒலியின் முதல் அலையே அவளை

மெய் சிலிர்க்க வைத்தது. தன்னையறியாமலேயே அக்குரலில் ஒரு மயக்கம் ஏற்பட்டது. தன் அறையிலிருந்து கூட்டம் நடக்கும் இடத்திற்கு வந்த சாந்தா, சுவாரஸ்யமாக மேடையில் பேசிக்கொண்டிருக்கும் கோபாலனைப் பார்த்தாள். அந்தப் பார்வையை அவளால் அவனிடமிருந்து அகற்றவே முடியவில்லை. அந்த நினைவை அடக்கி ஒடுக்க முயன்றது அவளது மனச்சாட்சி. மனச்சாட்சியை வென்ற அந்த நினைவு அவனோடு நீண்டநேரம் பேச, அவனைப்பற்றி அறியத் துடித்தது. கூட்டம் முடிந்ததும் அவனுடன் நீண்ட நேரம் பேசினாள். அவளை அணு அணுவாக உணர்ந்து இருந்தான் கோபாலன். அவளைப்பற்றி மிக உயர்ந்த மதிப்பும் மரியாதையும் வைத்திருந்தான். ஆனால் அவளோ இன்றுதான் முதன் முதலாக அவனைப் பார்க்கிறாள். பலர் போற்றும் பெருங்குணம் கொண்ட பிரின்ஸ்பாலுடன் பேசுவதில் அவனுக்கு அளவற்ற ஆனந்தம். ஆனால் அவளுக்கே புரியாமல் அவள் மனம் அவனிடம் ஈடுபட்டு விட்டது என்று எண்ணும் அளவுக்கு அவள் உள் மனத்தின் தூண்டுதலால் நேரம் போவதே தெரியாமல் நீண்ட நேரமாக உரையாடினாள். அடிக்கடி தன்னைவந்து சந்திக்கும்படி வற்புறுத்தினாள். அவளது வற்புறுத்தல் அவனுக்குப் பெரிய ஆச்சரியமாக இருந்தது.

கோபாலன் போன பிறகு மனச்சாட்சி அவளை மறுபடியும் கண்டித்தது. அவனுடன் இவ்வளவு பேசியது, அவன் மேல் இத்தனை அன்பு கொண்டது தவறு என்று மனச்சாட்சி, கண்டித்ததை, மனம் உதாசீனம் செய்ததோடு, மீண்டும் மீண்டும் சந்திக்க ஆசைப்பட்டது.

தன்னிடம் படித்துப் பட்டம் பெற்ற பெண்கள் பலர் எவ்வளவோ பெரிய பெரிய பட்டங்கள் எல்லாம் பெற்றுப் பிறகு ஆணுக்குத் துணையாய் குழந்தைகளைப் பெற்றுக் குடும்பம் நடத்துவதைப் பார்க்கும் போதெல்லாம் கோபாலனைப் பற்றிய எண்ணம் உள்ளத்தை ஆக்கிரமித்தது. இதுவரை குடும்பம் நடத்தும் பெண்களை அவ்வளவாகப் பொருட்படுத்தாத அவள் உள்ளம் இப்பொழுது குடும்பம் நடத்தும் பெண்களைப் பற்றியே சிந்திக்க ஆரம்பித்தது. இளம் உள்ளத்து இளமை ரத்தம் முறுக்கேறி, அந்த இளம் ரத்தக் கொதிப்பை, பருவத்தின் கொந்தளிப்பை, இதுவரை அடக்கி ஒடுக்கிக் கட்டுப்படுத்தியிருந்த அவளது உணர்வு இப்பொழுது கட்டு மீறிச் செல்ல ஆரம்பித்தது.

தன் தம்பிமார்களின் குழந்தைகளும் தங்கையின் கைக் குழந்தையும் தன்னைச் சுற்றி வளைய வரும்பொழுது முன்பெல்லாம் மகிழ்ச்சி கொள்ளுவாள். ஆனால் தனக்கென்று ஒன்று வேண்டும் என்ற ஆசை அவள் விரும்பாமலேயே அவள் அடி

மனத்தின் ஆழத்தில் கோபாலனைச் சந்தித்ததில் இருந்து பதிந்தது. துணை வேண்டாம் என்ற அவளது வைராக்கியம், மடமடவெனச் சிதைந்து, அறிவின் அஸ்திவாரத்துடன் அவள் கட்டியிருந்த வைராக்கியக் கோட்டையைத் தகர்த்து விட்டது. அவளது ஆசையின் கொடும் தாக்குதலைத் தன்னால் இயன்ற மட்டும் தடுத்து நிறுத்தப் போராடிற்று. அவள் கொண்ட வெறி ஆசை, வெற்றிபெற, அறிவும், உள்ளக் கட்டுப்பாடும், தோல்வியை அணுகிக்கொண்டே வந்தன.

தன் உள்ளம் பேதலிக்கும்பொழுது எல்லாம் மன அமைதியையும், தெளிவையும் தன்னம்பிக்கையையும் கொடுத்து வந்த மகாத்மாவின் பிரம்மச்சரியக் கொள்கைகள் இப்பொழுது பலன் கொடுக்கவில்லையே என்று மனம் புழுங்கினாள். புதியதாகச் சஞ்சலமுற்றுவிட்ட அவள் உள்ளம் அவளைக் கோழை என்று குற்றம் சாட்டிற்று. குடும்பக்காரியங்களிலும், தன் தங்கைக்கு இருந்த செல்வாக்கு, தனக்கு இல்லை என்பதை உணரப் பல சந்தர்ப்பங்கள் ஏற்பட்டன. சாதாரண வெறும் உடல் உணர்வு என்று எண்ணிக் கேலி செய்து கொண்டிருந்தாளே, தாம்பத்ய உறவு, அந்த உறவு எவ்வளவு தெய்வீகமானது என்பதைப் படிப்படியாக அவள் மனம் உணர்ந்தது. யாருக்கும், பலனில்லாது காட்டில் அடித்த நிலவாய், பாலைவனத்தில் வீசிய தென்றலாய்த் தன் வாழ்வு நடந்து வந்திருப்பதை அடிக்கடி எண்ணிப்பார்த்தாள். அவள் உள்ளம் 'துணை தேவை'...... 'துணை தேவை' என்று ஓங்கார மிட்டது. அந்த ஓங்காரத்தின் ஒலி அவளது நாடி நரம்புகளிலெல்லாம், தசை அணுக்களிலெல்லாம், பிரதிபலித்தது.

அவனைத் தேடிச்சென்று பேசினாள். அன்பு செலுத்தினாள். அவளது அன்பு உள்ளத்தின் செய்கையில் அவன் திக்குமுக்காடிப் போனான். அவன் வேண்டாம் என்று மறுத்தும் அவனது பொருளாதாரத்தைப் பெரிதும் பெருக்கினாள். பொருளாதாரத்தில் தனக்குச் சமமாகக் கொண்டுவந்துவிட ஆசைப்பட்டாள். கொண்டுவந்தும் விட்டாள்.

பிரின்ஸ்பால் தன்னை விரும்புகிறாள் என்பதை அறியும் பொழுது நடைமுறை நிகழ்ச்சிகளை அவனால் நம்பவே முடியவில்லை. ஆனால் அவனது அன்பிற்கு ஏங்கிய அவளது ஒவ்வொரு செய்கையும் அவளை முழுவதும் அவனிடம் சரணடைய வைத்தது. அவனிடம் அவள் வாழ்வுத் துணையைக் கண்டாள்.

மீண்டும் மனச் சாட்சி குமுறிய பொழுது, தற்செயலாக அன்றுவந்த ஒரு தினசரிப் பத்திரிகையில் வெளியாகி இருந்த மகாத்மாவின் பொன்மொழி அவள் கண்களில் தென்பட்டது.

"காம உணர்ச்சியைக் கட்டுப் படுத்த முடியாத ஒருவர் திருமணம் செய்து கொள்வது தவறானதல்ல" என்ற பொன் மொழி அவள் மனச்சாட்சியின் குமுறலை அடக்கி விட்டது. மீண்டும் அவள் கைகள் காந்தியடிகளின் பிரம்மச்சரிய நூலை எடுத்துப் புரட்டின.

நிலைக்கண்ணாடி முன்பு, எந்தத் தோற்றத்துடன் நிற்கிறோமோ, அந்தத் தோற்றமே நிலைக்கண்ணாடியில் பிரதிபலிப்பது போன்று முன்பு அவளது பிரம்மச்சரியக் கொள்கைகளுக்கு ஊக்கம் கொடுத்த அதே நூல், இன்று அவளது திருமண ஆசைகளுக்கு ஊக்கம் கொடுப்பது போன்று தோன்றிற்று.

ஆடம்பரமற்ற முறையிலே கோபாலனைத் தன் கணவராக, ஆலயமணி ஒலிக்கும், அறிந்தவர்களின் ஆசி வார்த்தை ஒலிக்கும், நாதஸ்வர இன்னிசை ஒலிக்குமிடையே, ஏற்றுக் கொண்டாள் சாந்தா. அவளது வீழ்ச்சியைச் சிலர் கேலி செய்தாலும் வயது சென்ற, அவள் பெற்றோரும், தம்பிகளும், தங்கையும், மனப்பூர்வமாக ஆதரித்தனர். வீழ்ச்சியாகச் சிலர் சொல்ல, வாழ்வு மலர்ந்ததாக அவள் உள் மனம் கூத்தாட இன்ப இசை பரவிற்று அவர்கள் வாழ்க்கையிலே.

அவர்கள் இருவரின் திருமண வாழ்த்துக்களிடையே மகாத்மாவின் "இல்லறமும் பிரம்மச்சரியமும்" என்ற நூலும் இருந்தது அவளுக்கு ஒரு வியப்பையும் தன்னம்பிக்கையையும் கொடுத்தது. இல்லறத்தில் இருந்து கொண்டே பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று முடிவுசெய்து கொண்டாள் தனக்குள்ளாகவே.



# 46

## உண்டி கொடுத்தோர்

"யார்? மகுதூம் மியானு, அஸ்ஸலாமு அலைக்கும். ஏ இவ்வளவு தூரம்?'' என்று வரவேற்றவாறு வந்திருந்த அ நண்பர் முகத்தை ஏறிட்டுப் பார்த்தேன். நல்ல வேளை அவ போர்க் கோலம் பூண்டிருக்கவில்லை.

உலகத்தில் நிலவும் கொடுமைகள், நடக்கும் ஒழுங்கீனங்கள் இழைக்கப்படும் அநீதிகள் அனைத்துக்கும் எதிர்க் குரல் கொடுத்து போர் முஸ்தீபு செய்பவர் என் நண்பர். யார் எந்த அபிப்பிர யம் தெரிவித்தாலும் அதைப் பரிசீலனை செய்யாது ஏற்று கொள்ள மாட்டார். அந்நேரத்தில் அபிப்பிராயம் சொல்பவரி அந்தஸ்தைப் பற்றி அக்கரைப்பட மாட்டார். ஆற்றொழு கோடு நீந்திச் செல்வது தான் காரியம் சாதிப்பதற்கு வழி என் நம்பிச் செயலாற்றும் பெரும்பான்மை மக்களிடையே, எப்பொழு தும் எதிர்நீச்சல் போட்டே பழக்கப்பட்டவர். ''போர் சேவல்'' என்று அவருக்கு நண்பர்கள் சூட்டிய பட்டம் பொருத் முடையது தான்!

ஆனால் அன்று அவர் முகத்தில் போராட்டத்தின் அறிகுறியே தென்படவில்லை.

''பாய்! உங்களுக்கு முன்ஷி முத்துசுந்தரத்தைத் தெ யுமா?'' என்று கேட்டார்.

''முன்ஷி முத்துசுந்தரமா? கேள்விப்பட்ட பெயராக யிரு கிறதே? அரசியலில் அவர் பெயர்......!''

''வஸ்தஃபிருல்லாஹ்! அவர் அரசியலுக்கு முழுக்குப் போட் டுக் கால் நூற்றாண்டுக்கு மேலாகிவிட்டதே! 'அரசியல் ஓ அங்காடி; அங்கே விற்பவர்கள் எத்தர்கள்; வாங்குபவர்கள்

துருடர்கள்' என்பது அவருடைய பொன்மொழியாயிற்றே!'' என்று சொல்லிச் சிரித்தார் மகுதூம் மியான்.

''இப்பொழுது நினைவுக்கு வருகிறது. அவருடைய பூர்வாசிரமம் அரசியல் தான். பிறகு ஏதோ அதிருப்தி கொண்டு அரசியலில் இருந்து ஓய்வு பெற்றிருக்க வேண்டும்!'' என்று குறிப்பிட்டு அவர் 1942ம் ஆண்டில் சிறைக்குச் சென்றிருந்ததையும் நினைவு படுத்தினேன்.

''அவரே தான்! ''கூட்டுறவு இயக்கத்தில் காந்தீயப் பொருளாதாரம்'' என்னும் பொருள் பற்றி ஆராய்ச்சி நடத் திக் கொண்டிருக்கிறேன். முன்ஷி முத்து சுந்தரம் காந்தீயப் பொருளாதாரத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர். எனவே அவரைச் சந்தித்து இது பற்றி உரையாடிவிட்டு வரலாம் எனக் கிளம்பினேன். நீங்களும் வருகிறீர்களா?'' என அழைத்தார்.

பொருளாதார ஏற்றத் தாழ்வுகள் சீர்படுவது தான் மக்களின் அமைதியான வாழ்க்கைக்கு முதற்படியாக அமையும் என்னும் கருத்தில் கவனம் செலுத்தி வந்த நான் நண்பரின் அழைப்பை மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொண்டு அவரோடு புறப்பட்டேன்.

* * *

''அப்பா சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார்: ஒரு நொடியில் வந்து விடுவார்,'' என்று மலர்ந்த முகத்தோடு வரவேற்ற அவருடைய பையன் முன் அறையில் எங்களை உட்கார வைத்தான்.

விசாலமான அந்த அறையை நோட்டமிட்டேன். ஓர் எழுத்து மேஜை, நான்கைந்து நாற்காலிகள், தவிர தட்டு முட்டுச் சாமான்களேயில்லாமல் வெறிச்சென்று இருந்தது அந்த அறை. ''உண்பது நாழி, உடுப்பது நான்கு முழம்,'' என்பதை ''உண்பது நானுழி, உடுப்பது ஒரே முழம்'' என்று மாற்றிக் கொழுத்த உடலும், குறைந்த உடையும் கொண்ட சினிமா நட்சத்திரங்களின் படங்கள், வலுவிலே புன்முறுவலை வரவழைத்துக் கொண்டு 'போஸ்' கொடுத்து நிற்கும் அரசியல் தலைவர்களின் சித்திரங்கள்; பாமர ரசனைக்காக, சமயத் துறையைப் பொழுதுபோக்குக் களங்களாக்கும் மதத்தலைவர்களின் ஓவியங்கள் ஆகியஎவையுமே அறைச் சுவர்களை அணி செய்யவில்லை. மாறுக பொன்மொழிகள், கருத்துரைகள் தாங்கிய பல பலகைகள் சுவர்களில் பொருத்தப்பட்டிருந்தன.

''உலகத்தின் வயதோடு ஒப்பிடும் போது, நம் ஆயுள் ஒரு கணம்; அதைப் பேச்சிலே வீணாக்குவதா?'' என்று அரசியல் வாதிகளை அதிர்ச்சியடையச் செய்யும் பொன்மொழி நீண்ட பலகையொன்றில் பொறிக்கப்பட்டிருந்தது.

இந்த ஒன்று தவிர மற்றப் பலகைகள் எல்லாம் பசிப் பிணியின் கொடுமையையும் அதைப் போக்குவதின் புண்ணியத்தையும் விளக்குவனவாக இருந்தன.

"வயிற்றுக்குச் சோறிடல் வேண்டும், இங்கு வாழும் மனிதர்க்கு எல்லாம்," என்று பாரதி ஒரு சுவரில் பறை சாற்றிக் கொண்டிருந்தார்.

"அற்றார் அழி பசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றான்பொருள் வைப்புழி"

என்று வள்ளுவர் ஒரு சுவரில் முழங்கிக் கொண்டிருந்தார்.

முத்துசுந்தரம் உட்காரும் நாற்காலிக்கு மேலே "ஏழைக்கு ரொட்டியின் உருவிலே 'தான் கடவுள் காட்சியளிக்கிறார்,' என்னும் காந்திஜீயின் பொன்மொழி கதர்த் துணியில் எழுதப் பட்டு சட்டம் மாட்டி வைக்கப்பட்டிருந்தது.

அந்த அறையின் தோற்றத்தையும், அதில் காணப்பட்ட பொன்மொழிகளையும் கண்ட நண்பர் மகுதூம் மியானுக்குத் தாம் இங்கு வருவதில் எடுத்துக்கொண்ட சிரமத்துக்குப் பயன் கிடைக்கும் என்ற உள்ளநிறைவும், உறுதியும் ஏற்பட்டு இருக்க வேண்டும்.

"பாய்! எந்தப் பொன்மொழியை உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருக்கிறீர்கள்" என்று காரிய சாதனையின் மகிழ்ச்சி, குரலில் தொனிக்கக் கேட்டார்.

"அதாவது, காந்திஜீ......" என்று நான் என் பதிலை முடிக்கும் முன்னர், "காந்திஜீக்கு என்ன?" என்று கேட்டுக்கொண்டே முன்ஷி முத்துசுந்தரம் உள்ளே நுழைந்தார்.

தலை தும்பைப் பூவைப் போல் நரைத்து, முகத்தில் சுருக்கங்கள் விழுந்து, முதுமை உடல் முழுதும் தன் கோலங்களை இழைத்திருந்த போதிலும், அவருடைய பார்வையில் ஓர் ஒளி, குரலில் ஒரு காம்பீர்யம், நடையில் ஒரு தெம்பு இருக்கத்தான் செய்தது.

"காந்திஜீயின் பொன்மொழியைப் பார்த்ததும் எனக்கு அருமையான வரலாற்று நிகழ்ச்சி ஒன்று நினைவுக்கு வந்தது. பசிப் பிணியில் இத்துணை அக்கரை செலுத்தும் தாங்கள் அதைக் கேட்க ஆசைப்படுகிறீர்கள் என்றே எண்ணுகிறேன்," என என் பாயிரத்தைத் துவங்கினேன்.

நண்பர் மகுதூம் மியான் சிரித்துவிட்டார்.

"பாய்! கதை சொல்வதற்கு உங்களுக்கு ஏதாவது வந்து நினைவூட்ட வேண்டுமா என்ன? நீங்கள் தான் ஸெல்ப்-ஸ்டார்டர்

[Self-starter] ஆயிற்றே! ஹூம் சொல்லுங்கள்," என்று கூறிக்கொண்டே "உலகத்தின் வயதோடு ஒப்பிடும் போது, நம் ஆயுள் ஒரு கணம்........" என்னும் பொன் மொழியை அர்த்த புஷ்டியோடு பார்த்தார்.

அந்தப் பக்கமே கவனிக்காதவன் போல் நான் கதையைத் துவங்கினேன்.

ஹஜ்ஜீக் காலம். இறைவனின் வணக்கத்துக்காகப் பூவுலகில் முதன் முதலில் நிர்மாணிக்கப்பட்ட கஃபத்துல்லாஹ் என்னும் புனிதப் பள்ளி வாயிலைச் சுற்றி மனித வெள்ளம் அலைமோதிக் கொண்டிருந்தது. புனித மிக்க இப்பயணத்துக்கென உலகின் ஒவ்வொரு கோணத்திலிருந்தும் வந்திருந்த யாத்ரிகர்கள் உருகிப் பாயும் உள்ளமும், பெருகிப் பாயும் கண்களும் கொண்டவர்களாக மெய்மறந்து இருந்தனர்.

இஸ்லாமிய சமயக் கட்டளைகளில் ஐந்தாவது கடமையான ஹஜ்ஜை நிறைவேற்றிய இதய உணர்வு ஒவ்வோர் உள்ளத்திலும் மலர்ந்திருந்தது. "லப்பைக்க அல்லாஹும்ம, லப்பைக்க அல்லாஹும்ம!" என்று அந்த ஹாஜிகள் முழக்கிய முழக்கம் மக்காவின் பெருவெளிகளில் காற்ருேடு கலந்து, ஆத்மீக மணம் பரப்பிக் கொண்டிருந்தது.

ஹஜ்ஜின் பாக்கியத்தைத் தனக்குத் தந்த தலைவனின் பேரருளை நினைத்துக் கொண்டே வெண்மணலில் அமர்ந்திருந்தார்கள் துன்னூன் மிஸ்ரீ என்ற இறைநேசச் செல்வர்.

"பல்லாயிரக் கணக்கான மக்கள் எத்தனையோ இன்னல்களை இன்முகத்தோடு ஏற்று, இந்தப் புனித யாத்திரையின் நிமித்தம் இங்கே வந்திருக்கிருர்கள். ஆனுல் எல்லோருடைய ஹஜ்ஜையுமா மாற்றுக் குறையாததாக அல்லாஹ் ஏற்றுக் கொள்கிருன். பல்லாயிரத்தில் ஒன்று அப்படி பாக்கியம் பெற்றிருக்கும்," என்று அத்தூயவர் சிந்தித்துக் கொண்டிருக்கும் போதே அசாதாரண மான ஓர் ஒலி அவர்கள் செவிப்பறையைத் தட்டிற்று.

"துன்னூன்! இந்தத் தடவை ஒருவருடைய ஹஜ்ஜை மாற்றுக் குறையாததாக ஏற்றுக் கொண்டிருக்கிறேன்," என்று தெளிவாகக் கேட்டது.

"யா அல்லாஹ்! அந்தப் புண்ணியவான் யார்! நான் இப்பொழுதே அவரை சந்திக்க வேண்டும்," என்று தங்கள் விருப்பத்தை வெளியிட்டார்கள் மிஸ்ரீ.

"அம் மனிதர் பெயர் அஹ்மது அஷ்காக். திமஷ்கு (டமாஸ் கஸ்) நகரைச் சேர்ந்தவர். ஆனுல் அவர் மக்காவுக்கே வர வில்லை!"

இத்துடன் இறை அறிவிப்பு நின்று விட்டது.

''மக்காவுக்கு ஹஜ்ஜுக்கென்று வராத ஒரு மனிதரை ஹஜ்ஜு செய்ததாகக் கருதி அதன் பூரண பயனையும் கொடுத்து, அவரை மேம்படுத்தியிருக்கிறுன் இறைவன்! இது என்ன விந்தை! அச் சீமான் கோடீஸ்வரராகயிருந்து, ஹஜ்ஜுக்குப் போகும் மக்களுக்கெல்லாம் வாரி வழங்கியிருப்பார். எப்படியும் திமஷ்கு சென்று அவரைக் கண்டு வர வேண்டும்'' என்று எண்ணியவாறே பிரயாணத்தைத் துவங்கினுர்கள் துன்னூன் மிஸ்ரீ.

செல்வம் கொழித்த திமஷ்கு நகரில் செல்வர்கள் வாழும் வீதிகளில் நடையாக நடந்தார்கள் மிஸ்ரீ. ஆனுல் அந்தத் தெருக்கள் எவற்றிலும் அஹ்மது அஷ்காக் என்ற பெயருடையவர் கிடைக்கவேயில்லை. கடைசியாக ஒரு மனிதர், ''சகோதரரே! இங்கு அஹ்மது அஷ்காக் என்று எந்தச் சீமானும் இல்லை. ஆனுல் நகரின் கோடியிலே செருப்புத் தைக்கும் ஒரு மனிதர் அந்தப் பெயரோடு இருக்கிறுர். விசாரித்துப் பாருங்கள்,'' என்று யோசனை சொன்னுர்.

செருப்புத் தைக்கும் அஷ்காக்கைக் கண்டதும் 'இறைவனின் பாராட்டுதலைப் பெற்றவர் இந்த மனிதராகத் தான் இருக்க வேண்டும்,' என்ற உள்ளுணர்வு துன்னூன் மிஸ்ரீயவர்களுக்கு ஏற்பட்டது.

தாங்கள் கேட்டவற்றையெல்லாம் அஷ்காக்கிடம் கூறிய துன்னூன் மிஸ்ரீ ''தாங்கள் ஹஜ்ஜுக்குப் போவதற்காவது நாடியதுண்டா?'' எனக் கேட்டார்கள்.

* * *

''பாவா! அதை ஏன் கேட்கிறீர்கள்; அது ஒரு நீண்ட கதை. பல ஆண்டுகளாக எனக்கு ஹஜ்ஜு செய்ய வேண்டுமென்ற ஆசை; பொருள் வசதியில்லாது ஒவ்வோர் ஆண்டும் தள்ளிப் போட்டுக் கொண்டே வந்தேன். இந்த ஆண்டு எப்படியும் ஹஜ்ஜுக்குப் போக வேண்டும் என்று முந்நூறு திர்ஹம் வரை சேர்த்து விட்டேன். பணம் கையில் சேர்ந்ததும் ஹஜ்ஜை நிறைவேற்றி விட்டதாகவே என் உள்ளத்தில் ஒரு பெருமிதம் தோன்றி விட்டது.

ஆனுல் நம் திட்டப்படி என்ன நடக்கிறது, பாவா! ஒரு நாள் பொழுது சாயும் வேளை என் ஒரே மகன் ஏழு வயது நிரம்பப் பெருத பச்சிளம் பாலகன்— விக்கி விக்கி அழுது கொண்டே வந்தான். அவன் தாயும், நானும் பதறிப் போய் அவனைக்

கட்டியணைத்துக் கொண்டு, ''என்ன, என்ன ?'' என்று விசாரித்தோம்.

அடுத்த வீட்டுக்காரர் தன்னை அடித்து விட்டதாகக் கூறி 'கோ' வென்று அழுதான்.

எனக்குக் கோபம் பீறிட்டு வந்தது. அந்த அடுத்த வீட்டுக்காரன் அப்பொழுது என் முன்னே நின்றிருந்தால் அவனை என்ன செய்திருப்பேனோ என்று இப்பொழுது நினைத்தாலும் என் மெய் நடுங்குகிறது.

'விரு, விரு' என்று அவன் வீட்டுக்கு ஓடினேன். அப்பொழுது தான் அவன் சாப்பிட்டு விட்டுக் கையைத் துடைத்துக் கொணடிருந்தான்.

''பச்சைக் குழந்தையை இப்படி அடித்திருக்கிறாயே, உனக்கு மனித இதயம் இருக்கிறதா ?'' என்று கத்தினேன்.

அந்த மனிதன் அமைதியாகப் பேச ஆரம்பித்தான்; ''சகோதரரே! நான் சொல்லப் போவதைச் சற்றுப் பொறுமையுடன் கேட்டுத் தவறிருந்தால் என்னை மன்னியுங்கள்'', என்றான்.

களங்கமில்லாத அவன் பார்வையும், கலக்கமில்லாத அவன் பேச்சும் என்னை நிலை குலையச் செய்து விட்டன.

''ஹூம்! சொல்லும்,'' என்று அதட்டினேன்.

''சோதரா! நானும். என் மனைவியும், என் குழந்தைகளும் மூன்று நாளாகப் பட்டினி. பசி தணிக்க, வயிற்றில் கல்லைக் கட்டிக் கொண்டு, வல்லவனை நினைந்துருகிய வள்ளல் நபி பெருமானாரை நினைந்து, நான் எப்படியோ பசியின் கொடுமையைத் தாங்கிக் கொண்டேன். என் மனைவியும், தான் கண்ணீர்விட்டால், எங்கே நான் வேதனை பொறுக்காது துடி, துடிப்பேனோ என்று தன் துயரை அடக்கிக் கொண்டாள்.

ஆனால் பசியினால் கேவிக் கேவி அழுது—பிறகு அழவும் திராணியற்றுச் சுருண்டு படுத்திருக்கும் என் செல்வங்களைக் காண எங்களால் முடியவில்லை.

இரண்டு நாட்களாக நானும் வேலைக்கு அலைந்து பார்த்தேன். ஒரு மூட்டையைக் கூட யாரும் என்னைத் தூக்கச் சொல்லவில்லை.

இன்று ஏதேனும் உண்பதற்குக் கொண்டு வராமல் வீடு திரும்புவதில்லை என்ற உறுதியோடு காலையில் வெளிக் கிளம்பி

னேன். பழைய கதை தான். அரை திர்ஹம் கூடக் கிடைக்க வில்லே.

உச்சிப் பொழுது திரும்பும் வேளையில் நகரின் வெளியே சுற்றிக் கொண்டிருந்தேன். என் மக்களேயும், மனேவியையும் எப்படிப் போய்ப் பார்ப்பேன் என்று நான் வேதனைக் கண்ணீர் வடித்துக் கொண்டிருந்த பொழுது செத்த ஆடு ஒன்று என் கண்ணுக்குத் தென்பட்டது. அதே நேரத்தில், செத்த பிராணி யைத் தின்னக் கூடாது என்ற கட்டளேயும் நினைவுக்கு வந்தது.

ஆனல் அன்று என் குழந்தைகள் ஏதேனும் சாப்பிடா விட்டால், அவை துடி, துடித்து மடிந்து விடும் என்பது எனக்கு—நன்ருகத் தெரியும். எனவே மூன்று உயிர்கள் போ வதைப் பார்த்துக் கொண்டு சும்மாயிருப்பது தான் பெரிய பாவம் எனக் கருதி, அந்த ஆட்டை எடுத்துக் கொண்டு வந்து, கறி சமைத்து, உண்டோம். அந்த நேரத்தில் தான் உங்கள் செல்வத் திருமகன் என் வீட்டுக்குள் வந்து தனக்கும் அந்தக் கறி வேண்டும் என்று அடம் பிடித்தான்.

நான் தான் ஒரு பாவத்தைச் செய்து விட்டேன். எவ்வளவோ ஆசாரசீலராக இருக்கும் உங்கள் வீட்டுக் குழந்தை யும் அந்தப் பாவத்தைச் செய்வதற்கு நான் உடந்தையாக யிருப்பேனு? அந்தப் பையனிடம் எவ்வளவோ எடுத்துச் சொன் னேன். அவன் முரண்டு மிடித்து, சத்தம் போட்டுக் கொண்டி ருந்தான். மூன்று நாள் பட்டினியின் பலஹீனம், சட்டென்று கோபம் வந்து விட்டது. ஓர் அடி அடித்து விட்டேன். என்னே மன்னியுங்கள், என்று கண் கலங்கி நின்ருர் அம்மனிதர்.

அவருடைய மூன்று குழந்தைகள் பசியினல் துடி,து டித்து உயிர் விடயிருந்த சோகத்தைக் கேட்டதுமே, என் நெஞ்சம் வெடித்து விடும் போலிருந்தது. வேகமாக வீட்டுக்குத் திரும்பினேன்.

''ஆயிஷா, ஆயிஷா!'' என்று என் மனேவியை இறைந்து கூப்பிட்டேன்.

பதறிக் கொண்டே ஓடி வந்தாள் என் மனேவி.

''ஆயிஷா! நபிகள் பெருமானுர் என்ன சொன்னுர்கள்,'' அண்டை வீட்டான் பசித்திருக்கத் தான் மட்டும், வயிறு நிரம்ப உண்பவன் என்னேச் சார்ந்தவன் அல்லன்!'' என்று தங்கள் திருவாயால் சொல்லியிருக்கிருர்கள்.

''அண்டை வீட்டிக்காரனும், அவன் செல்வங்களும் பசியால் துடி துடித்துக் கொண்டிருக்க, நாம் வயிறு புடைக்க உண்டு

விட்டுப் பணமும் சேர்த்து வைக்கிறோம். இது அநீதி ஆயிஷா? பெரும் அநீதி! கொண்டுவா அந்தப் பணத்தை! அது என் சோதரனுக்கு உரியது,'' என்று கத்தினேன்.

முந்நூறு திர்ஹமும் அந்தச் சோதரனின் கைக்குச் சென்றது.

''இது தான் நான் ஹஜ்ஜுக்குப் போக விருந்த கதை,'' என்று கூறி முடித்தார் அஹ்மது அஷ்காக்.

''ஸுப்ஹானல்லாஹ்! ஆண்டவன் மனிதனின் தூய எண்ணத்துக்கும் பரிசு தருகிறான்!'' என்று வியந்து நின்றார்கள் துன்னூன் மிஸ்ரீ.

* * *

''ஆஹா! பசியின் கொடுமையையும், அதைப் போக்க உதவுவதினால் உண்டாகும் புண்ணியத்தையும் அருமையாக விளக்குகிறதே உங்கள் கதை!'' என்று ரசித்தார் முத்துசுந்தரம்.

''பாய்! நேர்த்தியான கதை தான். ஆனால் நாம் வந்த காரியம்......'' என்று தம் குறிக்கோளை நினைவு படுத்தினார் நண்பர் மகுதூம் மியான்.

''அதற்கு முன்னுரை தான் இது. முன்ஷியவர்கள் இப்பொழுது நான் விட்ட இடத்திலிருந்து துவங்குவார்கள்'' என்று கூறி வைத்தேன்.

''நீங்கள் கூறியது தான் என் பொருளாதாரத்துக்கு முன்னுரையும், இறுதியுரையுமாகும். ஒவ்வொரு மனிதனும் தன் அண்டை வீட்டுக்காரனின் நலத்தில் அக்கரை செலுத்த ஆரம்பித்தால், பசியேது? பிணியேது...—'' என்று தம் கதையைத் துவங்கினார் முத்துசுந்தரம்.

O★O

# 47

# ஆத்மதிருப்தி

அன்று வெள்ளிக் கிழமை. கோவிலுக்கு ஜனங்கள் கையில் பூத்தட்டுடன் சாரி சாரியாகப்போய்க் கொண்டிருந்தனர். வனஜாவுக்கு இதெல்லாம் வேடிக்கையாக இருந்தது. 'என்ன ஜனங்கள்! என்ன குருட்டு நம்பிக்கை!'' என்று மனதுக்குள் முணுமுணுத்துக் கொண்டாள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் அவளுடைய மன்னி கிரிஜா கையில் தேங்காய், பழம், பாக்கு, வெற்றிலை, புஷ்பம் முதலியவற்றை எடுத்துக் கொண்டு அர்ச்சனை செய்து வருவதற்காகக் கோவிலுக்குப் புறப்பட்டாள். அதைப் பார்த்த வனஜாவுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. ''எத்தனையோ படித்த மன்னி கிரிஜாவும் கூட அல்லவா குருட்டு நம்பிக்கையுடன் கோவிலுக்குப் போகிறாள்?'' என்று எண்ணினாள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் வனஜா என்ன எண்ணிக் கொண்டாளோ, தெரியாது! அழகாக ஆடை அலங்காரம் செய்து கொண்டு கோவிலுக்குப் புறப்பட்டாள். கோவிலுக்குப் போய்த் தன் மன்னிக்கு முட்டாள் பட்டம் கட்டிவிட வேண்டும் என்றும் கங்கணம் கட்டிக்கொண்டாள்.

'இதுதான் உன் பகவானா? இதில் என்ன இருக்கிறது? இந்தக் கல் சிலைக்கு ஆத்ம சக்தி ஏது? கலைக்கண்ணோடு நோக்கும் பொழுது இதில் கைதேர்ந்த சிற்பியின் கைத்திறன் தெரிகிறது. ஆனால் இதில் பூஜைக்கு உகந்த சக்தி என்ன இருக்கிறது என்பதுதான் எனக்குப் புரியவில்லை!'' என்று கேட்டுத் தன் மன்னியை மடக்க வேண்டும் என்று அவள் மனத்தில் தீர்மானித்துக் கொண்டாள்.

ஆனால்......

கோவிலின் கோபுரவாசலுக்குள் நுழையும்போதே அவளுடைய அந்த எண்ணங்கள் எல்லாம் எங்கோ மாயமாய் மறைந்து விட்டன. அநாயாசமாக நிரந்தர சுகத்தைத் தரும் சக்தி ஒன்று அவளுடைய உள்ளத்தில் குடி புகுந்தது. ஒய்யாரமாக அன்ன நடை பயின்று வந்த அவளுடைய கால்கள், தன் சஞ்சல சுபாவத்தை உதறித் தள்ளிவிட்டு, சாந்தமும், கம்பீரமும் நிறைந்த போக்கைப் பின் பற்றின. அவளையறியாமலே கால்கள் அவளைக் கோவிலுக்குள் இழுத்துச் சென்றன. உல்லாசமும் அமைதியும் ஒருங்கே ஒளி வீசக் கையில் அர்ச்சனைச் சாமான்கள் ஏந்திச் செல்லும் எண்ணற்ற ஆண் பெண்களை அவள் கண்டாள். பக்தர்களின் வாயிலிருந்து வெளிவரும் பக்திப் பரவசப் பாடல்களும் கோயில் கண்டாமணியின் இனிய நாதமும் ஒன்று கூடி, யாருமே கண்டறியாத ஒருமை மனப்பான்மையையும், அமைதி வாய்ந்த சூழ்நிலையையும் உண்டு பண்ணியிருந்தன. முன்பின் அறிமுகமில்லாத ஒரு சக்தி தன் தளிர்க் கரங்களை நீட்டிக் காரிருளிலிருந்து தேஜோமயமான பிரகாசத்தின் 'பக்கம் தன்னை இழுத்துச் செல்வதுபோல வனஜாவுக்குத் தோன்றியது.

படிகளைத் தாண்டிக்கொண்டு வனஜா ராதாரமணன் கோவிலுக்குள் நுழைந்தாள். மனமோகன உருவம் படைத்த கிருஷ்ண விக்கிரஹத்தையும் ராதையின் விக்கிரஹத்தையும் கண்டபொழுது பரிசுத்தமான அன்புதான் இப்படி உருவமெடுத்து வந்திருக்கிறதோ என்று எண்ணத் தோன்றியது. ''வனஜா! நீ சாந்தியும் சுகமும் வேண்டும் என்று விரும்புகிறாய். சுகபோகங்களும் இன்பக் கேளிக்கைகளும் தான் வாழ்க்கையின் பிரதானக் குறிக்கோள்கள் என்று எண்ணுகிறாய். ஆனால்...'' என்று யாரோ சொல்ல வருவது போலத் தோன்றியது.

அவள் மறுமடியும் தன் கண்களைத் துடைத்துக் கொண்டு பார்த்தாள். கடமை, உணர்ச்சி இவற்றுக்கு எடுத்துக் காட்டாக விளங்கும் ஸ்ரீராமரும் சீதையும் கண்களெதிரே காட்சியளித்தனர். அவர்களது பாதார விந்தங்களிலே ஊழியமும் உபாஸனையுமே உருவெடுத்த அனுமன் காட்சி அளித்தான். ஆகா, இந்தச் சிலைகளில்தான் என்ன பாவம்! என்ன பாவம்! அவை உயிர்ப் பிரதிமைகளாகவே அல்லவா தோற்றுகின்றன? உயிர்களையுடன் உரையாடும் இந்தச் சிலைகளைக் கற்சிலை என்று எப்படிச் சொல்வது? கண்களில் தான் என்ன காந்தி! கற்சிலைக்கு எப்படித்தான் ஜீவன் வந்ததோ? இதைப் பாராத கண்கள் என்ன கண்கள்?

இம்மாதிரியான சித்திர விசித்திரமான எண்ணக் குவியல்கள் அவள் உள்ளத்தில் குடிகொண்டன. தன்னை மறந்து சிந்தனை

யில் லயித்துவிட்ட அவளுடைய கண்களிலிருந்து எப்பொழுது இரு துளிக் கண்ணீர் பெருகிக் கன்னத்தின் வழியே ஓடிக் காய்ந் தனவோ, தெரியாது! இவ்வாறு வனஜா தன்னை மறந்து நின்று கொண்டிருந்தபொழுது பின்னாலிருந்து அவள் தோள்களைப் பிடித்து உலுக்கி, ''சீ, அசடு! எதற்காக அழுகிறாய்?'' என்று கேட்டாள் கிரிஜா.

''மன்னி! நான் அழவில்லையே! ஆனந்தக் கண்ணீர் அல்லவா இது! இவ்வளவு நாட்களும் சத்தியம், சிவம், சுந்தரம், மங்களம் என்னும் சொற்களைப் பிறர் சொல்லத்தான் கேட்டிருக்கிறேன். இன்றோ, அவற்றைப் பற்றிய உண்மை அநுபவமே என் உள்ளத்தில் எழுந்திருக்கிறது. அதனால் தான் இந்த ஆனந்த பாஷ்பம்!'' என்றாள் வனஜா.

வனஜாவின் வாயிலிருந்து இம்மாதிரியான சொற்களைக் கேட்டதும் கிரிஜாவுக்கு வியப்பாக இருந்தது. தர்க்கத்தில் சளைக்காத வனஜாவா, தர்மத்தை அலட்சியமாக மதிக்கும் வனஜாவா இப்படிப் பேசுகிறாள்? கிரிஜா அவளை ஒருமுறை ஏற இறங்கப் பார்த்தாள். வனஜாவினால் வாய் திறந்து அதிகமாகப் பேசமுடியவில்லை. கிரிஜாவின் பார்வையில் தோய்ந்திருந்த அர்த்தம் விளங்க அவளுக்கு அதிக நேரம் பிடிக்கவில்லை. தன் வாயிலிருந்து வெளிவந்த வார்த்தைகளைப் பற்றிச் சிந்தித்தாள்: 'இதைத் தன் தோல்வி என்று ஒப்புக்கொண்டு விடுவதா? அல்லது திடீரென்று உண்டான உணர்ச்சி என்று உதறித் தள்ளி விடுவதா?' என்று அவளால் ஒரு தீர்மானத்திற்கு வரமுடியவில்லை. வனஜா வாய் திறக்காமல் நிற்பதைக் கண்ட கிரிஜா, ''வனஜா, வா! இந்தப் புஷ்பத்தையும் மல்லிகைச் சரத்தையும் தெய்வத்துக்குச் சாற்றச் சொல்லுவோம். இது உன் பக்திக்கு அறிகுறியாக அந்தப் பகவானின் பாதாரவிந்தத்துக்குப் போய்ச் சேரட்டும்; தெய்வத்தின் பாதாரவிந்தங்களில் அர்ப்பிக்கப்பட்ட நம் வாழ்க்கைமலர் நம்மைப் பாவம், புண்ணியம் இவற்றினின்றும் காப்பாற்றிக் கடமையின் கண்ணே செல்லத் தூண்டும்; பச்சாத்தாபத்தினால் பெருகும் கண்ணீரைக் கொண்டு உள்ளத்தின் அழுக்கை அலம்பலாம். ஆனால் அத்துடன் நம் கடமை பூர்த்தியுற்று விடுவதில்லை. வாழ்க்கையின் ஒவ்வொரு நிமிஷமும் விலை மதிப்பற்றது. சாத்துவீகமான கடமையின் பக்கம் நம்மைத் தூண்டக் கூடியது. வா, நம் கடன் பணி செய்து கிடப்பதாகவே இருக்க வேண்டும்'' என்று சொன்னாள்.

வனஜா அப்பொழுதும் வாய் திறக்கவில்லை. அவளுடைய உள்ளத்து உணர்ச்சிகள் மௌனம் சாதித்தன. ஆனால் அவள் தன் அழகிய விழிகளால் ஒருமுறை தன் மன்னி கிரிஜாவைப் பார்த்தாள். அந்தப் பார்வையில் அவள் எதையோ அறி

கொள்ள வேண்டும் என்ற அவா கொண்டிருப்பதாகத் தோன்றியது.

அவள் கையில் பூத்தட்டு ஏந்திக் கிருஷ்ணன் கோவிலுக்குள் சென்ருள்; அவளுடைய கண்களில் நீர் முட்டியது; வரவரக் கண்ணீர் அதிகரிக்கவும் செய்தது. அதைக் கண்ட கிரிஜா தன் அன்பான கரங்களினுல் அவள் தலையை வருடினுள்.

வனஜாவுக்கு ஏற்பட்டது என்னவோ தோல்விதான். இருந்தாலும் அவளுக்கு உள்ளூற ஆத்ம திருப்தி ஏற்பட்டிருந்தது. கிரிஜாவின் முகத்தில் ஒருவிதப் பெருமிதம் தாண்டவமாடியது. வழி தவறியவனுக்கு வழி காட்டினேம் என்ற பெருமிதம் யாருக்கும் ஏற்படுவது இயல்புதானே? கிரிஜாவின் முகத்தில் அப்பொழுது தோன்றியிருந்த மகிழ்ச்சியைப் போன்ற மகிழ்ச்சியை உலகத்தில் வேறு எங்குமே காணமுடியாது.

* * *

இருவரும் கோவிலைப் பிரதக்ஷிணம் செய்துகொண்டு வீட்டுக்கு வந்து சேர்ந்தார்கள். "ஏன் வனஜா! நான் சொன்னது உண்மைதானே?'' என்று கேட்டாள் கிரிஜா.

''என்ன ?''

—அப்பொழுதுதான் தூங்கி விழித்தவள் போல அக்கேள்வியைக் கேட்டாள் வனஜா.

''நம்பிக்கையும் அநுபூதியும் கற்சிலையில்கூட உயிர்ச் சத்தை உண்டாக்கி விடுகின்றன என்று நான் ஒருநாள் உன்னிடம் சொன்னேன். நீ என்ன இருந்தாலும் கற்சிலை கற்சிலைதான் என்று சொல்லி என்னை ஏளனம் செய்தாயே, நினைவிருக்கிறதா? இன்று உன் கண்களில்கூட அந்தக் கற்சிலைகளைப் பார்த்து நீர் சுரந்து விட்டதே! அதே கற்சிலைக்கு நீ இன்று பக்தி சிரத்தையுடன் புஷ்பம் கூடச் சாற்றச் சொன்னுயே! ஏன்?'' என்று கேட்டாள் கிரிஜா.

வனஜாவுக்கு ஏதோ உணர்ச்சி உந்தித் தள்ளித் தன்னை அப்படிச் செய்யுமாறு தூண்டிவிட்டது என்று தோன்றிற்று. ஏதோ ஒரு வெறியில் ஆழ்ந்து, தான் அந்த வேலைகளைச் செய்துவிட்டதாகவே அவள் எண்ணினுள். இருந்தாலும் அவள், பக்தியும் சிரத்தையும் கட்டாயம் தேவைதான். இருந்தாலும் கற்சிலை பக்திக்கு உகந்ததுதானு என்று யோசிக்க வேண்டும். அந்தக் கற்சிலையில் பகவானின் கற்பனை உருவம் எப்படிக் குடிபுகுந்தது? உருவமற்ற பகவானை ஒரு கல்லுக்குள் ஆவாகனம் செய்துவிடுவது என்பது கெட்டிக்காரத்தனம் ஆகுமா? அதுதான் எனக்குப் புரியவில்லை'' என்ருள்.

"நீ எண்ணுவது தவறு, வனஜா! பகவானை ஒரு கற்சிலை குள் ஆவாகனம் செய்து விடுவதனுல் அவர் ஒரு எல்லைக்கு பட்டவராக ஒரு நாளும் ஆகிவிட மாட்டார். ஒரே பரம்பொரு ளான அவருக்குப் பல உருவச் சிலைகள் உண்டாக்கப் பட்டிரு பதே அவர் எங்கும் நிறைந்தவர் என்பதற்குப் பிரமாண ஒருமைப் பட்ட உள்ளத்தைப் பெறுவதற்காக நமக்கு ஒ ஆதாரம், ஒரு பிடிப்பு, ஓர் உதவி தேவையாக இருக்கிறது அந்தக் குறையைப் பூர்த்தி செய்து கொள்ளுவதற்காக மனி னுடைய கற்பனை, அருவமான கடவுளுக்கு ஓர் உருவத்தை வழங்கியிருக்கிறது. மனத்தை ஒரு நிலையில் நிறுத்த ஒ பிடிப்பைத் தேடிக் கொண்டிருக்கிறது. இது ஒரு தவரு? என்ருள் கிரிஜா.

"அப்படியானுல் மூர்த்தி பூஜையில்லாமல் பகவானை பெறுவது என்பது இயலாத காரியமா? ஆமாம், நாம் வே கோவில்களில் குடிகொண்டுள்ள பகவானைப் பக்தி செலுத்த கூடாதா?" என்று கேட்டாள் வனஜா.

"செலுத்தக் கூடாது என்று யார் சொன்னுர்கள்? ஆனு அதற்கு ஒரு கடுமையான நிச்சய புத்தியும் ஆத்ம சக்தியு வேண்டும். அது சாதாரண மனிதனிடத்தில் காணக் கிடை பதில்லை. நமது அன்ருட வாழ்க்கை ஒரே ஓட்டமாக ஓடுகிறது எத்தனையோ பொருள்கள் மனிதனுக்கு அத்தியாவசியத் தேவை யாக இருக்கின்றன. ஆயினும், அவை கிடைப்பது குதிரை கொம்பாயிருக்கின்றன. அவை மனிதனுடைய சிந்தனைக் எட்டாத பொருள்களாகி விடுகின்றன," என்ருள் கிரிஜா ஆனுல் அடுத்த நிமிஷமே, "இதோ பார்!" என்று சொல்லி பக்கத்திலிருந்த ஒரு மேஜையைக் காண்பித்தாள். "இது ஒ சாதாரண மேஜைதானே? இம்மாதிரி எத்தனையோ மேஜைக கிடைக்கக்கூடும். அப்படி யிருந்தும் இந்த மேஜையின் மீ உனக்கு ஒரு தனிப் பற்றுதல் ஏற்பட்டிருக்கிறது. இதற்குக் கா ணம் என்ன? உன்னுல் சொல்ல முடியுமா?" என்று கேட்டாள்

"இதை என் அம்மா எனக்குக் கொடுத்தாள். இது எனக் அவளுடைய ஞாபகார்த்தமாக இருக்கிறது. இது அவள் என்ன டம் காட்டி வந்த அன்புக்கும் ஓர் அடையாளம் ஆகும் அல்லவா? என்ருள் வனஜா.

"இந்த மேஜையின் மூலம் உனக்கு எப்படிப் பழைய நினை களும் அன்பின் அநுபவமும் ஏற்படுகின்றனவோ, அதேபோல கோவில்களைப் பார்த்த மாத்திரத்திலேயே அந்தப் பரப் பிரும்ம தின் நினைவும் அநுபவமும் உணர்ச்சி பெற்றெழுந்து நம் கண் ளுக்கெதிரே நிற்கின்றன. வாழ்க்கையில் மற்றச் சமயங்களி அவை நம் மனத்துக்குள் மறைந்து நிற்கின்றன."

'' அதுசரி, அதற்கு வீடு போதுமே! ஞாபகம் உண்டாவதற்கு ஒரு இடம் தானே முக்கியம்? அதற்கு எந்த இடமாயிருந்தால் என்ன ?''

'' நீ சொல்லுவது நியாயமான வார்த்தை தான். ஆனல் மனத்தைப் பரிசுத்தமாக வைத்துக் கொள்வதற்கு அமைதியான ஒரு இடம் தேவை. கோலாகலம் நிறைந்த உலகத்தில் மனிதனின் மனம் ஒருமைப்பட முடியாது. ஒருமைப் பட்ட மனம் ஏற்படாமல் சாத்துவீக பாவனைகள் எழுவது சிரமம். மனம் ஒருமைப்படாமல் அடிக்கடி சிதறித்திரிய ஆரம்பித்து விடும்.

'' ஆமாம், அதை நான் ஒப்புக் கொள்ளுகிறேன். முகம்மதியர்களும் கிறிஸ்தவர்களும் மூர்த்தி பூஜை செய்வதில்லையே! அப்படியானல் அவர்களுடைய உபாசனை அரை குறையானது தானு ?''

''ஆனல் அவர்களுக்கும் ஒரு ஆதாரம் இருக்கிறது. கிறிஸ்துவர்கள் ஏசுநாதரின் சிலுவையையும் பைபிளையும் ஆதாரமாகக் கருதுகிருர்கள். முகம்மதியர்களோ ?— அவர்களுக்குக் கண்ணில் படும்படியான ஒரு ஆதாரமும் இல்லை என்பது என்னவோ உண்மைதான். ஆனல் அவர்கள் காதுகளைக் கைவிரல்களால் அடைத்துக் கொண்டு, 'அல்லாஹோ அக்பர்' என்ற த்வனியினல் தங்கள் மனத்தை ஒருமைப்படுத்த முயற்சிக்கிருர்கள். ஆனல் நம் ஹிந்து கலாசாரம் மிகவும் பழமையானதால்—விஸ்தாரமானதால் தன் ஆராதனைக்கு ஒரு உருவம் கொடுத்துச் சாந்தியுற்ற மனத்துடன் ஆராதனையில் ஈடுபடுகிறது.''

''என்னதான் சொன்னுலும் மூர்த்தி பூஜையின் விஷயம் எனக்குத் தெளிவாக விளங்கவில்லை.''

'' காந்திஜீயை எடுத்துக் கொள்ளேன். அவர் மகா புருஷர். மாந்தருக்குள் ஒரு தெய்வம். தம் காலத்தில் ஒரு யுகத்தையே நிர்மாணித்தவர். சத்தியமும் அஹிம்சையுமே உருவானவர். இந்த எண்ணம் மட்டுமே அவரை நினைவில் இருத்திக் கொள்ளப் போதுமானதல்லவா? ஆனல் நாம் அவருடைய படத்துக்கு மாலை சூட்டுகிறோம். அவருடைய சமாதிக்குப் புஷ்பம் போடுகிறோம். அவருக்கு ஞாபகச் சின்னம் எழுப்புகிறோம். ஆகவே, நமக்குத் தெரிவது என்ன? மூர்த்தி பூஜைதான் அவரிடமுள்ள பக்தியையும் சிரத்தையையும் நாம் காட்டுவதற்குச் சிறந்த சாதனம் என்று ஆகிறது,'' என்ருள் கிரிஜா.

'' உண்மைதான், மன்னி. இன்று தான் நான் முதல் தடவையாக உன்னுடன் கோவிலுக்கு வந்தேன். இவ்வளவு நாட்களும் நான் கோயிலுக்குப் போய்ப் பொழுதை வீணுக்குவது தான்

மிச்சம் என்று கூட எண்ணியதுண்டு: அதைவிடச் சினிமாவுக்குப் போவது எவ்வளவோ மேலானது. கல்வியறிவு வளரும் என்று கூட நினைத்தது உண்டு. ஆனால் மன்னி, உண்மையைக் கேட்டால் இன்று கோவிலில் கிடைத்த சாந்தியும் சுகமும் இன்பமும் ஆனந்தமும் இன்றுவரை எனக்கு எந்தக் கேளிக்கையிலும் கிடைத்ததில்லை: இப்படிப் பட்ட சுகம் இருக்கிறது என்று கூட நான் கனவு கண்டதில்லை. மன்னி, நீதான் எனக்குத் தர்மகுரு: உன் தர்ம காரியங்களில் என்னையும் பங்கு எடுத்துக் கொள்ள அனுமதிப்பாயா?'' என்று கேட்டவாறே வனஜா மன்னியின் மடியில் தலையைச் சாய்த்தாள்.

வனஜாவின் வாழ்க்கையில் வியப்பை அளிக்கும் மாறுதல் ஏற்பட்டுவிட்டது. அவள் வாழ்க்கையில் எளிமையும் சாத்வீக பாவமும் தாண்டவமாடின. முகத்தில் ஒரு இணையற்ற ஒளி வீசியது. காலையும் மாலையும் அவள் தன்னை மறந்து பாடுவாள்:

ரகுபதி ராகவ ராஜாராம்
பதித பாவன சீதாராம்
ஈச்வர், அல்லா தேரே நாம்,
சப்கோ சன்மதி தே பகவான் (ரகுபதி)

இந்தப் பாட்டைக் கேட்போர்கள் அப்படியே அசைவற்று நின்று விடுகிறார்கள்.

—o—

8

# வாழும் வழி

1938 இல் ஒரு நாள்:

விடிகிற வேளை. நிலாப்பாடு சாய்ந்து விட்டது. லேசான ருள் எங்கும் பரவி ஒரு மந்த நிலையை உண்டுபண்ணிக் கொண்டி ந்தது. மெல்லிய காற்றோட்டத்தால் மரங்களில் உள்ள இலை ள் சற்றே அசைந்தாடிச் சலசலத்துக் கொண்டிருந்தன. கைக் லி பெறும் ஊழியர்களைப் போலப் புள்ளினங்கள் இங்கு மங்கும் ஆடிப் பாடிக் கூவி உறக்கத்தில் ஆழ்ந்து கிடக்கும் உலகத்தை ழுப்ப முயன்று கொண்டிருந்தன.

குடிசையின் முன் கால் ஒடிந்த கயிற்றுக் கட்டிலில் படுத்து, லொக்', 'லொக்' என்று இருமிக் கொண்டிருந்த கிழவன் ஞ்சநதம் மெல்ல எழுந்து உட்கார்ந்தான். இரவிலே அவன் ங்கின நேரம், விழித்திருந்த நேரம் என்று தனித் தனியாகப் ரித்துக் கூற வகையில்லாமல் கண்ணை மூடிக் கொண்டும், ருமிக் கொண்டும், புரண்டு கொண்டும், எழுந்து உட்கார்ந்து காண்டும் இப்படியே பொழுதைக் கழித்திருந்தான். பெரும் லும் எல்லா இரவுகளுமே அப்படித்தான் சென்று கொண்டி ந்தன அவனுக்கு; ஏக்கம்—அதுதான் அவனது அந் நிலைக்குக் ரணம்.

அவனது எண்சாண் உடம்பிலே இருந்தது ஒரு சாண் துணி ான். மேலுக்கு ஒரு பீற்றல் சாக்கைப் போர்த்திருந்தான். —ந்த நாலைந்து ஆண்டுகளாக உடல் நலிந்து கிடந்த அவனுக்கு வனுடைய மகன் நடேசனும், மகள் மரகதமும் ஆதரவாக ருந்து வந்தனர். மனைவி அஞ்சலை போய் நெடுங்காலம் ஆகி ருந்தது.

குடிசை முன்புறத் திண்ணையில் படுத்து உடல் வலியா குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தான் நடேச பாவம், பகல் முழுதும் வெயில், மழை, காற்று எதையும் பொரு படுத்தாமல் உழைக்கும் கட்டை! இரவிலே தன் வசமிழந் கிடக்கும் உறக்க நேரம் தான் அவனது அலுத்த உடலுக் ஆறுதல்.

"ஏலே!... தம்பி!..." என்று இருமிக் கொண்டே இரண் மூன்று முறை கூப்பிட்டான் பஞ்சநதம்; அவனது குரல் நடே னின் உறக்கத்தைக் கலைக்கும் வலு உடையதாக இல்லை. லெடுத்துக் கூப்பிட்ட சிரமத்தினால் மீண்டும் இருமலுக்கு அவ உள்ளானது தான் மிச்சம். இருமி இருமிக் களைத்தா 'பாவம், இந்த வயசிலேயே இந்த உழைப்புத் தாங்கல்லே என்று மனத்திற்குள் அங்கலாய்த்தான்.

அந்த நாளில் பஞ்சநதம் இதே பிராயத்தில் எதற் அயர்ந்து கொடுக்காத நிலையில் இருந்தான். அதைப் பற் சிறிது நேரம் அவன் சிந்தித்தான்.

'...உம்; அந்தக் காலத்திலே ஆஞ்சனேயரு கடலைத் தாண் னுரு, சஞ்சீவி மலையை ஒரே கையிலே தூக்கிக்கிட்டு வந்தாருன் இப்போ என்ன ஆச்சு? இந்தக் காலத்திலே அதே ஆஞ்சனேய பரம்பரையிலே வந்த குரங்கு, கஞ்சாக் கடை முன்னாலே கால பட்டாணிக்குக் குட்டிக் கரணம் போடுது!...'

இப்படி ஓடிற்று அவன் சிந்தனை. நிம்மதியாகத் தூங் மகனை எழுப்ப அவனுக்கு மனமில்லை தான். தவிர்க்க முடிய நெருக்கடி அவனை உந்திற்று. எனவே, மீண்டும், "தம்பி தம்பி!..." என்று அழைத்தான். அப்போதும் நடே விழித்து எழவில்லை.

குடிசைக்குள்ளிருந்து பெண் குரல் ஒலித்தது.

"அண்ணாத்தை தான் ரொம்பக் களைச்சுப் படுத்திருக் அதை ஏன் எழுப்பணுமாம்?"

"களைப்பாறப் பொறக்கலையே தங்கச்சி நாம?"

"அது தான் தெரிஞ்சே இருக்கே. அதுக்காவ?" இம்ம பொழுதிலேயே என்ன வந்திடுச்சாம்?"

"பொழுது விடியப் போவுது தங்கச்சி. இல்லாட்டி எழு வேணு?"

"பொழுது...விடியப்...போவுதா?..."

சில வினாடிகளில் கிழவன் எதிரே வந்தாள் மரகதம்.

அவள் கையில் ஓலைக் கூடை ஒன்றும் புல் அரிவாளும் இருந் ா. கிழவன் அவளைப் பார்த்துப் பெருமூச்செறிந்தான்.

"நீ...இண்ணைக்குப் புல்லுக்குப் போக வேணும் தங்கச்சி."

"ஏன்?"

"உன் அண்ணன் அவசரமா வெளியே போவணும்."

"வாடிக்கையா வைக்கிற புல்லு வைக்காட்டி......"

"அட, இண்ணைக்கு ஒரு நாளைக்கு ஏதாச்சும் சால்சாப்பு ால்லிகிட்டா போவுது. ஏன்னு, அண்ணன் போக வேண்டிய லுவல் ரொம்ப முக்கியமானது. கோவில் நிலத்தையெல்லாம் ளைக்குப் பங்கீடு செய்யப் போறுங்க. எரு, தழை அடிக்கிற லையெல்லாம் இண்ணைய ஒரே பொழுதோடே சரி. கூடுத ன எரு, தழை அடிச்சவங்க வரிசைப்படி, நிலத்தைப் பங்கிட்டு குபடிக்கிக் குடுக்கப் போறுங்களாம். இன்னி ஒரு பொழுது ாஞ்சம் மொனேஞ்சி வேலை செய்துட்டா, வார பசலியிலே ம கயிட்டம் கொஞ்சம் கொறையும். அட, ஓகோகோன்னு லேன்னுலும் அரை வயித்துக் கஞ்சியும், அரை ஒடம்பு துணியு வது கிடைக்குமில்லே?"

மரகதம் விரக்தி தோன்ற நகைத்தாள். "போன வருசம் யக்கரு நிலத்தெ குத்தகை எடுக்கற அப்பவும் இப்படித்தான் ததோ மனக்கோட்டை கட்டினேம். கடைசியிலே வண்டி டு முதல் அல்லாமே போயிடுச்சி. கடன்தான் மிச்சம்!"

"என்ன செய்யறது? ஆண்டவன் கட்டளை அப்படி இருந் ச்சு. ஆனு, இந்த வருசம் அப்படி இல்லே. அது குத்தகை; து வாரம்."

"சரி, அப்போ அண்ணனை எழுப்பவா?"

"எழுப்பு, எழுப்பு."

மரகதம் நடேசனின் அருகில் சென்றுள். குரல் கொடுத் ம், ஓலைக் கூடையால் தட்டி உசுப்பியும் அவனை எழுப்பினுள். லு தடவை இப்படியும் அப்படியும் புரண்டு விட்டு எழுந்து ட்கார்ந்த அவன் செவிகளில் பஞ்சநதத்தின் கரகரத்த குரல் ய்ந்து உணர்ச்சியை உண்டு பண்ணிற்று.

தெருவில் வந்து நின்று வானத்தைப் பார்த்துக் கொட்டாவி ட்ட நடேசன், "அடாடா!...பொழுது விடியற நேரமா ச்சே!...இன்னங் கொஞ்சம் முந்தியே எழுப்பக் கூடாதா பா?" என்று கேட்டான். அவன் உடலில் ஒரு பரபரப்பு

ஏற்பட்டது. சடக்கென்று திண்ணையிலே பாய்ந்து, தான் ப
திருந்த கோரைப்பாய், சாக்கு முதலியவற்றைச் சுருட்டி மு
டிலே செருகியிருந்த கழியிலே இடுக்கிவிட்டு, "தங்கச்சி!..
என்றழைத்தான்.

"அதோ,...வாசப்படியிலே கிடக்கு பாரு, எடுத்துக்
என்றாள் மரகதம், உள்ளிருந்தபடியே.

நடேசன் வாயிற்படியண்டையில் வந்து பார்த்தா
அங்கே ஒரு துணி கிடந்தது. அதை எடுத்து இடையி
சுற்றிக் கொண்டான். நாள்தோறும் பழகிப் போன செய
யானாலும் அவன் உள்ளம் வேதனையால் கசிந்தது.

"நான் போயிட்டு வரேன்" என்று நடையைக் கட்டின
நடேசன். அவன் சென்றதும் நீண்ட தோர் பெருமூச்சுட
மறுபடி கட்டிலில் படுத்தான் பஞ்சநதம். அவன் உள்
துக்கத்தால் நிரம்பியிருந்தது. பழைய நிகழ்ச்சிகள் நினைவ
களாக எழுந்து மோதின.

* * *

இன்று ஆய்ந்து ஒய்ந்து செயலற்றுக் கிடக்கும் பஞ்சந
அன்று எப்படி இருந்தான்! பத்துக் காணி நிலத்திற்கும் பெ
ஒட்டு வில்லை வீட்டிற்கும் உரியவனாக 'ஹோதா'வோடு வா
தான். பங்காளிப் போர் தலை நீட்டிற்று. அயலாருட
தகராறு முளைவிட்டது. ஊர்ப் பொது விஷயங்களில் ஏற்பட்
பிளவு பேருரு எடுத்தது. பஞ்சநதம் மீசையை முறுக்கினகை
எடுப்பதே இல்லை. இச்சகம் பேசும் நண்பர்களின் தூண்டுகோ
அவனைத் தலைசுற்றி ஆடவைத்தது. வம்பு, வழக்கு, நீதிமன்றப்
இடையிடையே அவ்வப்போது வீரகர்ஜனை, அடிதடி—இப்ப
என்ன என்னவோ நிகழ்ந்த வண்ணம் இருந்தன. மனக்கட
திலே ஓயாமல் வீசிக்கொண்டிருந்த புயலுக்கு மாற்று எங்
எங்கே என்று ஒரு பரபரப்பு.

நடேசன் தலையெடுக்கிற வேளையில் பஞ்சநதத்
கொடிய காசநோய் பற்றிக் கொண்டது. படுக்கையைச் சர
டைந்தான்.

நடேசனுக்கு ஒரு பண்ணையில் 'அரை ஆள்' வே
கிடைத்தது. மரகதமும் அதே பண்ணையில் வீட்டு வேலை செ
லானாள். பண்ணையார் மகன் அவளைச் சுற்றிச் சுற்றி வ
இளித்தாள். அதைக் கண்ட நடேசன் அவளைப் பண்ண
வேலை செய்ய வேண்டாமென்று தடுத்து நிறுத்தினான். இ
புரிந்து கொண்ட பண்ணையார் மகன், நடேசன் மீது திருட்

ற்றம் சுமத்தினுன். 'சே! பட்டினி கிடந்து செத்தாலும் , இனி அடிமை வேலே செய்வதில்லே!' என நடேசன் உறுதி ாண்டான். அன்ருடக் கூலி வேலேக்குப் போய் அகப்பட்ட நச் சம்பாதித்து வந்தான். சில நாள் வேலே கிடைக்கும்; ) நாள் கிடைக்காது. சில சமயம் வேலே கிடைத்தாலும் கூலி வரக் கிடைக்காது. குடும்பத்தில் பல நாள் பட்டினி.

நடேசனுக்கு மனம் சமாதானமாக இல்லே; தகப்பனுடன் ந்து யோசனே செய்தான். முடிவில் நாயக்கர் நிலத்தைக் ந்தகை எடுத்தான். அது, மேலும் விபரீத நிலேயை உண்டு ண்ணிற்று. 'கண்டிஷன் குத்தகை', உழைத்தவனுக்கு ாறுமே கிடைக்க வில்லே.

தரித்திரம் வந்தால் சாமானியமாக வருவதில்லேயே! அதிலும் து மானிகளேத்தான் அதிகம் சோதிக்கும். உணவுப் பஞ்சத் தயும் மீறியது அச்சிறு குடும்பத்தில் உடைப் பஞ்சம். அது ச நிலேயை அடைந்த போது, அந்தக் குடிசையில் உருப்படி க ஒரே ஒரு சாயத்துணிதான் எஞ்சி நின்றது. ஏனேய தல்களில் தையல் போட இடம் இல்லே; அவை நார் ராகப் போயிருந்தன.

கிழவன் தான் படுக்கையிலே கிடக்கிருன். வெளியிலே மாடக் கூடியவர்கள் நடேசனும் மரகதமும் தான்; இருப்பது ர துணி. சில வீடுகளுக்குப் புல் வைக்க ஒப்புக் கொண்டி ந்தாள் மரகதம். விடிவதற்குள் அவள் போய்க் கூடையையும் ப்பி இரண்டு கட்டுக்களும் கட்டிக் கொண்டு வாடிக்கை வீடு ில் அவற்றை வைத்து விட்டு வருவாள். அவள் வந்தபின் லேக்குப் போவான் நடேசன். மரகதம் கந்தல்களே இணைத்து ம்பிலே சுற்றிக் கொண்டு குடிசைக்குள் அடைந்து கிடப் ள். நடேசன் வீடு திரும்பின பிறகுதான் அவள் குடிசையிலி ந்து வெளிவர முடியும். இப்படியும் உண்டா என்ருல் இருக்கத் ன் இருந்தது. பிடிசோறு கிடைக்காமல் உயிர் நீத்தவர்கள் ல்லேயா?

கோயில் நிலத்தையெல்லாம், பண்ணேயைக் கலேத்து வார குபடிக்குப் பிரித்து விடப் போவதாகக் கேள்விப்பட்ட ந்சநதம் ஆவல் மீதூர, மகனின் கைத்தாங்கலில் தள்ளாடி ந்து தர்ம கர்த்தாவிடம் சென்ருன். பணிவுடன் பேசித் ன் குடும்பநிலேயை விளக்கினுன். இரக்கம் கொண்ட தர்ம த்தா நடேசனின் உழைப்பை நம்பிக் கிழவனின் வேண்டு ாளே ஏற்றுக் கொண்டார்; சாகுபடிக்கு நிலம் தருகிறேன் ன்ருர். ஆனுல் ஒரே நிபந்தனே; மறு நாள் பொழுதுக்குள் லங்களில் யார் மிகுதியாக எரு அடிக்கிருர்களோ அவர்களின்

வரிசைப்படி நிலத்தைப் பிரித்துக் கொடுக்கும் சலுகை விதிக்கப் பட்டிருந்தது. வண்டி, மாடு, எரு எல்லாமே தேவஸ்தானத் தில் இருந்தன. உழைப்பும் ஊக்கமுமே போட்டியின் எடுத்துக் காட்டுகள். இதை மனத்திலே கொண்டு தான் மகனை அவசர மாக எழுப்பினுன் பஞ்சநதம். மரகதமும் தான் புல் அறுக்கச் செல்வதை நிறுத்திக் கொண்டு அண்ணனை அனுப்பி வைத்தாள். பழகிப் போன செயலேயாயினும் நடேசன் வேதனை கொண்டது போல் கிழவனும் வேதனைப்பட்டான். 'வயசுப்பொண்ணு; தன்னோடொத்த பொண்ணுவளோட, புள்ளிமானைப் போல துள்ளி விளையாட வேண்டிய நாளிலே...கந்தலை உடுத்து குடிசைக் குள்ளாற அடைபட்டுக் கிடக்க...நானல்லவா காரணம்!...' என்று எண்ணி எண்ணி மனம் புண்ணுனுன்.

*　　　　*　　　　*

கதிரவனின் இளங்கிரணங்கள் பட்டதனுல் கிழவனின் சிந்தனை கலைந்தது. போர்வையை விலக்கிக் கொண்டு மெல்ல எழுந்து உட்கார்ந்தான்.

தொலைவில் வயல் வெளியில் ஏதோ பெருத்த கூக்குரல் கேட்டது. தன் மகனுக்கு ஏதாவது...என்று கலங்கி விட்டான் கிழவன். எதுவானுல் என்ன செய்ய முடியும்? எழுந்து செல்லத் திராணி இல்லை. தெய்வமே கதி என்று மீண்டும் படுக்கையில் வீழ்ந்தான்.

சிறிது நேரத்திற்குப் பின் குடிசை வாயிலில் பேச்சுக் குரல் கேட்டது. கிழவன் தலை தூக்கிப் பார்த்தான். இரண்டு பே[illegible] கூடி ஓர் ஆளைச் சுமந்து வந்திருந்தனர். பஞ்சநதம் பதறி[illegible] போனுன். அடிபட்டு மயக்க முற்றிருக்கும் ஆள் நடேசன் இல்லை என்பதை அறிந்ததும் பதற்றம் சிறிது குறைந்தது.

வந்தவர்களில் வயது முதிர்ந்த குடியானவன், கொண்[illegible] வந்த ஆளைக் குடிசைத் திண்ணையிலே கிடத்தினதும், "சாப[illegible] நீங்க இவனைக் கவனிச்சுக்குங்க; நான் அங்கே போயி அந்த[illegible] படுபாவிப் பயலுவளைக் கவனிக்கிறேன்" என்று கூறி வே[illegible] மாகச் சென்றுன். கதர் உடை அணிந்திருந்த வாலிபன் க[illegible] கூப்பி அவனுக்கு விடையளித்தான். பிறகு பஞ்சநதத்தி[illegible] பக்கம் திரும்பி, "ஐயா..." என்று மெல்ல அழைத்தா[illegible] "கொஞ்சம் தண்ணீர் வேண்டும்" என்றுன்.

"நீங்க யாரு?... இந்த ஆளுக்கு என்ன?"- இரும[illegible] ளிடையே திணறிக் கொண்டு கேட்டான் பஞ்சநதம்.

"நான் வெளியூர்க்காரன். காந்தியடிகளின் அடியார்கள் தோற்றுவித்த சமத்துவ சமதர்ம சேவா சங்கத்தின் ஊழியர்களில் ஒருவன். இவ்வூர்ப் பிரமுகர் வேதாசலத்திடம் நன்கொடை பெற வந்தேன். வழியில் சிறு கலகம். கோயில் நிலங்களில் எரு அடிப்பதிலே தகராறு முற்றி அடிதடி. இந்த ஆளின் தலையில் சரியான அடி விழுந்ததால் இவர் நினைவிழந்துவிட்டார்"—

உள்ளே இருந்த மரகதத்தால் இதைக் கேட்டப் பின்னும் உள்ளே இருக்க முடியவில்லை; வெளியே வரவும் முடியவில்லை. ஓலைத் தட்டிக் கதவின் அருகே வந்து நின்று மெல்ல எட்டிப் பார்த்தாள்; அங்கலாய்த்தாள். ஊழியன் அவள் பக்கம் திரும்பியதும் சட்டென்று பின் வாங்கி மறைந்தாள்.

பஞ்சநதம் தர்மசங்கடத்தில் தவித்தான். பின்னர் நெஞ்சை அழுத்திக்கொண்டு துயரத்துடன் சொன்னான்:

"...ஐயா, நான் நடக்க மாட்டாதவன். வீட்டிலும் யாரும் இல்லை..." என்று தழுதழுத்தான். மரகதம் தட்டி மறைவில் வந்து நின்று எட்டிப் பார்த்ததையோ, ஊழியன் அவள் பார்த்ததைக் கவனித்ததையோ அறியவில்லை.

"எ...ன்...ன...!...வீட்டிலே...யாருமே...இல்லையா?..."

ஊழியன் இவ்வாறு கேட்டதும் பஞ்சநதத்தை இன்னொரு கவலை பீடித்தது. "ஆமானுங்க. நீங்களே உள்ளாறபோயி தண்ணி எடுத்துக்கிடலாமின்னா...அதுக்குங்கூட வகை இல்லே. உள்ளே தண்ணியே இல்லே. வெளியே போயிருக்கிற என் மவன் வந்தாத்தான் தண்ணி" என்றான்.

ஊழியனின் உள்ளத்திலே ஆத்திரம் பிறந்தது. ஆனாலும் அதைச் சிரிப்பாக மாற்றிக்கொண்டு சொன்னான்:

"அடிகளாரின், 'அஹிம்சா: பரமோதர்ம;', 'சத்தியமேவ ஜயதே' முதலிய பொன்மொழிகளை ஏற்று அதன்படி ஒழுகி மக்களுக்குத் தொண்டாற்ற வேண்டும் என்பது எங்கள் சங்கத்தின் கொள்கை. சாந்தம் வேண்டும், பொறுமை வேண்டும். உங்களைப் போன்றவர்களின் செயல்கள் எங்களைப் பொன்றவர்களின் பொறுமையைச் சோதிப்பனவாக இருக்கின்றனவே! ஏனையா, உயிர் போகும் தறுவாயில் உள்ளவர்களுக்குத் தண்ணீர் கொடுக்கக் கூட மனமில்லாத நீரும் ஒரு மனிதரா? வீட்டில் யாருமே இல்லை என்று நெஞ்சாரப் பொய் சொல்லுகிறீரே, உண்மையில் உள்ளே யாருமே இல்லையா?"

"இ...ல்...லை... இ...ரு...க்...கா...ங்...க... ஆனா...வெளியே... மாட்டாங்க......"

"எ...ன்...ன...! வெளியே வரமாட்டாங்களா? இம்மாதிரி ஆபத்துக் காலத்தில் கூட உதவாமல் அப்படி ஒரு கோஷாவா? இதே இடத்தில் உம்முடைய மகனோ, மருமகனோ அடிபட்டுக் கிடந்தால் நீர் இப்படிப் பேசுவீரா?"

'சுரீர்' என்றது கிழவனுக்கு. அவன் கண்களில் நீர் துளும் பிற்று.

"கோசாவுமில்லே, மண்ணுங்கட்டியுமில்லீங்க. அப்பறமா வெவரஞ் சொல்றேனுங்க. நீங்க கொஞ்சம் தெருப்பக்கமா திரும்பி கண்ணெ மூடிக்குங்க"—

அந்த யுவன் அவ்வாறே செய்தான். உடனே கிழவன் சற்று உரத்த குரலில், "ஒரு குவளையிலே தண்ணிகொண்டா தங்கச்சி" என்றான்.

மரகதம் தண்ணீக் குவளையை உள்ளிருந்தபடியே வாயிற்படி யோரத்தில் வைத்து விட்டு மறைந்தாள். கிழவன், "ஐயா தண்ணி வச்சிருக்கு பாருங்க" என்றான்.

வியப்பில் மூழ்கியிருந்த யுவன் கண்ணைத் திறந்தான். மறு புறம் திரும்பினான். தண்ணீரை எடுத்தான். அடிபட்டவன் முகத்தில் தெளித்தான். அவன் நினைவு பெற்றான். தண்ணீரைப் பருகிக் களை தெளிந்தான். எழுந்து நின்று நாற்புறமும் நோக்கி னான். நிலையை ஊகித்தான்.

"ஐயா, நான் சண்டை போட்டது என் சித்தப்பாரோடே என்னை அடிச்சது அவரோட மவன். என்னை என் ஊட்லே கவலை யோட தேடுவாங்க. நான் வர்ரேன் சாமி" என்று அவன் கிளம் பினான்.

"எங்கே போகிறாய்? சண்டை நடந்த இடத்துக்கா?"

"சாமி சத்தியமா நான் அங்கே போவலீங்க!" என்றவ திண்ணையினின்றும் இறங்கி வேகமாக நடையைக் கட்டினான்.

"ஐயா..." பஞ்சநதம் அழைத்தான்; யுவன் திரும்பி பார்த்தான். "இப்படி வந்து குந்துங்க. என்னாலே பேச மு யல்லே. ஆனாலும், நான் ஈவிரக்கமத்த பாவின்னு உங்க மனசி பட்ட கெட்ட நினைவைப் போக்கணுமே; இப்படி வாங்க என்றான் கிழவன்.

யுவன் அவன் அருகில் சென்று அமர்ந்தான். பஞ்சநதம் கதையை அடியிலிருந்து சொன்னான். அனைத்தையும் ஒளிக்கா சொன்னான். அன்றை நிலவரையில் சொன்னான்.

அனைத்தையும் கேட்கக் கேட்கச் சிலைவடிவாய் மாறிவிட்ட வாலிபன் கதை முடிந்ததும் உடம்பைச் சிலிர்த்துக்கொண்டான். உணர்ச்சி அவன் வாயைக் கட்டி விட்டது. திடீரென்று எழுந்தான். ''நான் போய் விட்டு மாலையில் வருகிறேன்'' என்று நடந்தான்.

நெட்டுயிர்த்த பஞ்சநதம் தட்டுத்தடுமாறி எழுந்து உள்ளே போனான். பல் விளக்கிக் கூழ் குடித்தான். தந்தையும் மகளும் அன்றை நிகழ்ச்சி பற்றி பேசிக்கொள்ளலானார்கள். பொழுது சென்றுகொண்டிருந்தது.

மாலை வந்தது. குடிசைவாயிலில் சைகிள் மணி கிணுகிணுத்தது. காலையில் வந்து சென்ற வாலிபன்தான் வந்தான். அவன் கையில் ஒரு பொட்டணம்; அதில் கதர் ஆடைகள், சைகிளின் பின்னே கட்டியிருந்த சர்க்காவையும் பஞ்சுப் பொட்டணத்தையும் இறக்கித் திண்ணையிலே வைத்தவன் நூல் நூற்கத் தொடங்கினான். ''உங்கள் மரகதம் இதைச் செய்யட்டும்; உடைப் பஞ்சம் மட்டுமன்று; உணவுப்பஞ்சமும் பறந்தே போய் விடும்'' என்றான். அவன் கொணர்ந்த ஆடையை உடுத்த மரகதம் அவனை வணங்கிச் சர்க்காவைப் பக்தியுடன் பெற்றுக்கொண்டாள். காந்தி மகான் ராட்டை சுற்றும் படத்தைக் குடிசையிலே மாட்டிவிட்டு விடைபெற்றுச் சென்றான் வாலிபன்.

–□–□–

“ மஹி ”

49

# கிராமராஜ்ஜியம்

“ நீங்கள் தானய்யா வரவேண்டும். ”

“ அது ஏனய்யா? எத்தனையோ சிறப்பான தலைவர்கள் இருக்கிறார்கள். அதை விட்டு விட்டு ஒதுங்கி வாழும் என்னைப் பிடித்துக் கொண்டு ” என்றேன்.

“ அதென்னமோ எனக்குத் தெரியாது. அம்மா சொன்னுங்க. இந்த வருசம் குடியரசு விழாவிலே கொடி ஏத்தரது குருவய்யாதான் என்று திட்ட வட்டமாகச் சொல்லிட்டாங்க! எனக்கு அதான் தெரியும். ”

“ அது யாரய்யா அந்த அம்மா? என் வாழ்வில் எனக்கு உத்தரவு இட ஒரு அம்மா? ”

“ அது தானுங்க சோமரசம் பேட்டை அம்மா. அதோட அந்த ஊர் சனங்க எல்லாமே ஒரு காலிலே நின்னு ஒங்களைக் கூட்டியாரச் சொல்லுராக. நீங்க வந்து தான் ஆகணும். ” என்று அன்புக் கட்டளையிட்டார் அவர்.

என்றுமே அன்புக்குக் கட்டுப்படும் நான் ஒப்புக்கொண்டேன் திருச்சிக்கு மேற்கே ஐந்து கல் தொலைவிலுள்ள சோமரசம் பேட்டையில் குடியரசு தின விழாவுக்கு வந்து கொடியேற்ற ஒப்புக் கொண்டு விட்டேன். இன்று புறப்பட்டும் விட்டேன் இப்போது அங்கெல்லாம் டவுன் பஸ் போய்க் கொண்டிருக்கிறது மெயின் கார்டு கேட்டுக்கு வந்து விட்டேன்.

எட்டாம் நெம்பர் பஸ் வந்த பாடாக இல்லை. இன்று மட்டு என்னுள் ஒரு இனம் தெரியாத குதூகலம். ஏன் என்று எனக்கு

தெரியவில்லை. ஒரு வேளை இளமை நாட்களில் வாழ்ந்து பழகிய ஊருக்குப் போவது காரணமாக இருக்கலாம். இத்தனை ஆண்டு களாகத் திருச்சிக்கு எத்தனையோ முறை வந்திருந்தாலும் கூட மூன்று கல் தொலைவிலுள்ள உய்யக் கொண்டான் திருமலைக்கு நான் அதன் பின்னர் வந்தவன் அல்லன். இன்று தான் போகி றேன்.

கால் நடையாக மூன்று மைல்கள் நடந்து வந்து திருச்சிராப் பள்ளியில் படித்த காலம். அதற்கும் முன்னர் சோமரசம் பேட்டையிலிருந்து இரண்டு மைல்கள் வந்து உய்யக் கொண் டான் திருமயிலையில் படித்த பருவம்; எல்லாம் சேர்ந்து கொண்டு மனதைக் கிசு கிசு மூட்டிக் கொண்டிருந்தது. நெஞ்சம் கிளு கிளுத்தது.

ஆமாம்! நான் ஆறுவது படிக்கும் போது தான் எங்கள் குடும்பம் அழகிய கிராமமான சோமரசம் பேட்டைக்குக் குடி பெயர்ந்தது. அப்போது அவ்வூரின் எலிமெண்டரி ஸ்கூலில் ஐந்தாவது வரையில் தான் இருந்தது. ஆறுவது படிக்க உய்யக் கொண்டான் திருமலைக்குத் தான் போக வேண்டும்.

அங்கே ஒரு ஹையர் எலிமெண்டரி ஸ்கூல் இருந்தது, எட்டாவது வகுப்பு வரையில் அங்கே உண்டு. நான் ஆறுவது வகுப்பில் சேர்க்கப் பட்டேன். தினமும் நடந்து வந்து படிப்பேன். அப்போது அந்தப் பள்ளிக்கூடத்தின் தலைமையாசிரியராக இருந் தவர் ஒரு நல்ல மனிதர். இலட்சுமணன் என்பவர். முன்னேற் றக் கருத்துக்களைக் கொண்ட ஒரு சிறந்த ஆசிரியர். இன்று நான் அரசியலில் ஒரு வல்ல எழுத்தாளனாகவும், பேச்சாளனாகவும் ஆவதற்கு அவரே அஸ்திவாரம் இட்டார். மற்றும் கலை, கல்வி, இசை ஆகியவற்றிற்கும் என்னை ஊக்கியவர் அவரே.

பள்ளிக்கூட நாடகங்களில் என்னை நடிக்க வைத்தார். தக்கிளி பிடித்து நூற்க வைத்தார். ராட்டையில் நூல் நூற்க வைத்தார். அந்த நாட்களில் ஆங்கில அரசு இருந்ததால் இவை பள்ளிப் பாடத் திட்டத்தில் இல்லாவிட்டாலும் கூட அவர் மௌனமாக இவற்றை மாணவர் மனத்தில் பதிய வைத்தார். பாடங்களின் இடையிடையே கதைகளைப் போல இந்திய நாட்டின் பெருமைகள் பற்றிப் போதித்தார்; அதன் பயனாகத் தான் நான் அரசியலில் பங்கு கொண்டேன்.

அந்தச் சமயத்தில் ஒரு தடவை மகாத்மா காந்தியவர்கள் தமிழ் நாட்டுக்கு விஜயம் செய்திருந்தார்கள். பிஹார் பூகம்பத் துக்கு உதவி செய்ய நிதி கேட்டு வந்திருந்ததாக ஞாபகம். திருச்சிக்கும் வந்திருந்தார்கள். அந்த நேரத்தில் அவருக்கு ஒரு கதர் மாலை அணிவித்து ஒரு சிறு தொகை அளிக்கவும் எங்கள்

தலைமையாசிரியர் ஏற்பாடு செய்திருந்தார். அப்படி மாலை அணி வித்து தொகை அளிக்க ஒரு சிறுமியை சித்தம் செய்திருந்தார். அவள் பெயர் மறந்து விட்டது. ரோஜா ரோஜா என்று அழைப் போம். என்னுடன் கூட சோமரசம் பேட்டையிலிருந்து உடன் நடந்து வருபவள் தான்.

என்ன காரணத்தாலோ அன்று அந்தச் சிறுமி காந்திஜிக்கு மாலை அணிவிக்கவில்லை. அதற்குப் பதில் நான் மாலை அணிவித் தேன். சிறு தொகை கொண்ட முடிச்சை அண்ணல் கையில் என் பிஞ்சுக் கைகளால் கொடுத்தேன். அந்த சந்திப்பின் காரணமோ என்னமோ நானும் அரசியலில் பங்கு கொண்டு அதிகமாக ஈடுபட்டேன். தீவிரமாக என்னை நானே முன்னேற் றிக் கொண்டேன். 1942ல் சிறை சென்றேன்; தேர்தலில் நின்றேன். வென்றேன். பதவி வகித்தேன். என்னென்னவோ; அதெல்லாம் இப்போது எதற்கு? இன்னம் இன்றும் என் தேசிய வாழ்வு தொடர்கிறது. கொடி ஏற்றப் போகிறேன்.

இளமை நினைவுகள் வந்து விட்டால் எத்தனை வயதிலாக இருந்தாலும் தன்னுள் ஒரு துடிப்பு வந்து விடுகிறது. இன்று நான் இளைஞனாக என்னை எண்ணிக் கொண்டேன். அப்படி யில்லாவிட்டால் ஓடி வந்து கொண்டிருக்கும் எட்டாம் நெம்பர் பஸ்ஸில் முதல் ஆளாகத் தொத்தி ஏறிக் கொண்டிருப்பேனா? யாரோ கூடச் சொன்னார்கள் : ''கௌவனைப் பாருய்யா! எளம் பிள்ளை மாதிரி பாஞ்சு ஏர்ரான்'' என்று. நான் என்ன செய்ய? சலவை செய்த கதராடை போல என் நிலை மாறிவிட்டாலும் சோமரசம் பேட்டைக்குப் போகப் போகிறேன் என்ற எண்ணம் என்னை இளைஞன் ஆக்கிவிட்டிருக்கிறது. பஸ்ஸில் முதல் ஸீட்டில் இடம் பிடித்து உட்கார்ந்து கொண்டேன். பஸ் புறப் பட்டது.

என் சிறு கால் பட்டுத் தேய்ந்த அதே பாதை. தென்னூர் கேட், புத்தூர் வண்டி ஸ்டாண்டு. இருபுறமும் தென்னை வளர்ந்த வளைந்த சாலை, இடையிடையே கொடிக்கால்கள், வாய்க்கால் கள், கடைசியில் உய்யக் கொண்டான் ஆறு. இதோ மலை கூடத் தெரிகிறது. மலையைத் தாண்டித்தான் நான் பயின்ற பள்ளி; இப்போது போர்டு ஹைஸ்கூல் ஆகிவிட்டிருக்கும். ஒரு வேளை அதே தலைமையாசிரியர், இலட்சுமணன் இன்னும் பணி ஆ...ற்...று... சேச் சே, இது காறும் அவர் ஓய்வு பெற்றிருக்க லாம். எதற்கும் இறங்கிப் பார்க்க வேண்டும் என்ற உந்தல்.. சோமரசம் பேட்டைக்கு டிக்கெட் வாங்கினாலும் உய்யக் கொண் டான் திருமலையில் இறங்கி விட்டேன். ஊரே மாறி விட்டிருந் தது. என் நண்பர்களின் பெயரை நினைவு படுத்திக் கொண் டேன்; மகுளாளி மகன் கணேசன், மளிகைக் கடைக்கார

மகன் திருமுடி, ரோஜா, ராமு... அப்பா... என் நண்பர்கள் இப் போது எங்கெங்கே இருக்கிறார்களோ ?

சுற்று முற்றும் பார்த்தேன்... எதுவும் தெரிந்த முகம் இல்லை .. விசாரித்துப் பார்த்தேன்.. பழைமை பற்றி நான் நினைத்த அளவு வேறு எவரும் நினைத்ததாகத் தெரியவில்லை. கடைசியில் கணேசனைக் கண்டுபிடித்தேன்.. அப்பா ஆள் எப்படி மாறிவிட் டான். என்னை விடக் கிழவனாகி விட்டிருந்தான். என்னைப்பற்றி நினைவு படுத்திப் படுத்திக் கொண்டு பட்டும் படாமலும் பேசி றன். எனக்குப் பிடிக்கவில்லை. அடுத்த பஸ்ஸில் சோமரசம் பேட்டைக்குப் புறப்பட்டு விட்டேன்.

பஸ்ஸில் ஒருவர் என்னை இனம் கண்டு கொண்டு விட்டார். 'என்னங்க. நான் கோட்டையிலே ஒங்களைத் தேடிவிட்டு வர்ரேன். நீங்களானா ஒங்க பழைய ஊருலே வந்து வண்டி ஏர்ரீங்க...'' எனக்குத் தூக்கி வாரிப் போட்டது.

''ஏனய்யா. நான் இந்த ஊர்க்காரன் என்று எப்படித் தெரி யும் ?''

'' ஏன் ! அம்மாதான் சொன்னாங்க...!'

'' அம்மாவா ! அது யாருப்பா...?'

'' என்னாங்க இப்படிச் சொல்றீங்க. இன்னிக்கி அவுங்க ஏற்பாட்டுலேதானே விழா நடக்குது... அவுங்கதான் ஒங்களைக் கூறிப்பிட்டுக் கூட்டியாரச் சொன்னாங்க...!''

'' அது யாரைய்யா... என்னைத் தெரிஞ்சம்மா...?''

'' அதுதானுங்க ரோஸம்மா......!''

எனக்கு ஒன்றும் புரியவில்லை. ரோஸ் அம்மா. ரோஜா னா...சே... இத்தனை ஆண்டுகளில் ரோஜா எந்தப் பேரை எடுத்துக்கொண்டு எந்த ஊரில் போய்க் கொண்டிருக்கிறாளோ ! இது யாராவது கிறிஸ்தவப் பெண்ணாக இருக்கும்... என்று எண்ணினேன். என் சிந்தனையை அந்த ஆள் கலைக்க வில்லை. பஸ் ஓடிக்கொண்டிருந்தது.

ஒரு வழியாக சோமரசம் பேட்டைக்கு வந்து சேர்ந்தோம். உடன் வந்தவர் என்னை மரியாதையாக அழைத்துச் சென்றார். விழா நடக்கவிருந்த வீட்டின் வாயிலில் கொண்டு சேர்த்தார். ஊரே மாறிவிட்டிருந்தது. கல்வித் துறைக்குப் போகும் திருப் பத்தில் ஒரு சிறு பர்ணசாலை போன்ற வீட்டில் தான் கொடி ஏற்ற ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. வாசலில் தோரணம். தேசியக் கொடி. அத்துடன் மாதர் நல மன்றம். காந்தி நூற்பு

ஆலே போன்ற பெயர்கள் கொண்ட பலகைகள் புதிதாக மாட்டி வைக்கப்பட்டிருந்தன. என்னை ஒரு முதிர்ந்த அம்மையார் வர வேற்ருர்கள். '' வாருங்கள் குரு. வாருங்கள்...!'' எனக்கு ஒன்றும் புரியவில்லே. இத்தனே உரிமையுடன் என்னே அழைப்பவர், என் தாய், என் சகோதரி மற்றும் ஒருத்தி.; ஆம் ! ரோஜா...

'' யாரது ! ரோஜாவா...?'' என்றேன்.

'' ஆமாம் அய்யா ! உங்க ரோஜாதான் ரோஸம்மாவாக இங்கு நிற்கிறேன்.''

'' பெயர் மொழி பெயர்ப்பா.. இல்லே. மதம்...!''

'' இரண்டும் இல்லே... நான் எந்த மதமும் இல்லே காந்தி மதம்.. ராசம்மா என்ற இந்துப் பெண்ணுகப் பிறந்து.. ரோஜா வாகப் படித்து இன்று ரோஸம்மா...!''

'' நான் நினேத்தேன்...!'' என்று விட்டேன்...

'' எப்படி...'' ரோஜா கேள்விக் குறியாகி நின்ருள்... அவள் கண்களில் அதே பழைய குறுகுறுப்பு...

'' இல்லே இந்த ஊருக்கு வருகிறேன் என்று நினேத்தவுடன் ரோஜாவின் மணம் தான் முதன் முதல் வந்தது... பின்னர் இளமை நினேவுகள்...''

இதற்குள் விழா நிர்வாகிகள் விழாவைத் தொடங்கி விட்டார்கள். என்னே மேடைக்கு அழைத்தார்கள்... நான் தலேமைவகித்துக் கொடி ஏற்றினேன். வரவேற்பு உரையாக ரோஸம்மா பேசினுர்கள்:

'' அன்பர்களே ! என்னே உங்களுக்குத் தெரியும்; ஊரில் ஒதுங்கி நிற்கும் ரோஸம்மா. தலேமை வகிக்கும் ஸ்ரீமான் குரு என்னுடன் இளமை நாட்களில் படித்தவர். நாங்கள் இவ்வூரிலி ருந்து உய்யக் கொண்டான் திருமலேக்குப் படிக்கப் போவோம் நடந்து தான். அன்று பஸ்கிடையாது. அங்கே அன்று ஒரு தலேமை ஆசிரியர் இருந்தார்கள். லட்சுமணன் என்று பெயர்;

ஒரு சமயம் மகாத்மா காந்தி அண்ணல் திருச்சிக்கு வர இருந்தார்கள். அவருக்கு கதர் மாலே அணிவிக்கத் தலேமை ஆசிரியர் என்னே ஏற்பாடு செய்திருந்தார்கள்; நானும் பயந்து கொண்டே ஒப்புக் கொண்டேன். இருந்தாலும் அண்ணலே நேரில் காணும் பேறு கிடைக்குமே என்ற பேராசையில் ஒப்புக் கொண்டேன்.

அந்த நிகழ்ச்சிக்கு முதல் நாள் இரவு எனக்கு ஒரு கனவு வந்தது; மகாத்மா காந்தி வருகிருர்; நான் நடுங்கும் கைகளில்

கதர் மாலையைப்பற்றி நிற்கிறேன். என்னிடம் மாலையைப்பெற அவர் குனிகிறார். என்னிடம் அவர் கேட்கிறார். ''இந்த மாலையிலுள்ள நூலை நீநூற்றாயா?'' என்று, நான் தலையை அசைக்கிறேன், இல்லை என்று. அண்ணல் வேண்டாம் என்பதாகக் கையை நீட்டி விடுகிறார், நான் விழித்த பின்னரும் அந்தக் கை என்னை நோக்கி நீண்டிருப்பதாக ஒரு தோற்றம். அதையே அபயகரமாகக் கொண்டேன்.

அன்று துவங்கினேன் நூல்நூற்க. இன்னம் நூற்றுக் கொண்டிருக்கிறேன். என்னுடன் மட்டும் இல்லாமல் இந்தப் பக்கத்து கிராம மக்கள் அனைவரும் நூற்கிறார்கள். வீட்டிலிருந்த படியே ஏதோ சம்பாதிக்கிறோம். நான் மகாத்மா காந்தியவர்களைப் பார்த்தவள் இல்லை. அந்த பாக்கியம் தலைமை தாங்கும் குருவுக்கு நிறைய உண்டு. அவர் பேசுவார், ''நான் சொன்னேன்.'' அன்பர்களே! அம்மையார் கூறியபடி நான் அண்ணலை நேரேபார்த்தேன். மாலை அணிவித்தேன். அதன் பின்னர் பலமுறைகள் அண்ணலை அருகில் பார்த்திருக்கிறேன். ஆனால் அந்த பாக்கியத்தை வழங்கியவர்கள் முன்னர் பேசிய ரோஜம்மையார் தான்.

''எப்படி என்றால் அவர்கள் கூறிய படி கனவில் அண்ணலைக் கண்டு விட்டதனால் அவர்கள் மறுத்து விட்ட நிகழ்வை நிறைவேற்ற என்னைப் பணித்தார்கள். நான் அண்ணலுக்கு மாலையணிவித்தேன். அன்றிலிருந்து அரசியலில் பங்கு கொண்டேன். அதன் சின்னமாகக் கதர் அணிகிறேன். ஆனால் தக்ளி பிடித்து நூற்றவன் அல்லன். நான் அண்ணலின் அரசியல் வழி தொடர்ந்தேன்; அது அத்தனை இனிமை வழங்க வில்லை; அம்மையார். அண்ணலின் வேறு வழியான நிர்மாண திட்டத்தைத் தொடர்ந்தார்கள். அது என்றும் குன்றா இளமையுடன் தொடர்ந்து வருகிறது; கன்னித் தமிழைப் போல......'' என்று பேசி அமர்ந்தேன்.

விழா அமளி முடிந்த பின்னர் ரோஸம்மா என்ற ரோஜா கேட்டார்கள்,

''என்ன குறு...திருச்சியில் இருக்கிறீர்களா?'' என்று.

''ஆமாம் ரோஜா! ஆனால் இந்தப்பக்கம் வந்ததே இல்லை...''

''அதுதான் சென்னைக்கும் டில்லிக்கும் போவதற்கே சரியாயிருக்குமே!''

''ஆமாம்! எல்லா இடங்களுக்கும் போனேன். பல பதவிகள் வகித்தேன்...என்ன பிரயோசனம்...''

"ஏன்? அதுவும் அண்ணலின் வழியில் நாட்டு சேவை தானே?"

"அப்படித்தான் சொல்லிக் கொள்ள வேண்டும். பதவி வந்தபின்னர் போதை தருகிறதே...அதில் தடுமாருதவர்கள் யார்..."

"ஏன் நீங்கள் நிலையாக இருக்கிறீர்களே?"

நான் நிற்கலாம்! ஏனெனில் எனக்கென்று உள்ளது நான் தானே?"

"ஏன்? உங்கள்...குடும்...ப...ம்..."

"ஏன்! நிங்கள் எல்லோரும் தான்..."

"அப்படியாஞல்...வாழ்வில் ஏதும் துக்ககரமான......"

"சுபமே ஏற்படாத போது துக்ககரம் என்ன...நீ கேட்பது புரிகிறது...நான் திருமணமாகாதவன் தான் இன்னமும்..."

"ஒஹோ! வழி வேருக இருந்தாலும் நிலைமை ஒன்று தான்..."

"ஏன் ரோஜா நியும் இன்னம்...கன்னிதாஞ..."

"வேறே என்ன செய்வது குரு மகுளாளி மகன் கணேசன் இருந்தானே. அவனுக்குப் பெண் கேட்டார்கள். நான் மறுத்து விட்டதால் என் பெற்றோர் என்னைத் துன்புறுத்தினர். நான் அன்றே தனித்து வந்து விட்டேன். இந்த நூற்பாலையைத் துவக்கினேன். என் வாழ்வுக்குத் தேவையான ஊதியத்தை இந்த சர்க்கா தருகிறது...மவுனமாக வாழ்வை நடத்துகிறேன். கணேசனை மணந்திருந்தால்...இந்த நிம்மதி கிடைக்குமா?"

"நிம்மதி என்பது சரி...தாயாக, மாமியாக, பாட்டியாக..."

"எல்லாமாக இந்தக் கிராம மக்களுக்குத் தோற்ற மளிக்கிறேன். அண்ணலின் வழியில் அன்பும் சேர்த்துக் கொண்டால், அனைத்துலகும் நமது குடும்பம் தானே..."!

"அந்தக் குடும்பத்துள் என்னையும்..."

"இதற்கு வேண்டுகோள் வேரு.... இந்த நாடே என் வீடு அதில் உள்ள மக்கள் அனைவரும் என்னும் போது... அதில் நீங்ளும் சேர்ந்தவர் தானே...?

"இருக்கலாம்...ஆனுலும்...."

"ஆனாலும் என்ன ? இதோ இந்த மனையில் இன்னம் இடம் இருக்கிறது. உங்களுக்கும் ஒரு பர்ண சாலை அமைத்துக் கொண்டு... விருப்பமிருந்தால் இங்கேயே..."

"அது தான் நானும் நினைத்தேன். பட்டண வாழ்வு எனக்குப் பிடிக்கவில்லை... அதிலும் வளர்ந்து வரும் திருச்சியில்..."

"பேசாமல் இங்கே வந்து நிம்மதியாக... வாழலாமே."

"எனக்கும் நூற்கக் கற்றுக் கொடுப்பாயா..."

"நூற்பது என்ன... கிராம ராஜ்யத்தின் கலைகள் அனைத்தையும், கற்கலாம்..."

"ஆமாம் ! அதுவே சரி ; அண்ணலின் வழியில் பிரிந்தோம்... மீண்டும் அண்ணலின் வழியிலேயே ஒன்று படுவோம்..."

அதன் பிறகு நான் திருச்சிக்கு வரவேயில்லை...

—o—

வி. பார்த்திபன்

50

# அண்ணலே உன் வழி

"யோவ்!... அப்பாலே போய்யா... மேலே வந்து உரசிக்கினு நிக்கிறே!...'' —எரிச்சல்.

''சே!... ஏ... சே!...''— அருவருப்பு

''அட! சீ! கர்மம்... கர்மம்!''— அலுப்பு;

இதோ பாரய்யா!... நாங்கள் எல்லாம் போகும்வரை அதோ அங்கே போய் உட்கார்ந்திரு!... எழுந்திருக்கவே எழுந்திருக்காதே!... எல்லோரும் போனபிறகு போய்க் காட்டிக்கொள்... ஏதேனும் தேறக்கூடிய உடம்பாக இருந்தால் சரி... உடம்பைத் தின்னும் இந்த வியாதிக்கு...''— அறிவுறை.

இத்தனைக்கும் ஆளான அந்த உருவம் துணிப்போர்வைக்குள்ளிருந்து முனகியது. சிறிது கெஞ்சிப் பார்த்துவிட்டு, பயனற்றுப் போகவே ஏமாற்றத்தோடு தொலைதூரத்தில் போய் அமர்ந்து கொண்டது. அதற்குப் பின்னர்தான் அந்தக் கூட்டத்தில் அமைதி நிலவியது.

ஒவ்வொருவராக உள்ளே செல்வதும், திரும்பி வருவதுமாகக் கூட்டம் கரைந்து கொண்டிருந்தது. நேரம் சூரியனின் ஒளியோடு ஏறிக்கொண்டேயிருந்தது.

''ம்!... இந்த ஈக்களுக்கு எப்படித்தான் நான் இருக்கும் இடம் தெரியுதோ!... துணியை இழுத்துப் போர்த்திக் கொண்டாலும் கூட மேய வந்து விடுகின்றன... இவைகளின் தொல்லைகளிலிருந்து விடுபடுவதே பெரும்பாடாகி விடுகிறது!...''—துணி மூட்டத்திற்குள்ளிருந்து நாகலிங்கம் முனகினான். வெயில் ஏற ஏற அவன் உடல் வாதையும் அதிகரித்துக்கொண்டே போயிற்று;

அவனுடைய இதயம் அவனைக் குத்திக் காட்டிச் சிரித்தது:

'ஏய்!... நாகலிங்கம்! அரசன் அன்று கொல்வான்...தெய்வம் நின்று கொல்லுமடா!... தெரியுமா? ஒன்றும் அறியாத அந்த சங்கரமூர்த்தியை, நீ செய்த கொலைக்காகக் குற்றவாளியாக்கி... தண்டனை வாங்கிக் கொடுத்தாயே... அதுதான் அநுபவிக்கிருய்!...''

இதயத்தின் ஓலத்தை அவனுல் பொறுக்க முடியவில்லை.

உள்ளம் குமுறிக் குமுறிக் குன்றியது.

அவனுடைய கண்கள் நீரால் குளமாயின.

உடல் நடுங்கியது. இழுத்து மூடிப் போர்த்துக்கொண்டு கண்களையும் மூடிக் கொண்டான் நாகலிங்கம்.

அவன் மனக்கண்கள் விரிந்து கொண்டன.

* * *

எங்கே திரும்பினுலும் மனிதத் தலைகள் கசமுச வென்ற பேச்சு. அனுதாபம், ஆச்சரியம், ஆத்திரம் முதலிய நவரசக் கலவை: கண்டிப்பு, பக்கபலமான வார்த்தைகள், கோஷங்கள் முதலிய 'பாலிடிக்ஸ்.' ஆனுல் எதையும் பொருட்படுத்தாமல் போலிசார் கடமையை நிறைவேற்றுவதில் முனைந்திருந்தனர்.

சங்ரமூர்த்தி போலீஸாரின் பாதுகாப்போடு 'வேனு'க்கு அழைத்துச் செல்லப்பட்டார்.

அவருடைய தலை குனிந்திருக்கவில்லை, நிமிர்ந்திருந்தது:

கண்கள் நாணத்தோடு இமையினுள் ஒளிந்துகொள்ளவில்லை. ஆத்திரத்தோடு கனத்து நிலைகுத்திக் கிடந்தன:

கால்கள் சோர்ந்து மெல்லடி பெயர்க்கவில்லை, ராணுவத்தினனைப்போல் வீரநடை பயின்று கொண்டிருந்தது.

என்னதான் தன் இதயத்தின் உணர்ச்சிக் குவியலை அவர் அடக்கிக் கொண்டாலும்கூட, கூட்டத்தோடு கூட்டமாய் நின்று கொண்டிருந்த ஆனந்தனுல் தாங்கமுடியவில்லை. ஓடிச் சென்று தந்தையின் காலடியில் வீழ்ந்தான்; உடல் குலுங்கக் குமுறிக் குமுறிக் கரைந்தான்; அவர் கால்களைக் கண்ணீரால் கழுவினுன்.

சங்கரமூர்த்தி சிரித்தார்...'ஓஹோ' என்று வெறிபிடித்தாற்போல் சிரித்தார்.

"பயித்தியமே!... அழுவதால் என்ன பயன்?... எழுந்திரு" என்றார்.

"சத்திய மூர்த்தியான உங்களுக்கா இந்த நிலை?...அப்பா!... உங்களுக்கு ஆயுள் தண்டனையா?"— ஆனந்தன் குமுறினான்.

"அதனால்...அழுதால் சரியாகிவிடுமா, ஆனந்தா!...நடக்க வேண்டியதை அல்லவா பார்க்க வேண்டும்?...பழிக்குப் பழி!... ரத்தத்திற்கு ரத்தம்!...செய்யாத கொலைக்குத் தண்டனை வாங்கியபோது, ஒரு கொலை செய்து அந்தத் தண்டனையை உரியதாக்கிக் கொண்டு விடலாமல்லவா!..."

ஆனந்தனுக்குப் புரிந்துவிட்டது. கண்களைத் துடைத்துக் கொண்டு விறுட்டென எழுந்தான். தந்தையின் கரங்களைப் பற்றிக் கொண்டான்.

"சத்தியம் அப்பா!..."—என்று கூறிவிட்டு விடுவிடுவென்று நடக்கலானான்.

சங்கரமூர்த்தியின் பயணம் தொடர்ந்தது.

ஆனந்தன் செய்த சத்தியத்தின் உண்மை சொரூபம் மூவருக்குத்தான் புலப்பட்டது. ஒன்று ஆனந்தன்; இரண்டாவது அவனுடைய தந்தையான சங்கரமூர்த்தி; மூன்றுவது கூட்டத்தில் மறைந்து ஒளிந்து நின்றுகொண்டிருந்த—ஆனந்தன் பழிவாங்கிவிடுவதாகக் கூறிப் பழிவாங்கத் தேடப் போகிற— நாகலிங்கம்.

ஆனந்தனின் உறுதிவாய்ந்த வார்த்தைகளைக் கேட்டதுமே நாகலிங்கத்தின் இதயம் குளிர்கொண்டு விட்டது. உடனே அங்கிருந்து...நழுவியவன்தான்!... ஆனந்தனின் கரங்களில் படாமல் தப்பி வந்து விட்டான். ஆனல்...இந்தக் கொடிய வியாதியின் பிடியில் அகப்பட்டு விட்டான்! பாவம்!

* * *

"ஐயா!..."— இனிமையான குரல்.

நாகலிங்கம், யாரோ யாரையோ அழைக்கிறார்கள் என எண்ணி வாளாவிருந்தான்.

"ஐயா!... நான்தான் வைத்தியன்!...உங்களை அழைத்துச் செல்வதற்காகத்தான் வந்திருக்கிறேன்"

நாகலிங்கத்தால் நம்பமுடியவில்லை.

உலகமே வெறுத்து ஒதுக்கும் நம்மிடமும் ஒருவர் ஆதர வாகப் பேசுகிருரா ?

நாகலிங்கம் தள்ளாடி எழமுயன்ருன். அவன் தடுமாறிக் கீழே விழ எத்தனிக்கவே, அந்த வாலிபன் குனிந்து அவனைப் பற்றிக் கொண்டான். நாகலிங்கம் குன்றிப்போனுன்.

பக்கத்தில் வந்தாலே எட்டி ஓடத்துடிக்கின்ற இந்தச் சமு தாயத்தில் நம்மைத் தொட்டுத் தூக்கவும் ஒருவர் இருக்கிருரா?

நாகலிங்கத்தை அழைத்துக் கொண்டு வீட்டினுள் நுழைந்த அந்த வாலிபன் அவன் மேற்போர்வையை நீக்கினுன். அவனு டைய முகத்தைப் பார்த்ததும் அவ்வாலிபன் முகத்தில் திகைப் பின் வியப்புகள் !

'...இவ...ன்...கொலை...கார...நாக...லிங்கம்...அல்...லவா'... நாம் பழிவாங்க வேண்டிய .. கயவனல்லவா !...

உள்ளத்தில் தோன்றிய உணர்வினது பொழிவால் ஆனந்த னின் உடல் சூடேறியது.

'பழிக்குப் பழி! ரத்தத்திற்கு ரத்தம்!...'—ஆனந்தனின் மனக்குரல் முனகியது.

நாகலிங்கம் பேசிக் கொண்டிருந்தான் : "...ஐயா !... ஊரே உங்களைப் பற்றிப் பேசிக் கொள்கிறது... உலகத்தை உய்விக்க வந்த ஆண்டவன் என்று புகழ்கிறது !... இது வரை யாரிடமும் இல்லாத மூலிகைகளைக் கொண்டு தீராத பெரும் வியாதிகளை எல்லாம் குணப் படுத்துகிறீர்களாம்.... அதனுல் தான் உங்கள் சந்நிதியைத் தேடி ஓடி வந்தேன் ஆண்டவனே !..." —என்று கூறியபடி ஆனந்தனின் காலடியில் விழுந்தான். ஆனந்தனின் உள்ளம் என்ன செய்வது என்ற முடிவிற்கு வர முடியாமல் தடு மாறித் தவித்தது.

"நீங்களும் இன்று போய்விட்டு நாளை வாருங்கள்... மருந்து தருகிறேன் !..." —என்ருன்.

நாகலிங்கம் உள்ளம் நிறைந்தாற் போன்ற உணர்வுடன் வாயிலை நோக்கி நடந்தான். அவன் சென்ற பின் ஆனந்தன் தந்தையின் படத்தருகில் சென்று வணங்கினுன்.

"அப்பா !... அன்று எனக்குப் பயந்து ஓடியவன், இதோ, இன்று என் காலடியில் சரணடைய ஓடி வந்திருக்கிருன். அவனை என்ன செய்வதென்று தெரியவில்லை. பழிக்குப் பழி என்று அவனைத் தேடி அலைந்து கொண்டிருந்தேன் இத்தனை நாள்.

ஆனல் இன்று என் முன்னே, 'இதோ இருக்கிறேன்' என்று அவன் வந்து நிற்கும் போது என் கரங்கள் கட்டப் பட்டுள்ளதைப் போல் உணர்கிறேன்!... தெய்வமாகி விட்ட நீங்கள் தான் வழி காட்ட வேண்டும்.''

* * *

"ஐயா!''—வாயிற்புறத்திலிருந்து குரல் எழுந்தது.

''உள்ளே வாருங்கள்!...''—ஆனந்தனின் பதில்.

ஒருவர் உள்ளே நுழைந்தார். தூயக் கதராடை; தெளிவான முகம். அமைதியான நடை.

''என்ன வேண்டும்?''

''நண்பரே!... என் குழந்தைக்கு இது நாள் வரை, குண மாகாத நோயை நீங்கள் தீர்த்து விட்டீர்கள்; அதற்குக் காணிக்கை செலுத்த வந்துள்ளேன்.''

ஆனந்தன் சிரித்தான்: ''நான் எதுவும் பெற்றுக் கொள்வ தில்லை என்று உங்களுக்குத் தெரியாதா?''

''நான் பொருள் ஒன்றும் கொண்டு வரவில்லை ஐயா! எந்தப் பொருளும் உண்மையான அன்பைக் குறிக்காது என்று நினைப் பவன் நான். ஆனல் நான் இப்போது கொண்டு வந்திருக்கும் காணிக்கையை நீங்கள் ஏற்றுக் கொண்டே ஆகவேண்டும்,'' என்றபடியே அந்த மனிதர் தம் கையிலிருந்த பொருளை ஆனந்த னின் முன்னர் வைத்தார். ஒரு கதர்த் துண்டு! காந்தியைப் பற்றிய சில புத்தகங்கள்!

''இந்தத் துண்டு நானே நூற்று நெய்தது ஐயா!''—அவர் குரலில் பெருமையின் இழைகள்.

''இந்தக் கதர் தான், உண்மையின், அன்பின், பக்தியின் சின்னம் என்று நான் கருதுகிறேன்... நன்றி ஐயா, நான் வருகி றேன்!...''—அந்தத் தொண்டர் விடை பெற்று நடந்தார்.

ஆனந்தன் கதருடையையும், புத்தகங்களையும் எடுத்துக் கண்ணில் ஒற்றிக் கொண்டான்.

அந்தப் புத்தகத்தில் ஒன்றை எடுத்துப் படிக்க ஆரம்பித் தான்.

தென்னுப்பிரிக்காவில் ஒரு நாள்.

இந்தியருக்கு அனுமதிச் சீட்டு அளிக்க வேண்டும் என்று காந்திஜியின் யோசனே பேரில் தென்னுப்பிரிக்க சர்க்கார் தீர்மானித்தது. சீட்டு இல்லாதோர் தண்டிக்கப் படுவார்கள் என்றும் அரசாங்கம் அறிவித்தது. காந்திஜி இவைகளுக்கு ஒப்புக் கொண்டார். சிலருக்கு இந்த ஒப்பந்தம் பிடிக்கவில்லே. அவர்களுள் மீர் ஆலம் என்ற பட்டாணியனும் ஒருவன்.

ஒரு பொதுக் கூட்டத்தில் காந்திஜியை நோக்கி மீர் ஆலம், "இந்த அனுமதிச் சீட்டு சமாசாரம் எனக்குப் பிடிக்கவில்லே!..." என்று கத்தினுன்.

காந்திஜி சாந்தமாக, "பிடிக்காதவர்கள் வாங்க வேண்டாம். நான் வாங்கப் போகிறேன்...." என்ருர்.

"நான் அடிப்பேன்!..." என்று வெறியோடு கூவினுன் மீர் ஆலம். காந்திபாபு சிரித்தார்.

ஆனுல் ... அனுமதிச் சீட்டு வாங்க காந்தியடிகள் சென்ற போது மீர் ஆலம் ஒரு குழுவோடு வந்து அவரைக் கடுமையாகத் தாக்கிவிட்டு, 'அவர் இறந்து விட்டார்' என்று அப்படியே விட்டுச் சென்ருன்.

நினைவு வந்ததும் பாபுவின் வாயிலிருந்து வந்த முதல் சொற்கள்: "என்னேத் தாக்கியவரை தண்டிக்கக் கூடாது நான் அவர்களே மன்னிக்கிறேன்...." என்பனவே.

ஆனந்தனின் உடல் புல்லரித்தது. கண்களில் நீர் முத்தெடுத்தது. ஒன்ரு இரண்டா? அந்தப் புத்தகம் முழுவதிலும் இதே போன்ற நிகழ்ச்சிகள். அத்தனேயும் அண்ணலின் சத்தியமான மன்னிப்புக்களேக் கொண்டவை! அவற்றைப் படிக்கப் படிக்க ஆனந்தனின் உள்ளம் தெளிந்து கொண்டே வந்தது. மற்ருெரு பக்கத்தில்......

"'மாலே 5 மணி. பிரார்த்தனே நேரம் வரவே காந்திஜி பிரார்த்தனேக்குப் புறப்பட்டார். மக்கள் வந்து குழுமியிருந்தனர். காந்தி மகான் பிரார்த்தனே ஸ்தானத்தை அடைந்த உடனே, எவனே ஒரு வாலிபன் பாய்ந்து வந்து அவரது உடலில் துப்பாக்கியால் சுட்டான். உடல் தரையில் சாய்ந்தது; ரத்தப் பெருக்கெடுத்தது. இருபது நிமிடங்களுக் கெல்லாம் அத்தெய்வத்தின் இகலோக வாழ்வு முடிந்துவிட்டது. இறந்து கிடந்த மகானின் முகத்தில் தயையும், மன்னிப்பும் — அதாவது குற்றவாளியினிடத்தில் மன்னிப்பும் — காணப்பட்டதாம்......!'

அதற்குமேல் ஆனந்தனுல் படிக்க முடியவில்லை. புத்தகத்தை மூடினுன். அப்புத்தகத்தின் மேலிருந்த நிர்மலமான காந்திஜியின் முகம் அவனைப் பார்த்துச் சிரித்தது.

"அன்பனே! குற்றம் செய்வோரைத் தண்டிக்காதே! மாருக அவர்களிடம் அன்புபூண்டொழுகு. அன்பினுலும் பாசத்தினுலும் அவர்களைக் கட்டு. குற்றவாளிகள் குற்றம் செய்வதற்கென்றே பிறந்தவர்கள் என எண்ணுதே!... அவர்களும் திருந்த ஒரு வாய்ப்புக்கொடு. ஹரே ராம்! ஹரே ராம்!..."

ஆனந்தன் கண்களைக் மூடிக்கொண்டான். அவன் இமையி லிருந்து இரண்டு சொட்டுக் கண்ணீர்த் துளிகள் கீழே உதிர்ந்தன. அவை அவன் இதயத்திலிருந்த 'பழி, பழி' என்ற அழுக்கையும் கழுவிக் கொண்டு விழுந்தன.

"அண்ணலே! உனது ஆணை!... தவறு செய்பவனை மன்னிப் பதே கடவுள் தொண்டு!...அவர்கட்கு நன்மை செய்வதே தகுந்த தண்டனை"— என்று கூறிக்கொண்டான்.

நாகலிங்கத்தின் கொடிய தொழுநோயைத் தீர்க்க 'அமிருத சஞ்சீவினி' எனும் அரிய மருந்தைத் தயாரிப்பதில் முழு மூச்சாய் ஈடுபடலானுன் ஆனந்தன்.






